மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய

# திருவாசகம்

விளக்கவுரை

மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்





வெளியீடு: சிவஞான சுவாமிகள் பேரவை
விக்கிரமசிங்கபுரம் - 627 425



உ

சிவமயம்

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த

# திருவாசகம்

த.ந. உலகநாதன்

திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான்
ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் வரைந்த

## குருவருள் விளக்கம்

என்னும் உரை

## 2



**அன்பளிப்பு :**

**தஞ்சாவூர்**

**நடராஜ பிள்ளை உலகநாதன் M.A. B.T.**

வெளியீடு : சிவஞான சுவாமிகள் பேரவை
505 E, பிரதான சாலை
விக்கிரமசிங்கபுரம் - 627425
திருநெல்வேலி மாவட்டம், தமிழ்நாடு.

அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A. B.T.

# முதல் பதிப்பின் அணிந்துரை

M. BAKTHAVACHALAM
(CHIEF MINISTER)




FORT St. GEORGE
MADRAS

## அணிந்துரை

சைவசமயத் தமிழ்வேதங்களிலே பலநூறு ஆண்டுகளாக மிகுந்த பக்தியோடு ஓதப்பட்டுவரும் ஒரு மறைநூல் திருவாசகமாகும். அருள்வாசகர் என்றும், மாணிக்கவாசகர் என்றும், திருவாதவூரடிகள் என்றும், தென்னவன் பிரமராயன் என்றும் பல திருநாமங்களால் அழைத்து வணங்கப்பெறும் மாணிக்கவாசகப்பெருமான் அருளிய இந்த வேதநூலுக்கு, விரிவானதொரு விளக்க நூல், இப்பொழுது வெளிவருவதானது, சைவ உலகமும் தமிழ் உலகமும் மட்டற்ற மகிழ்ச்சியோடு வரவேற்க வேண்டிய மிகச்சிறந்த ஒரு பணி ஆகும். இந்த அரிய நூலை மகிழ்ச்சியோடு பாராட்டி வரவேற்பதில் பேருவகை அடைகிறேன்.

அமைச்சராக இருந்து சைவ சமயாசாரியராகப் பரிணமித்த மகாஞானி மாணிக்கவாசகர். அவருடைய திருவாசகத்துக்கு உருகாதாரே இலர். இத்தகைய அரிய திருமுறையை எல்லோரும் எளிதிற் பொருளுணர்ந்து கற்கவேண்டும் என்ற சீரிய நோக்கத்துடன் திருவாவடுதுறை ஆதீனத்தலைவர் அவர்கள், ஆதீனமகாவித்துவான் ச. தண்டபாணிதேசிகர் அவர்களைக்கொண்டு நல்லமுறையில் உரை விளக்கங்கள் எழுதச் செய்வித்து, இத்துணைப் பெரும் பதிப்பாக வெளியிட்டுள்ளார்கள். நமச்சிவாய மூர்த்தி அச்சகத்தின் சிறந்த பணியும், இந்த நூலை உருவாக்குவதில் ஒத்துழைத்த அனைவரின் கூட்டுறவும் பாராட்டுக்குரியன.

ஆண்டுதோறும் திருமந்திரமாநாடு கூட்டுவித்தும், திருமந்திர விளக்க நூல்கள் வெளியிட்டும், கணபதி முருகன் முதலிய பல அற்புத நூல்களை ஆக்கித்தந்தும் உன்னதமான சைவத்தொண்டுகள் செய்துவரும் நமது திருவாவடுதுறை குருமகாசந்நிதானம் அவர்கள் இப்பொழுது மாணிக்கவாசகர் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள ஆவுடையார்கோவிலிலேயே இந்தச் சீரிய நூலை வெளியிடுவதும் புனிதம் நிரம்பிய செயலாகும். அவர்கள் முயற்சி வெற்றிபெறவும், தமிழ் மக்கள் இந்த நூலைக் கற்றுச் சிவனருள்பெறவும், இதுபோன்ற சமய இலக்கியப் பணிகள் மேலும் மேலும் தொடர்ந்து நடைபெறவும் அருள்செய்யும்படி, சிதம்பர நடராஜப்பெருமானின் திருக் கருணையைச் சிந்திக்கிறேன்.



ஸ்ரீமத் சிவஞான சுவாமிகள்

## ஸ்ரீமத் மாதவச் சிவஞான சுவாமிகள் வரலாறு

நீரில் வளரும் மலரின் உயர்ச்சி நீரளவே ஆதல் போல், மக்களது உள்ளத்து உயர்ச்சி அவர் கற்றுணரும் கலையின் அளவே ஆகும். ஒரு நாட்டு மக்களின் உணர்வின் பெருக்கமும், அறிவின் திறனும், செய்வினைத் தூய்மையும் அவர் இயல்பாகப் பயில்கின்ற தாய்மொழியின் இலக்கிய வளத்திற்கும், இலக்கண வரம்பிற்கும் ஏற்றபடி அமையும் என்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்த துணிபு. "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்றார் தெய்வப் புலவர்; அவ்வறிவு தாய்மொழிப் பயிற்சி வளர வளரும்; குறையக் குறையும். இதனால், ஒரு மொழி வளமும் செப்பமும் பெறுமாறு அதன்கண் கருத்துநலன் வாய்ந்த செய்யுள் இயற்றும் நல்லிசைப் புலவரும், பல தலைப்பட்ட மக்களுணர்வை ஒழுங்குபடுத்தவல்ல சொல்லழகும் பொருளாழமும் உள்ள பேரிலக்கியங்கள் இயற்றும் மாக்கவிகளும், அறிவுத் திறனை வளர்க்கும் முறையில் அளவை நெறியால் உரைகள் இயற்றும் உரையாசிரியர்களும் பெரிதும் போற்றுதலுக்கு உரியவர்கள் என்பது விளங்கும்.

இக்கருத்துப்பற்றி நோக்கின், மாதவச் சிவஞான யோகிகள், தம் தூய துறவு நிலையாலும், தவ ஒழுக்கத்தாலும், தமிழ் ஆக்கப் பணியாலும் தமிழ் நன்மக்கள் உள்ளங்களில் குலதெய்வமாக வீற்றிருக்கத்தக்கவர் என்பது விளங்கும். இச் செம்புலச் செல்வர், தென்மொழி வடமொழிப் பயிற்சியின் பயனாக, தமிழ்மொழியில் ஆக்கி அளித்துள்ள பாட்டும் உரையுமாகிய இலக்கிய, இலக்கண, அளவை, மரபு நூல்கள் உயர்தனிச் செம்மையும், பொருள் ஆழமும், செறிவும், குற்றமின்மையும் ஒருங்கே பெற்றுத் திகழ்வன, அவை, அளவாலும் முன்மாதிரி அமைவாலும் பலதுறைப் புலமை தேற்றும் மாண்பாலும், ஈடும் எடுப்பும் இன்றிக் குன்றின்மேலிட்ட விளக்கம் எனத் திகழ்வன. ஆற்றின் அளவறிந்து கற்பார்க்கும், மொழிப்பயனாம் மெய்ப்பொருள் துணிபு காணலுறுவார்க்கும், அவை என்றென்றும் இன்றியமையாச் சிறப்பினவாய் நிலைபெறுவன. அரிய கற்று, ஆசற்று, மெய்ப்பொருள் கண்ட இவ்வாசிரியருடைய நல்லிசைப் புலமையும், மலைவுதீர்க்கும் தெளிவுணர்வும், பலதுறைப் படைப்பின் சிறப்பும், தலையாய அறிவினார் எல்லாரானும் போற்றிப் பாராட்டப் பெறுவன; இவரை, தென்மொழிக் கடலும் வடமொழிக் கடலும் நிலைகண்டுணர்ந்த மாதவச் சிவஞான

யோகிகள் எனவும், திராவிட மாபாடிய கர்த்தர் எனவும், உளங்குளிரப் போற்றிக் குறித்தல் அறிஞர் பெருமக்களிடை மரபாக உள்ளது.

இத்துணைச் சிறப்பெல்லாம், இம் முனிவர் பெருமானை உலகத்தோடும் செந்தமிழ் மொழியோடும் தொடர்புபடுத்திக் காணும் காட்சிபற்றி, இவர்க்கு உளதாகும் பொதுவியல்பே ஆகும்; மற்றிவர் தம் உண்மை இயல்பாவது, பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் கண்ட சிவாநுபூதிச் செல்வர் என்னுந் தொடரால் குறிக்கத்தகுவது. இவர்தம் வரலாற்றிலும் படைப்புக்கள் சிலவற்றிலும் சிலவற்றை நினைவு கூர்ந்து அநுபவிப்போம்

சிவஞானயோகிகள், இருநூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன், தென்பாண்டி நாட்டிலே, பொதியமலைச் சாரலில் உள்ள விக்கிரமசிங்கபுரத்திலே, பரம்பரைச் சைவ வேளாண் குலத்திலே, ஏழு தலைமுறை அளவும் அருட்புலமை நிரம்பிய மகப்பேறு குறித்து அகத்திய முனிவர்பால் வரம்பெற்ற நற்றவக்குடியிலே, ஆனந்தக்கூத்தர், மயில்அம்மை என்னும் சிவநேயச் செல்வர்களுக்கு அருந்தவ மகவாய் அவதரித்தவர். முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத் திருநாமம் உடையவராய் வளர்ந்து, கல்வி பயில்வார் ஆயினர். இவர், இளம்பருவத்திலே, திருந்திய கல்வியும், பொருந்திய நுண்மாண் நுழைபுலனும், பாடுந்திறனும், அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மையை நயக்கும் இயற்கைப் பண்பும் உடையவராய் விளங்கினார்.

ஒருநாள் பள்ளியிலிருந்து மனைக்கு ஏகும் வழியில், திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த முனிவர் சிலர் எதிர்வரக் கண்டார். அவர்களைத் தொழுது வரவேற்று மனைக்குக் கொண்டு சென்று, தம் அன்னையாரால் திருவமுது செய்வித்து, அவர்தம் வாழ்த்துப் பெற்றார். பின்வந்த தந்தையார் தம் மகனாரது அருங்குணத்தை நினைந்து மகிழ்ந்து, அம்முனிவர்களைச் சென்று கண்டு தொழுதார். அந்நிலையில், உடனிருந்த முக்களாலிங்கர், பெற்றோர்களைத் துறந்து, சைவ முனிவர்கள் தமராகச் சற்குருவை நாடிச் சென்றார். இந்நிகழ்ச்சி இவர் முன்னைத் தவத்தால் தோன்றிய அருளாளர் என்பதைத் தேற்றுகின்றதன்றோ! இப்படி ஒப்பதோர் அற்புதம் யாண்டு உளது?

தாம் அழைத்துச் சென்ற தவமுனிவர்களை வரவேற்றுத் திருவமுது செய்வித்த அருமை அன்னையை

முக்களாலிங்கர் வியந்து போற்றிய பாட்டு,

> "அருந்ததிஎன் அம்மை அடியவர்கட் கென்றும்
> திருந்த அமுதளிக்குஞ் செல்வி - பொருந்தவே
> ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெயும்
> மானந் தவாத மயில்"

என்பது. இது பெற்றோர் மாண்புடன் ஆசிரியர் மாண்பையும் பிரதிபலித்தல் காண்க.

ஆதீன முனிவர்களுடன் சென்ற முக்களாலிங்கர், சுசீந்திரத்தில், சின்னபட்டத்து ஞானதேசிகராய் எழுந்தருளியிருந்த (பேரூர்) வேலப்ப தேசிகரால் ஆட்கொள்ளப்பெற்றார்; அவர்பால், சமய விசேட தீக்கைகளும் சைவத் துறவும் பெற்று, மெய்யறிவு நூல்கள் பலவும் கற்றுணர்வாராயினர். சிலகாலஞ் சென்றபின் ஞானதேசிகர், முக்களாலிங்கருடைய மெய்யறிவுத் திறனையும், நல்லிசைப் புலமையினையும், பக்குவ முதிர்ச்சியினையம் கண்டு, அவருக்கு நிருவாண தீக்கை செய்வித்துச் சிவஞானம் என்னும் தீக்கைத் திருப்பெயர் கொடுத்தார். மேலும், தலையாய பிரமாண நூல்களாகிய மெய்கண்ட ஞான நூல்களையும், அவற்றின் அநுபவப் பொருள்நிலை மரபு உணர்த்தும் கிளைஞான நூல்களாகிய பண்டார சாத்திரங்களையும் முறையாகப் போதித்து, 'ஞானக் கண்ணினிற் சிந்தை நாடு' தலாகிய வாய்ப்பச் சாதிக்குமாற்றை, மறைமொழியின் வைத்து உணர்த்தியருளினார். அதுமுதல் முக்களாலிங்கர், ஆதீனப் பொது மரபின்படி சிவஞானத் தம்பிரான் எனவும்,. ஞானயோக ஒழுக்க நெறிச் சிறப்புப்பற்றிச் சிவஞான யோகிகள் எனவும் வழங்கப் பெறுவார் ஆயினர்.

அக்காலத்தில், ஆதீனத் தலைமைத்தானமாகிய திருவாவடுதுறையில், ஞானபீடத்தில் எழுந்தருளியிருந்தவர் வேலப்பதேசிகர் ஆவர்; இவர் ஆதீனப் பிரதிட்டாசாரியர் குரு நமச்சிவாய மூர்த்திகள் முதலாக, அவர் வழியில் பத்தாவது ஆசிரியர் ஆவர். இவர் காலத்திலேயே, சிவஞான யோகிகளுக்கு ஞானாசிரியராய் இருந்த வேலப்ப தேசிகர், பேரூரில், சிவபிரான் திருவடி கூடினர். அதனால், வேறொருவர், வேலப்பத் தம்பிரான் என்பவர், இரண்டாம் ஆசிரியராகப் பட்டஞ் சூட்டப்பெற்றனர். இவர் பத்தாம் குரு முதல்வருக்குப்பின், பீடாதிபதி ஆகி, பதினொன்றாம் குரு முதல்வர், பின் வேலப்ப தேசிகர் என வழங்கப்பட்டார். இவர் காலத்தில் இரண்டாம் ஆசிரியராக

இருந்த திருச்சிற்றம்பல தேசிகர் இவருக்குப்பின் குரு முதல்வராயிருந்தார். மாதவச் சிவஞான சுவாமிகள் இக்குரு முதல்வர்கள் மூவர் கலத்திலும், ஆதீனத் திருக்கூட்ட முனிவர்களுள் ஒருவராகவேயிருந்து, கற்பன மேலுங் கற்று, சிவதலயாத்திரையும், சித்தாந்த சைவச் செந்நெறி விளக்கமும், செந்தமிழ் ஆக்கப் பணியும் மேற்கொண்டு, செம்மை பெருகு அருள் நெறிக்கண் ஒழுகி வந்தனர்.

இவர் சிவதல யாத்திரை செய்து தங்கிய இடங்களிலும், தலைமைத் தானத்தில் இருந்த காலத்திலும், உலகம் உண்மை உணர்ந்து உய்தற் பொருட்டுத் தாமாகவும், ஆதீனப் பெரியோர்கள் மாணாக்கர் முதலாயினர் வேண்டுகோளுக்காகவும் இயற்றியருளிய நூல்கள் இருபத்தொன்பது கிடைத்துள்ளன; வேறு தனிச் செய்யுள்களும் உள.

இவற்றுள், தமிழ் மக்களுக்கு எழுத்துச் சொல்லிலக்கணங்களைக் குற்றமின்றி, அறிவடிப்படைமேல் உணரும் நெறியைப் புலப்படுத்துபவன மூன்று : அவை, தொல்காப்பியப் பாயிர விருத்தி, முதற்சூத்திர விருத்தி, சங்கர நமச்சிவாய புலவர் நன்னூல் விருத்தி, உரைத் திருத்தம், இலக்கண விளக்கச் சூறாவளி என்பன.

சிற்றிலக்கிய பேரிலக்கியங்களாய் அமைந்தவை பதினெட்டு. அவற்றுள் தலை சிறந்த நூல் காஞ்சி புராண முதற்காண்டம். இது மொழி பெயர்ப்பு நூலே ஆயினும், ஆசிரியருடைய குணநலன்களை நன்கினிது பெற்றுத் திகழ்வது; அவர் தன் ஆசற்ற அறிவின் சுவடு பதியப் பெற்றது ; கற்போர்க்கு மெய்யுணர்வும், நல்லொழுக்கமும், இன்ப அன்பும் தோற்றுவிப்பது.

இதன்கண், கடவுள் வாழ்த்துச் செய்யுள்களில் ஞானாசிரியர் துதியாக உள்ள செய்யுள்

“எவ்வெவகோட் படுபொருளும் அஞ்செழுத்தின்
அடக்கிஅவற் றியல்பு காட்டி
மெய்வகைஅஞ் சவத்தையினும் நிற்குமுறை
ஓதுமுறை விளங்கத் தேற்றி
அவ்வெழுத்தின் உள்ளீடும் அறிவித்துச்
சிவபோகத் தழுத்தி நாயேன்
செய்வினையும் கைக்கொண்ட வேலப்ப
தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்”

என்பது.

திருவைந்தெழுத்து, பிரணவ கலைகள் ஐந்தன் பருவடிவாகவும், ஐந்தொழில் செய்யும் சத்தி பேதங்களாகிய ஈசான, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என்பவற்றை ஐம்பெருமனுக்களோடு ஒப்பக் குறித்து நிற்பனவாகவும் உள்ளவை; மேலும், சகல சாத்திரப் பொருளும் தன் பொருளேயாகத் திரண்டு கூடிய பெரும் பெயர் (மகாவாக்கியம்) ஆகவும் நின்று, சாதகர்களை ஞான நெறிக்கண் உய்ப்பனவாக உள்ளவை. "கருத்தின் பயனாம் எழுத்தஞ்சும்" எனவும், "ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச் சிவாயச் சொலாம்" எனவும் சேக்கிழார் அடிகள் எடுத்தோதியதும், இவற்றின் மூலமாக உள்ள தேவார மறைத் தொடர்களும் கருதத் தக்கவை. இத்துதியின் முன்பகுதி, "ஓதுவார் தமை நன்னெறிக்குய்ப்பது .... நமச்சிவாயவே" என்னும் மறையின் அநுபவப் பொருள், திருவாவடுதுறை ஆதீன ஞானகுரவர்களால், உணர்ந்து போற்றிப் பாதுகாக்கப் பெற்று வந்ததைக் குறிக்கின்றது. முதல்வனுக்குத் தானம் செய்யும் உடல், பொருள், ஆவி என்னும் மூன்றனுள் பொருள் என்பது உடல் முகந்த வினையே ஆகும் என்பது மரபு. அஃது, "உடல் பொருள் ஆவி மூன்றும் ஞானதீக்கையின் முதல்வனுக்கெனப் பூ நீரொடுந்தானஞ் செய்தளிக்குமிடத்து, பொருள் என்றது. உடம்பு போல் ஒற்றுமை உடைத்தாய்த் தன்னால் நுகரக் கிடந்த உடல் வினையேயன்றி முன்பே தன்னால் துறக்கப்பட்டொழிந்த புறப்பொருள் அன்று" என ஆசிரியர் தாமே சித்தாந்த மரபு கண்டன கண்டனத்தில் (பிரிவு 48) கூறுதல் பற்றித் தெளியப்படும். நாயேன் செய்வினையும் கைக் கொண்ட என்னும் தொடர் இம்மரபு தேற்றுவதாதல் காண்க. இப்பாட்டின் எஞ்சியுள்ள பகுதி 'பஞ்சாக்கரப் பஃறொடை' கொண்டு ஓர்ந்து உணரத் தக்கது.

"மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம்
ஆய வேல்அவை அருண்மய மாகுமற் றதுபோல்
பேய னேன்பிதற் றுரையுமஏ கம்பர்தம் பெருமைத்
தூய காதையுள் ளுறுதலால் துகளறத் தோன்றும்"

என்னும் அவையடக்கச் செய்யுள் இறைவன் திருமேனிகள் திருவருளுக்குக் குறியாகக் கொள்ளப்படும் உண்மையை உணர்த்துகின்றது. உவமையில் "அருள் மயமாகும்" என்றவர் தம் செய்யுளை அங்ஙனம் எடுத்தோதாது "துகளறத் தோன்றும்" என்றது "பணியுமாம் என்றும் பெருமை" என்பதற்கு எடுத்துக்காட்டு, சிவன் என்னும் பெயர்க்

காரணத்தைப் பின்வருஞ் செய்யுள் உணர்த்துகிறது.

"குறைவிலா மங்கலக் குணத்த னாதலின்
நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவன்என அறிவின் மேலவர்;
இறையவன் பெருமையை யாவர் கூறுவார்"

என வரும். இதன்கண், இறையவன் என்னும் சொல், "இறையாகிய அவன்" எனவும் பொருள்பட்டு விழுப் பொருள் தந்து இன்புறுத்துவது காண்க.

காஞ்சிப் புராணத்தில் உபநிடத முடிவுகளும், வைதிக கன்மங்களும், சிவாகம விதிகளும் ஒழிவின்றிக் கொடுக்கப்பட்டுள்ளன.

மாணவர் பயின்று தமிழ் அறிவு பெறுவதற்கு உதவும் யமக, திரிபு அந்தாதிகளும் பிள்ளைத் தமிழ் முதலிய பிரபந்தங்களும் ஆசிரியரால் செய்யப்பெற்றுள்ளன.

பஞ்சாக்கரமாலை, அகிலாண்டேஸ்வரி திருப்பதிகம், திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு முதலியவை நித்திய தோத்திரமாகக் கொள்ளத்தக்கவை.

ஆசிரியர் தம் ஞானாசிரியருடன் செப்பறைப்பதி சென்று, அங்குள்ள அம்மையை வணங்கியபோது, இயற்றப் பெற்றது அகிலாண்டேசுவரி பதிகம், அது பெரும்பாலும் நூலியற்றத் தொடங்கும் முதற் காலத்தே செய்யப்பட்டது எனக் கொள்ளுதல் தகும். ஆயின், அது ஞானாசிரியர்பாற் கேட்டுணர்ந்த சைவ சித்தாந்த ஞானத்திரளைப் பத்துக் கருப்புக் கட்டிகளாக வார்த்து அமைத்தது போல, அருமையில் எளிய அழகுடைத்தாய் உள்ளது. இதில் நான்காவது பாட்டு, உயிரின் வீட்டு நெறிச் செலவை. அதன் தொடக்கம், நடு, ஈறு என்னும் மூன்று பகுதிகளாகப் பிரித்து அவற்றுக்குத் கேவலம், சகலம், சுத்தம் என்னும் மரபுப் பெயர்களைக் கொடுத்து இனிது விளக்குகிறது.

உயிர் தனித்து நிற்பதன்று; ஒரு கொடி கொழுகொம்பைச் சார்வது போல, யாதேனும் ஒரு பொருளைச் சார்ந்தே நிற்கும். முதற்கண் அதற்குச் சார்பாய் அமைந்த பொருள் ஆணவம் எனப்படும் இருள்மலம். இவ்வாணவம் உயிரின் உணருந்தன்மையை முற்றிலும் மறைத்து, அறியாமையில் அழுத்திவிட்டது. இதுவே கேவலநிலை. கேவலம் - தனிமை.

இந்நிலையில் பிணிப்புண்டு துன்புற்ற உயிர்க்கு அப்பிணிப்பு நெகிழ்ந்து அறிவுஞ் செயலும் ஒருபுடை

விளங்கும்படி, முதல்வன் அதற்கு உடம்பு, கருவி, உலகம் நுகர்ச்சிப் பொருள் நான்கையும் படைத்துக்கூட்ட, உயிர் அவற்றைச் சார்ந்து, தன்னை வேறு உணராது, அவையேதான் என மயங்கி, இருவினைகளைச் செய்து, அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களை நுகர்ந்து வருவதாயிற்று. இங்குக் குறித்த நான்கு பொருளும் மாயையின் காரியம். மாயையாவது, நித்தமாய், அருவாய், வியாபகமாய், பல்வேறு பொருள்களாக கன்மத்தோடு விரவிக் காரியப்படக்கூடிய சடசத்தி (அறிவில்லாத ஆற்றல்). இவ்வாறு மாயை காரியங்களைக் கூடி, மயங்கி அறிந்து, வினைக்கீடாக இறந்தும் பிறந்தும் வரும் நிலை சகலம் எனப்படும். சகலம் கலையோடு கூடியது. கலை மாயையின் காரியத்துள் முதற்கண் எழும் திரள்; இங்கு மாயையினால் ஆகிய உரு எனக் கொண்டால் போதும். உயிருக்கு முதலில் இருந்த கேவல நிலை, நள் இருளில் உள்ள, அலர விழிக்கும் கண்ணின் நிலை போன்றது; மாயையின் காரியங்கள் நான்கும் விளக்குகள் போன்றவை. விளக்கின் உதவியால் இருளின் வலிமை ஒரு சிறிது கெடுத்து வாழலாம். அது போன்றதே சகல நிலை. ஆயினும், இந்நிலையும் துன்பந்தருவதே ஆகும். "பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப் - பற்றி விடாஅ தவர்க்கு" என்பது பொதுமறை அன்றோ!.

இந்நிலையில், உயிர் ஆணவப் பிணிப்பினின்றும் சிறிது சிறிதாக விடுபட்டுத் தன் உணர்வு மேன்மேலும் நுணுகி விரியப் பெறும். முடிவில், உயிர் தன் இருப்பையும், தலைவன் இருப்பையும் தெளிந்து, பற்றற்றான் பற்றினைப் பற்ற விரும்பும். அதுவே உயிர்க்குப் பக்குவ முதிர்ச்சி அப்போது முதல்வன் சற்குருவாய்த் தோன்றி, மாயைப் பற்றை நீக்கி, வல்வினையைச் சுட்டு, இருள் மலத்தை மேலிடாதபடி வலிகொடுத்து, உயிரைத் தன் அருள் ஒளியில் தோய்வித்து, இறவாத இன்ப அன்பை விளைத்து, பேரானந்த வெள்ளமாய்த் தன்னைக் காட்டி, தன்கண் அழுந்தச் செய்து, தன் வண்ணம் ஆக்குவான். இஃது இருளும் மருளும் நீங்கிய அருளின்பநிலை ஆதலின், சுத்த நிலை எனப்படும்.

இக்கருத்தொழுங்கினைத் தெளிவாக, நிரல்படக் கொண்டு உணர வைத்து, இன்பூட்டுகின்றது கீழ்வரும் பாட்டு:

"செம்புறு களிம்பென அநாதிமலம் மூழ்கிஇருள்
சேரும்அலர் விழிஎன்னவே
தெளிவற்ற கேவலத்து அசைவற் றிருந்துமலச்
சேட்டையால் குழவிகுருடர்

தம்பிணியி னாலுற்ற பால்கோலை நோக்கஅவை
தமைஅளிப் பார்என்னநான்
சார்கன்ம மாயையை விரும்பநீ தந்திடச்
சகலனாய்ச் சுழல்கறங்கு
பம்பரம தென்னநீள் பிறவிச் சுழிக்குளே
பட்டுழல் பெரும்பாவியேன்
பாழான மலம்அற்று வினையற்று மாயையின்
பற்றுவிட் டெனையறிந்துன்
அம்பொன்அடி நீழல்சேர்ந் தானந்தம் உண்டு
அதுவாய் இருப்பதென்றோ (நான்
அருண்ஞான வாரியே, ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே"

சோமேசர் முதுமொழி வெண்பா என்னும் நூல் திருக்குறளின் தொகைப் பொருளை உணர வைக்கும் ஒரு பிரபந்தம். திருக்குறளில் உள்ள குறட்பாக்களில், அதிகாரத்திற்கு ஒன்றனைத் தேர்ந்தெடுத்து, பிரபந்த வெண்பாவின் பிற்பகுதியாக வைத்து, அதன் கருத்தை எளிதின் விளக்கும் புராண இதிகாச நிகழ்ச்சி ஒன்றினை உள்ளத்தைப் பிணிக்கும்படி முற்பகுதியாய் அமைத்துப் பாடியது. 133 வெண்பாக்களையும் காப்புச் செய்யுளையும் உடையது. படிப்போர்க்கு உணர்வும், இன்பும், வியப்பும் ஊட்டுவது.

"பல்லவர்கோன் வந்து பணியக் கருணைசெய்தார்
தொல்லைநெறி வாகீசர் சோமேசா- கொல்ல
இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று".

என்பது அதில் வரும் ஒரு பாட்டு. பல்லவர் கோன் - மகேந்திரவன்மன், வாகீசர் - அப்பர். வரலாறு வெளிப்படை. இதன் உரையில், பரிமேலழகர், 'இன்னாசெயினும், செய்தானை வெகுளாமை புணரின் (ஒருவருக்கு உண்டாயின்) நன்று'' என மொழி மாற்றி உரைத்தார். அவ்வுரையின் சிறப்பின்மையை இப்பாட்டுக் குறிப்பித்தல் அறியத்தக்கது.

"ஆக்கையும் ஆயிரத்தெட் டண்டங்களும் நிலையாத்
தூக்கியழிந் தான்சூரன் சோமேசா-நோக்கியிடின்
நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை".

என்பது மற்றொரு பாட்டு. ஓரோர் காலத்தில் அரசியல் வெற்றி பெறுவார் இதன் தாற்பரியம் உணர்தல்

இன்றியமையாதது அன்றோ!

"ஓதாநாள் ஓதுகலை ஒத்திளைத்தாள் சீதையென்றான்
சூதாரா வான்மீகி சோமேசா - கோதில்
பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்"

என்பது படித்தின்புறத் தக்கது.

தலைவிக்கு இயற்கை வனப்பும் அழகும் உள்ளன; தலைவனைப் பெற்றபோது மேலும் புத்தொளியும் பூரிப்பும் உளவாகின்றன; தலைவனைப் பிரிந்தவுடன், அவன் புணர்ப்பால் வந்த புதுப்பூரிப்பும் ஒளியும்மட்டும் நீங்குவதில்லை; அவை, பழைய வனப்பையும் அழகையுங்கூடச் சேர்த்துக்கொண்டு போய்விடுகின்றன, புதுவெள்ளம் பழைய வெள்ளத்தையுஞ் சேர்த்து அடித்துக் கொண்டு போவதுபோல, இவ்விழப்பு இராமனைப் பிரிந்திருந்த சீதையிடம் காணப்பட்டது. அமாவாசை (சதுர்த்தி, பிரதமை) முதலியவை புதுப்பாடம் ஓதக்கூடாத நாட்கள் எனச் சோதிடஞ் சொல்லும்; அப்படி ஒருவன் ஓதக்கூடாத நாளில் ஓதினால், புதுக்கல்வி மட்டுமன்றிப் பழைய கல்வியும் பயன்தராது கெடும் என்பர். இதனை உவமையாக வான்மீகி முனிவர் ஆண்டது சிவஞான முனிவர் உள்ளத்தைப் பிணித்துள்ளது; கற்றாரைக் கற்றார்தாமே காமுறுவர்.

நம் முனிவர் பெருமான் எப்பொழுதும் ஆழ்ந்த சிந்தனையிலேயே இருந்துவிடுவதில்லை நம் போன்ற எளியவர்களைக்கூட நேசித்து மகிழ்வர். காஞ்சிபுரத்தில் இருந்தபோது அவருக்கு ஒரு மடைத்தொழில் செய்வான் இருந்தான்; ஒருநாள் அவன் இன்றைக்கு என்ன காய்கறி சமைப்பது என்று கேட்டான். முனிவருக்கு உற்சாகம். அவனுக்குப் புரியும்படி வெண்பாலில் பதில் சொல்லுகிறார்.

"சற்றே துவையல்அரை தம்பிஒரு பச்சடிவை
வற்றலே தேனும் வறுத்துவை - குற்றமிலை
காயமிட்டுக் கீரைகடை கம்மென வேமிளகுக்
காயரைத்து வைப்பாய் கறி"

என்கிறார். காயம் இடுவதில் குற்றம் இல்லை; கறி கம் என்று மணமும் சுவையும் பெறவேண்டும் என்கிறார்.

திருவேகம்பர் செயல்களை எண்ணும் போதெல்லாம் சுவாமிகளுக்கு ஆனந்தக் களிப்பு வந்துவிடும். அப்பொழுது அவர்தம் பொருந்தாத வேடங்களைக்கூட

எடுத்துச் சொல்லி நகைத்து மகிழ்வர்.

"உடுப்பது காவி உடையாம் - மறை
ஓதிமந் தேடுஞ் சிரமேற் சடையாம்
எடுப்பது பிச்சை அமுதாம் - மார்பில்
ஏற்பது காமாட்சி கொங்கைச் சுவடாம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி"

எனப் பாடி ஆனந்தத்தில் மூழ்குகின்றார்.

தமிழ் கற்போர் அளவை முறையாற் சிந்திக்கவும் பேசவும் எழுதவும் உபகாரமாதற் பொருட்டுத் தருக்க சங்கிரகம் என்னும் வைசேடிக நூலை, அதற்கு அன்னம்பட்டர் செய்துள்ள உரையுடன், செந்தமிழில் மொழிபெயர்த்துள்ளார். சித்தாந்த சைவக் கொள்கைகளை உணரப் புகுவார் முதற்கண் சற்று உளங்கொள்ளுதற் பொருட்டுச் சித்தாந்தப் பிரகாசிகை என்னும் நூலை மொழி பெயர்த்தருளினார். இக்காலத்து மொழிபெயர்ப்புத்துறையில் உள்ளவர்கள் சுவாமிகளுடைய உரைநடை நூல்களைக் கற்றால் கற்போர்க்கு முழுப் பயனை விளைக்கக்கூடிய மொழிபெயர்ப்புக்கள் செய்யவல்லுநர் ஆவர்.

இங்ஙனம், இலக்கியப் படைப்பாலும், இலக்கண ஆய்வாலும், தருக்க மொழிபெயர்ப்பாலும் நம் உணர்வை வளர்த்து, அறிவை நெறிப்படுத்தும் முனிவர் பெருமான் சமய, மரபு நூல்களாகவும், தத்துவ நூல்களாகவும் பத்து நூல்கள் அருளிச் செய்துள்ளார். அவை யாவும் முதல் நூற்பொருள் உணர்ந்து கட்டு அறுத்து வீடு பெறுவதற்குச் சமைந்தவை.

அவற்றுள் தலைசிறந்தவை சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞான சித்தியார் பொழிப்புரை, சிவஞான மாபாடியும் என்பவை. இவை வேதசிவாகமப் பொருட்பரப்பைத் திருவள்ளுவர், நால்வர், திருமூலர் என்னும் செந்தமிழ்த் திருநெறித் தலைவர்களுடைய துணிபுகளுக்கு மாறுபடாதபடி, அளவை முறைக்கும் இலக்கண வரம்பிற்கும் பொருந்துமாற்றிற்கும் ஒப்பக்கொண்டு, தெளிவுபடுத்தி மக்கட்கு வழங்குவன.

சிவஞானபோதம் என்பது பிரம்ம சூத்திரத்திற்குப் பதிலாக உள்ளதாய் வேதாகம புராண இதிகாசப் பொருள் அனைத்தையும் உள்ளடக்கி, இந்திய தத்துவக் கொள்கையை 12 சூத்திரங்களில் 39 தெரிவுகளாக (Propositions)வரிசைப்பட வைத்து விளக்குவது. இந்நூலில்

இந்திய தத்துவம், சமயம், அறநெறி என்னும் மூன்றும் அடங்கும். பிரம்ம சூத்திரம் விரிந்ததற்குக் காரணம், அதில் சொற் பொருளாராய்ச்சி மேற்கொள்ளப் பெற்றமையே ஆகும். அது பலவகைக் கொள்கைகளுக்கு இந்தருதலின், அதன் பொருண் முடிபு காணுதல் அரிதாயிற்று. சிவஞானபோதம், மகாவாக்கியத்தில் உள்ளவாறே முதற்பொருள் உண்மை, அதன் இயல்பு, உயிரின் உண்மை, அதன் இயல்பு, முதற்பொருளுக்கும் உயிர்க்கும் உள்ள சம்பந்தம், உயிர்க்கு பகையாக உள்ள பொருள்கள், அவற்றினியல்பு, உயிர் பகையின் நீங்கி உறவை எய்து நெறியில் அதற்கு உள்ள உணர்வு நிலைகள், உணர்வு வகைகள், அவ்வகைகளுள் முதற்பொருளைத் தலைப்படவல்ல மெய்யுணர்வின் இயல்பு, அதனை எய்தும் வகை, அதன் பயன் எனப் பொருள் நிலையைக் குறிக்கோளாகக் கொண்டு ஆராய்ந்து, முடிநிலையாக உண்மையின் இணைப்பு நிலையைத் (The synthesis of truth) திட்பமாகவும் தெளிவாகவும் வரிசைப்படக் கொண்டு விளங்குவது. ஆதலினால், இது சுருங்கி நின்று, ''சிறிய ஆடியிற் பெரிய மால்வரைப் பொருள் செறிந்தாங்கு -அறிவு நூல்களின் முடிவெலாம் அகப்படுத்தவற்றின் - நெறியெலாம்" விளங்குவதாய் அமைந்து உள்ளது.

சிவஞான போதத்தின் விரிவுரையாகவும் ஆகமார்த்தங்களின் உரையாணியாகவும் செய்யுள் வடிவில் இயன்றதே சிவஞான சித்தி. இவற்றின் உண்மைப் பொருள் நிலையை முன்பின் முரணின்றித் தெளியக் கண்டு வெளிப்படுத்திய ஆசிரியர் சிவஞான சுவாமிகள் ஒருவரே ஆவர். இவர்கள் இயற்றிய நூல்கள் தமிழில் இல்லையாயின், சித்தாந்த சைவம்பற்றியோ இந்திய தத்துவம், சமயம், மரபு என்பவற்றில் பிற எத்துறைபற்றியோ, பிற மொழிப்பயிற்சி இன்றி, ஒரு தமிழ் மகன் தெளிவாக ஒன்றும் அறியவோ பேசவோ முடியாது.

இவர் கண்டனமாக இயற்றிய நூல்களைக் கண்டால், இவர் வெறும் ஆரவாரத்தால் சொற்சாலம் செய்தவர்களைத்தான் மறுத்துள்ளார் என்பது விளங்கும். "என்னை இப்பவத்திற்சேரா வகை எடுத்து" எனச் சித்தியாரில் ஒரு தொடர் உள்ளது. அதன் பொருள், "என்னைப் பிறவிக் கடலில் வீழ்ந்து அழுந்தாதபடி தன் கருணைக் கையால் எடுத்து" என்பது தெளிவு. அதில் எடுத்து என்பது உருவகம். ஒருவர் அதற்கு, "சமனாந்தம் பாசக் கூட்டம் கூடாத வகை சின்மாத்திர

சுத்த கேவலமாகச் சேடிக்கப்பண்ணி" என உரை எழுதுகிறார். ஒரு சொற்குப் பொருள், செம்பொருள், ஆகுபெயர்ப் பொருள், குறிப்புப் பொருள் என்னும் மூன்று வகையில் அடங்கும்; இஃது அம்மூன்றினுள் யாதொன்றும் அன்று எனக் காட்டி மறுத்துள்ளார், இப்படியே பிறவும்.

இப்படி சமயம், இலக்கியம், இலக்கணம், தருக்கம், மொழிபெயர்ப்பு, கண்டனம் என அனைத்துதுறைகளிலும், வரம்பாகிய தலைமையராய் விளங்கிய நம் முனிவர் பெருமான் ஒரு விசுவாசு ஆண்டு சித்திரைத் திங்கள் ஆயில்ய நாளன்று (17-4-1785) அன்று சிவப்பேறு எய்தினர்.

இன்று, திருவாவடுதுறை ஆதீனம், சித்திரை ஆயில்ய நாளை, சுவாமிகள் தோன்றிய விக்கிரமசிங்கபுரம், தீட்சை பெற்ற சுசீந்திரம், நெடுநாள் வாழ்ந்த காஞ்சிபுரம், சிவப்பேறு எய்திய திருவாவடுதுறை ஆகிய நான்கு தலங்களிலும் சிறப்பாக கொண்டாடி வருகின்றனர்.

சைவம் மேன்மேலும் வளர வேண்டும் என விரும்பும் ஒவ்வொருவரும், சிவஞான சுவாமிகளை குலதெய்வமாக போற்றி அவர்கள் திருவடிகளை நித்தமும் வழிபாடு செய்ய வேண்டும்.

"நற்பாலர் வேண்டின் மயிலம்மை
யார்தவம் நாடுக; நூல்
கற்பான் நசையிற் சிவஞான
தேவன் கலையுணர்க;
சொற்பால் அறத்துற வுன்னில்அன்
னானின் துறக்கஇப்பா
ரிற்போகம் வேட்கின் சிவபோ
கமேவிரைந் தெய்துக வே".

- பொ. பாண்டித்துரைத் தேவர்

(குறிப்பு- இக்கட்டுரை திருவிடைமருதூர் ஸ்ரீமகாலிங்கசுவாமி திருக்கோயில் கும்பாபிஷேக விழா மலரில், வித்துவான் திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்கள் எழுதியதிலிருந்து தொகுக்கப்பட்டது.)

T. N. Olaganathan.

# 19. திருத்தசாங்கம்

[ அடிமைகொண்டமுறைமை ]

வாதவூரடிகள் தில்லைப்பதியில் எழுந்தருளியிருந்த போது, சோலையிலுள்ள கிளியைப் பார்த்து, 'கிளியே! நீ பெருமான் பெயரைச் சொல்; நாட்டைச் சொல்; ஆற்றைச் சொல்; ஊரைச் சொல் எனச் சொல்விப்பதாகத் திருத்தசாங்கம் என்னும் இதனைப் பாடியருளினார்கள்.

தலைவி குயில் முதலானவற்றைத் தூதனுப்பியும் தலைவன் வரக் காலந்தாழ்க்கின்றமையின் அதுவரை ஆற்றியிருக்கமாட்டாளாய்த் தான் வளர்த்த கிளியைக் கையில் ஏந்திக்கொண்டு, தலைவனுடைய பெயரைச் சொல், நாட்டைச் சொல், ஆற்றைச் சொல், மலையைச் சொல் எனச் சொல்வித்துக் கேட்டுப் பொழுது கழிப்பாளாயினள். இவ்வண்ணம் தலைவனுடைய பெயர், ஊர், நாடு, ஆறு, மலை, குதிரை, படை, பறை, மலை, கொடி என்ற பத்துறுப்புக்களையும் பற்றி அறிவிக்கும் பாக்கள் திருத்தசாங்கமென்னும் பெயர்பெற்றன. இது பிரபந்தவகையுள் ஒன்றாகவும் பிற்காலத்து வழங்குவதாயிற்று. ஈண்டு நாலுறுப்பாக அமைந்துள்ளது. தசாங்கங்களையும்பற்றிய குறிப்புக்கள் கீர்த்தித் திருவகவலிலும் கூறப்பட்டுள்ளன.

இப்பகுதிக்கு "செடியுடல் அறுக்கும் திருத்தசாங்கம், அடிமை கொண்ட முறைமையதாகும்" என அகத்தியச் சூத்திரம் பொருள் விளக்கந்தரும். பழையவுரை இன்பத்தில் திளைத்து, அபேதமாய் அதுவாய் நிற்கும் உயிர்களெல்லாவற்றையும் நோக்கித் திருவருட் பயனை அடிமைப் பெருக்கமாகச் சொல்லியது என்று கூறும்.

பழைய புராணம் "பேர்நாடூ ராறு மலைபேணூர்தி படைமுரசு, தார்கொடி யெலாமரற்குச் சாற்றல் தசாங்கமதாம்" என்கின்றது. ஆன்மா தன்னை அடிமைகொண்ட முறைமையை உணரும்போது தசகாரியம் உணரப்பெறுதலின் தசகாரியம் உண்மைத் தெளிவு என்று பழையவுரை கருத்துக் கூறுவதும் இயைபுடைத்தாகின்றது.

## நேரிசைவெண்பா

திருச்சிற்றம்பலம்

356 ஏரா ரிளங்கிளியே யெங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமம் தேர்ந்துரையாய் — ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று. 1

இ - ள் : (தலைவி) அழகுநிறைந்த இளங்கிளியே! எமது திருப்பெருந்துறை நாதனுடைய திருப்பெயரை ஆராய்ந்து உரைப்பாயாக (என);

(கிளி) வெண்டாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமனும், பாற்கடலிற் பள்ளிகொள்ளும் திருமாலும் முறையே ஆரூரன் என்றும் சிவந்த திருமேனியையுடைய பெருமான் என்றும் கூறுவதுபோல, (தலைவியே நீயும்) எம்பெருமான் தேவதேவன் என்று செப்புக என்கின்றது என்றவாறு.

தலைவி கிளியே! எங்கள் திருப்பெருந்துறையார்க்குப் பெயரென்ன சொல் எனக் கிளி, பிரமனும் திருமாலும் ஆரூரன் செம்பெருமான் என்பதுபோல நீயும் எம்பெருமான் தேவதேவன் என்று சொல்லுக என்கின்றது.

தன் விருப்பப்படியே சோலையில் சுற்றித் திரியும் கிளியாதலின், அழகும் இளமையுங்குன்றாது உற்சாகத்துடனிருத்தலைக் கண்டு அதனைப் பாராட்டுகின்றாள் தலைவி 'ஏரார் இளங்கிளியே' என்று. ஏர் - அழகு. ஆர்தல் - நிறைதல்; எழுச்சி மிக்க எனலுமாம்.

வெண்மலரான் செம்பெருமான் என்றும், பாற்கடலான் ஆரூரன் என்றும் செப்புவபோல் என எதிர்நிரல்நிறையாகக் கொள்க. பிரமனை இயற்பெயரானும், வேற்றுப்பெயர்களானும் குறியாது வெண்மலரான் என்றது பிரமன் படைப்புத்தொழிலை மேற்கொள்ளுங்காலத்து வெண்டாமரையிலே வீற்றிருக்கும் சிறப்புடையனாதலின் என்க. அவன் பெருமானைச் செம்பெருமானென்று அழைக்கின்றான், இறைவன் சிருஷ்டியுன்முகராகச் சத்தியோடு ஒன்றியகாலத்துப் பச்சைக்கொடி படர்ந்த செம்பவளமலைபோலப் பெருமானைக் காண்பவனாதலின். இவ்வண்ணம் பெருமானை அவன் தியானிக்காவிடின், அவனால் படைப்புத் தொழில் ஒரிம்மியும் இயற்ற ஒண்ணாது என்பது.

பாற்கடலான் - பாற்கடலில் ஆதிசேடனாகிய அணையின்மீது துயில்பவன். அவன்கண்ட இறைக்காட்சி தனது நெஞ்சகத்து தியாகராசப்பெருமானை எழுந்தருளச்செய்து, தியானித்துக் கொண்டே உறங்குபவன். அவனுடைய உச்சுவாச நிச்சுவாசமாகிற மூச்சினசைவே அசபை என்னும் நடனமாகத் தியாகப் பெருமான் அசபா நடேசனாக விளங்குகிறார். ஆகவே, திருமால் கண்ட காட்சி திருவாரூரின்கண் உள்ள அசபா நடேசர் காட்சி. அவன் ஆரூரன் என்று தாம் கண்ட பெயரே கூறுவன்.

செப்புவபோல அவரவர் தம்மனுபவம் கூறுவதுபோலத் தலைவியே நீயும் உனக்கு உயிர்த்தலைவனாக இருப்பதால், 'எம் பெருமான்' என்றும், பிரமன் மால் முதலிய பெருந்தேவர்களா லும் போற்றப் பெறும் பெருந்தேவனாக இருத்தலின் 'தேவர் பிரான்' என்றும் கூறு என்றதாம்.

இறைவனுக்கு உரிய திருநாமங்கள் ஆயிரமாயிரமும் அவ னுடைய புகழ்காரணமாக விளைந்தவை ஆதலின் 'சீரார் திரு நாமம்' என்றாள். அன்றியும், அவனுடைய பல நாமங்களில் உன் அனுபவத்தில் கண்டவற்றை ஆராய்ந்து தெளிந்து கூறு என்பாள் 'தேர்ந்து உரையாய்' என்கின்றாள்.

பழைய உரை இப்பத்துப் பாடல்களும் முறையே தத்துவ ரூபம் முதலான தசகாரியங்களைக் கூறுகின்றன என்னும். கிளி என்றது ஞானப்பெண்ணை உருவகித்ததாக அவ்வுரை கூறும்.

முன்னம் அவனுடைய நாமங்கேட்டலே அத்துவித அடிமை யாதற்கு உரிய முதலுபாயமாதலின் இத்திருப்பாடல் நாமங் கேட்கச்செய்தலாகிய அடிமைகொண்ட முறைமையைக்குறித்தல் காண்க.

357 *ஏதமிலா இன்சொல் மரகதமே யேழ்பொழிற்கும்*
*நாதனமை யாளுடையான் நாடுரையாய் — காதலவர்க்*
*கன்பாண்டு மீளா அருள்புரிவான் நாடென்றும்*
*தென்பாண்டி நாடே தெளி.* 2

*இ - ள் :* *(தலைவி)* குற்றம் இல்லாத இனிய சொல்லினை யுடைய மரகதமணிபோலும் பச்சை நிறமுடைய கிளியே! ஏழுலகங்களுக்கும் தலைவனும் நம்மையும் ஒருபொருளாக ஏற்று ஆளாக உடையவனும் ஆகிய எம் உயிர்த்தலைவன் நாடு யாது? உரையாய் (என்ன);

*(கிளி)* தம்மீது நீங்காத காதலுடையாரை அன்பால் ஆட்கொண்டு என்றும் நீங்காத திருவருள்புரிபவனாகிய சிவ பெருமானது நாடு என்றென்றும் தென்பாண்டிநாடேயாம்; இதனை நீ தெளிவாயாக என்றவாறு.

தலைவி ஏழுலகுக்கும் தலைவனாகிய எம்தலைவன் நாடு சொல் என்னக் கிளி, காதலரைக் கைவிடாதவனாகிய இறைவன் நாடு தென்பாண்டிநாடு என்கின்றது.

கிளியின் நிறமே அதன் கவர்ச்சிக்குக் காரணமாதலின், அந்த நிறத்தினை இயற்கையே பெற்றுள்ள பச்சைமணியாக

உருவகித்து 'மரகதமே!' என்றாள். முன்பாட்டில், இளங்கிளி பேருரைத்தமையால் சொல்லின் இனிமை உணர்ந்த தலைவி 'இன்சொல் மரகதமே' என்றாள். சொல்லுக்குள்ள ஏதம் பொய், குறளை, வன்சொல், பயனில்சொல் என்பன. இவை பிறர்க்குத் தீமைபயக்கவும், தன்னலம் பெருக்கவும் மனிதனுற் கையாளப் படுவன. கிளியின் சொல் பிறர்க்கு இனிமை பயக்குமேயன்றி, இத்தகைய குற்றங்களை என்றும் செய்யாது ஆதலால் 'ஏதம் இலா இன்சொல் மரகதமே' என்கின்றாள். தான்கேட்ட இன் சொல் இறைவன் நாமம் ஆதலின் அப்பெயர் என்றும் ஏத மிலாமை மட்டுமன்றி ஏதங்கெடுக்கும் மருந்துமாம் ஆதலின் அங்ஙனம் கூறினாள் எனலுமாம்.

ஏழ் பொழில் - ஏழுலகு. உலகங்கள் அனைத்திற்கும் தலைவ னெனப் பொதுவகையான முதன்மை கூறினவள், அடுத்து நம்மை அடிமையாக ஏற்று அருள்பவனெனச் சிறப்புரிமையைத் தெரிவிக்கின்றாள்.

அன்பு ஆண்டு மீளா அருள் காதலவர்க்கு அருள்புரிவா னெனக் கூட்டுக. நாம் அவன்மீது செய்யும் அன்புகாரணமாக ஆட்கொண்டு எனவும், நம்மீது வைத்த அன்பால் ஆண்டு எனவும் கொள்ளலாம். ஆட்கொள்வதற்கு அன்பு காரணமே யன்றி, ஆட்கொண்டபின் அவன் நம்மீது செய்வது அன்பின் கனியாகிய அருள். அந்த அருள் அன்புபோல நிலைமாறுவது அன்று, என்றும் மீளாதது என்பாள் 'மீளா அருள்' என்கிறாள்.

புரிதல் - விரும்பிச்செய்தல். "புகழ்புரிந்த" என்புழிப் பரிமே லழகர் இப்பொருள் கொள்ளுதல் காண்க. ஆகவே அருள் புரிவான் என்பதற்குத் திருவருளை ஆன்மாக்கள் ஈடேறட்டும் இன்படையட்டும் என்று விரும்பிச் செய்பவன் என்பதாம்.

நாடு வெற்றி தோல்விகளால் நிலைமாறுவது, சிவனுக்குரிய நாடு என்றுமே மாறாதது ஆதலின் 'என்றும் தென்பாண்டி நாடே' எனத் தேற்றேகாரம் அமைத்துக் கூறுகிறது.

நாம் செய்யவேண்டியது முதலில் அன்பு; பின்பு காதல். இந்த இரண்டும் முறையாக உடையவரை ஆண்டு மீளா அருள் புரிவான் இறைவன் என்பது உணர்த்தினமையால் இச்செய்யுள் அடிமைகொண்ட முறைமையாதல் காண்க.

358 *தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் நமையாளும்*
*மாதாடும் பாகத்தன் வாழ்பதியென் — கோதாட்டிப்*
*பத்தரெல்லாம் பார்மேற் சிவபுரம்போற் கொண்டாடும்*
*உத்தர கோசமங்கை யூர்.* 3

இ - ள் : (தலைவி) மகரந்தங்கள்செறிந்த பூக்களையுடைய சோலையின்கண் வாழும் கிளியே! நம்மை ஆளுகின்ற உமையொருபாகமுடையான் வாழ்கின்ற ஊர் யாது? உரையாய் (என்ன);

(கிளி) அன்பர்கள் அனைவரும் இப்பூவுலகில் சிவபுரமாகிய கைலாயம்போலப் பாராட்டிக் கொண்டாடும் திருவுத்தரகோசமங்கையே ஊராம் என்றவாறு.

தலைவன் ஊர் எது என்ற தலைவிக்குக் கிளி அன்பர்கள் பூலோக கைலாசமாகக்கொண்டாடும் உத்தரகோசமங்கையே ஊர் என்கின்றது.

தாது - மகரந்தம். தாதாடு தத்தாய் எனக் கூட்டின் மகரந்தங்களில் திளைத்த கிளியெனப் பொருள் கொள்க. நம்மை என்றாள் தன்னுயர்வு தோன்ற. கிளியைத் தன்னோடு சேர்த்துக் கூறினளுமாம். உமாதேவி கலந்த பாகத்தையுடைமையாலேயே அவன் நம்மை ஆட்கொள்ளும் திருவுள்ளம் உடையவனாயினன் என்னுங்குறிப்புத்தோன்ற ‘நமையாளும் மாதாடு பாகத்தன்’ என்றாள். நமையாளும் மாது எனக் கூட்டின், நம்மை ஆட்கொள்ளும் சிவசத்தியாகிய உமை என்க.

பார்மேல் சிவபுரம் - பூலோக கைலாயம். அன்பர்களுக்கு உத்தரகோசமங்கை பூலோக கைலாயமாக விளங்குவது என்க.

இது தத்துவசுத்தி கூறியதென்னும் பழையவுரை. கோது ஆட்டி என்பதற்குத் தத்துவங்களாகிய குற்றங்களைச் சுத்தி செய்து என்பது அவ்வுரை.

புதியவுரை. கோதாட்டுதல் - மிக்க புகழினை எடுத்துக்கூறல் கொண்டாடுதல், கூடிக்குலாவுதல் என்றெல்லாம் கூறும்.

உமையும் தானுமாக வந்து ஆட்கொண்டான் என்றலின் அடிமைகொண்ட முறைமை உணர்த்தியவாறு காண்க.

359 செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீ நஞ் சிந்தைசேர்
ஐயன் பெருந்துறையான் ஆறுரையாய் — தையலாய்
வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தங் காணுடையான் ஆறு. 4

இ - ள் : (தலைவி) சிவந்த வாயையும், பசுமையான சிறகினையும் உடைய செல்வியே! நமது சிந்தையின்கண் இடைவிடாது இடங்கொண்ட தலைவனாகிய திருப்பெருந்துறையானுடைய ஆறு யாது? உரையாய் (என்றாளாக);

(கிளி) பெண்ணே! பெருமையோடு கூடிய மனமானது மலமாகிய ஆணவத்தைக்கழுவ வந்து இறங்குகின்ற சிவானந்தமே எம்மையுடைய தலைவனது ஆறும் காண் என்றவாறு.

இது தலைவி கிளியை நோக்கித் தலைவனது ஆற்றின்பெயர் வினவ, கிளி ஆணவமலத்தைக்கழுவும் ஆனந்தமே அவனது ஆறு என்கின்றது.

கிளி தலைவி கேட்டவண்ணம் ஊரும் பேரும் நாடும் உரைக்கவே, அதனிடமுள்ள பறவை என்ற ஞானம் மறைய, அதனைத் தன்னைப்போன்ற தோழியாகவே கருதிச் 'செல்வீ!' என அழைக்கின்றாள். கிளியைச் செல்வீ என்றது காதன்மை பற்றிவந்த திணைவழுவமைதி. செல்லுகின்ற பறவையே எனப் பொருள்கோடலுமாம்.

ஐ - தலைமை. ஐயன் - தலைவன். தலைவனுருவம் என்றும் எக்கணமும் தம் சிந்தையைவிட்டு அகலாதிருக்கின்றமையின் 'நம் சிந்தைசேர் ஐயன்' என்றாளாம். சேர்தல் - இடைவிடாது தியானித்தல். தையல் - அழகு. இது பண்பாகு பெயராகப் பெண்ணை உணர்த்திற்று.

'மலம் கழுவ வான் வந்திழியும் ஆனந்தம் உடையான் ஆறு காண்' எனக் கூட்டுக. வான் வந்த சிந்தை - பெருமை யோடுகூடியமனம்: ஆகாய வடிவினராகிய சிவன் எழுந்தருளிய சிந்தை எனலுமாம்.

சிவம் நிலவிய சிந்தையின்கண் உயிர்களின் மலத்தைப் போக்க வந்து இறங்கும் ஆனந்தமே ஆறு என்று கூறிற்றும். ஆனந்தம் - சிவானுபவத்தால் விளையும் களிப்பு. அக்களிப்பு மேன்மேலும் இடையீடின்றிப் பெருகுவதாகலின் அதனை ஆறு என்றார்.

உடையான் என்பதற்கு எம்மை ஆளாக உடையான் என ஏற்ற சொற்கள் வருவித்துரைக்க.

பழையவுரை பைஞ்சிறகு என்பதற்குப் பஞ்சவர்ணச் சிறகு என்றும், வான் வந்த சிந்தை என்பதற்கு ஞானாகாச சித்ரூப சிவாத்மிக சிந்தை என்றும், சிவானந்த உயிரே ஆறு என்றலின் இச்செய்யுள் ஆன்மரூபம் உணர்த்துகிறதென்றும் உரைக்கும்.

ஆன்மாக்கள் உடைமையாகவும் தாம் உடையானாகவும் ஆட்கொண்ட முறையினை உணர்த்துதலின் இத்திருப்பாடல் அதிகார இயைபுடைத்தாதல் காண்க.

360 கிஞ்சுகவா யஞ்சுகமே கேடில் பெருந்துறைக்கோன்
மஞ்சன் மருவு மலைபகராய் — நெஞ்சத்
திருளகல வாள்வீசி இன்பமரு முத்தி
அருளுமலை யென்பதுகாண் ஆய்ந்து. 5

இ - ள்: (தலைவி) முள்முருக்க மலரைப்போலச் சிவந்த வாயையுடைய அழகிய கிளியே! எஞ்ஞான்றும் கேடில்லாத திருப்பெருந்துறைநாதனாகிய மைந்தன் எழுந்தருளியிருக்கும் மலை யாது? உரைப்பாயாக (என்ன);

(கிளி) மனத்தில் நிறைந்திருக்கின்ற அறியாமையாகிற இருள் நீங்க ஞானவாளைவீசி இன்பம்பொருந்திய முத்தியை அருளுகின்ற மலை என்று யான் கூறுவதனை ஆராய்ந்து காண் என்றவாறு.

கிளியே! பெருந்துறையரசனாகிய வீரனது மலையைக் கூறுக என்ன, வீட்டின்பத்தை அருளும் மலையே அவன் மலை, இதனை நன்றாக ஆய்ந்து காண் என்றது கிளி.

கிஞ்சுகம் - முள்முருக்கு. இது நிறமன்றிப் பயன்தராதது. அதுபோல உன் வாயும் சிவந்திருக்கின்ற அளவன்றி வேறு பயனிலது. அதனை, சிவபெருமான் நாடு ஊர் முதலியவற்றை உரைத்தாவது செம்மையுடையதாக—அதாவது பண்புற்றதாக ஆக்கிக்கொள் என்னும் குறிப்பினளாய்த் தலைவி 'கிஞ்சுகவாய் அஞ்சுகமே!' என்கின்றாள்.

கேடு - உயிர்கட்குத் தன்னாலும், பூதங்களாலும், தெய்வங்களாலும் வரும் துன்பங்கள். இறைவற்குத் துன்பமே இல்லை ஆதலின் அவனைக் கேடிலாதவன் என்றாள். கேடு - அழிவும், மாற்றமுமாம்.

மஞ்சன் : மைந்தன் என்பதன் மரூஉ. மைந்து - வலிமை. மஞ்சு - அழகு; மஞ்சன் - அழகன் எனினுமாம்.

நெஞ்சத்து இருள் - உள்ளத்தைச் சார்ந்து உண்மையை யறியவொட்டாது தடைசெய்யும் அஞ்ஞானம்.

வாள் - வாளென்னும் கருவி; ஒளியுமாம். 'ஞானவாளேந்தும் ஐயர்' (613) என்பவாகலின் ஈண்டு வீசி என்ற வினைக்கேற்ப ஞானவாள் எனக் கொள்க.

முத்தி என்பது இன்பத்தின்கண் இருப்பதாகலின் இன்பமரும் முத்தி என்றதாம். முன்னர்ப் பாடல்களில் 'உத்தரகோச

மங்கை ஊர்' 'தென்பாண்டி நாடே தெளி' என்றாற்போலப் பெயரை நேரேகூறாது முத்தியருளுமலையே அவன்மலை எனப் பயனைக்கொண்டு பயன்தரும் பொருளை உணர்த்துகின்றார். முத்தியருளுதலாகிய பயன் கயிலைக்கன்றி, வேற்று மலைகள் எதற்கும் இன்மையான் என்க.

இம் முடிவு வேற்றுச் சமயவாதிகள் கூறும் கூற்றுக்களோடு வைத்து, அளவைகளானும் அனுபவத்தானும் அறிந்துகொள்ளத்தக்கதாகலின் 'ஆய்ந்து காண்' என்றது.

இருளகல வாள்வீசி என்றதால் ஆன்மாவைப்பற்றியிருந்த மறைப்பு அகல ஆன்மதரிசனம் விளைந்தமை உணர்த்துவது என்பது பழையவுரை.

இது, இருளகற்றலும் ஞானமுதவுதலும் முத்தியருளுதலும் முறையேகூறுதலின் அடிமைகொண்டமுறைமை அறிவிப்பது.

361 இப்பாடே வந்தியம்பு கூடுபுகல் என்கிளியே
ஒப்பாடாச் சீருடையான் ஊர்வதென்னே — எப்போதும்
தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப்பெண்
வான்புரவி யூரு மகிழ்ந்து. [ணேத்திசைப்ப

இ-ள்: (தலைவி) எனது கிளியே! கூட்டின்கண் புகாதே; ஒப்பு உரைக்க இயலாத புகழையுடைய பெருமான் ஊர்தியாகக் கொண்டு ஊர்வது என்னே! இப்பக்கம் வந்து சொல் (என்றாளாக);

(கிளி) தெய்வமகளிர் தேனையொத்த மனம் உடையவர்களாக எப்போதும் தோத்தரிக்க, மனம் மகிழ்ந்து ஊர்வது ஞானகாயமாகிய குதிரை என்று கூறியது என்றவாறு.

கிளியே! ஒப்பிலாப் புகழுடைய பெருமானுக்கு ஊர்தி எது என்ன, அவர் தெய்வப்பெண்கள் துதிக்க ஞானகாயமாகிய புரவியை ஊர்வர் என்கின்றது கிளி.

கிளிக்கும் தனக்கும் நெடுநாள் பழக்கமுண்டு என்பதைக் குறிப்பிடுவாள் 'என் கிளியே' என்று உரிமை பாராட்டி விளிக்கின்றாள். மக்களைக் கண்டால் அஞ்சி, கூட்டின்கண் புகுந்து ஒளிவது கிளிகளின் இயற்கையாதலின் 'கூடு புகல்' என்றாள். இப்பகுதிக்குப் பழையவுரை 'என் புலாலுடம்பே புகுந்தருளும் சிவானந்த சுகப்பெண்ணே' என்று கூறும். இதன் கருத்து, கிளி என்றது சிவானந்த சுகத்தையுடைய ஞானப்பெண்ணை

என்பதும், கூடு என்பது உடலே என்பதுமாம். இதில் புகல் - வினைப்பெயராய்ப் புகுதலையுடைய என்னும் பொருளது.

இப்பாடு-இப்பக்கம். உரையாடுவார், விரும்பிய பொருளைப் பற்றிய உரையாடலாயின் 'கிட்ட வந்து சொல்' 'இப்பக்கம் வந்து பேசு' என்பது இயல்பு. அங்ஙனமே தலைவிக்குத் தலைவன் ஏறிவரும் பரியைப்பற்றித் தெரிய ஆசை. பரியோ உலகத்திலுள்ள ஏனைய புரவிகளைப் போன்றது அன்று. மன னுணர்வாலே காணத்தகும் ஞானப்புரவி. ஆகாயத்தை அனு மானப் பிரமாணத்தால் அறிதலைப்போல இதனை அறியவும் அனுமானமே வேண்டற்பாலது. வேற்றளவைகள் பயன்படா; இதனைக் காதருகில் மிகரகசியமாகக் கேட்கவேண்டுமென்பாள் 'இப்பாடே வந்து இயம்பு' என்றாள். இயம்பு என்பது இயம் ஒலிப்பதுபோல இனிமை தோன்றப் பேசுதல். இயம் - இசைக் கருவியாகிய முழவு முதலியன. அவை இயம்புவதுபோல நீ உரக்கக் கூறு என்பதுமாம்.

ஒப்பாடுதல் - ஒப்புரைத்தல். உரையாடுதல் சொல்லாடுதல் போன்றதொரு வழக்கு. ஏனையோர் புகழ்கள் யாவும் இது போன்றது இது என்று ஒப்புரைக்கலாவது. இறைவன் புகழ் எதற்கும் எக்காலத்தும் ஒப்புரைக்க இயலாதது என்பதாம்.

ஊர்வது - ஊர்தியாகக்கொள்வது. எப்போதும் ஊர்வது என்னே என இயைக்க. அவன் விடையின்மீதும், ஐராவணத் தின் மீதும், சூரியன் சந்திரன் யானை பூதம் இவற்றின்மீதும் ஒரோருகால் எழுந்தருளுவன்; எப்போதும் ஊர்வது வான் புரவியேயாம் என்பது.

தெய்வப் பெண்-தேவ மாதர். "தேனின் கசிவந்த சொல்" என்பதுபோலத் தேன்போல இனிமை கசியும் மனமுடையவர் என்பதாம். சிந்தையிலுள்ள இனிமை அவர்களுடைய ஏத்து தலிலும் விளங்கும் என்பார் 'தேன் புரையும் சிந்தையராய் ஏத்திசைப்ப' என்றார். எல்லாச் சுட்டறிவுங்கெட்டுத் திருவருட் செயலே செயலாக, ஆன்மசுத்தியான பேரின்ப உருவாகித் தெய்வப் பண்ணால் தொழுது ஏத்த என்று பழையவுரை கூறும்.

வான் புரவி - பெரிய குதிரை. ஞான ஆகாயமாகிய குதிரை என்க. அருவச் சிவன் ஞானமாகிய குதிரையிலிவர்ந்தே வரக் கூடும் என்பது தெளிக. வான் புரவி மகிழ்ந்து ஊரும் என்று ரேனும், மகிழ்ந்து ஊர்வது வான் புரவி என வினாவிற்கேற்ற விடையாகக் கொள்க.

கசிந்த உள்ளமும், கனிந்த பாடலும், சிவஞானமும் எமக்கு அளித்து, இறைவன் அடிமைகொண்டான் எனக் கூறுதலின் இது அடிமைகொண்ட முறைமை உணர்த்தியதாம்.

362 கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்
மாற்றாரை வெல்லும் படைபகராய் — ஏற்றார் [கோன்
அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயுங்
கழுக்கடைகாண் கைக்கொள் படை. 7

இ - ள் : (தலைவி) கொம்புத்தேனின் இனிமையை ஒத்து இனிமையான மொழிகளைப் பேசுங்கிளியே! குற்றமற்ற திருப் பெருந்துறைநாதன் தம் பகைவர்களை வெல்லும் படைக்கலம் யாது? சொல்வாயாக (என்ன);

(கிளி) எதிர்ந்தவர் அறியாமையாகிய அழுக்கடையாது, கனிந்த அன்பால் நெஞ்சு உருக, மூன்று மலங்களின்மீதும் பாயும் சூலமே இறைவன் கைக்கொண்ட படைக்கலமாகும்; இதனைக் காண் என்றது என்றவாறு.

தலைவி, கிளியே! பெருந்துறையான் பகைவரை வெல்லும் படை யாது சொல் என்றாளாகக் கிளி எதிர்ந்தவர்கள் அழுக் கடையாமல் மனம் உருக, மும்மலங்களையும் பாய்ந்தழிக்கின்ற சூலமே என்கின்றது.

கோற்றேன் - கொம்புத்தேன். மரக்கொம்புகளில் கட்டப் பெற்ற அடையிலுள்ள தேன் எல்லாத் தேனினும் இனிமை யானும் பண்பானும் உயர்ந்தது ஆதலின் அதனைக் கிளியின் மொழிக்கு உவமித்து இங்ஙனம் விளித்தாள்.

கோது - குற்றம். இறைவன் அநாதியே மாயையாதி குற்றங்களின் நீங்கியவன் ஆதலின் 'கோதில் பெருந்துறைக் கோன்' என்றாள்.

மாற்றார் - மாறுபட்டவர்கள். இறைவன் அநாதி நித்திய மானவன்; இயல்பாகவே பாசங்களின் நீங்கினவன். மக்கள் இறைவன் அருளால் பாசநீக்கம் பெற்றவர்கள். இறைவன் முற்றும் உணர்பவன். மக்கள் இறைவன் உணர்த்தும் அள வினதாக உணரும் சிற்றறிவுடையவர்கள். இவ்வண்ணம் பல வகையில் மாறுதலையுடையவர்கள். பகை வெல்லுதலாவது பகை வர்களுடைய பொல்லாக்குணங்களைப் போக்கிச் சுத்தான்மா வாக்கிச் சிவரூபங்காட்டல். அதற்குரிய படை யாது? என்று வினவினாள்.

ஏற்றார் - எதிரேற்றார் என்பது போல எதிர்ப்பட்டவர்கள். அயம் எதிர்பட்டகாந்தத்தால் கவரப்பட்டுக் காந்தத்தன்மை எய்துதல்போல, தீயைச்சார்ந்த இரும்பு அத்தீயின் வண்ண மாதல்போல, சிவசந்நிதானத்தில் எதிர்ந்த உயிர் தம்கருமை நீங்கித் திருவருள் வடிவான செம்மை பெற்றது என்பார் 'ஏற்றார் அழுக்கு அடையாது' என்றார். அடையாது என்ற எதிர்மறை வினையெச்சத்தின் ஈறு செய்யுள்விகாரத்தாற் கெட்டது. அழுக்கு - அறியாமை. நீர் சுரக்குமிடத்தில் தூசி படியாதது போல, உள்ளம் உருகிய இடத்தில் அறியாமை பற்றாது; அறிவொளி திகழும் என்றவாறும்.

மும்மலங்களாவன ஆணவம் கன்மம் மாயை என்பன. அவற்றை இலக்காகக்கொண்டு பாய்வது சூலப்படை என்ற வாறும். கழுக்கடை - சூலம். வாள் என்பது பழையவுரை.

பழையவுரை, ஏற்றார் என்பதற்கு நாதனுடைய சன்னி தானப்பட்ட சுத்தான்மாக்களே சிவரூபம், அவர்களிடம் மலம் அணுகாவண்ணம் என்னும். புதியவுரை ஏற்றார் என்பதற்குக் குறையிரப்போர் என்று கூறும். இது ஞானமரபிற்கேலாமை யுணர்க.

அடியேன் இடைவிடாது எதிர்ப்பட்டேன் அதனால் அழுக் கடையாது ஆண்டுகொண்டான் என்றலின் அடிமைகொண்ட முறை உணர்த்தியவாறும்.

363 இன்பால் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்
முன்பால் முழங்கு முரசியம்பாய் — அன்பாற் [கோன்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பறை. 8

இ - ள்: (தலைவி) பால்போலும் இனிய மொழி பேசுங் கிளியே! எமது திருப்பெருந்துறைநாதன் திருமுன்பு முழங்கு கின்ற முரசு யாது? மொழிவாயாக (என்ன);

(கிளி) அடியார்கள் தம்மீதுவைத்த இடையறாப்பேரன் பினால் அவர்களுடைய பிறவியாகிய பகை கெட்டொழியப் பேரின்ப ஒலியை மிக்கு ஒலிக்கும் பரநாதமே பறையாம் என்றவாறு.

தலைவி கிளியே! திருப்பெருந்துறைப்பெருமான் திருமுன்பு முழங்கும் முரசு யாது மொழிவாயாக என்னக் கிளி ஆன்மாக் களின் பிறவியாகிற பகை கலங்க, பேரின்பத்து உயர்ந்து ஒலிக்கும் பரநாதமே பறையாம் என்கின்றது.

முன்பு - திருமுன்பு. மன்னன் முரசியம்பியவுடன் பகைவர் கதிகலங்கி என்ன விளையுமோ என்று அஞ்சி ஒடுங்குவர். அது போலப் பரநாதப்பறை முழங்கியவுடன் அடியார்களுடைய பிறவியாகிய பகை கெட்டோடியது; பேரின்ப ஒலி உயர்ந் தொலித்தது; அத்தகைய பறையே எமது நாதனது முரசு என்றதாம்.

பேரின்பத்தோங்கும் என்பதற்குப் பழையவுரை, சிவமே தானான இன்பப் பிறவியாகப் பேரின்ப தரிசனமே யோங்கி முழங்குமென்று உரைக்கும். இப்பாடல் சிவதரிசனம் கூறுகிறது என்னும்.

அடியார்கள் அன்பு செய்ய அதனையே உபாயமாகக் கொண்டு பிறவியைப் போக்கிப் பேரின்பத்து ஓங்கச்செய்தான் இறைவன் என்பது உணர்த்துதலின் இப்பாடல் அடிமை கொண்ட முறைமை அறிவிப்பதாயிற்று.

364 ஆய மொழிக்கிள்ளாய் அள்ளூறும் அன்பர்பால்
மேய பெருந்துறையான் மெய்த்தாரென் — தீயவினை
நாளுமணு காவண்ணம் நாயேனை யாளுடையான்
தாளியறு காமுவந்த தார். 9

இ - ள்: (தலைவி) ஆராயத்தக்க மொழிகளைப் பேசுங் கிளியே! இன்பம் சுரக்கின்ற அன்பர்களிடம் விரும்பி எழுந் தருளியுள்ள திருப்பெருந்துறைநாதன் அணிந்துள்ள உண்மை யாகிய மாலை யாது? (என்ன);

(கிளி) தலைவியே! நாயை ஒத்த அடியேனைத் தீவினைகள் அணுகாதவண்ணம் தினமும் காத்து ஆளாகவும் ஏற்றருளும் தலைவன் விரும்பிய மாலை கொடியறுகாம் என்றவாறு.

தலைவி கிளியே! அடியாருள்ளத்து அமர்ந்திருக்கும் திருப் பெருந்துறைப் பெருமான் மாலை யாது என்னக் கிளி, தீவினை அணுகாதவண்ணம் நாயேனைக் காத்தருளும் அவன் மாலை தாளியறுகாம் என்கின்றது.

சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை என்பது பழமொழி. தனக்கு ஒரு சிந்தனையின்றிப் பேசும் என்பது அதன் கருத்து. அப்படியாக நீ யாம் ஆயத்தக்க மொழிகளாக மிகமிகச் சிந்தித் துப் பேசுகிறாய் என்பாள் 'ஆய மொழிக் கிள்ளாய்' என்றாள். ஆய - ஆய்தலையுடைய. ஆய் என்பது முதனிலைத் தொழிற் பெயர். அ: ஆறும்வேற்றுமைப் பன்மையுருபு. பழையவுரை

வேதாகமப்பொருள் சிவமே என ஆராயும் வார்த்தைகளை யுடைய ஆனந்தசுகப் பெண்ணே என்று கூறும். புத்துரை. ஆய்தல் - கொண்டாடுதல், கொண்டாடத் தக்க உரையினை யுடைய கிளியே என்று கூறும்.

புளிக்கண்டார்க்கு வாயில் நீருறுதல்போல இன்பஅன்பால் உள்ளத்து விளையும் ஒருவகை மெய்ப்பாடு அள்ளூறுதல். கனிந்தூறும் என்கின்றது பழையவுரை.

மெய்த் தார் - உண்மையாகிய மாலை; திருமேனியின்கண் விளங்கும் மாலை எனலுமாம். தார் - மார்பிலணியப்பெறுவது. தாளியறுகு - கொடியறுகு.

நாயேனைத் தீயவினை அணுகாவண்ணம் ஆளுடையான்: இறைவன்பால் யான் அன்புசெய்து அவன் என்னை ஆட்கொள்வதற்கு முன்பு தீவினைகள் சூழ்ந்து நலிந்தன; பிறைமதி பெருமானை அடைவதற்குமுன் தக்கன் முதலாயினார்சாபம் அவனை நலிந்ததுபோல; இறைவன் நாயேனை ஆட்கொண்ட பின்பு வினைகள் எம்மைச் சாரமாட்டாவாயின; நலிந்து விலகின; அங்ஙனம் எம்மை ஆட்கொண்டவன் என்றார்.

உவந்த தார் - விரும்பி அணியும் மாலை.

சிவயோகமே பொருளெனக் காட்டி, நாயேனை அடிமை கொண்டவன் என்பதால் சிவயோகம் கூறியது என்னும் பழைய உரை.

தீயவினை அணுகாவண்ணம் ஆளுடையான் என்றது அடிமைகொண்ட முறைமையை அறிவிப்பது.

365 சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியுங் கொடிகூறாய் — சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி யேர்காட்டுங்
கோதிலா வேறுங் கொடி. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள்: (தலைவி) சோலையின்கண் வாழுகின்ற பச்சைக் கிளியே! தூய்மையான நீர்சூழ்ந்த திருப்பெருந்துறைத் தலைவனது அழகு விளங்கும் கொடி யாது? கூறுவாயாக (என்ன);

(கிளி) அயலார் மிகவும் திடுக்கிட விண்ணின்மேல் விளங்கி அழகும் எழுச்சியும் காட்டுகின்ற குற்றமில்லாத கொடி இடபமாம் என்கின்றது என்றவாறு.

தலைவி, கிளியே! பெருந்துறைப் பெருமானுடைய அழகு விளங்கும் கொடி யாது என்ன, கிளி அயலார் திடுக்கிட எழுச்சியையும் அழகையும் காட்டும் இடபமே கொடியாம் என்கின்றது.

கூட்டுக் கிளியைப்போலக் காயச்சிறையிலே அடைபடாது முத்தான்மாவாகச் சோலையில் சிவானுபவச் சுதந்தரம்பெற்றுச் சுற்றித் திரியும் பேரின்பநிலை உனக்கும் இருக்கிறது என்பாள் 'சோலைப் பசுங்கிளியே' என்றாள்.

தூநீர் - தூய்மையையுடைய நீர். தசாங்கம் பத்துப் பாடல்களிலும் பெருந்துறைக்கோன் என்றே தலைவனைக் குறிக்கிறாள். பெண்கள் தம் தலைவன் இயற்பெயரைக் கூறாது மதுரையார், நெல்லையார், தில்லையார், கோகழியார் என ஊரடியாக வந்த பெயராலேயே குறிப்பது தமிழ்மரபாதலைக் காண்க.

கோலம் பொலியும் கொடி - அழகோடு விளங்கும் கொடி. கிளி கூறும் விடையிலும் 'ஏர் காட்டும் கொடி' என்றல் காண்க. இஃது உணராதார் சிலர் வடிவம் விளங்கித் தோன்றும் கொடி என்பர். பழையவுரை திருவருளழகான கொடி என்னும்.

ஏதிலார் - இயைபு சிறிதும் இல்லாதவர்; அயலார் என்பதாம். கொடிக்கண் ஏறு விளங்கும் எடுப்பும் துடிப்புமாகிய இவற்றைக்கண்டு இவன் கைக்கொடியிலுள்ள ஏறே இவ்வளவு மிடுக்குடையதாயின் யாம் எப்படித் தப்புவோமென்று திடுக்கிடுகின்றனர் பகைவரும் பிறருமாகிய அயலார் என்பார் 'ஏதிலார் சாலவும் துண்ணென்ன மேல் விளங்கி ஏர் காட்டும் கோதிலா ஏறு' என்றார். இடபம் அறவடிவினதாதலின் கோதிலா ஏறு எனப்பட்டது.

யானும் தானும் வேறின்மை காட்டும் மெய்கண்ட சிவ போகமே கொடியாதலின் இச்செய்யுள் சிவபோகம் கூறியது என்னும் பழையவுரை.

புறச்சமயத்தாரையும், சிவத்தொடர்பு பெறாதாரையும் நடுங்கச்செய்வது கொடி என்றமையான் அடியார்களின் அச்சத்தைப் போக்கிக் காப்பது என்பது போதருதலின் அடிமைகொண்ட முறைமை உணர்த்தியவாறு காண்க.



சீரார் பெருந்துறைச் செல்வன் உறைகோயில்

# 20. திருப்பள்ளியெழுச்சி

[திரோதானசுத்தி]

அடிகள் திருப்பெருந்துறையில் வதிகின்றகாலத்து, விடியற்காலத்து இறைவனைத் துயிலெழுப்புவதாக இந்தப் பத்துப் பாடல்களையும் அருளிச்செய்தனர். இறைவனைப் பள்ளியினின்றும் எழுந்தருள்க என வேண்டிக்கொள்வ தாக இது அமைந்துள்ளது.

பள்ளி எழுச்சி பழந்தமிழ்நூல்களில் 'துயிலெடைநிலை' என்று வழங்கப்பெறுகின்றது. தொல்காப்பியத்துப் பொருளதிகாரப்புறத் திணையியலுள் பாடாண்டிணையின் பகுதியாக, "தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச் சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்" எனக் கூறப்பட்டுளது.

துயிலெடைநிலையாவது பகைமேற்சென்ற மன்னன் பகைவரை வென்று, பாசறைக்கண் மனக்கவற்சி சிறிதுமின்றித் துயிலுகின்ற காலத்து நல்ல புகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் துயிலினின்று அவனை எழுப்புவதாகப் பாடுவது. சூதர்-நின்றேத்துவார். சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முந்திய காலம் வைகறை. அப்போது அரசனை எழுப்புவர். அரசன் எழும்புங்காலத்தே தன் வீரமும், வெற்றியும், வழிவழிவரும் குலப்பெருமையும் கேட்டு எழுவானாயின் அன்று முழுதும் பெருங்கிளர்ச்சியுடன் விளங்குவன். அதற்காக அரண்மனையில் வாழுகின்ற அமைதியானகாலத்தும், வைகறையில் எழுப்பப் பாடும் பாணர்களை அமைத்திருந்தனர் எனச் சங்கநூல்கள் தெரிவிக்கின்றன.

பாணர்கள் துயிலெழுப்புகிறபோது வைகறைக்காலத்தியல்பு களையும் கூறி எழுப்புவர்.

புறப்பொருள் வெண்பாமாலையிலும், சூதர் துயிலுணர்த்துதல் சொல்லப்பெற்றுள்ளது. ஆகவே, பாசறைக்கண் துயிலெடுத்தலும் அரண்மனைக்கண் துயிலெடுத்தலும் நிகழும் என்பது பெற்றும். மனையின்கண் துயிலெழுப்புவர் பரிவாரத்தின் மகளிர்; மனைக்கண் மகளிர் எடுப்பது அகத்திணை, பாசறைக்கண் சூதர் ஏத்துவது புறத்திணை என்பர் சிலர். பாடாண் அகத்தொடு பிணைந்து அகப் புறமாயும், புறத்தொடு பொருந்திப் புறமாயும் விளங்குதல் வெள் ளிடையாதலின் துயிலெடையை இரண்டாகப் பகுத்து உணர்தல் விரும்பத்பாற்றன்று என்க.

பழைய குறிப்பு திரோதானசுத்தி; அதாவது ஏகமாய திரோ தாயி மறைப்பால் மலத்தை நீக்குதல் எனவும் கூறும். பழைய புராணம்,

"ஏர்மருவு திருப்பள்ளி யெழுச்சிபணி விடைகேட்டு
ஆர்வமுடன் ஆண்டஅரற் கன்புசெயும் இயல்பே"

என விளக்கந்தரும்.

பழையவுரை "திருப்பள்ளியெழுச்சி திரோதானசுத்தி" என்று அகத்தியச் சூத்திரத்தை மேற்கோள்காட்டி, உயிர்கள் கேவல சகல சுத்தநிலைகளினின்றும் நீங்கித் திருவருள் உதயமாகுங்காலத்துத் திருவருளே பரையாக அருளுவது என்று கூறும். திரோதானம் சுத்தமாய்ப் பரையாதல் உணர்த்தப்பெறுகின்றது என்பதாம்.

இவை அனைத்தையும் ஒருங்கு இயைபுபடுத்தி எண்ணுங்கால், திரோதானசுத்தி என்பது இதுவரை உயிர்களுக்கு மறைப்பினை அளித்து வினைப்போகங்களை நுகர்த்திய திரோதானசத்தி அருட் சத்தியாக வெளிப்படுங்காலமே வைகறை. அதனை எண்ணி இறை வனை எழுப்புதலே திருப்பள்ளியெழுச்சியின் பயன் என்பதைத் தெய்வச் சேக்கிழார்பெருமானும்,

"நீறணிந்தார் அகத்திருளும் நிறைகங்குற் புறத்திருளும்
மாறவருந் திருப்பள்ளி யெழுச்சியினில்"

என்று திருநாவுக்கரசுநாயனார் புராணத்தில் அறிவித்தல் காண்க.

வைணவ நூல்களில் 'அநாதி மாயா சுப்தரான இவரைப் பெருமான் உணர்த்தினார். அதில், இவர் தம் பக்கல் வியாமோகத் தாலே ஸுப்தரான அவரைத் திருப்பள்ளி உணர்த்துகிறார்' என்பர் பெரியவாச்சான்பிள்ளை. இதனால் திரோதானசத்தியின் ஆற்றலால் தூங்கிய மணிவாசகப்பெருமானைச் சிவபெருமான் எழுப்ப, அவர் திருவருளோடுகூடி விளங்கும்போது இவரை இவ்வண்ணம் உய்யக் கொண்டோமே என்ற கருணைப்பெருக்கால் இறைவன் கண்ணயர, சிவபெருமானை மணிவாசகப்பெருமான் திருப்பள்ளியினின்று எழுந் தருள்க என்றும் கருதத் தோன்றுதல் காண்க.

## எண்சீர் ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

366 போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணை துணை மலர்கொண்
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழினகை கொண்டுநின் திருவடி தொழுகோம்

*சேற்றிதழ்க் கமலங்கண் மலருந்தண் வயல்சூழ்*
*திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே*
*ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்*
*எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.* 1

இ - ள் : அடியேனது வாழ்விற்கு மூலமாகிய பொருளே! இதழ்களோடு கூடிய தாமரைகள் மலருகின்ற குளிர்ந்த சேற்றோடு கூடிய வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறை என்னும் சிவபுரத்திலே என்றும் இருந்தருளுகின்ற சிவபெருமானே! உயர்த்துப் பிடிக்கப்பெற்ற இடபக்கொடியை உடையவனே! என்னை அடிமையாகப்பெற்றவனே! எம் தலைவா! வணக்கம்; பொழுது விடிந்தது; பூப்போலும் அழகிய திருவடிகளின் மேல் அணிய ஒன்றோடொன்று சமமான இரு பூக்களைக் கொண்டு சாத்தி, தேவரீருடைய திருமுகத்திலே எமக்கு அருள் விளங்குகின்ற அழகிய புன்முறுவலை மனத்திலே எண்ணி, திருவடிகளைத் தொழுவோம்; படுக்கையினின்றும் எழுந்தருளுக என்றவாறு.

எம்பெருமானே! பொழுது புலர்ந்தது; நாங்கள் மலரடியிலே மலரைச் சாத்தி, நின் நகைமுகங்கண்டு திருவடிகளைத் தொழக் காத்திருக்கின்றோம்; பள்ளி எழுந்தருளுக என்பது கருத்து.

உலகியலில் அரசர் முதலாயினரைக் காண நேர்ந்தபோது அவர்களைத் தம் முன்னிலைப்படுத்த முதற்கண் 'வணக்கம்' என உரையால் வணக்கம் சொல்லி, அவர் தம்மைத் திருப்பிப் பார்த்தபோது செயலாலும் வணங்கிப் பின்னரே வந்த காரியத்தை விண்ணப்பித்தல் வழக்கம். அங்ஙனமே அடிகளாரும் 'போற்றி' என எடுப்பிலேயே அருளுகின்றார்கள்.

வாழ்முதல் - வாழ்வுக்கு அடிப்படை. வாணிகத்திற்கு முதல் இன்றியமையாதவாறுபோல, மக்களுடைய வாழ்விற்கு இன்றியமையாதவர் இறைவன் என்பார் 'வாழ்முதலாகிய பொருளே' என விளித்தார்.

அவ்வண்ணம் தம் மனத்தால் அறியப்படுவதாய் வாழ்முதலாகிய அருவச்சிவம் யாமெல்லாம் சென்று அடங்கி வழிபடுதற்கு எளியனாகத் திருப்பெருந்துறைக்கண்ணும் எழுந்தருளி இருக்கின்றார் என்று அறிவிப்பார் 'திருப்பெருந்துறையுறை சிவபெருமானே' என்றார்.

திருப்பெருந்துறையைச் 'சேற்றிதழ்க் கமலங்கள் மலரும் தண் வயல் சூழ் பெருந்துறை' எனச் சிறப்பித்தது உயர்ந்த

இறைவனுக்கு உகந்த தாமரைகள் வயற்சேற்றிலும் மலர்கின்றமைபோல, சிவானுபூதிச்செல்வர் சிந்தையாகிய உயர்ந்த நிலத்து உளதாம் பரசிவம் நாம் அறிந்து உய்யத் திருப்பெருந்துறையிலும் விளங்குகிறது என்னும் நயம் தோன்ற நிற்றல் காண்க.

கமலம் கண்மலருமெனப் பிரித்து, தாமரைகள் கண்போல் மலரும் என உரைத்து, விடியல் நிகழ்ச்சி விளங்குவதாக எனக் கூறுவாருமுளர். திருப்பெருந்துறை சீபஞ்சாக்கரம் ஓதுகின்ற உயிர்கள் திருவடி நெடுங்கரை சேர்ந்து உய்யும் இடமாகும் என்னும் செம்பொருளையும் உணர்த்திநிற்கின்றது.

ஏற்றுயர்கொடி என்பதை உயர் ஏற்றுக்கொடி என மாற்றி வெற்றியோடு உயர்த்திப் பிடித்த இடபக்கொடி எனப் பொருள் கொள்க. அருவாய் அருவுருவாய் உருவாய்த் திருமேனி தாங்கும் சிவம் எம்முடைய ஆணவமலக் கட்டை அறுத்து, அறியாமைப் பகையை அகற்றி, வெற்றிக்கொடி தூக்கி எம்மை அஞ்சல் என்று அருளி ஆட்கொண்டது என்பார் 'எனை உடையாய்' என்றும், 'எம் பெருமான்' என்றும் விளித்தார். இவை அண்மை விளிகள்.

இணை மலர் - ஒன்றோடொன்று ஒத்த மலர். துணை மலர் - இரண்டாகிய மலர். ஒன்றோடொன்று ஒத்த இரண்டாகிய மலர்களைத் திருவடிகளிரண்டினும் ஏற்றித் தொழுகோம் என்க. பூங்கழல் - பூப்போலும் மெல்லிய, மணம் நிறைந்த நிறமுடைய கழல் என்க. கழல்: தானியாகுபெயர்.

நாங்கள் பூவினைக்கொண்டு பொன்னடிபோற்றத் தேவரீர் திருமுகத்திலே புன்னகை தோன்றும்; அதனை எங்கள் பேறாக நினைத்துத் தொழுவோம் என்பார் 'திருமுகத்து அருள் மலரும் எழில்நகைகொண்டு தொழுகோம்' என்றார்.

இறைவன் செய்யும் நகை திரிபுரமெரிப்பதும், அடியார்களை விரும்பி வரவேற்பதும், அருள்செய்வதும், உமையம்மையாரோடு குறுநகை கொள்வதுமாய பல பயன்களை விளைவிப்பது; அவற்றுள் நாங்கள் அருள்மலரும் அநுக்கிரக ஆற்றலையுடைய நகையையே எதிர்நோக்கி இருக்கின்றோம் என்பார் 'அருள் மலரும் எழில் நகை' என்றார். சிலர் 'வாழ்முதலாகிய பொருள்' என்பதால் அருவமாகிய லயசிவத்தையும், 'திருப்பெருந்துறை உறை சிவபெருமானே' என்பதால் அருவுருவமாகிய போக சிவத்தையும், 'ஏற்றுயர் கொடியுடையாய்' என்பதால் உருவ

சிவமாகிய அதிகார சிவத்தையும் அடிகளார் அறிவித்தார் எனலும் ஒன்று.

பழைய உரை 'வாழ்முதலாகிய பொருள்' என்பதற்கு என் உயிர்க்கு அகரமுதல எழுத்தேபோல் விளங்கும் பரசிவனே என்றும், 'போற்றி' என்பதற்கு அடிமையை இரட்சிக்க என்றும், புலர்ந்தது என்பதற்குக் கேவல சகலம் நீங்கிச் சுத்தமான அறிவியல்ஞானம் உதயமாயிற்று என்றும் உரைக்கும்.

இது, உறக்கம் நீங்கிப் பெருமானைத் தரிசிக்க எண்ணிய உயிர் அதற்குத்தக அறியாமை நீங்கித் திருவருட்பேற்றிற்குத் தகுதிபெற்றதென்று உணர்த்துதலின் திரோதானசுத்தியாதல் காண்க.

367 அருணனிந் திரன்றிசை யணுகினன் இருள்போய்
அகன்றது வுதயநின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழவெழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணாந்
திரணிரை யறுபத முரல்வன இவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
அருணிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகட லேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

இ - ள்: திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள சிவ பெருமானே! திருவருளாகிற செல்வத்தை எமக்கெல்லாம் அருளும்பொருட்டு எழுந்தருளும் பேரின்ப மலையே! அலைகளோடுகூடிய கடலை ஒத்தவரே! சூரியனின் தேர்ப்பாகனாகிய அருணன் கீழ்த்திசையை வந்தணுகினன்; இருள் அகன்று, உதய ஒளி எங்கும் பரவிற்று; தேவரீருடைய, திருமுகத்தினின்று பரவும் திருவருளாகிற சூரியன் மேலே சிறிது சிறிதாக உயரப் பெருமையையுடைய அழகிய கண்களாகிற தாமரை மலர்கள் மலர, வரிசையாகத் திரண்டுள்ள வண்டுகள் ஒலிக்கின்றன; இவற்றைத் திருவுளத்தெண்ணிக் காண்க; பள்ளியினின்றும் எழுந்தருள்க என்றவாறு.

அளக்கலாகா அளவும் பொருளும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் வறப்பினும் வளந்தரும் வண்மையுமுடையது மலை ஆதலின் இறைவனை மலையென உருவகிக்க எண்ணி அடிகளார் இறைவனை ஒரொருகால் ஒரொருதன்மையையுடைய மலையாகக் காண விரும்பாது, எப்போதும் இன்பமே தரும் ஆனந்த வடிவான மலையாக உருவகித்து 'ஆனந்த மலையே' என்று விளித்தார். ஆனந்தம் - இன்ப உணர்ச்சி. 'ஆராத இன்பம்

அருளுமலை' 'முத்தியருளுமலை' என்றவற்றையும் எண்ணுக. ஆனந்த மலையாகிய இறைவன் தரும் செல்வம் அருட்செல்வம் என்பார் 'அருள்நிதி தர வரும் மலை' என்றார். நிலைத்த பயன் தருதலும், எதற்கும் என்றும் அசையாமையும் உடைமைபற்றி மலை என்று உருவகித்தவர், மேல் அளவிடற்கரிய பரப்பும், ஆழமும், அரும்பொருள் பலவற்றையும் அடக்கிய பெருமையும் உடைமைபற்றிக் 'கடலே' என்றார். அலைகடல்: சாதியடை.

அருணன் - சூரியன் தேர்ச்சாரதி. இவனது கால் முடம் என்று புராணம் கூறும். சூரியோதயத்தின்முன் எழும்புகின்ற ஒளியை அருணோதயம் என்றல் உலகவழக்கு. இந்திரன்திசை - கிழக்கு. அருணோதயம் புலர்வதற்கு ஒன்றேகால் நாழிகைக்கு முன் நிகழ்வது. மக்கள் பள்ளியெழவேண்டிய காலம் சூரியோதயத்திற்கு ஐந்து நாழிகைக்கு முன்பு. ஆகவும் அருணோதயமாயிற்று என்றது விரைவில் எழுக என்ற குறிப்பாம்.

இருள் - பொருள்கள் புலப்படாவண்ணம் மறைத்து, கண்ணொளிக்கு உபகாரப்படாது நிற்கும் ஒளியின் இன்மை. அது அகன்றது எனவே ஒளி எழுந்தது. அவ்வொளியும் கீழ்த்திசை முழுவதும் பரவி, ஏனைய திசைகளிலும் பாய்ந்துளது என்பார் 'இருள் போய் உதயம் அகன்றது' என்றார். அகன்றது - பரந்தது. "அறிவகற்றும் கல்வி" என்ற ஆட்சியும் இது கண்டு ஆண்டதென்க.

முகத்தின் சூரியன், கருணையின் சூரியன் என இயைக்க. முகம் சூரியன், அதில் எழும் கருணை கதிர் எனக் கொள்க. எழ எழ என்ற அடுக்கு, சூரியன் சிறிது சிறிதாக மேலெழும் இயற்கையழகைப் புலப்படுத்துவது. சூரிய கிரணம் சிறிது சிறிதாக எழத் தாமரை இதழ் இதழாக விரிதலைக் காண்கிறோம். அதுபோல இறைவனுடைய கண்களாகிய இதழ்கள் விரிந்தன. புதிதாக மலர்ந்த தாமரையில் தேனுண்ணும் வண்டுகளைப் போலப் பெருமை தங்கிய அடியார்களுடைய கண்களாகிற வண்டுகள் ஒலித்தன எனப் பொருட்டொடர்பு கொள்க.

'திருமுகத்தினிடத்துப் பொழியும் கருணையை ஒத்தவனாகிய சூரியன் வானின்மேற் செல்லச்செல்ல, இறைவனது அழகிய கண்ணை ஒத்து இன்பந்தரும் மணந்தங்கிய தாமரைமலர் விரிய' என உரை காண்பர் சிலர். முகம் ஒருபொருள். கருணை அதன் தன்மை. உருவகிக்குங்கால் பொருளைப்பொருளோடும், தன்மையைத் தன்மையோடும் உருவகிப்பதே மரபாம். தன்மையைப்

பொருளோடு ஒப்பித்தலும் உருவகித்தலும் இல்லையாம். ஆதலால் முற்கூறியாங்கு உருவக இயைபு கொள்க; பொருளுங் கொள்க.

அண்ணல் - பெருமை: பண்புப் பெயர். அது பண்பாகு பெயராகப் பெருமையுடையவரை உணர்த்தும். ஆதலால் அண்ணல் அங்கண்ணும் அறுபதம் எனவேகூட்டுக. திருமுகச் சூரியன் எழ, பெருமானுடைய கண்மலர் மலர, அதன் தேனை யுண்ண, அடியார்களின் கண்வண்டுகள் முரலுகின்றன என்ற இயைபின் உளதாம் பொருள் நயம் ஓர்க. அண்ணல் என்பதற்குச் சிவபெருமான் எனவே பொருள் கொள்ளின் சிவபெருமான் முகமாகிற சூரியன் எழ, அவன் கண்களாகிற தாமரை மலர, அவன் விழிகளாகிற வண்டுகள் முரலுகின்றன எனின், காண்பானும் காணப்படும் பொருளும் கலப்பால் ஒன்றுனபோதே இன்பம் விளையுமன்றிச் சுவைப்பானே சுவையாயின் நுகர்ச்சி ஏதென்று ஒழிக. வண்டுகளின் கூட்டமாகக் கண்களைக் கூறிய மையே, காண்பார் பலராதலையும், கண்கள் பலவாதலையும் காட்டும் என்க.

அருணன் கீழ்த்திசையடைந்தான் என்று இயற்கைகூறுவார் போலச் செந்நிறமான அருட்சத்தியின் வெளிப்பாடு நிகழ்ந்தது என்றும், இருள் போயிற்று என்றதால் மலநீக்கமும் உண்டாயிற்று என்றும், உதயம் அகன்றது என்றதால் சிவஞானம் பரவிற்று என்றும், திருமுகத்தின் கருணையின் சூரியன் எழஎழ நயனக்கடிமலர் மலர என்றதால் சிவதரிசனமும் திருவருட் பேறும் சித்தித்தன என்றும், கண்ணும் அறுபதம் முரல்வன என்றதால் அதனை நுகரும் வண்டுகளாக அடியார் கண்கள் அமைந்துள்ளன என்றும் சிவாநுபவப்பொருளும் தோன்ற உரைத்திருத்தல் காண்க.

அடிகளார் தமது பரிபாகச் சிறப்பை உணர்த்தி, எம்மை ஆட்கொள்ளப் பெருமானே எழுந்தருளாய் என வேண்டிக் கொள்வதால் இத்திருப் பாடல் திரோதானசுத்தியை உணர்த்துவதாயிற்று.

ஞாயிற்றின் தோற்றம், தாமரை மலர்ச்சி, வண்டொலி முதலாயின திரோதானசத்தியின் காரியங்கள், இப்போது சிவதரிசனமும், திருக்கண்ணோக்காகிற சத்திநிபாதமும் ஆக அருட் சத்தியாய்ச் சுத்தியாயிற்று என்றமையால் திரோதானசுத்தியாதல் தெளிக.

368 கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை யொளியொளி யுதயத்
தொருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழற் றாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
யாவரும் அறிவரி யாயெமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 3

இ - ள்: தேவதேவனே! திருப்பெருந்துறையுறை சிவ பெருமானே! யாவராலும் அறிதற்கு அரியவனே! எங்கட் கெல்லாம் அறிந்தனுபவித்தற்கு எளிமையானவனே! எம் பெருமானே! அழகிய குயில்கள் கூவின; கோழிகள் கூவின; நாரைகள் ஒலித்தன; சங்குகள் ஒலித்தன; விண்மீன்கள் யாவும் ஒளி குன்றின; உதயகாலத்து ஒளி ஒருங்கு திரண்டு எழுந்தது; ஆகையால் தேவரீர் திருப்பள்ளியினின்றும் எழுந் தருள்க; எமக்கெல்லாருக்கும் விருப்பத்தோடு, நல்ல வீரக் கழல் செறிந்த திருவடியிரண்டனையும் காட்டுக என்றவாறு.

வைகறையில் எழுந்தொலிக்கும் பறவைகள் யாவும் ஒலித் தன; உடு முதலாயின ஒளி மங்கின; உதய ஒளி ஓங்கிற்று; ஆகையால், தேவதேவ! திருப்பள்ளி எழுந்தருள்க; திருவடி தரிசனம் காட்டுக என்றார்.

தேவன் ஒளியுடையான். ஒளியுடைய பொருள்களைத் திற்கும் ஒளிதரும் பேரொளிப் பிழம்பினன் ஆதலின் 'தேவ தேவ' என்றார்.

தேவ தேவனைத் தியானிப்பவர்களுக்கு மட்டும் தெரியும் அகச்சோதியாய் இருப்பினும் எல்லாரும் ஈடேற மண்ணுலகில் திருப்பெருந்துறை என்னும் தலத்திலும் எழுந்தருளியுள்ளான் என்பார் 'திருப்பெருந்துறை உறை சிவபெருமானே' என்றார்.

ஆணவமலத் தடையால் அஞ்ஞானத்தான் மறைப்புண்ட ஆன்மாக்களுக்குத் தத்துவரூபம் முதல் சிவதரிசனம் வரை பரி பாகத்திற்கேற்ப உடனுணர்த்துபவன் சிவனேயாதலான் தான் பிறர்க்குக் காட்டினாலன்றி எவராலும் தம் முயற்சியும் தம்மறிவுந் துணைக்கொண்டு அறிய இயலாதவன் என்பார் 'யாவரும் அறிவு அரியாய்' என்றார். யாவரும் என்றது சகலராம் மூவகை உயிர்களையும், பரிபக்குவ வேறுபாட்டால் பன்னூறுயிரவகைப் பட்ட உயிர்களையும் உணர்த்திநின்றது. அறிவு - அறிதல்.

அங்ஙனம் அனைவர்க்கும் அறிய அரியனுயினும், எம்மைப் போல மீளா ஆளாய் அடித்தொழும்பு செய்யும் அன்பர்கட்கு மிக எளியனுய் இன்புறுத்துபவன் என்பார் ' எமக்கு எளியாய் என்ருர்.

எளியனுயினும் தம் தலைமைக்கு இழுக்கு நேராது எம்மைக் கொடுத்தும் எடுத்தும் தடுத்தும் பாதுகாப்பவன் என்பார் ' எம் பெருமான் ' என்ருர்.

பொழுது புலர ஐந்துநாழிகைக்குமுன்பே கூவுவன கோழி; புலருகின்றபோது கூவுவன குயில்; பின்னர்க் கூவுவன குருகு முதலிய பறவைகள். அங்ஙனமாகவும் குயில் கோழி குருகு என்றது வைகறையில் இயற்கை ஒட்டி எழுந்த வர்ணனையன்று. அறியாமை நீங்கிச் சிவஞான ஒளிபெறுதலாகிய அருளனுபவ நெறியே அடிகளார் கருத்து நிறைந்த பொருள். அதனுல் முதலில் உடல் முழுதும் கருமையாய்க் குரலில் இனிமையாய குயில்கள் கூவின என்ருர். குயில் போன்ற செறிந்த இருள் விலகும் பரிபாகம் எய்திற்று என்பது உணர்த்தப்பெற்றது.

கோழி சிறிது கருமையும், மிக்க செம்மையும் கலந்த பறவை. திரோதான இருளும் அனுக்கிரகச் செம்மையும் கலந்த அனுப வத்தின் அடையாளம் கோழி. அது கூவுதல் அஞ்ஞானம் சிறுகி, அருள்மிக்கு விளங்கும்நிலை விளைந்தமையை உணர்த்த என்க.

குருகு - நாரை. பெரும் பகுதி வெண்மையும், சிறு பகுதி செம்மை அல்லது சாம்பர்நிறமும் உடைய ஒருவகைப் பறவை. இது எக்காளம்போலக் கூவும் ஆதலால் குருகுகள் இயம்பின என்ருர். இயம்பின-வாச்சிய ஒலிபோல் இசைத்தன என்பதாம். ஆகவே, வெண்மை மிகுதியும் செம்மை அல்லது சாம்பர்நிறம் குறைவாகவுமுடைய குருகுகள் பரிபாகச் சிறப்பும், வாசனைமலச் சேர்க்கை சிறிதும் உடைய தூயநிலையை உணர்த்தும் அடை யாளமாதலின் குருகுகள் இயம்பின என்ருர்.

சங்கு - முழுதும் வெண்மையானது. சிறிதும் வேற்று நிற மில்லாதது. அவை இயம்பின என்றது தூயநிலை அனுபவம் விளைந்தமையைக் குறிக்கும் அடையாளமாம். ஆகவே, கரிய குயில் கருமையும் செம்மையும் கலந்த கோழி, அழுக்குநிறங் கலந்த வெண்மையான குருகு, மிக்க வெண்மையான சங்கு இவை ஒலித்தன என்றல் ஆணவமலச் சேற்றுள் அழுந்தி அஞ் ஞானவடிவான ஆன்மா பொழுதுபுலர்தலாகிய ஒளித்தோற்றம் படிப்படியாக உண்டாக, கலாதி வித்தியாதத்துவ சகாயத்தால்

பாசஞானம் பெற்று, பின் பசுஞானமும் பெற்றுச் சுத்தான்மா வாகிப் பிரணவநாதத்தைச் செய்து எங்கும் மங்கல ஒலியை எழுப்பிற்று என்று ஆன்மானுபவநயந்தோன்ற உரைத்தமை காண்க.

சிலர் குயில் பிள்ளைப் பறவைகளுள் ஒன்று, யாரானும் பிடித்து வளர்க்கப்படாதது என்று முதற்கூறினர்; பிறகு, வீட்டுப் பறவையாகிய கோழியைக் கூறினர்; அடுத்துப் பறவைகள் பலவற்றின் ஒலியைக் கூறினர்; அதன்பின் சங்கொலி, சாற்றினர் என்பர். இதனால் மனங்கவரும் நயமும் சமயமரபும் இன்மை தெளிக.

ஒளிப்பிழம்பாகிய கதிரொளி உதயத்து ஒருப்படுகின்ற போது விண்மீனின் ஒளிகள் அவிதல் இயல்பாதலின் 'தாரகையொளி ஔவின ; ஒளி உதயத்து ஒருப்படுகின்றது' என்றார்.

பள்ளி எழுந்தருளாய் ; கழல் செறி நற்றுளிணை காட்டாய் என முறைப்படுத்துக. கழல் - வீரர்கள் காலில் அணியும் ஒரு வகை அணி. நற்றுள் என்றார் காண்பவர்களுடைய பிறவி நோயைப் போக்குதலால். "நற்றுள் தொழாஅர் எனின்" என்பதற்குப் பரிமேலழகர் கூறுவதை ஈண்டுங்கொள்க.

குயில் - பரநாதக் குயில். கோழி - பிரணவக் கோழி. குருகுகள் - நவசத்தியான பக்ஷிசாலங்கள். சங்கு - கலைஞான வெண் சங்கு. தாரகை - ஆன்ம நட்சத்திர சிற்சத்தி. அதன் ஒளி ஓவுதல் - தற்செயலற்று ஒளித்தல் என்று பழையவுரை கூறுதல் ஊன்றி அறியத்தக்கது.

இத்திருப்பாடலும் முறை முறையாக இருள் நீக்கத்தையும் ஒளிப்பேற்றையும் உணர்த்தி, துயிலெழுப்புதலைப் பொருளாகக் கொண்டமையால் திரோதான சுத்தியாயிற்று.

369 இன்னிசை வீணைய ரியாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகைய ரழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியி லஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
என்னையும் ஆண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 4

இ - ள் : திருப்பெருந்துறையுறையும் சிவபெருமானே! ஒன்றற்கும் பற்ருத அடியேனையும் ஆண்டுகொண்டு இனிய திருவருளைப் பொழிகின்ற எம்பெருமானே! இனிய இசையை எழுப்பும் வீணையை உடையவர்களும், யாழினை உடையவர்களும் ஒருபாலாகவும், இருக்குவேதமந்திரங்களையும் தோத்திரங்களையும் ஓதுகின்றவர்கள் ஒருபக்கமாகவும், பிணையாகக் கட்டப்பெற்ற பூக்கள் நெருங்கிய கையையுடையவர்கள் ஒருபக்கமாகவும், தொழுதலையுடையவர்களும் அழுதலையுடையவர்களும் துவண்டு விழுதலையுடையவர்களும் ஒருபக்கமாகவும் உள்ளனர்; ஆதலால் படுக்கையினின்று எழுந்தருளுக என்றவாறு.

சகலான்மாவாகிய என்னையும் தன் ஞானபூமிக்கு ஏற்ற அடிமையாக ஏற்று ஆட்கொண்ட பெருமானே! நின்னடி தொழுதற்காகப் பரிபாகநிலையால் பலவேறுபட்ட அடியார்கள் தனித்தனியே ஒவ்வொருபக்கம் குழுமியிருக்கின்றனர்; தேவரீர் திருப்பள்ளியினின்று எழும்பவேண்டும் என்பது கருத்து.

என்னையும் என்றதிலுள்ள உம்மை இழிவுசிறப்பு. திருவடிக்கண் அன்பும், ஆசாரசீலமுமில்லாத என்னை ஆளாக ஆண்டாலும் ஒறுத்துத் திருத்தவேண்டிய நீ, கள்ளனுக்குப் பாற்சோறு அளித்ததுபோல, எனக்கு யாராலும் பெறுதற்கரிய இனிய அருளைச் செய்து எமக்குத் தலைவனுமாயினை என்பார் 'என்னையும் ஆண்டுகொண்டு இன்னருள்புரியும் எம்பெருமான்' என்ருர்.

பெருமான் திருச்செவி எவ்விசையைக்கேட்டு உவக்குமோ அவ்விசையில் சீபஞ்சாக்கரமுதலிய சிவமந்திரங்களை அமைத்து வாசித்தனர் என்பார் 'இன்னிசை வீணையர் ஒருபால்' என்ருர். யாழுக்கும் இன்னிசை என்ற அடைமொழியைக்கூட்டி இன்னிசை யாழினர் என்க. யாழும் வீணையுமாகிய கருவிகளிலமைக்கும் இசை காமத்தையும் வீரத்தையும் விளைப்பதாயிராமல் சிவ ஞானத்தை விளைக்கும் சிவநாம இசையாயிருந்தது என்பதாம்.

இருக்கு - இருக்குவேதம். இது மந்திரவடிவானது. தோத்திரம் - இறைவனுடைய பலவகைப்பட்ட புகழைப் பொருளாக வுடைய துதிப்பாடல். இவ்விரண்டும் இறைவன் மனத்திற்கு உகந்தவை; ஆதலால் இவ்விரண்டையும் கூறுகின்றவர்கள் ஒருபக்கம். இருக்கு கன்மநெறியையும், தோத்திரம் அன்புநெறியையும் வளர்ப்பன என்க. இவர்கள் கிரியையாளர். சிலர் இருக்கு வடமொழி மந்திரம்; தோத்திரம் தென்றமிழ்ப்பாடல் என்பர்.

பிணை மலர் துன்னிய கையினர் என இயைக்க. பிணை மலர் - இரண்டிரண்டு மலராகக் காம்பொடு காம்பாக மாறி வைத்துக் கட்டப்பெற்ற சரம். பிணை - இருதலையும் கூட்டி முடிக்கப் பெற்ற மாலை என்பாருமுளர். திருவடிக் கமலங்களிற் சாத்திவணங்க மலர்ச் சரத்தைத் தாங்கிவந்தவர்கள் ஒருபுறம். இவர்கள் சரியையாளர்.

தொழுகை - தொழுதல். கீழேவிழுந்து அட்டாங்க பஞ்சாங்க வணக்கம் செய்தல். அங்கப்பிரதட்சிணம் என்னும் பழைய வுரை. மட்டற்ற அன்பு கரை புரண்டு வெளிப்படும்போது பலமுறை விழுந்து விழுந்து வணங்க நேரும். அத்தகைய வணக்கமுடையார் 'தொழுகையர்' என்க.

அழுகை - அழுதல். பெரிய பெருமானை வைகறையிற் சேவிக்கும்பேறு பெற்றோமே என்று எண்ணுகிறபோது மனம் உருகி ஆனந்தக்கண்ணீர் சொரியும். அதுவே அழுகை. இது பேற்றின்கண் நிகழும் மகிழ்ச்சி அழுகை என்க. இழப்பின் கண் தோன்றும் அவல அழுகையல்லாமை தெளிக. இவர்கள் ஒருபக்கம்.

துவள்கை - நெருப்பிடைப்பட்ட இளம்கொடியைப்போலத் துவண்டு வீழ்தல். ஆராமை மிக்குத் துவண்டு வீழ்பவர்கள் ஒருபக்கம். இவர்கள் சிவானுபவத்தை மெய்ப்பாட்டால் வெளிப் படுத்தும் தீவிரபத்தியுடைய சிவஞானியர் என்க.

ஆழ்கடல் அலை எழும்பாது நீர்மட்டம் உயருவதுபோல, முறுகிய அன்பர்கள் தம் சென்னிமேல் கரங்கள் குவிய மெய்ம் மறந்து நிற்பர். அத்தகைய தீவிரதர பத்தியையுடைய சிவ ஞானனுபூதிச் செல்வர்கள் ஒருபக்கம் கூடினர் என்பதாம். இது விஸ்வருபதரிசனத்திற்காகக் காத்திருக்கும் அன்பர்வகை கூறியதாம். இத்தகைய அடியார்களுடைய அருளனுபவ அன்பு நிலையை அப்பர் தேவாரத்துப் பல இடங்களில் அறியலாம்.

இவ்வண்ணம் பலரும் குழுமியிருப்பதால் எம்பெருமானே பள்ளி எழுக என்று வேண்டிக்கொண்டவாறும்.

யாழ்வாசித்தல், வீணைவாசித்தல் முதலாகப் பலருடைய பரிபாகநிலை கூறுவது உயிர்கள் திரோதானசத்தி தூய்மை யுறும் நிலைகளை முறையே உணர்த்துதலின் திரோதானசத்தி யாதல் காண்க.

370 பூதங்க டோறுநின் றாயெனி னல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுத லல்லால்
கேட்டறி யோமுனைக் கண்டறி வாரைச்
சீதங்கொள் வயற்றிருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக் கும்மரி யாயெங்கண் முன்வந்
தேதங்கள் அறுத்தெம்மை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 5

இ - ள்: குளிர்மைபொருந்திய வயல்களையுடைய திருப்பெருந்துறையரசே! சிந்தனையால் சிந்தித்தற்கும் அரியவனே! எங்கட்கு முன்னே திருமேனி தாங்கிவந்து, எம் துன்பங்கள் அனைத்தையும் நீக்கி, எம்மை அடிமையாக ஏற்று அருள் வழங்கும் எமது பெருமானே! தேவரீரைப்பற்றி ஞானிகள் பூதங்கள் அனைத்திலும் பிரிப்பின்றிக் கலந்து விளங்குகின்றாய் என்பதன்றித் தோற்றக்கேடுகள் இல்லாதவன் என்று பாடுதலும் ஆடுதலுமன்றி, நேரே தரிசித்துய்ந்த பேர்களை யாங்கள் காதாற்கேட்டும் அறியோம்; யாங்கள் தேவரீரைக் கண்டு உய்யப் பள்ளியினின்று எழுந்தருள்க என்றவாறு.

மண்ணுலகத்ததாகிய திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருந்தும், பிறர் மனத்தினாலும் சிந்தித்தற்கு அரியவனே! எம்கண் காணக் குருமேனிகொண்டு எழுந்தருளிவந்து எம் பிறவிப் பிணியால் விளையும் துன்பம் துடைத்த எம்பெருமானே! ஞானிகள் உம்மைப்பற்றி எல்லாப் பூதங்களிலும் கலந்திருக்கின்றாய் என்றும், தோற்றக் கேடுகள் இல்லாதவன் என்றும் பரவசப்பட்டுப் பாடுதலும் ஆடுதலும் புரிகின்றனரேயன்றிக் கண்ணால் கண்டவர் இன்னார் என்று யாங்கள் காதால் கூடக் கேட்டது இல்லை; அங்ஙனமிருப்பினும் இன்று யாங்கள் கண்டு உய்யப் பள்ளி எழும்பவேண்டும் என்பது கருத்து.

இங்ஙனமன்றி, எம்பெருமான்! உம்மைக் கண்டறிவாரைக் கேட்டறியோம்; எங்கள் முன்வந்து ஏதங்கள் அறுத்து எம்மை ஆண்டு அருள் புரியும்; பள்ளி எழுந்தருளாய் என முடிபு கண்டு, புரியும் என்பதைச் செய்யுமென் முற்றாக்கி முடிப்பர். புரியும் உண்ணுமென்ற செய்யுமென் முற்றுக்கள் முன்னிலைக்கண் வாராமை இலக்கணமரபு என்பதைப் "பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையில் செல்லாதாகும் செய்யுமென் முற்றே" எனப் பின்னூலும் பேசும். எம்பெருமான் முதலியன அண்மைவிளியாயின் முன்னிலையாய், புரியும் என்னும் படர்க்கையொருமை வினைமுற்றை ஏலாமையும், ஏற்குமேனும் பின்னர்

எழுந்தருளாய் என ஏவல்வினை ஏலாமையும் காண்க. புரியும் பெருமான் எனப் பெயரெச்சமாகவே கொள்க. அன்றியும், பதிகம் திருப்பள்ளியெழுச்சி ஆதலின் பள்ளி எழுப்புதலே நுதலிய பொருளாமன்றி, எமக்கு அருள்புரியும் என வேண்டிக் கொண்டார் என்றல் பொருந்தாமை தெளிக.

பூதங்கள் - மண் புனல் அனல் கால் வெளி ஆகிய ஐம் பூதங்களும் அவற்றிற்குக் காரணமான தன்மாத்திரைகளுமாம். அவை எல்லாவற்றினும் இறைவன் நீக்கமற நிறைந்திருக் கின்றான் என்பதைச் சடமாகிய அவைகள் நிலைத்து நிற்ப தொன்றானே அறிகின்றாமாதலின் 'பூதங்கள்தோறும் நின்றாய் எனின் அல்லால்' என்றார். இது இறைவனது நிலை கூறியது. மேல்வருவன போக்காகிய அழிதலும், வரவாகிய தோற்றமின் மையும் அவர்க்கில்லை என்பதை உணர்த்துகின்றன. இதனால் இறைவன் நித்தியசத்தாயுள்ள சித்துப்பொருள் என்றுணர்த் தியதாம். புலவோர் - ஞானிகள். கருவிநூலைக் கரைகண்ட நூற்புலவர்களும், தேவர்களுமல்லர்; அவர்கட்கு இறைநிலை இவ்வண்ணம் சொல்லத்தோன்றாதாகலின்.

இறைவன் இவ்வண்ணம் எல்லாவற்றினும் செறிந்திருத் தலையும், நித்தியனாக விளங்குதலையும் திருவருளால் அறிந்த சிவஞானியர் அதனைத் தம்மறிவாற் கண்டலாகிய அநுபவம் மேற்கொள்ளுகின்ற காலத்து ஆனந்தாதிசயத்தால் பாடவும் ஆடவும் செய்வர். ஆகவே அவர்க்கும் சிவம் தியானப்பொரு ளாக அநுபவத்திற்கு ஆமேயன்றிக் காட்சிப்பொருளாக நேரே உருக்கொண்டு வாராது என்பார் 'கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால், உனைக்கண்டறிவாரைக் கேட்டறியோம்' என்றருளி னார் என்க. கீதம் - இறைவனது பொருள்சேர்புகழ் அமைந்த பாடல்கள். சீதம் - குளிர்ச்சி. பண்பாகுபெயராகக்கொண்டு நீர் என்று உரைப்பாரும் உளர். இங்ஙனம் உரைத்தல் தொன் மரபாகுமேற்கொள்க.

பரநாதவெளியில் விளங்கும் ஞானவுருச்சிவம் அனைவரும் வழிபட்டு உய்யத் திருப்பெருந்துறையிலும் மன்னனாக விளங்கு கின்றது என்று பெரியோனது எளிமை விளக்க அருளியது காண்க.

சிந்தனை - சிந்தையின் செயலாய்ப் பசுபோத முனைப்பால் பாசஞானம்கொண்டு எண்ணி அறிய முற்படுதல். அதற்கு அரிய ஞானவடிவினனென்பார் சிந்தனைக்கும் அரியாய் என்றார்.

முன்வந்து என்றது குருமேனி தாங்கிவந்து என்றவாறு. ஏதம் - மீட்டும் மீட்டும் தேவரீரைக்கண்டு உய்தற்கு ஏற்ற சிவ புண்ணிய வாய்ப்பின்மையாகிய துன்பம். பிறவித் துன்பம், அறியாமைத் துன்பம் எனலுமாம்.

'ஏதங்கள்அறுத்து' என்றதும், மீட்டும் காட்சிக்கெளியனாகி எழுந்தருளுக என வேண்டிக்கொள்வதும் திரோதானசத்தி என்னும் பதிகம் நுதலிய கருத்திற்கு இயைபுடைமை அறிக.

371 பப்பற வீட்டிருந் துணருநின் னடியார்
பந்தனை வந்தறுத் தாரவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றாரணங் கின்மண வாளா
செப்புறு கமலங்கண் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
இப்பிறப் பறுத்தெமை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 6

இ-ள்: உமாதேவியின் கணவனே! செம்மை பொருந்திய தாமரைகள் மலர்கின்ற குளிர்ந்த வயல் சூழ்ந்த திருப்பெருந் துறைக்கண் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! இடையறாது வரும் இந்தப் பிறவியை நீக்கி எம்மை அடிமைகொள்ளும் எம்பெருமானே! பரபரப்பு இன்றிப் பாசங்களை விட்டிருந்து நின்னையே தியானிக்கின்ற சிவஞானியர் பலரும், தமது மல மாயா பாசங்களாகிற கட்டுக்களைக் கன்மபூமியாகிய இங்கு வந்து நீக்கிக்கொண்ட பரிபாகமுடையார் பலரும், மக்களில் கருமைநிறம் பொருந்திய கண்களையுடைய கன்னியரியல்பில் வந்து வணங்கி நிற்கின்றார்கள்; ஆதலால் எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாய் என்றவாறு.

அமைதியே வடிவாக அலைவின்றி அடங்கிப் பேரின்பநிலையில் இருக்கின்ற சிவஞானியர் பலரும், பசுபுண்ணிய விசேடத்தால் மேலுலகங்களிற்சென்று வினைப்போகங்களைத் துய்த்து ஆண்டுப் பிறவிநோயை நீக்கிக்கொள்ள மாட்டாமையால் மீண்டும் இக்கன்மபூமியில் தோன்றிப் பந்தனை நீக்கி உய்ந்தார் பலரும், மக்களியல்பிலே காதலனைப் பிரிந்த காரிகையார்கள் போலச் சன்மார்க்கராய் நின்று வணங்குகின்றார் ஆதலால் பெருமான் பள்ளி எழுக எனலும் ஆம்.

இப்பாடலுக்குப் பலரும் பலவாறு உரை காண்பர். இவ்வுரை அவையனைத்தையும் உற்றுணர்ந்த எமது தெளிவெனக் கண்டு ஏற்றருள்க.

செப்பு - செம்மைநிறம். 'பு' பண்புப்பெயர் விகுதி. செப்புறு கமலங்கள் - செந்தாமரைகள். செப்பு - சிமிழ் என்பாரும், உவமையாகச் சொல்லப்படுகின்ற தாமரை என்பாரும் ஆகப் பலர் பலவாறு உரைப்பர். அவற்றால் நயமின்மை காண்க. கமலங்கள் மலரும் வயல் என்றது என்ஞான்றும் நீர்வளம் குறையாதது என்னும் கருத்தொன்றையே விளக்குவது. சிலர் இறைவன் அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தில் உறை பவன் என்பதனைக்குறிக்கத் தாமரைகள் மலரும் திருப்பெருந் துறை என நகரை விசேடித்தார் என்பர். தாமரைகள் வயல் எங்கும் மலர்ந்து சிவனடித்தாமரைகளை நினைவூட்டித் திருப் பெருந்துறையே சிவமயமாக விளங்குகிறது எனலும் ஆம் என்பர் சிலர்.

அணங்கு - உமாதேவியார். இறைவற்கு உமையலாதுருவ மில்லை ஆதலால், உமையம்மையோடுகூடியே திருவுருத்தாங் குவர் என்பார் 'அணங்கின் மணவாளா' என்றருளினர். அருளே சத்தியாம். நித்தியகல்யாண சுந்தரர் என்றவாறும்.

சத்தியும் சிவமுமாய பெருமான் ஆன்மாக்கள் எளிதில் வழிபட்டுய்யும்பொருட்டுத் திருப்பெருந்துறையில் எழுந்தருளி யிருக்கின்ற எளிவந்த கருணையைத் 'திருப்பெருந்துறையுறை சிவபெருமானே' என்று வியந்தவாறு.

இப்பிறப்பு என்ற சுட்டு, இடையறாது தொடர்ந்து மேல் வரும் பிறவிகளுள் அகப்பட்டு வருந்தகில்லேன்; எடுத்த இப் பிறவியோடு அந்நோயைக் களையவேண்டும் என்னும் குறிப் பினதாய் நின்றது. இந்தப் பிறப்பாவது தேவரீரே குருவாக வந்து ஆட்கொள்ளக்கூடிய தனிச்சிறப்போடு கிடைத்தது ஆத லாலே இப்பிறப்போடு அறுத்தாட்கொள்க என்றார் எனலுமாம். எமை என்றது, தம்போல்வார் பிறரையும் ஆட்கொள்ள வேண்டும் என்னும் கருணையாற் கூறியதாம்.

பப்பு - பரப்பு. அமைதியில்லாது பரபரத்தல். இது இரட் டைக்கிளவியாகவே பெரும்பாலும் வழங்குவது. உணரும் போது பரபரப்பிருந்தால் ஆழ்ந்து சிந்திக்கமுடியாமற்போம். ஆதலால் 'வீட்டிருந்து பப்பற உணரும் அடியார்' என்றார். இறைவனை 'வேகங்கெடுத்து ஆண்ட வேந்தன்' என்றதும் காண்க. 'பப்பு என்ப பரப்பு ஒப்பு' என்பது பதினோராந் தொகுதி நிகண்டு. ஆதலால் இணையற்ற வீடு எனப் பொருள் கொள்க என்பர்சிலர். அற என்பது செயவெனெச்சம். அதனை அற்ற எனப் பெயரெச்சமாகக் கோடல் இலக்கணமரபன்மை

தெளிக. ஆதலால் பப்பற உணரும் அடியார் என இயைத்து ஒப்பற உணர்கின்ற அடியார்கள் எனலுமாம். உணர்தல் - உணர்ந்து தெளிதல்மேனின்றது.

பப்பு என்பதனைப் பம்பு என்பதன் வலித்தல் விகாரமாகக் கொண்டு பம்பற என்பதற்கு நெருக்கமற எனப் பொருள் கொண்டு, காலம் இடம் முதலியவற்ருல் உளதாகும் நெருக்கமற என்று பொருள்காண்பர் சிலர்.

பப்பற விட்டிருந்துணரும் எனப் பாடம்கொண்டு, பாற் கலன்மேற் பூனை அருந்த நாடுங்கடமைபோலல்லாது, விஷய ரூப வியாபகப் பரப்பமைந்து உண்மைநிட்டைகூடும் எனப் பொருளுரைக்கும் பழையவுரை. இவையனைத்தையும் ஒருங்கு நோக்கின், பரபரப்பின்றி அமைதியாகத் திருவடித் தியான மாகிய நிட்டை கூடிய அடியார்கள் வந்து பந்தனையறுத்தார் எனவே மரபு வழிவரும் உரையாதல் காண்க.

பந்தனை - கட்டு. உயிர்களை அநாதியே பந்தித்து நிற்கும் ஆணவமலமும், வினைப்போகங்களைத் துய்த்தற்காக உதவப் பெற்ற மாயாமலமும், வினைகளாகிற கன்மமலமும் பந்தனை என்ற பொதுச்சொல்லாற் கொள்ளப்படும். ஆயினும், பப்பற விட்டிருந்து உணரும் அடியார் என்றமையான், அவர்கட்குக் கன்மமல மாயாமலக்கட்டுகளும், ஆணவமலத்தின் வாசனையுங் கூட இல்லை என்பது பெறப்படும். அன்றியும் வீட்டிருப்பார் தானதுவாக அமைவாரேயன்றி உணர்தலாகிய புடைபெயர்ச்சி யும் புரியார். மற்றீண்டுவாரா நெறியாகிய வீட்டையடைந்தவர் களுக்குப் பந்தனை சிறிதும் இன்று; மானுடத்தியல்பின் இங்கு வந்து வணங்கவேண்டிய இன்றியமையாமையுமில்லை ஆகவே 'விட்டிருந்தார்' என்ற பாடமே சிறத்தல் காண்க.

வந்து பந்தனையறுத்தார் பலரும் எனக்கூட்டுக. வந்து போகபூமி முதலியவற்றில் தோன்றியவர்கள் ஆண்டுப்பந்தனை யருமையால் மீண்டும் கன்மபூமியாகிய இங்கு வந்து சரியையாதி களில் முறையே நின்று சிவனருளாற் சிவஞானம் கைவரப் பெற்றுப் பந்தனையறுத்தார் என்க. அறுத்தாரென்றது துணிவு பற்றிவந்த காலவழுவமைதி. இக்காட்டுள்புக்கால் கூறைகோட் பட்டாய் என்பதுபோல.

மானுடத்து மைப்புறுகண்ணியர் இயல்பின் வணங்குகின் ருர் - பாச பந்தங்களைவிட்டுத் தன்னுணரும் சிவஞானியரும், வந்து பந்தனையறுத்தாராகிய தேவர் முதலாயினூரும் மனிதராய் அதுவும் மகளிரியல்பில் வணங்குகின்ருர் என்பதாம்.

மானுடம், என்றும் எமக்கு ஓர் முதல்வன் உண்டு என்பதை எந்தநிலையிலும் உணரும் இயல்பினது; உணர்ந்து அடிமை பூணும் அறிவினது; அடிமையனுபவம் முற்றியபிறகு அணுக்கமாய்க் கூடப்பழகும் சகமார்க்கத்தில் நிற்கும் சிறப்பினது; அவ்வனுபவம் சிறந்த பிறகு சிவஞானம் பெற்றுக் காதலனும் காதலியும்போல நீயும் நானுமாய் ஏகபோகமாய் ஒன்றிநிற்கும் உயர்வினது. ஆகவே மானிடப்பிறவியில், தன்னை ஒரு மங்கையாகவும், சிவத்தை மணாளனாகவும் உணர்ந்து ஒழுகும் நிலையில் வணங்குகின்றனர் என்பார் 'மானுடத்து மைப்புறு கண்ணியர் இயல்பின் வணங்குகின்றார்' என்றார். சன்மார்க்க நெறியில் நிற்கின்றனர் என்பதாம். இங்ஙனம் உயிர்கள் காதலன் காதலி நிலையில் நின்று வழிபட்டுய்யவே பெருமான் உமை மணவாளனாக வீற்றிருக்கின்றான் என்பார் 'அணங்கின் மணவாளா' என்று விளிப்பதும் காண்க.

இப்பகுதிக்கு மனிதத்தன்மையிலே பெண்களியற்கையிலே வணங்குகின்றார் என்று பொருள்கண்டு, மனிதத்தன்மைக்குக் கருத்துரைக்கும் வகையில் ஒருவனை ஒருவன் கடிந்துரைக்கும்போது 'உனக்கு மனுஷத்தன்மையிருக்கிறதா?' என்று கேட்பதையும் பிறவற்றையும் காட்டிக் கருத்து நிரம்பாது இடர்ப்படுவாரும் உளர்.

இத்திருப்பாடல் சிவஞானியரும், திருமால் முதலிய தேவர் பலரும், மக்களில் பெண்களியல்பிலேவந்து வணங்கித் தமது திரோதான மலத்தை அகல்விப்பது உணர்த்தப்பெறுதலானும், தமக்குத் திருவருள்சுரந்து தம்மை ஆட்கொண்டதை அறிவித்தலானும் திரோதானசுத்தியாதல் காண்க.

372 அதுபழச் சுவையென அமுதென அறிதற்
 கரிதென எளிதென அமரரும் அறியார்
இதுஅவன் திருவுரு இவனவன் எனவே
 எங்களை யாண்டுகொண் டிங்கெழுந் தருளும்
மதுவளர் பொழிற்றிரு வுத்தர கோச
 மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா
எதுவெமைப் பணிகொளு மாறது கேட்போம்
 எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 7

இ - ள்: தேவர்களும், சிவானந்தமாகிய அது பழத்தின் சுவைபோன்றதெனவும், அமுதத்தை ஒத்தது எனவும், அறிந்துய்வதற்கு அரியதெனவும், எளியது எனவும் அறியமாட்டார்கள்; அவர்களின் நிலை அங்ஙனமாக, இதுவே அவன்

திருவுரு; இவனே அவன் என்று யாங்கள் உரைக்க, இப்பூமியில் எங்களை அடிமையாக ஏற்றுக் குருமூர்த்தியாக எழுந்தருளும், தேன் சொரிகின்ற பொழில்கள் சூழ்ந்த திருவுத்தரகோசமங்கை என்னும் தலத்தில் எழுந்தருளியிருப்பவனே! திருப்பெருந்துறை என்னும் தலைநகரிலுள்ள மன்னா! எம் பெருமானே! எங்களைத் தொண்டுகொள்ளும் முறைமை எது என்று அதனை வினவி அறிவோம்; பள்ளியினின்று எழுந்தருளுக என்றவாறு.

தேவர்கள் சிவாநுபவத்தன்மை அறியாது மயங்க, அடியேங்கள் இதுதான் அவன் உரு, இவன்தான் சிவன் என்று அறிந்துரைக்கும்படி ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளி எங்களை யாட்கொண்ட உத்தரகோசமங்கையாய்! மன்னா! எம்பெருமான்! தேவரீர் திருமுன்பு எம்மைத் தொண்டாளுமுறை எது என்று அதனைக் கேட்டறிவோம்; அதற்காகப் பள்ளியெழுந்தருள்க என்று அடிகளார் வேண்டுகின்றார் என்பது கருத்து.

அமரரும் சுவையென அமுதென அரிதென எளிதென அறியார்; (யாம்) அவன் திருவுரு இது என, இவன் அவன் என (நீ) இங்கு எழுந்து எங்களை ஆண்டுகொண்டருளும் மங்கையுள்ளாய், மன்னா எம்பெருமான் எமைப் பணிகொளும் ஆறு எது அது கேட்போம், பள்ளி எழுந்தருளாய் எனக் கண்ணழித்துத் தொடர்புறுத்திப் பொருள்கொள்க.

இங்ஙனம் அன்றி, உத்தரகோசமங்கையுள்ளாய்! மன்னா! எம்பெருமான்! தேவர் எல்லாரும் சிவானந்தானுபவம் கனிந்த பழத்தின் சுவை போலும் அமுதம் போலும் என அறிதற்கு இயலாது எனவும், அறிதற்கு எளியது எனவும் அறியமாட்டார்கள்; இவ்வுலகத்தில் இப்பிறப்பிலே யமைந்த உடலாகிய இது இறைவனது திருமேனியாகத் திகழுமாறும், இந்த உடலில் விளங்கும் உயிராகிய இவன் அவனாகிய சிவனாக விளங்குமாறும் அருளிப்போந்து, எங்களை அடிமைகொண்டு அருளுவாயாக; எங்களை ஏவல்கொள்வதற்கு அமைந்த பணி யாது? அதனைக் கேட்டு ஒழுகுவோம் யாம்; பள்ளியெழுந்தருள் எனப்பொருள் கூறுவர் சிலர்.

இவ்வுரைக்கு அவர் கொண்ட சொல்லியைபு 'உள்ளாய்! மன்னா! பெருமான்! அமரரும் சுவையென அமுதென அரிது என எளிதென அறியார்; இங்கு இது அவன் திருவுரு, இவன் அவன் எனவே எழுந்து எங்களை ஆண்டுகொண்டு அருளும்; எம்மைப்பணிகொள்ளும் ஆறு கேட்போம்; பள்ளி எழுந்தருள்'

என்பது. இவ்வுரையாசிரியர் தமது கருத்தை வலியுறுக்கப் பல் வேறு இடங்களில் கூறிய மாபாடியக் கருத்துக்களைத் தொகுத்துத் தருவர்.

மற்றும் சிலர், அதுதான் பழத்தின் சுவையாம் எனவும், சாருகிய அமுதம் ஆம் எனவும், இதுதான் அறிதற்கு அரியது எனவும், இதுதான் அறிதற்கு எளியதெனவும், தேவரும் அறியத்தக்கார்; ஆகவும் இதுதான் அவனுரு, இவன்தான் அவன் என்று அப்போது காட்டி எங்களை அடிமைகொண்டு, இப்போது உத்தரகோசமங்கையுள்ளாய்! மன்ன! எம்பெருமான்! பணிகொள்ளுமாறு கேட்போம்; பள்ளி எழுந்தருள் என்று பொருளுரைப்பர்.

இங்ஙனம் உரையும் கருத்தும் வேறுபடற்கு அது, இது, இவன், அவன் என்ற சுட்டுப்பெயர்களே அடிக்காரணமாகின்றன. ஆதலால், பிற்கூறப்பெறும் நயமும் விளக்கமுங்கொண்டு சிறந்தது தெளிக.

அது - சிவானந்தம். ஆனந்தம் மனனுணர்வால் நுகர்ச்சிக்குப் புலனுமன்றிப் பெயரும் உருவுங்கொள்ளாத தன்மையதாதலின் அது என்று மனமறிந்த ஒன்றைச் சுட்டினர். இது நெஞ்சறிந்ததைச் சுட்டியது என்பர் இலக்கண ஆசிரியர்கள். பழச்சுவை அமுது இரண்டுமே இனிய சுவையின் திரட்சிகள். அவை அனைத்துமே சிவானந்தத்திற்கு உவமைகள். இதில் பொதுத்தன்மையால் ஒரு சிறிதும் வேற்றுமை இல்லையாம். பழச்சுவையென என்றமைக்கேற்ப அமுதச்சுவையென இயைத்துப் பொருள் கொள்க.

மாம்பழத்தைச் சுவைத்துச் சுவைத்துத் தேர்ந்தான் ஒருவன் இப்போது ஒரு பழத்தைச் சுவைக்கும்போது அச்சுவையைக் கொண்டு இது நீலம், இது பஞ்சரங்கி என்று வேறுபடுத்தி உணருகின்றான். இங்ஙனமே அமுதம் உண்டானும் இது பாற்கடலமுதம் என்று உணருகிறான். அதற்குக் காரணம் அவனது பூருவக்காட்சியே.

மாம்பழமே தின்றறியாத ஒருவன், இது மாம்பழச் சுவை இன்ன மாம்பழச் சுவை என்று எங்ஙனம் சொல்வன்; அது போலத் தேவர்கள் சிவானந்தம் என்றுமே பெறாத பொறியான் நுகரப்படும் போகமுடையவர்கள். அவர்கள் பழச்சுவை அமுதச் சுவைகளை அறிவர். ஆனால், சிவானந்தமாகிய அது பழச் சுவையை ஒத்ததா? அமுதச்சுவையை ஒத்ததா? எனின் அவர்கள் எங்ஙனம் அறிவர்? அறியார். சிவானந்தம் அறிதற்கு

எளிமையானதா? அருமையானதா? என்று வினவில் அத் துறையில் சிறிதும் முயன்றறியாத அவர்கள் அதன் எளிமை அருமைகளை எங்ஙனம் வரையறுத்து உரைப்பர்? ஆகவே, 'அது பழச்சுவையென, அமுதென, அறிதற்கு அரிதென, அறி தற்கு எளிதென அமரரும் அறியார்' எனப்பட்டது.

தேவர்கள் நிலையில் சிவானந்தம் மிகமிகச் சேய்மைக் கண்ணதாகலின் அது என்று சேய்மைச்சுட்டாற் குறித்தார். அமரரும் என்ற உம்மை "குறவரும் மருளுங்குன்று" என்புழிப் போல உயர்வு சிறப்பு. முற்றும்மையாக்கொள்வர் சிலர். இப் பொருள் படாமையைச் சொற்கிடக்கையே காட்டும்.

தேவர்கள்நிலை இங்ஙனமாக, யாம் இதுதான் அவனுரு, இவன் அவனே என்று உறுதியாகக் கூறும்வண்ணம் திருப் பெருந்துறையிலே குருமூர்த்தியாக எழுந்தருளிவந்து, உருவும் குருவே சிவனென்பதும் உணரச்செய்து எங்களையும் தீட்சை செய்து ஆட்கொண்டான் என்பார் 'அவன் திருவுரு இது; இவன் அவன் எனவே எங்களை ஆண்டுகொண்டு இங்கு (குருவாக) எழுந்தருளும் மங்கையுள்ளாய்' என்றமை காண்க. இது என்பது எடுத்த இவ்வுடல்; அவனுரு என்பது சிவதநு; இவன் ஆன்மா, அவன் சிவன் எனக்கொண்டு மாபாடியத்துப் பசுகரணம் பதிகரணமாதல் கூறும் பகுதியையும், ஆனந்தத்து அழுந்தும் உயிர் சிவமேயாதலாகிய அவனே தானேயாகிய அந்நெறியையும் காட்டித் தமது உரையை அரண் செய்வர். மாபாடியத்து அவர் காட்டும்பகுதிகள் சிவபோகத்து ஆழ்ந்த அனுபவிகள்நிலை உணர்த்துவது. அவர்களுக்கு அனுபவ மொன்று தவிர வேண்டுதல் முதலான செயலின்மையானும், ஆண்டுகொண்டு அருளுதலைப் பிற்கூறுதலின், ஆண்டுகொள் வதற்குமுன் அனுபவம் கூடாமையானும் அஃது உரையன்மை யுணர்க.

இது - இதோ குருந்தடியிலிருக்கிற இது என அண்மைச் சுட்டு. அவன் - திருக்கயிலையில் வாழ்கின்ற சிவன். திருவுரு என்றது குருமேனியை. இவன் - இக்குரு. அவன் - சிவன். "குருவே சிவமெனக் கூறினன் நந்தி" ஆதலின் இவன் அவன் என்றனர். இங்கு - இப்பூமியில்.

தேவரீர் ஏனையோரையாட்கொண்டது ஆண்டானடிமைத் தன்மையில்; அடியோமை ஆட்கொண்டது குருசீட முறையில்; இங்ஙனமாக எம்மை நீர் பணிகொள்வது எம்முறையில் என்று வினவுவோம் என்றருளினர். இதன் கருத்து எதுவாயினும்

மடங்கிக்கிடப்பேம், திருவுள்ளக்குறிப்பின் வண்ணம் நடக்கக் கடவேம் என்பதாம்.

இத்திருப்பாடல், ஆற்றின்வழி மிதவைபோலப் பணி கொள்வான் குறிப்பின்படி நடப்போம் என்றமையால் திரோ தானசுத்தி என்ற பதிகக் கருத்திற்கு ஏற்புடைமை அறிக.

373 முந்திய முதனடு விறுதியும் ஆனாய்
மூவரும் அறிகில ரியாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயுநின் னடியார்
பழங்குடி லொறுமெழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

இ - ள் : அடைதற்கரிய அமுதமே! அனைவர்க்கு முந்திய முதலும், நடுவும், முடிவும் ஆனவனே! பிரமனும் திருமாலும் உருத்திரனுமாகிய மூவரும் நின்னை அறியுமாற்றலிலராவர் எனின், வேறு அறிவார் யார்? பந்து வந்தணையும் மெல்லிய விரல்களையுடைய உமாதேவியாரும், தேவரீருமாக நின்னடி யார்களுடைய பழைய குடிசைகளாகிற உள்ளந்தோறுமெழுந் தருளியுள்ள பரம்பொருளே! அடியேற்குச் சிவந்த தழலை ஒத்த திருமேனியையும் காண்பித்து, திருப்பெருந்துறைக் கண் உள்ள கோயிலையும் காண்பித்து, அந்தணனாக உருக் கொண்டு எழுந்தருளிய நிலையையும் காண்பித்து, வலியவந்து ஆட்கொண்டாய்; திருப்பள்ளிக் கட்டிலினின்றும் எழுந்து அருளுக என்றவாறு.

அரியையாகிய நீ எளியையாய்த் திருப்பெருந்துறையே எழுந்தருளுங்கோயிலாகக் காட்டி, குருமேனிதாங்கிவந்து ஆட் கொண்டாய்; பள்ளி எழுந்தருள்க என்று வேண்டியதாம்.

தேவாமுதம்போல அனைவரும் உண்ணும் இயல்பினதன்றி, இராகு கேதுக்கள் உண்டதுபோலத் தகுதி இல்லாதாரும் உண்ணும் இயல்பினதன்றி, இருவினையொப்பும் மலபரிபாகமும் உடையார்க்கு எளிதாய் ஏனையோர்க்கு அரிதாய அமுதம்போல் இருத்தலின் இறைவனை 'ஆரமுதே' என விளித்தார்.

எல்லாந்தோன்றுதற்கு வித்தாதலின் முதலென்றார். முதல் அனைத்திற்கும் முந்தியது ஆதலின் 'முந்திய முதல் ஆனாய்' என்றார். முழுமுதல் என்றவாறும்.

தோன்றிய அனைத்தையும் வினைப்போகத்திற்கு ஈடாகத் தத்தம் கால எல்லைவரை போகத்தையூட்டிப் பாதுகாத்தலின் 'நடு ஆனாய்' என்றும், கால எல்லைக்கண் உயிர்களைத் தம்மிடத்து ஒடுக்கி ஓய்வளித்துத் தான் அனைத்திற்கும் முடிவாயிருத்தலின் 'இறுதியும் ஆனாய்' என்றும் அருளினர்.

இப்பிரகிருதி மாயா புவனத்தில் படைத்தலாதி முத்தொழிலைச் செய்யும் முதல்வர் மூவர். நீ அவர்களுக்கும் முதல் நடு இறுதியாயிருப்பதையும், நீ அங்ஙனமிருப்பதாலேயே அவர்கள் அம்முத்தொழிலைச் செய்யும் ஆற்றல் பெற்றனர் என்பதையும் அறியமாட்டாதார் ஆவர். அவர்களே அறியாதபோது வேறு யார் அறிய இயலும் என்பார் 'மூவரும் அறிகிலர் யாவர்மற்றறிவார்' என்றருளினர்.

பந்தணை விரலி - இறைவி பெண்மைத்தன்மையிற் பிறழாது பூம்பந்துகொண்டு ஆடும்போது அப்பந்து அணையும் மெல்லிய விரலையுடையள் என்பார் இங்ஙனம் கூறினார். திருப்பந்தணைநல்லூர்ப் பெருமாட்டியின் பெயர் பந்தணை மெல் விரலி என்பதுங்காண்க. விரலி என்றமையால் இறைவனருட் குணம் இறைவியாக உருத்தாங்கியதை உணர்த்தியதால், நீயும் என்றபோது உருவம் மேற்கொண்ட சிவபெருமானை சிந்திக்க வைத்தனர் என்க.

இறைவன் அடியார் உள்ளத்தையே இல்லமாகக் கொள்வர் என்பார் 'நின்னடியார் பழங்குடில்தொறும் எழுந்தருளிய பரனே' என்றார். பழங்குடில் என்றது அவர்கள் உள்ளத்தை. பழங்குடில் கம்புங்கயிறும் சிதைந்து கட்டுக்குலைந்து கீற்றுமக்கி நைந்திருப்பது; அதுபோல அடியார் உள்ளமும் மலக்கட்டுக் குலைந்து நைந்திருப்பது ஆதலின் உவமித்தார் என்க. இலை வேய்ந்த குடில்போல அன்புவேய்ந்தது உள்ளம் எனலுமாம். 'தொறும்' என்பது இடைவிடாமைப் பொருளில் வந்தது. இறைவன் அடியார்கள் உள்ளந்தோறும் எழுந்தருளியிருப்பர் என்பது அவருடைய அளவிலாற்றலுக்கு இயல்பு.

தழல் - தணல். அடிகளாரை ஆட்கொள்ளக் குருநாதனாக எழுந்தருளியபோது இறைவன் திருமேனி செந்தழல்போலச் சிவந்திருந்தமையின் 'செந்தழல் புரை திருமேனியும் காட்டி' என்றார்.

அடியார் உள்ளமாகிய பழங்குடிசையிலும், திருப்பெருந்துறைக்கோயிலிலும் ஒப்ப வீற்றிருக்கும் பெருங்கருணை 'குடில் தொறும் எழுந்தருளிய பரனே! மேனியும் காட்டி, கோயிலும்

காட்டி அந்தணனாவதும் காட்டி' என்பனவற்றாற் குறிக்கப் பெறுகின்றது.

இறைவன் ஆசாரிய மூர்த்தியாக எழுந்தருளும்போது அந்தணவடிவில் வந்தார் ஆதலின் 'அந்தணனாவதும் காட்டி' என்றார். இவை இறைவனது தடத்த நிலையினவாகிய அரு, உரு, அருவுரு என்பவற்றைக் குறித்தமை காண்க.

பரனே மேனி முதலியவற்றைக் காட்டினன்; கண்டேன்; அவன் என்னையாட்கொண்டான் என்று திரோதானம் தூய்மை யானமை உணர்த்துதல் காண்க.

374 விண்ணகத் தேவரு நண்ணவு மாட்டா
விழுப்பொரு ளேயுன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்டிருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடலமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாயுல குக்குயி ரானாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 9

இ - ள்: விண்ணில் வாழும் தேவர்களால் அணுகவும் முடியாத மேலான பொருளாக உள்ளவனே! உன்னுடைய குற்றேவல்புரியும் அடியவர்களாகிய எங்களை இம்மண்ணுல கில் குருவாக வந்து வாழச்செய்தவனே! வளமார்ந்த திருப் பெருந்துறையில் எழுந்தருளுபவனே! வழிவழிவந்த அடி யோங்களது கண்ணிற்பாவையாக நின்று களிப்பைத்தரும் தேன்போல்பவனே! பாற்கடலிற்பிறந்த அமுதமே! கரும்பின் சாறே! அன்பு செய்கின்ற அடியார்களின் எண்ணத்துள் இலங்குபவனே! உலகமனைத்திற்கும் உயிரானவனே! எம் பெருமானே! பள்ளி எழுந்தருளுக என்றவாறு.

இறைவனுடைய எல்லையற்ற புகழ்களிற் சிலவற்றைக்கூறி, விளித்துப் பள்ளி எழுந்தருள வேண்டுகின்றார்.

விழுப்பொருள் - மேலான பொருள். விண்ணகத்தேவர் - திருமால் பிரமன் இந்திரன் முதலான தேவர்கள். நண்ணவு மாட்டா - அறிவாலும் அணுகமுடியாத. மால்முதலிய தேவர்கள் பதவிகளிலுள்ள சகலான்மாக்கள் ஆதலின் அவர்கள் அறிவு எம்முடைய அறிவுபோல உணர்த்த உணரும் சிற்றறிவே ஆதலின் அதனால் அறியமுடியாத பொருளே என்றார்.

மண்ணகத்தேவந்து தொழுப்படியோங்கள் வாழச்செய்தானென மாறுக. எம்மீது வைத்த கருணையால் மாயாதீத பரம்பொருள் பிரகிருதிமாயா புவனமாகிய இப்பூமியுள் எம்போல மானிடத் திருமேனிதாங்கிக் குருவாக வந்து, குற்றேவலராகிய எங்களை வாழச்செய்து என்று அக்கருணையை விளக்கி விளிக்கின்றார்.

குருவாக வந்ததேயன்றி, லிங்கமாகவும் எழுந்தருளியதை வண்திருப்பெருந்துறையாய் என்பதால் குறிப்பித்தருளுகிறார்.

களிப்பு ஐம்பொறிகளும் ஐம்புலன்களிற் பொருந்தும்போது உண்டாகும் இன்பமகிழ்ச்சி. இறைவன் கண்களில் நின்றே தேன்போலும் இனிய களிப்பைத் தருகின்றான் என்பார் இறைவனைக் 'கண்ணகத்தே நின்று களிதரு தேனே' என்றருளினார். கண் வழியாக ஐம்புலக் களிப்பையும் ஒருங்கு துய்க்கலாம் என்ற உண்மையை "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" என்ற சேக்கிழார்பெருமான் திருவாக்கும் நன்கு விளக்கும்.

முறையே தேனே அமுதே கரும்பே என இனிமையான பொருள்களாகஇறைவனை உருவகிக்கின்றார். சிவஞானியர்க்குக் கண்ணகத்தே களிதரு தேனாகவும், தேவர்க்கு அமுதாகவும், எமக்குக் கரும்பாகவும் இனிக்கின்றான் இறைவன் என்றவாறும். கண் - அறிவுமாம்.

எண் - எண்ணம். உலகு - உடல். உடலின் இயக்கம் முதலான புடைபெயர்ச்சி இறைவனாலே உளதாகின்றதென்பார் 'உலகுக்கு உயிர் ஆனாய்' என்றார்.

இவ்வண்ணம் அனுபவத்து இன்றியமையாப் பொருளாகக் காட்சி வழங்கும் தேவரீர், யாம் திரோதானத்தினின்று நீங்கித் தூய்மையுறப் பள்ளி எழுந்தருளும்வண்ணம் வேண்டுகிறோம் என்றலின் திரோதானசுத்தியாதல் காண்க.

375 புவனியிற் போய்ப்பிற வாமையி னாளும்
போக்குகின் றோமவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவும் மலரவன் ஆசைப்
படவுநின் னலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை யாட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

*இ-ள் : திருப்பெருந்துறையுறைவாய்! ஆரமுதே! திருமாலும் பிரமனும் பூமியிற்சென்று பிறவாமையினாலே நாம் நாட்களை வீணாகக்கழிக்கின்றோமே! இந்தப் பூமியிற்பிறத்தல் சிவபெருமான் உயிர்களை உய்யக்கொள்கின்ற நெறியாகுமே என்று சிந்தித்துத் திருமாலாம் அவன் விருப்பமடையவும், பிரமன் ஆசைப்படவும், நினது விரிந்த உண்மையான திருவருளும் நீயுமாக இப்பூமியிலே வந்து, எம்மையாட்கொள்ள வல்லவனே! பள்ளி எழுந்தருளுக என்றவாறு.*

நாமும் பூமியிற்சென்று மக்களாகப் பிறந்திருந்தால் நம்மையும் சிவபெருமான் ஆட்கொண்டு உய்யச் செய்திருப்பாரே; இத்துணைக்காலமும் நாம் வீணாகக் கழித்துவிட்டோமே! என்று பிரமனும் மாலும் விரும்ப, எம்மைவந்தாட்கொள்ள வல்லவரே பள்ளி எழுக என்பது கருத்து.

நாம் வினைப்போகங்களை உண்டு கழித்து, இறையருள் பெற்றுய்யவேண்டுமாயின் 'தேவர்களும் மண்ணிடைவந்தரனை அர்ச்சிப்பர்' என்ற ஆகம விதிப்படி மண்ணிடைப் பிறந்து வழிபடாமல் இதுவரையில் ஆற்ற நாள்போக்கினோம் என்று அவர்கள் வருந்தினர் என்பது. அவம் - வீண். புவனி - பூமி. வைகுந்தத்திருப்பாரும் சத்தியலோகவாசிகளும் வீடுபேறடைய வேண்டுமாயின் மண்ணிடைத் தோன்றியேயாதல் வேண்டுமாதலின் 'பூமி சிவன் உய்யக்கொள்கின்ற ஆறு' என்று நோக்கினர் ஆம்.

'அருளது சத்தியாகும் அரன்றனக்கு' ஆதலின் பெருமான் உமாதேவியாரோடு எம்மையாட்கொள்ள ஈண்டு எழுந்தருளினரென்பார் 'மெய்க்கருணையும் நீயும் அவனியில் புகுந்து எமை ஆட்கொள்ள' என்றார்.

எம்மை ஆட்கொள்ள முடியாமைக்குத் தடைகள் பல உளவேனும் அவை அனைத்தையும் மாற்றி, அடிமை கொள்ளும் வன்மையை உடையன் நீ என்பார் 'ஆட்கொள்ள வல்லாய்' என்றார்.

தமது அதிகாரமலம் நீங்க மால் முதலானோர் வழிபட எண்ணுகின்றனர் என்றமையாலும், எமது மலமறைப்பையும் அகற்றி ஆட்கொள்ள வல்லாய் என்பதாலும், திரோதானம் அகன்றமையை அறிவித்தலின் இது திரோதானசுத்தியாதல் காண்க.

இப்பத்துப் பாடலானும் இறைவன் ஆன்மாக்களுக்குச் செய்யும் உபகாரம், மறைப்பை நீக்கித் திருவருள் பாலித்தலே என்பதை அறிவித்தல் காண்க.

தி. ந. உலகநாதன்.

# 21. கோயில்மூத்ததிருப்பதிகம்

[அநாதியாகிய சற்காரியம்]

மாணிக்கவாசகசுவாமிகள் தில்லையில் எழுந்தருளி யிருக்கின்றகாலத்து, ஆனந்தக் கூத்தப்பெருமான் தம்மை ஆட்கொண்ட பேரருட்டிறத்தை நினைந்து நினைந்து வியந்து இப்பதிகத்தையும், பின்வரும் கோயிற்பதிகத்தை யும் அருளிச்செய்தார்கள்.

கோயில் என்பது தில்லை. பதிகம் - பத்துப் பாடல்களால் பல வகைப்பொருளைத் தொகுதியாகச்சொல்வது. பிற்காலத்துச் சிற்றி லக்கிய வகையுள் ஒன்ருகவும் பிரிந்து விளங்குவது. சிவபரம்பொரு ளைப்பற்றிய பலவகைக் கருத்துக்களைத் தோத்திரமாகத் தொகுத்துச் சொல்லுதலின் திரு என்னும் அடைமொழி புணர்க்கப்பெற்று வழங்குவதாயிற்று.

மூத்த திருப்பதிகம்: கோயிலைப்பற்றி எழுந்த திருப்பதிகங்கள் இரண்டனுள் இது இருதலை மாணிக்கமாகிய சிவமந்திரத்தை முத லாகக்கொண்டு இறையருள்வேண்டி நாமம் பிதற்றி நயனநீர் மல்கா வாழ்த்தா வணங்கா நினைந்துருகி நிற்பதை விண்ணப்பித்து இரங்கியருளவேண்டுதலாகிய முதிர்ந்த அநுபவத்தை உணர்த்து தலின் இப்பெயர்பெற்றது.

இது தில்லையைப்பற்றிய பழைமையான பொருள்கள் யாவற்றை யும் அறிவிப்பதாக அமைந்துள்ளது. பழைமைக்கெல்லாம் பழைமை யான இறைவனது வசப்பட்டு அருட்சத்தி இருக்குந்தன்மையும், பொதுவிலக்கணத்தில் அருட்சத்தியின் வசப்பட்டு இறைவன் இருக் குந்தன்மையும், அடியார்வசப்பட்டு இருவரும் விளங்குந்தன்மை யும் ஆகிய அநாதியாகிய சற்காரியத்தை உரைப்பதால் இது மூத்த திருப்பதிகம் என்று வழங்கப்பெறுகிறது எனலாம். இவ்வாறே பதினேராந் திருமுறையில் அம்மையார் திருவாக்காக வரும் திரு வாலங்காட்டு மூத்ததிருப்பதிகமும், சர்வசங்காரகாலத்தில் இறைவ னிருக்கும் இயல்பை அறிவித்தலால் 'மூத்த திருப்பதிகம்' எனப் பட்டமை காண்க.

போப் அவர்கள் தமது மொழிபெயர்ப்பில் பழைமையான கோயில் திருப்பதிகம் என மொழிபெயர்ப்பர்.

"கோயில் மூத்த திருப்பதி கந்தான், ஆயில் அநாதி யானசற் காரியம்" என்பது அகத்தியச்சூத்திரம் என்றும், சத்தியும் சிவமும் ஒத்து இருபாலுற முத்தியாகு முறைமையருளிய உண்மை என்றும் பழையவுரை அறிவிக்கின்றது.

மூத்தகோயில் திருப்பதிகம் எனச் சொன்னிலைமாற்றி மூத்த என்பதைக் கோயிலுக்கு அடைமொழியாக்கிக் கூறுக என்றும், அடிகளார் தில்லையும் திருப்பெருந்துறையும் ஆகிய இரண்டையும் கோயிலெனக் கூறுகின்றாராதலின், திருப்பெருந்துறையைக் காட்டிலும் தில்லையின் தொன்மையைக் குறிக்க மூத்தகோயில் என்றார் என்றும் கூறுவர். சைவமரபில் அடைமொழியின்றிக் கோயிலென்று கூறப்பெறின் தில்லையையே உணர்த்தும். அடிகளாரும் திருப்பெருந்துறையை இங்ஙனம் கோயில் என்று யாண்டும் கூறாமையையும் ஊன்றி நோக்குதற்குரியது. சிவனைத் திருச்சிவனார் என்றதுபோலக் கோயிலாகிய தில்லையை எத்தகைய அடைச் சொல்லும் புணர்த்து வழங்குதல் மரபன்றென்க. ஆகவே மூத்த என்னும் அடைமொழி பதிகத்தை விசேடிக்க வைத்தமையே பழைய மரபும், அடிகள் திருவுள்ளமும் என ஓர்க. அவ்வடைமொழி முற்கூறியாங்குப் பதிகத்தினும் சிறந்த, சிவமந்திரத்தைச் செபிக்கும் முறையும் நிற்கும்முறையுமாகிய முதுமையை உணர்த்துதலின் மூத்தபதிகம் எனக் கூறப்படுவதே பொருட்பெற்றியாலும் சிறத்தல் காண்க.

"கோயின் மூத்த திருப்பதிகம் சிதம்பரத்தில் அருளடையுங் குறிப்பதாகும்" என்பது பழைய திருப்பெருந்துறைப் புராணம்.

இப்பகுதிமுழுதும் அந்தாதித்தொடையால் அமைந்திருத்தல் காண்க.

## அறுசீர் ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

376 உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானல் அடியேனுன்
அடியார் நடுவுள் இருக்குமரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே. 1

இ - ள் : பொன்னம்பலத்து வீற்றிருக்கின்ற எமது ஈறிலா முதல்வனே! ஈசையான பராசத்தி, ஈசனுன உன் நடுவில் இருப்பள்; ஈசனுகிய நீ ஈசையின் உள்ளத்திருக்கிருய்; உயிராகிய அடியேனுள்ளத்து ஈசனும் ஈசையுமாகிய நீங்களிருவீரும் எழுந்தருளியிருப்பது உண்மையாயின், அடியேனது நெடுநாளைய விருப்பம் ஈடேறும்படி என்முன்னின்று, சிவனடியார்கள் நடுவிலே அடியேனும் ஒருவனுக இருக்கும் பேரருளைச் செய்தருள்வாயாக என்றவாறு.

அம்மையின் உள்ளத்துச் சிவமாகிய தேவரீரும், நும் உள்ளத்துச் சத்தியும், அடியேன் உள்ளத்து இருவீரும் இருப்பதாயின் என் நெடுநாளையகருத்து ஈடேறும்வண்ணம் அடியார் கூட்டத்து என்றும் விளங்கும் அருளைப் புரிக என்று வேண்டிக் கொண்டவாரும்.

உடையாள்: எல்லாவற்றையும் உடைமையாகப்பெற்றவள். உடையவன் என்பதன் பெண்பால். ஈசன் என்றது உடையானுதலின் உடையாளென்பதற்கு ஈசை எனப் பொருள்கொள்ளப் பெற்றது.

'உடையாள் உன்றன் நடுவிருக்கும்' என்றது சிவம் ஐந்தொழிலாற்றலையும் தன்னகத்தடக்கிச் சுத்த அறிவே வடிவாய் புறப்பொருளை நோக்காது இருக்கும் உண்மைநிலையில் சத்தி சிவத்தில் அடங்கி, அதன்வசமாக இருத்தலை உணர்த்துகிறது.

புறத்தை நோக்கி, உலகு எல்லாமாய் வேருய் உடனுய் நிற்கும் தடத்தநிலையில் சத்தியின்வசமாய்ச் சிவன் நிற்பதை 'உடையாள் நடுவுள் நீ இருத்தி' என்பதால் அருளுகின்ருர்.

அருள்வயப்பட்டுநிற்கும் அடியேன் மனத்து எழுந்தருள்வதனை 'அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானல்' என்பதால் விளக்கியருளுகின்ருர்கள்.

இத்திருப்பாடல் இருதலை மாணிக்கமாகிய 'சிவய சிவ' என்னும் திருவைந்தெழுத்தின் நிற்குநிலை உணர்த்துகின்றது. 'உடையாள் உன்றன் நடுவிருக்கும்' என்பது சத்தி எழுத்தாகிய வகாரம் சிகாரமாகிய சிவாக்கரத்தின் இடையில் இருத்தல். சிவசிவ என்னும்போது இருசிகாரங்களுக்கும் நடுவில் வகாரம் இருத்தலை எண்ணுக.

உடையாள் நடுவுள் நீயிருத்தி என்பது சிவசிவ என்பதில் இருவகாரங்கட்குமிடையில் 'சி' இருத்தல். அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானல் - 'சிவசிவ' என்று என் நெஞ்சில்

தியானப்பொருளாகத் தேவரீர் இருவரும் விளங்குவதானல் என்பது. இத்தகைய திருமந்திரார்த்த உண்மையைப் புலப் படுத்துவதால் இத்திருப்பாடல் இத்திருவாசகம் என்னும் திரு மறையின் இருதயமந்திரமாகப் பாராட்டப்பெறுவது.

இவை முறையே சிவம் தானய் சத்தியைத் தன்னகத்தடக்கி நிற்கும் நிலையையும், சத்தியுள் தானடங்கிநின்று ஐந்தொழில் ஆற்றும் அருள்நிலையையும், இருவருமாக அடியார் உள்ளத் திருக்கும் அனுபவநிலையையும் உணர்த்துகின்றன.

இவ்வண்ணம் சிவம் நிற்கும்நிலைகளை உணர்த்துதலின் இச்செய்யுள் அநாதியாகிய சற்காரியமாதல் காண்க.

உடையாளுன்றன் நடுவிருக்கும் என்னும் இப்பாடலுக்குப் பழைய உரைதரும் சுவையான சம்பிரதாய அனுபூதியாவது:-

" இச்சகத்திற்கு இறைவன் அரசன் ; அவனுக்குப் பதி பசு பாசங்கள் திரிவித கரணங்கள் ; வல்லமையாகிற ஆனந்த வல்லி சொந்த மனைவி ; அவித்தியாகரி என்பவள் போகஸ்திரி. மாயாவல்லி அதிகார ஸ்திரி. அஞ்சனபூரணி என்பவள் உடன் பிறந்தாள். சிவமாகிய அரசனுக்கும் சொந்த மனைவியான ஆனந்தவல்லிக்கும் பிறந்த பெண் குடிலை; அவித்தியாகரி எனும் போகஸ்திரீயிடம் பிறந்த பிள்ளை சீவான்மா; சகோதரி யான அஞ்சனபூரணிக்குப் பதிபோதை என்ற ஒரு பெண். அதனை அவித்தியாகரியின் மகனை சீவனுக்குக் கல்யாணம் செய்தனர். மாயாவல்லிக்குப் பசுபோதை என்றொரு பெண். அவளை அவித்தியாகரியின் சகோதரனை மாயாவல்லவனுக்கு மணம் புரிந்தனர். மாயாவல்லவனுக்குப் போகஸ்திரி ஞானத் திரு. அவன் பெண் அமிருதவல்லி சுந்தரி. அரசன் மூன்று புவனத்தில் மூன்று வீடுகள் கட்டி மூன்று மனைவிக்கும் கொடுத் தான். தனக்கும் தன் சகோதரிக்கும் மற்ற பெண்டு பிள்ளைக ளுடனிருந்து ஆக்கினை செலுத்துகிறதே உடையானும் உடை யாளும் ஆனதால் உயிர்கள் இறைவனையின்றி இயங்குவது எங்கே? தானே உளம் புகுந்து உயிர்களைப்போலச் சேட்டிப் பன்; இதனை உணர்வதே முத்திபஞ்சாக்கர அநாதிசம்பந்த வழக்கு'' என்பது.

[இவ்வுருவகத்துச் சில பகுதி சித்தாந்தசம்பிரதாயத்திற்குப் புறம்பாகவும் உள்ளன. அவை பிரதி செய்வோரால் நிகழ்ந்த பிழையாகலாமோ என்று எண்ணக்கிடக்கிறது.]

377 முன்னின் றாண்டா யெனைமுன்ன
மியானும் அதுவே முயல்வுற்றுப்
பின்னின் றேவல் செய்கின்றேன்
பிற்பட் டொழிந்தேன் பெம்மானே
என்னின் றருளி வர நின்று
போந்தி டென்னு விடிலடியார்
உன்னின் றிவனார் என்னாரோ
பொன்னம் பலக்கூத் துகந்தானே. 2

இ - ள்: பொன்னம்பலத்துள் நின்று திருநடனம் செய்வதை விரும்பியவனே! பெருமானே! முன்பு, அடியேனை ஆட்கொண்டாய்; அடியேனும் தேவரீர் உபதேசித்த வழியிலே முயன்று, பின்நின்று நீ இட்ட பணிகளைச் செய்கின்றேன்; ஆயினும் நின்னருளுக்கு இலக்காகாது பிற்பட்டு நீங்கினேன்; ஆதலால் தேவரீர் எனக்காகத் தாமதித்து நின்று, வரும்படியாக அருளிச்செய்து, இன்பவுலகிற்புகுதுக என்று ஆணைதராவிடில், உன் அடியார் உன்னிடம் வந்து நின்று, இவ்வண்ணம் ஒதுங்கிநிற்கும் இவன் யார் என்று கேட்கமாட்டார்களோ? ஆதலால் விரைந்து அடியேனையும் ஏற்றுக்கொள்வாயாக என்றவாறு.

ஒன்றற்கும் பற்றாத என்முன் நின்று ஆண்டுகொண்டனை; அதுபோல அடியேனும் நின் ஏவல்வழிப் பிழையாது ஒழுகி வந்தேன்; ஆயினும் பிற்பட்டேன்; எனக்காகச் சிறிதுதாமதித்து நின்று, அருளி, வரும்படி வா என்று அழையாவிடில், உன்னைப் பார்த்து அடியார்கள் உன்னோடு வேறாய் நிற்கும் இவன் யார் என்று கேளார்களோ? ஆதலால், விரைந்து வருக! என என்னை அழைத்து இன்பவீட்டிருத்துக என்பது கருத்து.

சகலான்மாக்களில் பரிபாகம் உடையார்க்கு இறைவன் ஆசான்மூர்த்தியாக எழுந்தருளிவந்து அவர்கள்முன் நின்று இருப்பானும் உரையானும் அருள்செய்து ஆட்கொள்வன் ஆதலின் 'முன்நின்று ஆண்டாய்' என்றார்.

எனை - ஒன்றற்கும் பற்றாத அடியேனை. மலமாயா பந்தங்களோடு கூடிய சகலான்மாவாகிய என்னை. இத்தகையதோர் குறிப்பு உயிரினிடமாக உதிப்பதே பரிபாகத்தான் என்றுணர்க.

முன்னம் என்பது காலத்தையும், முன்நின்று என்பதில் முன் இடத்தையும் உணர்த்தின.

ஆண்டவன்குறிப்பில் நிற்பதே அடிமைக்கியல்பும் கடமை யும் ஆதலின் கடமை தவருத அடியேனும் என்பார் 'யானும்' என உயர்வுசிறப்பும்மை கொடுத்து ஓதினர்.

அதுவே முயல்வுற்று-அவ்வுபதேசநெறியிலேயே முயன்று. முன்னின்று ஆண்ட அத்திருவுருவக் காட்சியையே மீட்டும் காண முயன்று எனலுமாம்.

பின்னின்று - பதிபோதமுற்படப் பசுவாகிய யான் அதன் வியாபகத்துள் அடங்கி நின்று; 'சிவோகம்' என நின்று என்ப தாம். ஏவல் செய்தலாவது ஆண்டான் காலாலிட்ட பணிகளை விருப்போடு 'பணி செய்யக் கிடைத்ததே' என்று செய்தல்.

இவ்வண்ணம் அடிமையின் கடமையில் தவருதிருந்தும் நின் அடியாரோடு உடன் வராது பிற்பட்டுத் தங்கினேன்; ஆகவே, நீ வா என்று அருள்செய்யாவிடில், வரும் தகுதியும் முனைப்பும் இல்லாதேன் யான் ஆதலால் போந்திடு என்று அருள் செய்யவேண்டும்; தேவரீர் அங்ஙனம் செய்யாவிடின் உன்னைக்காட்டிலும் வேருக நிற்கும் இவன் யார் என்று அடி யார்கள் கேட்பார்கள்.

செந்தழலைச்சார்ந்த இரும்பு செவ்வண்ணமாதல்போலச் சிவகுருநாதனுகிய உன்னைச்சார்ந்த சீவன் சிவமாகவே விளங்கி எம்மைப்போல இன்பப்பெருந்துறையை எய்தவேண்டியிருக்க வேருக விலகிநிற்கின்ருனே இவன் யார் என்று அடியார்கள் கேட்பதால் தன்னைச் சார்ந்ததன் வண்ணமாக்கும் தனித் தன்மை முதல்வனுகிய உனக்கு இல்லையோ என்று எண்ணத் தோன்றுமே! அதற்காகவாவது ஆட்கொண்டருள் என்பார் 'உன் நின்று இவன் ஆர் என்னுரோ' என்ருர்.

இத்திருப்பாடல் ஒருதலை மாணிக்கமாகிய சீபஞ்சாக்கரம் செப்புவது என்றலும்மரபு. எவ்வாறெனின் 'முன்னின்று ஆண் டாய்' என்பதற்குத் தேவரீரே முதலில்நின்று என்னைப் பின்னர் வைத்து ஆண்டீர் என்றும், 'யானும் பின்னின்று அதுவே முயல்வுற்று ஏவல் புரிகின்றேன்' என்பதற்கு நானும் பின்னே இருந்து தேவரீர் அருள்வழியே நின்றேன் என்றும், 'பிற்பட்டு ஒழிந்தேன்' என்பதற்குப் பின்பு நான் என்பதும் ஒழிந்து தேவ ரீரே ஆயினேன் என்றும் கூறுதலும் மரபு. அதாவது முன் னின்று சிகார வகாரமாகிய சிவசத்திகளாக முன்னின்று, யகார மாகிய யான் பின்னிற்கச் சிவய என ஆண்டாய்; யானும் அதனை ஓதி நிற்குமுறையிலே சிவசத்திகளின் வியாபகத்திலடங்கித் தாய் தந்தையின் பராமரிப்பில் நிற்கும் பாலன்போலத் துன்பமின்றி

இன்பவடிவாக விளங்கி ஏவல் புரிதலாகிய 'நம' என்று நின்றேன் என்பதாம்; அதாவது சிவயநம என்பதனை முன்னின்று ஆண்டாய் யானும் அதுவே முயல்வுற்றுப் பின்னின்று ஏவல் செய்கின்றேன் என்பதாற்குறித்தவாறு.

சிவயநம என்பதில் யநம நீங்கிச் சிவ சிவ என இருத்தலே பிற்பட்டு ஒழிந்தேன் என்றது. காண்பானாகிய ஆன்மா'ய' காண்டலாகிய ஏவல்வழிநிற்றல் 'நம'. இரண்டும் ஒழிந்தநிலை 'சிவ'. சிவா என்று அனன்னியமாம் அநுபவநிலையில் இருந்தேன் என்பதாம்.

என் நின்று - எனக்காகத் தேவரீர் தாமதித்து நின்று நொண்டிப்பசு வந்தபிறகு கதவடைக்கும் கோவலன்போல, அடியார்கள் அனைவரும் ஆணையின்வண்ணம் வீட்டையினும் எனக்காகத் தேவரீர் சிறிதுகாலம் தாழ்த்து நின்று என்க. என்னை நீயாக நின்று என்பாரும் உளர்.

பழையவுரை : மகாகேவலத்தில் திருவடியில் இருப்பதறியாதிருந்தகாலத்து என்னைப் பெருங்கருணையினால் அறிவு விளங்கச் செய்தது திருவுளமறியும்; அவை அருளெனத் தோன்றாது மலபந்தத்தால் யான் எனது என்பவற்றைக்கொண்டு தாமே தருபவரைத் தம் வலியினால் கருதினேன் ; திருவருளே நடத்துகின்றதென அறியாமையால் மயல்வுற்று அடியார்கட்குப் புறமாயினேன்; பெருமானே திருவடி காட்டி என்னை அடிமைசெய்ய அனுக்கிரகம் பண்ணுக; வழிமறித்து அருளாக்கி அழைப்பது தேவரீர் கருணையல்லது வேறு உளதோ? பராமுகமேயானால் அடியார்கள் தம் கூட்டத்தில் வேறாக்கிவிடுவது திருவுளமாகுமா என்று பொழிப்புக் கூறும். இவ்வுரையில் கண்ணழிவும், பொருளும் வேறாக இருத்தல் ஊன்றி நோக்கிச் சிறந்தன் கொள்க.

அருளிவர - அருள் செய்யும்பொருட்டு. நின்று - தாமதித்து நின்று. போந்திடு - வா. உன் நின்று - உன்னினின்று. உனனைப்பார்த்து நின்று எனலுமாம்.

அநாதியே யாமும் அடிமையாக இருத்தலின் எம்மையும அடியாருடன் கூட்டி ஆட்கொள்ளவேண்டியிருக்கத் தாழ்ப்பது தகாது என விண்ணப்பிப்பதன் வாயிலாக ஆண்டான் அடிமைத்திறம் அநாதியாகிய சற்காரியமாதலை உணர்த்துதல் காண்க.

378 உகந்தா னேயன் புடையடிமைக்
குருகா வுள்ளத் துணர்விலியேன்
சகந்தான் அறிய முறையிட்டால்
தக்க வாறன் றென்னாரோ
மகந்தான் செய்து வழிவந்தார்
வாழ வாழ்ந்தாய் அடியேற்குன்
முகந்தான் தாரா விடின்முடிவேன்
பொன்னம் பலத்தெம் முழுமுதலே. 3

இ - ள் : பொன்னம்பலத்துள் எழுந்தருளியிருக்கின்ற முழுமுதற்கடவுளே! என்றும் இடையறாத அன்பினையுடைய அடிமைக்கு விரும்பியவனே! நின்பால் அன்புகொண்டு உருகாத மனத்தினையுடைய அறிவற்ற யான் உலகம் அறியத் தேவரீர் புறக்கணிப்பதை முறையிட்டுக்கொண்டால், உலகத்தவர் பெருமானே! நீர் செய்வது முறையன்று என்று கூற மாட்டார்களோ? யாகங்கள் பலசெய்து நின்சேவடிவழிக்கண் வந்த முனிவர்கள் பலரும் வாழ்ந்துய்ய எழுந்தருளியவனே! அடியேனுக்கு முகங்கொடுத்தருளாவிடின் இறந்துபோவேன் என்றவாறு.

யாகம் பல செய்த முனிவர்கள் வாழ எழுந்தருளியவனே! நீ முகங்கொடுத்து அருள்செய்யாவிட்டால் நான் இறந்தே போவேன்; பழி உம்மைச்சாரும்; உலகத்தவர் முன்னிலையில் சிவன்செயல் பட்சபாதமானது என்று முறையிட்டால் அவர்கள் உம்மைப்பார்த்து இது முறையன்று என்னமாட்டார்களா? சிந்தித்துப்பார் என்று விண்ணப்பித்தவாரும்.

அன்புடை அடிமைக்கு உகந்தானே! - அடிமைகளில் கடமைக்கு அடிமை செய்வாரும், கனிந்து அடிமை செய்வாரும் என இருவகையர். இவருள் கனிந்தடிமை செய்பவர்களே சிறந்தவர்கள். அத்தகைய அடிமையையே இறைவன் விரும்புவர் என்பதாம். "பொக்கமிக்கவர் பூவுநீருங்கண்டு நக்குநிற்பன் அவர்தம்மை நாணியே" என்ற அப்பர் திருவாக்கும் சிந்திக்கத் தக்கது. அடிமை: பண்பாகுபெயர்.

நீ நினைந்துருகும் அடியார்களையே ஆட்கொள்வாய்; என்னிடம் உருகுந்தன்மை இல்லை என்பதை அறிந்திருந்தும் என் குற்றத்தை உணரும் உணர்வு எனக்கில்லாமையால், தலைவன் செய்வது தவறுபோல உலகவர்முன் உரைப்பேன் என்பார் 'உருகாவுள்ளத் துணர்விலியேன் சகந்தான் அறிய முறையிட்டால்' என்றார்.

உலகவர் தக்கவாறு அன்று என்பர் என்பது தேவரீரைப் பார்த்து அடிமை தவறு பல செய்யினும் பெரிய மனம் படைத்தவர்கள் பிழைபொறுத்து ஆட்கொள்வதே தகுதி; அங்ஙனம் ஆட்கொள்ளாமை தகுதியன்று என்றே கூறுவர் என்றவாறும்.

மகம் - யாகம். அது சிவயாகம்; அஃதாவது பசுபோதமாகிய யாகப்பசுவைக் கொன்று சிவார்ப்பணமாகச் செய்யப் பெறும் யாகம். இதனைப் "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டெரியோம்புஞ்சிறப்பு" என ஞானசம்பந்தப்பெருமான் அருளுதல் காண்க. இஃதன்றிப் பசுமேத முதலான மீமாஞ்சக மதம் பற்றிய யாகங்களன்று என்க. அவ்வியாகங்கள் ஆன்மலாபமாகிய வீடுபேற்றை வழங்காமையும் சுவர்க்காதி போகங்களையே கொடுப்பதும் தெளிவு ஆதலான் என்க. இத்தகைய சிவயாகத்தைச்செய்து சிவனருள் நடத்துகிறது; ஆற்றுவழி மிதவை போல அருள்வழியே இயங்கும் பரதந்திரமான பொருள் யாம் என்று உணரும்நெறி வந்தவர்கள் அடியார்கள். ஆதலின் அவர்களை 'மகஞ்செய்து வழிவந்தார்' என்றருளினர். வாழ வாழ்ந்தாய் என்பது வாழ்வதற்காகவே நீ வாழ்ந்தாய் எனக் காரணப்பொருளில் வந்த செயவெனெச்சம்.

முகந்தருதல் - முகங்கொடுத்துப்பேசுதல். அது இலக்கணையாகத் திருவருள் சுரத்தலை உணர்த்தியது. முகந்தராவிடின் - பராமுகம் செய்தால். முடிவேன் - இவ்வுயிர் இவ்வுடலோடு கூடியதன் பயனை எய்தாமையின் பயனற்றபிறவி எதற்கு என்று எண்ணி இறப்பேன் என்பதாம்.

இனி, 'அன்புடை அடிமைக்கு உகந்தானே' என்பதற்கு, என்னையும் நின் அடிமைகளுள் ஒருவனாக ஆண்டமையால் அன்புள்ள அடிமையைப் பெறவேண்டும் என்று எண்ணி ஏமாந்தவனே என்றும், 'மகந்தான்செய்து வழிவந்தார் வாழ வாழ்ந்தாய்' என்பதற்கு அன்பினைந்திணை நெறிக்கண்நின்று தலைவிபோல என்னையும் யாகத்தீ சாட்சியாக மணந்து வாழ வேண்டும் என்றும் நயங்கண்டு உரைப்பாரும் உளர்.

முறையிட்டால் என்பது அங்ஙனம் முறையிட ஒருக்காலும் விரும்பேன் என்பதை உணர்த்தியது.

முதல்வன் என்றும் முழுமுதல் என்பதும், உயிர்கள் என்றும் மீளா ஆள் என்பதும் இத்திருப்பாடலில் உணர்த்தப்பெறுகின்றமையின் அநாதியான சற்காரியம் உணர்த்துதல் காண்க.

379 முழுமுத லேயைம் புலனுக்கும்
மூவர்க் கும்என் றனக்கும்
வழிமுத லேநின் பழவடியார்
திரள்வான் குழுமிக்
கெழுமுத லேயருள் தந்திருக்க
இரங்குங் கொல்லோவென்
றழுமது வேயன் றிமற்றென்
செய்கேன் பொன்னம் பலத்தரைசே. 4

இ - ள்: பொன்னம்பலத்தரசே! அடியேனது ஐம்புலன்களுக்கும், மூவராகிய அயன் அரி அரனாகியவர்கட்கும் மூல முதலாக உள்ளவனே! அடியேற்கு வழிவழிவந்த தலைவனே! தேவரீரது பழவடியார்கள் திரண்டகூட்டம் ஞானகாயத்திலே மிகுந்து எழுதற்குக் காரணமான முதல்வனே! அடியேற்கு அருள்வழங்க இரங்குமோ என்று அழுவதன்றி வேறு என் செய்யவல்லேன் என்றவாறு.

இறைவா! அடியேற்கும் இரங்கி அருள் வழங்குமோ என்று அழுது விங்குவதன்றி அடியேன் செய்யக்கூடியது யாதுளது என்பது.கருத்து.

ஐம்புலன்கள் - சத்தம்முதலான விடயங்கள். விடயங்களைக் கூறவே அவற்றிற்குக் காரணமான ஏனைய தத்துவங்களனைத்தையும் உபலக்கணத்தாற்கொள்க. ஆகவே மண்முதல் குடிலையீறுன அனைத்திற்கும் தனித்ததோர் முதல்வன் சிவபெருமான் என்றவாறும். மாயையாகிய முதற்காரணத்தைக்கொண்டு மண்ணீறுன தத்துவங்களை நிமித்தகாரணனுகிய முதல்வன் படைத்தலின் 'ஐம்புலனுக்கும் முழுமுதலே' என்றுர்.

மூவர் - இறைவன் ஆணையின்வண்ணம் அவனருளைச் சிறிது ஏற்று அதிகாரத்திலிருந்து முத்தொழில்களைச் செய்யும் காரிய கர்த்தர்களாகிய பிரமன் முதலாயினுர். அவர்களுக்கும் சிவனே முதல்வன் என்றவாறும். இவ்விருபகுதிகளானும் படைத்தலாதி தொழில்கட்கும், படைபபோனுதிய காரியகர்த்தர்களுக்கும், அத்தொழிற்கு மூலமான தத்துவங்கட்கும் தனித்த முதல்வன் சிவன் என்று தெளிவித்தவாறு.

முதல் - தலைவன்; ஆண்டான் என்பது. என்றனக்கும் வழி முதலே - வழிவழியாக அடியேற்குத் தலைவனே. அனைவருக்கும் இறைவன் வழிமுதலாயினும், இவனேமுதல்வன் என்று திருவருள் விளக்க உணர்ந்துய்வார் சிலர் என்பதும், அவருள் தாமும் ஒருவன் என்பதும் உணர்த்த 'என்றனக்கும் வழி முதலே' என்றுர். என்றனக்கும் என்ற உம்மை எச்சவும்மை.

பழ் அடியார் என்று விசேடித்தது அவனருளே கண்ணாகக் கொண்டு சிவத்தொண்டிலேயே உறைத்துநிற்கும் அடியவர்களென்று உணர்த்துதற்கென்க. அடியார் திரள் குழு வான் மிக்கு எழும் முதல் என்க. திரள்குழு: வினைத்தொகை. அடியார்கள் திரண்ட கூட்டமென்க. வான்-ஞானபூமி. சுவர்க்கமோ விண்ணோ அன்று என்க. பழவடியார் போகபூமியாகிய ஆண்டுப் பொருந்தார் ஆதலின். அடியார் திரள் வான் குழுமி கெழு முதல் எனப் பிரித்து, அடியார் கூட்டம் ஞானபூமியில் கூடிக் கலத்தற்குக் காரணமான முதல்வன் எனலும் ஆம்.

அருள் வழங்குதல் இறைவன் அனைவருக்கும் செய்யக் கூடிய பொதுவான உபகாரம். புல் முதல் விண்ணோர் ஈருன உயிர்கள் யாவும் அவனருளாலேயே வாழ்கின்றன ஆதலால் அதுமட்டும் அடியேற்கு அமையாது; என் உயிருக்கு உயிராக விளக்கம்பெற்று எழுந்தருளியிருக்கவும் வேண்டும்; தாய் தந்தை அரசன் ஆசான் முதலிய குரவர்கள் உடனிருக்குங்கால் தனயன் தீயநெறிக்கண் சாரவும் அஞ்சுதல்போலத் தேவரீர் அருள்தந்து இருக்கவும் பெறின் என்றும் சுத்தான்மாவாகவே விளங்குவேன் என்பார் 'அருள் தந்து இருக்கவும்' என்றார்.

இத்தகைய பிரார்த்தனை அடியேற்கு உரிமையன்று. அடியேற்குத் தகுதி ஒருசிறிதும் இல்லை என்பதை யானும் அறிவேன். ஆயினும், பரமகருணாநிதியாகிய தேவரீர் எளியேன் மீது வைத்த பேரிரக்கத்தாலேயே இயற்றப்படுவதொன்றாம் என்பார் 'இரங்குங்கொலோ' என்றார். கொல் ஐயப்பொருளில் வந்தது. தலைவற்கு இரக்கம் வருவிக்க வேண்டுமாயின் உரிமைப் போராட்டத்தால் முடியாது; தன் தகுதியின்மையைத் தெரிவித்து அழவேண்டும் ஆதலால் அழுவேன் என்பார் 'அழுமதுவேயன்றி மற்றென்செய்கேன்' என்றார்.

இரண்டாம் திருப்பாடலில் அருளியவண்ணம் இறைவன் முன்னின்றாள ஆன்மா பின்னின்று ஏவல் கேட்பப் பிற்பட்டு ஆன்மாவும் ஒழியச் சிவமேயாய், முதற்றிருப்பாட்டில் சொன்ன குறிப்பிலேநிற்க நமது பொறி புலன் முதலான தத்துவங்களும், தாத்துவிகங்களும், அதிபதிகளும் சிவமயமாகவே காணப் பெற்று, சிவமன்றி வேறொன்றும் தோன்றாத அநுபவநிலை தோன்றும் என்பதை இததிருப்பாட்டின் முதலிரண்டடிகளானும் குறிப்பித்தார் என்க. அதாவது சிவயநம என்றிருந்து, சிவசிவ என நின்று, எல்லாம் சிவமாகக்காணும் அநுபவநிலை சித்திக்க இருப்பதைக் குறிப்பித்தவாறும்.

இத்திருப்பாடல், என்செய்கேன் என ஆன்மாவின் செயலற்ற தன்மையுணர்த்தி, முழுமுதல் கெழுமுதல் முதலானவற்ருல் ஆன்மாக்களுக்கும் ஆண்டவனுக்குமுள்ள அநாதியான ஆண்டானடிமைத் தொடர்பு என்றும் உள்ளது என்பதை உணர்த்துதலின் அநாதி நித்யமான சற்காரியமாதல் காண்க.

380 *அரைசே பொன்னம் பலத்தாடும்*
*அமுதே யென்றுன் அருணோக்கி*
*இரைதேர் கொக்கொத் திரவுபகல்*
*ஏசற் றிருந்தே வேசற்றேன்*
*கரைசேர் அடியார் களிசிறப்பக்*
*காட்சி கொடுத்துன் அடியேன்பாற்*
*பிரைசேர் பாலின் நெய்போலப்*
*பேசா திருந்தால் ஏசாரோ.*

இ-ள்: அரசே! பொன்னம்பலத்தில் எப்போதும் ஆனந்த நடனம் செய்யும் அமுதமே! என்று தோத்தரித்து, உன் திருவருளையே எதிர்நோக்கி இரையை ஆராய்கின்ற கொக்கைப் போல இராப்பகலாக வருந்தியிருந்து வாடினேன்; என் நிலை இதுவாக, திருவடியாகிய நெடுங்கரையைச் சேர்ந்து உய்ந்த சிவனடியார்கள் முத்தியின்பத்தில் மகிழ்ந்திருப்ப, அவர்களுக்குத் தரிசனம் தந்து, உனக்கு அடியேனுகிய என்னிடம் மட்டும் பிரையூற்றிய பால்போலப் பேசாமலிருந்தால் பிறர் உன்னைப் பழித்துரையார்களோ? என்றவாறு.

இரைதேடுகின்ற கொக்குப்போல உன்னருளை நாடியிருந்தேன்; அடியார்கள் உன்னருளைச் சேர்ந்து பேரின்பம் பெற்ருர்கள்; என்னிடம் நீ பிரைதோய்த்த பால்போலப் பேசாதிருக்கின்ருய்; பிறர் உன்னை இகழ்வர்; உலகத்திற்கு அஞ்சியேனும் அடியேனையும் இன்பக்கரையை எய்துவிக்க என்பது கருத்து.

தக்கார் தகாதார் என்று ஆராயாது யாரையும் உவந்தால் உயர்த்தும் வன்மை அரசனுக்கு உண்டு. அடியேன் தகுதி நோக்கித் தள்ளிவிடாது இன்பக்கரையில் ஏற்றுவித்தல் உமக்கு மிக எளிது என்று குறிப்பார் 'அரைசே' என முதலில் விளிக்கின்ருர்.

தங்கக்கிண்ணத்தில் ஊற்றிய பால்போல, பொன்னம்பலத்தாடும் அமுதமாக இறைவன் விளங்குகின்ருர் என்று தம்மநுபவம் கூறுவார் 'பொன்னம்பலத்தாடும் அமுதே' என்ருர்.

'ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடி இருக்குமாம் கொக்கு' என்றாற்போல, தேவரீர் திருவருள் ஒன்றையேநோக்கி ஏனைய சிற்றின்பங்கள் இடையிலே வலிய வந்து எம்மைச் சாரவும் அவற்றை ஒருசிறிதும் பொருட்படுத்தாது இருக்கின்றேன் என்பார் 'உன் அருள்நோக்கி இரைதேர் கொக்குஒத்து, இரவு பகல் ஏசற்று இருந்தே வேசற்றேன்' என்றருளினார். ஏசற்று வருந்தி. வேசற்றேன் - வாடினேன். வேசாடிப் போனேன் என்ற வழக்குண்மையும் உணர்க.

" நின் அருளெனும் நலத்தார்பூட்டித் திருவடி நெடுங்கரை சேர்த்துமா செய்யே" என்பது பட்டினத்தார் திருவாக்கு. ஆதலால் கரையென்பது சிவனது இன்பமயமான திருவடியை உணர்த்தியது. திருவடியைச்சேர்ந்த அடியார்கள் தாம்பெற்ற சிவானந்தத்துள் வேறின்றி அழுந்தி அனுபவித்து அதன்மயமாய் இருத்தலை 'அடியார் களிசிறப்பக் காட்சி கொடுத்து' என்று அருளினார். கரை சேர் அடியார் - மனங்கரைதலைப் பொருந்திய அடியார்கள் எனலுமாம்.

உன் அடியேன் என்றது காக்கவேண்டிய பொறுப்பு இறைவற்குண்மையை உணர்த்த என்க.

பிரைசேர் பாலில் நெய் வெளிப்பட்டும் வெளிப்படாதும் இருக்கும், ஆடை படர்ந்திருக்கும், ஆனால் நெய் தோன்றாது. அதுபோல இறைவன் அடியேற்கு வெளிப்படாது பேசாதிருந்தனன்; தன் அடியார்கள் சிலருக்கு வெளிப்பட்டருளினன் என்பார் பிரைசேர் பாலை உவமித்தார். பழைய வுரையாசிரியர் பாலிற்படு நெய்போல மறைய நின்றுளன் என்றுரைகாண்பர். அடிகள் பால் என்னாது பிரைசேர் பால் என்றதன் சிறப்பு நோக்கித் தெளிக.

தன் சீரடியார்க்கு ஒருவிதமாகவும், உன் அடியானாகிய எனக்கு ஒருவிதமாகவும் இருத்தலை உணர்கின்ற பிறர் அமைந்தொருபாற்கோடாமை ஆண்டவனியல்பாயிருக்க இறைவன் ஏன் இவ்வண்ணம் இருக்கின்றார் என்று உன்னைப் பழியாரோ என்றார். என்னை இகழ்வார்களே என்று உரைப்பாருமுளர். இவ்வுரைக்குத்தக முற்பகுதியையும் பிரித்துப் பொருளியைக்க.

சிலர், கரை சேர் உன் அடியார் களிசிறப்பப் பிரைசேர் பாலின் நெய்போலக் காட்சி கொடுத்து, உன் அடியேன்பால் பேசாதிருந்தால் ஏசாரோ எனத் தமக்கு வேண்டியவாறே சொற்களைக் கொண்டுகூட்டிப் பொருள் காண்பர். பாலில் நெய் எங்குமாய்ப் பரவி மறையநிற்கும்; பிரைசேர் பாலில்

ஆடையின்கண் ஒதுங்கி மறையநிற்கும்; கடைந்தால் வெளிப்படும். அதுபோல இறைவன் அடியாராகிய என்னிடத்து ஆடையின் நெய்போல வெளிப்படாது பேசாதிருக்கின்றார் என்றதேயன்றி, பிரைசேர் பாலின் நெய் வெளிப்படுவது இயல்பாமாறே என்று காட்சிகண்ட அடியார்களுக்கு அதனை ஒப்பாக்குதல் சிறிதும் பொருந்தாமை தெளிக. காட்சிகண்ட அடியார் 'வாங்கிக் கடைந்த' அடியார். இறைவன் அவர்கள் முன்பு நெய்போலத் திரண்டு உருவாக வெளிப்படுகின்றார். அடிகளார்முன்பு பிரைசேர் பாலின் நெய்போல அறிந்தும் அறியப்படாதிருந்தார் என்க. உன் அடியேன் என்றமையால் அடிகளாரும் தாம் காட்சிக்குத் தகுதியுடையராதலை விளக்கினர் ஆதலால் அவருக்கு இறைவன் சகலான்மாக்களுக்குப் பாலிற்படுநெய்போல மறையநின்ற நிலையினும் சிறந்து பிரைசேர் பாலின் நெய்போல் ஆயினன்; காட்சிபெற்ற அடியார்களுக்கு வாங்கிக் கடைய முன்நிற்கும் நெய்போலாயினன் எனப் பரிபாகம்நோக்கி நயம் உணர்க.

இப்பாடல், இறைவன் இங்ஙனம் ஆன்மாக்கள்தோறும் அவரவர் பரிபாகநிலைக்குத் தகக் கலந்தும், கண்டும் காட்டியும் இருக்கும் அநாதியான சற்காரியம் உணர்த்துதல் காண்க.

381 ஏசா நிற்பர் என்னையுனக்
கடியா னென்று பிறரெல்லாம்
பேசா நிற்ப ரியான்ருனும்
பேணு நிற்பேன் நின்னருளே
தேசா நேசர் சூழ்ந்திருக்குந்
திருவோ லக்கஞ் சேவிக்க
ஈசா பொன்னம் பலத்தாடும்
எந்தாய் இனித்தான் இரங்காயே. 6

இ-ள்: ஒளிமயமானவனே! ஈசா! பொன்னம்பலத்தில் ஆடும் எந்தையே! உன்னைப் பிறரெல்லோரும் இகழ்வார்கள்; என்னை உனக்கு அடியான் என்றும் பேசுவர்; யானும் நின் திருவருளையே போற்றுவேன்; இனியாவது, நின் அன்பர்கள் சூழ்ந்திருக்கும் நினது திருவோலக்கத்தைத் தொழத் திருவுள்ளம் இரங்கியருள் என்றவாறு.

இறைவா உன்னைப் பிறரெல்லாம் ஏசுவதுமட்டும் அன்றி, என்னையும் உன்னடியான் என்று பேசுவர்; யார் என்ன பேசினாலும் யான் நின்னருளையே விரும்புவேன்; இனியாவது அடியார்கள் புடைசூழ நீ வீற்றிருக்கும் திருவோலக்கத்தைச் சேவிக்க இரங்கியருள் என்பது கருத்து.

ஒளி இருளைப்போக்கிப் பொருள்களைக் காட்டுவது. அது போல இறைவன், ஆணவ இருளைப் போக்கித் தன்னைக்காட்டும் ஞானவொளியானவன் என்பதனைத் 'தேசா' என்றதால் குறிப்பித்தார். இயங்குவ நிற்பவான பொருட் பிரபஞ்ச முழுவதையும் உடையவனே என்பார் 'ஈசா' என்றார்.

ஞானவுருவுடன், யாவற்றையும் உடைமையாகக்கொண்டு விளங்குகின்ற நீ எம்மையெல்லாம் தந்தைபோலத் தீயதிற்றடிந்து திருத்திக்காக்கப் பொன்னம்பலத்துள் எம்கண் கண்டுய்ய வந்தாய் என்பார் 'பொன்னம்பலத்தாடும் எந்தாய்' என்றார்.

முதற்றிருப்பாட்டில் விண்ணப்பித்ததுபோல் பிறரெல்லாம் ஏசுவர். 'நீ வேண்டுதல் வேண்டாமையிலான்; வைதனவே வாழ்த்தாகக்கொள்ளும் வள்ளல்' அந்த ஏச்சுரை உனக்குத் தைக்காதொழியலாம்; அடியேன் உலகியலில் உலகத்தோடு ஒட்டி, விருப்பு வெறுப்பு, ஏச்சு பேச்சு, தூற்றுதல் போற்றுதல் இவற்றில் இயைந்து வாழ்கின்றவன் ஆகவே என்னைப் பார்த்துப் பிறர் 'இவன் உன் அடியான்' என்றுபேசுகின்றனர்; அப்போது 'இவன் சிவனடியானாக இருந்தும் சிவபெருமான் இவனை இன்பப் பெருந்துறையில் இருத்தாது இவ்வண்ணம் அலையவிட்டார்' என்று ஏளனம்தோன்ற என்னை உனக்கு அடியான் என்று பேசுகின்றார்களே என்று எண்ணி வருந்துகின்றேன் என்பதை உள்ளடக்கிப் 'பிறரெல்லாம் பேசாநிற்பர்' என்கிறார்.

இப்படி அவர்கள் பேசினாலும் ஆசை வெட்கமறியாது என்பதற்கிணங்க உன்னருளையே எதிர்நோக்கியிருக்கிறேன் என்பார் 'யான்றானும் நின் அருளே பேணுநிற்பேன்' என்றருளினர்.

திருவோலக்கம் - நாட்சபையில் அரியாதனத்து அடியார்கள் குறைகளைத் தீர்க்க அருளுள்ளத்துடன் அரசன் வீற்றிருக்கும் காட்சி; ஈண்டு ஞானமயமான திருக்கயிலையில், இறைவன் வீற்றிருக்கும் காட்சி. இங்ஙனம் இறைவன் வீற்றிருக்கும்போது அழுகையர் தொழுகையராக அன்பர்கள் சூழ்ந்திருக்கும் காட்சி மிகச் சிறந்ததாம்; அத்தகைய திருவோலக்கத்தை அடியேன் கண்டு தொழ இனியாவது இரங்கியருள் என்று வேண்டிக் கொள்கின்றார். நேசர் - அன்பர். இனித்தான் - இனியாவது. பிறர் - புறச்சமயத்தார்; சமயவுண்மையறியாதார் எனினுமாம்.

பிறர் என்னகூறினும் யான் நின்னருளே வேண்டிநிற்பது, எனக்கும் தேவரீருக்குமுள்ள அநாதியான தொடர்பு; அதனால்

நீ திருவோலக்க சேவை தரவேண்டும் என வேண்டுதலின் இது அநாதியான சற்காரியம் உணர்த்துகிறது.

382 இரங்கு நமக்கம் பலக்கூத்தன்
என்றென் றேமாந் திருப்பேனை
அருங்கற் பனைகற் பித்தாண்டாய்
ஆள்வா ரிலிமா டாவேனோ
நெருங்கும் அடியார் களுநீயும்
நின்று நிலாவி விளையாடும்
மருங்கே சார்ந்து வரவெங்கள்
வாழ்வே வாவென் றருளாயே. 7

இ-ள்: எமது வாழ்வாக உள்ளவனே! பொன்னம்பலத்தில் அருட்கூத்தாடும் பெருமான் நமக்கு இரங்கியருளுவர் என்று எண்ணி எண்ணி, அதுபெறாமல் ஏமாந்திருக்கின்ற அடியேனை, பிறர் எவராலும் பெறுதற்கரிய கற்பனையாகிற உபதேசத்தையருளி ஆட்கொண்டாய்; அவ்வண்ணம் ஆட்கொண்ட நீ இன்று புறக்கணித்தமையால், யான் ஆள்வார் அற்ற கொண்டிமாடு ஆவேனோ? தேவரீரைச்சூழ உள்ள அடியார்களும் நீயும் எப்போதும் நிலைபெற்று விளங்கி விளையாடுகின்ற பக்கத்தில் அடியேனும் சார்ந்துவர 'வா' என்று ஆணைதந்து அருள்செய் என்றவாறு.

அன்று அரிய உபதேசந்தந்து ஆட்கொண்ட நீ இன்று என்னை ஆள்வாரற்ற மாடாக விட்டுவிடாமல், நீயும் நின்னடியார்களும் விளையாடும் இடத்தின் பக்கமாவது அடியேன் வர 'வா' என்று அருள்செய் என்பது கருத்து.

அடிகளார் வாழ்வே சிவவாழ்வாக அமைதலின் சிவபெருமானை 'வாழ்வே' என்று விளிக்கின்றார். முன்னர் 'வாழ்முதலாகியபொருளே' (366) என்றார்.

பலருக்கும் அருள்வழங்குவேனென்று அருளாடலை அம்பலத்தே இயற்றுகின்றவன் நமக்கு அருளான் என்று பலகாலும் எண்ணினேன்; ஆனால், ஏமாந்தேன் என்பார் 'அம்பலக்கூத்தன் நமக்கு இரங்கும் என்று எண்ணி ஏமாந்திருப்பேனை' என்றார்.

அருங்கற்பனை - அரிய உபதேசம். முப்பொருளுண்மையும் அவற்றினியல்பும், உயிர்கள் ஈடேறும் உபாயமும், திருவைந்தெழுத்தின் அருள்நிலையும் ஆகிய உபதேசங்கள். கற்பித்தல் - அதில் நிற்கப் பழக்குதல். ஆண்டாய் என்றது ஆண்ட நீ

இப்போது கைவிட்டாய் என்றவரை பொருள்தந்து நின்றது. அதனால் நான் உடையவனற்ற ஊர் சுற்றும் மாடு ஆவேனோ என்றதாம்.

முதல்வன் தன் நெருங்கிய அன்பருடனல்லாது பிறரோடு விளையாடான் இது உலகியல் ஆதலால் இறைவனும் அவனுக்கு நெருக்கமான அடியார்களும் விளையாடுகின்றனர். அவ்விளையாட்டு ஏனையோர் விளையாட்டுப்போல, பயனில் தொழிலாகக் கழிவது அன்று; நிலைபெற்றது, விளக்கந்தருவது என்பதனை 'நின்று நிலாவி விளையாடும் மருங்கு' என்பதால் குறித்தார். உங்களோடு கலந்து விளையாடுந்தரம் அடியேற்கு இல்லையாயினும் அந்த இடத்தைச் சார்ந்துவரவாவது அருள்வழங்குக என்றவாறும்.

தலைவனும் நெருங்கிய அன்பர்களும் விளையாடுமிடத்தில் தலைவன் வா என்று அழைத்தால் அல்லது எவரும் போதல் மரபன்று ஆதலின் உன் ஆணைநோக்கி நிற்கின்றேன் என்பார் 'வா என்று அருளாய்' என்கின்றார்.

இங்ஙனம் இறைவற்கும் தமக்குமுள்ள ஆண்டானடிமையான அநாதியான சற்காரியமுணர்த்தி, ஒன்றுபடற்கு உதவி வேண்டி நிற்றலின் இச்செய்யுளின் பதிகக்கருத்தின் இயைபு தெரிக.

383 அருளா தொழிந்தால் அடியேனை
அஞ்சேல் என்பார் ஆரிங்குப்
பொருளா என்னைப் புகுந்தாண்ட
பொன்னே பொன்னம் பலக்கூத்தா
மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து
வருந்து வேனை வாவென்றுன்
தெருளார் கூட்டங் காட்டாயேல்
செத்தே போனாற் சிரியாரோ. 8

இ - ள் : என்னையும் ஒருபொருளாக எண்ணி இம்மண்ணுலகத்து எழுந்தருளிவந்து ஆட்கொண்ட பொன்போன்றவனே! பொன்னம்பலக்கூத்தா! அடியேனைத் தேவரீர் அருளாவிடின் அஞ்சேல் என்று அபயம் அளிப்பார் வேறு யார்? மயக்கம்நிறைந்த மனத்தோடு உன்னைப் பிரிந்து வருந்துகின்ற என்னை வா என்றழைத்து, சிவஞானத் தெளிவுடைய அன்பர்கள் கூட்டத்தைக் காட்டாயாயின், யான் செத்தேபோவேன்; அங்ஙனம் யான் இறந்துபடின் உன் தலைமையின் தன்மை நோக்கிப் பிறர் சிரிக்கமாட்டார்களா? நீ சிந்தித்துப்பார் என்றவாறு.

ஒன்றற்கும் பற்றாத என்னையும் ஒருபொருளாக எண்ணி, நான் வாழும் இக்கன்மபூமிக்கு எழுந்தருளிவந்து ஆண்டாய்; அங்ஙனம் ஆண்ட நீ எனக்கு அருள் செய்யாதொழிந்தாய்; என்னைப் பயப்படாதே என்பவர் யாருளர்? மயக்க அறிவால் உன்னைப்பிரிந்து வருந்துகின்ற என்னை இன்பநகர்க்கண் வா என்று அழை; அடியார்கூட்டத்துள் கூட்டு; இல்லையானால் இறந்துபோவேன்; நீ அடிமையைக் காப்பாற்றும் அழகைக் கண்டு பிறர் சிரிப்பார்கள்; இதனை நன்றாகச் சிந்தித்துப் பார் என்பது கருத்து.

என்னைப் பொருளாக இங்குப் புகுந்து ஆண்ட பொன் எனக் கூட்டுக. பொன் என்றும் ஒளியுள்ளதாய்க் களங்கம் இயற்கையே இல்லாததாய், அரிதாய் அழகுசெய்வதாயுள்ளது. அதுபோல, இறைவனும் அநாதியே மலமாயைகளின் நீங்கி, ஞானவுருவாய் ஆன்மாக்களை விளக்கம் செய்கின்றார். ஆகவே, பொன்போல்வானைப் பொன் என்று உருவகித்தார்.

மருள் - மயக்கம். அது ஆணவமலத்தின் காரியமாய், உயிர்களின் அறிவை மயக்கித் தநு கரண புவன போகங்களிலேயே உழலும்வண்ணம் செய்வது; தெருளாகி அருளைக்காட்டாதது. அதனால் யான் மயங்கி, ஆட்கொண்ட நாள்முதல் அடியினைவிட்டு அகலாத நிழல்போல உடனாகவே வாழவேண்டிய நான், மாயேயமாகிற புவன போகங்களில் பொருந்தி உன்னைப் பிரிந்து வருந்தினேன் என்கிறார். தெருள்-தெளிந்த ஞானம்; சிவஞானம். தெருளார் கூட்டம்-சிவஞானியர்கூட்டம். விளக்குப்புக இருள் மாய்ந்தாங்கு உன் தெருளார் கூட்டத்தைக் கண்டவுடன் என் மருளார் மனமும் தெருளும்; அதனால், நின்னை என்றும் பிரியா நிலை கூடும் என்ற நோக்கால் 'வருந்துவேனை வா என்று உன் தெருளார் கூட்டம் காட்டுக' என வேண்டுகின்றவர் எதிர்மறை வாய்பாட்டால் "காட்டாயேல் செத்தேபோவேன்; செத்தேபோனால் சிரியாரோ' என்கிறார். ஆகவே, தெருளார் கூட்டம் காட்டிச் சாவாப் பெருநெறியையருளுக என்பது அடிகளார் வேண்டுகோள்.

இதுவும் 'புகுந்தாண்டாய்' 'கூட்டம் காட்டு' என்பவற்றால் இறைவனுடைய அநாதியான சற்காரியமுறைமையுணர்த்துதல் காண்க.

384 *சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்*
*திரண்டு திரண்டுன் திருவார்த்தை*
*விரிப்பார் கேட்பார் மெச்சுவார்*
*வெவ்வே றிருந்துன் திருநாமம்*

*தரிப்பார் பொன்னம் பலத்தாடுந்*
*தலைவா என்பார் அவர்முன்னே*
*நரிப்பாய் நாயேன் இருப்பேனோ*
*நம்பி யினித்தான் நல்காயே.* 9

இ - ள்: அடியார்கள், தேவரீரைக் கலந்துள்ள களிப்பு மிகுதியால் தானே சிரிப்பார்கள்; களிப்பார்கள்; தேனிப்பார்கள்; கூடிக்கூடி உன் புகழமைந்த வார்த்தைகளை விரித்துரைப்பார்கள்; அதனை விரும்பிக் கேட்பார்கள்; வியந்து பாராட்டுவார்கள்; தனித்தனியே இருந்து உன் திருநாமமாகிய திருவைந்தெழுத்தை மனத்தின்கண் தரிப்பார்கள்; வாய்திறந்து பொன்னம்பலத்தில் ஆடுகின்ற எம் தலைவனே என்பார்கள்; இங்ஙனம் பரவசப்படும் இன்ப அன்புடைய அடியார்களின் முன்னே இகழ்சிக்குரியனாக நாயை ஒத்த அடியேன் இருப்பேனோ! நம்பி! இனியாவது அருள்செய் என்றவாறு.

அடியார்கள் பலரும் உன் அருட்குணங்களில் ஆழ்ந்து பரவசமாம்போது அடியேன்மட்டும் இகழ்ச்சிக்குரியனாக இருப்பேனோ? நம்பி! இனியாவது அருள்செய் என்பது கருத்து.

சிரித்தல் - சிவானுபவம் சிந்தையில் தேங்கிநிற்றலின் சீவ போதமாகிய புகழும் இகழுங்கடந்து, மகிழ்ச்சியால் அடியார்கள் தம்முள் தாமே நகுதல்.

களிப்பார் - முன்னர் நகையாக வெளிப்பட்ட களிப்பு, நாற் கரைக்குள் நிறைந்து ததும்பும் வெள்ளம்போல முகத்திற் பொலிய நிற்பார் என்பதாம். ஆகவே சிரிப்பு நகையாகிய செயலும், களிப்பு மனநிறைவாகிய அநுபவமும் என்க. பிறர் மரபொடுபடாத பிறவும் உரைப்ப.

தேனிப்பார் - தேன்போல மனங்கசிவார் என்பதாம். புது மட்கலத்தினுள் நிறைந்த நீர் புறத்தே பொசிதல்போல அன்பு உள்ளத்தில் நிறைய அதனால் கசிவார் என்பதாம். 'காதலாகிக் கசிந்து' என்ற அநுபவம் காண்க. தியானிப்பார் என்பதன் மரூஉமொழியாகக் கூறுவாருமுளர். இக்கருத்து மீண்டும் உன் திருநாமம் தரிப்பார் என்பதிலும் பெறப்படுதலின் பொருந்துமாறு அறிக.

'வேதமொழியர்' (336) என்றலின் திருவார்த்தை என்றது இறைவன் வாக்காகிய வேதாகமங்களை என்க. வேதாகமவாக்கியங்கள் அவரவர் அனுபவ நிலைக்கு ஏற்ப அறியப்படுவன ஆகலின், அடியார்கள் கூடிக்கூடித் தாம்தாம் கண்ட அநுபவங்களைக் கூறி இன்புறுகின்றார்கள் என்பார் 'திரண்டு திரண்டு

உன் திருவார்த்தை விரிப்பார்' என்றார். அங்ஙனம் கூடிக்கண்ட தத்துவார்த்தங்களைச் சிரத்தையுடன் கேட்டு இன்புறுவார்கள் என்பதனைக் 'கேட்பார்' என்றார்.

திருநாமம் என்பது பொதுவகையால் இறைவனுடைய ஆயிரமாகிய நாமங்களையும் சிறப்புவகையால் திருவைந்தெழுத்தையும் உணர்த்தும்; ஈண்டு ஒவ்வொருவரும் தனித்தனியே இருந்து தரிக்கின்றார்கள் என்றமையால் திருவைந்தெழுத்தே கொள்ளக்கிடத்தல் காண்க. தரித்தலாவது தன் செவிக்குங் கேட்காது நாவிற்றரித்தலும், சிந்தையிற்றரித்தலுமாம். நாவிற்றரித்தல் வாசிகம்; சிந்தையிற்றரித்தல் மானசிகம் என்க.

இவ்வண்ணம் சிவபோகத்திருப்பவர்கள் வாய் வாளாமை நேர்ந்தபோது 'பொன்னம்பலக் கூத்தா' என்பார்கள் என்பது பொன்னம்பலத்தாடும் தலைவா என்றதன் கருத்தாகக்கொள்க.

நரிப்பு - இகழ்ச்சி. இத்தகைய அனுபூதிமான்களாகிய அடியார்கள் முன்பு இகழத்தக்கவனாக நாயேன்மட்டும் இருப்பேனோ என்பதாம். இப்பகுதிக்குப் பழைய உரையும் இவ்வடியார்பெறும் அடிமை இன்பத்திற்கு என் பூசையும் நேசமும் யானும் உனக்கு எங்கே என்று இழிவாய் என்ற பொருளையே கருதவைத்தமை சிந்திக்க.

சிலர், நாய்போன்ற யான் நரித்தன்மையை உடையேனாக இருப்பேனோ என்று உரைப்பர். அவர்களே இவ்வுரைக்கு விளக்கந்தரும்பொழுது அழுக்குடையார் பிறர் முன்னிலையை நினைக்கக் கூசுவதுபோல, அவ்வடியவர் முன்னிலையில் கூசி இருத்தற்குரியனல்லேன் என உரைப்பர். இந்த விளக்கத்தில் நரிப்பாய் - கூசி என்று பொருள் கொள்ளப்படுதல் காண்க. கூச்சமும் இகழ்ச்சி அடிப்படையில் எழுதல்கண்டு நரிப்பு என்ற தனைத் தொழிற்பெயராகக்கொண்டு இகழ்ச்சியெனப் பொருள் கோடலே சாலச்சிறத்தல் காண்க.

ஆங்கிலமொழிபெயர்ப்பாசிரியர் ஜி. யு. போப் அவர்கள் நரியைப் பாய்கின்ற நாய்போல இருப்பேனோ என்ற கருத்துப்பட மொழிபெயர்த்ததாகக் கூறுவதுண்டு. வேட்டைக்காலத்து நரியின்மீது பாய்கின்ற நாய்போலப் பேரவா மிக்கு இருப்பேனோ என்று கருத்துக்கூறுவாரும் உளர். இவை ஞானனுபவ நூலின் போக்கிற்கு ஏலா உரை என்றொழிக.

நம்பி - நம்பத்தக்கவன். குணபூரணன். 'இனித் தாள் நல்காயே' என்று நன்னூல் சங்கரநமச்சிவாயருரைப் பிரதி

மேற்கோட்பாடம். அது பாடமாயின் நம்பி! இனித் திருவடியை நல்கு எனப் பொருள் கொள்க.

இத்திருப்பாடல் அடியார்கள் இரண்டற்றுக் கலந்திருத்தலை யும் அடிகளார் அதனை விரும்புதலையும் விளக்குதலின் அநாதி யான சற்காரியம் உணர்த்தியது காண்க.

385 நல்கா தொழியான் நமக்கென் றுன்
நாமம் பிதற்றி நயனநீர்
மல்கா வாழ்த்தா வாய்குழறு
வணங்கா மனத்தான் நினைந்துருகிப்
பல்கால் உன்னைப் பாவித்துப்
பரவிப் பொன்னம் பலமென்றே
ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி
அருளா யென்னை யுடையானே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள்: என்னை அநாதியே ஆளாக உடையவனே! ஆண்டவன் அடிமையாகிய நமக்கு அருள் வழங்காதிரான் என்று, உன் திருப்பெயராகிய சீபஞ்சாக்கரத்தையே பலகா லும் சொல்லி, கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் பெருக்கி, வாயால் வாழ்த்தி, உரை தடுமாறி, மெய்யால் வணங்கி, மனத்தால் நினைந்து நினைந்து உருகி, பலகாலும் உன் திரு மேனியைத் தியானித்து, தோத்தரித்து, பொன்னம்பலம் என்று பலகாற்கூறித் தளரும் உயிராகிய எனக்குத் திருவுள் ளம் இரங்கியருளுக என்றவாறு.

ஆண்டவன் அடிமையைக் காக்க என்றும் கடமைப்பட்ட வன் ஆதலால், நமக்கு அருள் வழங்காமலிரார் என்று தியா னித்தும், துதித்தும், உரை தடுமாறியும், பலகால் பணிந்தும், பொன்னம்பலம் பொன்னம்பலம் என்று போற்றியும் சோரு கின்ற அடியேற்கு இரங்கியருளத்தான் வேண்டும் என்பது கருத்து.

ஆண்டான் அடிமையின் தொடர்பு அநாதி சற்காரியமாத லின் நமக்கு என்றைக்கேனும் திருவருள் சுரப்பார் என்றிருந் தேன்; பஞ்சாக்கர செபஞ்செய்தேன்; சிவானுபவமுதிர்ந்தது. என்னநுபவம் கண்டேனும் இரங்கவேண்டும் என்றவாறும்.

நமக்கு நல்காதொழியான் என்று தன்மைப்பன்மைப் பெயரால் குறித்த அடிகள் அநுபவம் முதிரத் தன்வசமழிந்து 'உயிர்க்கு இரங்கியருளாய்' எனப் படர்க்கை வாய்பாட்டானும்,

உயிர் என்ற பொதுமையாலும் குறிப்பித்த சிவாநுபவத்தால் உயிர் தற்போதமிழந்து தான் இறைவன் உடைமை என்பதை உணர்ந்து உய்யும் உயர்ந்தநிலையுற்றமையை உணர்த்துதல் காண்க.

நல்குதல் - உயிர்களின் பரிபாகமும், தேவையும் தெரிந்து அருள்செய்தல். நல்குவான் என்னது நல்காதொழியான் என்றது நல்குதற்கண் உளதாம் உறுதியை உணர்த்திற்று.

நாமம்-பெயர். இறைவற்குரிய நாமங்களுள் பொதுமையி னிற்பன ஆயிரமும் சிறப்புப்பற்றியன சிலவும் உளவாதலை உணர்க. பொதுமையினிற்பன இறைவன் இயற்றிய வீரமும், அருளும்பற்றி உண்டான புகழால் அமைந்தவை. அவை சிவ சகஸ்ரநாமத்துட் காணப்படுவன.

சிறப்பின் நிகழ்வன சிவாய தேவாய, பவாய தேவாய, ருத்ராய தேவாய, மகதே தேவாய, தேவாய தேவாய, ஈசானய தேவாய முதலிய நாமங்களாம். இவற்றைச் சிவாகமத்துள் காண்க.

சிறப்பில் சிறப்பான திருநாமம் திருவைந்தெழுத்து. இதனை, "சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனியெம் மான்" என்னும் அப்பர்சுவாமிகள் திருமறையால் தெளிக.

நாமம் பிதற்றி என்பதற்குப் பசுபோதம் அழிந்தநிலையில் சிறப்பும், சிறப்பிற் சிறப்பும், பொதுவுமான நாமங்களை அவ ரவர்கள் அருளனுபவநிலைக்கு ஏற்பத் தற்போதங்கெட்டுச் சொல்லி என்பதாம். பிதற்றுதல் - பார்ப்பாரும் கேட்பாரும் பழிப்பார்களே என்ற உணர்வுமின்றி ஓதுகை.

மனத்தின்கண் நிறைந்து ஒளிரும் அன்பு கண்களில் நீர்ப் பெருக்காக வெளிப்படும் என்பதை உலகியலில்வைத்து வள்ளு வர் 'புன்கணீர் பூசல்தரும்' என்று ஓதுவதால் காண்க. ஈண்டும் இறைவனிடம் வைத்த் இடையீடில்லா அன்பால் கண் களில் மகிழ்ச்சிக் கண்ணீர் ததும்பியது என்பார் 'நயன நீர் மல்கா' என்றார்.

அன்பனுபவம் அகம் நிறைந்து கண்வழியாக வெளிப் பட்டு உரையளவில் வரும்போது அன்புசெய்யப்பட்டாரைக் குறித்து வாழ்த்தச் செய்யும் ஆதலால் 'வாழ்த்தா' என்றும், வாழ்த்தும்போது மனவிரைவு சொல்லினும் மிகுவதாலும் ஆனந்தமிகுதி உரை நரம்புகளை இயங்காது தடைப்படுத்து வதாலும் வாய் குழறுநிலையை 'வாய்குழறு' என்றும், இங்ஙனம்

உரையால் அன்பு மிகுதியை வெளிப்படுத்த இயலாதநிலையில் மெய்யினுலாவது கடமையைச் செய்வோமே என்ற எண்ணம் மேலிட அடியற்ற மரம்போலக் கீழே விழுந்து வணங்கநேருமாதலின் 'வணங்கா' என்றும், மெய்யும் காரியப்படாத உணர்ச்சி இழந்துபோக மனத்தால் நினைத்தலும் அதனுல் குழைதலும் விளைகின்றது என்பார் 'மனத்தால் நினைந்துருகி' என்றும், மனமும் நினைந்துருகும்நிலை மாறித் தன்மயமாம்நிலை கைவந்தது என்பார் 'உன்னைப் பாவித்து' என்றும், அங்ஙனம் பாவிக்கும்பொழுது பாவனையினின்று வழுவுதல் உண்டாக மீட்டும் மீட்டும் பாவிக்க நேருதலால் 'பல்கால் உன்னைப் பாவித்து' என்றும், இங்ஙனம் மனம் மொழி மெய்களான் பரவினேன் என்பார் 'பரவி' என்றும் கூறினுர்.

ஒல்கல் - சோருதல். ஈண்டு வாய் சோருதல். முற்கூறிய மெய்ப்பாடுகளினின்று தன்னுணர்வு மீளுகின்றபோது பொன்னம்பலம் பொன்னம்பலம் என்றே வாய் சோருகின்றேன் என்பார் 'பொன்னம்பலமென்றே ஒல்கா நிற்கும்' என்றருளினுர்.

என்னை என்னுது உயிர்க்கு எனத் தன்னைப் படர்க்கைபோல வைத்து அஃறிணை வாய்பாட்டால் கூறியது என்னை உடையானே என்றமைக்கேற்பச் சிவபோதமாகிய முனைப்படங்கியமையாலாம்.

இத்திருப்பாடலில் 'என்னை உடையானே' என்று அநாதியான சற்காரியமுண்மையை உணர்த்துதல் காண்க.

# 22. கோயிற்றிருப்பதிகம்

[அனுபோக இலக்கணம்]

இதுவும், அடிகள் தில்லையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, இறைவனருள் விரைந்து அடியாருடன் கூடிக் களிக்கவும் பேரின்பமடையவும் முடியாமல் இருப்பதைத் திருவுளங்கொண்டு, மந்திரத்தலையாகிய காரண பஞ்சாக்கரத்தைத் தியானிக்கும் முறையில் நின்று புகழ்ந்து பாடி உருகியும் காலதாமதமாக அதனால் வருந்தித் தில்லைக்கு வழியனுப்பிய திருப்பெருந்துறைநாதனை விளித்து விண்ணப்பிப்பதாக அருளிச்செய்தது.

இதில் சிவானுபூதி யியல்பொன்றுமே பொருளாகக் கூறப் பெறுதலின் கோயில்திருப்பதிகம் எனப் பெற்றது. இதன் கருத்து அனுபோக இலக்கணம்; அதாவது சிவானுபூதிக்கு அடையாளம் என்று பழைய குறிப்புக் கூறுகிறது.

சிவானுபூதி பெற்றவர்கள், சிவனை இன்பமாக - அன்பாக - குறைவிலா நிறைவாக - கனியாக - ஆனந்தமாக்கடலாகக் காண்பர்; யாது நீ பெற்றதொன்று என்று இறுமாப்பர்; யான் இதற்கு ஓர் கைம்மாறு இலன் என்று இரங்குவர் என அனுபூதிக்கடையாளம் கூறப்பெறுகின்றது. இதனை,

"செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்
　　திரிமலங்க ளறுத்தீசன் நேசரொடுஞ் செறிந்திட்டு
அங்கவர்தம் திருவேட மாலயங்க ளெல்லாம்
　　அரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி
எங்குமியாம் ஒருவர்க்கும் எளியோ மல்லோம்
　　யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்
திங்கள்முடி யாரடியா ரடியோம் என்று
　　திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே"

என்னும் சிவஞானசித்தி விருத்தத்தானும், பின்வரும் விளக்கங்களானும், திருத்தொண்டர் வரலாற்றானும் தெளிக.

பழையபுராணம் 'கோயில் திருப்பதிகம் பெருந்துறைத்தேசிகர் மோகம் இயம்பலாகும்' என்னும்.

பழையவுரை "கோயிற் றிருப்பதிகந் தானசை தறுக்கும், அனுபோகலக்கணம்" என்னும் அகத்தியச்சூத்திரமேற்கோளைத் தந்து,

முற்பதிகத்தில் அடியார் கொத்துடன் கூட்டுவதே முத்தியென அருளி, மனம் மகிழ்ந்து, இப்பதிகத்தில் ஐந்து மலமும் அருளாய் நின்ற முறைமையால் உடலும் உன் கோயிலான அநாதியின்பமே கரணமெனவும், எல்லாச் செயலும் சிவன்செயலெனவும், சிவன் குறைவிலா நிறைவு குணக்கடல் என்று அன்பான இன்பப்பெருக் கத்தை அளவளாவி அருளிய சிவஞான ஊதியம் இப்பதிகம் என்ற அனுபூதி உரைக்கின்றது.

புதிய உரைகாரர், அடிகள் திருப்பெருந்துறையானை அழைத்து முறையிடும் பத்துப் பாடல்களைக்கொண்டது என்றும், மூத்த திருப் பதிகத்தான் பொன்னம்பலக்கூத்தனை விளித்து விண்ணப்பிக்கவும் அவன் அருளாமையால் 'தில்லைக்கு வாவெனப் பணித்த திருப் பெருந்துறையானை விளித்து விண்ணப்பிக்கின்றார் என்றும், கோயிலென்பது திருப்பெருந்துறையையும், மூத்த கோயிலென்பது தில்லையையும் குறிப்பதாம் என்றும் உரைப்பர்.

கோயில் என்பது அடைமொழியின்றித் தில்லையை உணர்த்து தலே திருமுறைமரபு என்பதை முதன் மூன்று திருமுறைகளும், சைவநன்மரபும் தெற்றென விளக்கும். அன்றியும், மூத்த கோயில் என்ற வழக்கும் யாண்டுமில்லாமையும் இதற்குத் தனித்துணையாம். திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்தும், மூத்த என்பது பதிக அடையானதேயன்றித் திருவாலங்காடு என்னும் தலத்தை விசேடி யாமையும் அறிக. ஆகவே, இப்பதிகம் தில்லையிலிருந்து திருப் பெருந்துறையானை விளித்துச் செய்யப்பெற்றதே தெளிவாதல் காண்க.

386 மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
யுள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்க ளியாவையுங் கடந்த
இன்பமே யென்னுடை யன்பே. 1

இ - ள்: தேனின் தெளிவானவனே! சிவபெருமானே! திருப்பெருந்துறையில் எழுந்தருளிய சிவனே! அழிவற்ற பதவிகள் யாவற்றையும் கடந்து விளங்கும் இன்பவடிவான வனே! என்னுடைய அன்பே! என்னுடன் மாறுபட்டு நின்று மயக்கத்தை விளைவிக்கும் வஞ்சனை பொருந்திய ஐம்புலங் களின் வழிகளைத் தடுத்து, என்னுள் அமுதமாய்ச் சுரந்து

நின்று, விளங்குகின்ற மேலான ஒளியே! உள்ளபடி காணும் வண்ணம் எழுந்தருள்வாயாக என்றவாறு.

இறைவன் தமக்கு எவ்வெவ்வகையில் அனுபவிக்க எளிமையானுர் என்றும், அங்ஙனம் எளிமையான பெருமான் பதங்கள் யாவற்றையும் கடந்த ஒளியாக அருமையாகவும் உள்ளவர் என்றும் விண்ணப்பித்து விளித்து, யான் உள்ளபடிக் காணத் திருவுள்ளமிரங்கி நீ எழுந்தருள வேண்டுகிருர்.

தேறல் - தேன். தேன் புழு, மகரந்தம் முதலியவற்ருேடு கலந்திருப்பது. அதன் தெளிவு அக்குற்றங்களின்றித் தனித்த நிலை. இறைவன் அங்ஙனம் குற்றங்கள் சிறிதுமின்றி இனிமை பயந்து உயிர்க்கு உறுதி விளைவிப்பன் ஆதலின் தேறலின் தெளிவாகக் காண்கின்ருர். தேன், நாப்பொறியின் வாயிலாக இன்பம் பயப்பது. அதுவாகக்கண்ட அநுபவம் முதல்நிலை.

தேறலின் தெளிவாய் நுகர்ச்சிக்குரிய பொருளாக விளங்குபவர் சிவபரம்பொருளே; எமக்கு எளிதில் கிடைத்தருளும் வண்ணம் திருப்பெருந்துறையை இடமாகக்கொண்டு விளங்குவது என்பது அடுத்தடுத்து உணர்த்தப்பெறுகின்றன.

ஈறிலாப் பதங்கள் - என்றும் அழிவேயில்லாத ஸ்ரீகண்டருத்ரபதம், அனந்தேசுரபதம், சதாசிவபதம், ப்ரசிவபதம் ஆகிய நான்கு பதங்களும். சிவம் இந்த நான்கு பதங்களையும் கடந்த இன்பப் பொருளாக நுகர்ச்சிக்கண் விளங்குவதை 'ஈறிலாப் பதங்கள் யாவையுங்கடந்த இன்பமே' என்ற பகுதியால் குறிப்பித்தருளுகின்ருர்.

இன்பம் விளைவது அன்புசெய்யும் இடத்தில். அவ்வன்பே சிவமாதலின் 'என்னுடை அன்பே' என்ருர். இவ்வண்ணம் தேனுய் அரிய இன்பமாய் அன்பாய்விளங்கும் சிவனை விளித்து, தமக்கே உரிய சிறப்புக் காட்சியை வழங்கியருளவேண்டுவதே முதற்பகுதி.

இன்பம்போலக் காட்டித் துன்பம் செய்வதே புலன்களின் இயல்பு ஆதலின் 'வஞ்சப்புலன்' என்ருர். வஞ்சம் - வஞ்சனை. வஞ்சம் பிரபஞ்சம் என்பதன் திரிபாகக்கொண்டு பிரபஞ்ச வாசனையையே பற்றிநிற்கின்ற புலன் எனலுமாம். புலன் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமாகிய விஷயங்கள். அவை வருகின்ற வழி - கண் காது மூக்கு நாக்கு உடலாகிற நெறிகள். அவற்றை அடைத்தலாவது மனம் பொறிவழியாகப் புலன்களிற் சென்று பற்ருதவண்ணம் தடுத்து, அகமார்க்கமாகவே திருப்பி

ஆனந்தப் பொருளாகிய சிவத்தினிடமே நிற்கச் செய்தல். அப்படி நிலைக்கச் செய்தபோது உச்சந்தலை முதல் உள்ளங் கால் வரை அமுதம் பெருகியதுபோல இன்பநிலை எய்துமாதலின் 'என்னுள் அமுதே ஊறிநின்று' என்ற அனுபவமருளப் பெற்றது. அமுதம் ஊறி, ஆனந்தம் வெளிப்பட்டபோது இருந்தநிலையில் எல்லாம் ஒருசேரப் புலனும். அங்ஙனம் புலப் படுத்தும் உபகாரம் சிவச்சோதியால் விளைவதாம். அச்சோதி எல்லாச் சோதியினும் மேலானது என்பார் 'என்னுள் எழுபரஞ் சோதி' என்றார்.

உள்ளவா காணப்படுதல் - பொறிபுலன்களாற் காணப் பெறும் சுட்டறிவுபோலாது, சிவஞானம் ஒன்றனே அறியப் பெறும் ஆனந்தமயமாகக் காணப்படுதல். சிலர் கனவிற்காணப் படுகிற நீ நனவிலும் காணப்படுதல்வேண்டும் என உரைப்பர். கனவும் நனவும் துரியங்கடந்த சிவானுபவிகட்குக் கீழ்நிலைகளாதலின் சிவஞானியாகிய அடிகள் அதனை விரும்பார் என்க. அன்றியும் அக்கருத்து அநுபோக இலக்கணமாகாமையும் தெளிக.

தேன் இன்பம் அன்பு முதலியவாகத் திருப்பெருந்துறைச் சிவபெருமான் அநுபவத்திற்கு இலக்காதலை விளக்கி, மேலும் சுவானுபவமாகிய ஆனந்தத்திலழுந்தியிருக்கும் சிவபோகத்தை விரும்புதலின் இத்திருப்பாடல் அநுபோகவிலக்கணம் அறி வித்தவாறும்.

387 அன்பினு லடியேன் ஆவியோ டாக்கை
ஆனந்த மாய்க்கசிந் துருக
என்பர மல்லா இன்னருள் தந்தாய்
யானிதற் கிலனொர்கைம் மாறு
முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முதலே
தென்பெருந் துறையாய் சிவபெரு மானே
சீருடைச் சிவபுரத் தரைசே. 2

இ - ள்: எல்லாவற்றிற்கும் முன்னுமாய், பின்னுமாய், முழுதுமாய் வியாபித்து விளங்கும் முத்தனே! அழிவற்ற முதற்பொருளே! அழகிய திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருப்பவனே! சிவபெருமானே! மிக்க புகழையுடைய சிவ புரத்திற்கு அரசனே! தேவரீர்மீது செலுத்திய அன்பினால் அடியேனுடைய உயிரும் உடலும் ஆனந்தமாய்க் கசிந்து உருகும்படி என்னளவில் அமையாத இனியபேரருளைப் புரிந்தாய்;

இந்தப் பேருபகாரத்திற்கு அடியேன் செய்யும கைம்மாறு ஒன்றிலேன் என்றவாறு.

காலாதீத முத்தனுகிய முதல்வா! உன்மீது அன்புசெலுத்தினேன்; அதனுல் அடியேனுடைய உயிர்மட்டுமல்ல, உடலும் இன்பவடிவாயிற்று! என்ன சொல்வேன்! என் நிலைக்கு மீறிய அருளைப் புரிந்தாய்! இதற்கு நான் என்ன பிரதியுபகாரம் செய்வேன் என்பது கருத்து.

முத்தன் - முக்தன் என்பதன் வடமொழி. விடுபட்டவன் என்பது பொருள். காலம் என்ற தத்துவம் தோன்றுதற்கு முன்பும், காலம் தத்தம்காரணத்துள் ஒடுங்கிநின்றதன்பின்பும், இடைப்பட்ட நிகழ்காலத்தும் விளங்குபவன். வியாபகமூர்த்தி இறைவன் ஒருவனே என்பார் 'முன்புமாய்ப்பின்பு முழுதுமாய்ப் பரந்தமுத்தனே' என விளித்தார். இங்ஙனம் முதற்கண் விளிப்பதன் பயன் தனக்குச்செய்த உதவியை வியத்தற்கு என்க.

வியாபித்து நிற்றல் இடமுழுதும் வியாபித்தலும், கால முழுதும் வியாபித்தலும் என இருவகையுண்டு. மணியின்கண் ஒளி என்பது இடமுழுதும் வியாபித்தல். கடவுள் என்றும் உள்ளார் என்பது காலமுழுதும் வியாபித்தல். ஈண்டு 'முன்புமாய்...முத்தனே' என்றது காலமுழுதும் வியாபித்தும் கடந்தும் நிற்குநிலை.

முடிவு - இறுதியான எல்லை. முதல் - தோற்றத்திற்கு அடியானது. முதலிருப்பின் முடிவும் உண்டு. இறைவன் முடிவற்ற முதலாக உள்ளவன் என்பதாம்.

தென் - அழகு. தெற்கு என்னும் திசைப்பெயரின் விகாரமும் ஆம். சீர் - புகழ். சீருடைச் சிவபுரம் என்றது சிவபுரமாகிய சீகைலாயத்திற்கு நிலைபேறும், ஞானமும், ஒளியும், இன்பும் இயற்கையே அமைந்தமையின் என்க.

அன்பு - உயிர்க்குணம். அன்புடைய உயிர் இன்புறுதலும், அதனுற் கசிதலும், உருகுதலும் இயற்கை. ஆக்கை உருகிற்று எனல் பொருந்துமாறு என்னை எனின், உயிர்க்கசிவை உயிர் உடலோடு கூடிய காலத்தன்றிப் பிறரால் அறியவொண்ணுமையின் உயிரோடு கூடிய உடல் இன்பத்தைத் துய்த்துக் கசிந்து உருக என்றவாறும்.

உயிர் இத்துணையின்பம் ஏற்குந்தரத்தது என்று பரிபாகம் அறிந்து அருள்வதே இறையியல்பாயினும், நீ அடியேன்மீது

வைத்த அளவில் கருணையால் பேரருள் புரிந்தனை என்று வியப்பார் 'என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்' என்றார்.

பெருங்கருணையும் பேராற்றலுமுடைய இறைவன் செய்யுங் கருணைக்குச் சிற்றறிவும் சிறுதொழிலுமுடையவர்கள் செய்யும் பிரதியுபகாரம் ஒன்றுமில்லை; நன்றியறிதலைத்தவிர என்பார் 'யான் இதற்கு ஓர் கைம்மாறு இலன்' என்றார்.

இப்பாடற்கண் பழையவுரை, 'முன்புமாய்' என்பதற்கு யாவர்க்குமுன் அநாதியான பதிமுதுநிலையே எனவும், 'பின்புமாய்' என்பதற்கு யாவர்க்குங்கீழ் என்னை ஆள்வோனே எனவும் 'பரந்தமுத்தனே' என்பதற்குச் சர்வவியாபக பரமுத்த சிவனே எனவும், 'முடிவிலா முதலே' என்பதற்குக் காலாதீதக்கடவுளே எனவும் உரைக்கும்.

இவ்வண்ணம் ஆனந்தமாதலும், கசிதலும், உருகுதலும் அதனாற் செயலறுதலுமாதியாய அநுபவ இயல்புகளை அறிவித்தலின் இத்திருப்பாடல் அநுபோக இலக்கணமாதல் காண்க.

388 அரைசனே யன்பர்க் கடியனே னுடைய
அப்பனே யாவியோ டாக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறையுறை சிவனே
உரையுணர் விறந்துநின் றுணர்வதோர் உணர்வே
யானுன்னை யுரைக்குமா றுணர்த்தே. 3

இ-ள்: அன்பர்கட்கு அரசனே! அடிமையாகிய என்னுடைய தந்தையே! உயிரோடு கூடிய உடல் மயிர்க்கால்கடோறும் நெகிழ, என் உயிருள் புகுந்து அதுவே தமக்கு ஆலயமாக நிலைத்துநின்று என்னையுருகச்செய்து, பொய்யான அறியாமையிருளை அகற்றிய உண்மையே வடிவான சோதியே! அலை மோதாமல் நிலைபெற்ற அமுதமாகிய தெளிந்த கடலே! திருப்பெருந்துறையுறை சிவபெருமானே! அடியேனுடைய உரையையும், உரையைத் தோற்றுவிக்கும் உணர்வையும் கடந்து விளங்குகின்றதாகிய ஒப்பற்ற ஞானமே! அடியேன் உன்னைப் புகழ்ந்து உரைக்கும்வண்ணம் உணர்த்துவாயாக என்றவாறு.

அடியேனுடைய வாக்கு மனாதீதமான ஒளியே! அலையில்லாத அமுதக்கடலே! அஞ்ஞானத்தையகற்றிய ஞான ஒளியே!

அன்பர்க்கரசே! அடியேனுக்குத் தந்தையே! யான் உன்னைப் புகழ்ந்துரைக்குமாறு அறியேன்; அதனை உணர்த்தியருள்க என்பது கருத்து.

குடிகளுக்கு அரசன் உற்றகாலத்துதவுவதுபோல அன்பர்களுக்கு ஆவன அறிந்து உதவலின் 'அன்பர்க்கரசே' என்றார்.

அடியேன் அறியாமையால் சிறுபிழை பல செய்வேனுமினும் தந்தைபோலப் பொறுத்து, வளாறுகொண்டு ஒறுத்துத் திருத்தி இன்பமுதவவேண்டும் என்பார் 'அடியனேனுடைய அப்பனே' என்றார்

புரை - பொள்ளல். புரை புரை - பொள்ளல் தோறும். உடம்பின்கண் உள்ள புரை - மயிர்க்கால்தோறும் வேர்வை வெளிப்படும் பொள்ளல். இறைவனுடைய மேலான உதவிகளைச் சிந்தித்துக் கனிய வல்லது உயிரும் அன்று, உடலும் அன்று. உயிர் சித்தாயினும் கருவியின்றிக் கனியாது. உடல் சடமாதலின் இறையுதவியை எண்ணுந்தகுதியதன்று. ஆகவே, உயிரோடு கூடிய உடலே கனியவல்லது என்பார் 'ஆவியோடாக்கை புரைபுரை கனிய' என்றார். உடலினும் உயிருக்கே உணரும்சிறப்பு உண்மையின் ஒடு உயர்பின் வழிப்புணர்த்துக் கூறினார். புரை புரை கனிய - உள் துளைதோறும் கனிய என்று உரைப்பினுமாம்.

புகுந்து என்றதற்கேற்ப உயிருள் உயிருக்கு உயிராகப் புகுந்து எனச் சிலசொல் வருவித்து உரைக்க. நின்று - அவ்வுயிரே சிவமாகிய தமக்கு நிலையான உறையுளாக நிலைபெற்று நின்றென்க. உருக்கி - நெஞ்சினை நீராக உருக்கி. இவ்வண்ணம் இறைவன் உயிருக்கு உயிராகக் கலக்க மனம் உருகும். உருக அறியாமை நீங்கும். ஆன்மாவை மறைத்துநிற்கும் மல மறைப்பு அகலும் ஆதலின் 'பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே' என்றருளினார். இருள் சுடர்புகக் கழிவதானும், பொய்யானதும் நிலையற்றதுமான இன்பத்திற் செலுத்துதலானும் அதனைப் பொய் இருள் என்றார். கடிந்த-திரும்பவாராமலேயே அகற்றிய. விளக்குப் புக இருள் மாய்வதுபோலன்றி, ஞானம் நிலைபெற அஞ்ஞானம் நிலையாகவே நீங்கப்பெறுதல்.

கடல் என்றும் அலை ஓயாதது. சிவபோகத்தில் அமைதியே அன்றி அலையின்றாதலின் இறைவனை அலைமோதாத அமுதக் கடலாக உருவகித்தார். உரையுணர்வு: உம்மைத்தொகை. உரை - வாக்கு. உணர்வு - உணருந்தன்மைத்தாகிய மனம்.

ஆகவே, இரண்டையும் கடந்த என்பதாம். "உரை மனங் கடந்துநின்ற ஒருவன்" என்னும் திருமுறைவழக்கும் தெளிக. உரையுணர்வு என்பதனை ஒருசொல்லாகக்கொண்டு, ஆகமப் பிரமாணத்தால் விளையும் அறிவு என்லுமாம். அது பாசஞான மாதலின் அதனையுங்கடந்து நிற்பதே இறையியல்பு என்க. திருவடிஞானத்தால் சிவன்றனைத்தரிசிக்கலாம் ஆதலின் உரை யுணர்விறந்து நின்று உணர்வதோர் உணர்வாகக் கூறினர். உணர்வு - அநாதி சுத்த சித்து என்க. உணர்த்திலன்றி உணராவுளங்களாதலின் நீ உணர்த்திலன்றி யானே அறிந் துரைக்கும் ஆற்றல் சிறிதும் இலேன் ஆகவே 'உணருமாறு உணரே' என வேண்டிக்கொண்டதாம்

அன்பர்க்கும் அடியனேனுக்கும் உடைய அப்பனே என்று கூட்டி அன்புடைய அடியார்கட்கும், அன்றியும் அடியேனுக்கும் உடைய தகப்பனே என்றுரைக்கும் பழையவுரை. அன்பர்க்கு அடியனேனுடைய என ஒரு தொடராக்கி அன்பர்கட்கு அடியே னாகிய என்னுடைய எனலுமாம்.

மற்றும் இதற்கு அடியனேனைப் பொருளாகவுடைய அப் பனே! என்றும், புரை - இலேசு எனப்பொருள்கொண்டு உடம்பு இலேசுபட்டுக் கட்டுவிட்டு எனவும், பொய்யிருள் என்பதனை உம் மைத் தொகையாகக்கொண்டு பொய்யாகிய உடற்கட்டினையும் இருளாகிய அழுக்கினையும் நீக்கிய என்றும், உரை உணர்வு இறந்து என்பதற்குச் சொல்லையும் சொல்லாற் சுட்டப்பட்டுண ரும் உணர்வினையும் கடந்து எனவும், யான் உன்னை உரைக்கு மாறு என்பதற்கு யான் உன்னை இத்திருமேனிகொண்டு என் முன்னே வந்தருள்க என்று சொல்லும்வண்ணம் என்றும் உரை காண்பர் புத்துரைகாரர். இதனுள் மரபுவழிவாராத புதுமைப் பொருள் இனிமையூட்டுவதாயினும், சிவாகமநூலோடு முரணு தல்காண்க. திருமுறையாட்சிகட்கு மாற்றமுண்மையும் உணர்க.

அலைமோதா அமுதக்கடல், உரை மனம்கடந்து நிற்கும் உணர்வு எனக் கடலும் கடவுட்காட்சியும், ஆவியோடாக்கை புரைபுரை கனிதல், பொய்யிருள்கடிதல் முதலாகிய அநுபவமும் தோன்ற விண்ணப்பித்தலின் இத்திருப்பாடல் அநுபோக இலக்கணமறிவிப்பதாதல் காண்க.

389 உணர்ந்தமா முனிவர் உம்பரோ டொழிந்தார்
உணர்வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி யெல்லா வுயிர்கட்கும் உயிரே
எனைப்பிறப் பறுக்குமெம் மருந்தே

திணிந்ததோர் இருளில் தெளிந்த தூ வெளியே
திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கடாம் இல்லா இன்பமே யுன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே. 4

இ - ள்: இறைவனியல்பையுணர்ந்த பெரிய முனிவர்கள் தேவர்கள் ஏனையோர் இவர்களுடைய உணர்வுக்கும் உணர முடியாத பொருளே! ஒப்பில்லாதவனே! எல்லாவுயிர்கட்கும் உயிராக உள்ளவனே! என் பிறப்பை நீக்கி ஆட்கொள்ளும் எமது மருந்தே! மிகச்செறிவான இருளில் தெளிந்து காணப் பெறும் தூய்மையான சிதாகாசமே! திருப்பெருந்துறையுறை சிவனே! குணங்களில்லாத இன்பமே! உன்னையடைந்த எனக்கு இனி என்ன குறை? என்றவாறு.

அரியவற்றுள் அரிதாய், எளியவற்றுள் எளிதாய் உள்ள இன்பமயமான உன்னையடைந்த எனக்கு என்னகுறை உளது; ஒருகுறையும் இன்று என்பது கருத்து.

உணர்ந்த மாமுனிவர் - தவத்தானும், திருவருட்சார்பானும் இறையியல்பையுணர்ந்த பெரியமுனிவர்கள். அவர்களுணர்வு - சிவஞானம். அதனலும் அறியப்படாத அருமையானபொருள் சிவம் என்றது. உணர்ந்த அவர்கள் உணர்வு காண்பானும் காட்சியும் காணப்படுபொருளுமாகிய வேற்றுமையற்று அது அதுவாகவே தோய்ந்து நிற்றலின் 'தெரிவரும் பொருளே' என்றார்.

திருக்கோவையாரில் வரும் 'உணர்ந்தார்க்கு உணர்வரியோன்' என்றதையும், அதற்குப் பேராசிரியர் ஒருமுறையுணர்ந்தார்க்கு உணர்தற்கேதுவாகிய கருவிகரணங்கள் மடங்குதலின் உணர்ந்தார்க்கு உணர்வரியோன் என்றார் என்ற விளக்கத்தையும், முத்தி நிச்சயப் பேருரையில், இறைவன் கருவிகரணங்களைக்கொண்டு அறியப்படாதவனகவே சிவஞானத்தான் உணர்வார்க்கு உணர்ச்சிமிகத் தன்வசமாய் போதம் கெடுதலின் இங்ஙனம் கூறினர் என்ற விளக்கமும் ஈண்டுச் சிந்தித்தற்குரியன.

உணர்ந்த மாமுனிவர் என்பதற்குச் சர்வகலைகளையும் ஓதி உணர்ந்த முனிவர் என்பாரும், நிலையாமையை உணர்ந்து பெருமை வாய்ந்த முனிவர்கள் என்பாரும் ஆகப் பலருளர். அத்தகைய முனிவர்களால் உணரப்படாமை இயல்பாதலின் அவர்களை விதந்தோதவேண்டிய இன்றியமையாமை ஓர்க.

உம்பர் - கன்மபூமியிற்செய்த பசுபுண்ணிய விசேடத்தால் மால்முதலிய பிறவிகளிற்றேன்றிப் பதவியிலிருப்போர். ஒழிந் தோர் - ஏனைய தேவர்களும், மனிதர்களும். இவர்கள் மும்மல முடைய சகலான்மாக்கள் ஆதலின் இவர்களுடைய சுட்டறிவால் இறைவன் அறிதற்கரியன் என்க.

இணங்குதல் - வண்ணம் வடிவு அளவு சுவை இவற்ருல் ஒன்றையொன்று ஒத்திருத்தல். எவ்வாற்ருனும் ஒத்தபொருள் ஒன்றும் இல்லையாதலின் இறைவனை 'இணங்கிலி' என்றதாம். இலி - இல்லாதவன்.

எல்லா உயிர்கட்கும் உயிரே என்றது, புல்முதல் தேவரீருன எல்லாவுயிர்களிடத்தும் அவரவர் பரிபாக நிலைக்கு ஏற்ப உயி ருக்குயிராகக் கலந்து ஆட்கொண்டருளும் கருணைத்திறம் கரு தியவாரும்.

இறைவனை மருந்தாக உருவகித்தலின் பிறப்பு நோயாகக் கொள்ளக்கிடத்தல் காண்க. ஆகவே பிறவியாகிய நோயை நீக்கும் மருந்துபோல்பவனே என்பதாம். எனைப்பிறப்பு என் பதனை வேற்றுமை மயக்கமாகக்கொண்டு எனது பிறப்பை எனப் பொருள்கொள்க. மீட்டும் எம்மருந்தே என்றது. மருந்து அனைவர்க்கும் ஒரே வகையான நன்மைபயக்கும் என்று கருத இயலாதது; அவரவர் வாத பித்த சிலேட்டும நிலைக்கும், உடல் உணவு சூழல் இவற்றின் நிலைக்கும் ஏற்ப நன்மை பயப்பது. அதுபோலப் பெருமானும் பரிபாகநிலைக்கு ஏற்ப அருள்செய் தலின் எமக்குத் தகுந்த மருந்தே என்பார் 'எம் மருந்தே' என்ருர்.

திணிந்தது ஓர் இருள் - செறிந்த ஒப்பற்ற இருள். கும் மிருட்டு பொருள் புலப்படாத வண்ணம் செய்வதுபோல ஆணவம் உயிரின் அறிவை மறைத்து அறியாமையை விளைப் பதாலும், ஒன்றதாய் அநேக சத்தி உடையதாயிருத்தலாலும் இருள் என உருவகிக்கப்பட்டது.

மகாகேவல நிலையில் ஆணவ இருளில் அழுந்தி யான் செயலற்றுக் கிடந்தபொழுது அறிவைத்தரத் திருவுள்ளங் கொண்டு வெளிப்பட்ட, இயல்பாகவே தெளிந்த சிதாகாசமே என்பதாம். ஆன்மாக்கள் மகாகேவல நிலையிற் கிடக்கின்ற போது ஆன்ம அறிவைக் காரியப்படுத்தச் சிதாகாச வடிவாகச் சிவம் எழுந்தருளி உபகரிப்பதை உணர்த்தும்பகுதி 'திணிந்த தோர் இருளில் தெளிந்த தூவெளியே' என்பது.

பின்னுரைகாரர் ஒருவர், செறிந்த ஒப்பற்ற அறியாமையாகிய இருளிலே தெளிவடைந்த வழியாக முன்னர்ச்செல்வோனே என உரைதந்து, வெளி - வழி, தூ - பற்றுக்கோடு எனக்குறிப்பும் தருவர்.

'இருட்கும் ஒளிக்கும் இடமொன்றே' என்னும் நுணுக்கத்தை அடிகளார் விரித்துணர்த்துகின்றார் என்ற மரபினின்றும் புத்துரைகாணும் முயற்சியே இதன் அடிப்படையென ஒழிக.

உணர்ந்தார்க்கும் உணராதார்க்கும் அரிய பொருளாம் அருமையையும், எல்லாவுயிர்கட்கும் உயிராய் இருக்கும் பெருமையையும், இருளிற்றெளிந்த வெளியாய்த் திருப்பெருந்துறையில் எழுந்தருளி இருப்பதால் ஆம் எளிமையையும் முறையே உணர்த்தும் அநுபோகம் காண்க.

390 *குறைவிலா நிறைவே கோதிலா அமுதே*
*ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே*
*மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்*
*மனத்திடை மன்னிய மன்னே*
*சிறைபெறு நீர்போற் சிந்தைவாய்ப் பாயுந்*
*திருப்பெருந் துறையுறை சிவனே*
*இறைவனே நீயென் னுடலிடங் கொண்டாய்*
*இனியுன்னை யென்னிரக் கேனே.* 5

இ - ள்: என்றும் - எங்கும் நிறைந்த பொருளே! குற்றமற்ற அமுதமே! இறுதியில்லாத வளமான ஒளிமலையே! வேதங்களுமாகி, வேதத்தில் விளம்பப்பெறும் பொருளுமாகி, எழுந்தருளிவந்து அடியேனுடைய மனத்தில் எழுந்தருளிய அரசே! அணையற்ற வெள்ளம்போல என்மனப்புலத்தில் வந்து பாய்கின்ற திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள சிவனே! இறைவனே! நீ அடியேனுடைய தேகத்தைத் திருக்கோயிலாகக்கொண்டு எழுந்தருளினாய்; ஆகவே, இனி யான் உன்னை என்ன யாசிப்பேன் என்றவாறு.

எல்லாம் நிறைந்த தேவரீர் என்னுடலையே என்றும்வசிக்குமில்லமாகக் கொண்டதால் யான் குறையிரக்க வேண்டுவது ஒன்றுமின்று; எல்லாம் தேவரீர் திருவுள்ளம் அறியும் என்றவாறும்.

நிறைவில், குடம் நிறைந்தாற்போலக் குறைவாக இருந்து நிறைந்ததும், சூரியன் ஒளிநிறைந்தான் என்புழிப்போல இயற்கையே நிறைதலும் என இருவகையுண்டு. இறைவன் என்றும்

எங்கும் குறைவே இல்லாத இயல்பாகவே பூரணமானவன் ஆதலால் குறைவிலா நிறைவே என விளிக்கின்றார். கந்தர்கலி வெண்பாவிலும் 'எஞ்சாத பூரணம்' என்றதும் இப்பொருட்டு.

கோது - குற்றம். நஞ்சொடு பிறத்தலும், உண்டார்க்கு உண்மைஞானம் உண்டாகாவண்ணம் தடைசெய்தலும் போக புத்தியைமிகுவித்தலுமாகிய குற்றங்கள். அவையில்லாத அமுது போல்வான் சிவன் என்பார், 'கோதிலா அமுதே' என்றார் எனக்கொள்க.

சுடர்க்குன்று - ஒளிமயமான அக்கினிமலை. கொழுஞ்சுடர் - புயல்முதலானவற்றிற்கும் அழியாத வளமிக்க சுடர். ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்று - அழிவேயில்லாத வளமான மாயேய மல்லாத தீமலையாக இறைவனைக் குறித்தார் என்பது.

மக்களுக்கு ஒழுக்கத்தையும், இறையுணர்ச்சியையும், புண்ணிய பாவக் கொள்கைகளையும், வீடு சுவர்க்கம் முதலான இன்ப நிலைகளையும் விளக்கிக் கூறுவதும், அவற்றிற்கான நெறிகளை விதிப்பதும் வேதம். வேதம் ஞானவடிவம். அதுவே இறைவனாகக் கூறப்படுகின்றது.

மறையின் பொருள் - வேதம் விளக்கும் பொருள். மறைக்கும் அதன்பொருளுக்கும் உள்ள சம்பந்தம் சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள சம்பந்தம். அது நித்தியமானது. இறைவனும் சொல்லும் பொருளும் போல விளங்கி உயிர்களுக்கு உணர்வை நல்குதலின் 'மறையின்பொருளுமாய்' என்றார். மன்- அரசன்.

சிறை-கரை. அணையுமாம். சிறைபெறுநீர் எங்கெல்லாம் பள்ளம் உண்டோ அங்கெல்லாம் விரைந்து பாயும். அது போலத் திருப்பெருந்துறையுறை சிவபெருமான் அன்பு தோன்றுமிடங்களிலெல்லாம் பாய்ந்து தண்ணளி செய்கின்றமையைக் குறித்தார். சிந்தை வயலாகக்கொள்க, சிவபோகம் விளைதற்கு இடம் அதுவாதலின். சிறைபொரு எனப்பாடங் கொண்டு சிறைப்பட்டிருக்க விரும்பாத நீர் என்பாரும் உளர்.

இறைவன் - எல்லாவுயிர்களிலும் தங்குதலையுடையவன். ஊனுடம்பு ஆலயமாதலின் 'உடலிடங்கொண்டாய்' என்றார். 'காயமே கோயிலாக' என்பது அப்பர் வாக்கு. வீட்டின் பராமரிப்புமுழுதும் உடையவன் கடமையாக முடிதல்போல, உடலுறும் இன்பத்துன்பங்கள் அனைத்தும் உனக்கே உரியவாயின; ஆதலால் எனக்கு ஒரு குறையுமில்லை; இரக்கப்படுவானாகிய நீ

என்னில் வேருக இருந்தாலன்றே எனக்கு இதுவேண்டும் இது வேண்டாம் என்று தெரிவிக்கவேண்டும்; நீயே என்னுடலிடங் கொண்ட பிறகு யான் இரக்கவேண்டுவது ஒன்றும் இன்று என்றவாறு.

'மனத்திடை மன்னியமன்' 'உடலிடங்கொண்டாய்' என்ப வற்ருல் சிவானுபவம் குறிக்கப்பெறுதலின் அநுபோக இலக் கணம் அறிவித்தவாறு.

391 *இரந்திரந் துருக என்மனத் துள்ளே*
*எழுகின்ற சோதியே யிமையோர்*
*சிரந்தனிற் பொலியும் கமலச்சே வடியாய்*
*திருப்பெருந் துறையுறை சிவனே*
*நிரந்தவா காய நீர்நிலந் தீகால்*
*ஆயவை அல்லையா யாங்கே*
*கரந்ததோ ருருவே களித்தனன் உன்னைக்*
*கண்ணுறக் கண்டுகொண் டின்றே.* 6

இ - ள்: பலகாலும் இரந்து உருக என் மனத்துள்ளே தோன்றுகின்ற ஒளிப்பிழம்பே! தேவர்கள் சிரத்தின்மீது விளங்குகின்ற திருவடித்தாமரையை உடையவனே! திருப் பெருந்துறையுறை சிவனே! எங்கும் பரவியுள்ள விண்ணும், நீர், நிலம், தீ, காற்றும் ஆகிய ஐம்பூதங்களுமாகி, அவையல் லாதவனுமாகி, அவ்வப்பூதங்களிலேயே மறைந்த உருவான வனே! கண்கள் பொருந்த உன்னை இன்று கண்டுகொண்டேன்; களித்தேன் என்றவாறு.

எல்லாமாய்-அல்லவுமாய் - அகத்தெழு சோதியாய்-சிரத்து விளங்கும் செங்கமலப் பொற்பாதமுடைய உன்னை இன்று கண்ணாரக் கண்டு களித்தேன் என்பது கருத்து.

எறும்பு ஊரக் கல்லும் குழிவதுபோல, உன்னைக் காண விரும்பிப் பல்முறை திருமுன்னர் கண்களில் நீர்வார நின்று விண்ணப்பித்தேன்; அதன் பயனாகத் தேவரீர் திருவுள்ளம் இரங்கி என் மனத்துள் ஞானச்சோதியாக எழுந்தருளினீர்; அதுவே அடியேன் நிலைக்கு விஞ்சிய சிறந்த திருவருளாம் என்பதை 'இரந்திரந்து உருக என் மனத்துள்ளே எழுகின்ற சோதியே' என்ற விளியால் விளக்கியவாறு.

இமையோர் - ஒளி படைத்த மேனியையுடைய திருமால் முதலான தேவர்கள். அவர்கள் வந்து வணங்கும்போது

இறைவன் திருவடி அவர்கள் தலைமீது விளங்குதலின் 'சிரந் தனில் பொலியும் கமலச்சேவடியாய்' என்றார். அடிகளார்க்கு அகத்தெழு சோதியான இறைவன் தேவர்கட்குச் சிவஞானம் இன்மையால், வழிபடுபொருளாகப் புறத்தே திருவடிசூட்டும் தெய்வமாகக் காட்சி தருகின்றார் என்பதால் அவர்கட்குப் பரி பாகச் சிறப்பின்மை குறிக்கப்பெற்றதாம்.

விண், ஏனைய பூதங்கள் இருத்தற்கு இடந்தந்து வியாபக மாய் நிற்றலின் 'நிரந்த ஆகாயம்' எனப்பட்டது. ஆயவையாய் அல்லவாயெனக் கூட்டுக. பூதங்களாயும், அவையல்லவுமாயும் அவற்றுள் மறைந்து விளங்கும் ஒப்பற்ற உருவே என்றார், இறைவன் அங்கிங்கெனுதபடி எங்கும் நீக்கமற நிறைந்த பரிபூ ரணனாதலின். இன்று உன்னைக் கண்ணுறக் கண்டுகொண்டு களித்தனன் - குருமேனி தாங்கிவந்த உன்னை அன்று கண்டு உய்ந்ததுபோல இன்று கண்ணுறக்கண்டு, அவ்வுரு மறவாதே என்னுள்ளத்திற் பதியக்கொண்டு, அதனால் இடையீடில்லாமற் களித்தேன் என்பதாம்.

கண் என்பதற்கு ஞானம் எனப்பொருள்கொண்டு ஞானக் கண்ணாற்கண்டு களித்தேன் எனலுமாம்.

இனி மனத்துள்ளே எழுகின்ற சோதி என்பதற்கு, குணத் துட்பட்ட திருமேனியைக் காண விரும்பிப் பலகாலும் இரந் துருகும் என் மனத்துள் எழுகின்ற ஒளியே எனப் பொருள் கண்டு இப்பாடல் கருத்தாக, குணத்துட்பட்ட திருமேனியைக் காண விரும்பிய எனக்குக் குணங்கடந்த பேருருவம் கண்டு களிக்கும் வாய்ப்புக் கிடைத்ததெனக் கருத்துரைப்பாரும் உளர்.

உன்னைக்கண்டு களித்தேன் என்பதால் அநுபோக இலக் கணம் அறிவித்ததாம்.

*392* இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே. 7

இ - ள் : எல்லாப் பொருள்களையும், சிறிது சிறிதாகக் கடந்து நீங்கிநின்ற ஆன்ம அறிவு சென்று சென்று அணு

அணுவாகத் தேய்ந்து தேய்ந்து, முடிவில் பரிபூரண ஏகமாகி நிற்கும் திருப்பெருந்துறைக்கண் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! இன்று அடியேற்கு அருள்சுரந்து, என் அகவிருளாகிய அறியாமையைப் போக்கி, என் உயிரினிடமாகத் தோன்றும் சூரியனைப்போன்று ஒளிமயமாக நின்ற நின்தன்மையால் என் நினைப்பு அற்றுப்போக, உன்னையல்லாமல் வேறு பொருளின்மையை அறிந்தேன்; அதன்பயன், சுட்டறிவாற் காணப்படுகின்ற ஒருபொருளும் நீயல்லை; உன்னையன்றி ஒரு பொருளுமில்லை; இவ்வண்ணம் கலந்து கரந்து நிற்கின்ற உன்னை அறியவல்லார் யார்? என்றவாறு.

ஆன்ம அறிவு போய்ப்போய் அணுவாகித் தேய்ந்து தேய்ந்து ஒன்றுதலால் ஆம் சிவனே! என் அறியாமையைப் போக்கி, இன்று எனக்கு அருள் சுரந்து, என் உள்ளத்தில் உதிக்கின்ற ஞானசூரியனாக நீ நின்ற தன்மையால் எனது தற்போதம் அழிய அதனால் என் நினைப்பகன்றுபோக, சிவபரம் பொருளாகிய உன்னையன்றி வேறுபொருள் இல்லாமையை நினைந்தேன்; பிரபஞ்சத்தில் சுட்டறிவால் உணரப்படும் பொருள்கள் ஒன்று நீ அல்லை, அப்பொருள்கள் எல்லாவற்றிலும் உயிருக்குயிராகக் கலந்திருந்து நீ இயக்குதலின் உன்னையன்றி ஒருபொருளும் இல்லை; உன்னை உள்ளவாறு உணரவல்லார் யார்? என்பது கருத்து.

சிவனே! இன்று அருளி, கடிந்து, ஞாயிறே போன்று நின்ற நின் தன்மை(யால்) நினைப்பற, நீயலால் பிறிதுமற்றின்மை நினைந்தேன்; ஒன்றும் நீயல்லை; உன்னை மற்றில்லை; உன்னை அறியகிற்பார் யார்? எனக் கூட்டுக. உனை என்பதை உனையன்றி, உனையறியகிற்பார் என ஈரிடத்தும் இயைக்க.

சென்ற திருப்பாட்டில் கண்ணுறக்கண்டுகொண்டு இன்று களித்தனன் என்ற அனுபோகம் அருளிய அடிகளார், இந்தத் திருப்பாட்டில் அதனையே அனுவதித்து இன்றெனக்கு அருளி என்கின்றவர்கள் முதற்றிருப்பாட்டில் என் மனத்துள் எழுகிற சோதியே என்றமைக்கு ஏற்ப இதில் 'என்னுள்ளத்து இருள் கடிந்து எழுகின்ற ஞாயிறேபோன்று நின்ற நின் தன்மை' என்று விளக்கந்தருதல் காண்க. அருளி, ஞாயிறேபோன்று நின்ற நின் தன்மை எனக் கூட்டுக.

புறத்திலே உள்ள இருளைப் போக்கி ஒளியைத் தந்து பொருள் விளக்கஞ்செய்கின்ற பௌதிக சூரியன்போல உயிரினிடமாக விளங்கும் அஞ்ஞானத்தையகற்றி ஞானவொளியை

நல்கிச் செம்பொருளை உணர்த்துகின்ற சிவசூரியனாக நின்ற நின் தன்மையால் என உவமைக்கும் பொருளுக்கும் பொதுத் தன்மை தோன்றவுரைக்க.

சூரியன்முன் விளக்கொளி காரியப்படாது அடங்கிநிற்றல் போலவும், தலைவியும் - தலைவனும் கூட்டத்து நுகர்ச்சிக்கண் உணர்வற்று நிற்பதுபோலவும், என் உள்ளத்து ஒளிப்பிழம்பாய் ஞாயிறாகச் சிவபெருமான் எழுந்தருளியகாலத்து உயிர்ச் செயலாகிய நினைப்பு அற்றுப்போக, அதனால் நினைக்கும் உயிராகிய யானொருவனுளனென்ற எண்ணமும் மறைய, நினைக்கப்படும் சிவஞாயிறாகிய உன்னையன்றி வேறு பொருளில்லாமையை நினைந்தேன் என்பதனை உணர்த்துவது 'இன்றெனக்கருளி ... ... பிறிதுமற்றின்மை நினைந்தேன்' என்ற பகுதி.

ஞாயிறே போன்று நினையலாற்பிறிதுமற்றின்மை நினைப்பற நினைந்தேன் எனக்கூட்டி, ஞாயிற்றை ஒத்து உன்னையன்றி வேறொருபொருளில்லாமையை நினைப்பற நினைந்தேன் எனலுமாம். நினைப்பு மறப்பின்வழி நிகழ்வது. மறதியில்லாதபோது நினைப்பேது? எப்போதும் இடைவிடாது எண்ணினேன் என்பார் 'நினைப்பற நினைந்தேன்' என்றார் என்க. நினைப்பற நினைதலைச் சொல்லாமல் சொல்லுதலும், உணராமல் உணர்தலும், நினையாமல் நினைதலும்போலக் கொள்க.

சிலர், நீயல்லாமல் பிறிது பொருளின்மையை யான் நினைப்பற்றிருந்தமையால் நினைத்தேன் என்பர். அடிகளாருக்குச் சிவமன்றிப் பொருளின்மையை நினையாத நாள் இல்லை என்பது வெள்ளிடைமலை. அங்ஙனமாக நான் நினைப்பற்றிருந்தமையால் இன்று நினைந்தேன் என்பதிற் சிறப்பொன்றுமின்மை தெளிக.

சிலர், இன்று, இருள் கடிந்து எனக்கு அருளி, என் உள்ளத்து எழுகின்ற ஞாயிறேபோன்று எனக்கூட்டி இருள் கடிந்த பிறகே இறைவன் அருளுதல் முறையாமென இயைபு காட்டுவர். சூரியன் எழ இருள் மடிதல்போல இறைவன் அருளுதலும் இருள் கடிதலும் ஒருகாலத்து ஒருசேர நிகழும் செயல்கள். மலபரிபாகமே இருள்கடிதல், சத்திநிபாதமே அருளல்; ஆகவே இவ்விரண்டும் முன்பின்னாக நிகழ்வன அன்று என்க.

ஞாயிற்றையே தொடர்ந்து காண்பவன் பிறிதொன்றையும காணான். அதுபோலச் சிவனைக் காணுகின்ற யான் சிவமன்றி வேறு பொருளைக் காண்கிலேன் என்பதில் இறைவனுடைய எங்குமாய் எல்லாமாய் என்றுமாய் இருக்குந்தன்மைகள் விளக்கப்பெறுதல் காண்க.

சென்று சென்று தேய்ந்து தேய்ந்து ஒன்றும் என்ற வினைக் கேற்ற வினைமுதலாக ஆன்ம அறிவு என்றதை வருவித்துரைக்க.

ஆன்ம அறிவு தனக்கு வினைநுகர்ச்சிக்கண் துணையாம் தத்துவ தாத்துவிகங்களைக் கொஞ்சம்கொஞ்சமாகவிட்டு, நீங்கி, பரம்பொருளை நோக்கிச் சென்று சென்று அணுகப் பசுத்துவம் நீங்கப்பெற்றுச் சிவம் மேலிடச் சிவஞானமாய், தானும் எதிரு மாக இருந்த நிலையும் கழன்று, எதிராகிய சிவமேயாகி ஒன்றாய் நிற்றலாகிய பரிபூரண ஏகமே ஈண்டு 'சென்று சென்று அணு வாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றும் சிவன்' என்பதால் விளக்கப் பெற்றது.

சிலர், எல்லாப்பூதங்களும் தத்தம்நிலையை விட்டுப் போய்ப் போய் அணுத்தன்மையுடையனவாகத் தேயப்பெற்றுப் புலப் படாவாய், நின்னுள் ஒடுங்காநிற்ப, ஆங்கு நீயே ஒரு பொரு ளாக நிற்கும் திருப்பெருந்துறையுறை சிவனே எனப் பொரு ளுரைப்பர். பூதங்கள் சடமாகிய தத்துவங்களாதலின் அவை செல்லுதலும் தேய்தலும் இயல்பு. அவற்றை இறைவன் தத்தம் காரணத்துள் ஒடுக்கி, அவையனைத்தையும் மாயையுள் ஒடுக்கி, மாயையைச் சத்தியுள் ஒடுக்கி, சத்தி தன்னுள் ஒடுங்கத் தான் ஒன்றாய் நிற்பன் ஆதலால் பூதச்செயலாக உரைத்தல் பொருந் தாமை அறிக.

எங்கும் செறிந்து பலவுருவிற்கலந்திருக்கும் சிவம் சென்று சென்று, செறிந்து செறிந்து இறுதி தானேயாய் நிற்பதைக் குறிப்பது என்பாரும் உளர்.

பழையவுரை, தேவரீர் திருவருளானது, அடியேனது தியான பாவனைக்காலத்து அணுவிலும் அணுவாய் அடங்கி, என்குறையே நின்பெருக்காயில்லையே; ஏகபர சிவவடிவாகி, திருப்பெருந்துறைக் குருவாகிய சிவனே என்று கூறும். இதில் திருவருள் அணுவாய்த் தேய்ந்து சிவமாயிற்று என்ற கருத்து வெளிப்படுகின்றது.

அவ்வுரை, 'ஒன்று நீயல்லை, அன்றி ஒன்றில்லை' என்ப தற்கு, இவன் அவனை விடாதே அவன் இவனை விடாதே உடந் தையாய்ச் சிவத்தோற்றமாக நிற்கும் நாதனே என்றுரைக்கும். இதன் கருத்து உயிராகிய இவன் சிவனாகிய அவனை விடா மலும் சிவன் உயிர்களை விடாமலும் மரமும் நிழலும் போலவும், உடலும் உயிரும் போலவும், உடனாய் நிற்கும்நிலை என்பதாம்.

யார் உன்னையறியகிற்பாரே என்பதற்குத் திருவடிஞானம் பெற்றாரன்றி வேறு யார் அறியவல்லார் என்றுரைக்கும் அவ்வுரை. இவற்றுள் சிறந்தன கொள்க.

இத்திருப்பாடல் இறைவன், பரிபாகமுற்ற உயிர்களுக்கு அநுபவமாங்கால் அருளும் இயல்புகளைத் தொகுத்து உரைத்தலின் அநுபோக இலக்கணம் அறிவிப்பதாயிற்று என்க.

393 பார்பத மண்ட மனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதேல் அரிய
நின்மலா நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை யெழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாருற வெனக்கிங் காரயல் உள்ளார்
ஆனந்த மாக்குமென் சோதி. 8

இ - ள்: பூமியும் பதங்களும் அவற்றை அடக்கியுள்ள அண்டங்களுமாகத் தோன்றி எங்கும் பரந்த ஒப்பற்ற மேன்மேலும் படர்கின்ற ஒளியின் பரப்பாகவுள்ளவனே! நீரின்கட் பொருந்திய தீயாக உள்ளவனே! நினைக்க முயற்சித்தால் அதற்கு அரிய மலமற்றவனே! நினது அருள்வெள்ளமாகிய சீர்மைபொருந்திய சிந்தையிலே தோன்றிய ஒப்பற்ற தேனே! திருப்பெருந்துறையுறை சிவனே! ஆனந்த மயமாக்கும் என் ஒளிப்பிழம்பே! இவ்வுலகில் எனக்கு உறவாவார் யார்? அயலாகவுள்ளவர் யார் என்றவாறு.

இறைவா! நீயே அனைத்தும் அனைவருமாதலைக் காண்கின்றேன் ஆதலால் எனக்கு அயலும் உறவும் ஆவார் யார்? என்பது கருத்து.

சித்தும் சடமுமாய எல்லாப்பொருளும் சிவமாகிய உன் வியாபகத்துள் அடங்கியிருப்பதை அறிகின்ற எனக்கு வேண்டுதலும் வேண்டாமையும் இல்லை; ஆகவே, அயலாரும் இல்லை உறவினரும் இல்லை எல்லாம் நீயே என்றவாறும்.

பார் - பூமி. கன்மபூமியாகிய இதிற்றோன்றிப் புண்ணியம் பல செய்தார் மறுமைக்கண் சென்று எய்தும் வைகுந்தம் முதலியன பதங்கள். இத்தகைய பாரையும் பதங்களையும் அடக்கி நிற்பது அண்டம். படரொளிப்பரப்பு - எங்கும் படருகின்ற ஒளியின் பரப்பாகிய சிதாகாயம். பார்முதல் அனைத்துமாய்த்தோன்றி விரிந்து நிற்பது ஒளிப்பரப்பாகிய பரம்பொருளே என்பதாம்.

இப்பகுதிக்கு, பிருதிவிமுதலான தத்துவங்களும், அவற்றி லுளவாகிய பதங்களும், அவற்றுலுளவாகிய ஆதார ஆகாசம் முதலிய சகலவத்துவும் திருமேனியாக உற்பத்தியாயும் என் பது பழையவுரை. இதன் கருத்தும், பார்பதம் அண்டமாகிய அனைத்தையும் திருமேனியாகக்கொண்ட ஒளிப்பரப்பு இறை வன் என்பதாம்.

நீருறு தீ - நீர் தோன்றுதற்கு இடமாகிய தீ. 'தீ முரணிய நீரும்' என்பது புறநானூற்றுப் பகுதி. ஆயினும், நீர் தீயி னின்றே தோன்றுவதென்பதை உபநிடதம் உரைக்கும். பரப்பு என ஆகாயம் கூறிய அடிகள், இதில் நீரும் தீயுமாகிய இரு வடிவம் கூறினர். நீருறு தீ - நீரின்கண் இருக்கும் தீயாகிய வடவைத்தீ எனலுமாம். வடவைத்தீ பரந்த கடல்நீரை எல்லை கடவாது அடக்குவதுபோல, இறைவனும், இப்பரந்த உலகில் வாழும் உயிர்களைத் தத்தம் எல்லை கடவாதவண்ணம் காத்த லின் இங்ஙனங் கூறினர் எனக் கொள்க. எரியுறுநீர் எனக் கூட்டியுரைப்பர் பழையவுரைகாரர்.

நீர் - அருள்வடிவான நீர். தீ - ஒளிவடிவான இறை. உயிர்களை முத்தொழிற்கட்படுத்தி மலமகற்றி உய்யக்கொள்ளு தற்கு இறைவன் அம்மையோடு வெளிவந்தமை தோன்றற்கு நீருறுதீ என்றும், எல்லாவற்றையும் அழித்துத் தம்மகப்படுத் தியமைதோன்ற 'படரொளிப்பரப்பு' என்றும் கூறினர் என்பர் புத்துரைகாரர்.

நினைவதேல் அதற்கு அரிய நின்மலா என ஒரு சொல் வருவிக்க. நின்மலன் - இயல்பாகவே மலச்சார்பு அற்றவன். நினைப்பு - ஆன்மபோதத்தால் பண்டைய அறிவானும் சார் பானும் மனமறிந்ததொன்றை மறந்து மீளவும் எண்ணுதல். இறைவன் ஆன்ம அறிவுக்கப்பாற்பட்டு எவ்வகைச் சார்பா னும், மனம் முதலிய கருவிகரணங்களானும் அறியப்பெறுன் ஆதலால், இங்ஙனம் கூறினர். மனத்திற்கு எட்டாத நின்மலா என்பது பழையவுரை. அருள்வெள்ளச் சீர் - அருள்வெள்ள மாகிற சிறப்பு. அதனை அடைந்த மனத்திலே சுரக்கும் தேன் சிவபெருமான் என்க. சிவனைத் தேனென்றமையின் மனத்தை மலராகக் கொள்க. மனத்தைப் பதினறிதழ்களமைந்த தாமரை மலராகச் சிவாகமங்கள் தெரிவிக்கும்.

'தேன் முதலிய போகப்பொருள்களை நுகர்வதால் விளையும் களிப்பு ஆனந்தம். ஆனந்தம் அறிவுடைமையின் பேறு. அறிவு ஒளி வடிவானது. ஒளி - பரசிவம். ஆகவே, இறைவனை

ஆனந்தமாக்கும் என்சோதி என விளித்தார். ஆனந்தமாக்கும் என்பதற்குப் பூவினிற்கந்தம் பொருந்தியவாறு போல் சிவானந்தத்தைச் சீவனிடமாகத் தோன்றச்செய்த ஒளியென்க.

யாராலும் பெறுதற்கரிய சிவானந்த அனுபவம் பெற்ற யான் உலகில் வேறானவன்; எனக்கு விருப்பு வெறுப்பும், உறவும் அயலும் இல்லை என்பார் 'இங்கு உள்ளார் எனக்கு யார் உறவு, யார் அயல்' என்றார்.

எல்லாம் சிவமயமாகவே, உறவும் அயலுமில்லை என்பதாம். இவ்வண்ணம் அனுபோகத்தினிலக்கணத்தை உணர்த்துதல் காண்க.

394 சோதியாய்த் தோன்றும் உருவமே யருவாம்
ஒருவனே சொல்லுதற் கரிய
ஆதியே நடுவே அந்தமே பந்தம்
அறுக்குமா னந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் இணையடி தந்தே. 9

இ - ள்: ஒளியாகத் தோன்றும் உருவமே! உருவற்ற அருவாகிய ஒருவனே! வேதங்களாலும் சொல்லுதற்கரிய முதலும் இடையும் முடிவுமாகியுள்ளவனே! ஐம்மலங்களால் விளையும் கட்டினை அறுக்கும் ஆனந்தமாகிய பெரிய கடலே! தீமையே கலவாத நன்மை வடிவான திருவருள் மலையே! திருப்பெருந்துறையுறை சிவபெருமானே! நீ எழுந்தருளி வந்து நினது இரண்டு திருவடிகளையும் அடியேனுக்களித்து, உய்ந்துபோவதற்கு உரியதோர் உபாயம் யாது என்று எனக்கு அருளுக என்றவாறு.

இறைவா! அடியேன் உய்யும் உபாயத்தை அருளுக என்பது கருத்து.

இறைவன் திருமேனி ஒளியான திருமேனியாதலின் ஏனைய தேவர் உருவம்போலக் கண்ணும் மூக்கும் கையும் காலும் கூடிய உருவன்று; ஒளி நின்னுருவம் என்பார் 'சோதியாய்த் தோன்றும் உருவமே' என விளித்தார்.

அது ஓர் உருவாகாது ஆதலால், உண்மையில் நீ அருவே ஆவாய் என்பார் 'அருவாம் ஒருவனே' என்றார்.

ஆதியாயுள்ள அனைத்திற்கும் ஆதியாயும், நடுவாயுள்ள எவற்றிற்கும் நடுவாயும், முடிவானவற்றிற்கெல்லாம் முடிவாயு மிருத்தலின் அவன்நிலை யாராலும் சொலற்கரிது என்பது தோன்ற 'சொல்லுதற்கரிய ஆதியே நடுவே அந்தமே' என விளிக்கின்றார்.

பந்தம் - கட்டு. அது ஆன்ம அறிவை மறைக்கும் ஆணவ மும் கன்மமும் மாயையும் மாயேயமும் திரோதாயியும் என்ற ஐந்து. அவை ஆன்மாவைச் சாரவிடாது நீக்குதலும், வலி அடக்குதலுமே அறுத்தல். கடல் அலைகளால் மலைகளையும் கல்லி எறியும். அதுபோல ஆனந்தமாக்கடல் பந்தமாகிற மலையைக் கல்லி எறியும் என்று ஏகதேச உருவகம் தோன்ற உரைத்தவாரும்.

நன்மை - தீமையினின்று பிரிவதால் விளைவது. இறைவன் அருள் தீமைகலவாத தனித்த நன்மையானது என்பது தோன்ற 'தீதிலா நன்மைத் திருவருள்' எனப்பெற்றது. இறைவன் அத் தகைய அருளையுடைய குன்றம் என்க. வந்து - எளிவந்த கருணையால் எம்நிலைக்கு இரங்கி இப்பூமியின்கண் குருநாதனாக வந்து என்க.

இணையடி - பரஞானமும் அபரஞானமுமாகிற திருவடிகள். சி, வ என்னும் சிவசத்திகளிரண்டின் அடிகள் எனலுமாம். அதனைத் தரவே அது உய்யும்நெறியாமாயினும் திருவடியிணை தந்த இறைவன் இதுதான் உய்வகை என்று உணர்த்தாவிடின் உயிர்கள் தாமாக உணர்ந்துய்யும் தன்மைய அல்லவாதலான் 'போவதோர்வகை அருளாய்' என்றருளினர்.

இறைவனை உருவாக, அருவாக, ஆதி நடு அந்தமாகப் பந்தம் அறுக்கும் ஆனந்தக்கடலாக, அருட்குன்றமாக அநுப வித்து உய்யுநெறி உன் திருவடிப்பேறே என்று உணர்த்து தலின் இப்பாடலும் அநுபோக இலக்கணமறிவித்தல் காண்க.

395 தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே யீசா உடலிடங் கொண்டாய்
யானிதற் கிலனொர்கைம் மாறே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள் : அடியேற்கு அநுபோகப் பொருளாகத் தந்தது உன்னை; அநுபவிப்பவனாக ஏற்றுக்கொண்டது என்னை; சங்கரா! நம்மிருவருள் சாமர்த்தியம் பொருந்தியவர் யார்? அடியேன் தேவரீரிடமிருந்து எல்லையில்லாத ஆனந்தம்பெற்றேன்; தேவரீர் அடியேனிடமிருந்து பெற்ற பொருள் ஏதேனும் உண்டோ? என் மனத்தையே கோயிலாகக்கொண்டு வீற்றிருக்கும் எம்பெருமானே! திருப்பெருந்துறையுறையும் சிவபெருமானே! எம் தந்தையே! ஈசா! என்னுடலையும் நீ எழுந்தருளும் இடமாக்கிக்கொண்டாய்; இத்தகைய பேருதவிக்குப் பிரதியாக நான் செய்யும் உதவி ஒன்றும் இலேன் என்றவாறு.

'ஈ தா கொடு எனும் மூன்றும் முறையே, உயர்ந்தோன் ஒப்போன் இழிந்தோன் இரப்புரை' ஆதலின் தா என்பது ஒத்தநிலையிலுள்ளார் தருவதையும் ஏற்றதையும் உணர்த்தும். இறைவன் என்னோடு ஒத்தநிலையில் வந்து தன்னைத் தந்தான்; அது அவன் கருணைத்திறம் என்றார்.

என்றன்னை என்றதன் குறிப்பு ஆன்ம இயல்பு முழுதும் வாய்ந்த என்னை என இழிவுதோன்ற நின்றது. கொண்டது என்று இறைவன் வினையாகவே கூறியது, இறைவன் தன் பெருங்கருணையால் இரங்கிவந்து தன்னைத் தந்தானாயினும், எனக்கு ஆன்மகுணம் போகாமையான், எனக்கு என்றும் கருத்தாவாம் தன்மை இல்லை என்பதைத் திருவுளத்தடைத்து அறியாமையாற் புறம்போந்த என்னையும் தான் ஏற்றுக்கொண்டான் என்பதாம். உன் தன்னை என்பது முற்றறிவும், முற்றுத் தொழிலும், இயல்பாகவே பாசங்களின் நீங்கிய பெருமையும், தடையிலாக் கருணையும் உடைய உன்னை என்பதை விளக்கியதாம் என்க.

யார்கொலோ சதுரர் - உயர்ந்த பொருளைத் தந்து இழிந்த பொருளைக் கொண்டவரா, இழிந்த பொருளைத்தந்து உயர்ந்த பொருளைப் பெற்றவரா, யார்? இப்பண்டமாற்றில் சாமர்த்தியம் பொருந்தியவர் என்பதாம். கொல்: அசை. ஓகாரம் வினாப் பொருளில் வந்தது.

சிவத்தினிடமிருந்து சீவன்பெற்றபேறு ஆனந்தம், சீவனிடமிருந்து சிவம் பெற்றதென்ன என்று வினவுவதால், சிவமே தியாகமூர்த்தி, கொடுக்கும் வள்ளன்மையுடையது; சீவன் பெறுகிற தகுதியைத் திருவருளாற் பெற்றாற்போதும் என்ற குறிப்பாற் கூறியதாம்.

என் சிந்தையையும், உடலையும் கோயிலாக்கி, என்தந்தையுமாய் ஈசனுமாய்த் தீநெறிக்கட்செல்லாது தடுத்தும் கொடுத்தும் ஆட்கொண்டு நீ செய்யும் நன்றிக்கு மாற்று நன்றி என்னால் செய்ய இயலாது என்று அநுபோக முதிர்வால் விளைந்த செயலற்ற தன்மையைத் தெரிவிப்பதால் இப்பாடலும் அநுபோக இலக்கணம் உணர்த்திற்றுதல் காண்க.

# 23. செத்திலாப்பத்து

[சிவானந்தம் அளவறுக்கொணுமை]

மாணிக்கவாசக சுவாமிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்குங்காலத்து, குருநாதனுக எழுந்தருளிய இறைவன் அடியார் கூட்டத்தோடு மறைந்தருளப் பிரிவாற்ருது செயலற்று இன்னும் செத்திலேனே என்று இரங்கி அருளிச்செய்கின்ருர்கள்.

செத்திலாப்பத்து என்பது தான் செத்திலாமையைக் குறிக்கும் பத்துப் பாடல்களைக்கொண்ட பகுதி.

வாழ்வில் பெற்றதை இழத்தல் மிகப் பெருந்துன்பம். அதுவும் பெறுதற்கரியதொன்றைப் பெற்றிழப்பின் அதனுல் விளையும் துன்பத்திற்கு அளவே இல்லை. இறைவன் திருவடி பெறுதற்கரியது. அதனை அவன் கருணையால் காணப்பெற்றேன். என்வினை அதனை அநவரதமும் கண்டுகொண்டேயிருக்க - களிக்கத் துணைசெய்திலது. இடையிலே பிரிய நேர்ந்தது. இத்தகைய பிறவி இருந்து என்ன பயன். இறந்துபோகவேண்டும். இறப்பு என்பது வருவித்துக் கொள்ளக்கூடியது ஒன்றன்று. எங்ஙனம் உயிர்களால் தாமே பிறத்தற்குச் சுதந்தரமில்லையோ அங்ஙனம் இறத்தற்கும் உரிமையில்லை. காம்பூழ்த்த மலர் செடியினின்று கழல்வதுபோல உயிர் தானே நீங்க வேண்டும். அதுவே சாதல். பிரிவால் விளையுந் துன்பமும், குருநாதனுடைய இன்றியமையாமையும் மனத்தில் ஊன்றி ஊறு விளைக்குமாயின் கணவனைப் பிரிந்த கற்புடை மங்கை சாதல்போலச் சாக நேர்ந்திருக்கும். அங்ஙனம் அழுந்திய அன்பு அடியேற்கின்மையால் செத்திலேன் என்று அடிகள் இரங்குகின்ருர்கள். இங்ஙனம் செத்திலாமையை உணர்த்துதலால் இப்பத்துப் பாடல்களும் செத்திலாப் பத்தாயிற்று. பத்து, பத்துப் பாடல்களை உணர்த்திப் பின் பத்துப் பாடல்களைக்கொண்ட நூற்பகுதிக்குப் பெயராயிற்று. இது ஆகுபெயர்.

“பள்கரு செத்திலாப் பத்துச் சிவானந்தம், அளவறுக்கொண்ணுமையதாகும்” என்பது அகத்தியர் அருளிய அநுபவச்சூத்திரம். இதன் கருத்து முதற்பதிகத்து, சிவாநுபவ இலக்கணம் இதுவென்று விண்ணப்பித்த அடிகள், இப்பதிகத்து, கிடைத்த அநுபவத்தை நெடிது துய்க்க இயலாதவண்ணம் வாசனுமலம் தடுத்தது; கருவி கரணங்கள் அதன்வழிச் சார்ந்து தடையாயின; ஆதலால்,

பரிபாகப்படாத கருவி கரணங்களையுடைய இப்பிறவியில் வாழ விரும்புகிலேன் இறந்திலேன் என்று இரங்கியவாறும் என்பது பழைய உரைக்குறிப்பு.

இப்பத்துக்குத் திருவுள்ளக்கிடக்கை சிவனுனந்தம் அளவறுக் கொணுமை; என்பது சிவானந்தம் அனுகிச் செயிக்கப்படாமை. பழையபுராணம் "மாய பசுபோதம் முற்றுங் கெடவேண்டலே செத்திலாப் பத்தாகும்" என்கிறது. இவையனைத்தையும் ஒருங்கிணைத்து நோக்கின், ஆன்மா அடைந்த சிவானந்தத்தை அளவறுக்க முடியாதவண்ணம், சீவபோதம் இடைக்கிடையே குறுக்கிட்டுத் தடை செய்தலின் அதுவும் சாகவேண்டிச் செத்திலேன் என இரங்குவதாகக் கூறப்பெறுவது என்பது புலப்படும். சாதலாவது ஆன்ம போதம் அழிதல்.

## எண்சீர் ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

396 பொய்யனேன் அகநெகப் புகுந்தமு தூறும்
புதும லர்க்கழ லிணை யடி பிரிந்தும்
கையனே னின்னுஞ் செத்திலேன் அந்தோ
விழித்திருந் துள்ளக் கருத்தினை யிழந்தேன்
ஐயனே அரசே அருட்பெருங் கடலே
யத்த னேயயன் மாற்கறி யொண்ணுச்
செய்யமே னியனே செய்வகை யறியேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 1

இ - ள்: ஐயனே! அரசே! அருட்பெருங்கடலே! அத்தனே! பிரமனுக்கும் திருமாலுக்கும் அறியமுடியாத சிவந்த திருமேனியையுடையவனே! திருப்பெருந்துறை மேவிய சிவனே! பொய்யை உடையேனுகிய எனது மனம் இளக அதனுட் புகுந்து, நித்திய வாழ்விற்கேற்ற சிவானந்தமாகிற அமுது ஊறுகின்ற புதிய தாமரைமலர் போலும் வீரக்கழலை அணிந்த நின்னுடைய இரண்டு திருவடிகளைப் பிரிந்தும் கீழ்மகனுகிய யான் இன்னும் இறந்திலேன்! ஐயோ! கண் விழித்துக் கவனமாக இருந்தும் எனது உள்ளத்தில் விளங்கும் கருத்தாகிய இறையை இழந்தேன்; அதனுல் யான் செய்வதென்ன என்று அறியேன் என்றவாறு.

உலக வாழ்வில் ஒட்டி வாழ்வதற்காக உண்மையல்லாதவற்றை உண்மை என நம்பி, பொய்முதலியனபேசிக் கெட்டேன்

எனத் தன் குறையை எண்ணி இரங்கும் முறையில் தன்னைப் பொய்யனேன் என்றார். வாசனை ஓயாத பொய்யன் என்னும் பழையவுரை.

உலகோடு ஒட்டிவாழும்போது என்மனம் கல்லாயிருந்தது; நீ புகுந்து இடமாக்கிக்கொண்டதும் நெக்குருகியது என்பார் 'அகநெகப் புகுந்து' என்றார். தீயை அணுகியவுடன் வெண்ணெய் உருகுவதுபோல நீ புகுந்தவுடன் அகம் நெக்கதென்க.

இறைவன் திருவடிகள் நிறத்தாலும், மணத்தாலும், சுவையாலும், மென்மையாலும் தாமரைமலர்களை ஒத்தன. அடைந்தார் துன்பமகற்றும் வீரத்தின் அறிகுறியாகக் கழலணிந்தன. அத்தகைய திருவடியைப்பெற்றார் ஒருக்காலும் பிரிய ஒண்ணாது. அங்ஙனமிருந்தும், திருவடிப்பெருமை அறியாத கீழ்மகனாதலின் பிரிந்தேன் ; பிரிந்தும் செத்திலேன் என்று இரங்குகின்றார். அந்தோ: இரக்கக்குறிப்பு இடைச்சொல்

உலகில் அனைவரும் உறக்கத்தில் புறத்தேயுள்ள பொருளை இழப்பர்; நானோ விழித்திருந்து உள்ளத்திலுள்ள கருத்துப் பொருளாகிய இறையருளை இழந்தேன் என்பதை 'விழித்து இருந்து உள்ளக்கருத்தினை இழந்தேன்' என்பதால் விளக்கிய வாறு காண்க.

உள்ளதை இழந்தமையால் இனி செய்வகை அறியேன் என்பதாம். விழித்திருந்தும் கைப்பொருள் இழந்தவன்போல, எனது உள்ளம் அதுவாய்ப்போனவண்ணம் காணேனே என்று உரைக்கும் பழையவுரை.

இப்பாடல் 'அகநெகப் புகுந்தமுதூறும் புதுமலர்க்கழல்' எனத் தான்பெற்ற சிவானந்தத்தின் அளவறுக்கொணாமையைப் புகன்று, பின்னர்ப் பிரிந்தமையால் செயலற்றுச் செத்திலேன் என இரங்குதலின் செத்திலாப்பத்து எனும் பதிகத் தொடர்பு உடையதாதல் காண்க.

397 *புற்று மாய்மர மாய்ப்புனல் காலே*
*உண்டியா யண்ட வாணரும் பிறரும்*
*வற்றி யாருநின் மலரடி காணா*
*மன்ன என்னையோர் வார்த்தையுட் படுத்துப்*
*பற்றினாய் பதையேன் மனமிக வுருகேன்*
*பரிகி லேன்பரி யாவுடல் தன்னைச்*
*செற்றி லேனின்னுந் திரிதரு கின்றேன்*
*திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.* 2

இ - ள் : புற்றாயும், மரமாயும், நீரையும் காற்றையும் உணவாகக்கொண்டு, அண்டங்களில் வாழ்பவரும், பிறரும், யாரும் உடல் உலர்ந்து தவம்பலசெய்தும் நின் மலர்போலுந் திருவடியைக் காணப்பெறாத மன்னனே! திருப்பெருந்துறை மேவிய சிவனே! அடியேனை ஒரு சொல்லாற் கட்டுப்படுத்தி அடிமையாகப் பற்றிக்கொண்டாய்; அவ்வுபகாரத்தை அறிந்தும் யான் மனம் பதையேன்; இளகேன்; அன்புகூரேன்; அன்பு செய்யாத இவ்வுடலை அழித்திலேன்; இன்னும் சுழலுகின்றேன் என்றவாறு.

கடுந்தவஞ்செய்வாரும் காணா இயலாத மன்னா! உபதேச வார்த்தையொன்றாலாட்கொண்டாய்; அதனை எண்ணி, மனம் பதையேன்; உருகேன்; பரியேன்; பரியா உடம்பைத் தாங்கி இறவாமல் சுற்றிவருகின்றேன்; என்னே என் இழிதகைமை என்று இரங்கியவாறும்.

பல ஆண்டு இடம்பெயராது, உடல் அசையாது தவஞ் செய்யில் மேலே புற்றுக்கிளம்புதலும் மரமுளைத்தலும் இயல்பு என்பதனை வால்மீகி வரலாற்றானும் அறிக. தேவர்களும் அண்டங்களில் வாழ்வாரும் பிறரும் காற்றையும் நீரையுமே உண்டு அத்தகைய கடுந்தவம் செய்தும் திருவடியைக் காண்கிலர்; அவர்கள் தவஞ்செய்ததன்பயன் உடல்வற்றியதொன்றே.

நின்மலரடி காணா மன்ன என்பதில் காணா என்னும் எதிர்மறைச் செய்வினையைக் காணப்படாத மன்ன என்று செயப்பாட்டுப் பெயரெச்சமாகக் கொள்க.

ஓர் வார்த்தை - சீபஞ்சாக்கரமும் பிரணவ பஞ்சாக்கரமுமாகிய ஓரேவார்த்தை. பஞ்சாக்கரத்துள் தலைவனும், தலைவியும், உயிரும், தடையும், தடை நீக்கும் உபகாரமும் இருத்தலால் அதனையறிவித்து என்னைப்புறத்தலையாது போற்றி, அதிலேயே நிற்கப் பண்ணினான் என்பார் 'ஓர் வார்த்தையுட்படுத்து' என்றார்.

"அறியாமை யறிவகற்றி அறிவினுள்ளே அறிவதனை அருளினால் அறியாதே அறிந்து, குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும் கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகில்'' என்ற ஓர் விருத்தப் பாதியினால் என்னும் பழையவுரை. வேறுரைகாரர் நானே நீயாதலால் நீயும் யானாயினாய் என்னும் சொற்றொடரால் ஆட்கொண்டாய். இது சிவாகம மரபின் வாராச் சிந்தனையாம் ஆதலின் கொள்ளற்க.

மனம் பதையேன். - 'போற்றுதே யாற்றநாள் போக்கி னேனே' என்று தன் தவறுக்காக மனம் நடுங்குதல் : அதனைச் செய்திலேன் என்கின்றார்கள்.

வலையிட்டு விலங்கைப் பிடிப்பார்போல ஓர்வார்த்தையாகிற வலையுட்படுத்தி என்னைப் பிடித்தாய் என்கின்றார். தான் இறை பணியாகிற சரியையாதிகளில் பற்றுக்கொள்ளாது உண்டதே உண்டும் உடுத்ததேயுடுத்தும் கண்டதேகண்டும் கதியறியாக் கசடனாகச் சுற்றித்திரிந்தமையை எண்ணி இரங்கியமை குறிக்கப் பெறுகின்றது 'பற்றினாய்' என்ற சொல்லாட்சியால்.

சிவபெருமான் ஆட்கொண்டும் மனம் பதைத்தலும் உருகுதலும் பரிதலும் செய்யாது ஊர் சுற்றி வருதலின் சிவபோகந் துய்க்க வேண்டிய தான் அது தம்மறிவளவால் அளவறுக்க ஒண்ணாதிருக்கின்ற தன்மையை அறிவித்தலின் இத்திருப்பாடல் பதிகக் கருத்து விளங்கநிற்றல் காண்க.

398 *புலைய னேனையும் பொருளென நினைந்துன்*
*அருள்பு ரிந்தனை புரிதலுங் களித்துத்*
*தலையி னாடந் தேன்விடைப் பாகா*
*சங்க ராவெண்ணில் வானவர்க் கெல்லாம்*
*நிலைய னேயலை நீர்விட முண்ட*
*நித்த னேயடை யார்புரம் எரித்த*
*சிலைய னேயெனைச் செத்திடப் பணியாய்*
*திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.* 3

இ - ள் : இடபவாகனத்தின் பாகனே! சங்கரா! எண்ணிலாத தேவர்களுக்கெல்லாம் நிலைபேற்றை அருளுபவனே! கடல்நீரினின்றும் தோன்றிய விடத்தை அமுதுசெய்த நித்தனே! பகைவர்களாகிய திரிபுராரிகளின் முப்புரங்களையும் எரித்த வில்லையுடையவனே! திருப்பெருந்துறை மேவிய சிவனே! கீழான அடியேனையும் ஒருபொருளாகத் திருவுளம் பற்றி உனது ஈடில்லாத திருவருளைச் செய்தாய்; அங்ஙனம் நீ புரிதலும், யான் தருக்கினேற்களித்து, தலையால் நடந்தேன்; ஆதலால் என்னைச் சாகக் கட்டளை தருவாயாக என்றவாறு.

இறைவா! ஒன்றற்கும் பற்றாத கீழ்மகனாகிய என்னையும் ஒருபொருளாக எண்ணி நீ அருள்செய்தாய்; நான் செருக்குற்றுத் தலைகீழாக நடந்தேன்; ஆதலால் அவ்வகங்காரமாகிய நான் என்பது சாகத்திருவுளம்பற்று என்பது கருத்து.

விடை - இளமையாலும், வலியாலும் தருக்கியது. அதனை அடக்கியாளுகிற உனக்கு அடியேனுடைய செருக்கொழித்தல் முடியாததொரு செயல் அன்று என்று குறிப்பிப்பார் 'விடைப் பாகா' என்றார்.

தருக்கொழித்தல் அளவினதன்று உம் திருவருள்; அடியேன் என்றும் மாறாத இன்பநிலையில் இருக்கச் செய்வதும் கடமையாகும் என்பார் சுகத்தைச் செய்பவனே என்னும் பொருளைத் தரும் 'சங்கரா' என்ற சொல்லால் விளித்தார்.

நிலைபேறு - வினைப்போகம் துய்க்கும் அளவும் அதற்குச் சாதனமாகக் கிடைத்த உடலின்கண்ணே நிலைபெற்று வாழ்தலும், பிறரைக் காத்து உய்விக்கவேண்டும் என்ற கைம்மாறு வேண்டாத கருணையால் நிலைபெற்று வாழ்தலும் என இரண்டாம் அவற்றுள், வினைப்போகம் துய்க்குமளவும் வாழ்கின்ற நிலைபேறு தேவர்களுடையது; அஃது அங்ஙனமாவதும் உன்னருளால் என்று உறுதிகூறுவார் 'எண்ணில் வானவர்க்கெல்லாம் நிலையனே' என்றார். நிலையன் - நிலைபேறளிக்கும் நிலைபேறுடையவன்.

விடம் பாற்கடலில் தோன்றியதாயினும், அலைநீர் விடம் என்றது கடல் என்ற சாதிபற்றிய பொதுமையால் கூறியது. பாலும் நீர்மையும் அலையும் உடையதாதலால் கூறினாரெனலுமாம். விடமுண்டும் அழியாமைபற்றி 'விடமுண்ட நித்தனே' என்றார்.

அடையார் - பகைவர். இறைவன் மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களை எரித்தமையின் 'புரமெரித்த சிலையனே' என்றார்.

புலையன் - புலைத்தன்மையன்; கீழ்மகன். குணத்தாற்கீழான தன்னைக் குறித்துக்கொண்டார். உம்மை இழிவுசிறப்பும்மை. பொருள் - போற்றிக்கொள்ளத்தக்கதொரு பொருள். அடியேன் இழிந்தவன், உன் அருள் மிகவுயர்ந்தது, என் தரம்பாராதே உன்தகுதிநோக்கிப் பேரருளைப் புரிந்தனை; ஆயினும் அருளைப் பெற்று அடங்கியிராதே தருக்கினேன் என்பார் 'அருள்புரிந்தனை; புரிதலும் களித்துத் தலையினால் நடந்தேன்' என்றார்.

தலையால் நடத்தல்: 'தலைகீழாக நடக்கிறான்' என்பதோர் வழக்குப்போல்வது. அஃதாவது நடத்தற்குரிய காலால் நடவாது, வணங்குதற்குவைத்த தலையால் நடத்தலாம். இங்ஙனங் கூறியது செருக்கு முறைமாறி நடக்கச்செய்கிறது என்பதாம்.

அன்றி அம்மையார் செய்த கயிலையாத்திரைபோல்வதொன்றும் என்க. சிலர் அருள்செய்தலும் தலையால் நடந்தேன் அவ்வளவு பணிவுடையனாயினேன் என்பர். அங்ஙனம் கூறின் மீட்டும் செத்திடப் பணியாய் எனல் வேண்டாவென்க.

எனைச் செத்திடப் பணியாய் என்றது தற்போதங்கெடச் செய்து சிவபோதமிகச்செய்து தாடலைபோல் நிற்கச்செய் என்பதாம்; ஆதலால் இத்திருப்பாடல் சிவானந்தம் அளவறுக்க வொண்ணாமையை அறிவிக்கின்றவாறு காண்க.

399 அன்ப ராகிமற் றருந்தவ முயல்வார்
அய னு மாலுமற் றழலுறு மெழுகாம்
என்ப ராய்நினை வாரெ னைப்பலர்
நிற்க இங்கெனை யெற்றினுக் காண்டாய்
வன்ப ராய்முரு டொக்குமென் சிந்தை
மரக்கண் என்செவி யிரும்பினும் வலிது
தென்ப ராய்த்துறை யாய்சிவ லோகா
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 4

இ - ள்: அழகிய திருப்பராய்த்துறையென்னுந் தலத்தில் எழுந்தருளியிருப்பவனே! சிவலோகா! திருப்பெருந்துறை மேவிய சிவனே! நின் திருவடிக்கண் என்றும் நீங்காத அன்பு உடையவர்களாகி, அவ்வன்பு நீங்காது நிலைத்தற்பொருட்டுச் செய்தற்கரிய தவத்தை மேன்மேலும் முயல்பவர்களும், பிரமனும், திருமாலும், மற்றும் தீசேர் மெழுகொப்பக் கசியும் எலும்பையுடையவர்களாக இடைவிடாது தியானிக்கின்றவர்கள் எத்துணையோ பலர் இருக்க, இங்கு எழுந்தருளிவந்து ஒரு தவமும் ஞானமுமில்லாத அடியேனை எதற்காக ஆட்கொண்டாய்? அடியேன் சிந்தை வலிய உலர்ந்த மரத்தின் கட்டையை ஒக்கும்; என் கண் மரக்கண்; என் செவியோ இரும்பினும் வலிதாம் என்றவாறு.

கசிந்து உருகும் மெய்யன்பர்களும் தவத்தோரும் பதவியிலுள்ள தேவர்கள் பலரும் உன் அருளைவேண்டிக் கடுந்தவம் புரிந்தும் கிடக்க, உன்னை நினைக்காத மடநெஞ்சும், தாழாத சென்னியும், காணாத கண்ணும், புகழைக் கேளாச் செவியும் படைத்த என்னை ஏன் ஆட்கொண்டாய் என்பது கருத்து.

பராய்த்துறை - திருப்பராய்த்துறை என்னுந்தலம். பராய்ச் செடி தலவிருட்சமாக இருத்தலின் இப்பெயர்பெற்றது.

அன்பராதல் பற்பல பிறவிகளிற்செய்த சிவபுண்ணியச் சிறப்பால் விளைவது. அன்பு உயிரின் குணமாயினும் அது கமரில் உக்க பால் போலாது வாயிற்சிந்திய அமுதம் போல வும், அடியார்க்கிட்ட அன்னம்போலவும் பயன்படும் வகையில் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சுடைமையே என்க. அத்தகைய சிவபத்தி சார்பாற் கெடாது மாருது நிலைக்க வேண்டுமாயின் அதற்குரிய பதிபுண்ணியஞ்செய்தலாகிய தவம் வேண்டும். அத்தவமும் வருந்திச் செயற்பாலதொன்றன்ருய்த் 'தவமும் தவமுடையார்க்காகும் அவமதனை அஃதிலார் மேற் கொள்வது' என்றவாறு முடியும் இயல்பினதாதலின் அதனை முயலுதற்கருமை நோக்கி 'அருந்தவம் முயல்வார்' என்ருர்.

முயல்வாரும், அயனும் மாலும், நினைவாருமாகிய எனைப் பலர் நிற்க எனமுடிக்க. சிலர் அருந்தவமுயல்வாராகிய அயனும் மாலும் எனக்கூட்டுவர். வற்றல் மரம் தளிர்க்காதவாறு போல அயனும் மாலும் நிஷ்காமியப்பயனைக் கருதித் தவம் செய்யார் என்பது உறுதியாதலின் அங்ஙனம் கூட்டலாகாது என்க.

அன்பராகி மற்றருந்தவமுயல்வார் பக்தியோகத்தில் நிற் பார் என்க. அழலுறுமெழுகாம் என்பராய் நினைவார் - தியான யோகத்தில் நிற்பார் எனலுமாம். நிற்க என்றது நின்னருளைப் பெருது ஏமாந்து நிற்க என்றவாறு.

சிந்தை முருடொக்கும், கண் மரக்கண், செவி இரும்பினும் வலிது எனக்கூட்டுக. பராய் முருடு - உலர்ந்த கட்டை. இறைவ னடிக்கண் அன்பகத்தில்லாவுயிர் வாழ்க்கை வற்றல் மரம் தளிர்த்தாற்போலும் ஆதலின் இங்ஙனம் கூறினர். பராய் மரத்தின் கணுக்கட்டை என்பாரும் உளர். முருடு உருளுவ தோடு தளிர்க்காமைபோல என்மனம் ஒன்றினும் நிலைபெருது உருண்டு, தனக்கும் தலைவனுக்கும் பயன்படாதது என்பார் சிந்தையைப் பராய் முருட்டுக்கு உவமித்தார்.

மரக்கண் - மரத்திலுள்ள கணு. அது கண்போல்வதா யினும் காணுந்தன்மையில்லாதது; என்கண்ணும் அத்தன்மை யது என்பதாம்.

இவ்வண்ணம் என் இந்திரியங்களும் மனமும் திருவடி யன்பிற்கேலாதனவாயிருக்க ஏன் என்னை ஆண்டாய்; ஆட் கொண்டும் அன்புசெய்யாமையால் யான் செத்திலேன் என்று பதிகத்தோடியைத்துப் பொருள் கொள்க.

ஆட்கொண்ட சிவானந்தம் அளவறுக்கொண்ணுமையால் அவ்வநுபவத்தை முழுதும்பயன்படுத்த உதவாத யான் செத்திலேன் என்பது இசையெச்சத்தாற்பெறவைத்து இரங்குதலின் இச்செய்யுள் பதிகக்கருத்தது ஆதல் காண்க.

400 ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால்
ஐய னேயென்றுன் னருள்வழி யிருப்பேன்
நாட்டுத் தேவரு நாடரும் பொருளே
நாத னேயுனைப் பிரிவுறு அருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்
காய மாயத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தந் தேவர்பி ரானே
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 5

இ - ள்: நாட்டப்பெற்ற தேவர்களும் தேடி அறிதற்கு அரியபொருளாக உள்ளவனே! தலைவனே! சிறுகுறும்பு செய்கின்ற தேவர்கட்குத் தேவனே! திருப்பெருந்துறை மேவிய சிவனே! அடியேன், ஆட்டுத்தன்மை வாய்ந்த தேவர்களாகிய பிரமனுதியர் விதித்த விதியை அறவே அகற்றி, நின் திருவடிக்கண் வைத்த அன்பால், தலைவா என்று நினது அருள்விட்ட வழியிலே நடப்பவன் அடியேன்; ஆதலால் என்றும் உன்னைப் பிரியாத திருவருளை அடியேற்குக் காண்பித்து, தேவனே நின் வீரக்கழலணிந்த திருவடிகளிரண்டையும் காண்பித்து, எடுத்த இவ்வுடலின் வஞ்சனையைப்போக்கி அருள்செய்வாயாக என்றவாறு.

சிவனே உன் திருவருள் விட்டபடியே கிடப்பேன்; ஆதலால் உன்திருவடியை என்றும் பிரியாதவண்ணம் அருளுக; என் உடலின் மாயத்தை அகற்றுக என்பது கருத்து.

ஆட்டுத் தேவர் - ஆடுபோலத் தமக்கென்று தனித்ததோர் அறிவின்றி ஒன்றன்வழியே ஒன்று சென்று மாயும் தன்மையையுடைய தேவர்கள். ஆடுபோன்ற தேவர் ஆட்டுத்தேவர் எனலுமாம். ஆட்டுத்தலையையுடைய தேவர் எனின் சிறுவிதியாகிய தக்கன்பெற்ற ஆட்டுத்தலையையுடைய தேவர் என்க; என்றது தக்கன் முதலான பிரமர்களையும் உபபிரமர்களையுமாம். அவர்கள்தம் விதியாவது படைப்புக்காலத்து இவ்வுயிர் இத்தகைய துன்ப இன்பங்களடைக என விதித்த நியதி. இறைவனிடம் அடியேன் இடையீடில்லா அன்புபூண்டமையால் விதிவிலகிற்று மார்க்கண்டேயரைப்போல என்பது கருத்து. ஐயன்-தலைவன். உயிர் சிவனைத் தலைவனாக என்று உணர்ந்ததோ அன்றே

பரிபாகமுற்றது. அதன்பரிபாகம்கண்டு இறைவனருள் பள்ளம் புகு புனல்போல் அவன்மீது பாயும்; அருள் வெள்ளத்தில் அகப்பட்டுப் புணைபோல எனக்கென்று யாதொரு சொல்லும் செயலும் எண்ணமுமின்றிக் கிடப்பேன் என்பார் 'ஐயனே! என்று உன் அருள்வழி இருப்பேன்' என்றார். சிவனே என்று கிடக்கிறேன் என்ற உலகவழக்கும் உன்னுக.

ஆட்டுத்தேவர் என்பதற்கு ஊழை நுகர்விக்கும் பால்வரை தெய்வங்களாகிய பிரமன் முதலியோர் என்றும் தேவரீர் ஆட்டு வித்தால் ஆடுகின்ற தேவர்கள் என்றும் பொருளுரைப்பர் சிலர். விதி ஒழித்து என்பதற்கு, கட்டளையை நீக்கி என்றும், ஆட்டுத் தேவர்கள் அருளிய கருமகாண்டப் பொருளான கற்பனைநூல் வழியே செல்லாது என்றும் உரைப்பர் சிலர்.

அருள்வழி இருப்பேன் என்பதற்கு, பெத்தமுத்தி இரண்டு தசையினும், திருவடியே பரமெனப் பணியற நிறுத்துவேன் என்றும், நீ காட்டிய அருள்வழியே முன்போல மாறுபடாது நிற்பேன் என்றும் உரைப்பர்.

நாட்டுத்தேவர் என்பதற்குப் பூசுரர்களாகிய அந்தணர் என்றும், பிரமாண்டம் வைகுந்தம் முதலான பதவிகளிலிருக்கும் பிரமனாதியர் என்றும் பொருள் கூறுவர்.

அருள், தீக்கண் சூடுபோல என்றும் இறைவனைப் பிரியாத குணகுணி சம்பந்தமுடையதாதலின் உனைப்பிரியாத அருளைக் காட்டி என்றார் எனலுமாம். குருந்தின்கீழ் இருந்தகாலைப் பிரிந்தது போன்று பிரியாமல் என்றும் கூடியேயின்புறும் இன்னருளைக்காட்டி என்பது எமதுரை. அருள் திருவடியாதலானும், அடிகளைக் காணுதற்கு அருள் துணைசெய்தலானும் 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்றாற்போல ஈண்டும் கூறியதாகக்கொள்க. காயம் - உடல். மாயம் - வஞ்சனை. இறைவன் அருளடைதற்குச் சாதனம்போல் தம்மைக்காட்டிநின்று, உலகச் சார்பொன்றையே நாடியிருத்தலை உணர்த்துதலின் காயமாயத்தைக்காட்டி என்றது. சிவானந்தமுற்றார்க்குப் புளியம்பழத்தின் ஓடுபோலக் காயமும் அது செய்யும் வஞ்சமும் கழலுமாதலின் 'கழித்து' என்றார்.

சேட்டை - சேஷ்டை என்பதன் திரிபாகிய வடசொல். தாமே பெரியர் எனத் தருக்கிச் சிறுகுறும்புசெய்யும் தேவர்கள் சேட்டைத் தேவர்கள். அவர்கள் பூதங்கள் பசாசங்கள் முதலிய கணத்தோர். அவர்கள்தம் தேவர் - அவர்கள் தலைவர்களாகிய கணநாதர் முதலியவர். அவர்கட்கும் பிரான் என்பதாம்.

சேடு+ஐ எனப் பிரித்துப் பெருமையையுடைய தேவர்கள் என்பாரும் உளர். முன்னர் நாட்டுத்தேவர் என்பதாற் குறித்த பிரமன் மாலையே மீட்டும் குறிக்கலாகாமை உணர்க.

கழலிணை காட்டி என்பதால் சிவானந்தப்பேறும், நாடரும் பொருளே என வியந்தமையால் அவ்வானந்தமும், அதன் குணியாகிய சிவமும் அளந்தறிய ஒண்ணுத்தன்மையுடையன வென்பதும் உணர்த்துதலின் இத்திருப்பாடல் சிவானந்தம் அளவறுக்கொண்ணுமையை அறிவிப்பது காண்க.

*401* அறுக்கி லேனுடல் துணிபடத் தீப்புக்
கார்கி லேன்றிரு வருள்வகை யறியேன்
பொறுக்கி லேனுடல் போக்கிடங் காணேன்
போற்றி போற்றியென் போர்விடைப் பாகா
இறக்கி லேனுனைப் பிரிந்தினி திருக்க
என்செய் கேனிது செய்கவென் றருளாய்
சிறைக்க ணேபுனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 6

இ - ள்: அழகிய அறவடிவாகிய விடையின் தலைவனே! கரைக்குள் விளங்கும் நீர்பொருந்திய வயல்கள்சூழ்ந்த திருப்பெருந்துறையுறை சிவபெருமானே! உன்னைப் பிரிந்தமையால், என் உடலைத் துண்டாக அறுக்கும் ஆற்றலற்றேன்; தீயில் பாய்ந்து, அமைவுறேன்; திருவருள் அடியேன்மீது இருந்த முறையை அறியேன்; இவ்வுடலைக் கழிக்கும் இடத்தையும் அறியேன்; உன்னைப்பிரிந்து இதுகாறும் இறந்தேன் அல்லேன்; உன்னைப் பிரிந்தாலும் பேரின்பத்தோடும் வாழ என்னசெய்வேன் ; இதனைச்செய்க என்று அருள்செய்வாயாக என்றவாறு.

சிவபெருமானே ! உன்னைப் பிரிந்து ஒருகணமும் இரேன்; ஆதலால், சித்திரவதை செய்துகொண்டாயினும் செத்திலேன்; போக்கிடம் காணேன் ; என்ன செய்வேன் ; இது செய் என்று தேவரீரே பணித்தருளவேண்டுமென்று வேண்டிக்கொள்கிருர்.

உடல் துணிபட அறுக்கிலேன் எனக் கூட்டுக. அங்கியாகிய உடல் துண்டுதுண்டாகும்படி அறுத்துக்கொண்டாயினும் இறந்திலேன் என்றவாறு. சூரபன்மன் யாகத்தீமுன் தன் தசைநார்களையும் உறுப்புக்களையும் ஒவ்வொன்ருகவும் சிறிது சிறிதாகவும் வெட்டிக்கொண்டு உன் திருவருளுக்கு இலக்காயினுற்போன்று ஆவதற்கு எனக்குத் துணிவு இல்லை என்பதுமாம்.

அங்ஙனம் சித்திரவதை செய்துகொள்ள விருப்பமும் துணிவுமில்லையானாலும், தீயில் புகுந்து ஒரிமைப்பொழுதில் மடியலாமே எனின், அதுவும் செய்கிலேன் என்பார் 'தீப்புக்கு ஆர்கிலேன்' என்கின்றார். ஆர்தல்-நிறைதல்; அமைதியுறல்.

இவ்வண்ணமெல்லாம் மாய்த்துக்கொள்ள எமக்குச் சுதந்தரம் ஏது? என்ற எண்ணம் தோன்றத் திருவருள் இருந்த வகை ஏது என்கின்றார்.

ஆனால், ஒன்றுமட்டும் உண்மை; உன்னைப் பிரிந்து இவ்வுடலைப் பொறுத்திருக்க மாட்டேன்; எங்கேயாவது போக்கிவிடலாமோ எனின், அதற்குரிய இடமும் அறியேன்; என்ன செய்வேன் என்று மனம் அலைபாய மேன்மேலும் சிவானுபவம் அளவறுக்க ஒண்ணாமையால் அதனைப் பிரிந்ததால் வருந்துதல் காண்க.

சிறை - கரை. புனல சிறைக்கணே நிலவிய வயல் - நீர் கரைக்குள் அடங்கி விளங்கும் வயல்கள். வெள்ளமும் கரைக்குள் அடங்கும் திருப்பெருந்துறையாய் என்றது, என் துன்ப வெள்ளம் மனத்திலடங்காமையால் தவிக்கின்றேனே என்றது புலப்பட நின்றது.

402 மாய னேமறி கடல்விட முண்ட
வான வாமணி கண்டத்தெம் அமுதே
நாயி னேனுனை நினையவு மாட்டேன்
நமச்சி வாயவென் றுன்னடி பணியாப்
பேய னாகினும் பெருநெறி காட்டாய்
பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞக னேயோ
சேய னாகிநின் றலறுவ தழகோ
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 7

இ - ள்: மாயனே! அலைகள் மடிந்துவிழும் கடலில் எழுந்தவிடத்தை உண்டதேவ! நீலகண்டத்தையுடைய எமது அமுதமே! திருப்பெருந்துறை மேவிய சிவனே! நாயினை ஒத்த யானுன்னை நினைக்கவும் வல்லமையிலேன்; 'நமசிவாய' என்று உன் திருவடிகளை வணங்காத பேயை ஒத்தேனாயினும், அடியேனுக்குப் பிறவாப் பெருவழியாகிய முத்தியைக் காண்பிப்பாயாக; பிறை விளங்குகிற சடையினையுடைய பிஞ்ஞகா! அடியேன் தூரத்திலிருப்பவனாகி நின்று வாய்விட்டலறுவது தேவரீருக்கு அழகாமோ? என்றவாறு.

நாயேன் உன்னை நினையேனுயினும் நமசிவாய என்று அடிபணியேனுயினும் தூரத்தில்நின்று அலறுவது அழகன்று; ஆதலின், அடியேனுக்குப் பெருநெறி காட்டி அருள்செய்க என்பது கருத்து.

மாயனே - மாயையையுடையவனே. மாயை சுத்தம் அசுத்தம் பிரகிருதி என மூவகைப்படுவதாய், சிவசத்தி சங்கற்ப ரூப சந்நிதியினின்றும் வாக்கு நான்கையும், காரண தத்துவம் ஐந்தையும் போக்கிய தத்துவமிருபத்துநாலையும் தோற்றுவித்தலின் இறைவன் மாயன் என விளிக்கப்பெறுகின்றார். இதனை 'விந்துவின் மாயையாகி' என்னும் சித்தித் திருவிருத்தத்திற்குச் சிவஞானசுவாமிகள் அருளும் பொழிப்பும் நன்கு விளக்கும்.

இங்ஙனமன்றி 'மாயையை ஓச்சும் மகாதேவனே' என்று பழையவுரையும், நஞ்சினை அமுதாகக் கொண்டமையாலும், எத்தனுகத் தன்னையாட்கொண்ட பிறகு தன்னை எத்தனுக மயக்கி வருதலானும் மாயன் என அழைத்தார்; சூழ்ச்சிக்காரன் என்றபடி எனப் பின்னுரைகாரர் ஒருவரும் உரைப்பர். இதனுல் சிவாகமத்தோடொட்டிய செம்மையான நயந்தோன்றுமையின், தன் சந்நிதியினின்று மாயையைக் காரியப்படச்செய்தலின் மாயன் என்றார் என்ற கருத்துச் சிறத்தல் காண்க.

விடமுண்டவானவா என்றது வானவர்கள் அமுதுண்ண வாய்பிளந்தனரேயன்றி நஞ்சுண்டபோது ஓடியொளிந்தனர்; தேவரீர் விடமுண்டீர் என்ற பெருமைதோன்ற 'மறி கடல் விடமுண்ட வானவா' என்றார். அங்ஙனம் விடமுண்டதால் அவர்கண்டம் மணிகண்டமாகப் புத்தழகுபெற்றது. எமக்கெல்லாஞ் சாவாமைதந்தது என வியப்பார் 'மணிகண்டத்து எம் அமுதே' என விளிக்கின்றார். "கறைமிடறணியலும் அணிந்தன்று" என்பது புறநானூறு.

நாயின்தன்மை நன்றி மறவாமை. அங்ஙனமாகவும் நான் உன்னை நினையவும்மாட்டேன் என்றமையால் நாய்க்குணமும் இல்லாத கடைப்பட்டவனென்று கருதவைத்தவாறும். உயர்ந்த உணவளித்துக் காப்பாற்றினுலும் இழிந்த உணவையும் விரும்பிச்செல்லும் நாய்போல அருளூட்டிக் காக்கவும் புலனூண் விரும்பிப் புறம்போன தன்மையால் நாயினேன் என்றார் எனலுமாம்.

நினையவும்மாட்டேன் என்ற உம்மை, புகழவும் மாட்டேன் என்ற ஏனைய தொழில்களையும் உணர்த்தின.

சிவப்பணி செய்யும்போது திருவைந்தெழுத்தைத் தியானித்துச் செய்வதே உத்தமம். ஆதலின் திருவைந்தெழுத்தை நெஞ்சழுத்தி அடிபணியவேண்டிய அடியேன் அங்ஙனம் செய்யேன் ஆதலால் பேயன்னவனுயினன் என்றதாம்.

பேயன் - பேய்த்தன்மை உடையவன். பேய் நன்றி செய்தாரையே வருத்தும் இயல்பினது; பிறரைப் பற்றிநின்று அவர் தம் அறிவைத் தமதாக்கி மயக்குவது. அதுபோல 'அடியேனும் சிவன்செய்த நன்றியை மறந்து பிறரை வருத்துமியல்பினன் ஆயினேன் என்றவாறும். தற்போதமாகிய பேய்பிடித்த யான் என்பது பழையவுரை.

சிவபெருமானைத் தரிசிக்க எண்ணியபோது செல்வேன் செல்வேன் என்றியம்பும் ஆசைப்பேயும், தரிசித்தவழிச் செல்வேன் என்று செப்பிச் செல்லுதலின்றித் தனது சத்தி அணுவணுவாகத் தேய்ந்துசெல்லும் ஆணவப்பேயும், தரிசித்தும் விரோதமின்றிச் சிலகாலம் இருந்து செல்லும் பிராரத்துவப் பேயும், இதனோடு யானும் செல்வேன் என்று இரந்துநிற்கும் மாயைப்பேயும் ஆகிய இவற்றால் பீடிக்கப்பட்டேன் ஆதலின் தன்னைப் பேயேன் என்றார் என்பர் சிவ அருணகிரிமுதலியார். பேயன் என என்னை ஒதுக்கிவிடுதலாகாது பெருநெறிகாட்ட வேண்டும் என்பது 'பேயனாகிலும்' என்பதாற் குறிக்கப்பெறுகின்றது.

பெருநெறி - முத்திநெறி. திருவடி என்பது பழையவுரை. மெலிந்தாரை வாழவைக்கும் பெருந்தகையாதலைப் 'பிறை குலாம் சடை' என்பது விளக்கி நிற்கின்றது. குலாவும் - குலாம் - விளங்கும். பிஞ்ஞகன் - தலைக்கோலம் அணிந்தவன். மயிற்பீலி என்பாரும், தலைப்பாகை என்பாரும் உளர். ஏ ஓ என்பன இரக்கக்குறிப்பு இடைச்சொற்கள்.

சேயனாகி நின்று - நின்னருள்பெற்று அணுக்கத்தில் வாழ வேண்டிய நான் தூரத்தில் நின்று என்க. சேயன் - மகனை ஒத்தவன். நின் மகனை ஒத்தவனாக நின்று அலறுவது அழகோ எனலுமாம். தேவரீர் அடிமைப்புத்திரனாகிய யான் என்பது பழையவுரை.

இங்ஙனம் நின் அருளனுபவம் அளவிட ஒண்ணாதவண்ணம் எம்மை ஆட்கொண்டமையால் அதனைப் பிரிதல் பெருந் துன்பமாகிறது; ஆதலால், பெருநெறிகாட்டிப் பிரியாதே மறியாதே இன்பத்துள் ஆழ்த்தவேண்டுதலின் இச்செய்யுள் பதிகக்கருத்தினை விளக்கி நிற்கின்றமை காண்க.

403 போது சேரயன் பொருகடற் கிடந்தோன்
புரந்த ராதிகள் நிற்கமற் றென்னைக்
கோது மாட்டிநின் குரைகழல் காட்டிக்
குறிக்கொள் கென்றுநின் தொண்டரிற் கூட்டாய்
யாது செய்வதென் றிருந்தனன் மருந்தே
அடிய னேனிடர்ப் படுவதும் இனிதோ
சீத வார்புனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெருந்துறை மேவிய சிவனே. 8

இ - ள்: குளிர்ந்த ஒழுகுகின்ற நீர் நிறைந்து விளங்கும் வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறைக்கண் விரும்பி எழுந்தருளிய சிவனே! என் மயக்கநோய்க்கு மருந்துபோல்பவனே! செய்வது யாது என்று மயங்கியிருந்தேன்; அடியேன் துன்பப் படுவதும் தேவரீருக்கு இனிதோ? தாமரைப்போதில் எழுந்தருளியுள்ள பிரமனும், அலைகள் கரையைப் பொருகின்ற கடலின்கண் அறிதுயில் கொள்ளும் திருமாலும், இந்திரனும் முதலான தேவர்கள் நிற்க, என்னைக் கோதாட்டி, உன்னுடைய ஒலிக்கின்ற கழலை அணிந்த திருவடிகளைக் காட்டி, 'இவற்றைக் குறிப்பாகப் பற்றிக்கொள்க' என்று நின் அடியார் கூட்டத்திற் கூட்டுவாயாக என்றவாறு.

சிவனே! இனி என்ன செய்வது என்று இருந்தேன்; நான் அல்லற்படுவது உனக்கு அழகோ? பிரமன் திருமால் முதலிய தேவர்கள் கிடக்கட்டும்; என்னைக் கோதாட்டித் திருவடி காட்டி, திருத்தொண்டர் கூட்டத்துள் சேர்ப்பாயாக என்பது கருத்து.

சீதப்புனல் என்பது திருப்பெருந்துறைக்கண் உள்ள பொய்கையின் பெயர். அதன் நீர் பரவிய வயல்கள் சூழ்ந்த பெருந்துறை எனலுமாம்.

மருந்து - பிணிநீக்கும் மருந்து. பிறவிப் பிணியை நீக்குதலின் இறைவனை மருந்தே என விளித்தார். "மருந்திவை மந்திரமிவை" "மருந்தவன்காண்" "மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி" என்பன முதலிய திருமுறைகளையும் எண்ணுக.

பிள்ளையை அடித்து அழவைத்து இன்புறுவார் போல, அடியேனை இடர்ப்படவைத்துப் பார்ப்பது இனிமையோ என்றவாறும்.

போது சேர் அயன் முதலிய அடைமொழிகள் அவரவர் செய்த காமியப் புண்ணியங்கட்கு ஏற்பப் பதவிகளினின்று இன்புறுவார்கள்; அவர்கள் நிற்க என்ற பொருளைவிளக்கியது.

கோதும் ஆட்டி - கோதாட்டி. உம் தவிர்வழி வந்தது. 'கோதாட்டும் சீலமும் பாடி' 'நந்தம்மைக் கோதாட்டி' என்பனவும் உன்னுக. கோதாட்டல் - சீராட்டல்போல்வதோர் வழக்கு. கோது - குற்றங்களை, ஆட்டி - அழித்து என்பாரும் உளர். பாசக்கொத்தையும் அறுத்து என்பது பழையவுரை. கோது - கொத்து.

குறிக்கொள்க என்று எனற்பாலது குறிக்கொள்கென்று எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது.

கழல்களே நீ அடையவேண்டிய இலட்சியத்தானம்; ஆதலின் இவற்றை இறுகப்பற்று என்று கூறி என்பார் 'குறிக்கொள்கென்று' என்றார்.

இங்ஙனம், கோதாட்டிக் குரைகழல் காட்டிய அநுபவம் பெரிதாதலை அறிவித்து, அது என்றும் நீங்காது இருக்கத் தொண்டரிற்கூட்டுதலை விரும்புதலின் சிவானந்தம் அளவறுக்க ஒண்ணாமையை அறிவித்தவாறு காண்க.

*404 ஞால மிந்திரன் நான்முகன் வானவர்*
*நிற்க மற்றெனை நயந்தினி தாண்டாய்*
*கால னாருயிர் கொண்டபூங் கழலாய்*
*கங்கை யாயங்கி தங்கிய கையாய்*
*மாலு மோலமிட் டலறுமம் மலர்க்கே*
*மரக்க ணேனையும் வந்திடப் பணியாய்*
*சேலு நீலமும் நிலவிய வயல்சூழ்*
*திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.* 9

இ - ள்: கெண்டை மீன்களும், நீலப்பூக்களும் விளங்குகின்ற வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறை மேவிய சிவனே! பூமியின்கண்ணுள்ளோரும், இந்திரனும், பிரமனும் மற்றத் தேவர்களும் திருவடியை விரும்பிக் காலம்நோக்கி நிற்க, அடியேனை விரும்பி இனிதாக ஆட்கொண்டனை; காலனது அரிய உயிரைக்கொண்ட பொலிவாகிய கழல்களையுடையவனே! கங்கையை உடையவனே! அக்கினி தங்கப்பெற்ற கைகளை உடையவனே! திருமாலும் கிடைக்கப்பெறாது ஓலமிட்டு அலறும் அத்திருவடித் தாமரைகளில், மரக்கண்ணை ஒத்த கண்களையுடைய என்னையும் வரும்படிக் கட்டளை தருவாயாக என்றவாறு.

எல்லோரும் நிற்க என்னை ஆட்கொண்டாய்; திருவடித் தாமரையைக் கண்டு கசியாத மரக்கண் படைத்த என்னையும் வரக் கட்டளையிடுக என்பது கருத்து.

ஞாலம், இடவாகுபெயராக மக்களையுணர்த்தியது. ஞாலமிந்திரன் எனக்கூட்டி வானுலகத்துள்ள இந்திரனும் என்றலும் ஒன்று. நயந்து - தானே விரும்பி. ஆட்கொள்ளுதற்கேற்ற பரிபாகமில்லாத என்னையும் காரணம் இன்றியே கருணைகாட்டி ஆண்டாய் என்பார் 'நயந்து இனிது ஆண்டாய்' என்றார்.

காலன் ஆருயிர்கொண்ட எனப்பிரிக்க. மார்க்கண்டேயர் உயிரைக் கவரவந்த காலன் உயிரைக் கவர்ந்த திருவடியாய் என்றது.

திருமால் பன்றியாய்த் தேடியடையமுடியாத திருவடியாதலால் 'மாலும் ஓலமிட்டலறும் அம்மலர்க்கு' என்றார். மலர்க்கு - மணற்கு என்புழிப்போல மலரில் என ஏழாம் வேற்றுமையாகப் பொருள்கொள்க.

திருவடியைக்காட்டியும் சூட்டியும் ஆட்கொண்டும் கண்கள் கசியாதிருந்தமையின் தம்மை மரக்கண்ணேன் என்றார். முன்னும் 'மரக்கண்' என்றும், 'கண்ணும் மரமாம் அடியனேற்கே' என்றும் வருவனவற்றைச் சிந்திக்க.

இத்திருப்பாடல், யாருக்குங்கிடையாத பேறு அடியேற்குக் கிடைத்தது என வியந்தமையானும், 'மலர்க்கு வந்திடப் பணியாய்' என மீட்டும் அவ்வநுபவத்தை வேண்டலானும் சிவானந்தமளவறுக்க ஒண்ணாமையை உணர்த்தியவாறு காண்க.

405 அளித்து வந்தெனக் காவவென் றருளி
அச்சந் தீர்த்தநின் அருட்பெருங் கடலில்
திளைத்தும் தேக்கியும் பருகியும் உருகேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே
வளைக்கை யானொடு மலரவன் அறியா
வான வாமலை மாதொரு பாகா
களிப்பெ லாமிகக் கலங்கிடு கின்றேன்
கயிலை மாமலை மேவிய கடலே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள் : திருப்பெருந்துறை மேவிய சிவனே! சங்கினைக் கையில் ஏந்திய திருமாலொடு தாமரைக்கண் இருப்பவனாகிய பிரமனும் அறியாத தேவனே! இமயமலை அரசன் மகளாகிய உமாதேவியை இடப்பாகங்கொண்டவனே! திருக்கயிலை மலையில் விளங்குகின்ற கடலே! மதத்தால் விளைந்த களிப்பு மிக அறிவு திரிந்து கலங்குகின்றேன்; அடியேற்குக் கருணைசெய்து,

ஆஆ என்று அருள்வழங்கி, அச்சத்தைப் போக்கிய நின் அருளாகிற பெரிய கடலிலே மூழ்கியும், நிறைத்தும், குடித்தும், மனம் உருகேன்; யான் என்செய்வேன் என்றவாறு.

சிவனே! நீ எனக்கு அருளிய அருட்கடலில் திளைத்தும் நிறைத்தும் குடித்தும் உருகிலேன்; களிப்பாற் கலங்குகிறேன் எனலும் ஆம்.

அளித்து - கருணைசெய்து. அளி என்னும் பெயரடியாகப் பிறந்த வினையெச்சம். அளி - வினையடி என்பாரும் உளர்.

ஆவ: இரக்கக்குறிப்பு இடைச்சொல். அருட்பெருங்கடல் என்றது சிவானந்தத்தை. திளைத்தும் தேக்கியும் என்பன முதலியன அநுபவம். உருகேன் என்னநுபவ அளவில் அது அடங்கிற்றிலது என்ற கடந்த தன்மை. இவற்றால் சிவானந்தம் அளவறுக்கொண்ணாமையை உணர்த்தியவாறும்.

வளைக்கையான் - பாஞ்சசன்யம் என்னும் சங்கினைக் கையிலுடைய திருமால். அரி அரற்குத் தேவியாதலின் வளையைக் கையிலுடையவன் எனலுமாம்.

அறியா வானவா என விளித்தது அவர்கள் மூவரில் ஒருவனென நினைத்திருந்தும் அவர்களாலும் அறியப்படாத அருமையை விளக்கியது.

மலைக்கண் மேவிய கடலே என்றது வியப்பென்னும் சுவை தோன்ற நின்றது. கடல் - அருட்கடல்.



நடுப்பகலில் சுடுமணலில் நல்லடியார் நெற்றியிலே
சுடுசெங்கல் ஏற்றிவைத்துத் துயரமிகத் தண்டித்தல்.

# 24. அடைக்கலப்பத்து

[பக்குவ நிண்ணயம்]

அடிகளார் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக் குங்காலத்து, அடியார்கள் அனைவரும் இறைவனது திரு வடிக் கமலத்தைச் சேர்ந்து பேரின்பக் கடலில் அமிழ்ந் திருக்கத் தாம்மட்டும் தனித்தமைக்குக் காரணம் தமக்குப் பரிபாகமின்மையே என உணர்ந்து, அடி அடைதற்குரிய பக்குவத்தை வரையறுப்பாராக, இப்பதிகத்தை அருளுகின் ரார்கள்.

அடைக்கலம் புகுவதை அறிவிக்கும் பாடல் பத்தினைக்கொண்ட நூற்பகுதி அடைக்கலப்பத்து. இதில், ஏனைய அடியார்கள்போலத் தாமும் திருவடியை அடையவிடாது தடுத்து நின்றது வாசனாமலம் ஆதலின் அதற்கு அஞ்சி, இறைவனிடம் அடைக்கலம் புகுந்ததை அறிவிக்கும் பகுதி என்பது கருத்து. இதன் கருத்தாவது பக்குவ நிர்ணயம்; அதாவது வித்தும் அங்குரமும்போல என்று பழைய குறிப்புக்கூறும். வித்தின்தன்மை முளையிற் காணப்படுமாறுபோல, வித்தொன்றும் முளையொன்றுமாக மாறித் தோன்றாதவாறுபோல வாசனாமலம் கெடாத ஆன்மா ஒருக்காலும் திருவருளுக்கிலக்கா காது என்பதனை உணர்த்த இப்பதிகத்து 'அழுக்கு மனத்தடியேன் உன் அடைக்கலம்; வல்வினையேன் உன் அடைக்கலம்; கெடுவேன் உன் அடைக்கலம்' எனத் தடையும், அவற்றை நீக்கும் உபாயமும் தெரிவித்து வேண்டிக்கொள்கின்றார்.

பழையவுரை "அத்துவிதந் திகழடைக்கலப் பத்து, வத்து நிர் ணயம் வகுத்துரைத் ததுவே" என்ற அகத்தியச் சூத்திரத்தை மேற்கோள்காட்டி, வாசனாமலத்தை அகற்றி, அருளாம்வகையில் திருவடிக்கீழ் வைத்திருக்கும் பெருங்கருணையைத் துதித்தது என்று அநுபவப்பொருள் அறிவிக்கும்.

பழையபுராணம் "ஓதுவல் வாதனைகள் வந்தணுகாமல் அடைக் கலப்பத் துரைத்ததாமே" என்னும்.

முன்பதிகத்து, செத்திலேன், செத்திடப் பணியாய், தீப்புகேன் என்றிங்ஙனம் நைந்து இறைவனைப் பிரிந்து இருப்பதைவிட இறப்பதேமேல் என விண்ணப்பித்தும், சாதல் கிடைக்காமையால்

வருத்தமிக்கும், ஆன்மபோதநிலையில் வழிகாணமுயன்று முடியாமை யாலும் செயலற்றுத் தற்போதமும் தன்முனைப்பும் அற்று, ஆண்ட நீ எதுசெய்யினும் செய் நான் உன் அடைக்கலம் எனத் தன்னையே திருவடிக்கண் அளித்தமையே அடைக்கலம் என்பது. சுருங்கக் கூறின் தலையில் தீப்பற்றிய ஒருவன் ஓடோடியும் வந்து குளத்தினிடம் அடைக்கலம்புகுவதுபோல வாசனுமலம்வந்து தாக்க அதற்கு அஞ்சி ஓடிவந்து அருட்கடலில் அடைக்கலம் புகுதலை அறிவிப்பது என்பதாம்.

## கலவைப் பாட்டு

திருச்சிற்றம்பலம்

406 *செழுக்க மலத்திர ளனநின்*
*சேவடி சேர்ந்தமைந்த*
*பழுத்த மனத்தடி யருடன்*
*போயினர்யான் பாவியேன்*
*புழுக்க ணுடைப்புன் குரம்பைப்பொல்*
*லாக்கல்வி ஞானமிலா*
*அழுக்கு மனத்தடி யேன்உடை*
*யாயுன் அடைக்கலமே.* 1

இ - ள்: வளமான தாமரைக் கூட்டத்தையொத்த நின் சேவடிகளைத் தியானித்து அடங்கிய அன்புகனிந்த மனத்தினையுடைய அடியார்கள் உன்னுடன் வீட்டின்பவுலகை எய்தினர்; பாவியேனாகிய யானோ புழுக்கள் நிறைந்த இடத்தினையுடைய புன்மையான உடலாகிய கூட்டினையும், கல்வி அறிவில்லாத பொல்லாத காம கோப தாபங்களாகிய அழுக்குகள் நிறைந்த மனத்தினையுடைய அடியேன்; எம்மை உடைமையாக அநாதியே பெற்றவனே! உனக்கு அடைக்கலம் என்றவாறு.

பரிபாகம் பெற்ற அடியார்கள் நின்னுடன் கூடவே வீட்டுலகம் புக்கனர்; பாவியாகிய நானோ வினைவயத்தாற்பெற்ற உடற்கூட்டில் உறைபவன்; அழுக்கு மனத்தவன்; உனக்கு அடைக்கலம்; நீயே அழுக்கு அகற்றிப் பாதுகாக்கவேண்டும் என்பது கருத்து.

செழுங்கமலம் எனற்பாலது எதுகை நோக்கிச் செழுக்கமலம் என வலித்தல் விகாரம் பெற்றது. திருவடி இரண்டாதலின் செந்தாமரைமலரின் திரளையொத்த சேவடி என்றார்.

சேர்தல் - இடைவிடாது தியானித்தல். அமைதல் - அறிவு இச்சை செயல்கள் அடங்குதல். பழுத்த மனம் - அன்புமிக

அதனுற்கனிந்த - கனிகின்ற மனம். உண்மையடியார்கள் இடைவிடாது தியானித்தலும், மனமொழிமெய்கள் பொறிவழி பற்றிப் புலன்களிற் செல்லாது அடங்குதலும், கனிந்த மனமுடைமையுமாகிய மூன்று இயல்பும் உடையவர்கள் என்பது உணர்த்தப் பெற்றது. இதுவே பக்குவநிண்ணயமாதல் தெளிக.

உடன் போயினர் - ஆசாரியனுடன் செல்லுதல் மாணுக்கர்க்குப் பெருமைதரும் செயல். மன்னருடன் செல்லுதல் பரிவாரங்களுக்குச் சிறப்பு. அதுபோல மெய்யடியார்கள் உடன் சென்றமை அவர்கள் பரிபாக விசேடத்தைத் தெரிவிப்பது. பழையவுரை அபேத அத்துவித அடிமை வாழ்வான இன்பம் இம்மையிலே பெற்ருர்கள் என்னும். உடன் போயினர் - இம்மையிலே பெற்ருர்கள். எடுத்த இப்பிறவியிலேயே குருவுடன் சென்று பெற்றனர் என்பது கருத்து. இதற்கு அடிக்குறிப்பு எழுதுகிற ஒருவர் உன்ஞேடு சென்றனர் என்றும் கூறுவர் என்று எழுதினுர். பழையவுரைக்கும் வேற்றுரைக்கும் மாற்றம் யாதோ என விடுக்க.

பாவியேன் யான் அழுக்கு மனத்தடியேன்; உடையாய் ! உன் அடைக்கலம் என முடிக்க.

என்ஃன நின்னுடன் போகாதவாறு தடுத்தது என் பாவமே என்பார் 'பாவியேன் யான்' என்ருர்.

புழுக்கண் உடை புன் குரம்பை - புழுக்கள் நிறைந்த இடத்தையுடைய (புல்லிய) இழிந்த உடம்பு. மலந்தங்கிக் கெட்ட இடங்களிலெல்லாம் புழுக்கள் நெளிகின்ற இழிவிஃனயுடைய உடல் என்றவாரும். குரம்பை உருவகம்: உடல். கல்வி ஞானம் இலாப் பொல்லா அழுக்கு மனத்து அடியேன் எனக்கூட்டுக. கல்வி கலாதத்துவத்தின் காரியமாய்ச் சிறிது அறிவு விளக்கம் தருவது; பாசஞான வடிவினது; திருவருள் துணை செய்யுமாறல் பதிஞானம் பெறத் துணை செய்வது. அதஃன முறைப்படிப் பெருமையால் பொல்லாத - தீமை பயப்பதான அழுக்குகள் என்மனத்தில் நிரம்பிவிட்டன என்பார் இங்ஙனம் கூறினுர். நின்றமுறையேகொண்டு, மெய்ஞ்ஞானம் பயவாத - கலகலகூஉந்துணையதான வீண் கல்வியினுல் மெய்ஞ்ஞானமில்லாத அழுக்குமனத்தேன் என்பது பழையவுரை.

உடையாய் என்றது எனக்கு என்றும் சுதந்திரம் இன்று; என்பதஃன விளக்கிநின்றது. பின்னரும், 'மலரடிக்கே கூவிடுவாய் கும்பிக்கே இடுவாய் நின் குறிப்பறியேன்'(413) என்றது காண்க.

உன் அடைக்கலம் - கருவி கரணங்கள் செயலற்றுப் பசு போதம் கழன்று தருக்காகிய ஆணவம் அடங்கிய நிலையில் விண்ணப்பிக்கும் பக்குவநிர்ணய விண்ணப்பமிது என்க.

407 வெறுப்பன வேசெய்யு மென்சிறு
மையைநின் பெருமையினால்
பொறுப்பவ னேயராப் பூண்பவ
னேபொங்கு கங்கைசடைச்
செறுப்பவ னேநின் திருவரு
ளாலென் பிறவியைவேர்
அறுப்பவ னேயுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 2

இ - ள்: வெறுக்கத்தக்க பாவங்களையே செய்யும் அடியேனது சிறுமைக் குணங்களை நின் பெருமைக் குணங்களாற் பொறுப்பவனே! பாம்பை அணியாகப் பூண்பவனே! மேன் மேலும் பொங்கி வருகின்ற கங்கையாற்றைத் திருச்சடையின் கண்ணே அடக்குபவனே! நின்னுடைய கருணையினாலே என் பிறவியை வேரோடு களைபவனே! என்னை உடைமையாகவுடையவனே! அடியேன் உனக்கு அடைக்கலமாவேன் என்றவாறு.

பாம்பும் கங்கையும் செய்யாத தீமைகளை அடியேன் செய்திலேன்; அவற்றைத் தாங்கி ஆட்கொண்டதுபோல என்னையும் (பிறவியை நீக்கி) ஆட்கொள்ளவேண்டும்; நான் உன் அடைக்கலம் என்பது கருத்து.

'சிறியோர் செய்த சிறு பிழை யெல்லாம் பெரியோராயிற் பொறுத்தலும் கடனே' என்பவாகலின் யான் செய்த சிறுமைகளைப் பொறுத்தல் நின் பெருந்தன்மைக்கு இயல்பு என்பார் 'என் சிறுமையை நின் பெருமையினால் பொறுப்பவனே' என்றார். சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய உயிர்களாகிய நாங்கள் அநாதியே அறியாமையைச்செய்யும் ஆணவமலத்தோடு கூடியவர்களாதலின், தேவரீர் திருவுள்ளத்திற்கு உவப்பாவன இவை என்பதைச் சிவாகமங்களாலும், ஆன்றோர் ஆசாரத்தானும் தெரிந்துவைத்திருந்தும், மலமறைப்பால் அகங்கரித்து உவக்கத்தகாத - வெறுக்கத்தக்க செயல்களையே செய்வேமாயினும், அவை எம் அறியாமை ஏதுவாக நிகழ்ந்தன என்று திருவுளம் பற்றி இரங்கிப் பொறுத்தருளவேண்டும்; அங்ஙனம் பொறுப்பதே நின் பெருந்தன்மைக்கு அழகுமாம் என்பது கருத்து. அரா - பாம்பு. இது நஞ்சும், நன்றிகெட்ட தன்மையும் உடையதாயினும் அதனைப் பெரிய அணிகளாக அணிந்து தேவரீர்

ஆட்கொள்ளவில்லையா? நான் நச்சுப்பாம்பைவிட மிகக்கொடியவனு? என்பார் 'அராப்பூண்பவனே' என்று விளித்தார்.

மேலும் கங்கை எவ்வளவு மிடுக்கோடு உன் சந்நிதானத்தில் இறங்கினுள்; அவள் ஆணவத்தை ஒடுக்கிச் சடையில் அடக்கிப் பொறுத்த உனக்கு என் சிறுமையினுல் விளைந்த வெறுப்பனவற்றையும் பொறுத்தல் மிக மிக எளிதாம் என்று வேண்டுவார் 'பொங்கு கங்கை சடைச்செறுப்பவனே' என்றுர்.

பிறவி வினைவயத்தால் ஓயாமற்கிளைக்கும் மரம்போல்வது. அடியேன், பதிபுண்ணியங்களைச் செய்தலால் கிளைகளைக் கழித்துக் கொண்டே இருப்பேனுயினும், அது என்சோர்வின்கண் மீட்டும் கிளைத்துத் தழைத்துவிடும் இயல்பினது; அதனை நின் திருவருளாகிற குந்தாலிகொண்டு வேரையே களையவேண்டும் என்பதை 'என் பிறவி வேர் அறுப்பவனே' என்ற விளியால் புலப்படுத்துகிறுர்.

உடைமையாக உள்ளவனுக்கு மீட்டும் அடைக்கலம்கூறல் தகுதியாமா? அங்ஙனமிருந்தும் உடையாய் உன்னடைக்கலம் எனற்கு இயைபு யாது எனின், உன்னை உடையான் என்றும் நான் உன் உடைமை என்றும் உணர்வதற்கு முன்னே தற்போத முனைப்பால் புறம்பான பாவ கன்மங்களைச் செய்துவிட்டேன்; அவை முதிர்ந்து என்னை இப்போது வாட்டத்தொடங்குகின்றன; அவைகளினின்று அடியேனைக் காக்கவேண்டும் என்பது கருத்தே அன்றி, இயல்பாகவே உடைமையமைந்ததாக (ஸ்வதசித்தமாக) இருக்க உன் அடைக்கலம் என யான் இப்போது விண்ணப்பிக்கவில்லை; அச்சத்தாற் கூறும் அவல உரையே என்றவாறும்.

இவ்வண்ணம் விண்ணப்பிப்பதும், உன்னை உடையான் என்றுணர்தலும், அடைக்கலம் புகுதலும் ஆகிய இவைகள் பரிபாக சின்னமாதலின் இத்திருப்பாடல் பக்குவ நிர்ணயமாதல் காண்க.

408 பெரும்பெரு மானென் பிறவியை
வேர றுத்துப் பெரும்பிச்சுத்
தரும்பெரு மான்சது ரப்பெரு
மான்என் மனத்தி னுள்ளே
வரும்பெரு மான்மல ரோன் நெடு
மாலறி யாமனின்ற
அரும்பெரு மானுடை யாய்அடி
யே னுன் அடைக்கலமே. 3

இ - ள் : மிகப் பெரிய பெருமானே! என் பிறவியாகிற விருட்சத்தின் வேரை அறுத்து எனக்கு உனது திருவடிக் கண்ணே பெரும் பித்தாக விளங்கத்தரும் பெருமானே! சாமர்த்தியம் பொருந்திய பெருமானே! என் மனத்தினுள் எழுந்தருளும் பெருமானே! பிரமனும் திருமாலும் அறியாமல் அவர்கள் எதிரேயே அண்ணுமலையாக நின்ற அரிய பெருமானே! உடையாய்! அடியேன் உன் அடைக்கலம் என்றவாறு.

பெரியவற்றுள் பெரியனும், அரியவற்றுள் அரியனும், எல்லாந்தருபவனும் உள்ள நீ என்னை உடையாய் ஆதலால் யான் உன் அடைக்கலம் என்பது கருத்து.

பெருமான் - பெருமையையுடையவன். அங்ஙனமாயும் பெரும் பெருமான் என்றது பெருமான் என்ற பெயரைக் காரணங்கருதாமலே எத்தனையோ தேவர்கள் தாங்கியிருக்க அவர்கட்கும் தலைவனுதற்சிறப்பு உனக்கே உளது என்பதை வியந்ததாம்.

பிறவி நீங்கிய சிவானுபவ காலத்தில் ஆன்மா, சிவத்தையன்றி வேறொன்றையும் சாராது சிவத்தையே நோக்கிச் சிவமாகவே விளங்கியிருக்கும் ஆதலின், கண்டதையே கண்டு, கொண்டதையே கொண்டு, கூறியதையே கூறும் பெரும் பிச்சான அத்தன்மையை விளக்கிப் 'பெரும்பிச்சுத் தரும் பெருமான்' என்றார்.

சதுரன் - சாமர்த்தியம் பொருந்தியவன். விச்சதின்றியே விளைவுசெய்தலும் வைச்சுவாங்கலும் பிச்சதாக்குதலும் முதலாயின இறைவன் செய்யும் சதுரப்பாடுகள் என்க. சதுரர்கள் எல்லாருக்கும் தலைவன் சதுரப்பெருமான்.

என்மனம் என்ற குறிப்பு இறைவன் எழுந்தருளுதற்குத் தகாத அறுவகைப் பகைகளும் நிரம்பியது என்பதாம். ஆயினும் கருணையினால் வருகின்றான் என்ற எளிமைதோன்ற 'என் மனத்து வரும்பெருமான்' என விளித்தார். மனத்தைக்காட்டிலும் அணிமையானதொன்று இன்மையின் இத்திருப்பாடலிற் கூறப்பெறும் விளிகள் அனைத்தும் அண்மைவிளிகளாகவே அமைந்துள்ளமை சிவானுபவ முதிர்ச்சியின் விளைவென்க.

இத்திருப்பாட்டில், பெருமானைப் பலபடப் புகழ்ந்து தோத்தரித்தலும், இறைவன் தானே உவந்து எழுந்தருளுதலுமாகிய பக்குவங்கள் நிர்ணயிக்கப்பெறுகின்றமை காண்க.

409 பொழிகின்ற துன்பப் புயல்வெள்
ளத்தினின் கழற்புணைகொண்
டிழிகின்ற அன்பர்க ளேறினர்
வான்யா னிடர்க்கடல்வாய்ச்
சுழிசென்று மாதர்த் திரைபொரக்
காமச் சுறவெறிய
அழிகின்ற னன்உடையாய்அடி
யேனுன் அடைக்கலமே. 4

இ - ள்: உடையாய்! பிறவிப்புயல் பொழிகின்ற துன்ப வெள்ளத்தில் இழிந்து செல்கின்ற அன்பர்கள், நின் திருவடியாகிற தெப்பத்தைக்கொண்டு முத்திக்கரையை ஏறினார்கள்; யான் திருவடித்துணை பற்ருது துன்பக்கடலில் சுழியில் அகப்பட்டு, மாதர்களாகிய அலைகள் மோத, காமமாகிய சுருமீன் எதிர்த்துவரக் கெடுகின்றேன்; அடியேன் உனது அடைக்கலம் என்றவாறு.

பிறவித்துன்பத்தில் அகப்பட்ட அன்பர்கள் திருவடியாகிற தெப்பத்தை உறுதியாகப் பற்றியமையின் கரை சேர்ந்தனர்; யான் அதனைப் பற்ருமையால் துன்பக்கடலில் வீழ்கின்றேன்; மாதரலை மோதுகிறது, காமச்சுரு கதுவுகிறது, அழிகின்றேன்; உன் அடைக்கலம் என்கின்ருர்.

பொழிகின்ற துன்பம் என்றதால் துன்பம் மழையாகவும், பிறவி புயலாகவும், வான் ஏறினர் என்பதால் வான் கரையாகவும் கொள்ளப்பட்டன.

பிறவி நாம் ஈட்டிய வினைகள் திரண்டு கருக்கொண்டு முதிர்ந்துவருதலின் புயலாக உருவகிக்கப்பெற்றது. புயல் - மேகம். பிறந்தோருறுவது பெருகிய துன்பமாதலின் துன்பம் மழையாகவும், அதன் திரட்சி வெள்ளமாகவும் கொள்ளக்கிடந்தன. கழல் ஆகுபெயராகத் திருவடியை உணர்த்திற்று. பிறவியும் அதனல் வரும் துன்பமும் யாரையும் விடா ஆகலின் அன்பர்கள் அதனுட்பட்டு இழிவாராயினர். ஆயினும், அவர்கள் திருவடிப்புணைபற்றிக் கிடந்தார்கள், கரை ஏறினுர்கள் என்பதாம்.

எனக்கும் அவர்களுக்குக் கிடைத்தகாலத்துத் திருவடித் தெப்பம் கிடைக்கத்தான் செய்தது; அறியாமையால் அதனைப் பற்றிலேன்; அதனல் துன்பக்கடலிலேயே வினைச்சுழியில் அகப்பட்டு வருந்துகிறேன் என்பார் 'யான் இடர்க்கடல்வாய்ச் சுழி சென்று' என்ருர்.

அலை ஒன்றன்பின் ஒன்றாக எழுந்து, நீரளவு சிறிதாயினும் பெருக்கக்காட்டி கடலுள்ளும் புறம்புமாக இழுத்து அலைக்கும் தன்மையது. அதுபோல மாதர்களும் ஐம்புல இன்பங்களை ஒன்றன்பின் ஒன்றாக ஊட்டி, தம்மின்பம் சிற்றின்பமாயினும் அதனைப் பேரின்பமாகக் காட்டிப் பிரியவுமுடியாமல் கூடியே இருக்கவும் முடியாமல் அலைக்கழித்தனர் என்பார் மாதர்களைத் திரையாக உருவகித்தனர்.

சுறவு வாயங்காந்து யானையாயினும் அதனை விழுங்கித் தம் மகப்படுத்தும் தன்மையது. சுறவின் வாய்ப்பட்டது மீளாது. அதுபோலக் காமத்தின்வயப்பட்டார் மீளாது, சிறிது சிறிதாக நசித்துப்போதலின் காமத்தைச் சுறவாகக் காட்டினதாம் என்க.

இத்தகைய சூழ்நிலையில் உய்யும் உபாயம் ஒன்றுமறியேன்; உம்மையே அடைக்கலமாக அடைகின்றேன் என்பதாம்.

ஆன்மா வினைப்போகங்களுக்கீடாக எத்துணைத் துன்பத் துட்பட்டு எவ்வளவு வருந்தினாலும் திருவடிப்புணை பற்றிக் கிடக்குமேல் உய்யும்; அஃதின்றி உலகவின்பத்தை உறுதி யெனக் கொண்டுழலுமேல் இடிமேலிடியாகத் துன்புறும் என உடன்பாட்டு முகத்தானும், எதிர்மறை முகத்தானும் பக்குவ நிண்ணயம் செய்தவாறு காண்க.

410 சுருள்புரி கூழையர் சூழலிற்
பட்டுன் திறமறந்திங்
கிருள்புரி யாக்கையி லேகிடந்
தெய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரி மானன்ன நோக்கிதன்
பங்கவிண் ணோர்பெருமான்
அருள்புரி யாயுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 5

இ - ள்: வெருளுகின்ற மான்பார்வையை ஒத்த நோக்கினை உடையவராகிய உமாதேவியாரை இடப்பாகத்திற் கொண்டவனே! தேவர்கள் தலைவா! உடையாய்! சுருண்ட விருப்பத்தை விளைவிக்கின்ற கூந்தலையுடைய பெண்களின் மைபூசிய விசாலமான கண்ணின் சூழலிற்சிக்கி, உன் கருணைத் திறத்தை மறந்து இக்கன்மபூமியில், அறியாமையை விளைவிக்கின்ற உடல் என்னும் வலையிலே அகப்பட்டுக்கிடந்து இளைத்தேன்; அடியேன் உனது அடைக்கலம்; அருள்புரிவாயாக என்றவாறு.

அடியேன் பூமியில் மாதர்மயக்கிலகப்பட்டு வருந்துகின்றேன்; அடைக்கலம் ஆவேன்; காத்தருள்க என்பது கருத்து.

மைத்தடங்கண் சூழலிற்பட்டு எனக் கூட்டுக. பழைய உரை 'மைத்தடங்கண் வெருள்புரி மான் அன்ன நோக்கி' எனக் கூட்டி, மை படிந்த கண்ணுள் பெத்தநிலை முத்திநிலை என்ற மருட்சி பொருந்திய மான்பார்வைபோலும் பார்வையையுடைய உமாதேவி என உரைக்கும்.

உன் திறம் - சிவபெருமான் நமக்கு அருள் புரிந்ததன்மைகள். பழையவுரை அறக்கருணையும் மறக்கருணையும் ஆகிய தன்மைகள் என்னும்.

இருட்டறையிற்புகுந்தவனுக்குப் பொருள் புலப்படாதவாறு போல இவ்வுடலுட்புகுந்த எனக்குச் செய்வன தவிர்வன புலப்படாவாயிற்று. அன்றியும், இருட்டறையில் இருளன்றி வேறு ஒன்றும் காணப்படாததுபோல என்னுடலின் அடங்கி யான் கண்டது அறியாமையே; அதனால் எய்த்தேன் என்பார் 'இருள் புரி யாக்கையிலே கிடந்து எய்த்தனன்' என்றார்.

இவ்வண்ணமாகிய துன்பநிலையில் உறுதுணையாவார் பிறரின்மையின் உன் அடைக்கலமானேன்; நீ அருள்புரியாய் என்றவாறு.

மாலை மாதர் போகத்தை வெறுத்தலும், உலகப்பற்றைத் துறத்தலும், இறைவன் உடையான் யாம் என்றும் உடைமை என உணர்தலும் திருவடிச் சார்பிற்குரிய பக்குவங்களாக இப்பாட்டில் நிண்ணயிக்கப்பெறுதல் காண்க.

411 மாழைமைப் பாவிய கண்ணியர்
வன்மத் திடவுடைந்து
தாழியைப் பாவு தயிர்போல்
தளர்ந்தேன் தடமலர்த்தாள்
வாழியெப் போதுவந் தெந்நாள்
வணங்குவன் வல்வினையேன்
ஆழியப் பாவுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 6

இ - ள் : கருணைக்கடலான அப்பனே! உடையாய்! மாவடுவின் பிளவையொத்த மை திட்டப்பெற்ற கண்களையுடைய பெண்களாகிய வலிய மத்திட்டுக்கடைய அதனால் உடைந்து தயிர்ப்பானையில் சுற்றிச்சுற்றி அலைகின்ற தயிரைப்போலத் தளர்ந்தேன்; வாழி; வலிய வினையேனாகிய யான், தடாகத்தில்

உள்ள தாமரை மலர்போலும் திருவடிகளை எந்நாளில் எப்பொழுது வந்து வணங்குவேன்? அடியேன் உன் அடைக்கலம் என்றவாறு.

ஆழியப்பா! உடையாய்! மகளிர் வன்மத்தாற் கடையப் பெற்ற தயிர்போல மறுகுகிறேன்; நின் மலர்த்தாளைக் காண்ப தெப்போது? என்று அலமருகின்றார்.

ஆழி - கடல். ஈண்டு கருணையாகிற கடல். ஆழி அப்பா - கருணைக்குக் கடலான தந்தையே என்பதாம். பழையவுரை சக்கரபாணியே என்னும். விற்குடியில் சலந்தராசுர வதத்தில் சிவபெருமான் சக்கரபாணியாக இருந்ததை உணர்த்தும் என்பர். அங்கு இறைவன், அந்தணச் சிறுவனாகவந்து தன்னோ டெதிர்ந்த சலந்தரன் வலியையுணர்த்தப் பூமியில் தன் திருவடியால் ஒருசக்கரம் கீறி 'இதனைத்தூக்கி உன் தலையில்வைத்துக் கொண்டால் நீ இறைவனை வெல்லும் ஆற்றல் உடையாய் என்று கருதுவேன்' என்றாராகச் சலந்தரன் அலட்சியமாகப் பூமியைப்பெயர்த்து அவ்வட்டத்தைத் தன் தலைமீது வைத்துக் கொள்ள, அது அவன் தலையை அறுத்தது என்பது வரலாறு; ஆதலால், அக்குறிப்புரைகாரர் கூற்றுப் பொருந்தாது என்க. தக்கயாகத்தில் வீரபத்திரராக இறைவன் எழுந்தருளியபோது கரங்களில் சக்கரமும், சூலமும், கேடயமும், வச்சிரமும், மணியும் ஏந்திச்சென்றார் என்ற வரலாறும் வீரபத்திர தியானசுலோகமும் நினைத்தற்குரியன. அன்றி, அறக்கடலாகிய அப்பனே என்பாரும் உளர்.

மாழை - மாவடு. வடு கண்ணுக்கு வடிவால் ஒப்பு. கண்ணின் தோற்றமும், அதன் ஒப்பனையும் வசப்படுத்தின என்பார் 'மாழை மைப்பாவிய கண்ணியர்' என்றார்.

மத்து - தயிர் கடையும் மத்து. அது கடைந்து கட்டியான தயிரை உடைத்து, ஆடையில் எங்கும் பரவியுள்ள வெண்ணெயையும் வெளிப்படுத்தி, அதனைத் தயிர் என்ற பெயரையும் மாற்றி மோராய் நீராக்குகிறது. அதுபோல, மகளிரும் தன்னை விரும்பியவனுடைய மனவுறுதியை உடைத்து, வலிமையைப் புறம்போக்கி அழகைக் கெடுத்து மனிதப்பதராக்குகின்றனர் ஆதலின் மகளிரை வலிய மத்திற்கு உவமை ஆக்கினார். வன்மம் - மர்மம் என்பதன் போலியாகக்கொண்டு மார்பால் உழக்க உடைந்து என வேறும் ஒரு பொருள் தோன்ற நிற்றல் காண்க. பாவுதல் - மறுகுதல்; பரவுதலுமாம்.

வாழி என்பது முன்னிலையசை. தடமலர்த்தாள் வாழி எனக் கூட்டி, செங்கமல வியாபகத் திருவடி சுகமே வாழ்க என உரைக்கும் பழையவுரை.

வல்வினையேன் நின் தடமலர்த்தாள் எந்நாள் எப்போது வந்து வணங்குவேன் எனக் கூட்டுக.

குருடனாக நடித்து வழியில் கிடந்த பெரும்பொருளைத் தாண்டிச் சென்ற பேறிலான்போல, நீயே கருணையால் வந்து தாளிணை காட்டினும் என் வல்வினை காண ஒட்டாது என்பார் தன்னை வல்வினையேன் என்றார். வினை பரிபாகமுறும் நாளே உன் தாளைக் காணும் நாள்; அந்நாள் எந்நாள் என்பதைச் சிற்றறிவினனாகிய அடியேன் எங்ஙனம் அறிவேன் என்பார் 'எந்நாள் எப்போது வந்து வணங்குவேன்' என்றார். இதன் பயன் அந்நாளையும் காலத்தையும் தேவரீரே குறிப்பித்தருள வேண்டும், அடியேன் உன் அடைக்கலப் பொருளாதலின் என்பதாம்.

மாதர்போகமே பெரிது என மயங்கியிருந்த நிலை மாறி, அதன் இழிவு புலப்பட நின் தாளை வணங்குவது எந்நாள் என்ற எண்ணம் தோன்றியகணமே பக்குவம் விளைந்தமைக்கு அறிகுறி; மேலும் அடைக்கலம் புகுதல் பக்குவநிண்ணயம் என்பதறிக.

412 *மின்கணி னார்நுடங்கு மிடையார்*
*வெகுளிவலையி லகப்பட்டுப்*
*புன்கண னாய்ப்புரள் வேனைப்*
*புரளாமற் புகுந்தருளி*
*என்கணி லேயமு தூறித்த*
*தித்தென் பிழைக்கிரங்கும்*
*அங்கண னேயுடை யாய்அடி*
*யேனுன் அடைக்கலமே.* 7

இ - ள்: மின்னுகின்ற கண்களையுடையவர்களும், துவள்கின்ற இடையினையுடையவர்களுமான பெண்களின் புலவியாகிய கோபவலையில் அகப்பட்டு, துன்பமுடையவனாகப் புரள்கின்ற என்னை, அங்ஙனம் புரளாதவண்ணம் என்னுள்ளத்தில் புகுந்து எழுந்தருளி, என்னிடத்தில் அமுதம்போல இனிமை சுரந்து தித்தித்து, என்னுடைய பிழைகட்காகக் கருணை காட்டும் அழகிய கண்களையுடையவனே! உடையாய்! அடியேன் உன் அடைக்கலம் என்றவாறு.

யான் செய்த பிழை, பேரின்பம் விரும்பிப் பெருமானாகிய உன்னைச் சரணடையவேண்டியிருக்கச் சிற்றின்பத்தை வெஃகி மாதர்புலவி வலையில் அகப்பட்டமை; அதனைப் பாராட்டாது என் பிழைக்கு இரங்கி ஆட்கொள்ளவேண்டும்; யான் உன் அடைக்கலப்பொருள் என்பது கருத்து.

கண்ணின் ஒளியால் வசப்படுத்துவாரும், இடையழகால் வசப்படுத்துவாரும் ஆகிய மாதர்கள் என்றது மாதர்கள் ஆடவரை வசப்படுத்தும் கருவிகளாக அவ்விரண்டையுமே பயன் படுத்துவர் என்பதை உணர்த்த.

கலவியாற் குறைந்த காதலை நிறைவித்துக் காதலர் தம்மை விட்டுப் பிரியாமலிருக்கப் புலவியாகிய வலையை விரிப்பர். புலத்துறை முற்றிய கலைஞரயினும் சிலந்திவலையுட்பட்ட ஈப் போல அவ்வலையுள் அகப்பட்டு அறிவிழந்து வருந்துவனதலின் வெகுளியை வலையாக உருவகித்தார்.

புன்கண் - துன்பம். புன்கணன் - துன்பமுடையவன். புரள் வேலை என்றது இடமும் காலமும் சூழலும் நோக்காது கள்ளுண்டார் கீழே விழுந்து புரள்வதுபோலச் செய்வதறியாது புரண்டேன்; அங்ஙனம் புரளாதவண்ணம் தெளிவுறுத்தியாண்டான்; இனித்தான்; என் பிழைக்கு இரங்கினன்; அத்தகைய கருணையாளன் சிவன் என்றவாறு.

கண்ணிலே அமுதூறி என்றது காட்சிக்கு இனிமையும், தித்தித்ததென்றது நாவிற்கினிமையும் பயந்தமை அறிவித்தது.

பிழைக்கு இரங்குதலாவது அடியவன் அறியாமையாற் பிழை செய்தான்; நாம் அருளாமையாற் பிழைத்தான் என்று மனமிரங்கிப் பிழையெலாந்தவிரப் பணித்தல்.

அங்கணன் - அழகிய கண்களை உடையவன். கண்ணுக்கு அழகு கண்ணோட்டமாதலின் பிழைக்கு இரங்கும் பெற்றியனை அங்கணன் என்றார்.

பிழைக்கு இரங்கும் அங்கணனே என்று போற்றுதலும் அடைக்கலம் புகுதலுமாகிய பக்குவங்களை இப்பாடல் நிண்ணயித்தல் காண்க.

413 மாவடு வகிரன்ன கண்ணிபங்
காநின் மலரடிக்கே
கூவிடு வாய்கும்பிக் கேயிடு
வாய்நின் குறிப்பறியேன்

பாவிடை யாடு குழல்போற்
கரந்து பரந்ததுள்ளம்
ஆகெடு வேனுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 8

இ - ள் : மாவடுவின் பிளவையொத்த கண்களையுடைய உமாதேவியாரை இடப்பாகத்துடையவனே! நின் திருவடித் தாமரையிடமாகக் கொள்ளும்படி அடியேனைக் கூவி அழைப்பாய் அல்லது கும்பிபாகம் என்னும் நரகத்தில் தள்ளுவாய்; நின் திருவுள்ளக்கருத்து எதுவோ? அறியேன்; என் மனம், நூற்பாவுக்குள் ஓடியாடும் குழல்போல மறைந்து பரவிற்று; ஆ! கெடுவேன்; உடையாய்! அடியேன் உனது அடைக்கலம் என்றவாறு.

நீ ஆண்டவன்; யான் அடியவன்; என்னைத் திருவடியில் சேர்த்து; நரகத்தில் தள்ளு; நின் திருவுள்ளம் எதுவோ யான் அறியேன்; என் மனம் பாவில் குழல்போலத் தடுமாறுகிறது; ஆதலால், அமைதி காணா யான் உன் கழலில் அடைக்கலம் புகுகின்றேன் என்பது கருத்து.

தலைவன் அடிமையை எதுவேனும் செய்யலாம் என்பார் 'மலரடிக்கே கூவிடுவாய், கும்பிக்கே இடுவாய்' என்கின்றார். சுந்தரமூர்த்திசுவாமிகளும் "விற்றுக்கொள் ஒற்றிவை விரும்பி ஆட்பட்டேன்" என்றல் காண்க. இறைவன் வேண்டத்தக்கது அறிவோன் ஆதலின் இன்னது அருளுக என்று வேண்டிக் கோடலும் அடிமை செய்யத்தகாத செயலாதலின் 'நின் குறிப்பு அறியேன்' என்றார்.

பாவு - நெசவிற்காகக் கஞ்சியிட்டு முறுக்கேற்றிப் பதப்படுத் தப்பட்ட நூற்பாவு. குழல் - நூலுண்டை போட்ட குறுக்கு நூல் நெய்யும் தார்க்குழல். மேலும் கீழுமாக மாறித் தூக்கப் பெற்ற பாவினுள் தார் மறையும்; பின்னர், நூலைப் பரப்பும்; அதனை அச்சால் நெருக்கி நெய்தவுடன் நூல் பரந்துதோன் றும்; அதுபோல, என் மனமும் ஒருநிலைப்படாது இங்கும் அங்குமாக அலைந்து பரந்தது, ஒன்றிநின்றிலது என்பதாம்.

'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' எனத் தன்முனைப்படங்கித் தலைவன்தாளில் தலைப் படுதலும், மனம் பாவாடுகுழல்போலாது எழுதிய விளக்குப் போல ஒன்றுபட்டு நிற்றலுமே பக்குவ நிண்ணயமாதல் அறிவித்தவாறு.

414 பிறிவறி யாஅன்பர் நின்னருட்
பெய்கழற் றாளிணைக்கீழ்
மறிவறி யாச்செல்வம் வந்துபெற்
றாருன்னை வந்திப்பதோர்
நெறியறி யேனின்னை யேயறி
யேனின்னை யேயறியும்
அறிவறி யேனுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 9

இ - ள்: உடையாய்! நின்னைப் பிறிதலையே அறியாத அன்பர்கள் நின் அருள்வடிவாகிய வீரக்கழலை அணிந்த திருவடியின்கீழ் மீளாச் செல்வமாகிய வீட்டினை வந்தடைந்தனர்; யானோ உன்னை வணங்குதற்குரிய சிவாகம நெறிகளையும் அறியேன்; உன்னையே உள்ளவாறுணரேன்; உன்னை அறியும் அறிவாகிய சிவஞானத்தையும் உணரேன்; அத்தகைய அடியேன் உன் அடைக்கலம் ஆவேன் என்றவாறு.

பிறிதலை அறியாத அன்பர் பிறிவறியா அன்பர். எப்போதும் அவன் குறிப்பிலேயே ஒன்றிவாழும் அன்பர் என்றவாறு.

கழல்பெய் நின்னருள் தாளிணைக்கீழ் வந்து எனக்கூட்டுக. வீரக்கழல் இடப்பெற்ற நின்னருள்வடிவாகிய திருவடியின்கீழ் வந்து என்க.

மறிவறியாச் செல்வம் - பெற்றவர் மீளவும் பெறுதலை அறியாத செல்வம் எனலுமாம். மீளாச்செல்வமாவது வீட்டின்பம். தாடலைபோல ஒன்றிநின்று மோட்சவின்பம் பெற்றார்கள் என்க.

வந்திப்பது - பூசிப்பது. இதற்குரிய நெறிகளை மந்திரங்களுடன் விளக்கும்நூல் சிவாகமங்கள் ஆதலின் சிவாகமங்களை ஓதி விதிப்படி உன்னைப் பூசிப்பதற்குரிய நெறிகளை அறியேன் என்றார்.

நெறியறியாமைமட்டும் அன்று; ஆன்மாக்கள்மீதுவைத்த கருணையால் ஆகமங்களை அருளிய உன்னையே அறியேன்; என்றது சங்காரகாரணனாகிய சிவனே முதல் என அறியாமை. இதுபோல வருவன அனைத்தும் சகலான்மாக்களின் நிலையைத் தம்மேலிட்டு உலகருய்ய உணர்த்தியதாம்.

பாச பசு ஞானங்களால் சிவன் அறியப்படான் ஆதலின் சிவனையேயறியும் அறிவு சிவஞானம். இதுவே திருஞானம், மெய்ஞ்ஞானம், பரஞானம் என்றெல்லாம் வழங்கப்பெறுவது.

இதனையடைந்தோர் சிவமே கண்டிருப்பர் ஆதலின் அச்சிவம் அடியேற்கு அனுபவமாகாமையால் 'நின்னையேயறியும் அறிவு அறியேன்' என்றார்.

இத்தகைய குற்றங்கள் உடையேனாயினும் அடைக்கலம் புகுந்தேன் ஆதலின் பிறிவு அறியா அன்பர் பெற்ற வாராத செல்வத்தை வருவித்தருள்க என்றதாம்.

பிறிவறியா அன்புடைமையும், வந்திக்கும் நெறியறிதலும், தலைவனை அறிதலும், சிவஞானப்பேறும் ஆகிய இவைகளே ஆன்மா பரிபாகம் பெறுதற்குரிய இலக்கணம் என நிர்ணயித்தலின் இது பக்குவநிண்ணயம் உணர்த்திற்று என்க.

*415* வழங்குகின் றாய்க்குன் னருளா
ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை
யேனென் விதியின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர்
பருகத்தந் துய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேனுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. *10*

திருச்சிற்றம்பலம்

இ - ள் : உனது அருளாகிய நிறைந்த அமுதத்தை வாரிக்கொண்டு வழங்குகின்ற உனக்காக விழுங்குகின்றேன்; தீவினையுடையவனாகிய எனக்கு உண்ணத்தக்க ஊழ் இல்லாமையால் தொண்டைவிக்கினேன்; வருந்துகிறேன்; ஒலியற்ற தேனன்ன தண்ணீரைக் குடிக்கக் கொடுத்து அடியேனை உய்யக்கொள்க; உடையாய்! அடியேன் உனது அடைக்கலம் என்றவாறு.

நீ அருளமுதம் அளித்தாய், அதனை உண்ண எனக்கு நல்லூழ் துணை செய்திலது; கொடுத்த உனக்காக விழுங்கினேன்; விக்கிக்கொண்டது; வருந்துகின்றேன்; குடிக்கத் தண்ணீர் கொடுத்துக் காப்பாற்று; யான் உன் அடைக்கலப் பொருளாவேன் என்பது கருத்து.

வழங்குகின்றாய்க்காக விழுங்குகின்றேன் விக்கினேன் என முடிக்க.

உன் திருவருள் அமுதம்போல இனிமையும், என்றும் அழியாமையும் அளிப்பது; நிறையக் கிடைப்பது. அங்ஙனமிருந்தும் கைப்பினையுண்பார்போல் விருப்பின்றி ஒரே கவளமாக வாரி

உண்டேன்; சுவையான பொருளை உண்பார் சிறிதுசிறிதாகச் சுவைத்து விரும்பியுண்பர்; அங்ஙனமின்றி வாரிவிழுங்கினேன்; அதுவும் பெருந்தகையாகிய நீர் கொடுத்தீரே என்று உமக்காக உண்டேன்; விக்கியது; கொடுக்கின்றவர்கள் கொடுத்தாலும் உண்ண எனக்கு ஊழ் வேண்டாமா? அஃதில்லை; அதனால், விக்கினேன்; வருந்துகின்றேன்; குடிக்கத் தண்ணீர் கொடு; தொண்டை அடைக்கிறது; ஐயோ! வருந்துகின்றேன்; உன் அடைக்கலம் என்பதாம்.

விக்கிக்கொண்டது அமுதம்; வெறுந்தண்ணீர் குடித்தால் அதன் சுவை குன்றக்கூடும்; அதனால் தேனன்ன தண்ணீர் கொடு என்று வேண்டுகிறார். விக்கல் எடுக்கும்போது தொண்டையிலிருந்து ஓரொலி உண்டாகும் அது நீங்கக் கொடு என்கின்றார். தழங்கு அரு தேன் - ஒலியில்லையான தேன். தழங்கு; முதனிலைத் தொழிற்பெயர். அருமை - இன்மை.

அருளையளித்த தேவரீர் அவ்வருளை அடியேன் நுகரும் வன்மையையும் உதவவேண்டும்; இல்லையேல் திருவருட்பயனை அடியேன் நுகரேன் என்பதால் அருளடைதற்குரிய ஆன்மாவின் பக்குவத்தை நிண்ணயம் செய்தவாறு காண்க.

இங்ஙனம் அடைக்கலம் கூறிய பத்துப் பாடல்களாலும் திருவடித்தியானமும், முதிர்ந்த அன்பும், திருவருட் சிறப்பை விளக்கும் கல்விஞானமும், விதித்தன செய்தலும், விலக்கியன செய்யாமையும், திருவடிக்கே பிச்சாதலும், காமதாபங்களின்மையும், திருவடிச்சார்பு எப்போது கிடைக்கும் என்றெண்ணி அதனையே எதிர்நோக்கலும், தம்முடைய நலந்தீங்குகளைத் தலைவனிடத்திலேயே ஒப்பித்தலும், தனக்கு எதிலும் முதன்மையில்லாமையும், அவனருளைத் துய்த்தற்குக்கூட வன்மையில்லாமையை உணர்தலுமான பக்குவங்கள் நிண்ணயஞ் செய்யப்பெறுதல் காண்க.

# 25. ஆசைப்பத்து

[ஆத்தும இலக்கணம்]

இதுவும், அடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளி யிருக்குங்காலத்து, இறைவன் திருவடியைச்சார ஆசைப் படுவதாக அருளிச்செய்யப்பெற்றது.

ஆசை முறுகிய அன்பு காரணமாக ஒரு பொருளை அடைய வேண்டும் என்றெழுகின்ற விருப்பம். அடிகளார்க்கு இறைவனது செவ்வி காணவும், செவ்வியில் ஈடுபட்டு அழுந்திநிற்கின்றபோது அருளைப்பெறவும், அருளை விரும்புகின்ற என்னைப்பார்த்து இரங்கி வா வா என்று உன்னால் அழைக்கப்பெறவும், அழைத்தாலும் வர முடியாமை என்பாலிருப்பதை அறிந்து நீயே என்பால் எழுந்தருளி வந்து அருள்வழங்கப்பெறவும் ஆசைப்படுவதாக அறிவிப்பதால் இப்பத்துப் பாடல்களும் ஆசைப்பத்து எனப் பெயர்பெற்றது.

இதன் கருத்து ஆத்தும இலக்கணம்; அஃதாவது ஆன்ம ரூபத்தை அறிதல் என்பது பழைய குறிப்பு. "தீர்க்கரும் ஆசைப் பத்து ஆன்ம இலக்கணம்" என்பது அகத்தியச் சூத்திரம்.

முன்னுள்ள அடைக்கலப்பத்தால், சிவாநந்தச் செருக்கால் பற்றற்றுத் தலைவனடியில் தன்னை ஒப்பித்தலே மேன்மையானது என்று உணர்த்தப்பெற்றது. இப்பத்தில் அதற்குக் காரணமான அருளை ஆசைப்படுதல் உணர்த்தப்பெறுகின்றது. இதனால் பதிக இயையும் காண்க.

பழைய திருப்பெருந்துறைப் புராணம் "கருவியுறு மூனுடற் கண் வாராமல் திருவருளிற் கலப்பதற்கே, அரனடியைப் புகழ்ந்து பெரு கார்வமொடு பாடுதலே ஆசைப்பத்தாம்" என்று விளக்கம் தருகிறது.

கண்ணொளி விளக்கொளியோடு கலந்து ஓர் உருவைக் கலந்தா லல்லது அவ்வுருவம் அறியப்படாதவாறுபோல, உணர்த்த உண ருந்தன்மையையுடைய உயிர்கள் திருவருளோடுகலந்து, அதனோடு சிவத்தைப் பொருந்தினாலல்லது சிவானந்தாநுபவம் சேராது என்பதனை அறிவிப்பதால் இது ஆத்தும இலக்கணம் ஆயிற்று. தொகுத்துநோக்கின், பெற்றதை விட்டுப் பெற வேண்டியதை விரும்புதலே ஆசையாதலின் பெற்ற உலகச்சார்பை விட்டு, பெற வேண்டிய அருட்சார்பை விரும்புதல் இதனால் உணர்த்தப்பெறு கிறது என்பதாம்.

## அறுசீர் ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

416 கருடக் கொடியோன் காண மாட்டாக்
கழற்சே வடியென் னும்
பொருளைத் தந்திங் கென்னை யாண்ட
பொல்லா மணியேயோ
இருளைத் துரந்திட் டிங்கே வாவென்
றங்கே கூவும்
அருளைப் பெறுவான் ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 1

இ-ள்: கருடக்கொடியைத் தாங்கியவனாகிய திருமாலும் காணமுடியாத வீரக்கழலை அணிந்த சிவந்த திருவடியென்னும் பொருளைக் கொடுத்து இப்பூவுலகில் ஆட்கொண்ட முழு மாணிக்கமே! என் மலவிருளைப்போக்கி 'இங்கே வா' என்று வீட்டுலகிலிருந்து அழைக்கும் திருவருளைப் பெறுவதற்கு விரும்பினேன்; அம்மானே! இதுவே எனது விருப்பங்காண் என்றவாறு.

முழு மாணிக்கமே! இங்கே வா' என்று ஆனந்த இன்ப வுலகில் இருந்துகொண்டு நீ அழைக்கவேண்டும் என்பதே என் ஆசை என்பது கருத்து.

திருவடியின் அருமையைத் தெரிவிக்கின்றார், எல்லா உலகையும் காப்பதாகக் கருடக்கொடியைப் பிடித்திருக்கின்ற திருமாலும் காணமுடியாதது என்று. திருமால் நான் காண்பேன் என்று சென்ற முனைப்பாற் காணாதயினன். 'காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே' என்ற உண்மையை உணர்ந்த அடியேன், பணிசெய்து கிடந்தேன்; நீ கழற்சேவடி என்னும் அரியபொருளைத் தந்து ஆண்டாய் என்பார் 'கருடக்கொடியோன் காணமாட்டாக் கழற்சேவடி யென்னும் பொருளைத் தந்திங் கென்னை ஆண்ட பொல்லா மணியே' என்றார்.

இருள் - ஆணவமலம். நோய் நீங்கினாலல்லது அமுதம் உண்டாலும் உடல் வளம்பெறாததுபோல அது என்னைப் பற்றி நின்று தன் வலிமையைக் காட்டுகின்ற வரையில் அடியேன் உன்னைச் சாரகில்லேன்; அதனை முன்னர் ஓட்டவேண்டும்; அதன்பிறகு இங்கே வா என்றழைத்தால் வருவேன் என்பார் 'இருளைத்துரந்திட்டு இங்கே வா என்று அங்கே கூவும் அருள்' என்றார்.

முன்பு குருநாதனாக இங்கு எழுந்தருளி ஆண்ட காலத்து இங்கே நின்று வாவென்ற வான் கருணை காட்டினீர்; எனது உலகச்சார்பினால் பிற்பட்டொழிந்தேன் நோய்க்கு விருந்தாக; அந்தநிலை மீட்டும் வாராதபடி நீர் அங்கே நின்று இங்கேவா என்று கூவியழைக்கும் அருளையே அடியேன் விரும்புவது என்கின்ற நயம் தெளியத்தக்கது. இங்கே என்பதற்குக் கேவலாவத்தையிலே என்றும், அங்கே என்பதற்குச் சகலாவத்தையிலே என்றும் பழையவுரை விளக்கந்தருகிறது. அம்மான் - தலைவன்.

புறப்பற்று அறுதலும், அருட்பற்று விரும்புதலுமே ஆன்ம விலக்கணமாதல் அறிவிக்கப்பெற்றமை காண்க.

417 மொய்ப்பா னரம்பு கயிறாக மூளை
யென்பு தோல்போர்த்த
குப்பா யம்புக் கிருக்க கில்லேன்
கூவிக்கொள்ளாய் கோவேயோ
எப்பா லவர்க்கு மப்பா லாமென்
னாரமு தேயோ
அப்பா காண வாசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 2

இ - ள்: நெருங்கிப் பல பகுதிகளாக விளங்கும் நரம்புகளே கயிறாக மூளை எலும்பு இவற்றைத் தோலால் போர்க்கப் பெற்ற சட்டையாகிய இவ்வுடலிற்புக்கு நெடுங்காலம் இருக்க மாட்டேன்; என்னை அழைத்துக்கொள்; அரசே! எத்தன்மையுடையார்களுக்கும் அப்பாலாகக் கடந்து விளங்கும் அரிய அமுதமே! என் தந்தையே! நின்னை எப்போதும் தரிசிக்க விரும்பினேன்; அம்மானே! காண் என்றவாறு.

எலும்பும் நரம்பும் மூளையும் பொதிந்து தோலாற்போர்க்கப் பெற்ற இவ்வுடலாகிற சட்டைக்குள் இருந்து நெடுங்காலம் வாழ முடியாது; ஆதலால், யாருக்கும் அரிய அமுதமே! என்னை அழைத்துக்கொள்; உன் திருவடியை எப்போதும் காண விரும்பினேன்; இதுவே என் ஆசை காண் என்பது கருத்து.

மொய் - நெருக்கம்; வலிமை எனலுமாம். பால் - பகுதி; அதாவது பிரிவு. உணர்ச்சி நரம்பு, இரத்த நாளம், கிளை நரம்பு முதலாகப் பல பகுதிப்பட்ட நரம்புகள். உடல் ஏழு தாதுக்களால் ஆக்கப்பட்டிருப்பினும் குழம்பிற்காக மூளையையும், கெட்டிப்பொருளுக்காக எலும்பையும், மூடுபொருளாகத்

தோலையும், பிணிப்பிற்காக நரம்பையும் கூறி ஏனையவற்றையும் உபலக்கணத்தாற் கொள்ளவைத்தார்.

"கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை கருநரம்பும் வெள்ளெலும்பும் சேர்ந்தொன் றாகி" "ஈனமிகு துளைதோலும் உடையபுழுப் பொதிந்த துச்சில்" எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுவதுங் காண்க. குப்பாயம் - சட்டை.

எப்பாலவர்க்கும் - எத்தகைய பரிபாகம் உள்ளவர்களாலும்; என்றது அனந்தாதி அஷ்டவித்தியேசுரர்களாலும் என்றபடி. அப்பாலாதல் - அவர்கள் அறிவின் எல்லையைக் கடந்து அளவிலாற்றலும் கருணையுமே திருமேனியாக விளங்குதல். அங்ஙனம் விளங்கினும் எனக்குக் கிடைத்தற்கரிய அமுதாய்க் கிடைத்தார் என்பார் 'என் ஆரமுதே' என்றார். தந்தையை நெடுநாள் பிரிந்திருந்த தனயன் காணவிழைந்ததுபோல 'அப்பா காண ஆசைப்பட்டேன்' என்கின்றார்.

ஆன்மா வினைப்போக நுகர்ச்சிக்காக நரம்பும் எலும்புங் கூடிய உடலிற் புக்கது; உவர்ப்புக்கண்டு உவப்பான திருவடிச் சார்பைப்பெற விரும்புவதே அதனிலக்கணம் என்றுணர்த்திய வாறும்.

418 *சீவார்ந் தீமொய்த் தழுக்கொடு திரியுஞ்*
*சிறுகுடில் இதுசிதையக்*
*கூவாய் கோவே கூத்தா காத்தாட்*
*கொள்ளுங் குருமணியே*
*தேவா தேவர்க் கரியானே சிவனே*
*சிறிதென் முகநோக்கி*
*ஆவா வென்ன ஆசைப் பட்டேன்*
*கண்டாய் அம்மானே.* 3

*இ-ள் :* தலைவா! கூத்தா! எம்மைக் காத்து அடிமை கொள்ளும் குருமணியே! தேவா! தேவர்களுக்கு அரியவனே! சிவனே! அம்மானே! சீ ஒழுகி, ஈ மொய்த்து, மலத்தொடு அலைகின்ற சிறு குடிசையாகிற இவ்வுடல் அழிந்துபட என்னை விரைந்து அழைப்பாயாக; அடியேனுடைய முகத்தைச் சிறிது பார்த்து, ஆ! வா! என்று நீ அழைக்க விரும்பினேன்; இதுவே என் விருப்பம் கண்டாய் என்றவாறு.

சிவனே! அம்மானே! அருவருக்கத்தக்க பொருள்களைப் பொழியும் இவ்வுடல் நீங்கும்வண்ணம் பணித்தருள்; அடியேனை வா என்று உன் திருவாயால் அழைப்பதொன்றே யான் வேண்டுவது என்பது கருத்து.

சீ - சீழ். செங்குருதி கெட்டு வழியும் நச்சுப்பொருள். வார்ந்து, மொய்த்து முதலிய செய்வினைகள் செயப்பாட்டு வினையாய்த் திரியும் என்னும் உடலின் வினையைக் கொண்டு முடிந்தன. சினைவினை முதலொடு செறிந்தது என்பாருமுளர். சீ உடலின் உறுப்பன்மையானும், ஈ அவ்விதிக்கும் சிறிதும் ஏலாமையானும் அது பொருந்தாது என்க. வார்ந்து - ஒழுகி. ஒழுகப்பெற்று என்க. சிறுகுடில் என்றது உடலை. இது உருவகம். கூவாய் என்றது இவ்வுடலைத் தாங்ககில்லேன்; விரைந்தழைக்க என்னும் குறிப்பினது.

எம்மைத் தீயநெறிக்கட் புகுதாமலும், அதன் பயனகத் தீநரகிலும் தீப்பிணியிலும் புகுதாமலும் தடுத்துக் காத்தருளும் குருமணியே என்பார் இங்ஙனம் கூறினர்.

தேவன் - ஒளிவடிவானவன்.

'என் முகம் சிறிது நோக்கி' என்றது, இவ்வண்ணம் வருந்துகின்ற என் முகத்தை நின் பெருங்கருணையால் சிறிது நோக்கி என்றவாறும். இதனல் குழவியின் குடர் அளவறிந்து பாலூட்டும் தாய்போல் கருணையை என்மீது பொழியுமிடத்துப் பெரிது பொழியின் அடியேன் தாங்ககில்லேன் ஆதலால் சிறிதே நோக்கில் அமையும் என்பார் இங்ஙனம் கூறினர் என்க.

'ஆ! வா என்ன' என்றும், 'ஆ! ஆ! என்ன' என்றும் பிரிக்கலாம்.

வினைப்போகத்திலும், அதற்குச் சாதனமாகக் கிடைத்த உடலினும் உவர்ப்புத் தோன்றலும், இறைவனை இறுகப்பற்ற ஆசைப்படுதலும் பரிபாகம் பெற நின்ற ஆன்மாவினிலக்கணமாதலை அறிவித்தவாறும்.

419 *மிடைந்தெலும் பூத்தை மிக்கழுக் கூறல்*
*வீறிலி நடைக்கூடம்*
*தொடர்ந்தெனை நலியத் துயருறு கின்றேன்*
*சோத்தமெம் பெருமானே*
*உடைந்துநைந் துருகி யுன்னொளி நோக்கி*
*உன்றிரு மலர்ப்பாதம்*
*அடைந்துநின் றிடுவான் ஆசைப்பட்டேன்*
*கண்டாய் அம்மானே.* 4

இ - ள்: எலும்புகள் நெருங்கி, ஊத்தை மிகுந்து, அழுக்குநீர் ஊறுதலையுடைய, சிறப்பில்லாத நடைவீடாகிய

இவ்வுடல் என்னைத் தொடர்ந்துவருத்தத் துன்புறுகின்றேன்; எம்பெருமானே! வணக்கம்; என் அகந்தை கெட்டு, மனம் நைந்து, உருகி, உன் திருவருட்பிரகாசத்தையே கண்டு, உன் மலர்போன்ற திருவடிகளை அடைந்து, அதன்கண்ணேயே நிலைபெற்றிருக்க ஆசைப்பட்டேன்; அம்மானே! இதனைக் கண்டருள் என்றவாறு.

உடலை வெறுத்து, உன் திருவடியை அடைய ஆசைப் பட்டேன் என்பது கருத்து.

வீறு - வேறொன்றற்கில்லாத தனிச் சிறப்பு. வீறிலி - சிறப் பில்லாத. நடைக்கூடம் - இயங்கும் இல்; என்றது உருவக வாய்பாட்டால் உடலைக் கூறியதாம்.

சோத்தம் - தோத்திரம் என்பதன் திரிபு. உடைந்து - மனம் உடைந்து என்பாரும் உளர். நின்றிடுவான் - திருவடிப்பற் றொன்றிலேயே நிலைத்து நிற்க என்க.

அகந்தை கெடுதலும், ஆண்டவனடிக்கே அன்பு வைத்து நைதலும், மனம் உருகுதலும், மலரடியிற் பற்றுவைத்தலுமே ஆன்மவிலக்கணமாதல் அறிக.

420 *அளிபுண் ணகத்துப் புறந்தோல் மூடி*
*அடியே னுடையாக்கை*
*புளியம் பழமொத் திருந்தேன் இருந்தும்*
*விடையாய் பொடியாடீ*
*எளிவந் தென்னை யாண்டு கொண்ட*
*என்னா ரமுதேயோ*
*அளிய னென்ன ஆசைப் பட்டேன்*
*கண்டாய் அம்மானே.* 5

இ - ள்: இடபவாகனத்தை உடையவனே! திருநீற்றை அணிந்தவனே! எளியனாக எழுந்தருளிவந்து எம்மை ஆண்டு கொண்ட என்னுடைய அரிய அமுதமே! அடியேனுடைய உடல், அகத்தே அளிந்த புண்ணையும் புறத்தே தோலாய மூடியையும் உடைமையால் புளியம்பழமும் அதன் ஓடும் ஒத் திருந்தேன்; அங்ஙனம் இருந்தும், நீ வந்து இவன் இரங்கத் தக்கான் என்று அழைக்க விரும்பினேன் அம்மானே! இதனைக் காண் என்றவாறு.

என்வாழ்வு புளியம்பழமும் அதன் தோடும்போலப் பற்றற் றது ஆயினும் நீ வந்து இவன் இரங்கத்தக்கான் என்றருள் செய்யவேண்டும் என்று ஆசைப்படுகின்றேன் என்பதுகருத்து.

பற்றற்ற என்னை விரைந்து ஆட்கொள்ள வேண்டியது நின் கடமையும் கருணையுமாகவும் காலந்தாழ்க்கின்றமையின், இவன் கருணைசெய்யத்தக்கான் என்றுவது திருவாயாற்சொல்லுக என இரங்கியவாறும்.

அளியேன் என்ன எனப்பாடங்கொண்டு இரங்கத்தக்கவன் என்று நீ சொல்ல எனப் பொருள் காண்பர் சிலர். கொண்டு கூறும்போது அளியேன் என்று தன்மைச்சொல்வாராமையறிக.

இதுவும் பற்றறுதலும், திருவடியைப் பற்றிநிற்றலுமாகிய ஆன்மவிலக்கணம் அறிவித்தல் காண்க.

*421* *எய்த்தேன் நாயேன் இனியிங் கிருக்க*
*கில்லேன் இவ்வாழ்க்கை*
*வைத்தாய் வாங்காய் வானோ ரறியா*
*மலர்ச்சே வடியானே*
*முத்தா வுன்றன் முகவொளி நோக்கி*
*முறுவல் நகைகாண*
*அத்தா சால ஆசைப் பட்டேன்*
*கண்டாய் அம்மானே.* *6*

இ - ள்: நாயையொத்த அடியேன் இளைத்தேன்; இனி இவ்வுடலோடு கன்மபூமியாகிய இங்கிருக்க ஆற்றலிலேன்; இவ்வாழ்க்கையை அடியேற்குக் கூட்டிவைத்த நீயே மீட்டுக் கொள்; தேவர்களால் அறியப்பெறாத திருவடித் தாமரைகளையுடையவனே! முத்தனே! அத்தா! உன் திருமுகச்செவ்வியை நோக்கிப் புன்முறுவலைக் கண்டு மகிழ மிக விரும்பினேன்; அம்மானே! இதுவேகாண் என் விருப்பம் என்றவாறு.

இனி இவ்வுடலோடு பூமியில் வாழமாட்டேன்; இவ்வுடலைக் கொடுத்த நீயே இதனை வாங்குதல் வேண்டும்; நின் திருமுகச் செவ்வியையும் புன்முறுவலையும் காண விழைந்தேன் என்பது கருத்து.

நாயேன் என்றமைக்கேற்ப எய்த்தேன் என்றார். நாய் ஒரு காரியமும் இன்றி ஓடி ஓடி இளைத்ததுபோலப் பயனின்றியே உழைத்து உலைவுற்றேன் என்பதாம்.

இங்கு - வினைகட்கு ஈடாகப் பிறந்திறந்து உழலும் கன்ம பூமியாகிய இங்கே. பிறந்து வினைகளை நுகர்ந்தும் விளைத்தும் வருந்தியது போதும்; என்றால் இனிமேல் இருக்க இயலாது என்று தன் உவர்ப்பின் மிகுதியை உணர்த்துவாராக 'இனி இங்கிருக்ககில்லேன்' என்றார்.

இவ்வாழ்க்கை - இவ்வுடலோடு கூடி வினைப்போகந்துய்த்துக் கழிப்பதாகிய இந்த வாழ்கை. இதனைக்கொடுத்த நீயே மீட்டாலல்லது யானே மீளும் தலைமையும், மீட்கும் உரிமையும் இல்லை என்பதை உளங்கொண்டு 'இவ்வாழ்க்கை வைத்தாய் வாங்காய்' என்றார்.

மலர்போல மணமும், நிறமும், மென்மையும் பெற்றிருந்தும், தேவர்கள் பொறியுணர்ச்சிகள் நிரம்பியிருந்தும் திருவடி மலரை அறியாராயினர்; அவர்கள் அறியாமை இருந்தவாறு என்னே என்பார் 'வானோரறியா மலர்ச்சேவடியானே' என்றார். எளியோர் உணர்ந்து உய்வதற்காகவே திருமேனிகொண்டு எழுந்தருளியிருந்தும் அவர்கள் அறியார்களாயினரே என இரங்கிக் கூவியதுமாம்.

முத்தா - அநாதியே மலங்களினின்று விடுபட்டவனே!

முகவொளி அடியேனுடைய அறியாமையை அகற்றுவது. நகை, திரிபுரம் எரித்ததுபோல என் மலக்கோணையகற்றுவது. ஆகவே, ஆணவம் குன்றி அறியாமை நீங்க என்பதாம்.

தனயன் ஆசைப்பட்டவற்றை அளிக்கும் அத்தன் ஆவாய் நீ எனக்குறிப்பார் 'அத்தா சால ஆசைப்பட்டேன் கண்டாய்' என்றார்.

அம்மான் - மாமனுமாம். மருகன் விழைந்தவற்றை ஈடேற்றுதல் மாமன் கடமையாதல்போல நீயும் ஆசையை நிறைவிக்க வேண்டும் என்றதுமாம்.

இதுவும் முன்னதுபோல உடற்பற்று அகற்றி, இறையருட் பற்றை விழையும் ஆன்மவிலக்கணமாதல் காண்க.

*422 பாரோர் விண்ணோர் பரவி யேத்தும்*
*பரனே பரஞ்சோதி*
*வாராய் வாரா வுலகந் தந்து*
*வந்தாட் கொள்வானே*
*பேரா யிரமும் பரவித் திரிந்தெம்*
*பெருமா னெனவேத்த*
*ஆரா வமுதே ஆசைப் பட்டேன்*
*கண்டாய் அம்மானே. 7*

இ - ள்: பூமியிலுள்ள மக்களும், விண்ணிலுள்ள தேவர்களும் வணங்கித் துதிக்கும் பரம்பொருளே! பரஞ்சோதி! தேவரீரே எழுந்தருளிவந்து வாராய் என மீண்டும் வாராத உலகமாகிய வீட்டினைத் தந்து ஆட்கொள்பவனே! உண்டு

தெவிட்டாத அமுதமே! நின் ஆயிரம் திருநாமங்களையுஞ் சொல்லி அலைந்து, எம்பெருமான் என்று வணங்க ஆசைப் பட்டேன்; அம்மானே! இதனைக் கண்டருள் என்றவாறு.

ஆயிரம் திருநாமங்களையும், எம்பெருமான் என்ற சிறப்புப் பெயரையும் சொல்லி வணங்க விரும்பினேன் என்பது கருத்து.

பரவுதல் - தோத்தரித்தல். ஏத்துதல் - வணங்குதல். முன் னது வாக்கின் தொழில், பின்னது காயத்தின் தொழில். இரண் டும் கூறவே உபலக்கணத்தால் உள்ளத்தால் எண்ணுதலும் கொள்க. பரன் - எங்கும் நிறைந்த பொருளாய் விளங்கும் பர சிவன். பரஞ்சோதி - ஆன்மாக்களின் ஆணவ இருளை அகற்ற எழுந்தருளிய கருணைத் திருவுருவாகிய அருள்மேனி.

'வாராய்' என்றது இறைவன் அடிகளாரை நோக்கிக் கூறி யதைக் கொண்டுகூறியது. இங்ஙனமன்றி, அடிகள் இறைவனை நோக்கி வாராய் எனக் கூறியதாகவும் உரைப்பர்.

வாரா உலகம் - மோட்ச உலகம். 'வந்து வாராவுலகம் தந்து ஆட்கொள்வானே' எனக் கூட்டுக.

பேர் ஆயிரம் - சகத்திர நாமம். இறைவனுடைய ஆயிர நாமங்களைச் சொல்லி அலைந்து இறுதியில் அனுபவம் முதிர 'எம்பெருமான்' என்ற அனுபவத்திருப்பெயர் அனுபவத்திற்கு வர அதனையே உறுதியாகப்பற்றி அடியேன் வணங்க என்ப தைப் 'பேராயிரமும் பரவித் திரிந்து, எம்பெருமான்! என (யான்) ஏத்த ஆசைப்பட்டேன்' என்றருளினர்.

ஆரா அமுதே - தெவிட்டாத அமுதமே. தேவர் முதலிய பசுக்களால் அநுபவிக்கமுடியாத அமுதமே எனலுமாம்.

தலையிலே தீப்பற்ற அரற்றி அலைவார்போலப் பிறவியால் வருந்தி ஆயிரம் நாமஞ்சொல்லி அலைந்து, இறுதியாக யான் மீளா அடிமை அவன் என்பெருமான் என்ற ஆண்டானடிமைத் திறத்தை விளக்கும் எம்பெருமான் என்ற பெயரைச்சொல்லி ஏத்த ஆசைப்பட்டமையை அறிவித்தலால் இது ஆன்ம இலக் கணமாதல் உணர்த்தப்பெற்றது.

423 *கையாற் றொழுதுன் கழற்சே வடிகள்*
*கழுமத் தழுவிக்கொண்*
*டெய்யா தென்றன் தலைமேல் வைத்தெம்*
*பெருமான் பெருமானென்*

றையா என்றன் வாயா லரற்றி
அழல்சேர் மெழுகொப்ப
ஐயாற் றரசே ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 8

இ - ள் : திருவையாற்றில் எழுந்தருளியுள்ள அரசே! கைகளால் உன்னைத் தொழுது, வீரக்கழல்களையணிந்த உன் சேவடிகளை நிரம்பத் தழுவிக்கொண்டு, யான் இடைவிடா வண்ணம் அவற்றை என்தலைமேற் சூட்டிக்கொண்டு, எம் பெருமானே பெருமானே என்று, ஐயா! என்வாயாற்புலம்பி நெருப்பைச்சேர்ந்த மெழுகினை ஒத்து உருக ஆசைப்பட்டேன்; அம்மானே! இதனைத் திருவுளம்பற்றுக என்றவாறு.

ஐயாற்றரசே! உன் திருவடிகளை ஆரத்தழுவிக்கொண்டு அனல்சேர் மெழுகைப்போல உருக விரும்பினேன்; இதுவே என் ஆசை என்பது கருத்து.

கழலணிந்த சேவடிகள் காந்தம் போல என்னை இழுப்பன. ஆகவே அடியேன் கைகளால் தூரநின்று தொழுதகாலத்தே அவற்றின் ஒளியும், நிறமும், அழகும் என்னுடைய மனத்தை இழுத்தன. அடியேன் ஓடி வந்து இறுகத்தழுவினேன்; தழுவிய போது ஓரின்பம் உண்டாக, அவ்வின்பம் எல்லாவற்றினும் சிறந்ததாக, இவ்வின்பம் எங்கே கைநழுவிவிடுமோ? அதனால் நமக்கு இடையீடு வருமோ? என அஞ்சி என் தலைமேற் சூடிக் கொண்டேன் என்பார் 'சேவடிகள் கழுமத் தழுவிக்கொண்டு எய்யாது என்றன் தலைமேல் வைத்து' என்றருளினர். கழும - நிறைய. எய்யாது - இடைவிடாமல்; இளைக்காமல் எனலுமாம்.

அரற்று - நாண் நழுவியபோது ஆராமையால் நிகழ்வது. அவ்வின்ப உணர்ச்சி மீதூர ஐயா! எம்பெருமான்! பெருமான் என்று அரற்றி மனம் கசிய ஆசைப்பட்டேன் என விண்ணப் பிக்கின்றார்கள்.

காதல் கைம்மிக்க இருவர் கலந்த புணர்ச்சியில் ஒருவரின்றி யமையாமையை ஒருவர் உணர்ந்து தழுவியும், உச்சிமோந்தும், தலைவி தலைவி தலைவா தலைவா என அரற்றியும் மனம் கசிய நிற்பதுபோலச் சிவத்தோடு கலந்து இரண்டற்ற நிலை வருதற்கு முன்பு நிகழ்வதாகிய சிவபோக நுகர்வினை விரும்புகின்றேன் என்பதாம். ஆதலால் இது ஆத்தும இலக்கணமாதல் காண்க.

424 செடியார் ஆக்கைத் திறமற வீசிச்
சிவபுர நகர்புக்குக்
கடியார் சோதி கண்டு கொண்டென்
கண்ணிணை களிகூரப்
படிதா னில்லாப் பரம்பர னேயுன்
பழவடியார் கூட்டம்
அடியேன் காண ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 9

இ - ள் : அம்மானே! ஒப்பில்லாத பரம்பொருளே! முடை நாற்றம் பொருந்திய உடலுக்கு வேண்டிய திறங்களை அறவே வீசி, சிவபுரமாகிய நகரின்கண் புக்கு, மிக்கவிளக்கம் பொருந்திய சோதியாக உன்னைக்கண்டு, அகத்துட்கொண்டு, என் இரண்டு கண்களும் களிப்புமிக, அடியேன் உன்பழவடியார் கூட்டத்தைக்காண ஆசைப்பட்டேன் கண்டாய் என்றவாறு.

அம்மானே! என்னுடலை வளர்க்கும் உபாயங்களை அறவே எறிந்துவிட்டு, சிவநகர்புக்குப் பரஞ்சோதியாகிய உன்னைக் கண்டும், உன் பழவடியார்கூட்டம் காணவும் ஆசைப்பட்டேன் என்பது கருத்து.

ஆக்கைத்திறம் - யாக்கையை உண்டும், உடுத்தும், புனைந்தும், போற்றுந்திறம். செடி - ஒருவகைநாற்றம். அற - முற்றும்; என்றது உடற்பற்றை ஒழித்து என்றவாறும்.

சிவபுரம் - முத்தியுலகு. கடி - விளக்கம்; தெய்வத்தன்மையுமாம். கடி ஆர் சோதி - தெய்வத்தன்மை நிறைந்த சோதி. இடைவிடாது சோதியைத் தரிசித்துக்கொண்டே இருப்பதால் கண்ணிணை களிகூரவும், கூட்டங்காணவும் ஆசைப்பட்டேன் எனக் கூட்டுக.

இத்திருப்பாடலுக்கு, ஆண்டவனே! அடியேன் அழுக்குப் பொருந்திய யாக்கையைத் தேவரீர் திருவருளால் நீக்கிச் சிவபுரநகரிலே புகுந்து, ஞானமணம் பொலிவதான சிவஞானச் சோதியைத் திருவுருவாகவே கண்ணின்புறக் கண்டேன்; கண் களிகூர்வதானேன்; யாதொரு குணமும் இல்லாத ப்ரம்பரா! பரமசிவனே! தேவரீர்திருவடிக்குத் தொன்றுதொட்டு அடிமைப் பணிசெய்யும் சீரடியார் திருச்சபை காண ஆசைப்பட்டேன் என்பது பழையவுரை. இதில் செடி - குற்றம், கடி - ஞானமணம், சோதி - சிவஞானச்சோதி, படி - குணம், கூட்டம் - திருச்சபை எனப் பொருள்கொள்ளப் பெற்றிருத்தல் காண்க.

பின்னுரைகாரர், கடி - மன்றல், புதுமையும் ஆம் எனக் கொண்டு கடியார் சோதி என்பதற்கு மங்கலச்சோதி என்றும், ஆக்கைத்திறம் என்பதற்கு உடம்பின்வகையனைத்துமென்றும் கூறுவர். உடம்பின்வகை எனத் தூலமும், சூக்குமமும், காரணமுமாகிய மூவகையைக் குறித்தனராயின் உயிர் ஒன்றனைப்பற்றியன்றி நில்லாது என்னும் மரபிற்கு இழுக்காதலின் அவ்வுரை தெளிவின்றென்க.

சோதி காண்டல் - சிவதரிசனம். அடியார் கூட்டம் காண்டல் - நேயமலிந்த அடியார் வழிபாடு. இவை இரண்டுமே பரிபாகமுற்ற ஆன்மாக்களின் இயல்பென்பதை "நேயமலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" என்ற அணைந்தோர் தன்மை அறிவிக்கும். ஆதலால், இச்செய்யுள் ஆன்மவிலக்கணம் உணர்த்திற்றாதல் தெரிக.

425 வெஞ்சே லனைய கண்ணார்தம் வெகுளி
வலையி லகப்பட்டு
நைஞ்சேன் நாயேன் ஞானச் சுடரே
நானோர் துணைகாணேன்
பஞ்சே ரடியாள் பாகத் தொருவா
பவளத் திருவாயால்
அஞ்சே லென்ன ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள்: அம்மானே! ஞானவிளக்கே! பஞ்சினை ஒத்த திருவடிகளையுடைய உமாதேவியை இடப்பாகத்துக்கொண்ட ஒப்பற்றவனே! நாயை ஒத்த யான், விரும்பத்தக்க சேல்மீனை ஒத்த கண்களையுடைய மாதர்களின் புலவியாகிற கோபவலையில் அகப்பட்டு நைந்துபோனேன்; நான் ஒருவகையான துணையையும் காணேன்; ஆதலால் செம்பவளத்தை ஒத்த திருவாயால் 'அஞ்சாதே' என்று நீ சொல்ல ஆசைப்பட்டேன் கண்டாய் என்றவாறு.

இவ்வுலகில் மாதர்போகமே பெரிதென மயங்கி, அவர் வெகுளிவலையில் அகப்பட்டு நைந்துபோனேன்; உன்வாயால் 'பயப்படாதே' என்று நீ சொல்ல நான் அதனைக் கேட்க விரும்பினேன் என்பது கருத்து. நீ அபயம் அளிப்பதொன்றே யமையும் என்றவாறும்.

மாதர்களின் விருப்பம் விளைக்கும் கருவிகளுள் கண்ணே கருத்தையும் காட்டி விருப்பத்தையும் மிகுவித்தலின் கண்ணார்

எனச் சிறப்பித்தார். அவர்கள் கண் சேல்மீனை ஒத்தன. அதிலும் பிறழ்ந்து விருப்பத்தை விளைவிக்கும் கெண்டைமீனை ஒத்தன என்பார் 'வெஞ்சேல் அனைய கண்ணார்' என்றார். வெம்மை - விருப்பம்.

வெகுளி - புலவி. புலவியாகிய வெகுளியே வெகுளப் பட்டாரைப் புறம்போகவிடாமலும், அணுகவிடாமலும், அணு கற்குரிய ஆத்திரத்தை மிகுவித்து வலைபோலப் பின்னி நைய வைக்கும் என்க. நைஞ்சேன் - நைந்தேன் என்பதன் மரூஉ.

நாய், பெண்நாய் வயப்பட்டு அஃது ஓடுமிடமெங்கும் ஓடி யலைந்து பொருந்தி வருந்திநிற்கும். அதுபோன்ற தன்மையை யுடையேன் என்பார் 'நாயேன்' என்றார்.

ஞானச்சுடராகிய உன்னைப்பெற்றும் துணை கண்டிலேன் என இரங்குவார் ஞானச்சுடரே எனவிளித்துத் துணைகாணேன் என்கின்றார்.

பஞ்சு ஏர் அடி - செம்பஞ்சு ஊட்டிய அடி. பஞ்சை ஒத்த மெல்லிய அடி என்பாரும் உளர்.

எனக்கு அபயந்தரவும் வேண்டாம்; உன்வாயால் சொன் னற்போதும், அதுவே எனக்கு ஆறுதலாம் என்பார் 'வாயால் அஞ்சேல் என்ன ஆசைப்பட்டேன்' என்கின்றார்.

இவ்வண்ணம் இப்பத்துப் பாடலும், இங்கே வா என்னும் அருளைப்பெறவும், எனையழைத்து உன்னைக் காணச்செய்யவும் என் முகம்பார்த்து இரங்கவும், திருவடியைச்சார்ந்து நிற்கவும், பாவம் இவன் இரங்கத்தக்கவன் என்று நீ சொல்லவும், முக வொளிநோக்கி முறுவல்காணவும், ஆயிரந்திருநாமம் சொல்லி ஏத்தவும், ஐயா ஐயாற்றரசே என அரற்றவும், உன் ஒளியான திருமேனியையும் பழவடியார் கூட்டத்தையும் காணவும், அஞ் சேல் என்று உன்வாயால் சொல்லவும் நான் ஆசைப்பட்டேன் என, ஆன்மா தன் குறையறிந்து தலைவனைச்சார விரும்புவ தாகக் கூறுதலின் ஆன்ம இலக்கணம் உணர்த்தியமை காண்க.

# 26. அதிசயப்பத்து

[முத்தியிலக்கணம்]

அடிகளார் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, தன்னையும் ஒரு பொருளாக ஏற்று ஆட்கொண்டு அடியார்களுள் ஒருவனாக ஆக்கிய அதிசயத்தை வியந்து இப்பத்தையும் பாடியருளுகின்றார்கள்.

அதிசயம் - வியப்பு. வியப்பாவது இதுவரை உண்டாகாததும், இனியும் உண்டாகக் கூடாததாகவும் உள்ள நிகழ்ச்சியொன்று நம் அநுபவத்திற்கு வந்தபோது விளையும் ஓர் சுவை. இதனை வடநூலார் அற்புதரசம் என்பர். பொறி புலன்களிற்சிக்கி உலகியலிலே உழன்று கிடக்கின்ற தன்னை, உயர்வற உயர்ந்த நிலைக்கு உயர்த்தியது ஓர் வியப்புத்தரும் நிகழ்ச்சியாதலின் அதனைப் பாராட்டிய இப்பத்துப் பாடலும் அதிசயப்பத்து எனப் பெயர்பெற்றது.

இதற்கு முத்தியிலக்கணம் அதாவது மோட்சத்தின் அடையாளம் என்று பழைய குறிப்புக் கூறுகிறது. அகத்தியச்சூத்திரம் "அடியரிற் கூட்டும் அதிசயப்பத்து, முடிவிலாத முத்தியிலக்கணம்" என்கின்றது.

பழையபுராணம், "வெருவி மலத்தினைச் சீலத்தொன் றுகும் அடியார் குழாத்துடனே கூட்டும், பரம ஈருட்பெருமை மிகுதியைப் புகழ்ந்து பாடல் அதிசயப் பத்தாமே" என்கின்றது.

இவை அனைத்தையும் ஒத்துநோக்கின், ஆணவ மலத்திற்கு அஞ்சிய அடியார்களின் கூட்டத்தோடு சேர்த்த சிவபெருமான் திருவருளை வியந்து கூறும் அணைந்தோர் தன்மையாகிற முத்தியிலக்கணம் அறிவிப்பது என்பது விளங்கும்.

பழையவுரையும், முதற்பதிகத்தில் அன்பு நேசமுடன் கழிப்பதற்கு இரங்கி, நன்றி அறிந்து, இத்திருப்பதிகத்தில் நயந்து அதிசயித்த அன்பால் இரங்கிய சிவானந்த சிவானுபவ சுவானுபூதிகம் எனக்கூறுதல் காண்க.

## அறுசீர் ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

426 வைப்புமா டென்று மாணிக்கத் தொளியென்று
மனத்திடை யுருகாதே
செப்பு நேர்முலை மடவர லியர்தங்கள்
திறத்திடை நைவேனை
ஒப்பி லாதன வுவமனி லிறந்தன
ஒண்மலர்த் திருப்பாதத்
தப்ப னாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 1

இ - ள்: இறைவனைச் சேமநிதி யென்றும், மாணிக்கத் தொளியென்றும் மனத்திடை எண்ணி எண்ணி உருகாமல், கிண்ணத்தை ஒத்த முலைகளையுடைய மடப்பம் வளரப்பெற்ற பெண்களின் இன்பமாகிற தன்மையிலே நைகின்ற அடியேனை, ஒப்பில்லாதனவும், உவமமாகக்கூறப்பெறும் பொருள்களின் பொதுவியல்பைக் கடந்தனவும் ஆகிய ஒளிபொருந்திய மலர் போன்ற திருவடிகளையுடைய என் தந்தையாகிய சிவபெருமான், ஆட்கொண்டு தன் அடியாருள் ஒருவனாகச் சேர்த்துக் கொண்ட அதிசயத்தை யாம் கண்டாம் நீவிருங் கண்டீர்களா? என்றவாறு.

மாதர் மயக்கிற்பட்டு நைந்த என்னை ஆட்கொண்டு, அடியாருள் கூட்டிய அதிசயத்தைக் கண்டீர்களா என்பது கருத்து.

வைப்பு மாடு - வைத்த செல்வம். அதாவது இடர்வந்த காலத்து ஆம் எனச்சேமித்துவைத்த செல்வம். ஆன்மாக்கள் தற்போத முனைப்பால் அறியாமை வயப்பட்டுத் தடுமாறுகின்ற காலத்துச் செய்வன தவர்வன அறியாது வினைகளைச் செய்து பின்பு வருந்துவன. அக்காலத்து இறைவன் வைத்தமா நிதியாக உயிர்களை அறியாமைப் படுகுழியினின்று எடுத்து, அன்பூட்டி இன்பருத்தி வீட்டுலகத்துச் சேர்ப்பிக்கின்றானாதலின் அவனை வைப்புமாடு என்று எண்ணி உருகவேண்டியது உயிர்களின் கடமையாயிற்று. அங்ஙனமாகவும் உருகாது நைந்தேன் என்கின்றார்.

மாணிக்கம் ஒளியைத்தாங்கி நிற்கும் உருவுடைய சுட்டியறியப்படும் பொருள். அது அருவாய் அறிவாய் விளங்கும் சிவத்திற்கு ஒப்பாகாது ஆதலின் மாணிக்கத்தொளி என்றார். இறைவனை "குருகாம் வயிரமாம் மாணிக்கமாம்" என்றெல்லாம் திருமுறைகள் உரைத்தின்பூட்டுதல் நினைக. அடிகளார் மாணிக்கம்

என்றது மாணிக்கத்தொளி என்றதன் அநுபவம் எண்ணி அதில் அமைக.

இறைவனை இவ்வண்ணம் எண்ணி மனமுருகவேண்டிய அடியேன் அங்ஙனமுருகாமல், மடவார்நலனில் நைகின்றேன். அத்தகைய இழிதகையேனையும் ஆண்டுகொண்டு அடியரில் கூட்டினான்; அதுவோர் அதிசயம் என்கின்றார் மேல்.

மடவரல் - மடப்பம் வரப்பெற்றார்; பெண்கள். மடப்பம்-கொளுத்தக் கொண்டும் கொண்டது விடாப் பேதைமைக்குண முடைய இளமை. அதனை வரப்பெற்றார் மடவரலியர் என்க. அத்தகைய இளமாதரது எழும் உறுப்பாகிய முலையே அவர்கள் திறத்தில் என்னை நையவைக்கின்றது என இரங்குவார் 'முலை மட வரலியர் திறத்திடை நைவேனை' என்றார்.

அம்முலைகள் கிண்ணங்கள்போல் செம்மாந்து ஈர்க்கிடை புகாது மார்பிடங்கொண்டு மனத்தை நைவித்தமை தோன்ற 'செப்பு நேர்முலை மடவரலியர்' எனச் சிறப்பித்தார்.

திறத்திடை நைதலாவது அணிக்கு ஆடைக்கு, உணவுக்கு உரைக்கு, காதலுக்கு மோதலுக்கு, அழுகைக்குத் தொழுகைக்கு வருந்துதல். அவர்கள் செய்வன யாவும் வஞ்சமென ஓராது உண்மையென நம்பி மோகக்கள் அருந்தி, அவர்கள் தரும் இன்பத்தேள் கொட்டக் குரங்குபோலிருந்து வருந்துதல்.

மகன் தந்தைவழி நில்லாது தவறான நெறிக்கட்செல்லின் அவன்தொலையட்டும் என விடாது தடுத்து எடுத்து இன்பத் துறையிற் செலுத்துதல்போல, என் அப்பனாகிய இறைவனும் ஆண்டு தன் மகன் கெட்டது சகவாசதோஷத்தால் என்று எண்ணி நல்லோரிணக்கம் சேர்த்திய அதிசயம் புரிந்தான் என்றவாறும்.

ஒப்பு இலாதன உவமனில் இறந்தன-தனக்குப் பிறிதொன்றும் ஒப்பிலாதனவும், தான் பிறிதொன்றற்கு உவமிக்கப்படும் தன்மையினின்று அப்பாற்பட்டனவும் ஆகிய திருவடிகளென்க. அங்ஙனமாகவும் பின்னர் 'ஒண்மலர்த் திருப்பாதம்' என்றது தன்னெஞ்சத்துப்பட்டு அனுபவத்திற்குரியதானபோது ஒளி பொருந்திய மலர்போல இருந்தது என்று ஒருவகையால் அநுபவம் உணர்த்திய அளவினதாகக்கொள்க.

சிலர் இல்லறத்திற்கெனத் தேடிவைத்த செல்வமே செல்வம் மாணிக்கத்தின் ஒளியே ஒளி என்று கருதியிருந்த நான் அவற்றை மாதர்க்காகச் செலவழித்துவிட்டு வருந்துகின்றேன்;

அத்தகைய என்னையும் ஆண்டு அடியாரிற்கூட்டிய அதிசயம் அறியேன் என உரைப்பர். இவ்வுரையின் சிறப்பின்மையை உரைக்கிடை முறையானே உணர்க. பழையவுரையும் நம் உரைக்குத் துணையாதல் காண்க.

இந்தத் திருப்பாடலே காழித்தாண்டவராயர் திருவாசக வியாக்கியானம் எழுதுதற்குக் காரணமாக விளங்கினமையை, " தகரவித்தியாபுரமாகிய திருத்தில்லையில் வாழும் சிவனடியார் இவ்வுரை அனுபூதி என்பதைத் திருவுளங்கொள்வதோ என்று எண்ணி, திருவுளச்சீட்டொன்று எழுதிப் பொன்னம்பலவாணர் சந்நிதியான முத்தி பஞ்சாட்சரப்படியில் வைக்க, இப்பாடல் தோன்றித் திருவடிப் பெருமை உணர்த்த, அதனுடன் அருள் ஓலையும் காட்டி, ஆண்டருள் செய்ததென்க'' என்னும் வரலாறு நன்கு விளக்கும். இந்நிகழ்ச்சியை,

குறுமுனி யெழுகடலை யும்பருகும்
கொள்கைபோற் றில்லையி னடஞ்செய்(து)
உறுபவனு மகிழ்ந்தருளச் சீட்டங்(கு)
உதவுமுத் தரவினுற் சிறந்த
மறுவிலா விடையான் திருவடிப்பெருமை
வாதவூ ரையன்முன் விடுத்த
சறுவநற் கருத்தும் தாண்டவராயன்
தகுமுரை செய்தனன் தமிழால்.

என்னும் இராமசாமிபாரதியின் பாயிரப்பாடல் குறிக்கின்றது.

திருப்பாதவியல்பாக முத்தியிலக்கணமும் அடியாரோடு கூடுதலாகிய அணைந்தோர் தன்மையும் உணர்த்துதலின் இத் திருப்பாடல் முத்தியிலக்கணம் உணர்த்தியமை தெளிவாதல் காண்க.

427 நீதி யாவன யாவையு நினைக்கிலேன்
நினைப்பவ ரொடுங்கூடேன்
ஏத மேபிறந் திறந்துழல் வேன்றனை
யென்னடி யானென்று
பாதி மாதொடுங் கூடிய பரம்பரன்
நிரந்தர மாய்நின்ற
ஆதி யாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 2

இ-ள்: தம் திருமேனியிலே பாதியாக உமாதேவியொடும் கூடிய பரம்பரனும், எங்கும் நீக்கமற நின்ற முதல்வனும்

ஆகிய சிவபெருமான், அடியேன் நீதியென வேத ஆகமங்களாற் கூறப்பெற்றவை ஒன்றையும் நினைக்கவும் செய்யேன்; அங்ஙனம் நினைக்கும் அடியார்களொடும் கூடேன்; துன்பத்திலே துன்பத்திற்காகவே பிறந்து இறந்து சுழல்கின்ற என்னை, என்னுடைய அடியான் என்று உரிமையோடும் ஆண்டு தன் அடியார்களில் ஒருவனாகக்கூட்டிய அதிசயத்தைக் கண்டாம் என்றவாறு.

நீதிகளை மனத்தாலும் எண்ணாதவனும், நினைக்கின்றவர்களின் கூட்டத்தை வெறுப்பவனும் ஆகிய என்னை அடியான் என்று ஆண்டு அடியார்களில் ஒருவனாக்கிய அதிசயத்தைக் கண்டாம் நீயிரும் காண்பீர்களாக என்பது கருத்து.

நீதி - வேதாகமங்களில் விதிமார்க்கங்களாகவும், ஞான மார்க்கங்களாகவும் செய்யத்தக்கவை இவை என விதிக்கப் பெற்றவை. அவை சரியைமுதலாகிய தொண்டுகள். அவற்றைச் செய்து அருளுக்கு இலக்காகுதல் உடலெடுத்த உயிர்களின் கடமை. இதனை உணர்ந்து முற்பிறப்பில் பரிபாகமுற்ற புலி, பசு, யானைமுதலிய விலங்கினங்களும், கரிக்குருவி நாரை கோழி முதலிய பறவைகளும், ஈ எறும்பு முதலியவைகளுங்கூடச் சரியை கிரியைகளைச் செய்து சிவலோகம் பெற்றுள்ளனவே என்று அறிந்து ஒழுகவேண்டிய யான் நீதிகளை நினைக்கவும் செய்யேன் என்றார்.

நினையாமற்போயின், அது ஆன்மாவின் குற்றம் அன்று. அத்தகைய சார்பு இருந்தால் சார்ந்ததன்வண்ணமாம் ஆன்மா நீதியை நினைக்கும் அடியார்கூட்டத்தைச் சார்ந்து நீதியை நினைக்கவும் ஒழுகவும் தொடங்குமே என்று நினைப்பவர்களை நீ காட்டியபோது அவர்களோடு கூடவும்செய்யேன் என்பார் 'நினைப்பவரொடுங்கூடேன்' என்கின்றார்.

ஏதம்-துன்பம். அது பிறவிக்கேதுவாகிய துன்பம். அது வினையின் வந்தது. பிறந்த பின்னர் நுகருவதும் ஈட்டுவதும் துன்பமே ஆதலின் வினைக்கு விளைவாகியது. ஆகவே, ஏதமே பிறந்து என்பதற்குத் துன்பத்தால் பிறந்து துன்பத்திற்கு இடமான பிறவி எனப் பொருள்கொள்க. கறங்கும் சகடமும் போலப் பிறத்தலும் இறத்தலும் மாறிமாறி வருதலின் 'பிறந்து இறந்து உழல்வேன்றனை' என்றார்.

முதல்வன், ஒருவனை என் அடியான் என்று தம்வாயால் பிறரறியக் கூறவேண்டின், முதல்வனுக்குகந்த குண நலங்களும் செயல்நலங்களும் அமைதல் அடிமைக்கு இன்றியமையாதது;

அத்தகைய நலங்கள் சிறிதுமிலாத என்னையும் 'என்னடியான்' என்று திருவாய்மலர்ந்தான் இறைவன்; இஃது எத்துணைப் பெருங்கருணை என வியக்கின்றவர் அதற்குரிய காரணங்களாக எம் இறைவன் பாதி மாதொடுங்கூடிய பரம்பரன், நிரந்தரமாய் நின்ற ஆதி என்று இறைவன் இயல்பை உணர்த்துகின்றார். பரம்பரன்-மேலானவற்றிற்கெல்லாம் மேலானவன். நிரந்தரம்-இடையீடில்லாமை.

தன் அடியரிற்கூட்டினமையாவது எனது அகப்பற்று புறப் பற்றையும், அதற்கேதுவாகிய அறியாமையையும் அதற்கேது வாகிய ஆணவமலத்தையும், அது பரிபாகமுறுத்தக் கூட்டப் பெற்ற மாயா மல கன்மமலங்களையும் போக்கிச் சுத்தானமா வாக்கிச் சிவத்தையே நோக்கிச் சிவமயமாக விளங்கும் சிவ னடியார் கூட்டத்தில் சேர்த்தல்.

என்னடியான் என ஏற்றுக்கொள்ளுதலும், அடியாரொடு கூட்டுதலுமாகிய முத்திமிலக்கணம் உணர்த்துதலின் இதுவும் பதிகப்பொருளதாதல் காண்க.

*428* *முன்னை யென்னுடை வல்வினை போயிட*
*முக்கண துடையெந்தை*
*தன்னை யாவரும் அறிவதற் கரியவன்*
*எளியவன் அடியார்க்குப்*
*பொன்னை வென்றதோர் புரிசடை முடிதனில்*
*இளமதி யதுவைத்த*
*அன்னை யாண்டுதன் அடியரிற் கூட்டிய*
*அதிசயங் கண்டாமே.* 3

இ-ள்: மூன்று கண்களையுடைய என் தந்தை; தன்னை எத்தகையவராலும் அறிதற்கு அரியவன்; ஆனால் தம் அடியார்க்கு அறியமட்டுமன்றி அறிந்து அனுபவிப்பதற்கும் எளியவன்; பொன்னை நிறத்தால்வென்ற புரிகளாகிய சடைமுடியில் இளம்பிறையை அணிந்திருக்கின்ற என் தாய்; அவன் என்னுடைய பழவினைகள் யாவும் பாறும்வண்ணம் ஆட்கொண்டு தன் அடியாருடன் கூட்டிய அதிசயம் கண்டோமே என்றவாறு.

சிவனடியார்களுடன் அடியேன் கூடுதற்குத் தடையாக இருந்தவை மல மாயா கன்மங்களே என்பதைத் திருவுளம் பற்றி, மல மாயைகளைப்போக்கி ஆண்டமையை முன்னருள்ள திருப்பாடல்களில் தெரிவித்த அடிகள், இத்திருப்பாட்டில்

இறைவன் வினைப்போகங்களையும் ஒழித்து ஆட்கொண்ட மையை உணர்த்துகின்றார்.

முக்கண் - சோம சூரிய அக்கினிகளாகிற மூன்று கண்கள். இவை காலக்கருவியாகிற சூரிய சந்திரர்களுக்கு ஒளி தருவன வாயும், அக்கினிக்கு வலியும் சுட்டொன்றுவிக்கும் ஆற்றலும் அளிப்பதாயும், யாகசாட்சியாகவும், யாகாக்கினிக்கு மூலமாயும் அமைந்தவை என்பது சிவாகமக் கருத்து. அவற்றைத் தம் கண்களாகக்கொண்டது ஆன்மாக்களுடைய வினைப்போகங் களை வரையறுத்துக் காட்டவும், அவர்கள் தீவினைகளைச் சுட்டு எரித்துத் தம் திருவடிக்கீழ் ஒன்றுவிக்கவும் என்க.

யாவரும் - பதமுத்தியிலும், பதவிகளிலும் இருப்பவர்களா கிய அயன் முதல் அனந்தாதிவரை உள்ள எவராலும் என்க. அவர்கள் மலமுடையவர்களாதலின் மலரகிதனாகிய இறைவன் அவர்களால் அறியவொண்ணாதவனாயினன் என்க.

அடியார்கள் 'சிவன் ஒருவனே தியானிக்கத் தக்கவன்' என்பதையுணர்ந்து, அதற்குரிய உபாயங்களில் நின்று, உப தேசம் பெற்று, ஐந்தெழுத்தருமறை வழி நின்று சிவஞானம் பெற்றவர்களாதலின் அவர்கள் அறிந்துய்ய எளியனாயினன் இறைவனென்பார் 'அடியார்க்கு அறிதற்கு எளியவன்' என்றார். அறிவதற்கு என்றாராயினும் அறிந்து அனுபவித்தற்கு எனப் பொருள்கொள்க; அச்செயற்குரியார் அவர்களே ஆதலின்.

இறைவன் தமக்குச் செய்த கருணையை எண்ணும்போதும், இளம்பிறை செய்த மாபாதகங்களையும் மறந்து அதனை இரட் சித்துத் தன் தலைமீது வைத்துக்கொண்ட பேரருளை நினையும் போதும் அவனிடம் தாயின் கருணையே விளங்கக் காண்கின்றா ராதலின் 'அன்னை' என்றார்.

இத்திருப்பாட்டு, தம்மையாண்ட திறங்களையும், அடிய ரொடு கூட்டுதலையும் கூறுதலின் பதிகக்கருத்ததாதல் காண்க.

429 பித்த னென்றெனை யுலகவர் பகர்வதோர்
காரண மிதுகேளீர்
ஒத்துச் சென்றுதன் திருவருட் கூடிடும்
உபாயம தறியாமே
செத்துப் போயரு நரகிடை வீழ்வதற்
கொருப்படு கின்றேனை
அத்த னண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 4

இ - ள் : உலகமக்கள் என்னைப் பித்தன் என்று கூறுதற்குரிய காரணத்தைக் கூறுகின்றேன் கேளுங்கள்; இருவினை ஒப்புநிகழச் சென்று, தனது திருவருளோடு கூடும் உபாயத்தை அறியாமல், வீணாக இறந்து கொடிய நரகிடை வீழ எண்ணியிருந்த அடியேனை அத்தனாகிய இறைவன் ஆண்டு கொண்டு தன் அடியார் திருக்கூட்டத்துள் சேர்த்த அதிசயம் கண்டோம் என்றவாறு.

அருநரகிற்குப் போகவிருந்த என்னை ஆண்டு அடியருடன் கூட்டியது பேரதிசயம்; அதனைக்கண்டோம் என்பது கருத்து.

பொன்னும் மணியும் வழியிற்கிடக்கும்; அவற்றை மிதித்து இடறிவிட்டு ஓட்டைப் பொறுக்கும் உலகவனைப் பித்தனென்று உலகம் சொல்வதுபோல, திருவருளோடு கூடி நித்தியானந்தம் அனுபவிக்கவேண்டிய அடியேன் திருவருளோடு கூடாமல் அருநரகில் வீழ்ந்து அவதிப்பட்டேன்; ஆதலால், உலகவர் என்னைப் பித்தன் என்றனர் என்கின்றார்கள். உலகவர் என்றது ஈண்டுக் கன்மபூமியிலுள்ள பசுபோதமுனைப்புள்ள மக்களை அன்று; ஞானபூமியிலே உலாவும் சிவஞானியரை என்க. அவர்களுக்குத்தான் இவர் பொருந்தவேண்டியதை விட்டுப் பொருந்தத் தகாததைப் பொருந்தி உழல்வது புரியும்; ஆகவே, இரங்கிப் பித்தன் என்று உரைப்பர் ஆதலான் என்க.

ஒத்து - இருவினை ஒப்புவந்து. இதற்குத் தலைவனோடு ஒத்து என்றும், குணங்களால் ஒத்து என்றும், வேதாகமவிதிகளோடு ஒத்து என்றும் உரை கூறுவர். மரபுவழிக்குப் பொருந்தியது கொள்க.

சென்று : காந்தத்தைக் கண்டவுடன் இரும்பு நகருவது போல இருவினையொப்பும் மலபரிபாகமும் பெற்றவழி உயிர் உபாயங்களால் இறைவனை அணுகுதற்கும், அனுபவித்தற்கும் உரியனவாகலான் 'சென்று' என்றார். சென்று - இறைவனை அணுகி என்க. அணுகுதலாவது சிவயோக சிவஞானங்களால் சென்று சேருதல்.

உபாயம் - சரியையாதி உபாயங்கள். செத்து - பயனற்று; இறந்தென்க. அரு நரகு - அனுபவிக்க முடியாத துன்பமே வடிவான அரிய நரகம். ஒருப்படுகின்றேனை - மனம் ஒன்றிய என்னை.

பழையவுரை : சீரடியார்களே நன்மை தீமை தெரியாதவனென உலகத்தார் சொல்வதான காரணம் கேண்மோ! அடியேன் உண்மை வினவில், "ஆரண உருவாம் தில்லை யம்பலம்

எய்தப்பெற்றோர், ஒருணர் வாவர்'' என்றும், "ஒன்றல்லார் ஒன்றூரல்லர் காரணராகார் ஒத்த கருத்தினர், நிருத்த வின்பப் பூரணராகி யுள்ளார் வாழும் புவனமும் போதுவாம்'' என்றும், உள்ள பரமுத்தியான திருவருளின்ப உபாயமான உடந்தை யாய சிவன்தோற்றம் ஒன்றுமேகண்டு நிட்டையன்பாற்கூடாது, வேறெனக் கருதிச் சவமாகி அவமே நரகவேதனைக்கு ஆளான பாவியைத் திருவருளால் இரங்கி, வேறின்மை காட்டி, அடிமை யானந்தச் சிவானுபவமாகச்செய்து, திருக்கூட்டத்தருகிலருள் வதையும், ஞானமே பித்தாகக்கொண்ட உண்மையையுங்கண்ட உலகத்தார் எனக்குத் தகாதென அருளிய அதிசய இன்பம் அனுக்கிரகம் செய்தது என்று கூறும். இதனை அனுபூதியுரை என்றமைக்கு ஏற்பச் சிறந்த சிவானுபவத்திறம் தெரிய நிற்றல் கண்டு தெளிந்து இன்புறுக.

இருவினை ஒப்பும், மலபரிபாகமும், சரியையாதியினிற்றலும் ஆகியவற்றூல் முத்தி எய்துதற்கு உரியதென இத்திருப்பாடல் முத்தியிலக்கணம் மொழிதல் காண்க.

430 பரவு வாரவர் பாடுசென் றணைகிலேன்
பன்மலர் பறித்தேத்தேன்
குரவு வார்குழ லார்திறத் தேநின்று
குடிகெடு கின்றேனை
இரவு நின்றெரி யாடிய எம்மிறை
யெரிசடை மிளிர்கின்ற
அரவாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 5

இ - ள்: துதிப்பவர்கள் பக்கமும் சென்றணையேன்; பல பூக்களைப் பறித்துச் சிவபூசை செய்யேன்; குராமலரைச்சூடிய நீண்ட கூந்தலையுடைய பெண்கள் நலத்திலேயே நின்று குடி கெட்டுப்போகின்ற என்னைப் பேரூழிக் காலத்து இரவிலே, ஊழித்தீயில் நின்று ஓங்காரதாண்டவம் புரிகின்ற எம்மிறை வனும், தீக்கொழுந்து போலும் சிவந்த சடையிலே விளங்கு கின்ற பாம்புகளை அணிந்தவனுமாகிய சிவபெருமான் ஆட் கொண்டு அடியாரொடுங்கூட்டிய அதிசயத்தைக் கண்டோம் என்றவாறு.

துதித்தலும் சிவபூசையும் செய்யாத என்னையும் ஆட் கொண்டு அடியரொடு கூட்டியது பெரிய அதிசயம்; அதனைக் கண்டோமே என்பது கருத்து.

பரவுவார் - இறைவன் புகழ்களைச் சொல்லித் துதிப்பவர். பாடு - பக்கம். துதிப்பவர்களின் பக்கம் சென்று துதிகளைக் கேட்பின் ஊமைத்தசும்பில் நீர் நிறைந்தாற்போலச் சிறிது சிறிதாகவேனும் சிந்தையில் அன்புநீர் சுரக்கும். அதனால் சிவ பூசை செய்யும் விருப்புண்டாம். ஆதலால், புகழ்வார்பக்கமே போகேன். அங்ஙனமிருக்க எங்ஙனம் மலர்பறித்திட்டு ஏத்து வேன் என்பார். தன் குறைகளை விதியும் உடன்பாடுமாகிய இருவகையானும் உணர்த்துகின்றவர் 'அணைகிலேன் ; ஏத் தேன் ; குழலார்திறத்தே நின்று குடிகெடுகின்றேன்' என்றார்.

குழலார் குடிகெடுப்பவர் என்பதை அறிந்திருந்தும் அவர் திறத்தே நிற்பது என் அறியாமையின் முதிர்வு என்றவாறும்.

இரவு - எல்லாம் ஒடுங்கிய, ஒளிப்பொருள்களாகிய சூரிய சந்திரர்களும் ஒடுங்கிய பேரூழிக்காலத்துப் பேரிரவு. நின்று - எல்லாம் தம்மகத்து ஒடுங்கத் தாம் ஒருவனே நின்று.

எரி - பேரூழிக்காலத்து எல்லாவற்றையும் சுட்டெரித்த ஊழித்தீ. ஆடிய - மகாசங்கார தாண்டவம் செய்த. இதன் இலக்கணத்தை எமது ஆடல்வல்லான் என்னும் நூலிற் காண்க.

அணைகிலேன் என்பதற்கு அடியார்பால் சென்று ஏவல் கேட்கின்றிலேன் என்றும், இரவு என்பதற்கு மகாகேவல இருட்டு என்றும், எரியாடிய என்பதற்கு எரிவடிவாகிய மழு ஏந்தித் திருநடனம் புரிகின்ற என்றும், ஆண்டு என்பதற்குச் சகலத்தில் சுத்தஞ்செய்து என்றும் பழையவுரை கூறும்.

இத்திருப்பாடல் உலகபோகமே பெரிதென்றழிய இருந்த என்னைத் தடுத்தாண்டு அடியரிற்கூட்டினான் இறைவன் என்கின்றமையால், மலமாயா கன்மங்களோடுகூடிய ஆன்மாவைப் பரிபாகமுறுத்தி, திருவடி கூட்டி, அடியார் கூட்டத்துடனிருந்து சிவபோகம் நுகரச்செய்தலே முத்தியென இலக்கணமுணர்த்துதல் காண்க.

**431** எண்ணி லேன்திரு நாமவஞ் செழுத்துமென்
ஏழைமை யதனாலே
நண்ணி லேன்கலை ஞானிக டம்மொடு
நல்வினை நயவாதே
மண்ணி லேபிறந் திறந்துமண் ணாவதற்
கொருப்படு கின்றேனை
அண்ண லாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 6

இ - ள் : என் அறியாமையால், நின் திருப்பெயராகிய திருவைந்தெழுத்தை எண்ணினேன் அல்லேன்; கலை ஞானத்தையும் நண்ணிலேன் ; சிவஞானியர்தம்மொடும் கூடிச் சிவ புண்ணியங்களை விரும்பாது, இப்பூமியில் பிறந்து இறந்து மண்ணாவதற்கு ஒருப்பட்டேன்; அத்தகைய அடியேனை அண்ணலாகிய தேவரீர் ஆட்கொண்டு அடியார்கூட்டத்திற் கூட்டிய அதிசயம் கண்டாமே என்றவாறு.

திருவைந்தெழுத்தை ஓதுதலும் கலைஞானங்களை அடைதலும் ஞானியர்தம்மோடு கூடிப் பதி புண்ணியமே புரிதலும் பிறவி எடுத்த உயிர் பேறடையும் நெறிகளாக இருக்கவும், யான் அவற்றைச் செய்யாது, மண்ணிலே பிறந்து இறந்து மண்ணோடு மண்ணாகப் போவதற்கு இருக்கின்றேன் ; என்னையும் அண்ணல் ஆண்டு அடியார்கூட்டத்திற்கூட்டினார்; இதுவோர் அதிசயம் காணீர் என்பது கருத்து.

திருநாம அஞ்செழுத்து - அஞ்செழுத்து மந்திரமுமதுவே, அவர் பெயருமதுவே என்றபடி. எண்ணிலேன் - உருச்செபியேன் என ஓதுமுறையினும், தியானியேன் என நிற்குமுறையினும் உரைகொள்க. அங்ஙனம் எண்ணாமைக்குக் காரணம் என் ஆணவமலகாரியமாகிய அறியாமையே என்பார் 'ஏழைமையதனாலே எண்ணிலேன்' என்றார். வாய்வைத்தளவில் மருந்தாய் வாசனாமலங்கெடுப்பது ஐந்தெழுத்தாகலின் அதனை எண்ணி மலவாசனையை அகற்றேன்; அன்பரோடு மருவுதலும் அங்ஙனமே நன்மை பயப்பதாகலின் அதனையும் செய்கிலேன் என்றவாறும். உயிர்கள் உலகில் உடலொடு வந்தது சிவபுண்ணியங்களைச் செய்து சிவகதிசாரவேயாதலின் அடியேன் அங்ஙனம் செய்யாது, மண்ணிலே பிறந்து நல்வினை நயவாது இறந்து மண்ணாவதற்கு ஒருப்படுகின்றேன் என்பதாம்.

அண்ணல் - பெருமையிற் சிறந்தவன். உலகியலில் பெத்தான்மாவாகப் பிறந்திறந்துழல இருந்த என்னையும் அடியரொடு கூட்டுதலாகிய பேரருளைச் செய்தான் ; இதுவோர் அதிசயம் ! இதனைக் காணுங்கள் என்றவாறு.

அஞ்செழுத்து எண்ணுதலும், 'அடியாரை அடைதலுமாகிய இரண்டும் முத்திக்குரிய இலக்கணம் என மொழிதலின் பதிகக் கருத்திற்கு இயைபுண்மை அறிக.

432 பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும்
பொழுகிய பொய்க்கூரை
இத்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற்
சுழித்தலைப் படுவேனை

முத்து மாமணி மாணிக்க வயிரத்த
பவளத்தின் முழுச்சோதி
அத்த னுண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 7

இ - ள்: முத்தும், கரிய மணியாகிய நீலமும், மாணிக்கமும், வயிரமும், பவளமுமாகிய இவை அனைத்தும் ஒருங்கே கூடி ஒளிசெய்தால் ஒத்த முழுச்சோதி வடிவான அத்தன், பொள்ளலானதும், ஊனாலாகிய சுவரையுடையதும், புழுக்கள் பொதிந்துள்ளமையால் உளுத்ததும், நிணநீர் கசிவதும், பொய்யாகிய கூரை வேயப்பெற்றதுமாகிய இதனை மெய்ப்பொருளென எண்ணி நின்று, துன்பக்கடலில் தோன்றும் சுழியின்கண் அகப்பட்டு அலைக்கப்படுகின்ற என்னை, ஆண்டு தம் அடியார்கூட்டத்துட்கூட்டிய அதிசயம் கண்டாம் என்றவாறு.

மிக இழிந்த இப்பொய்யுடலை மெய்யென நம்பித் துன்பக்கடலின் சுழியிலகப்பட இருந்த அடியேனை ஆண்டு, அடியருட்கூட்டிய அதிசயம் கண்டாம் என்பது கருத்து.

பொத்தை - பொள்ளல். பொறிகளும், மயிர்த் துவாரங்களுமாகிய பொள்ளல்கள் பலவுடைமையின் பொத்தை என்றார்.

ஊன் - இறைச்சி. இறைச்சியாலாகிய சுவருடையது உடல் என்க. கீரிப்பூச்சியும், செவ்வணுவும், வெள்ளணுவும் புண்பட்ட இடத்து உண்டாகும் பூச்சிகளுமாகப் பலவுடைமையின் 'புழுப்பொதிந்து' என்றார்.

புழுத்த பொருள் உளுத்துப்போகும் ஆதலின் உளுத்து என்றும், புழுத்தபுண்ணிலிருந்து ஊனீர் கசிதலின் அசும்பு ஒழுகிய என்றும், அடுத்தகணம் இருப்பது உறுதியன்றாதலின் பொய்க்கூரை என்றும், காலும், கையும், விலாவெலும்பு விட்டமும், நரம்புக்கயிறும், ஊன்சுவரும், தோலாகிய கூரையும் பெற்றது உடலாதலின் அதனைக் கூரை என்றும் கூறினார்.

இதை என்பது இத்தை என எதுகைநோக்கி விரித்தல் விகாரம் பெற்றது. இகழ்ச்சிக்குறிப்பு என்பாரும் உளர். துன்பங்களைக் கடலாகச் சொன்னவர், மாதர்களைச் சுழியாகக் கூறிற்றிலர் ஆயினும் வந்ததுகொண்டு வாராதது முடித்து ஏகதேசவுருவகமாதலை உணர்க. சுழி தலைப்படுவேனை எனப் பிரிக்க.

முத்துமுதலிய எல்லா மணிகளும் ஒருங்குசேர்ந்து இமைத்தாற்போலும் முழுச்சோதி அத்தன் என்க.

கடலிற்கிடந்த என்னைக் கரையேற்றி அடியரிற் கூட்டினுன் என்றதாம்.

அப்பர்சுவாமிகளும் 'குருகாம் வயிரமாம்' என்ற தாண்டகத்து இறைவனை மணியொளிப்பிழம்பாக அணிப்படுத்தியது காண்க.

எடுத்த தனுவைச் சாதனமாகக் கருதி அதன்கண் பற்று அறுத்தலும் திருவடிச்சார்பைப் பெற விரும்புதலுமே முத்தியிலக்கணம் என மொழிந்தவாறும்.

433 நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை
குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து
நுகமின்றி விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத்
தெழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி யாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 8

இ - ள்: அநாதியே என்னைத் தன்னோடு நில்லாதவண்ணம் நீக்கி, பிறவியிற் புகச்செய்து, திருவருள்நோக்கம் புரிந்து, நுண்ணியனவும் கைநொடியில் அமைந்தனவும் ஆகிய சின்முத்திரையைச் சொல்லாகச்செய்து, நுகத்தடியின்றி உழுது என்னை எடுத்து, முற்பிறவிகளிற்செய்த பொய்யாகிற பயனில் செயல்கள்நீங்கக் குற்றத்தையகற்றி, எழுகின்ற சுடர்ச்சோதியாக்கி ஆட்கொண்டு தன்னடியரிற்கூட்டிய அதிசயத்தைக் கண்டாம் என்றவாறு.

அநாதியில் திருவடியில் அறியாமை அறிந்து கிடந்த என்னைத் திருவடியில்சேர்க்கத் திருவுளங்கொண்டு பிறவியைத் தந்து குருவாகவந்து உபதேசித்து, என்னை இப்பவத்திற் சேராவகை எடுத்து, ஞானியாகச்செய்து ஆட்கொண்டு அடியரிற்கூட்டிய அதியம் கண்டாம் என்பது கருத்து.

இரும்பைப் பொன்னுக்கியதுபோலச் சகலனுகிய என்னைச் சிவமாக்கி என்னையாண்டு அடியரிற் கூட்டினுன் என்றவாறும்.

முன் என்றது அநாதிகேவலத்தில் ஆன்மா சிவத்துள் அடங்கிச் செயலற்றுக்கிடந்த காலத்தைக் குறித்தது.

கேவலநிலையிலே பாஷாணம்போற்கிடந்த என்னை மலவன்மை விட்டுநீங்காமையால் அதனின்றும் நீங்கி அடியேன்

உய்யத் தனுகரணுதிகளைத் தந்தமையை 'என்னைத் தன்னெடு நிலாவகை குரம்பையிற் பெய்து' என்பதால் அருளியவாறு காண்க. புகப்பெய்து என்ற சொல்லாற்றல் ஆன்மாவுக்குச் சுதந்தரமின்மையை அறிவித்தவாறு தெளிக.

குரம்பை - கூடாகிய உடல். 'குடம்பை தனித்தொழிய' என்ற திருக்குறளும் நோக்குக.

குரம்பையிற் கூட்டியவுடன் பொறிகளைத் துணைக்கொண்டு புலன்களைத் துய்த்துப் போகமே பெருக்கி வருவினைக்கு வழி தேடிப் பிறவிக்கடலின் நடுவையடைந்து கரைகாணுது தவிக்க இருந்த என்னை 'இவன் அறியாமை இருந்தபடி என்னே' என்று இரங்கிக் கருணைபாலித்ததை 'நோக்கி' என்றதால் உணரவைத்தமை காண்க. கடாட்சம் புரிந்து என்பது ஒருரை. பழையவுரை சகலப்படுவதான தேகமருளி என்பது.

நுண்ணிய சொல் - மிகநுட்பமான ஒலியையுடைய சொல். அது சி வ ய ந ம என்பது. அதனைச் செய்தலாவது 'விதி எண்ணும் அஞ்செழுத்தே' என்றபடி எண்ணச்செய்தல். நொடி அன்ன சொல் செய்து - நொடித்தற்றெழில் புரியுங்காலத்து மூவ்விரல் விலகப் பெருவிரலோடு சுட்டுவிரலணைய நிற்கும் நொடியை உராத்துணை தேர்த்தெனப் பாசம் ஒருவப் பசு பதியை அடைதலாகிய குறிப்புணர்த்தும் சொல்லாகச் செய்து. ஆகவே எண்ணுநிலையும் நிற்குநிலையும் ஒன்ருகக் காட்டி என்ப தாம். பழையவுரை 'பரிபாககால நுட்பச் சத்திநிபாதம் விரை விலே அருளி' என்பது.

நுகம் - நுகத்தடி. ஏரிற் பிணைக்கப்பட்டு மாட்டின் கழுத்தில் பூட்டப்படும் மரம். நுகமின்றி உழமுடியாது. ஆயினும் விச்ச தின்றி விளைவுசெய்யுமிறைவன் நுகமின்றி உழும் வன்மையும் உடையான் எனவுணர்க. விளா - வட்டமாக உழுதல். விளாக் கைத்து - வளைய வளைய உழுது. வயலுழுதல் போல என்பது பழையவுரை. உழுதலை விளாவடித்தல் என்பது உழவர்வழக்கு. இறைவன் சாதனங்களின்றியே சாதிக்கும் பேராற்றலன் என்ப துணர்த்தியவாறும்.

தூக்கி - ஆராய்ந்து. உயிரின் பரிபாகநிலையை ஆராய்ந்து. முன்செய்த பொய் அறத் துகள் அறுத்து - முன் முன் பிறவி களில் தற்போத முனைப்பால் அறியாமை வயப்பட்டுச் செய்த பொய்யான வினைகள் அற, குற்றங்களை நீக்கி; அதாவது உயிர் ஆணவத்தைச் சார்ந்து நின்றபோது செய்த பாவகன்மங்களைப் போக்கி என்பதாம்.

எழுதரு சுடர்ச்சோதியாக்கி - உதயசூரியனாக்கி; சிவஞானி யாக்கி என்றவாறு. ஆண்டு - மீண்டும் மலகன்மங்கள் வந்து தாக்கிப் பதிபோதம் பிற்பட்டொழியாது அதுவே விஞ்சி விளங்க ஆட்கொண்டு. அது கெடாமைப்பொருட்டு அடியார் கூட்டத்தும் கூட்டினன் அது அதிசயமாம் என்றது.

குரம்பையிற் பெய்து என்பது இறைவன் தனு கரணாதிகளை உயிர்கள் மலவாதனை நீங்கி உய்ய உதவியதையும், சொற் செய்து என்பது திருமந்திரோபதேசமும் தியான பாவனையும் உதவியதையும், நோக்கியென்பது சட்சுதீட்சை புரிவதையும், விளாக்கைத்து என்பது இறைவன் இடைவிடாது வந்துவந்து மனதிடங்கொண்டமையையும், தூக்கி யென்பது இருவினை யொப்பு மலபரிபாகம் இவற்றை ஆராய்ந்துணர்ந்ததையும், பொய்யற என்பது ஆகாமிய சஞ்சித வினைகளை அருளால் ஒழித்தமையையும், துகளறுத்து என்பது மலவலியையொடுக்கி மாயையை அகற்றியதையும், எழுதரு சுடர்ச்சோதி என்றது பரிபாகமுற்ற ஆன்மா சுத்தான்மாவாகியதையும் முறையே உணர்த்துவதால் இச்செய்யுள் முத்திஇலக்கணம் மொழிதல் உணர்க.

434 உற்ற வாக்கையின் உறுபொருள் நறுமலர்
எழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்
அப்பொருள் பாராதே
பெற்ற வாபெற்ற பயனது நுகர்ந்திடும்
பித்தர்சொற் றெளியாமே
அத்த னாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 9

இ-ள்: எடுத்த இந்தத் தேகத்திற்பொருந்திய பொருள், நல்ல மலரின்கண் மணம்போலக் கருவிகரணங்களாற் பற்றக் கூடிய தன்மையில்லாத பரம்பொருளாம்; அப்பொருளைக் காணாமல், பெற்றதைப் பெற்றவாறே பெற்று அப்பயனை நுகரும் பித்தர்களின் வார்த்தைகளைத் தெளியாதவண்ணம் என் தந்தையாகிய சிவன் ஆண்டு தன்னடியார் கூட்டத்தில் கூட்டிய அதிசயமே அதிசயம்; அதனைக்கண்டாம் என்றவாறு.

எடுத்த இத்தேகத்தைக் கோயிலாகக்கொண்டு பூவினிற் கந்தம் பொருந்தியவாறுபோல் விளங்குகின்ற - ஆனால் பொறி புலன்களாற் பற்றக்கூடாத - சிவஞானம் ஒன்றாலேயே பற்றக் கூடிய பரம்பொருளைக்கண்டு அநுபவியாமல், தாம்கண்டதைக் கண்டு அதனையே நிர்வாணம் என்றுணரும் பித்தர்களின்

சொற்கேட்டுக் கெட இருந்த என்னை, அங்ஙனம் அவர்கள் சொல்லைக் கேளாவண்ணம் அத்தன் ஆண்டு அடியரிற்கூட்டினான், இவ்வதிசயம் கண்டாம் என்பது கருத்து.

உயிர்களின் வினைநுகர்ச்சிக்குத் தக்கவாறு இறைவன் உடலைக் கொடுக்க உடல் வந்தடைகின்றதேயன்றி 'இவ்வுடல் வலியவுடல், அழகிய உடல், இதுதான்வேண்டும்' என்று தாமே கொள்ள உயிர்களுக்கு என்றும் சுதந்திரமின்மையின் உற்ற யாக்கை என்றருளினர். உற்றயாக்கை-வினைக்கீடாக இறைவன் உதவவந்து பொருந்திய யாக்கை.

'எமக்குச் சிவபெருமான் இப்பிறவியைக் கொடுத்தது தம்மை வணங்கிப் பேரின்பம் பெறும்பொருட்டேயாம்' என்பது நீதி வாக்கியமாகலின் இவ்யாக்கையால் யாம் அடையும் பேறு பரம் பொருளைப் பெறுதலே என்பது. அப்பரம்பொருள் பூவினிற் கந்தம் பொருந்தியவாறுபோலச் சீவனுக்குள்ளே சிவமணம் பூக்க நிற்கின்றது. அதனை, இடைவிடாது நுகர்தலே தம் கடமையாயிருக்கவும், அதனைப் பாராமல், தாம் கண்டதைக் கண்டு பயனுகர்தலின் பித்தர் என்றார்.

தாமே தம் அறிவுத்திறத்தாற் சில உண்மைகளைக் கண்டு, பஞ்சகந்தமறுதலே முத்தி என்பாரும், தாம்பெற்ற ஐம்பொறியின்பங்களே முத்தி என்பாரும், அஞ்ஞான நீக்கமே முத்தியென்பாரும் முதலான பித்தர்கள். அவர்களுக்குத் திருவருள் உதவியின்மையால், தாம்பெற்ற முடிபுகளைத் தாம்பெற்றவாறு அதன்பயன் நுகர்தலே முடிந்தநிலை என்றுகூறும் பித்து மிக்கனர் என்பதாம். தாம் ஆசாரிய மூர்த்தியாகிப் பிறருக்கும் உபதேசிக்க முன்வந்தவர்கள். அவர்கள் சொல்லைத் தெளியாது சிவபெருமான் தன்னைக்காட்டி ஆட்கொண்டான்; அடியரிற் கூட்டினான்; இதுவோர் அதிசயம் என்றபடி.

ஆக்கையின் உறுபொருள் பரம்பொருள்; அப்பொருள் பாராதே, பெற்ற பயன் நுகர்ந்திடும் பித்தர்சொல் தெளியாமே, அத்தன் ஆண்டு கூட்டிய அதிசயம் கண்டாம் என இயைத்துப் பொருள்கொள்க.

சிலர் யாக்கையின் உறுபொருளாகிய உயிரானது, பூவின்கண் மணம்போலப் பற்றக்கூடிய பொருளாவது, தனக்கு ஓர் பற்றுக்கோடும் இல்லாத பரம்பொருளேயாம்; அப்பொருளைத் தரிசித்தல் ஒழிந்து, தாமே ஒன்றைப் படைத்துக்கொண்டு பெற்ற பேற்றினையே நுகரும் பித்தர்சொல் கேளாது ஆண்டு

அடியரிற்கூட்டிய அதிசயம் இன்று கண்டாம் என பொழிப் புரைத்து, இதனல் உடலின் பற்றுக்கோடு உயிரும், உயிரின் பற்றுக்கோடு பரம்பொருளுமாகத் தொடர்புற்று நின்றுழித் தனக்கொரு பற்றுக்கோடின்றிப் பரந்தபொருளைப்பாராதே தம் அறிவின்மையால் தாம்கொண்டது விடாது கொண்டதனையே நுகர்வார் பித்தர் எனப்பட்டார் என விளக்கமும் தருவர். ‘காயமே கோயிலாக’ ‘என்னுடலிடங்கொண்டாய்’ என்பன முதலான மேற்கோள்கள் யாக்கையின் உறுபொருள் பரம் பொருள் என்பதையே சாதித்துநிற்றலின் இங்ஙனம் கொள்ளு தலாற் பெரும் பயனின்மை காண்க.

உற்ற ஆக்கையின் என்பதற்கு வினைப்பயனுக வந்துற்ற யாக்கை எனவும், பற்றலாவதோர்நிலை இல்லாப் பரம்பொருள் என்பதற்கு மாயேயமான கருவி கரணங்களாற் பற்றக்கூடிய தன்மையில்லாத பரம்பொருள் எனவும், அப்பொருள் பாராதே என்பதற்குத் திருவருள் கூட்டுவியாமையால் அப்பொருளைப் பாராமல் எனவும், பெற்றவா பெற்றபயன் என்பதற்குத் தாம் தனித்திருத்து ஆய்ந்து கண்ட முடிபுகளையே பெரிது என்று நுகரும் பயன் எனவும், அங்ஙனம் பரம்பொருள் தன்னிடமாக இருந்து பயனூட்டுதலையறியாத சாங்கியர் ஏகான்மவாதிகள் முதல் உலகாயதரீறுன அனைவரும் தத்தம் அநுபவ எல்லையிற் கண்டவற்றைச் சொல்வதால் பித்தராவார் எனவும் வேண்டுவ விரித்து மரபு பிறழாது உரை கொள்ளுதலே சிறப்பாம் என்க.

இத்திருப்பாடலில் இறைவன் ஆசான்மூர்த்தியாக எழுந் தருளி உபதேசித்தவற்றைத் திருவருள்வழி நின்று நுகர்தலே முத்தியென முத்தியியல்பு உரைக்கப்பெற்றுள்ளது காண்க.

*435 இருடி ணிந்தெழுந் திட்டதோர் வல்வினைச்*
*சிறுகுடில் இதுவித்தைப்*
*பொருளெ னக்களித் தருநர கத்திடை*
*விழப்புகு கின்றேனைத்*
*தெருளு மும்மதில் நொடிவரை யிடிதரச்*
*சினப்பதத் தொடுசெந்தீ*
*அருளு மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய*
*அதிசயங் கண்டாமே.*

*திருச்சிற்றம்பலம்*

இ - ள் : ஆணவமலத்தின் காரியமாகிய அறியாமை செறிய அதனல்தோன்றிய வலிய வினைகளை நுகர்வதற்குரிய

சிறிய குடில் இவ்வுடல்; இவ்வுடலை மெய்ப்பொருள் எனக் கருதிக் களித்து மீளற்கரிய நரகில் விழப்புகுகின்ற என்னை, விளங்குகின்ற மும்மதில்களாகிற கோட்டைகளையும் நொடிப் பொழுதில் அழியக் கோபக் குறிப்போடு செந்தீக் கொளுவ அருளிய உண்மைநெறியால் அடியேன் செல்ல இருந்த பொய் நெறியை நீக்கியருளிய அதிசயம் கண்டாம் என்றவாறு.

இவ்வுடல் அறியாமையால் விளைந்த வினைகளை நுகர்வதற்காக இறைவனால் அருளப்பெற்றது. இதனை உண்மை என்று களித்து நான் நரகிடைப் புகுகின்றேன்; என்னையும் திரிபுரம் எரித்த சினக்குறிப்போடுகூடிய உண்மை நெறியால் பொய்ந்நெறி புகாமே தடுத்து ஆட்கொண்டான் இறைவன்; அவ்வதிசயம் காண்போமாக என்பது கருத்து.

இருள் - ஆணவம். அது ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் காரியப்படாதவாறு மறைக்கும் அறியாமையை விளைவித்தலின் ஆணவம் இருள் எனப்பட்டது. "இருள் சேர் இருவினையும் சேரா" என்ற திருக்குறளையும், அதன் உரையையுங் கொண்டு அறியாமையின் செறிவால் விளையும் வினை என்பதையுணர்க.

வல்வினை-வலியவினை. இறைவன் கருணையாலும், நுகர்ந்து கழிப்பதாலும் அன்றி வேறெவ்வுபாயத்தாலும் அகற்ற முடியாதது என்றவாறு. இவ்வினைகள் அவிச்சை காரணமாக ஆன்மாவினிடம் தோன்றுவன, அவிச்சை ஆணவமாகிய மூலமலங் காரணமாக விளைவது என்ற காரண காரிய இயைபு உணர்க.

சிறுகுடில் - துச்சில். சிறிய குடிசை வீடு; என்றது உடலை. இத்தைப் பொருளெனக் களித்து - பொருளல்லாத இதனைப் பொருள் எனத் தருக்கி. உடலைப் பொருளெனக் களித்தமையால் அவ்வுடல் ஓம்புதற்குரிய செயல்களையே செய்து பொறி புலன்கட்கு அடிமைப்பட்டுத் தீவினைகளையீட்டி மீளாத நரகங்களில் விழ இருந்த என்னை என்பார் 'அருநரகத்திடை விழப் புகுகின்றேனை' என்றார்.

தெருளும் மும்மதில் - தோற்றப் பொலிவால் எங்கும் விளங்கும் முப்புரங்கள். நொடிவரை - நொடிப்பொழுதில். இடிதர - இடிந்துபோக. சினப் பதத்தொடு - கோபக்குறிப்போடு. முப்புரங்களும் நொடிப்பொழுதில் அழிந்துவிழக் கோபக் குறிப்போடு தீக்கொளுத்திய மறக்கருணையை 'மெய்ந்நெறி' என்றார்.

பொய்ந்நெறி - உடலையும் பொறியின்பங்களையுமே சதம் என்றிருந்த அழியும் தன்மையாகிய நெறி. அதிற் செல்லாத

வண்ணம் நீக்கிய என்க. முப்புரம் என்பது மும்மலகாரியமா தலின் முப்புரம் எரித்ததுபோல மும்மலகாரியமாகிய பொய்ந் நெறியை அழித்தாரென்பார் 'மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய அதிசயம்' என்றார்

பழையவுரை, மகாகேவல இருட்டான மலபோத வன்மை யில் உளதாகிய கொடிய வினையுடைத்தான ஒதுக்குக்குடிலான மாயா இயந்திரதனுவை உண்மையாகக் கொடுத்தருளியது. மலவாசனைதீர என எண்ணாது, யான் எனது என உவப்புக் கொண்டமையால், நரகக்குழியில் அழுந்திய என்னை மும்மலந் தீர ஒருப்படுத்துந் திருவுள்ளமாக, ஒரு நொடிக்குள் மூன்று கோட்டையையும் புன்சிரிப்பான கோபாக்னியால் பொடிசெய்து தத்துவசட இன்பம் பொய்யெனவும், திருவடிஞானமே அன் படிமையின்பம் எனவும் அருளிய அதிசயமே அதிசயமாகக் காண்மின்கள் எனப் பொழிப்புரைக்கும். இதன்கண் முன்னைக் கருத்தே மிளிர்தல் காண்க. இதனைச் சிலர் வேறாகவுணர்ந்து இத்தை - மாயா இயந்திர தனுவான இதனை எனப் பொருள் கொள்ளாது வித்தைப்பொருள் எனப் பிரித்து இடர்ப்படுவர்.

பின்னுரைகாரர் தெருளும் மும்மதில் என்பதற்கு மாற்றா ரால் அழித்தற்கும் உட்புகுதற்கும் இயலாததெனத் தெளிவு செய்யும் முப்புரம் எனவும், செந்தீயருளும் மெய்ந்நெறி என்ப தற்குச் செந்தீயானது அருளிச்செய்யும் மெய்நெறியானது பொய்ந்நெறி நீக்கிய அதியம் எனவும் உரைப்பர். இதில் செந்தீ என்றது சிவபெருமானையும், மெய்ந்நெறி - அவரருளிய சிவாகமநெறியினையும் உணர்த்துதல் காண்க. மெய்ந்நெறி யென்றது சிவபெருமானையே உணர்த்தும் என்பாரும் உளர்.

இத்திருப்பாடல் இறைவன் மும்மலகாரியமான அறியாமை யையும் வினைகளையும் அகற்றி ஆட்கொண்டமையாகிய முத்தி யிலக்கணம் மொழிதல் காண்க.

இப்பத்துப்பாடலானும் பரம்பரனும், அன்னையும், அத்த னும், அண்ணலுமாய இறைவன் ஆட்கொண்டு திருவடிகாட்டி அடியரிற் கூட்டியதும், புறச்சமயத்தாரின் பொய்யுரைகேட்டுப் பொய்ந்நெறி புகாமலும், நரகிடை வீழாமலும் காத்ததும், இரு வகைப்பற்றுமற்று இறைவனடியே பற்றிநிற்க என்னும் உப தேசமுமாகிய முத்திக்குரிய இலக்கணம் மொழிந்தமை காண்க.



பண்சுமந்த பாடற் பரிசுபடைத்தருளும் – புண்சுமந்தமேனிப் புனிதன்.

# 27. புணர்ச்சிப்பத்து

*[அத்துவித இலக்கணம்]*

இவ்வண்ணம் இறைவன் தம்மை ஆட்கொண்ட வாற்றை எண்ணியெண்ணி விம்மிதமுற்ற அடிகள், இறைவனை என்றும் பிரியாமல் சேர்ந்து போற்றியும், தழுவியும், விரும்பியும், மாலை புனைந்தும், மெய் புளகம்கொள்ள அணைந்தும், அத்துவிதக்கலவி அடைவது என்றுகொல் என இப்பத்தையும் திருப்பெருந்துறையில் அருளிச்செய்கின்றார்கள்.

புணர்ச்சி - இறைவனுடன் ஒன்றிக்கலத்தல். அதனையுணர்த்தும் பத்துப் பாடல்களைக்கொண்ட இப்பகுதி புணர்ச்சிப்பத்தெனப் பெயர்பெற்றது. இப்பகுதியுள் 'புணர்ந்தே' என்ற சொல் மிகுதியாக வருதலும் இக்கருத்தை வலியுறுத்தும்.

"உணர்ச்சி தருமெய்ப் புணர்ச்சிப்பத்து, முத்தியருளும் அத்துவித இலக்கணம்" என்பது அகத்தியச் சூத்திரம். இதற்குப் பொழிப்புரை அநுபவங்கூறும் பழையவுரை முற்பதிகத்தில் அருளிய இன்பப் பேருனதே பெரிதென நிட்டைகூடி இருத்தற்கடையாளம் வினவில், ஆருயிர் முன்போல் பரிபாக் சின்னம் பலவுடன்தொழுது அபேத அத்துவிதக்காட்சியால் அதுவாய்ப்போவதே பரமுத்தியென அருளியது என்னும்.

இதன் கருத்து முற்கூறிய இன்பப்பேற்றிலேயே நிட்டைகூடி அத்துவிதமாகக் கலந்து பிரியாது இருத்தலைப்பற்றி அறிவிக்கும் பத்துப் பாடல்களைக்கொண்டது என்பதாம்.

திருவாசக உள்ளக்கிடை அத்துவித இலக்கணம்: அதாவது ஒன்றுமல்ல இரண்டுமல்ல என்றல் என்னும்.

திருவாசகச்சிறப்பினைத் தெரிவிக்கும் பழையபுராணம் 'ஆண்ட குருவைப் பிரியாது அணைந்து பணிபுரிந்து மிகுமன்போடு இன்பம், பூண்டுகிடக்கப் பெறுவது என்றுகொலோ வெனும் புணர்ச்சிப் பத்தாம்' என்னும்.

## ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

436 சுடர்பொற் குன்றைத் தோளா
முத்தை வாளா தொழும்புகந்து
கடைபட் டேனை யாண்டுகொண்ட
கருணா லயனைக் கருமால்பிரமன்
தடைபட் டின்னுஞ் சாரமாட்டாத்
தன்னைத் தந்த வென்னாரமுதைப்
புடைபட் டிருப்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 1

இ - ள் : ஒளிவிடுகின்ற பொற்குன்றினைப் போல்வானும், துளைக்கப்படாத முத்தைப் போல்வானும், பயனின்றி அடிமைக்கு விரும்பிக் கீழ்ப்பட்ட என்னை ஆண்டுகொண்ட கருணைக்கிடமானவனும், கரிய திருமாலும் பிரமனும் ஆணவ மலமாகிய தடையுட்பட்டு இன்னும் தேடி அடையமுடியாத தன்னை, அடியேற்கு அறிந்து அனுபவிக்கலாம்படித்தந்த என் ஆரமுதம் போல்பவனும், என்னுடைய பொள்ளப்படாத மாணிக்கம் போல்வானும் ஆகிய சிவனைக் கூடி அவன் பக்கவிலே பிரிவற்றுக் கிடப்பது என்றோ? என்றவாறு.

மணிமுதலிய அணியாயும் இன்பமாயும் விளங்கும் ஒளிமயமான மேருமலையைக்கூடிப் பிரியாது அதன்பக்கலிலே இருப்பது என்றோ என்று விரும்புகின்றார் அடிகள்.

அடியேன் மலமாயாகன்மங்களோடு கூடி மாசுண்டு கிடப்பவன்; இறைவனோ ஒருகாலைக்கொருகால் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்ற பொன்மலை போல்வான்; பொன்மலையைச் சார்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறமாவது போலச் சகலான்மாவாகிய அடியேனும் அநாதி நித்த சுத்தராகிய பெருமானைச்சார்ந்து மலகன்மங்கள் அகன்று தூயனாவேன் என்று எதிர்நோக்குகிற குறிப்பால் இறைவனை எடுத்த எடுப்பிலே சுடர்பொற்குன்றாக அனுபவிக்கின்றார்.

தோளா முத்து - கருவிகளால் தொளையிடப்படாத முத்து. இதனிடம் இயற்கையான நீரோட்டமும் அழகும் குளிர்ச்சியும் அமைந்திருக்கும். அதுபோல இறைவன் அடிகளார்க்குப் பேரழகுச் சாதனமாக, பிறவிவெம்மையைப் போக்கும் மணியாகப் பயன்படுவதைத் 'தோளாமுத்தை' எனக்கூறி இன்புறுகிறார். முத்து சிப்பிவயிற்றில் பிறந்து ஒளிசெய்வது போல என்சிந்தையுள் தோன்றி ஒளிசெய்கின்றார் எனலுமாம்.

கருணாலயன் - திருவருளுக்கு உறையுளானவன். கருணை - மேலார் கீழோர்மாட்டுக் கைம்மாறு வேண்டாது இரக்கத்தாற் செலுத்தப்பெறும் திருவுள்ளக்கனிவு. அதற்கு இடமானவன் கருணாலயன்.

இறைவற்கு அடிமையாய்ப் பணி செய்வதொன்றே நம் கடமை என மனம் விரும்பி, அதனால் எனக்கு வீடு வேண்டும் எனவும் விரும்பாது உடன் அடியார் பலரும் வீட்டுலகடையக் கடைபட்டுக்கிடந்த என்னை என்க. திருவருளுக்கிலக்கான உயிர் 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்று தொழும்புபூணுதல் ஒன்றைத்தவிர வேண்டத்தக்கதை அறிகின்ற பரசிவத்தினிடம் வேண்டிப்பெறும் உரிமையும் இழந்ததாகலின் 'தொழும்புகந்து கடைபட்டேனை' என்றார்.

கடமையை நிறைவேற்றும் அடிமையை உரியகாலத்து உரியவகையிற் பாதுகாக்கவேண்டியது உடையான் கருணை யாதலின் 'ஆண்டுகொண்ட கருணாலயனை' என்றார்.

கருமால் - கரியதிருமால் நிறங்குறித்ததாயினும், பலகாலும் பலவகையால் உண்மையுணர்த்தியும் தற்போதமுனைப்படங்கா மையின் அறிவுகரிய மால் எனக் குணம் குறித்தும் நின்றமை காண்க. பிரமன் என வாளா கூறியது தந்தையறிவு மகன் அறிவு என்பது போலத் தந்தைக்குள்ள அறியாமையும் அகங் காரமும் மகனுக்கும் உண்மை இயல்பாகவே புலப்படுதலான் என்க.

தடைபட்டு - ஆணவமலமாகிற தடையினுள் அகப்பட்டு. இன்னும் என்றது இத்தனையூழிக்காலம் இறைவன் இரங்கி எப்படியெப்படியோ முன்னின்று உணர்த்தியும் என்றதை விளக்கிநின்றது.

சாரமாட்டா - அனுகவும் முடியாத எனக் காணற்கும் நுகர்தற்கும் அருமையை விளக்கி நின்றது.

தன்னைத் தந்த என் ஆர் அமுதை - அமுதம்போலவிரும்பி நுகரும்வண்ணம் எளிமையாகத் தன்னைத் தந்தவனை.என்க.

பொல்லா மணி - பொள்ளா மணி. பொள்ளல் - துளையிடு தல. முழுமாணிக்கத்தை என்றவாறு.

புணர்ந்து புடைபட்டிருப்பது என்றுகொலோ - நெடுநாள் தலைவனைப் பிரிந்த தலைவி ஏக்கற்று அவனைக் கூடித் தன்னை மறந்தநிலையில் இன்பக்களியால் மயங்கி, அவன்பக்கலிலேயே

புல்லிப் புடைபெயராது கிடப்பதுபோல அடியேனும் சிவத்தை அத்துவிதமாகக்கூடி அவன்மருங்கில் தழுவிக் கிடப்பதென்றோ என ஏக்கறுவதால் அத்துவித இலக்கணம் அறிவித்தல்காண்க.

437 ஆற்ற கில்லேன் அடியேன் அரசே
அவனி தலத்தைம் புலனாய
சேற்றி லழுந்தாச் சிந்தை செய்து
சிவனெம் பெருமா னென்றேத்தி
ஊற்று மணற்போ னெக்குநெக் குள்ளே
உருகி யோலமிட்டுப்
போற்றி நிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 2

இ-ள்: அரசே! அடியேன் பொறுக்கமாட்டேன்; இப் பூமியில் ஐந்து புலன்களாகிற சேற்றில் அழுந்தாவண்ணம், பொல்லாமணியான சிவனைப் புணர்ந்து தியானித்து, சிவன் எம்பெருமான் என்று தோத்தரித்து, மணலின்கண் தோண்டிய ஊற்றுப்போல மனம் நெக்குநெக்குருகி ஓலம் ஓலம் எனக்கூவி, அவனையே போற்றி மெய்ம்மறந்துநிற்பது என்று கொலோ என்றவாறு.

அரசே! இவ்வுடலோடு இவ்வுலகில் வாழமாட்டேன்; இப்பூமியில் ஐம்புலச்சேற்றில் அழுந்தாவண்ணம் பொல்லா மணியைப் புணர்ந்து மனங்கசிந்து நிற்பது என்றோ என்கின்றார் என்பது கருத்து.

பிறவியாலுண்டான துன்பம் மிக ஓறுத்தலின் 'ஆற்ற கில்லேன் அடியேன்' என்று தொடங்குகின்றார்கள். குடிகட்கு யாதொரு தீங்கும் என்றும் வாராமல் காத்தல் அரசுக்குக் கடனாகவும், தாங்க இயலாத் துன்பத்தை யான் அனுபவிக்கவும் ஆற்ற கிலேன் என அரற்றவும் வைத்தமை நினக்குத் தகாது என்னும் குறிப்புத் தோன்ற அரசே என்கின்றார்கள்.

அவனி - பூமி. அவனிதலத்து என்றதன் குறிப்பு, கன்ம பூமியாகிய இங்கு என்பது.

ஐம்புலன் ஆய சேற்றில் அழுந்தாச் சிந்தை செய்து - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமாகிய ஐந்துவகைச் சேற்றில் அழுந்தாது, நின்னையே தியானித்து. ஐம்புலன்களும் தம்மிடைப் பட்டாரை மீளவிடாது அகப்படுத்துதலானும், கழுவினாலும் போகாது ஒட்டிநின்றே அசுத்தஞ்செய்தலானும் சேறாக உருவகிக்கப்பெற்றது. அழுந்தாது என்ற வினையெச்சத்தீறு விகாரத்தால் கெட்டது. உண்ணவந்தான் என்புழிப்போல.

சிந்தை செய்து - சிந்தையை நின்பால் செய்து. அதாவது தியானித்து.

சிவன் எம்பெருமான் என்று ஏத்தி - சிவனே என்றும் எம் தலைவனே என்றும் தோத்தரித்து. மங்கலகுணத்தினனாகி எல்லா உயிர்களிடத்தும் கலந்திருப்பவனாதலின் சிவன் என்ற சிறப்புத் திருப்பெயரைக் கூறியும், தனக்குத் தலைவனாய்த் தன்னைக் காத்தலின் எம்பெருமான் என்ற உரிமைப் பெயரானும் இறைவனைத் தோத்தரித்ததாம்.

ஊற்று மணல்போல் என்பதனை மணலூற்றுப்போல் என மாறுக. தொடுமணற்கேணி சுரந்து நீர்பாய்தல் போலவும், கரை சரிந்துவிழுதல்போலவும் மனம் கட்டுவிட்டுக் கட்டுவிட்டு நெகிழவும் கசியவும் என்பதாம்.

ஓலமிட்டு - அச்சத்தால் அங்கணா ஓலம், அரனே ஓலம், முக்கணா முதல்வா ஓலம் என அரற்ற. இவ்வண்ணம் முறையே மனம் உடைதலும், உருகுதலும், அரற்றுதலும் கூறப் படுதல் காண்க.

இவ்வண்ணம் அரற்றி, புணர்ந்து, போற்றிநிற்பது என்று கொலோ என இயைக்க.

இத்திருப்பாடல், உலகபோகத்தில் ஒட்டி வாழ விரும்பா மையும், என்றும் இறைவனைச் சார்ந்தே வாழவிரும்புதலுமாகிய அத்துவித இலக்கணம் அமைய நின்றமை காண்க.

438 நீண்ட மாலும் அயனும் வெருவ
நீண்ட நெருப்பை விருப்பிலேனை
ஆண்டு கொண்ட என்னா ரமுதை
அள்ளூ றுள்ளத் தடியார்முன்
வேண்டுந் தனையும் வாய்விட் டலறி
விரையார் மலர் தூவிப்
பூண்டு கிடப்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 3

இ-ள்: திரிவிக்கிரமனாகி நீண்ட திருமாலும், பிரமனும், அஞ்சும்வண்ணம் அண்டங்களை அளாவி உயர்ந்துதோன்றிய அண்ணாமலையான நெருப்பை விரும்பாத என்னை ஆண்டு கொண்ட எனக்குக் கிடைத்தற்கரிய அமுதம்போல்பவனை மேன்மேலும் அன்பு சுரந்துகொண்டேயிருக்கிற உள்ளத்தை யுடைய அடியார்களுக்குமுன் வேண்டுமளவும் வாய்விட்டுக் கூவி. மணம்நிறைந்த மலர்களைத் தூவி, என் பொல்லாமணி

போல்பவனாகிய தலைவனைக்கூடி அவனை ஆபரணம் போலப் பூண்டு கிடப்பது என்றோ என்றவாறு.

இறைவனைப் புணர்ந்து அவனை அணிபோலப் பூண்டு கிடப்பது என்றோ என ஏக்கற்றுக் கூறியவாறும்.

ஊருக்கு வைத்தியன் தனக்கு உதவாததுபோல, மாவலி யின் அகங்காரம் ஒடுக்க நீண்டுவளர்ந்த திருமால் தன்னைவிட நீண்டுயர்ந்த நெருப்புமலையைக் கண்டு ஆணவ நோயை அகற்றமாட்டாமல் அஞ்சினார் என்பது விளக்க 'நீண்டமாலும் வெருவ' என்றருளினார்.

அயன் வேதங்களை ஓதி அச்சமே வடிவாகவுடையனாதலின் அவனுக்கு அடைமொழி கொடாது 'அயன் வெருவ' என்றார். அங்ஙனம் இருவர் அகங்காரமும் அடக்க நீண்டநெருப்பை ஞானமுதவும் நற்றுணையாகக்கொண்டு அன்புசெய்யவேண்டிய யான் அங்ஙனம் செய்யாது வீணாயினேன் என்பார் 'நீண்ட நெருப்பை விருப்பிலேனை' என்றார். குளிரால் துன்புறுவார் நெருப்பில் விருப்பாவர். அங்ஙனமிருக்க, பிறவித் துன்பம் என்னும் குளிரால் வருந்தியும் நெருப்புக் காணக் கிடைத்தும் அதில் விருப்பிலேன் ஆயினேன், என் அறியாமை இருந்தபடி என்னே என இரங்கியதாம்.

அங்ஙனம் விருப்பின்றி இருக்கவும் அடியேனை ஆண்டு கொண்டதுமட்டுமன்றி, எனக்கு அரிய அமுதும் ஆயினான் என்று அனுபவம் அருளுகின்ற அடிகள் 'ஆண்டுகொண்ட ஆரமுதை' என்றார்கள்.

அள்ளூறு உள்ளம் - கசிகின்ற மனம். அள் - செறிவெனக் கொண்டு மேன்மேலும் ஊறுகின்ற அன்பினையுடைய மனம் என்றுமாம். அத்தகைய மனமுடைய அடியவர்கட்கு முன்னே யான் விரும்புமளவும் வாய்விட்டலறி என்கின்றார். தீயிடைப் பட்டானும், புலிக்கோட்பட்டானும் அச்சத்தால் அலறுவது போலப் பிறவித் துன்பத்திடைப்பட்ட யானும் அலறினேன் என்றார்.

விரை - மணம். அலறியும் தூவியும் பொல்லாமணியைப் புணர்ந்து பூண்டுகிடப்பது என்றுகொலோ என்று வேண்டு கின்றார். இறைவனை மணி என்றமைக்கேற்பப் பூண்டு என்றார். சீதை இராமனது ஆழியைப்பெற்றபோது உடம்பெலாம் ஒற்றி, மோந்து, தலையிற்சூடி, ஆகத்துத் தழுவியதுபோலப் பொல்லா மணியைப் புணர்ந்து பூண்டுகிடப்பதை வேண்டினார் என்க.

பூண்டு கிடத்தல் - உண்ணாதும் உறங்காதும் பழிகிடத்தல் என்பாரும் உளர். இவ்வுரை அத்துவிதநிலைக்குப் பொருந்துமேற்கொள்க.

புணர்ந்ததனோடு அமையாது பூண்டு கிடக்கவும் வேண்டுதல், அத்துவிதமாய்க் கலந்து, தற்போதம் அற்றுக் கிடத்தலை விரும்புதலாதலின் இத்திருப்பாடல் அத்துவித இலக்கணம் அறிவிப்பதாயிற்று.

439 அல்லிக் கமலத் தயனு மாலும்
அல்லா தவரும் அமரர்கோனும்
சொல்லிப் பரவு நாமத் தானைச்
சொல்லும் பொருளும் இறந்தசுடரை
நெல்லிக் கனியைத் தேனைப் பாலை
நிறையின் அமுதை அமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே: 4

இ - ள்: தாமரைமலரின் அகவிதழின்கண் உறையும் பிரமனும், திருமாலும், ஏனைய தேவர்களும் தேவர்கள் தலைவனாகிய இந்திரனும் பலமுறை சொல்லித் துதிக்கும் பெயர்களையுடையவனும், சொல்லையும் அது உணர்த்தும் பொருளையும் கடந்துநின்ற ஒளியாயுள்ளவனும், கருநெல்லிக்கனி போல்பவனும், தேனையும் பாலையும் போல்பவனும், நிறைந்த இனிய அமுதம்போல்பவனும், அவ்வமுதின் சுவையை ஒத்தவனும், துளைக்கப்பெறாத முழுமணியை ஒத்தவனும் ஆகிய சிவபெருமானைச் சேர்ந்து தழுவிப்புணர்வது என்றோ? என்றவாறு.

அரியவற்றுள் அரிதாய், அமுதாய், அதன்சுவையாய், தேன் பால் நெல்லிக்கனிபோல இனிதாயிருக்கும் பெருமானைக் கட்டி இறுகத்தழுவிப் புணர்வது என்றோஎன்று சிவபோகத்தின்கண் ஆராமை மிகக் கூறுகின்றார்.

அல்லி - அகவிதழ். கமலத்து அல்லி அயன் என மாறுக. மிக மென்மையனாக இருப்பவன் பிரமன் என்றவாறும். அல்லாதவர் என்பதால் ஏனைய பதினெண்கணத்தராகிய தேவர்களும் கூறப்பட்டனர். இறைவன் சொல்லியவே சொல்லி ஏத்துகப்பாணுதலின், அவர்கள் அவன் நாமத்தைப் பலகாலும் சொல்லிப் பரவுகின்றனர் என்பதாம். "பேராயிரம்பரவி வானோர் ஏத்தும் பெம்மானை" என்றதும் காண்க. நாமம் - சிவனெனும் நாமமும பவன் எனும் நாமமும் முதலாயின எனலுமாம். இத்தொடர்க்கு

இவ்வாறன்றி 'எமக்கு இவ்வருள் வேண்டும் என முன்னே சொல்லி, அவ்வாறே பின்வந்து துதிக்கப்படுகின்ற திருப்பெயருடையவனும்' எனப்பொருளுரைப்பர் சிலர். சிறந்ததுகொள்க.

சொல் பொருள் இரண்டும் ஒலியும் அஃதுணர்த்தும் பொருளுமாகிய மாயேயமாதலின் இறைவன் அவற்றுட்படாது அவற்றைக்கடந்த அதாவது அவற்றால் அளவிட்டுரைக்க இயலாத ஒளிவடிவாக விளங்குகின்றான் என்பதைச் 'சொல்லும் பொருளும் இறந்த சுடரை' என்றார். சொல்லும் பொருளும் இறந்த சுடரெனவே சொல்லும் பொருளுமாயும் இருத்தலும் பெறப்படுதலின், சிவமும் சத்தியுமாகவும், அவற்றைக் கடந்த முழுமுதற் பொருளாகவும் எனவும் உரைப்பர் சிலர்.

நெல்லிக்கனியை என்றது ஔவையுண்ட கருநெல்லிக் கனிபோல உட்கொண்டாரைச் சாவாமூவாத்தன்மையை எய்துவித்தலின் என்க. தேன் முதலியவாகக் கூறலின்பயன் முன்னர் உரைத்தாம். அமுதுண்பார் முன்னர் அமுதத்தை உண்ணினும், அவர்களநுபவம் அதன்சுவையிலேயே மிக்குமாதலால் அதன் சுவையாக அநுபவிக்கப்படுபவனும், சுவையைத் தாங்கி நுகர்ச்சிக்கு உதவும் அமுதமாக விளங்குபவனும் சிவனே என்றார்.

புல்லி - இரண்டான உடல் ஒன்றாம்வண்ணம் இறுகத் தழுவி. அத்துவிதநிலையில் இறைவன் தேனாய் இன்னமுதமாய், பாலாய், சுவையாய் இருக்கும் அநுபவ உண்மை உணர்த்துதலின் இத்திருப்பாடலும் அத்துவித இலக்கணம் உணர்த்தியதாதல்காண்க.

440 திகழத் திகழும் அடியும் முடியும்
காண்பான் கீழ்மேல் அயனும்மாலும்
அகழப் பறந்துங் காண மாட்டா
அம்மான் இம்மா நிலமுழுதும்
நிகழப் பணிகொண் டென்னை யாட்கொண்
டாவா வென்ற நீர்மையெல்லாம்
புகழப் பெறுவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 5

இ- ள் : மிக விளங்குகின்ற திருவடியையும் திருமுடியையும் காண்பதற்காக, கீழும் மேலுமாகப் பிரமனும் திருமாலும் அகழ்ந்தும் பறந்தும் காண இயலாத அம்மானாகிய சிவபெருமான், இந்தப் பெரிய பூமிமுழுதும் பரவ, என்னைத் தொண்டு

கொண்டு ஆண்டருளி ஆ! வா என்றழைத்த கருணைத்திறங்கள் யாவற்றையும் எனது பொல்லாமணியாகிய சிவனைப் புணர்ந்து புகழ்ந்து கூறப்பெறுவது என்றோ என்றவாறு.

அடி முடி காண்பான் அயனும் மாலும் தேடியும் காண முடியாத சிவபெருமான் என்னை ஆட்கொண்ட செய்தி இவ்வுலகம் எங்கும் பரவ என்னைப் பணிகொண்டு 'வா' என்ற வான்கருணையை அவனைக்கூடிக்களித்த களிப்பால் நான் புகழ்வது என்றோ என்பது கருத்து.

இயற்கைப்புணர்ச்சியுள் தலைவியைப் புணர்ந்த தலைவன் புணர்ச்சிமகிழ்ந்தபின் அவளைப் புகழ்வன். அதுபோல அயன் மாற்கும் அரிய பெருமான் எனக்கு எளிவந்து ஆட்கொண்டு வா என்ற கருணையை, நான் அவனோடு அத்துவிதக்கலவி நிகழ்த்தியபின் புகழவேண்டும் என்று எண்ணுகிறேன்; அஃது என்று சித்திக்குமோ என்று மனமிரங்கிக் கூறியவாறும்.

இறைவனுடைய அடியும் முடியும் இயங்குவ நிற்பவான யாவும் விளங்குவதற்கென்றே விளங்குவன என அடிமுடிகளின் கைம்மாறு வேண்டாத கருணையைக் குறித்தவாறும் 'திகழத் திகழும் அடியும் முடியும்' என்பது. அன்றி ஒளிப்பொருளான சூரியன் சந்திரன் அக்கினியாகிய மூன்றும் விளங்குவதற்காக விளக்கம்பெறும் அடி முடி என்பாரும், மேன்மேலும் விளங்குந் திருவடி என்பாரும் உளர்.

திகழத்திகழும் அடி காண்பான் மால் கீழ் அகழ்ந்தும் காண மாட்டா அம்மான் எனவும், திகழத்திகழும் முடி காண்பான் அயன் மேல் பறந்தும் காணமாட்டா அம்மான் எனவும் கண்ணழித்துப் பொருள்கொள்க. இங்ஙனமன்றி முன்னர் அடிமுடி தேடிய மாலும் அயனும் பின்னர்ப் பலகாலங்களில் மால் முடியையும் அயன் அடியையும் மாறித்தேடியும் அறியமாட்டாத அம்மான் எனக்கொண்டுகூட்டிப் பொருள்கண்டு இதுவுமோர் கவியுலகுக்கோர் விருந்தாம் எனவுரைப்பர். மாறித் தேடியதாக வரலாறின்மையானும், பன்றி வானத்திலும், அன்னம் கீழும் தேடமாட்டா ஆகலானும், தத்தம் நிலைக்கேற்பத் தேடியே அறியாத அவர்களை நிலைமாறித் தேடினர் என்றல் மயக்க உணர்வே ஆகலானும் அவ்வுரை பொருந்தாதென்க. அன்றியும் மரபு பிறழ்ந்த கவிதை விருந்து கருத்துக்கு ஒவ்வாதது என மறுக்க.

அகழவும் என்றவும்மை விகாரத்தால் தொக்கது.

மூலையிற்கிடந்த என்னை இவ்வுலகம் அறியப் பணிகொண்டது மட்டுமன்றி, என்னை ஆட்கொள்ளவும் செய்தான் இறைவன்; மேலும், ஆ! என இரங்கி 'வா' என அழைக்கவும் செய்தான், அத்தகைய கருணையைப் புகழவேண்டும், நானவனும் பகுதியாகிய புணர்கிற நிலையில் அவனைப் புகழ இயலாது. ஆகவே, புணர்ந்தநிலையில் இன்பம் எத்தகையதென்று இயன்றவரை சொல்லவும், இன்பந்தந்த தலைவனைப் புகழவுங்கூடும். ஆதலின் 'நீர்மையெல்லாம் புணர்ந்து, புகழப்பெறுவதென்றுகொலோ' என்கின்றார். அடியேன் புகழவும், அதன் பயனைப் பெறவும் செய்வது என்றோ எனப் பிரித்து எண்ணுக.

புணர்ந்து, புகழப்பெறுவது என்றோ என கலவியிற்கலத்தலையும் பின்பு புகழ்தலையும் உணர்த்துதலின் இத்திருப்பாடல் அத்துவித இலக்கணமாதல் தோன்ற நின்றது.

441 பரிந்து வந்து பரமா னந்தம்
பண்டே அடியேற் கருள்செய்யப்
பிரிந்து போந்து பெருமா நிலத்தில்
அருமா லுற்றே னென்றென்று
சொரிந்த கண்ணீர் சொரிய வுண்ணீர்
உரோமம் சிலிர்ப்ப வுகந்தன்பாய்ப்
புரிந்து நிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 6

இ - ள் : அடியேற்காக அன்புகூர்ந்து எழுந்தருளிவந்து பரமானந்தத்தை முன்பே அருள்செய்யவும், அடியேன் அறியாமையாற் பிரிந்து சென்று இந்தப் பெரியபூமியில் நீக்குதற்கரிய பெரிய மயக்கத்தைப்பெற்றேனே என்றென்று அடியேன் சொரிந்த அவலக்கண்ணீரானது மனத்துள்ளிருக்கும் அன்பை வெளிப்படுத்த, உரோமஞ்சிலிர்க்க, என் பொல்லாமணியைப் புணர்ந்து அதனால் அவனையே விரும்பி அன்பாகி நிற்பது என்றோ என்றவாறு.

அவன் ஆனந்தம் அருளவும் அதனைப் பிரிந்த யான் உலக இன்பத்திற் சிக்குண்டு உழன்றேன் என்று கண்ணீர் சொரிய, அக்கண்ணீர் உண்ணீர்மை உணர்த்த, மெய்ப்பாடுகொண்டு அவனைப் புணர்ந்து' களிப்பாய் அவனையே விரும்பிநிற்பது என்றோ என்பது கருத்து.

பரிந்து வந்து - அன்பு காரணமாக மனமிரங்கி யானிருக்கும் இப்பூமிக்கு வந்து என்க. பரிதல், பேரின்பம் அடைய வேண்டிய உயிர் இங்ஙனம் தீச்சார்பாற் கெட்டலைகின்றதே

யென்று கருணை காரணமாக இரங்கினன் என்பதை உணர்த்திற்று.

பண்டே யென்றது குருந்தடியிற் குருநாதனுக எழுந்தருளிய அன்றே என்பதாம். நானும் அவனுமாய் ஏகபோகமாய் இருக்கும் இன்பநிலையை அருளவும், அதன் அருமையறியாது யான் பிரிந்தேன்; உலகச்சார்பு பெற்று உழன்றேன் என்பார் 'பரமானந்தம் அருள்செய்யப் பிரிந்து போந்து நிலத்தில் மாலுற்றேன்' என்றருளினார்கள். அருமால் - வேறு உபாயங்களால் நீக்குதற்கரிய மயக்கம். மயக்கமாவது பொருளல்லவற்றைப் பொருளாகவுணரும் மருள்.

அம்மருளினின்று தெருளுண்டானபொழுது இத்துணைக் காலம் பரம்பரனைப் பாராதே பாழுக்குழைத்தேனே என்றும், போற்றுதே யாற்றநாள் போக்கினேனே என்றும் வருந்திச் சொரிந்த கண்ணீர் மனத்தின் தன்மையைக் காட்டுவதை 'மாலுற்றேன் என்றென்று சொரிந்த கண்ணீர் உண்ணீர் சொரிய' என்ற பகுதியால் அறிவித்தருளுகின்றார்.

கண்ணீர் சொரிதலும், புளகங்கோடலும் அன்பேவடிவாய் மெய்சோர்ந்து பரவசமாக நிற்றலும், அத்துவிதக் கலவியின் பின் விளைவனவாதல் தெளிக.

442 நினையப் பிறருக் கரிய நெருப்பை
நீரைக் காலை நிலனைவி சும்பைத்
தனையொப் பாரை யில்லாத் தனியை
நோக்கித் தழைத்துத் தழுத்தகண்டம்
கனையக் கண்ணீ ரருவி பாயக்
கையுங் கூப்பிக் கடிமலராற்
புனையப் பெறுவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 7

இ - ள்: பிறருக்கு நினைக்கவும் அரிய தீ, நீர், காற்று, நிலம் விண் இவைகளாக விளங்குபவனும், தன்னை ஒத்தவர் யாருமில்லாது தனித்தவனுமாகிய சிவபெருமானை நோக்கி உடலம் பூரித்து, தழுதழுத்த குரல் கனைக்க, கண்ணீராகிய அருவிபாய, கைகளைக்கூப்பி மணமுள்ள பூக்களால் பொல்லா மணியைப்புணர்ந்து அணியப்பெறுவது என்றோ என்றவாறு.

எவராலும் நினைக்கவும் முடியாத பஞ்சபூத வடிவினனுகிய பெருமானைக்கண்டு கண்ணீரரும்ப, குரல் தழுதழுக்க, அவனைப் புணர்ந்து கைகூப்பிப் பூக்களினுல் அலங்கரிக்கப்படுவது என்றோ என்று ஏக்கறுகின்றார் என்பது கருத்து.

பிறர் - அவனருளாலே அவன்தாளை நினைக்கும் பேறுபெற்றிலாத அயன் அரி முதலானவர்கள். நெருப்பை முற்கூறினர் அவர்களால் நினைக்க முடியாதவண்ணம் அண்ணாமலையாக நின்றநிலை தம் மனத்து முதற்கண் தோன்றுதலின்.

எவ்வகையானும் இறைவனுக்கு ஒப்பாவார் யாரும் இலராதலின் 'தனை ஒப்பாரை இல்லாத் தனியை' என்றார்.

கிடைத்தற்கு அரியதொரு பொருள் கிடைக்கப்பெறின் மனமகிழ்ச்சியுண்டாம், அதனால் உடலம் பூரிக்கும் ஆதலின் சிவபரம்பொருளாகிய யாருக்கும் கிடைத்தற்கு அரிய பேரின்பப் பொருள் கிடைக்கப் பெற்றமையின் உடல் பூரித்தது; குரல் தழுதழுத்தது; கண்ணிலிருந்து அருவியாக நீர் பாய்ந்தது என்கின்றார். இவை மெய்ப்பாடுகள்.

அங்ஙனம் அரிதிற்கிடைத்த பொருளாகிய பொல்லா மணியைப்புணர்ந்து ஆனந்த மேலீட்டால் கைகூப்பிவணங்கி மணமுள்ள மலர்களைக்கொண்டு திருவடியிற்சூட்டி அலங்கரிப்பது என்றோ என்று அத்துவிதநிலையில் கலந்து களிப்பதை வேண்டுகின்றார்.

புனைவது என்றது புனையப்பெறுவது என்றதால் புணர்ச்சிக்கண் கலைந்த ஒப்பனைகளைத் தலைவன் திருத்துவதுபோலப் பொல்லாமணி என்னையும் கடிமலர்புனைந்து திருத்தும் என்பார் 'புனையப்பெறுவது' என்றார் எனினுமாம்.

443 நெக்குநெக்குள் ளுருகி யுருகி
நின்றுமிருந்துங் கிடந்து மெழுந்தும்
நக்குமழுதுந் தொழுதும் வாழ்த்தி
நானா விதத்தாற் கூத்துநவிற்றிச்
செக்கர் போலுந் திருமேனி
திகழநோக்கிச் சிலிர்சி லிர்த்துப்
புக்குநிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 8

இ - ள் : என் பொல்லா மணியைப் புணர்ந்து, மனம் நெகிழ்ந்து, கசிந்து, நின்றும், இருந்தும், தரையிற்கிடந்தும், எழுந்தும், சிரித்தும், அழுதும், தொழுதும், வாழ்த்திப் பலவகையான கூத்துக்களை ஆடி, செவ்வானம்போலும் திருமேனியை விளங்கப் பார்த்து மெய்மயிர் சிலிர்த்து, அவனுள்ளத்திற் புகுந்து நிற்பது என்றோ? என்றவாறு.

புணர்ச்சியாற்பரவசப்பட்டு, சிவன் திருமேனியையேகண்டு அவ்வன்பாற்புக்கு நிற்பதே யான் வேண்டுவது என்கின்றார். நெகுதல் முதலாயின புணர்ச்சிக்கண் விளைந்த இன்பமீதூர்ச்சியால் பரவசமான உவகை.

அபேத அத்துவிதக் கலப்பால் விளையும்நிலை வேறுபாடு உணர்த்துதலின் அத்துவித இலக்கணமாதல் காண்க.

444 தாதாய் மூவே ழுலகுக்குந்
தாயே நாயேன் றனையாண்ட
பேதாய் பிறவிப் பிணிக்கோர் மருந்தே
பெருந்தேன் பில்க எப்போதும்
ஏதா மணியே யென்றென் றேத்தி
இரவும் பகலு மெழிலார்பாதப்
போதாய்ந் தணைவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 9

இ - ள் : மூன்றாகவும் ஏழாகவும் பகுக்கப்பெற்று விளங்கும் உலகங்களுக்குத் தந்தையானவனே! தாயானவனே! நாயினும் கடையேனாகிய என்னையும் ஆட்கொண்ட பேதையே! உயிர்களின் பிறவியாகிய நோய்க்கு ஒப்பற்ற மருந்துபோல்பவனே! குற்றங்கள் கூறப்படாத மணியே! எனது புரைபடா மாணிக்கமாகிய உன்னைப் புணர்ந்து இரவும் பகலும் எந்த நேரமும் அழகுமிக்க நின் திருவடிமலரை ஆய்ந்து மிக்க தேன் பெருக அணைவது என்றோ? என்றவாறு.

இறைவா! நின் திருவடிமலரை ஆய்ந்து இன்பமாகிய தேன்பெருக அணைவது என்றோ என்று இரங்குகின்றார்.

உலகு சுவர்க்கம் மத்தியமம் பாதாளம் என மூவகையாகவும், பூலோகம், புவர்லோகம், சுவர்க்கலோகம், தபோலோகம், மகாலோகம், சனலோகம், சத்தியலோகம் என ஏழாகவும் பிரிக்கப்பெறுதலின் 'மூவேழுலகுக்கும் தாயே தந்தையே' என்றார்.

தாய் தந்தை என்பதே உலகியல் மரபாயினும் முதற்கண் தாதாய் என்றது சிவமாகிய தாதையினின்றே தோற்றக்காலத்துச் சத்தியாகிய தாய் பிரிதலானும், ஆதிக்கண் சிவம் ஒன்றே சத்தியைத் தன்னகத்தடக்கி நிற்றலானும் என்க. சிலர் மூவேழுலகைப் பிரித்து, மூவுலகிற்கும் தந்தையே ஏழுலகிற்கும் தாயே எனக்கொண்டு கீழேழும் மேலேழுமாக இருக்கும் பதினான்கு உலகங்களும் சுவர்க்க மத்திய பாதலமாக அவற்றை இறைவன் படைத்தலால் தாதை என்றார் என்றும், மேலேழு உலகங்கள்

பரிபாகமுறும் உயிர்களைப் பெற்று அவன் அருளுக்கு இலக்காதலின் அவற்றைத் தாய்போல உயர்த்துதலின் தாயே என்றார் என்றும், கீழேழுலகங்கள் அவனது மறக்கருணைக்கு உரியனவாதலின் அவற்றை யொழித்தார் என்றும் கூறுவர். கீழேழு உலகங்களிலும் ஆதிசேடன் தட்சகன் முதலானோரும், ருத்திரபுவனவாசிகளும் இறைவன் கருணைக்கிலக்கான செய்தியைச் சிவபுராணங்கள் தெரிவித்தலின் இப்பாகுபாடு தேவையற்றதென்க. ஆதலின் ஏழுலகு என்பதற்கு ஏழு ஏழாகப் பகுக்கப்பெற்ற உலகு எனப் பொருள்கொண்டாம்.

பேதாய் என்றது அன்பு மீதூர்ச்சியால் விளைந்த ஏச்சுரை. ஒன்றற்கும் பற்றாத சகலான்மாவாகிய என்னையும் பரிபாகமுறுத்தி ஆட்கொண்டதால் இறைவன் பேதை எனப்பட்டார் என்க. இறைவனே மருந்தாதலை 'மருந்தவை மந்திரம் மவை' 'மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி' என்ற திருமுறைகள் கொண்டும் தெளிக. சிலர் பிறவிப்பிணியைப் போக்கும் அருளாகிய மருந்தையுடையவன் என்பர்.

ஏசாமணி என்பது எதுகை நோக்கிச் சகரத்திற்குத் தகரம் போலியாகி ஏதா மணி என நின்று இகழப்படாத மாணிக்கமே என்னும் பொருள் பயந்தது. இதனை ஏது ஆம் மணியே எனக் கொண்டு ஒளிகட்குக் காரணமான மணியே என்றும், மேதாமணியே எனப் பாடங்கொண்டு அறிவுமணியே என்றும் கூறுவர். பழையவுரை தீவிர சத்தியையுடைய சீவரத்தினமே என்னும்.

பாதங்களைப் பூக்களாக உருவகித்தமைக்கேற்ப ஆய்ந்து என்றாராயினும், ஆய்தற்கு இடைவிடாது தியானித்து எனப் பொருள் கொள்க. திருவடிப்போது ஆய்தற்கேற்ற குறை நிறைகளையுடையது அன்மையின் திருவடி போதாக (அலரும் பருவத்தரும்பாக) இருந்தமையின் அணையக் கைபட்டவுடன் சுரந்து நின்று தேனைப் பெருக்குவதாயிற்று என்க.

இத்திருப்பாடல் புணர்தலும், அணைதலும், தேன் பில்கலுமாகிய கலந்தோர் தன்மைகளைக் காட்டுதலின் அத்துவித இலக்கணமாதல் காண்க.

445 காப்பாய் படைப்பாய் கரப்பாய் முழுதுங்
கண்ணார் விசும்பின் விண்ணோர்க்கெல்லாம்
மூப்பாய் மூவா முதலாய் நின்ற
முதல்வா முன்னே யெனையாண்ட

பார்ப்பா னேயெம் பரமா வென்று
பாடிப் பாடிப் பணிந்துபாதப்
பூப்போ தணைவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள் : உலகங்கள் அனைத்தையும் காப்பவனே! படைப்பவனே! ஒடுக்குபவனே! இடமகன்ற ஆகாயத்தில் உள்ள தேவர்களனைவர்க்கும் மூத்தவனே! என்றும் மூப்பினையடையாத முதற்பொருளாகநின்ற முதல்வனே! முன்னே அடியேனை ஆண்ட அந்தணனே! எம் பரமா! என்று பல்முறையும் உன்னைப் பாடி, என் பொல்லாமணியே! நின்னைக்கூடிப் பணிந்து திருவடித்தாமரைமலரைச் சேர்வது என்றோ? என்றவாறு.

ஐந்தொழிலாற்றி அனைவருக்கும் மூத்தும் மூப்பின்றி விளங்கும் முதல்வா! பொல்லாமணியே! நின்னைப் புணர்ந்து திருவடி மலரைச் சேர்வது என்றோ என்கின்றார்.

முழுதும் காப்பாய் முழுதும் படைப்பாய் முழுதுங்கரப்பாய் எனக் கூட்டுக. இறைவன் ஆணைவழி நின்று ஐந்தொழில்களையும் தனித்தனியே ஆற்றும் அயனாதியர்க்கு அவரவர் அதிகார எல்லைக்குட்பட்ட புவனங்களிலேயே படைத்தலாதித் தொழிலை ஆற்றும் வன்மையுண்டு; இறைவற்கோ எல்லா அண்டங்களிலும் ஒக்க ஐந்தொழிலையும் ஒருசேர ஆற்றும் அருளாற்றல் உண்டு. ஆதலின், பொதுவகையால் 'முழுதும் காப்பாய் கரப்பாய்' என்றார்.

மூப்பாய் - காலத்தால் மூத்தவனே! மூவா முதலாய் நின்ற முதல்வா-மூப்பினாலாய மாற்றத்தை அடையாது பதினாறுவயது காளையாகவே, எல்லாம் தோன்றற்கு அடியாய் நின்ற தலைவா என்றவாறு. 'அந்தணனாவதும் காட்டி வந்து ஆண்டாய்' என்றாராகலின் ஈண்டும் ஆசாரியமூர்த்தியாகி எழுந்தருளி என்னை ஆண்ட பார்ப்பானே என்றார்.

புணர்ந்த பிறகு அத்துவிதக் கலவியால் விளைந்த களிப்பால் பலமுறை பாடுதலும் பணிதலும் காலிலே விழுந்து கிடத்தலுமாகிய இயல்புகள் விளையும் என உணர்த்துதலின் இத் திருப்பாடல் அத்துவித இலக்கணம் அறிவிக்கின்றமை காண்க.

இவ்வண்ணம் இந்தப் பத்துப் பாடலானும் இறைவனைச் சார்ந்து புடைபட்டிருத்தலும், போற்றிப் புக்குப் புரிந்து நிற்றலும், புனைந்து புகழ்தலும், புல்லியணைதலுமாகிய புணர்ச்சியின் இயல்புகளை உணர்த்தியமை காண்க.

# 28. வாழாப்பத்து

[முத்தி உபாயம்]

இவ்வண்ணம் புணர்ச்சியை வேட்ட அடிகளார், இப் பத்தில், அடியேனை ஆட்கொண்ட தேவரீர், என்னை இங்ஙனம் கைவிடின் நான் என்னசெய்வேன்; எனக்கு ஒன்றிலும் பற்றில்லை; குறைகளை யாரிடத்தில் எடுத்துக் கூறுவேன்; ஆதலால் நான் வாழமாட்டேன் என்ற கருத் தமைய விண்ணப்பிக்கின்றார்கள்.

இது முத்தி உபாயத்தை அறிவிப்பது என்றும், பிரபஞ்சமயல் நீங்கிப் பரபோகத்தைக் கூடுகின்ற உபாயத்தை உபதேசிப்பதென் றும் குறிப்புக்கள் கூறும். வாழ்க்கை என்பது இன்று கிடைத்த களாக்காயைக் காட்டிலும் நாளைக்குக் கிடைக்கப்போகும் பலாப் பழத்தை எதிர்நோக்கும் இன்பக்கனவால் வளர்வது. அந்தப் பற்று அற்றவிடத்து வாழாமையே வேண்டப்படுவது; ஆகவே உல கப்பற்றறுதல் முத்திக்கு உபாயமாதலால் இது முத்தி உபாயத்தை மொழிவது எனப்பட்டது.

'நீண்ட உலகத்தினிற் பற்றொன்றிலேன் இவ்வுடற்கணின்று வாழேன் மாண்டகு நின்பத நிழற்கீழ் வருக அருள்புரி எனுஞ் சொல் வாழாப்பத்தே' என்பது பழைய புராணத்தில் திருவாசகச் சிறப்புரைக்கும் பகுதி.

பழையவுரை 'வாழாது வாழவருள் வாழாப்பத்து தத்துவஞான முத்தியுபாயம்' என்ற அகத்தியச்சூத்திரத்தைக் காட்டி, அத்துவித அன்பு முத்தியே திருவடிஞானத் திருவருள்வாழ்வு; அஃதெய்தாத உயிர் வாழ்ந்தும் பயன் இல்லை என்பதை அறிவிக்கின்றது என உரைக்கும்.

### ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

446 பாரொடு விண்ணாய்ப் பரந்தவெம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே

யாரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ யருளிலை யானால்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 1

இ-ள்: மண் முதல் விண்ணீறான எல்லாப் பூதங்களி னிடத்தும் பரவிக்கலந்து விளங்கும் எமது பரம்பொருளே! நான் வேறு ஒன்றிலும் பற்றிலேன்; இதனை நீ நன்கறிக; புகழோடு விளங்குபவனே! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையில் உறையும் சிவனே! ஆட்கொண்ட நீ எம்மை அருள் வில்லையானால், இக்குறையை யான் யார்க்கு எடுத்துச் சொல்வேன்; யாரொடு கூடித் துன்புறுவேன்; ஒழுகுகின்ற கடலாற் சூழப்பெற்ற இவ்வுலகில் வாழும் ஆற்றலிலேன்; ஆதலால் என்னை வருக என்று அருள்புரிவாயாக என்றவாறு.

எல்லாப் பெருமைகளையுமுடைய நீ ஆட்கொள்ளப்பெற்ற என்னை ஆளவில்லையாயின் யார்க்கு எடுத்துச்சொல்லுவேன்; யாரொடு கூடித் துன்புறுவேன்; வாழமாட்டேன்; ஆதலால் வாவெனப்பணி என்பது கருத்து.

பார் - பூமி. விண் - ஆகாயம். முதலும் ஈறும் கூறவே இடை நின்ற எல்லாப்பூதங்களும், அவற்றின் காரியங்களும் கொள்ளப்பெறும். சிவம் பூதபௌதிகங்களாகிய சடப்பொருள் களிடத்தும் உயிர்களாகிய சித்துப்பொருள்களிடத்தும் பரவி யுள்ள பரம்பொருள் என்பார் 'பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே' என்றார்.

மற்றுப் பற்றிலேன் என்றமையால் பற்றற்றானாகிய உன் னையே பற்றி நிற்கின்றேன் என்றமை தோன்றநிற்றல் காண்க. கண்டாய்: முன்னிலையசை; ஏவலுமாம்.

சீரொடு பொலிவாய்-புகழோடு பொலிந்துவிளங்குபவனே! என்றது மற்றுப்பற்றெனக்கின்றி நின் திருப்பாதமே மனம் பாவிக்கும் என்னை ஆட்கொண்ட நீ அருளிலையானால் உன் புகழுக்குக்கேடாம் என்பார் 'சீரொடு பொலிவாய்' என்றார்.

ஆண்டு அருளாதிருத்தலும் அரசாவார்க்கு இழுக்கென்று குறிப்பிப்பார் அடுத்துச் சிவபுரத்தரசே என்றார்.

யாம் சேய்மைக்கண்ணேமாகலின் யார் எதைச்சொல்லின் என்ன என நீர் எண்ணுவீராயின் அண்மைக்கண்ணும் திருப் பெருந்துறையிலும் உள்ளீர் ஆதலால் வாவென்று அருள

வேண்டும் என்பார் அடுத்துத் 'திருப்பெருந்துறை உறை சிவனே' என்று விளிக்கின்றார்.

யாரேனும் மக்களுட் சிறியார் இத்தகைய கொடுமைகள் செய்தால் ஊரில் நாலுபேர் அலர் தூற்றுவார்கள்; யானும் என் குறைகளை யாருக்கேனும் எடுத்துச் சொல்லி ஆற்றிக்கொள்வேன்; நீயோ பெரியதிற் பெரியவன்; உன் கொடுமையை யான் கூற இயலுமா? அங்ஙனம் யான் கூறினும் யார் கேட்பார்கள்? யார் பங்கு கொள்வர்? நீயே வா என்றருளவேண்டும் என்பார் 'யாரொடு நோகேன்; யார்க்கு எடுத்து உரைக்கேன்; ஆண்ட நீ அருளிலையானால்' என்கின்றார்.

உலகம் அகன்றதுதான்; சூழ நீரரண் உடையதுதான்; ஆயினும் துன்பத்தோடு இவ்வுலகில் வாழகில்லேன் ஆகையால் என்னை வரப்பணித்து அருளும்செய் என்றாராம்.

பற்றறுதலும், இறைவனடியைப் பற்றுதலும், செயலறவும், சிவனாணையை எதிர்நோக்குதலும் ஆகிய வீடடைதற்கு உரிய உபாயங்கள் உணர்த்தப்பெறுகின்றமை காண்க.

447 வம்பனேன் றன்னை யாண்டமா மணியே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
உம்பரு மறியா வொருவனே யிருவர்க்
குணர்விறந் துலகமூ டுருவும்
செம்பெரு மானே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எம்பெரு மானே யென்னையாள் வானே
யென்னைநீ கூவிக்கொண் டருளே. 2

இ - ள்: வீணனாகிய என்னை ஆண்ட பெரிய குருமணியே! தேவர்களும் அறியாத தனிமுதல்வனே! அயனும் அரியுமாகிய இருவருக்கும் அறிவினெல்லையைத் தாண்டி, எல்லாவுலகங்களையும் ஊடுருவிக்கடந்துள்ள சிவந்த நிறமுள்ள பெருமானே! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! எம்பெருமானே! என்னை ஆள்பவனே! வேறு எதனிடத்தும் நான் பற்றிலேன்; ஆகையால் அடியேனை நீ அழைத்துக்கொள் என்றவாறு.

உலகியற்பற்றொன்றும் அடியேற்கு இல்லை ஆகையால் என்னை நின் திருவடிக்கண் அழைத்துக்கொள் என்கின்றார்.

ஏதோ ஒருவகையில் பயன்படுபவர்களையே உலகவர் ஆட் கொள்வர்; நீயோ என்னறியாமையை யுணர்ந்து, குருமாமணி யாக வந்து, ஒருவகையானும் பயன்படாத என்னையும் ஆண் டனை; இச்செயல் நின்து பயன் கருதாத பண்பினை உணர்த்து வது என்று பாராட்டுகின்ற அடிகளார் 'வம்பனேன் தன்னை ஆண்ட மாமணியே' என்றருளுகின்றார். வம்பு-வீண். வம்பன்- வீணன். குறும்பான சொற் செயல்களையுடையன் எனலுமாம். நிலையாமையுடையேன் என்பாரும் உளர்.

உம்பரும் என்ற உம்மை உயர்வு சிறப்பு. உம்பர் பலரா யினும், பல இன்பங்களைக் கருதியும், பெற்ற இன்பம் இடை யீடில்லாது துய்ப்பது கருதியும் உன்னை வணங்குகின்றனர்; அவர்களும் தேவரீர்சிறப்பியல்பைத் தெரிந்து சிந்தித்து அறிய மாட்டார்கள் ஆயினர்; ஆகவே அவர்கள்நிலையில் காமியப் பயனைத்தரும் கடவுளாயும், கடந்த நிலையில் பேரின்பந்தரும் பெருமானாயும் இருக்கும் தனிச்சிறப்புடையவனே என விளிப் பார் 'உம்பரும் அறியா ஒருவனே' என்றார்.

இருவர் - தொகைச் சொல்லாய்க் குறிப்பால் ஈண்டு அய னையும் அரியையும் உணர்த்திற்று. அவ்விருவரும் தாம் திருக் கயிலையில் சென்று காணும் பேறுபெற்றவர்களாதலின் அவ்வள வில் இறைவனை மதித்து, அடிமுடியைத் தேடத் தொடங்கினரா தலின் தத்தம் அறிவின் எல்லையில் ஆண்டவன் அடங்கியதாக எண்ணினர். இறைவனோ அவர்கள் அறிவின் எல்லையைக் கடந்து, அறிவால் அளவிட்டு உணர முடியாத தன்மையில் விளங்குகின்றார். அறிவின் எல்லையிற் காணப்படாதுபோகவே உலகங்களை ஊடுருவி நிற்கும் உருவத்தையாவது சென்று பார்க்க எண்ணினர். அதிலும் அவர்கள் அதிகார வரம்புட் பட்டனவும், செல்லக்கூடியனவுமாகிய அண்டங்களையுங்கடந்து அண்டங்கள் யாவற்றினும் ஊடுருவி நிற்பதனை அறியமாட்டா மையால் அயர்ந்தனர் என்று இறைவனது உணர்வு இறந்த நிலையையும், எங்கும் கலந்துநிற்கும் நிலையையும் வியந்து விளிக்கின்றவர் 'இருவர்க்கு உணர்விறந்து உலகம் ஊடுருவும் செம்பெருமானே' என்கின்றார்கள். செம்பெருமான் - செந்நிற மாகிய தீவண்ண அண்ணாமலைப்பெருமான்.

இவ்வண்ணம் கடந்த நிலையில் விளங்கினும், எம்மனோர் உய்யும்வண்ணம் சிவபுரம் திருப்பெருந்துறை முதலிய தலங் களில் எழுந்தருளி என்னை ஆண்டு, எம்பெருமானாக இருப்பதை விளக்கி அடுத்தடுத்து விளிக்கின்றார்.

அங்ஙனம் விளித்து, தன்னைக் கூவிக்கொள் என வேண்டிக் கொள்கின்றவர்கள், அழைப்பதற்கேற்ற தகுதி அடியேனுக்கு வந்துவிட்டது என்பதை உணர்த்துவார் திருவடிப்பற்றன்றி வேறுபற்று எனக்கில்லை என்கின்றார்கள்.

கூவுதல் - நெடுந்தூரத்திலிருப்பவனை உரக்க அழைத்தல். ஆகவே, திருவடிச்சார்பினின்று நெடுந்தூரம் விலகியிருப்பேன் ஆயினும் அடிமையைக் கூவியழைத்துப் பணிகொண்டு அருளுக்கு உரிமையாக்குதல் ஆள்பவனது கடமையாதலின் கூவிக் கொண்டருள் என வேண்டுகின்றார்.

உலகத்தில் வாழ்வதற்கேற்ற பற்றிலேன் என்றமையாலும், கூவிக்கொண்டருள் என வேண்டுவதன் வாயிலாக, அங்ஙனம் அழையாவிடின் வாழேன் என்பது பெறவைத்தலின் இத்திருப் பாடல் வாழாப்பத்தில் ஒன்றாயும், முத்தியுபாயத்தை மொழிவ தாயும் விளங்குதல் காண்க.

448 பாடிமால் புகழும் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேடிநீ யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஊடுவ துன்னோ டுவப்பதும் உன்னை
உணர்த்துவ துனக்கெனக் குறுதி
வாடினே னிங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 3

இ - ள்: சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! அடியேனைத் தேடி ஆட்கொண்டாய்; ஆதலால், திருமால் புகழ்ந்து பாடிய திருவடிகளையன்றி வேறொன்றிலும் பற்றி லேன் ஆயினேன்; நின்னோடு ஊடுவதும், உன்னைக்கூடி மகிழ் வதும், எனக்கு உறுதிபயக்கும் இன்புரைகளை உணர்த்துவதும் நம் இருவருக்கும் உரிய செயல்களாயின; அங்ஙனமிருந்தும் நீ ஊடலுணர்த்தாமையால் வாடினேன்; இங்கு வாழமாட் டேன்; வருக என்று அருள்புரிவாயாக என்றவாறு.

நீ என்னைத் தேடிக்கொண்டாய் ஆதலால் யான் ஊடுவதும் பின் நீ உணர்த்தக் கூடி மகிழ்வதும் செய்வேன்; ஆனால் நீ ஊடலுணர்த்தாமையின் வாடி வாழமாட்டேன்; விரைந்து வருக என அழை என்று அடிகளார் கற்புடைக் காதலியின்திறத்து நின்று ஊடி உணர்த்துதலைவேண்டி இரக்கின்றார்.

ஒரு பெண்ணைத்தேடி மணந்த தலைமகன் பெண்ணுள்ளம் தெரிந்து நடந்துகொள்ளவேண்டும். பெண் என்ன விரும்புவாள்? தலைவனோடு ஊடுதலையும், தலைவன் ஊடல் தணிக்கும் உபாயமாக அருகிருந்து பணிமொழிகூறிச் சிறுபுறம் தைவந்து, அடி வருடி இன்மொழி கூறுதலையும், அதனால் தான் ஊடல் தீர்ந்து கூடிக்களித்தலையும் விரும்புவாள். அதுபோலக் குருந்தடியில் குருவாக எழுந்தருளி ஆட்கொண்ட காலத்து யான் புறம்புறம் திரிந்தது ஊடற்குறிப்பு. அஃதுணர்ந்து ஊடல் உணர்த்திக்கூடிக் களிப்பூட்டுகின்றிலை எனத் தலைமகள் நிலையில் அடிகள் நின்று, நீ தேடி ஆண்டாய்; உன்னோடு ஊடுவதும் உன்னைக் கலப்பதும் என்னுறுசெயல்கள் என்றும், எனக்குறுதியுணர்த்துவது உனக்கு உரிய செயல் என்றும் விண்ணப்பிக்கின்றார். இதில் என்னுறுசெயல் நின்னுறுசெயல் என்ற சொற்களை ஏற்ற இடத்துக்கூட்டி முடிக்க. அங்ஙனம் உணர்த்தப் பெருமையால் வாடினேன்; வாழ்கிலேன்; ஆதலால் நீ மேலே, ஊடலுணர்த்தும் உபாயங்களாகக் கிழத்தியுயர்வும் கிழவோன் பணிவுங் கூறலும் வேண்டா; வருக என்று அழைத்தாற் போதும்; அதுவே வாயிலாகக்கொண்டு கூடிவாழ்வேன்; அவ்வளவாவது அருள்புரிக என்று வேண்டிக்கொண்டவாறும்.

மால்புகழும் பாதம் என்றது அரியலால் தேவியில்லை என்பவாகலின் பெண்ணுந்தன்மைபெற்ற பிறர் தன் தலைவனைப் புகழ்வராயின் அதனைப் பொறுத்து ஊடுதல் மகளிர்க்கியல்பாதலால் யானும் ஊடாது மால் புகழ்ந்த பாதத்தையே பற்றிநின்றேன்; புணர்ச்சி விருப்பினளாதலைக் குறிப்பினால் உணர்த்தினேன்; ஆதலால் வருக என்று அருள்செய் போதும் என்பதை விளக்குவதாம்.

ஆட்கொண்டாலும் புறம் திரியாது அடியேபற்றும் என்போலியரை வருக என் அழைத்தலும் முத்தியாகிய பேரின்பத்திற்குரிய உபாயமாம் என்றலின் பதிகக்கருத்தும் தோன்ற நிற்றல் காண்க.

*449* வல்லைவா ளரக்கர் புரமெரித் தானே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
தில்லைவாழ் கூத்தா சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எல்லைமூ வுலகும் உருவியன் றிருவர்
காணுநா ளாதியீ றின்மை
வல்லையாய் வளர்ந்தாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 4

இ - ள் : விரைந்து கொடிய அரக்கர்களின் முப்புரங்களையும் எரித்தவனே! தில்லைப்பதியின்கண் வாழ்கின்ற கூத்தா! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! முன்னொரு காலத்து, அயனும் அரியுமாகிய இருவரும் அடிமுடி தேடிய காலத்து மூன்றுலகங்களின் எல்லைகளையும் ஊடுருவி முதலும் முடிவும் இல்லையாக வளர்ந்தவனே! நான் வாழ்கிலேன்; வருக என்று அருள்புரிவாயாக; வேறு ஆசை எனக்கு இல்லை காண் என்றவாறு.

சிவனே! என்னை வருக என்றழைத்தல் ஒன்றுமே போதும்; வேறு ஆசையொன்றும் இல்லை என்று விண்ணப்பித்தவாறு.

அரக்கர்கள் முண்மரம் போலக் கொடியவர்கள்; அவர்கட்கு ஆற்றல்தரும் கோட்டைகளாக இருந்தவை முப்புரங்கள்; அவற்றையழித்தால் அவர்கள் திருந்துவார்களாதலால் 'இளைதாக முண்மரம் கொல்க' என்ற நியாயப்படி விரைந்து முப்புரங்களை அழித்தான் என்பார் 'அரக்கர் புரம் வல்லை எரித்தானே' என்றார்.

வல் - விரைவு. ஐ சாரியை. வாள் - கொடுமை. வாளின் கொடுமையை வாளெனவே கூறியதாம். புரம் எரித்த செய்தி ஆணவமகற்றி அவர்களை உய்யக்கொண்ட அருளாம் என்க.

ஏனைய விளிகள் நான்கும் முறையே இறைவன் ஐந்தொழிலையும் ஒருசேர ஆற்றும் வன்மையையும், நிரதிசயானந்தமே வடிவாக இருத்தலையும், உபதேச குருமூர்த்தியாக வந்து பரிபாகத்திற்கு ஏற்ப அருள்வழங்குதலையும், மலவாதனையால் அறிவு திரிந்து அகங்கரிப்பார்க்குக் காணலாகாக் கடந்த நிலையையும் அறிவிப்பனவாதலைத் தனித்தனியே இயைத்துக் காண்க.

சென்ற பாடல்களிற் கூறியது போல மற்றுப்பற்று எனக்கில்லை வாழ்கிலேன்; வருக என்று அருள்புரியாய் எனலுமாம். யாம், அருள் புரியாய் மற்றுப்பற்று இலை எனக் கூட்டினேம். பொருட்சிறப்புக் காண்க.

ஆன்மா திருவருளால் பரிபாகமுற்று இறைவனை நோக்கி நின்னையன்றி வாழகிலேன் என்று உணரும் காலம் எதுவோ அதுவே முத்திக்குரிய உபாயத்தைத் தேடும் நாளாதலின் அதனைவேண்டும் இத்திருப்பாடல் முத்தியுபாயம் உரைத்ததாம் என்க.

450 பண்ணினேர் மொழியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எண்ணமே யுடல்வாய் மூக்கொடு செவிகண்
ென்றிவை நின்கணே வைத்து
மண்ணின்மே லடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 5

இ - ள்: பண்களை ஒத்த மொழியினையுடைய உமாதேவியாரை ஒருபாகத்து உடையவனே! நீ அன்றி, நான் வேறு பற்றுவார் யாருமில்லாதேன் என்பதைத் திருவுளம் பற்றுக; சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! அடியேனை உறுதியாக ஆண்டுகொண்டனை; அதனால் என் எண்ணம், உடல், வாய், மூக்கு செவி, கண் என்ற கருவி கரணங்கள் யாவற்றையும் நின்பால் வைத்துவிட்டு, மண்ணுலகில் அடியேன் வாழ்கிலேன்; ஆதலால் வருக என்று அருள்புரிவாயாக என்றவாறு.

தாயுந்தந்தையுமாகிய உன்னையல்லால் எனக்கு உறுதுணை வேறில்லை; என்னை உறுதியாக ஆட்கொண்டாய்; யானும் என் கருவி கரணங்கள் அனைத்தையும் உன்பால் வைத்துவிட்டேன்; இம்மண்ணுலகில் எங்ஙனம் வாழ இயலும்? ஆதலால் வாழ்கிலேன்; வருக என்று அருள்புரிக என்பது கருத்து.

பண் - இசை. குறிஞ்சி, பாலை, முல்லை முதலிய பண்கள் பண் காதிற்கு இனிமையானது. அது போன்ற மொழியினையுடைய உமாதேவி பண்ணின் நேர்மொழியாள். அவளோடு கூடி, நீ அனுக்கிரகமூர்த்தியாக இருத்தலின் இத்தகைய விண்ணப்பங்களை விடுக்கின்றேன் ஏற்றருள் என்பது குறிப்பு.

யான் இன்னும் மண்ணில் வாழ்தல் போகநுகர்ச்சிக்காயின் அவற்றை நுகர்தற்குரிய மனம் முதலான அகக்கரணங்களையும் மெய் வாய் முதலிய புறக்கரணங்களையும் நின்பால் வைத்துவிட்டு, எங்ஙனம் வாழ இயலும்? அதனால் வருக என்று அருள் என்று காரணம் கூறுவார் 'எண்ணமே உடல் வாய் மூக்கொடு செவிகண் என்றிவை நின்கணே வைத்து மண்ணின்மேல் வாழ்கிலேன்' என்கின்றார். எண்ணம் என்றது மனத்தை.

ஐந்து பேரறிவும், மனமும் சிவத்தைச்சார்தல் முத்தியுபாயமாம் என்று இத்திருப்பாடல் உணர்த்துகிறது.

451 பஞ்சின்மெல் லடியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செஞ்செவே யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அஞ்சினேன் நாயேன் ஆண்டுநீ யளித்த
அருளினை மருளினால் மறந்த
வஞ்சனே னிங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 6

இ - ள் : பஞ்சைக்காட்டிலும் மெல்லிய திருவடிகளை யுடைய உமாதேவியை ஒருபாகத்துக் கொண்டவனே! சிவ புரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! செம்மையாக என்னை ஆட்கொண்டாய்; ஆட்கொண்டு நீ எனக்கு அளித்த அருளை அறியாமையால் மறந்த வஞ்சகனாகிய நாயேன் அஞ்சி னேன்; உன்னையன்றி வேறு துணையில்லை காண்; இவ்வுலகில் வாழ்கிலேன்; வருக என்று அருள்புரிவாயாக என்றவாறு.

சிவனே! நீ செவ்வையாகத்தான் என்னை யாட்கொண்டாய்; யான் அறியாமையால் மறந்தேன்; ஆகையால் அஞ்சினேன்; உன்னையன்றி வேறு துணையில்லேன்; வாழேன்; வருக என் றருள் என்பது கருத்து.

தந்தையிடம் நலம் வேண்டும் குழந்தை தந்தையின் பக்கத் தில் தாயிருக்கின்றபோதுதான் வேண்டிக் கொள்ளும்; அது போல இறைவனிடம் வருக என்ற அருளழைப்பை வேண்டு கின்ற அடிகளார் திருவருட்சத்தியாகிய உமையொரு கூறனாக விளங்குகின்ற நிலையைக் கண்டு, இப்போது எம் வேண்டுதல் வீணாகாது என்ற குறிப்புத்தோன்ற 'பஞ்சின் மெல்லடியாள் பங்க' என விளிக்கின்றார்.

பற்று - பற்றப்படுபொருள்; அதாவது உறுதுணை. இவ் வுலகில், தாயே தந்தையென்றும் தாரமே மனை மக்கள் என்றும் பற்றுவார் அனைவரும் பற்றின்காரணமாகப் பற்றியவர்கள். பற்று அற்றால் பற்றமாட்டார்கள். 'உற்றார் யாருளரோ உயிர் கொண்டு போம்பொழுது குற்றாலத்துறையும் கூத்தா! நீயன்றி உற்றார் யாருளரோ' என்றதுபோலப் பற்றின்றியே எனக்குப் பற்றாக எஞ்ஞான்றும் துணையாக விளங்குபவன் நீ என்பார் 'நீயல்லால் பற்று நான் மற்றிலேன் கண்டாய்' என்றார்.

செஞ்ச - செவ்வையாக. என்னிடம் என்ன குறைகள் இருப் பினும் அவற்றைப் பொருட்படுத்தாது நீ செம்மையாகத்தான்

ஆண்டாய்; அடியேன் அன்று நீ அளித்த அருளினை என் அறியாமையால் மறந்தேன்; ஆதலால் நின்பால் வர அஞ்சுகிறேன்; வருக என்று பணித்தருள் என வேண்டியவாறும்.

ஆண்டு - ஆட்கொண்டு. அவ்விடத்துக் குருவாக வந்த தலைநாளில் குருந்தடியில் எனக் கொள்ளுதலுமாம்.

அருளை என்றும் தியானிக்க என் மருள் தடையாயிருந்தது. இருள் சூரியனைக் கண்டதும் விலகுவதுபோல, வருக என நீ அழைத்தவுடன் என் மருள் விலகும்; அதனால் அழைக்க என்று வேண்டிக்கொள்வதால் இத்திருப்பாடலும் முத்தியுபாயம் அறிவிப்பதாயிற்று.

452 பருதிவா ழொளியாய் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவுயர் கோலச் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
கருணையே நோக்கிக் கசிந்துள முருகிக்
கலந்துநான் வாழுமா றறியா
மருளனே னுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 7

இ - ள்: சூரியன் வாழ்வதற்கு உதவும் ஒளிவடிவானவனே! அடியேன், நின் திருவடிகளன்றி வேறு பற்று ஒன்றும் இலேன்; இதனை நன்கு ஆராய்ந்துபார்; அழகு உயர்வதற்கு ஏதுவான அழகிய வடிவத்தையுடைய சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! அடியேன், நின் திருவருளையே எதிர்நோக்கி, மனம் கசிந்து, உருகி, அவ்வருளோடு கலந்து வாழும் வகையினை அறியாத மருளுடையேன்; ஆதலால் இவ்வுலகில் வாழ்கிலேன்; விரைந்து வருக என அருள்புரிவாயாக என்றவாறு.

நின் கருணையை நோக்கி மனங்கசிந்து, கலந்து வாழத் தெரியாத மயக்கவுணர்வினளுகிய யான் இவ்வுலகில் வாழேன்; ஆதலால் வருக என அழைத்தருள்க என்று வேண்டுகின்றார்.

எல்லா அண்டங்களிலும் உள்ள ஒளிப்பொருள்கள்யாவும் தத்தம் நிலை குலையாது வாழ்வது சிவஒளி அருள்வதாலேயே ஆதலின், பருதி வாழ்வதற்குரிய ஒளி வடிவானவனே என்பார் 'பருதி வாழ் ஒளியாய்' என்றார். பழையவுரை பருதியின் உதவியைப் பார் அறியார்போல திருவடியருமை அறியாத பாவிக்கு

வேறுபற்றுளவோ? என்றுரைக்கும். இதற்குச் சூரியன் செய்யும் உதவி, காணுங்கண்ணொளியோடு கலந்துநின்று பொருள்களை உணர்த்துதல். உலகத்துப் பொருள்களைக் காண்பார் கண் கண்டது யான் கண்டேன் என்பதன்றிச் சூரியவொளி கண்ணொளிக்கு உதவியது அதனாற்கண்டேன் என்னார். அதுபோல நின் திருவடியே எல்லாமாயிருந்து உணர்த்துகிறது என்பதை அறிந்துகொள்ளாதவன் யான்; அங்ஙனம் உணர்ந்து பற்ற வேண்டியதைப் பற்றத்தெரியாத எனக்கு வேறு பற்றுளதோ என்பது கருத்தாகக்கொள்க. பருதி வாழ் ஒளியாய் விளங்கும் நின்பாதம் என ஒருசொல் வருவித்துப் பொருள்கொள்க.

பின்னுரை ஒன்று, பருதிமண்டலத்து நடுவில் வாழுகின்ற சோதியே என்று கூறும்.

திருவுயர் கோலச் சிவபுரத்தரசே! - அழகு என்னும் பண்பு உயர்கின்ற வடிவையுடைய சிவபுரத்தரசே என்க. அழகெனும் பண்பு இவர் திருமேனியமைப்பாலேயே உயர்கின்றது என்பது கருத்து. திரு-ஞானம். ஞானமேயாக உயர்ந்த வடிவினையுடைய அரசே எனலுமாம். பழையவுரையும் அறிவின்பமே வடிவான சிவபுரத்தரசே என்னும். சிலர் தெய்வத் திருவால் உயர்வுற்ற சிவபுரத்தரசே என்பர்.

தலைவன் ஒருவன் ஆட்கொண்ட பிறகு, அடிமை தன் வாழ்வு தாழ்வு அனைத்திற்கும் தலைவனை எதிர்நோக்கி அவன் கருணையாலேயே வாழ்தல்போல, அடியேனும் நின் கருணையே நோக்கி, அதன்கண் அழுந்தி, மனங்கசிந்து நின்னோடுகலந்து வாழவேண்டியவன்; அங்ஙனம் வாழத் தெரியா மருளனேன் ஆனேன் என்றார். மருளன் - மயக்கவுணர்வுடையவன்.

முற்பாட்டிற்போல, யான் மருளனாயினும் வருக என்று நீ அருள் புரியின் மருள் அகலும்; நின்பால் கலந்து மகிழ்வேன் என்றவாறும்.

மருளனைத் தெருளனாக்குமுபாயம் 'வருக என' அழைத்தலே என்று முத்திக்குரிய உபாயமுணர்த்துகிறது இத்திருப்பாடல்.

453 பந்தணை விரலாள் பங்க நீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செந்தழல் போல்வாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே

அந்தமி லமுதே அரும்பெரும் பொருளே
ஆரமு தேயடி யேனை
வந்துய வாண்டாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரியாயே. 8

இ - ள்: பந்து வந்து பொருந்துகின்ற விரல்களையுடைய உமாதேவியை ஒருபாகத்து உடையவனே! நீ அன்றி பற்று ஒன்றுமில்லேன் யான்; இதனை நன்றாகத் திருவுள்ளத்திலே எண்ணிப்பார்; செந்தீப்போல்பவனே! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவபெருமானே! எல்லையில்லாத அமுதமே! பெறுதற்கு அரிய பெரிய பொருளே! உண்ணத்தக்க அமுதமே! தேவரீரே எளிமையால் வந்து அடியேன் உய்யும் வண்ணம் ஆட்கொண்டாய்; ஆதலால் இப்பூமியில் வாழ்கிலேன்; வருக என்று அருள்புரிவாயாக என்றவாறு.

சிவனே! அடியேனை வலியவந்து உய்யும்வண்ணம் ஆண்டனை; அதனால் இம்மண்ணுலகில் உய்யும் நெறிதவறி வாழேன்; வருக என்றருள் என்பது கருத்து.

'பந்தணை மெல்விரலி' என்று பந்தணைநல்லூர்ப் பெருமாட்டிக்கு ஒரு திருநாமம் உண்மையும் ஓர்க. விரலாள் பங்க என விளித்த இதுவும் முற்பாடல்களிற்போல அநுக்கிரக மூர்த்தியாக எழுந்தருளியிருப்பதை உணர்த்தியதாம்.

செந்தழலாய் என்றது செந்தழல் போல்வாய் என்றது, ஒளியாற் செந்தழலை ஒத்திருக்க, தண்ணளியால் வெப்பமின்றி இருத்தலிற் கூறியதென்க.

'அந்தமில் அமுதே' 'ஆர் அமுதே' என்பன இறைவன் நுகரத்தக்க அமுதாயும் சிவபோகத்தழுந்திய பக்குவான்மாக்களுக்கு நுகராநுகர எல்லை கடந்த பேரின்பத்தை நல்கும் அமுதாயும் விளங்குவதையுணர்த்தின. சிலர் அந்தமிலமுதே என்பதற்கு முடிவில்லாதிருந்து சார்ந்தாருக்கும் முடிவில்லாமையைத் தருகின்ற அமுதமே என்பர்.

சுட்டறிவாற் காணப்படும் பொருள்கள் யாவும் பெரும்பொருளாமேயன்றி அரும்பொருளாகா. அரும்பொருளாயின் பெரும்பொருளாகா. இறைவன் இவ்விருதன்மையும் உடையனாதலின் 'அரும்பெரும் பொருளே' என விளித்தார். அமுது செந்தழல் இவற்றோடு ஒப்பித்து உரைத்த அடிகள் தம் திருவுள்ளத்து இறைவனுடைய அளவிலாற்றலும், பெருமையும்,

ஒருவமனில்லாமையும் தோன்ற இறைவன் தானே தனக்குச் சம்மாவன் என்பதை உணர்ந்து 'அரும்பெரும்பொருளே' என்று கூறி அமைந்தனர் என்க.

மலகன்மங்களோடுகூடி இம்மண்ணுலகில் வாழ்ந்த என்னை இந்நிலையினின்று முத்தான்மாவாக அடியேன் உய்ய ஆண்டாய்; ஆண்டபின் எங்ஙனம் இம்மண்ணுலகில் வாழ்வேன்? வாழ்கிலேன்; அதற்காகவேனும் வருக என்று பணி என்று அருளியதாம். இதனால் முத்தியுபாயம் வெளிப்படுதல் காண்க.

454 பாவநா சாவுன் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேவர்தந் தேவே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
மூவுல குருவ இருவர்கீழ் மேலாய்
முழங்கழ லாய்நிமிர்ந் தானே
மாவுரி யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 9

இ - ள்: பாவங்களை அழிப்பவனே! தேவர்கட்கெல்லாந் தேவனே! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! அயன் மால் என்ற இருவரும் மேலும் கீழுமாய்த் தேட, முழங்குகின்ற தீயாய் மூன்று உலகங்களையும் ஊடுருவும்வண்ணம் உயர்ந்து விளங்குபவனே! யானையுரிப் போர்வையை யுடையவனே; நின் பாதங்களை அன்றி வேறு பற்றிலேன் நான்; ஆகையால் இம்மண்ணுலகில் வாழேன்; வருக என்று அருள் புரிவாயாக என்றவாறு.

திருவடிகளைப்பற்றி நிற்றலன்றி வேறு பற்றிலேன் யான்; ஆதலால், இவ்வுலகில் வாழேன்; வருக எனப் பணித்தருளுக என்பது கருத்து.

வருக எனப் பணியாமைக்குப் பல பிறவிகளில் தாம் செய்த பாவங்கள் காரணமாக இருக்குமோ என்ற ஐயம் தோன்ற, இறைவன் திருமுன்பு பாவங்கள் தீமுன்னர்ப் பஞ்சுபோலக் கெட்டொழியுமே என்ற துணிவு உதிக்க, என் பாவங்களனைத் தையும் சுட்டெரித்தருளவேண்டும் என்ற திருக்குறிப்பால் இறைவனை முதற்கண் 'பாவநாசா' என விளிக்கின்றார்.

திருவடி சரணம் என்ற உறுதியொன்றே இறையருளைப் பெறும் உபாயமாதலின் பாதமே பற்றினேன்; மற்றோர் பற்றிலேன் என்றார்.

தேவதேவனாக அரிதாய் அருவாய் உள்ள பெருமானே எம்மை ஆட்கொள்ளச் சிவபுரத்திலும் திருப்பெருந்துறையிலுமாக எழுந்தருளியிருக்கின்றார் என்ற எளிவந்த கருணையை விளக்க முறையே 'தேவர்தந்தேவே! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே' என்றார். சிவபுரம் - கைலையுமாம்.

இருவர் கீழ் மேலாய் - அயன் மேலும், அரி கீழுமாய் எனக் கூட்டுக.

முழங்கழலாய்-சடசட என ஒலிக்கும் நெருப்பாய். மூவுலகு உருவ நிமிர்ந்தானே எனக்கூட்டுக. மா - யானை.

நின்னடியைப் பற்றிய எனக்கு - வேறுபற்றிலாத எனக்குப் பற்றுக்காரணமாக விளையும் வினையின்மையின் இக்கன்ம பூமியில் வாழமாட்டேன் என்பதால் இத்திருப்பாடல் முத்தியுபாயம் மொழிகின்றமை காண்க.

455 பழுதிலாத் புகழாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செழுமதி யணிந்தாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணையென நினைவனோ சொல்லாய்
மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள்: குற்றங்களொன்றும் இயல்பாகவே இல்லாத பழைமையான புகழினையுடைய உமாதேவியாரைப் பங்காகப் பெற்றவனே! நீ அல்லது வேறு பற்றிலேன்; செழுமையான இளமதியை அணிந்தவனே! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! இளமையான ஏற்றையுடையவனே! பிற தெய்வங்களைத் தொழுவேனோ? துதிப்பேனோ? எனக்கொரு துணையாக நினைப்பேனோ! சொல்; இத்துணை உறுதியுடைய யான் இம்மண்ணில் வாழேன்; ஆதலால் வருக என்று அருள் புரிவாயாக என்றவாறு.

அடியேன் மறந்தும் புறந்தொழேன்; ஆதலால் இம்மண்ணில் வாழவிரும்புகிலேன்; வருக என்று அருள்செய் என்பது கருத்து.

இறைவியின் புகழ் அனைத்தும் பிறர்புகழ்போலப் பழுதுறு தன ஆதலின் 'பழுதில் தொல்புகழாள்' என்றார். திருக்குறளில் 'பொருள்சேர் புகழ்புரித்தார்மாட்டு' என்பதற்குப் பரிமேலழகர் 'இறைவனது மெய்ம்மையான புகழை விரும்பினாரிடத்து' எனக் கூறும் உரைநயம் ஈண்டு எண்ணுதற்குரியது. பிறதெய்வங் களின் புகழ்களிற் சில உபசாரமாகவும், ஒருகாலத்துப் பிழைத் தும் போவனவாகவும் உண்மையின்றியிருக்க இறைவியின் புகழ் என்றும் நிலைத்த பழைமையானதாக விளங்குதலின் இங்ஙனம் அருளினார் என்க.

இவ்வண்ணம் விளித்தது உமையொரு பாகனாக விளங்கும் நீ கருணை புரிந்தேயாகவேண்டும் என்ற குறிப்பாம்.

குற்றமே செய்தவர்களையும் காத்து உயர்நிலை உதவுகின்ற வன் நீ என்பார் 'செழுமதி அணிந்தாய்' என்றார். மதி செய்யாத தவறு இல்லை. அத்துணைப் பாவங்களையும் போக்கி, யாரும் அடைய இயலாத திருமுடியை அவனுக்கு இடமாகத் தந்த பெருங்கருணையாளனாகிய நினக்கு என்னை ஏற்பது முடியாத தொன்றன்று என்றவாறும்.

உன் இயல்புகள் அனைத்தும் உன்னருளால் உணர்ந்த யான், அருளிற்றிளைத்திருப்பதன்றிப் பிறரைத் தொழேன், துதி யேன்; ஆகையால், நின்னடிசேர அழைத்தருள் என வேண்டு கின்றமையின் இப்பாடல் முத்தியுபாயமாதல் காண்க.

இப்பத்துப் பாடல்களாலும் இவ்வண்ணம் உமையொரு பாகனாகவும், பகை ஒழிப்பவனாகவும், எங்குமாய் யாவுமாய் யாருமாய் விளங்குபவனும் ஆகிய நீ, நின்பால் உறுதியான பற்றுக்கொண்ட என்னை வருக எனப் பணித்தருள்; இல்லை யாயின், இவ்வுலகத்து வாழேன் எனத் தாம் விரும்பும் முத்தி உபாயங்களையும் அவைகளில் பரிபாகம் கைவரப்பெற்ற தகுதி யுடன் தானிருத்தலையும் அடிகளார் அறிவித்தல் காண்க.

# 29. அருட்பத்து

[மகாமாயாசுத்தி]

திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் குருமூர்த்தியாக எழுந்தருளி ஆட்கொண்ட குருநாதனை நோக்கி, அடிகள், ஆதியே! அருத்தனே! அங்கணா! அமலனே! அடிகளே! அப்பனே! ஐயனே! அத்தனே! அருளனே! என்று யான் அன்புகொண்டழைத்தால், நீ 'அது எந்து' என்று அருள்செய்; இதுதான் கயிலையிற் புகுநெறி வருக என்றருள் செய் என்று அருட்பத்தாகிய இதனை அருளிச் செய்தார்கள்.

யான் அழைக்கும்போது வாளா இராமல் 'ஏன் என்றுவது கேள்' என்று அருளை விழைந்துரைக்கும் பத்துப் பாடல்களையுடைமையின் இது அருட்பத்து என்னும் பெயர்பெற்றது.

சென்ற பத்தில் வாழேன் என்றுரைத்து வருக என்றருள் புரிதலை வேண்டிய அடிகள் அங்ஙனம் வரவேற்கும் நிலையைத் தாம் பெருமையால் வருந்தி ஏனென்று கேட்கும் அருளையாவது புரிக என வேண்டிக்கொள்ளுதல் காண்க.

பழையவுரை, "பெருகருட் பத்து, பெரு மாயா சுத்தி" என்ற அகத்தியச்சூத்திரத்தைக் கூறி, முற்பதிகத்தில் திருவடிஞானமான அன்புநிட்டைபெற்றமையின், தற்போதமற்ற அடிமை வழிபாடான இன்ப மாயாதீத சுக உல்லாச அன்பை அறிவித்தலின் அருட்பத்தெனலாயிற்று என்னும்.

பழைய குறிப்பு மகாமாயாசுத்தி; அதாவது மாயையினின்றும் விலகுதல் என்று விளக்கம் தருகின்றது. உலகத்தை வெறுத்து இறைவன் திருவடியை விரும்புதலே மாயையினின்று விலகுவது ஆதலின் இது மாயாசுத்தி ஆயிற்றுப்போலும்.

பழைய திருப்பெருந்துறைப் புராணம், "சோதியருட் சுடர் விளக்கே துயர் பிறவிக்கடல்விடுத்து உன்தாள் சேர்தற்கு, ஆதரித் திங்குனையழைத்தால் அதெந்துவெனக் கேளென்னுஞ்சொல் அருட் பத்தாகும்" என்றுரைக்கும்.

## எழுசீர் ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

456 சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றருளாயே. 1

இ - ள்: சோதியே! சோதியைத் தாங்கும் சுடரே! ஒளி சூழ்ந்த சுடரை ஏந்திய விளக்கே! சுருண்ட கூந்தலையும், பணைத்த முலையினையும் உடைய உமாதேவியாரைத் திருமேனியிற் பாதியாகக்கொண்டவனே! பரனே! பால்போலும் வெண்ணிறங்கொண்ட திருநீற்றை உடையவனே! தாமரை மலரின் கண்ணுள்ள பிரமனும் திருமாலும் அறியாத நீதியே! செல்வம் நிறைந்த திருப்பெருந்துறையில் மலர்கள் நிறைந்த குருந்த மரத்தடியில் விரும்பி எழுந்தருளிய புகழினையுடைய ஆதியே! அடியேன் விரும்பி அழைத்தால் அது என்ன என்று வினவி அருள்வாயாக என்றவாறு.

பக்திவலையிற் படுவோனாகக் கண்ட யான் உன்னை விரும்பி யழைத்தால் அது என்ன? என்றுவது வினவியருள்க என்பது கருத்து.

சோதி-நெய்யும் திரியுமாகிய ஆதாரங்கள் ஒன்றும் பெறாத ஒளியே என முதற்கண் தனித்த நிலையை விளித்தவர் அடுத்து அவற்றை யடுத்துநிற்கும் தீப்பிழம்பாகக் கண்டு 'சுடரே' என்றும், பின்னர் அச்சுடர்பற்றிய நெய்க்கும் திரிக்கும் ஆதாரமாய் நிற்கும் விளக்காகக்கண்டு "சூழொளி விளக்கே' என்றும் தம் பரிபாகத்திலிருந்து உலகவர் நிலைக்கு இறங்கி வந்து விளிக்கின்றார்கள். சோதி என்றது இறைவன் அருளே மேனியாய் எழுந்தருளியிருக்கும் தனிநிலையை. சுடரே என்றது ஆதாரமும் ஆதேயமுமாய் நிற்கும் அருவுருவநிலையை, விளக்கே என்றது மந்தபரிபாகிகளுக்காகத் திருமேனி தாங்கி, அதன் வாயிலாக அருளொளியை அனுபவிக்கச் செய்யும் உருவ நிலையை என உணர்க.

இங்ஙனமே அம்மையப்பராக ஓரே திருமேனியிற்காட்சி வழங்கும் போக அநுக்கிரகவுருவும், வெண்ணீற்ருய் என ஞானத் திருமேனி காட்டும் யோகத்திருவுருவும், ஆதியே என ஆசான் மூர்த்தியாக எழுந்தருளும் உபதேசவுருவும் பின்னர் உணர்த்தப்பெறுதல் காண்க.

விளக்குக் காண்பார் ஆதாரமாகிய விளக்கை நோக்காது அது தாங்கி நிற்கும் ஒளியையே காண்பராதலின் 'ஒளி சூழ் விளக்கே' என விளித்தமை காண்க.

பழையவுரை, சோதியே-என்னறிவில் விளங்கும் ஞானமே, சுடரே - ஞானனந்தப் பிரகாசமே, விளக்கே - அறிவுக்கறிவான விளக்கமே என்று கூறும்.

இரக்கமும், தாய்மைப்பாசமுமே உருவான உமையம்மை ஒருபாதியாக அமைந்திருப்பதால், எம்மை உய்யக்கொள்ளுதல் கடமை என்பது விண்ணப்பித்தவாறு.

சொல்லாமலே செய்வர் பெரியர் ஆதலின், யாம் இரவாமல் எம் குறிப்பறிந்து ஈயும் மேலானவனுக விளங்குகிருய் என்பார் 'பரனே' என்ருர்.

ஆன்மாக்களுடைய மலநீக்கத்திற்காகவும், தாம் அநாதி நித்தியப்பொருள் என்பதை ஆன்மாக்கள் அறிந்து உய்யவும் வெண்ணீறு சண்ணித்தமேனியனுய் விளங்குகின்ருன் என்பார் 'பால்கொள் வெண்ணீற்ருய்' என்ருர்.

நீதி - நேர்மை. அயன் வேத வேதாங்கங்கள் அனைத்தையும் முறையே ஓதி, பாசஞானம் கைவரப்பெற்றவன். திருமால் பதவிகளில் இருந்து காத்தல்தொழிலைச் செய்தும், விடையாயும் தேவியாயும், ஒருபாதி திருமேனியாயும் விளங்கும் பரிபாகம் சிறிது கைவரப் பெற்றவன். இவ்விருவரும் அறியாவண்ணம் இறைவன் நடுநின்ருராதலின் 'நீதியே' என்ருர். இவர்களை ஒழிந்த சிவஞானியர் அவனே தானேயாகிய அந்த நெறியில் ஏகனுகி இறைபணி நிற்பவர்கள். அவர்கட்கு அறியப்படுபவர் என்க.

காய் முற்றிக் கனிந்து தேனொழுகுவதுபோல, அடியேன் அன்பில் முதிர்ந்து நின்னையே பற்றி அழைத்தால் என்பது ஆதரித்து அழைத்தால் என்பதால் போந்தது.

அது எந்து - அது என்ன என்பது: மலையாள வழக்கு. கன்னடத்தில் அஞ்சாதே என்னும் பொருளது என்பர். அடிகளார் இருநாடுகளிலும் வாழ்ந்தவர்கள் ஆதலின் அச்சொல்

அன்பிலக்கியத்தில் இடம் பெறுதல் இயல்பே என்க. பழைய வுரை அதென்ன பராமுகமோ என்கின்றது.

இத்திருப்பாடலில், சோதியே என்பது முதலாகப் பல்வேறு நிலையில் இறைவனை உணர்ந்தமை கூறுதல் வாயிலாக மாயை தூலதரம், தூலம், சூக்குமம், சூக்குமதரம் இந்நிலைகளிற் சிறிது சிறிதாகத் தேய்ந்து இறுதியில் தனிப்பெருஞ்சோதியாக விளங் குதல் உணர்த்தப்பெறுதலின் மகாமாயா சுத்தியாதல் காண்க.

457 நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே யுன்னை யோலமிட் டலறி
உலகெலாந் தேடியுங் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 2

இ - ள்: பரமானந்தத் தாண்டவஞ்செய்யும் நிருத்தனே! மலமற்றவனே! திருநீறணிந்தவனே! நெற்றிக் கண்ணனே! தேவர்கள் தலைவனே! ஒப்பற்றவனே! ஓலமிட்டும் அலறியும் உலகெல்லாம் தேடியும் உன்னைக் காணேன்; தூய்மையான பொய்கைகளையுடைய திருப்பெருந்துறையில் வளமான மலர் கள் நிறைந்த குருந்தமரத்தடியில் எழுந்தருளியிருந்த புக ழோடுகூடிய மெய்ப்பொருளே! ஆதரித்து அடியேன் அழைத் தால் அதெந்து என்று வினவி அருள் என்றவாறு.

தேவரீர் எழுந்தருளியிருக்கும் இடங்களைவிட்டு உலகெலாந் தேடியலைந்தேன்; கண்ட பயன் உன்னைக் காணாமையே; இப் போது குருந்தடியிற் குருவாகக் காண்கிறேன்; நான் ஆதரித் தழைத்தால் அதெந்து என்று வினவியருள் என்பது கருத்து.

நிருத்தம் - மனக்கருத்தை அங்கம், நிலை, அசைவு இவற் றால் விளக்கும் நடனம். இறைவன் பஞ்சகிருத்திய பரமானந்த நிருத்தம் புரிபவனாதலின் 'நிருத்தனே' என விளித்தவாறு. அந் நிருத்தமில்லையாயின் உலகில் எதுவும் புடைபெயராதாதலின் முதற்கண் நிருத்தனே என விளித்தார்.

நிமலா - நின்மலா என்பதன் திரிபு. நின்மலன் - அநாதியே மல மாயைகளோடு பொருந்தாதவன். பற்றி விலகி நின்மல னானவன் அன்றென்க. மலரகிதனாகிய குருவே பிறர்மலங்களைப் போக்க முடியும் ஆதலால் எம் மல மாயைகளை அகற்றி ஆட் கொள்ள வேண்டுமென விரும்பி நிமலா என்றருளினர்.

எம் மல மாயைகளை நீக்குதற்கு உபாயமாக, நோயுண் மருந்து தாயுண்டாங்கு, திருநீற்றைத் தன்மேனிக்கண் அணிந்துள்ளான் என்பார் 'நீற்றனே' என்கின்றார்.

நெற்றிக்கண் இறைவற்கேயுரிய சிறப்படையாளம். நெற்றிக்கண் அக்கினிக்கண். அக்கினி சுட்டழித்துத் தூய்மையுறுத்துவது; சங்காரகிருத்தியம் செய்வது; சிவனுடைய நெற்றன்மையைத் தெரிவிப்பது. ஆதலின், இறைவனே முழுமுதற்கடவுள் என்பதை யாமறிந்துய்ய 'நெற்றிக்கண்ணனே' என்றனர்.

ஓலம் அரற்று இரண்டும் அச்சத்தால் அலறும் அரற்றொலி. புலி அல்லது அரவம் வெருட்ட அஞ்சியோடுவார் காப்பாரைக் காணாவிடினும், ஐயோ! ஐயோ! அம்மா அப்பா எனக் கூவி ஓடுவர். அதுபோல, வினைகள் அழுக்கும்போது உன்னைக் காணாமலே உலகெங்கும் உன் பெயர்களைச் சொல்லியும் அலறியும் அலைந்தேன் என்பதை 'ஓலமிட்டு அலறி உலகெங்கும் தேடியும் காணேன்' என்றார்.

திருத்தமாம் பொய்கை - தீர்த்தமாகிய பொய்கை எனலும் ஆம். அருத்தம் - பொருள்; ஈண்டு மெய்ப்பொருள்.

தலையில் தீப்பிடித்தாரைப்போல, உலகியலில் உவர்ப்புத் தோன்றி, உன்னைத் தேடி உலகெங்கும் அலைந்தேன்; திருப்பெருந்துறையில் கண்டு ஆதரித்தழைக்கின்றேன் என்றலின் மாயையினின்று விலகலும், பதியைச் சார்தலும் உணர்த்தலின் இத்திருப்பாடல் மாகாமாயா சுத்தியாதல் காண்க.

458 எங்கணா யகனே யென்னுயிர்த் தலைவா
ஏலவார் குழலிமா ரிருவர்
தங்கணா யகனே தக்கநற் காமன்
தனதுடல் தழலெழ விழித்த
செங்கணா யகனே திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அங்கணா அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 3

இ - ள் : எங்கள் நாயகனே! என்னுயிர்த் தலைவா! மயிர்ச்சாந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய உமாதேவியாரும் கங்கையாருமாகிய இருவர்க்கும் தலைவனே! தகுதியமைந்த நல்ல மன்மதன் உடலம் தழல் எழும்ப விழித்து எரித்த சிவந்த கண்ணையுடைய தலைவனே! திருப்பெருந்துறையில் செழுமையான மலர் நிறைந்த குருந்தமரத்தடியில் எழுந்தருளியிருக்கும்

முகமொடுகூடிய அங்கணே! அடியேன் ஆதரித்து அழைத்தால் அது என்ன என்று வினவியருள்வாயாக என்றவாறு.

இருபெருந்தேவியர் தண்மைக்கும் கருணைக்கும் உரியவர்களாக இருந்தும், அவர்கட்குத் தேவரீர் தலைவராக இருந்தும் நான் அன்புகொண்டு அழைக்கும்போது அது என்ன என்று வினவியருளல் கூடாதா என்பது கருத்து.

எங்கள் என பரிபாகமுற்ற ஆன்மாக்கள் அனைவரையும் உளப்படுத்திக் கூறியது. பின்னர்ச் சிறப்பாக எனக்கு ஆத்ம நாதனே என்றது.

இருவர் - கங்கையாளும் உமாதேவியாரும். நீ இத்தனை பேருக்குக் கணவனாக இருந்தும் மன்மதனை எரித்தது வியப்புத் தரும் செயல் என்ற குறிப்புத்தோன்ற 'காமன் உடல் தழலெழ விழித்த செங்கண் நாயகனே' என விளித்தார்.

உயிர்களின் பரிபாகநிலைக்கேற்ப எங்கும் எவ்வுயிருள்ளும் இறைவன் காணப்படுதலைத் திருவுள்ளத்தெண்ணி 'எங்கள் நாயகனே' என்றும், எங்கும் விளங்குகின்ற இறைவன் தன் உயிருக்கு உயிராக விளங்குதலால் 'என் உயிர்த் தலைவா' என்றும், அதனையும் காணமாட்டாத உயிர்கட்கு உருவமாக இரு பெருந்தேவியர் நாயகனாகவும், இவ்வண்ணம் தன்னைக் கண்டு பரிபாகமுற்ற உயிர்கள் சிவஞானத்தைப்பெற விரும்பின் அதற்கிடையூறாக இருக்கும் மதனனை எரித்து ஞானம் பிறப்பிக்கும் நாயகனாகவும், சிவஞானப்பேறு பெற்றுச் சிவனடிசேரும் உபாயம் தேடும் பரிபக்குவிகட்குக் குருந்தடிமேவிய குருநாதனாகவும் இருக்கின்ற அருளிப்பாடு பலவற்றையும் எண்ணி விளித்த நயம் ஊன்றி உணரத்தக்கது.

இவ்வண்ணம் தரநோக்கி மாயை சுத்திப்படுதலைக் குறிப்பாலுணர்த்துதலின் இந்தத் திருப்பாடல் மகாமாயா சுத்தியாதல் காண்க.

459 கமலநான் முகனும் கார்முகில் நிறத்துக்
கண்ணனும் நண்ணுதற் கரிய
விமலனே யெமக்கு வெளிப்படா யென்ன
வியன்றழல் வெளிப்பட்ட எந்தாய்
திமிலநான் மறைசேர் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அமலனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 4

இ - ள் : தாமரைமலரில் இருக்கும் நான்முகனுக் : பிரமனும், கரிய மேகம்போன்ற நிறத்தினையுடைய கண்ணனும் அணுகுதற்கும் அரிய அநாதியே மலம் அற்றவனே! எமக்கு வெளிப்படுவாயாக என்று அவர்கள்வேண்ட, பெரிய தீப்பிழம்பாக வெளிப்பட்ட எந்தையே! நான்கு வேதவொலிகளும் சேர்ந்த திருப்பெருந்துறையில் செழுமையான பூக்களோடு கூடிய குருந்தமரத்தடியில் எழுந்தருளியுள்ள புகழுடன்கூடிய அமலனே! அடியேன் ஆதரித்து அழைத்தால் அது என்ன என்று அருள்வாயாக என்றவாறு.

இருள் ஒளியைக் காணமுடியாதவாறு போல, கமலநான்முகனும் கருமுகில் வண்ணனும் பதவிகளில் இருப்பவர்களேயாயினும் அவர்களால் சாமீபம் கூட அடையமுடியாது. அத்தகைய அநாதி மலமுத்தன் சிவன் என்பதைக் 'கமல நான் முகனும்......விமலனே' என்பதால் உணர்த்தினார். சாமீபத்தையடையச் சிவயோகம் ஒன்றே சிறந்த சாதனம்; இவர்களோ சரியை கிரியைத் தொண்டுகள்கூடக் கைவராதவர்கள்; இவர்கள் எப்படி இறைவன் பக்கலே அணுகமுடியும் என்றவாறும்.

எமக்கு வெளிப்பட்டு அருளவேண்டும் என்று அவர்கள் இருவரும் வேண்டிக்கொண்டனர். இறைவன் அவர்கட்காகப் பெரியதழலாக வெளிப்பட்டு அவர்களுடைய ஆணவமலத்தின் வலிமையை அடக்கி ஆட்கொண்டார். அங்ஙனம் அவர்கட்கு அண்ணாமலையாய் வெளிப்படினும் எனக்குத் தந்தையாவார் என்றுணர்த்த 'எந்தாய்' என்றார்.

திமிலம் - பேரொலி. நான்மறை திமிலம் சேர் திருப்பெருந்துறை எனக் கூட்டுக. அமலன் - மலமே இல்லாதவன்.

விமலனும் அமலனுமாகிய பரசிவத்தையாதரித்தழைத்தலே மாயாசுத்திக்குரிய உபாயம் என்பதும், அங்ஙனம் அழைக்க, எமக்கு அது என்ன என்று கேட்டுக்கொண்டே வெளிவந்து அருள்வன் என்ற பயனும் உணர்த்துதலின் இது மகாமாயா சுத்தியாதல் காண்க.

460 துடிகொள்நேரிடையாள் சுரிகுழன் மடந்தை
துணைமுலைக் கண்கடோய் சுவடு
பொடிகொள்வான் றழலிற் புள்ளிபோ லிரண்டும்
பொங்கொளி தங்குமார் பினனே
செடிகொள்வான் பொழில்சூழ் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அடிகளே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 5

இ - ள் : உடுக்கையின் நடுவை ஒத்த இடையினையுடைய வளும், சுருண்ட கூந்தலையுடையவளும், மடந்தையும் ஆகிய உமாதேவியாரின் இரண்டு தனங்களின் கண்களும் தோயப் பெற்றதால் உண்டான சுவடு, நீறுபூத்திருக்கின்ற நெருப்பின் மேல் இரண்டு புள்ளிகள்போலப் பொருந்தி மிக்க ஒளி தங்கப் பெற்ற மார்பையுடையவனே! சிறுதூறுகளையுடைய பெரிய சோலையோடு கூடிய திருப்பெருந்துறையில் செழுமையான மலர்களையுடைய குருந்தமரத்தின்கீழ் எழுந்தருளியுள்ள சிறப் பினையுடைய அடிகளே! அடியேன் ஆதரித்து அழைத்தால் அது என்ன என்று வினவி அருள்வாயாக என்றவாறு.

உமையம்மையாரின் முலைச்சுவட்டை இரண்டு புள்ளிகளைப் போலத்தாங்கும் மார்பையுடையவனே! குருந்தடிமேவிய குரு நாதா! அடியேன் விரும்பி அழைப்பின் அது என்ன என்று அருள்செய் என்பது கருத்து.

துடி - உடுக்கை. ஈண்டு அதன் நடுவை உணர்த்தியது. இறைவன் மார்பு விபூதி அணிந்து சிவந்து விளங்குதலின் நீறுபூத்த நெருப்புப்போலக் காட்சி அளிக்கிறது. அதனடுவில் தோன்றும் சுவடு தீயிடைத் தோன்றும் இருபொறிகள் போன் றன என்பார் 'சுவடு பொடிகொள் வான்தழலிற் புள்ளிபோல் இரண்டும் பொங்கு ஒளி தங்கும் மார்பினனே' என்றார்.

செடி - சிறுதூறு; நெருக்கமுமாம். வான் பொழில் - பெரிய காடு. அடிகளே என்றது ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளிய காட்சியைக் கருத்துட்கொண்டு என்க.

அழைக்கின்ற அதனாலே என் மாயை சுத்தியாயிற்று: ஆத லால் அதெந்து என அடியேன் நலம் வினவற்குத் தக்கானாயி னேன் என்றமையின் இது மகாமாயாசுத்தியாதல் காண்க.

461 துப்பனே தூயாய் தூயவெண் ணீறு
துதைந்தெழு துளங்கொளி வயிரத்
தொப்பனே யுன்னை யுள்குவார் மனத்தின்
உறுசுவை யளிக்குமா ரமுதே
செப்பமா மறைசேர் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அப்பனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 6

இ - ள் : பவளம்போல்பவனே! தூய்மையானவனே! தூய வெண்ணீறு நெருங்கியதால் விளங்குகின்ற ஒளி ஒருகாலைக்கு

ஒருகால் எழுகின்ற வயிரமணிக்கு ஒப்பானவனே! உன்னை இடைவிடாது தியானிப்பவர் மனத்தில் மிக்க சுவையைத் தரும் அரிய அமுதமே! செப்பமான வேதங்கள் சேர்ந்து விளங்குகின்ற திருப்பெருந்துறையிலே செழுமலர்க் குருந்த மரத்தடியில் மேவிய சீர் பொருந்திய அப்பனே! அடியேன் அன்புகூர்ந்து அழைத்தால் அது எந்து என்று அருள்செய்வா யாக என்றவாறு.

வேதவொலி நீங்காத திருப்பெருந்துறையில் குருந்தடி விளங்கிய குருமணியே! யான் அழைத்தால், அது என்ன என்று அன்புடன் வினவி அருள் என்பது கருத்து.

இறைவன் திருமேனியின் செம்மைநிறம் தன்சிந்தையைக் கவரத் துப்பனே என்றும், வயிரமணி மாசுபடியினும் தன்னொளி வீசுதல்போல வெண்ணீறு மேனி முழுதும் பூசப்பெற்றிருப்பி னும் மேன்மேலும் எழுகின்ற ஒளியையுடைய மேனியழகில் ஈடு பட்டு வயிரத்தொப்பனே என்றும், இடைவிடாது தியானிப்ப வர்கள் சிந்தையில் தேனும் இன்னமுதமுமாய்த் தித்தித்தலின் 'உள்குவார் மனத்தின் உறு சுவை அளிக்கும் ஆரமுதே' என்றும் விளித்து மாயாசுத்தியனுபவம் அறிவிப்பது காண்க.

துப்பனே என்பதற்குப் பழையவுரை அறிவானந்த அனு போகமே என்னும். அவ்வுரை துய்ப்பனே என்பதன்திரிபாகக் கொண்டது போலும்.

வேதங்கள் இயற்கையே செப்பமாயின;-தன்னை ஓதுவாரை யும் செப்பஞ்செய்வனவாதலின் 'செப்பமாமறை' எனப்பட்டன. பின்னரும் 'தெருளுநான்மறைசேர் திருப்பெருந்துறை' எனல் காண்க.

மாயையினீங்கிய தன்மையால் இறைவனைத் தூய்மையாக வும் அப்பனுகவும் அமுதனுகவும் நுகர்ந்து, அன்பு மீதூர்ந்து அழைத்து, அருளவேண்டுதலின் மாயாசுத்தியை உபாயமுகத் தானும் பயனுலும் உணர்த்துதல் காண்க.

462 மெய்யனே விகிர்தா மேருவே வில்லா
மேவலர் புரங்கண்மூன் றெரித்த
கையனே காலாற் காலனைக் காய்ந்த
கடுந்தழற் பிழம்பன்ன மேனிச்
செய்யனே செல்வத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
ஐயனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 7

இ - ள் : மெய்யனே! வேறு வேறு உருவங்கொள்பவனே! மேருமலையை வில்லாகக்கொண்டு, பகைவர்களின் முப்புரங்களையும் எரித்த திருக்கரங்களையுடையவனே! யமனைத் திருவடியால் உதைத்துக் கோபித்த மிக்க தழற்பிழம்பை ஒத்த சிவந்த திருமேனியையுடையவனே! செல்வங்கள் நிறைந்த திருப்பெருந்துறையிற் செழுமலர்க்குருந்தமரத்தடியில் எழுந்தருளிய சிறப்பினையுடைய ஐயனே! அடியேன் தனித்து அழைத்தால் அதெந்துவே என்று அருள்வாய் என்றவாறு.

உண்மைப் பொருளாயும், பலருக்குப் பல வடிவு தாங்கிப் பரிபாகத்திற்கேற்ப அருள்செய்பவனும் உள்ள குருநாதா! அடியேன் அழைக்க வாளா இருத்தல் கூடாது; 'அது எந்து' என்று அருள்செய்யவேண்டும் என்பது கருத்து.

மெய்யன் - உண்மைப் பொருளானவன். தோன்றி நின்று அழியும் ஏனைய பொருள்போலாது நிலைத்துநின்று எல்லாப் பொருள்களும் தோன்றி நின்றழியக் காரணமாக இருத்தலின் மெய்யனே என்றார். உலகில் இல்லாதபொய்யும் மெய்யையே நிலைக்களனாகக்கொண்டு பிறத்தலின் பொய்ப் பொருளுக்கும் மெய்யனாகிய இறைவனே பரமகாரணன் என்றவாறும்.

'மெய்யனே விகிர்தா' என ஒருதொடராக்கி, மெய்யர்க்கு மெய்யாய் வினைக்கு வினையாயினீர்; பொய்யர்க்குப் பொய்யாயினீர் என்றுரைக்கும் பழையவுரை. இது கருத்துப்பொருளேயன்றிப் பதப்பொருளாகாமை தெளிக.

ஆன்மாக்கள் தத்தம் பரிபாகத்திற்கேற்பப் பலவேறு நிலையுடையனவாதலின் அவற்றிற்கேற்ப இறைவனும் பலவேறு வடிவந்தாங்கி அருள்செய்வன்.

" ஒருவனே யிராவ ணாதி பாவக முற்றுற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாம் தன்மையுந் திரியா னாகும்
வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பும்
இருமையும்போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும்.

... ... சத்திதன் பேத மெல்லாம்
நின்மலன் றனாத் தோன்றி நிலைமையோன் றாயே நிற்பன்"

என்பவாகலின் இறைவன் பலவடிவுடன் காணப்பட்டும் நிர்விகாரியாயிருத்தலை 'விகிர்தன்' என்ற பெயரால் விளக்கினார்.

மேவலர் புரங்கள் மூன்று, மேருவே வில்லா எரித்த கையனே எனக் கூட்டுக. இறைவனுடைய கையும் காலும் உயிர்களின் பொல்லாக்குணத்தைப் போக்கி ஆட்கொண்டன

என்பதை முறையே 'எரித்த கையனே' 'காலனைக்காய்ந்தமேனிச் செய்யனே' என்பவற்றால் குறிப்பித்தவாறு. ஐயன் - ஆரியன்; குருநாதன் என்றவாறு.

மும்மலகாரியத்தை ஒடுக்கி, ஆணவவலியை அடக்கி, உரு மேனி தாங்கியும் குருமேனிகொண்டும் சிவபரம்பொருள் எழுந் தருளியதை உள்ளவாறு உணர்ந்து விளித்தலின் இத்திருப் பாடல் மகாமாயாசுத்தியாதல் காண்க.

463 முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யுஞ்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 8

இ - ள்: முத்தனே! முதல்வா! மூன்று கண்களையுடைய வனே! முனிவா! அலரும்பருவத்தரும்புகளைப் பறித்துத் திரு வடியில் இட்டு வணங்கி அன்புடன் தியானித்துத் தோத்தரிக் கும் மெய்யடியார்களுக்குப் பரகதி அருளும் திருவுள்ளமுடை யவனே! திருப்பெருந்துறையில் செழுமலர்க் குருந்த மேவிய சீர் அத்தனே! அடியேன் ஆதரித்தழைத்தால் அதெந்துவே என்று அருள்செய்க என்றவாறு.

திருவடிக்கு அன்பராகிச் சிவபூசை செய்வார்க்குச் சிவகதி அளிக்கும் திருவுள்ளமுடையாய்! அத்தனே! ஓயாமல் அழைக் கும் எனக்கு ஏனென்றுவது கேள் என்பது கருத்து.

முத்தன் - இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன்.

முதல்வன் - சங்காரகாரணனாய்ப் புனருற்பவகாலத்து மீள வும் தம்மிடத்தே யாவையும் யாவரும் தோன்றநிற்கும் முதற் பொருளானவன்.

முக்கணன் - உலகிற்கு ஒளிதரும் பொருளாகிய சோம சூரிய அக்கினிகளைத் திருக்கண்களாகக்கொண்டவன்.

முனிவன் - இயங்குவனவான உயிர்கள் அனைத்தும் மலக் கட்டினின்று விடுபட்டு வீடுபேறடையட்டுமென்ற தியானமுடை யவன். மனனசீலன் முனிவன் என்க. முனிதல் - வெறுத்தல்.

முனிவன் பாவங்களில் வெறுப்புடையவன் என்பாரும் உளர். முனிவிலான் என்ற இறையியல்பிற்கு முரணுதலால் அவ்வுரை அமையாது என்க.

மொட்டு - அரும்பு. மொட்டறு மலர் - நன்றாக விரியாத அலரும் பருவத்துள்ள அரும்பு என்க. அதுவே வண்டுமொய் யாததாய், தேனொடு கூடியதாய் மணங்குன்றாது இருக்குமாத லின் அவைகளே இறைவன் பூசனைக்குரியன. அடியார்கள் அவற்றைப் பறித்துச் சாத்தி வணங்கித் தியானிப்பர். அவர் கட்கு இறைவன் பரகதி அருளுவர் என்பது ' நிலைபெறுமாறு எண்ணுதியேல்' என்ற திருத்தாண்டகத்திலும் குறிக்கப்பெறு தல் காண்க. சித்தன் - திருவுள்ளம் உடையான்.

இத்திருப்பாடலும் சீர் பரவுதலும், சிவபூசை செய்தலும், அன்புகொண்டு அரற்றுதலுமாகிய உபாயத்தில் தவறாது நின்று மாயாசுத்திபெற்றதால், சிவனே அது என்ன என்று அன்புடன் மறுமொழி தரவேண்டுமென்றலின் இது மகாமாயாசுத்தியாதல் காண்க.

464 மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி
மறுமையோ டிம்மையுங் கெடுத்த
பொருளனே புனிதா பொங்குவா ளரவம்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்
தெருளுநான் மறைசேர் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருளனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 9

இ - ள்: மயக்க உணர்வினனாகிய அடியேன் மனத்தை மயக்கநீங்கத் திருவருணோக்கம்புரிந்து, மறுமையும் இம்மையு மாகிய இருபிறப்பினையும் இல்லையாக்கிய மெய்ப்பொருளான வனே! புனிதா! ஒளிமிகுந்த பாம்புகளும், கங்கைநீரும் தங்கப் பெற்ற செஞ்சடையை உடையவனே! தெளிவான நான்கு வேதங்களும்பொருந்திய திருப்பெருந்துறையிலே செழுமலர்க் குருந்தமேவிய சீரிய அருளுடையவனே! அடியேன் ஆதரித்து அழைத்தால் அது எந்து என்று அருள்செய்வாயாக என்ற வாறு.

மலச்சேர்க்கையால் மயங்கிய என்னை மயக்கறுத்து, இரு மைக்கும் ஏதுவாகிய வினைகளையும் அழித்து ஆட்கொண்ட மெய்ப்பொருளே! அருளே! அடியேன் அழைத்தால் வாளா இருந்துவிடாது அதெந்து என அருள் என்பது கருத்து.

மருள் - மயக்கம்; அறியாமை. இது ஆணவத்தின் காரியம். அதனை அநாதியேயுடையேன் என்பார் 'மருளனேன்' என்றார். மயக்கு அற நோக்கி - பேயினால் மால்கொண்டான் ஒருவனை முருகனைத் தியானிக்கும் மந்திரவாதி ஒருவன் தியானபாவனையோடு முருகனாகவே இருந்து அவனை நோக்கப் பேய்மயக்கம் அகல்வதுபோல என் ஆணவமல வினைவாகிய அறியாமை மயக்கம் நீங்கச் சிவன் திருவருணோக்கம் பாலித்தான் என்பார் 'மயக்கற நோக்கி' என்றார்.

மறுமை இம்மை என்பன ஆகுபெயர்களாக இருமைக்கும் ஏதுவாகிய வினைகளையுணர்த்தின. இருமையுங்கெடுத்ததென்றது இம்மையில் இனி மீட்டும் மனிதனுகப் பிறத்தற்கும் மறுமையில் தத்தம் புண்ணியபாவங்கட்கு ஏற்பத் தேவராயும் நரகர் முதலியோராயும் பிறத்தற்கும் ஏதுவாகிய வினைகளைக்கெடுத்த மெய்ப்பொருளே என்பார் 'மறுமையோடு இம்மையும் கெடுத்த பொருளனே' என்றார்.

சீறுகின்ற பாம்பும், சீறுகின்ற மிடுக்கோடுகூடிய கங்கையும் தத்தம் வீறு ஒடுங்கித் தங்கிய சடையாய் என்றது உயிர்களின் செருக்கு அடக்கி ஆட்கொள்ளும் திருவருட்குறிப்புடையான் என்பது உணர்த்தியவாறும்.

'அருளது மேனியாகும் அரன்றனக்கு' ஆதலின் 'அருளனே' என்றருளினர்.

இவ்வண்ணம் என்னைப் பற்றிநின்ற மலங்களை வாட்டி, மாயையைப் போக்கி, வினைகளைக் கெடுத்து ஆட்கொண்டான் இறைவன் என உடம்பொடுபுணர்த்தலாக மகாமாயையைச் சுத்திசெய்தமையையும், அதனால் தான் பரிபாகம்பெற்று ஆதரித்தழைப்பதையும், அருள்செய்க என வேண்டுதலையும் முறையே உணர்த்துதலின் இத்திருப்பாடல் அதிகாரப் பொருளுக்கு இயைபுடைத்தாதல் அறிக.

465 திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
இருந்தவா றெண்ணி யேசரு நினைந்திட்
டென்னுடை யெம்பிரா னென்றென்
றருந்தவா நினைந்தே ஆதரித் தழைத்தால்
அலைகடல் அதனுளே நின்று
பொருந்தவா கயிலை புகுநெறி யிதுகாண்
போதரா யென்றரு ளாயே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள் : திருந்திய நீண்ட சோலைகள்சூழ்ந்த திருப்பெருந்துறையிலே, செழுமையான மலர்கள் நிறைந்த குருந்தமரத்தின் நிழலிலே விரும்பி எழுந்தருளியுள்ள சிறப்பே வடிவான சிவ பரம்பொருள் இருந்தவாற்றை எண்ணி, ஏசறுது நினைத்து, என்னுடைய எம்பிரானே! அரிய தவத்தை உடையவனே! என்று நினைந்து அன்புகொண்டழைத்தால் அலைகளோடுகூடிய பிறவிக்கடலிலிருந்து என்னைப் பொருந்த வா! திருக்கயிலை மலைக்கண் புகும்வழியிது இதனைக் காண்! வருவாயாக என்று அருள்செய் என்றவாறு.

திருப்பெருந்துறையில் குருநாதனாக எழுந்தருளிக் காட்சி வழங்கியதையே, முன்போலப் பிரிந்து வருந்தாதபடி, நன்கு தியானித்து, ஆதரித்து அழைத்தால், அருந்தவா! நீ, பிறவிக் கடலிலிருந்து என்னையடைய வருக, இதுதான் கயிலை புகும் நெறி வருக என்றருள்செய் என வேண்டுகின்றார்.

திருந்துதிருப்பெருந்துறை வார்பொழில்சூழ் திருப்பெருந்துறை எனக் கூட்டுக. மாணிக்கவாசகப் பெருமானுக்காகப் பரசிவம் தாமே குருநாதனாக எழுந்தருளிவந்து அடிகளாரைத் திருத்தியுய்யக்கொள்வதான உபாயத்தான் உலகமே திருந்தச் செய்த திருத்தலமாதலின் திருந்துதிருப்பெருந்துறை என்றும், பிறவிவெப்பம் தாங்காது வினைச்சுடர் கொளுத்த அஞ்சிவந்தார்க்கு அடைக்கலத்தானமாய்த் தட்பம் செய்தலின் வார்பொழில்சூழ் திருப்பெருந்துறை என்றும், பிறவிக்கடலினின்றும் திருவடியாகிய சிவநகர்சேர உதவும் பெருந்துறைபோறலின் திருப்பெருந்துறை என்றும் அருளிச்செய்தவாறு காண்க.

சீர் - புகழ். ஈண்டு ஆகுபெயராகப் புகழே வடிவான குருமணியை உணர்த்தியது. சிறப்பே வடிவான சிவம், மெய்யடியார்களை உய்யக்கொள்வதற்காக உபதேச குருமூர்த்தியாகச் சின்முத்திரைக்கையராக, இடதுகாலைமடக்கி, வலதுகாலை முயலகன்மீதூன்றி, இருகண்களும் புருவநடுவிற் பொருந்த அருள் வழியும்முகத்தோடும் அமைதியே வடிவாக இருந்தபடி எண்ணி என்பார் 'சீர் இருந்தவாறு எண்ணி' என்றார்.

ஏசறுதல் - பெற்றதை இழந்து வருந்துதல். ஏசறுநினைந்திட்டு - முன்போலப் பெற்ற குருதரிசனத்தை இழந்து வருந்தாமல் சிக்கெனப்பற்றித் தியானித்து என்க.

பொதுவகையான உரிமை தோன்ற எம்பிரான் என்றும், தமக்கே சிறப்புரிமை தோன்ற என்னுடை எம்பிரான் என்றும்

பலகாலும் எண்ணி அழைக்கின்றேன் என்பார் 'என்னுடை எம்பிரான் என்று என்று எண்ணி ஆதரித்து அழைத்தால்' என்றும் கூறினர். அருந்தவா என்றது ஆறுகளனைத்தும் கடலை நோக்கிச் செல்வதுபோல, உலகர்செய்யும் தவமனைத்தும் இறைவனையே சார்ந்தும் அத்தகைய தவமே வடிவாகத் தவப்பயனைத் தாழாது அளிப்பவர் சிவபெருமானே என்பார் "அரும் தவா' என்றார்.

அலைகடல் - அலைகளோடுகூடிய கடல்; அதாவது பிறவிக் கடல். அது - ஒன்றன்பின் ஒன்றாக இடையறாதுவரும் துன்ப இன்ப வடிவான வினைகள். கடல் பிறவி. அதனுட்கிடந்து உழலும் மனிதன் ஆன்மாவாகிய அடியேன். அடியேனைப் பார்த்துத் தேவரீர் இக்கடலுள் நின்று என்னை வந்து அடைவதற்காக வா! இதுதான் கயிலைபுகும் வாயில்; வா! வா! என்று அருள் செய் என வேண்டியவாற்றை உணர்த்துவன பின் இரண்டடிகளும்.

இங்ஙனம் மாயைகளைச் சுட்டெரித்துத் தூய்மையாய்த் திருக்கயிலை புகும்நெறி காட்டி ஆட்கொள்ள வேண்டுதலால் இப்பாடலும் மகாமாயாசுத்தியாதல் காண்க.

இங்ஙனம் இப்பத்துப் பாட்டானும், செல்வம் சேர்ந்ததும், திருத்தமாம் பொய்கையுடன் கூடியதும், நான்மறை சேர்ந்ததும், பொழில் சூழ்ந்ததும், திருந்தியதுமாகிய திருப்பெருந்துறையிலே, செழுமலரோடு கூடிய குருந்தமரத்தடியிலே குடிகொண்ட சீராக விளங்கும் சிவபரம்பொருளைப் பலவாறு துதித்து ஆதரித்து அழைத்தால், பிறவிக்கடலிற் கிடந்து அலையாதே அப்பா அணுகவா; இதுதான் திருக்கயிலைக்குப் புகும் வழி; விரைந்து போதருக என்று அருள்செய் என வேண்டுகின்றாரென்ற பதிகப்பொழிப்புக் காண்க.

# 30. திருக்கழுக்குன்றப்பதிகம்

[சற்குருதரிசனம்]

அடிகளார் திருவண்ணுமலை, காஞ்சிபுரம் முதலிய பலதலங்களை வணங்கிக்கொண்டு திருக்கழுக்குன்றத்திற்கு எழுந்தருளினார்கள். அங்கே பெருமான் குருவடிவாக எழுந்தருளிக் காட்சி வழங்க அதனைக்கண்டு மகிழ்ந்து காட்சிப் பத்தாகிய இதனை அருளிச்செய்தார்கள்.

இது திருக்கழுக்குன்றத்தைப்பற்றிக் கூறுவதால் திருக்கழுக் குன்றப்பதிகம் எனவும், திருக்கழுக்குன்றம் எனவும் சில பிரதிகளில் வழங்கப்பெறும். இது ஏனைய பதிகங்கள் போலப் பொருளாலும் தன்மையாலும் பெயர்பெருது, பாடிய தலத்தாற் பெற்றது.

பழையவுரையில் இப்பதிகக்கருத்தாகக் "காட்சிப் பத்தாகும் திருக்கழுக் குன்றம், மாட்சிமை தருசற் குருதரி சனமாம்" என்ற அகத்தியச் சூத்திரம் எடுத்துக்காட்டப்பெறுகின்றது. முற்பதிக அநுபூதியிற்கண்ட இன்பம் திருவடியன்றி வேறு இன்மையால், இப் பதிகத்து அதுவே தானுந்தன்பால், எப்பதம், எவ்வுலகு, எவ்வுயிர் எல்லாம் அப்படியே கண்ட திருவடிஞான அன்பு உல்லாச அநுபூதி யென்பது அதன் விளக்கம். இதனல் அடிகள் முதன்முதற்கண்ட குருவடிவ அநுபூதியே இங்கும் கிடைக்கப்பெற்று, அவ்வானந்தத் தால் அருளிச் செய்யப்பெற்ற பதிகம் இது என்பது போதரும்.

பழைய குறிப்பு குருதரிசனம்; என்பது பசுத்துவம் கெட்ட இடம் என்று கூறும். பசுத்தன்மை நீங்கப்பெற்று, இருவினை யொப்பும் மலபரிபாகமும் பெறத்தக்க பரிபாகநிலையிலேயே குருதரி சனம் கிட்டும் என்பதாம். மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொழுதவர்க்கோர் வார்த்தைசொலச் சற்குரு வாய்க்கும் என்பது பராபரக்கண்ணி.

பழையபுராணம், "நீதிமறை பரவு திருப்பெருந்துறையிற் குரு வடிவாய் நிகழ்ந்த கோலம், காதலொடும் காட்டினையே யெனுங் களிப்புப் பகர்தல் திருக்கழுக்குன்றுமே" என்பது. இவற்ருல், இப் பதிகத்தின் பெயர் முதலில் காட்சிப் பத்தெனவே வழங்கியிருக்க லாம் என்பதும், பழையபுராணம் இயற்றிய ஆசிரியர் காலத்தின் முன்பே திருக்கழுக்குன்றம் என்ற வழக்கு வந்துவிட்டது என்பதும் அறியப்படும்.

முற்பதிகமாகிய அருட்பத்தில், அது என்ன என்று கேட்க வாவது செய் எனக் கேட்டல் ஒன்றை விரும்பிய அடிகளார், கழுக் குன்றம் வந்தவுடன் பழைய குருதரிசனம் மீளவும் கிடைத்தமை யால், கணக்கிலாத் திருக்கோலம் காட்டினாய், கலங்காமலே காட்டி னாய், கரைஞ்ஞத திருக்கோலம் காட்டினாய் என்பன முதலாகக் கண்டதை வியந்து கூறுதலின் பதிகத்தொடர்பு இனிது விளங்கும்.

இதுவும் பத்துப் பாடல்களைக் கொண்டதாக முன்னர் இருந் திருத்தல்வேண்டும். இன்று ஏழு திருப்பாடல்களே காணப்படு கின்றன.

## எழுசீர் ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

466 *பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு*
*மா னுன் னாமங்கள் பேசுவார்க்*
*கிணக்கி லாததோ ரின்ப மேவருந்*
*துன்ப மேதுடைத் தெம்பிரான்*
*உணக்கி லாததோர் வித்து மேல்விளை*
*யாம லென்வினை யொத்தபின்*
*கணக்கி லாத்திருக் கோல நீவந்து*
*காட்டி னாய்கழுக் குன்றிலே.* 1

இ - ள் : மாறுபாடில்லாத திருப்பெருந்துறைக்கண் விளங் கும் பெருமானே! உன் திருநாமங்களையே பேசும் மெய்யன்பர் களுக்கு உளவாம் துன்பங்களை அறவே துடைத்து, அதனால் விளையும் இணையற்ற இன்பவடிவாக இருப்பவனே! நீ உலராத விதை மேல் முளையாதவண்ணம் என் இருவினைகளும் ஒத்த பின்பு திருக்கழுக்குன்றமாகிய தலத்திலே எல்லையுள் அடங் காத அழகிய குருமேனியைக் காட்டினாய் என்றவாறு.

மெய்யன்பர்களின் துன்பத்தைத் துடைத்து விளங்கும் இன்பமே! அடியேற்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் வந் துற்ற காலத்து, அடியேனுடைய அறிவினெல்லையிலகப்படாத அழகிய வடிவை அடியேற்குக் காட்டினாய் என்பது கருத்து.

பிணக்கு - மாறுபாடு. பிணக்கிலாமையைப் பெருமானுக்குக் கூட்டுக. நல்லார் பொல்லார் என்ற வேறுபாடு நோக்காது எல்லாருக்கும் ஒப்பப் பெய்யும் மாரிபோல அன்பர்க்கும் வன் பர்க்கும் அவரவர் வினைக்குத்தக்க அருள்மாரி பெய்பவன் இறைவனாதலின் 'பிணக்கிலாத பெருமான்' என்றார்.

உன் நாமங்கள் எனப் பன்மையாற் கூறியதால் ஆயிரம் நாமங்களையும் கொள்க. பேசுவார்க்கு வருந்துன்பமே துடைத் தருளும் இணக்கு இலாதது ஓர் இன்பமே என ஒருசொல் வருவித்து இயைத்துப் பொருள்கொள்க. நாமங்கள் பேசுவார்-வாழ்வினும் தாழ்வினும் நினைப்பினும் மறப்பினும் திருப்பெயர் களையே சொல்லும் மெய்யடியார். இணக்கு இலாதது ஓர் இன்பமே - ஒப்பற்ற ஓர் இன்புமே. இறைவன் வடிவெல்லாம் இன்பமேயாதலின் இங்ஙனம் கூறினர்.

வித்து என்றது பிறவியை. அதற்கு ஈரம் அவாவும் அதனால் விளையும் இருவினைகளும். அவாக்கெட வினை கெடும். வினை உலரப் பிறவிவித்து முளையாதாம். ஆதலின் 'உணக்கு இலாத தோர் வித்து மேல் விளையாமல்' என்றார்.

வினை ஒத்தபின் - நுகர்ச்சிக்கண் உவர்ப்பு உவப்பு இன்றி இன்பத் துன்பங்களைச் சமபுத்திபண்ணும் தன்மை வந்தபின் என்பது. இருவினையொப்பின் இலக்கணம் மேலேயுரைத்தாம். சைவநூல்மரபுவழி வாராதார் சிலர் வினையொப்பாவது பிறர்க் குரியராக வாழ்தல்; அங்ஙனம் வாழ்வார்க்கே உலகமும் இறை யும் உண்டு; அவர்கட்கே யான் எனது என்ற செருக்கற்ற நின்மலநிலையுண்டாம்; அந்நிலையே இருவினை ஒப்பு என்றறிக என்று தாம் ஓர் இலக்கணம் படைத்திட்டுக்கொண்டு 'இவ் வுண்மையறியாதார் வடையையுண்ணாது தொளையை எண்ணி வறிதுபடுவர்' எனப் பண்டையோரைப் பழிக்கவும் செய்வர்.

பிறர்க்குரியராக வாழ்தல் ஒன்றே இருவினை ஒப்பாகாது. நல்லதன் நலனையும் தீயதன் தீமையையும் நுகருங்கால் விருப்பு வெறுப்பின்றி நுகர்ந்து, ஓடும்செம்பொனும் ஒக்கவேநோக்கும் திருவுடையாரே இருவினை ஒப்புப்பெற்றவராவர் என்னும் மரபு வழி நின்று, தீ தன்பொருட்டுத் தீண்டினும், பிறர்பொருட்டுத் தீண்டினும் சுடுதற்றொழிலிற் றப்பாதவாறுபோல, வினை பிறர் பொருட்டு வாழினும் தம்பயனை ஊட்டாது கழியாது. ஊட்டுங் கால் நுகர்ச்சி உண்டாகாதிராது. அதனால் வினையொப்பு வந்த பாடில்லையாம். ஆதலால் மாபாடியத்துத் தடை விடைகளான் வினையொப்பைப்பற்றி ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகள் தந்த விளக்கங்கொண்டு தெளிக.

கணக்கிலாத் திருக்கோலம்: அடியேனுடைய அறிவின் எல்லையில் இப்படி இருந்தது என்று அளவுபடுத்தி அறியமுடி யாத அழகிய வடிவு என்று காட்டக் கண்டு கூறியதாம் என்க.

இப்பத்தில் காட்டினாய் கழுக்குன்றிலே என இறைவன் காட்டிய கோலத்தின் இயல்பு கூறுவதால் சற்குருதரிசனமாயி னமை காண்க.

467 பிட்டு நேர்பட மண்சு மந்த
பெருந்து றைப்பெரும் பித்தனே
சட்ட நேர்பட வந்தி லாத
சழக்க னேனுனைச் சார்ந்திலேன்
சிட்ட னேசிவ லோக னேசிறு
நாயி னுங்கடை யாயவெங்
கட்ட னேனையும் ஆட்கொள் வான்வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 2

இ - ள் : பிட்டுக்காகத் தலையில் மண்சுமந்த திருப்பெருந் துறையிலுள்ள பித்தனே! ஒழுக்கம் உடையவனே! சிவ லோகனே! உடல் கிடைக்கவும் வராத வஞ்சகனாகிய யான் உன்னை அடைந்திலேன்; சிறிய நாயினுங்கீழ்ப்பட்ட கொடிய துன்பவடிவான என்னையும் ஆண்டுகொள்வதற்காக எழுந் தருளிவந்து நின் திருவுருவைக் கழுக்குன்றிலே காட்டினாய் என்றவாறு.

நின்னைச் சார்ந்து உய்வதற்காகத் தனு முதலியவற்றைத் தந்தும் சழக்கனாகிய யான் நின்னைச் சாரேன்; அஃதறிந்து அடியேனை ஆண்டுகொள்ளத் திருக்கழுக்குன்றத்திற்கு வந்து குருமேனி காட்டினாய் என்பது கருத்து.

பித்தனே! சிட்டனே! சிவலோகனே! சழக்கனேன் சார்ந் திலேன்; கட்டனேனையும் ஆட்சிகொள்வான் வந்து கழுக் குன்றிலே மேனியைக் காட்டினாய் எனக் கூட்டுக.

பிட்டு நேர்பட மண் சுமந்த - பிட்டுக்குச் சமமாக மண் சுமந்த. வந்தி தரும் பிட்டுக்காக மண் சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்ட வரலாற்றைத் தெரிவிப்பது இப் பகுதி.

சிறிய ஊதியத்திற்காகத் தன்பெருமைக்கு ஏலாத சிறு தொழிலைச் செய்தமையின் 'பெரும் பித்தன்' என்றார்.

சட்டம் - உடல். சிவாகமக் கட்டளைகள் என்னும் பழைய வுரை. இவ்வுரை சட்டம் என்பது விதியை உணர்த்துவதாகக் கொண்டு, விதிகளையுணர்த்தும் சிவாகமங்களைத் தெரிவிக்கும்

என்கிறது. இச்சொல் இப்பொருளில் மிகப்பழைய இலக்கியங் களிலும், அடிகளார்காலத்துப் பிறநூல்களிலும் வழக்கின்மை கொண்டு உடல் எனப் பொருள்கோடலே சிறந்ததாம். சிலர் சட்டம் - ஓலை எனப் பொருள்கொண்டு, அது ஆகுபெயராய் உடம்புக்குக் காரணமாய வினைகளை உணர்த்திற்று என்பர்.

சட்டம் நேர்பட - உடல் கிடைக்கவும் என ஒரும்மை வரு வித்து, என்வினைப்போகங்களைத் தொலைத்துப் பரிபாகம் பெற உடலம் கிடைக்கவும், அதனால் உய்ந்து உன்னிடம் வந்திலாத வஞ்சனேன் என உரைக்க.

'சட்டோ நினைக்க மனத்தமுதாம் சங்கரனை' என்புழிப்போல சட்ட - விரைவாக எனக்கொண்டு, விரைவாக உன்னெதிர்ப் பட வந்திலாத சழக்கனேன் எனலுமாம். சிலர் வினையொப்பாக வந்திலாத யான் என் உரைப்பர். 'உனைச் சார்ந்திலேன்' என்றது, சார்புணர்ந்து சார்புகெட ஒழுகிலேன் என்றவாறும்.

சிட்டன் - சிஷ்டன் என்பதன் றிரிபு. ஒழுக்கமே உருவான வன். எல்லாரையும் ஒழுக்கத்து நிறுத்துபவன் எனலுமாம்.

கட்டன் - கஷ்டன்; துன்பமே வடிவானவன். துன்ப வடி வான என்னையும் ஆளவந்து கழுக்குன்றிலே இன்பவுருவைக் காட்டி உய்வித்தாய் என்றதால் இத்திருப்பாடல் சற்குருதரிசன மாயிற்று என்க.

468 மலங்கி னேன்கண்ணி னீரை மாற்றி
மலங்கெ டுத்தபெ ருந்துறை
விலங்கி னேன்வினைக் கேட னேனினி
மேல்வி ளைவத றிந்திலேன்
இலங்கு கின்றநின் சேவ டிகளி
ரண்டும் வைப்பிட மின்றியே
கலங்கி னேன்கலங் காம லேவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 3

இ - ள் : கலங்கிய எனது கண்ணீரைத் துடைத்து, என் அறியாமைக்கு ஏதுவாகிய ஆணவமலத்தையும் வலியொடுக் கிய திருப்பெருந்துறையை விட்டு விலகினேன்; வினைகளாற் கெடுபவனாகிய யான், இனி, மேலே விளையப்போவதை அறி யேன்; விளங்குகின்ற நின் சேவடிகள் இரண்டும் வைத்த இடத்தில் இல்லாமற்போகக் கலங்கினேன்; அங்ஙனம் நான் இனியும் கலங்காமல் வந்து கழுக்குன்றிலே திருவடிதரிசனம் தந்தருளினாய் என்றவாறு.

கலக்கமுற்ற என் கண்ணீரைத்துடைத்து அறியாமையைப் போக்கி அறிவகற்றிய பெருந்துறையை விலகி, மேல் விளைவ தறியாத வினைக்கேடனாகிய என்னைக் கலங்காமல் காப்பாற்று வதற்குமட்டும் திருக்கழுக்குன்றிலே வந்து குருவடிவங்காட்டித் திருவடிதந்து ஆண்டாய் என்பது கருத்து.

மலங்கினேன் கலங்கினேன் என்பன ஒருபொருளவாயி னும் மலங்காரணமாக விளைந்த கலக்கம் மலங்குதலும், அறி யாமை காரணமாக விளைந்த குழப்பம் கலக்கமாகவும் கொள்க. மலங்கினேனது கண்ணீரையென வினையாலணையும்பெயராகக் கொள்க. கண்ணின்நீரை என இன்சாரியை தவிர்வழி வந்தது செய்யுளின்பங்கருதி. மலங்கெடுத்தமையால் மலங்கிய என் கண் ணீர் மாற்றினார் என்றது காண்க. குறையிரந்து அழுகின்ற குழந்தையைத் தாய் வாரி எடுத்து மார்போடு அணைத்துக் கண் ணீரைத் துடைத்து, உடம்பழுக்கையும், முகத்தழுக்கையும் போக்குவதுபோல, தாயாகிய பெருமானும் திருப்பெருந்துறை யில் குருவாக வந்து செய்தார் என்றவாறும். அவர் செயலை இடத்திற்கேற்றி மலங்கெடுத்த பெருந்துறையென்றது, அவர் மறைந்த பின்பும் சிவனுபகாரஞ்செய்ய இடமாக இருந்த அப் பெருந்துறையை விட்டுப் பிரியாது இருக்கவேண்டிய நான் பிரிந்தேன்; விலங்கினேன் என்று மனம் உளைவார் உரை யென்க.

வினைக்கேடனேன் - வினைகளாற் கேடுடைய யான். மேல் விளைவது - மேல் விளைய இருப்பனவாகிய வினைப்பயன்களை. அவற்றை அறிந்திலேன் என்கின்றார்.

திருநீலகண்டர் ஓடு வைத்தவிடத்தில் இன்றிக் கலங்கியது போலக் குருந்தடியிற் குருவாக எழுந்தருளி ஆண்டபொழுது நின் திருவடிகளை என் மனத்து வைப்பாக வைத்தாய்; அவ் விடத்து அவை நினது வைச்சு வாங்கும் வித்தையால் இல்லா மற்போகவே நான் கலங்கினேன்; அங்ஙனம் கலங்காமல்வந்து மீளவும் கழுக்குன்றிலே காட்டினாய் என்க. வைப்பு இடம் இன்றி - வைப்பாக வைத்த இடத்து இன்றி எனச் சொற்பொருள் கொள்க.

இப்பாட்டிற்குச் சிலர், பெருந்துறை விலங்கினேனும் வினைக் கேடனேனும், அறிந்திலேனும், கலங்கினேனும், மலங்கினேனு மாகிய எனது கண்ணீரை மாற்றி, கலங்காமலே கழுக்குன்றிலே காட்டினாய் எனக் கூட்டி உரைப்பர். விலங்கினேன் - வாராது பின்னிட்டேன்; வினைக்கேடனேன் - தீவினையாற்கேடுடையேன்;

மலங்கினேன் - மனங்குழம்பினேன்; கலங்கினேன் - அஞ்சினேன் என்பன அவர்கொள்ளும் உரை.

மலங்கினேன் கண்ணினீரை மாற்றி மலங்கெடுத்த பெருந் துறை என்பதற்கு இறைவன் அன்பரொடு கயிலை செல்ல அதனை அறிந்த அடிகள் வருந்தி அழுதமையாலாகிய கண் ணீரை மாற்றித் துயரினைக் கெடுத்த பெருந்துறை என யாரோ உரை கூறியிருப்பதாக மனத்துட்கொண்டு, உணர்வு கலங்கில் இறைவன் திருவடிக்காட்சி பெறப்படாது ஆதலின் இவ்வுரை நிலைநிற்பதொன்றன்றென விடுக்க என மறுப்பர்.

மலத்திற் கட்டுண்டு மலங்கியகாலத்து, கலாதிகளைத் தந்து சிறிதே அறிவு விளங்கச்செய்து, ஐயோ பேரின்பத்து இருக்க வேண்டிய யான் இம்மலத்தில் சிக்குண்டேனே என்று உயிர் உணர்ந்து அழத்தொடங்கியபோது இறைவன் கண்ணீரைத் துடைத்து மலத்தையும் கெடுத்துப் பெருந்துறைக்கண் செலுத் துவன் என்றலே சைவநூல்மரபாதல் காண்க.

மீண்டும் குருமேனிதாங்கித் திருவடி காட்டியதைக் கூறுத லால் சற்குருதரிசனம் உணர்த்தியதாம் என்க.

469 பூணொ ணாததொ ரன்பு பூண்டு
பொருந்தி நாடொறும் போற்றவும்
நாணொ ணாததோர் நாண மெய்தி
நடுக்க டலுள ழுந்தி நான்
பேணொ ணாதபெ ருந்து றைப்பெருந்
தோணி பற்றி யுகைத்தலும்
காணொ ணாத்திருக் கோலநீ வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 4

இ - ள்: பிறரால் மேற்கொள்ளுதற்கு இயலாத ஒப்பற்ற அன்பினை அணிந்து, நின் திருவடிக்கண் பொருந்தி, நாடோ றும் நான் வணங்கவும், நாணத்தகாத பெரு நாணத்தை அடைந்து நடுக்கடலுள் நான் மூழ்கி, வேறு யாராலும் பற்ற இயலாத திருப்பெருந்துறைக்கண்ணதாகிய பெருந்தோணி யைப்பற்றிச் செலுத்துதலும், நீ வந்து, கழுக்குன்றிலே வேறு எவராலும் காண இயலாத அழகிய வடிவத்தைக் காட்டினாய் என்றவாறு.

நான் பேரன்புபூண்டு நாடோறும் வணங்க நாணத்தகாத நாணம் எய்தி நடுக்கடலுள் வீழ்ந்து, (பின்னர் அறிவு வந்து) பிறர் பற்ற இயலாத பெருந்துறையிலே பெருந்தோணியாகிய

திருவடியைப் பற்றி அதன்கண்ணே செலுத்துதலும் யாரும் காணக்கிடைக்காத வடிவைக் கழுக்குன்றிலே காட்டியருளினை என்பது கருத்து.

எத்தேவர்கட்கும் கிடைக்கமாட்டாத பேரன்பை நின் சீரடியார் பூண்டு, அபேத அத்துவிதமாக நிஷ்டைகூடித் துதித்து அன்புருவான அடிமையாய் நிற்ப, அவை கண்டு நீங்காத வெட்கமுடையவனாய், திருவடி மறந்து, பிறவிக்கடலிலே மத்தியில் அழுந்தியகாலம், சிவஞானமில்லாதார் வழிபடமாட்டாத திருப்பெருந்துறை வெள்ளத்தே தோன்றிய என் உள்ளத்தொளியே திருத்தோணியாக எழுந்தருளியதை அன்பாற் பற்றி, அறிவுருவாக வெளிப்படுங்காலம் ஒருவராலும் காணொணாத திருமேனியைக் கழுக்குன்றிலேகாட்டினாய் என்பது பழைய வுரை. இதனால் அடியார் அன்புபூண்டு போற்ற, அடிகள் நாணி, பிறவியாகிற நடுக்கடலுள் அழுந்தி, பெருந்துறையிலே சிவஞானத்தோணி பற்றிச் செலுத்தி, யாரும் காண இயலாத திருவுருவைக் கழுக்குன்றிலே காட்டினாய் கண்டேன் என்பது கருத்தாதல் பெறப்படும்.

வேறுரை : பிறிதொன்றன்மேல் வைத்தற்கு உரியதல்லாத தனிப்பட்ட ஓர் அன்பை நின்னிடம் வைத்து, அதற்குவேண்டிய செயல்களிலே பொருந்தி நாடோறும் போற்றி வரவும், (நீ அடியாரனைவரையும் சோதியுட் கலப்பித்தாய் என்றதைக் கேட்டு) பிறிதொன்றற்கும் நாணவொண்ணாத பெருநாணம் அடைந்து, துன்பக்கடல் நடுவேயழுந்தி, தன்னையடைந்தார்க்குப் பிறிதொன்றையும் பேணவைக்காத திருப்பெருந்துறைக்குரிய திருவடியாகிய தோணியைப் பற்றிச் செலுத்துதலும், அது கழுக்குன்றாகிய கரையிலே சேர்க்க, தன்னைக் கண்டார் வேறெதனையுங்காண ஒண்ணாத நின் கோலத்தைக் காட்டினாய் என்பது.

இதன்கருத்து, பேரன்புபூண்ட என்னை விட்டுச்சென்றதால் பெருநாணெய்தித் துன்பக்கடலுள் விழுந்த நான் திருவடித் தோணிபற்றி, அதனை ஆதாரமாகக்கொண்டு செலுத்துதலும் கழுக்குன்றமாகிய கரையைச் சேர்த்தது; அங்கே கோலத்தைக் காட்டினாய் என்பது. இதில், துன்பம் கடலாகவும் தோணி திருவடியாகவும் கழுக்குன்று கரையாகவும் உருவகிக்கப் பெற்றன.

மற்றொருவர், பூண் ஒணாதது - அடையப்பெற ஒண்ணாதது, காண ஒண்ணாதது - மதிக்க ஒண்ணாதது, பேண ஒணாத - விரும்புதற்கரிய என உரைப்பர். இவ்வுரைகளின் தரமறிந்து

நயங்கொண்டு தெளிக. இவ்வுரைகளைக் கண்டறிந்ததன் பயனாக யாம் கருதுவன இவை:

வழிச் சென்றவனுக்குப் பொற்கிழி எதிர்ப்பட்டாற்போல யாரும் பூணமுடியாத அத்துணைப் பெரிய அன்பு எனக்குக் கிடைத்தது; அதனால் நான் திருவடிச் சார்பு பெற்றேன்; நாடோறும் போற்றிப் பூசிக்கவேண்டும்; அடியேன் அதற்கு நாணினேன்; நாணத்தக்கவற்றிற்கு நாணுதலும், நாண வேண்டாதவற்றிற்கு நாணாது செய்தலும் என் கடமையாகவும் அறிவுடைமையாகவும், நான் அன்பு கிடைத்தும் திருவடிச் சார்பு கிடைத்தும் நாடோறும் போற்ற நாணினேன்; அதனால் பிறவிக்கடலுள் அழுந்தினேன்; அழுந்தித் தவிக்கும்போது திருப்பெருந்துறைப் பெருந்தோணி ஒன்று கிடைத்தது; அதனைப் பற்றிச் செலுத்தினேன்; கழுக்குன்றிலே காணக் கிடைக்காத திருக்கோலம் கண்டேன் என்று வியந்துரைக்கின்றார் அடிகள் என்பதாம். போற்றவும் நாணம் எய்தி எனவும், நாண ஒண்ணாததோர் நாணம் எனவும் கூட்டிப் பொருள் கொள்க. நாண ஒண்ணாததோர் நாணமாவது திருநீறும் கண்டிகையும் பூணக்கூசுதலும், சிவனடியாரையும் சிவனையும் சிவாலயத்தையும் விழுந்து வணங்கக் கூசுதலும், தாய் தந்தை தமையன் அரசன் குரு இவர்களை வணங்கக் கூசுதலும் போல்வன. அப்படி இறைவனிடம் அன்புபூண்டும் நாடொறும் போற்றவும் நாணம் எய்தி என்றார் என்க.

அங்ஙனம் நாணவேண்டாததற்கு நாணியதால் நடுக்கடலில் விழநேர்ந்தது என்பார் 'நடுக்கடலுள் அழுந்தி' என்றார். பிறவியாகிய கடல் எதுவென்பதைக் குறிப்பாலுணர்த்தினார் என்க.

தோணியென்றது திருவடியை. உயிர்கள் என்கடன் பணி செய்து கிடப்பதே என்ற அநுபவநிலையில் நிட்காமியமாகத் தொண்டுசெய்ய, இறைவன் திருவருள் சுரந்து திருவடியைச் சூட்டியருளுவனேயன்றி எத்தகைய உயிர்களும் அதனை விரும்பித் தன்முனைப்பால் அடைய இயலாதது; ஆதலின் பேணொணாத பெருந்தோணி பெருந்துறைக்கண் உள்ள பெருந்தோணி என்றார். தோணி துறைக்கண் இருத்தலே இயைபாதலறிக.

திருவடித்தோணியைப் பற்றினாலும் முத்திக்கரை சேர வேண்டும் என்ற விழைவாகிய முயற்சியும் வேண்டற்பாலது என்பதனை 'உகைத்தலும்' என்பதால் குறிப்பித்தருளினார்.

காணொணாத் திருக்கோலம் - உயிர்கள் பசுபோத முனைப் பால் மாயேயமான கருவி கரணங்களைக்கொண்டு காண ஒண்ணாத - சிவஞானம் ஒன்றாலேயே அவனருளே கண்ணாகக் கொண்டு காணத்தக்க திருவுருவம்.

கண்ணொளி பொருதாகலின் காணொணாத் திருக்கோலம் என்றார் என்பர் சிலர். அங்ஙனமே காட்டினாய் என்பதற்கு அடியேன் கண்ணளவிற்கேற்பத் திருமேனியின் ஒளியைச் சுருக்கிக் காட்டினாய் எனவும் உரைப்பர். இவ்வுரையாசிரியர்க்கு இவ்வெண்ணத்தை வழங்கியது "மணங்கமழ் தெய்வத் திள நலங்காட்டி" என்ற திருமுருகாற்றுப்படைப் பகுதிக்கு நச்சினார்க்கினியர்தந்த உரைநயம் என்க. அங்கே அது பொருந்துமாயினும் ஈண்டு மாயேயமான கருவி கரணங்களாற் காண இயலாத என்பதே பொருளாதல் காண்க.

470 கோல மேனிவ ராக மேகுண
மாம்பெ ருந்துறைக் கொண்டலே
சீல மேது மறிந்தி லாதவென்
சிந்தை வைத்தசி காமணி
ஞால மேகரி யாக நானுனை
நச்சி நச்சிட வந்திடுங்
கால மேயுனை யோத நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 5

இ - ள் : அழகிய வடிவையுடைய வராகமே! திருப்பெருந் துறைக்கண் எழுந்தருளியுள்ள குணக்கொண்டலே! சைவாசாரங்கள் ஒன்றையும் அறியாத என் சிந்தையுள் தன்னை வைத்தருளிய முடிமணியே! உலகம் சாட்சியாக நான் உன்னை விரும்ப, என்னை விரும்பி எழுந்தருளிய காலவடிவானவனே! உன்னை யான் இடைவிடாது சொல்ல, கழுக்குன்றிலே வந்து திருமேனியைக் காட்டினாய் என்றவாறு.

உலகம் சான்றாக உன்னை யான் விரும்ப, நீ என்னை விரும்பி எழுந்தருளினை ஆதலால் உன்னை இடைவிடாது ஓதுகின்றேன் நீ கழுக்குன்றிலே வந்து திருவுருவம் காட்டினாய் என்பது கருத்து.

பன்றிக்குட்டிகளுக்கு முலையூட்டிப் பாதுகாக்க இறைவன் பன்றியாக எழுந்தருளிய திருவிளையாடலை உட்கொண்டு 'வராகமே' என இறைவனைவிளிக்கின்றவர் அழகிய மேனியையுடைய வராகமே என்றார். இதற்கு வராகம் மேல் நிவர் கோலமே

எனப் பிரித்துக்கூட்டி, கயிலைமலையின்மேல் உயர்ந்து விளங்கும் அழகிய பொருளே என்று உரைப்பாரும் உளர்.

பெருந்துறை குணமாம் கொண்டலே - திருப்பெருந்துறைக்கண் நீருண்ண இறங்கும் எண்குணங்கட்கும் இடமாகிய மேகமே! மேகம் கடலின்கண் நீருண்ண இறங்குமாதலின் சிவபெருமானைத் திருப்பெருந்துறையிலே நீருண்ண வந்து தங்கிய மேகமாக விளித்தனர்.

கொண்டல் - மேகம் என்ற பொதுமையை உணர்த்தியது. கிழக்கின்கண்ணதாகிய மேகமெனக்கொண்டு பெருந்துறையில் பயன்படாத மேகமாய் இருந்தது, கழுக்குன்றிலே பயன்படு மேகமாயிற்று என வேண்டியவாறு வலிந்து நயங்கூறுவாரும் உளர். பெருந்துறையில் ஆட்கொண்ட திறமே அடிகளாரை அருள்வெள்ளத்திலாழ்த்திய பெரும்பயன்தரும் செயலாதலின் அதனைப் பயனில் மேகமெனல் பொருந்தாதாம். கொண்டல் உப்புநீரை நன்னீராக மாற்றுவது போல ஆன்மாக்களைத் தூய்மையுறுத்தலின் கொண்டல் என்றார் என்பது பழையவுரை.

*சீலம்* - ஒழுக்கம். காமமாதிய குற்றங்களை நீக்கிப் புனிதம் உறுத்தப்பெற்ற மனமே இறைவன் எழுந்தருளும் இடமென ஆகமங்கள் கூறவும், என்மீது வைத்த கருணையால் இறைவன் ஒழுகலாறு சிறிதும் அறியாத என் சிந்தையிலே தன்னை வைத்தான் ஒளிதந்தான் என்பார் 'என் சிந்தைவைத்த சிகாமணி' என்றருளினர். *சிகாமணி* - முடிமணி அல்லது தலையாய மணி எனலுமாம்.

காலம் - இறைவனைப்போல எல்லையற்றதாதலின் இறைவனைக் காலமே என அழைக்கின்றார். உனை ஓத எனப் பொதுப்படக் கூறினும் ஓத என்ற மரபுச்சொல்லால் திருவைந்தெழுத்து வடிவாகிய உன்னை ஓத என்று கொள்க.

காட்டினாய் என்னும் முற்றிற்கேற்ற 'நின் திருவுருவை' என்ற செயப்படுபொருள் வருவித்து முடிக்க.

நச்சிவந்து காட்டினாய் எனச் சற்குருதரிசனம் கிடைத்ததைத் தெரிவித்தல் காண்க.

*471* *பேத மில்லதொர் கற்ப ளித்த*
*பெருந்து றைப்பெரு வெள்ளமே*
*ஏத மேபல பேச நீஎனை*
*ஏதி லார்முனம் என்செய்தாய்*

சாதல் சாதல்பொல் லாமை யற்ற
தனிச்ச ரண்சர ணாமெனக்
காத லானுனை யோத நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 6

இ - ள்: வேறுபாடற்ற கற்பினை எனக்குக் கொடுத்த திருப்பெருந்துறையிலுள்ள கருணைப் பெருவெள்ளமே! அயலார் குற்றம் பல கூற என்னை முன்னே என்னசெய்தாய்? மரணமும் மரணத்தால் விளையும் தீமையும் தீங்கும் இல்லாத ஒப்பற்ற திருவடியே எமக்கு அடைக்கலமாவது என எண்ணிக் காதலால் உன்னைப் புகழ நீ வந்து கழுக்குன்றிலே திருவுருவங் காட்டினை என்றவாறு.

நின்னையன்றிப் பிறதெய்வம் பேணாமையாகிய கற்பைக் கொடுத்த அருள்வெள்ளமே! முன்னே அயலவர் வாயில்வந்தபடி பலபேச என்ன செய்து விட்டாய்? மரணமும் மரணத்தால் விளையும் தீங்குமற்ற நித்தியானந்தமான திருவடியே சரணம் என்று அறிந்து நான் ஓத எனக்கு நின் திருவுருவைக் கழுக்குன்றிலே காட்டினாய் என்பது கருத்து.

பெருவெள்ளமே! நான் சரண் சரணாமென உனை ஓத நீ வந்து கழுக்குன்றிலே காட்டினாய்; முனம் ஏதிலார் ஏதம் பல பேச என்செய்தாய் எனக்கூட்டுதலுமாம்.

கற்பு - மகளிர்க்குள்ள கணவனையன்றித் தெய்வமும் தொழாத கற்புப்போலச் சிவனையன்றிப் பிறதெய்வங்களை மனத்தாலும் நினையாத கற்பு. பிறவித்துன்பத்தில் உழலுகின்ற எனக்கு நீயே தலைவன் என்ற உறுதி பிறந்தாலன்றி இன்ப நிலை எய்தாதாதலின் முதற்கண் என் ஆன்ம நாயகன் நீயே என்ற உறுதியை உதவினாய் என்பார் 'கற்பு அளித்த பெருவெள்ளமே' என்றார். அக்கற்பு எத்துணைக் காரணங்களாலும் எவ்வகைச் சூழலிலும் மாறுபடாதது உறுதியானது என்பதையுணர்த்தப் 'பேதமில்லதோர் கற்பு' என்றருளினார்.

இத்தகைய கற்பை அளித்து அந்நிலையினின்று சிறிதும் பிறழாதவண்ணம் காக்கத் தலைவன்கருணை இன்றியமையாதது; தலைவனே கருணையை வெள்ளமாக அடியேனிடம் பெருக்குகிறான்; அதற்குக் குறைவேயில்லை என்பார் 'பெருவெள்ளமே' என்றார்.

கற்புடையாளைப்பற்றி அயலார் குறை சொல்லும்படித் தலைவன் என்றும் அவளைப் பிரிந்துறைதலாகாது. பிரித்தலும் ஆகாது. அங்ஙனமிருக்கத் திருப்பெருந்துறையில் அன்று நீ என்னைப்பிரித்து ஏனையரோடு சிவலோகமாகிய இன்பவுலகிற்கு ஏகினை; அதனால் அயலவர் வாயில் வந்தன வந்தன பேசினர்; இவ்வாறு செய்யலாமோ என உரிமைபற்றித் தலைவனை வினவுவாராய் 'முனம் ஏதிலார் ஏதமே பல பேச என் செய்தாய்?' என்றார்.

இப்பகுதிகட்கு, தாருகாவனத்து ரிஷிபத்தினிகட்குச் சிவபெருமானிடம் வைத்த அன்பே கற்பென்னும்படி அவர்களை ஆண்ட ஞானவாரியே எனவும், என்னை நீ ஆளாமையால் மலபோதர்களாகிய அயலார்கள் ஆண்டானாகிய உன்னைப் பழிக்கப் பிரிந்து என்ன காரியம் செய்துவிட்டாய்! நாங்கள் அவர்கள் கூறும் பழிப்புரையைக் கேட்கவா! அதற்கு அஞ்சிச் சாவதே மேலென்பது பழையவுரை. சிவநிந்தையைக் கேட்பதைவிட இறப்பதேமேல் என்பது இவ்வுரையின் உட்கோள்.

சாதலும், சாதல் பொல்லாமையுமற்ற தனிச் சரண் என்க. சாதல் பொல்லாமையாவது மரணகாலத்து வருந்துன்பங்கள். அவை மூச்சு வாங்கலும், இழுத்தலும், உட்குழித்தலும், கண் சுழித்தலும் ஆகியவற்றால் உயிர் அடையுந்துன்பங்கள். அற்ற-அறுதற்குக் காரணமான எனப் பொருள்கொள்க. இறைவன் திருவடிகட்குச் சாதலும், சாதற்றுன்பமும் இல்லாமை தானே அமைந்தது ஆகலின்.

உன்னை ஓத எனின் 'சிவ' என்று செபிக்க என்பது. திருவைந்தெழுத்தைச் சொல்ல, அதுவே ஆறாகக்கொண்டு நீ காட்சியருளினை என்பதால் சற்குருதரிசனமாயிற்று இத்திருப்பாடல்.

472 இயக்கி மாரறு பத்து நால்வரை
எண்கு ணஞ்செய்த ஈசனே
மயக்க மாயதொர் மும்ம லப்பழ
வல்வி னைக்குள ழுந்தவும்
துயக்க றுத்தெனை யாண்டு கொண்டுநின்
தாய்ம லர்க்கழல் தந்தெனைக்
கயக்க வைத்தடி யார்மு னேவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 7

திருச்சிற்றம்பலம்

இ - ள்: இயக்கிமார்கள் அறுபத்துநான்குபேருக்கு எண் குணங்களும் அமையும்படி ஆட்கொண்ட ஈசனே! யான் ஆன்ம வியாபகத்தை மறைப்பதான ஒப்பற்ற மும்மலங்களும், பழவினைகளுமாகிய சேற்றில் அழுந்தவும், யான் படும் துன்பத்தைக்கண்டு இரங்கி, அத்தளர்ச்சியைப் போக்கி, என்னை ஆண்டுகொண்டு, நின் தூய மலர்போலும் திருவடிகளை இவையே மலச்சேற்றினின்று கரையேறுதற்குத் துணையாம் என்றுதவி, அடியேனைக் கசக்கவைத்து, அடியார்கள் முன்னிலையில் குருவாக வந்து கழுக்குன்றிலும் நின்ற திருவுரு காட்டினை என்றவாறு.

உத்தரகோசமங்கையில் அறுபத்துநான்கு இயக்கியர்கள் இறைவனையே இடைவிடாது தியானித்து வழிபட்டு வந்தனர். அவர்கள் ஆன்மகுணங்களைவிட்டு, தன்வயத்தனுதல் முதலான இறைகுணங்கள் எட்டனையும் பெற்று உய்ய அருள்புரிந்தனர் என்பது வரலாறு. இதனையே 'இயக்கிமார் அறுபத்துநால்வரை எண்குணஞ்செய்த ஈசன்' என்பதால் குறித்தருளுகிறார். ஒருரைகாரர் தம் வரலாற்றுக் குறிப்பில் எண்குணங்களுள் ஒவ்வொன்றன் தன்மையை எட்டுப் பெண்கள் அடைய அருள் செய்தனர்; எட்டுக்குணங்களுள் ஒவ்வொன்றையும் எவ்வெட்டு மாதர்கள் அடைந்தனர் என்பர்.

சிலர் 'இயக்கிமாரறுவர் பத்தி மால்கொள எண்குணஞ் செய்த ஈசன்' எனப்பாடங்கொண்டு திருவிளையாடற்புராணத்திலுள்ள அட்டமாசித்தி உபதேசித்த வரலாற்றைக் காட்டுவர். அவ்வரலாறு: முருகப்பெருமானுக்கு முலைகொடுத்த யட்சமாதர் அறுவரும் தமக்கு அட்டமாசித்திகளையும் உபதேசித்தருளும் வண்ணம் சோமசுந்தரப்பெருமானைவழிபட்டுத் தவமியற்றினர். போகமூர்த்தியாக எழுந்தருளியிருந்த பெருமான் அவர்கள் தவத்திற்கு இரங்கி, அட்டமாசித்திகளும் எம் பக்கலிலுள்ள பராசத்தியின் அருளால் எய்தத்தக்கவை; அவள் கருணையைப் பெறவேண்டி வழிபடுங்கள் என்றுகூறி அவளை வழிபடுமுறைகளையும் அட்டமாசித்திகளையும் உபதேசித்தார். அப்போது மாதர்கள் உபதேசங்களைக் கூர்ந்து கவனியாது அசட்டையாகக் கேட்டனர். பெருமான் சிறிது சினந்து நீங்கள் கல்லாகக் கிடக்கக்கடவீர்கள் என்று சபித்தார். பெண்கள் வெருண்டு, பெருமானே! நாங்கள் செய்த தவறுகளுக்கும் சாபத்திற்கும் விடுதி எப்போது? அருளவேண்டும் என்று வேண்டினர். பெருமான் சினம் தணிந்து, ஆலவாய்க்கு யாம் வருவோம் அப்போது சாபவிடுதி விளையும் என்றருளினர். பெண்கள்

அவ்வாறே பட்டமங்கையில் கல்லாகக்கிடந்தனர். குறித்தபடி பெருமான் அங்கு எழுந்தருளி, அவர்களைப் பெண்களாக்கி அட்டமாசித்திகளையும் உபதேசித்து எட்டுக்குணங்களையும் அருளினரென்பது வரலாறு. இதனை அடிகள் 'பட்டமங்கையிற் பாங்கா இருந்து, அட்டமாசித்தி அருளிய வண்ணமும்' என்ற பகுதியால் குறித்துள்ளார். இப்பாடம் சில ஏடுகளில்மட்டும் காணப்படுவதாலும், அவை பிற்காலத்து எழுத்தாக இருப்ப தாலும் வரலாற்றிற்கு ஏற்பத் திருத்திய பாடம் எனக் கருத நேருகிறது.

எண்குணங்கள்: தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கையாகவே பாசங்களின் நீங்கியமை, முற்றுமுணர்தல், இயற்கை உணர்வினனாதல், பேரருளுடைமை, அழிவிலாற்ற லுடைமை, வரம்பிலின்பமுடைமை என இவை. இவை இறை வற்கே உரிய எண்குணங்களாம். இவற்றைத் தம்மை வழிபட்ட இயக்கியரும் எய்த அருளினர்.

மும்மலம் - ஆணவம் கன்மம் மாயை என்பன. இவை மூன்றும் ஆன்ம அறிவை மறைப்பனவாகலின் 'மயக்கமாய தோர் மும்மலம்' என்றார். இருளின்குணம் தன்னையன்றி ஒன் றையும் காட்டாதவாறுபோல, மலமாகிய தம்மையும், தம்மை யுடைய பொருளாகிய உயிரையும், தலைவனையும் காட்டாத்தன் மையவாகலின் 'மயக்கமாயதோர் மும்மலம்' என்றது. மும் மலமென்பது தொகுதியொருமையாதலின் ஆயதோர் மும்மலம் என ஒருமைக்கு முடிபாக வந்தது.

மும்மலப் பழவினை: உம்மைத்தொகை. பல பிறவிகளில் ஈட்டப்பட்டு, முதிர்ந்து, வன்மைபெற்றுள்ள வினையாதலின் பழவல்வினை என்றார். அழுந்தவும் என்ற வினைக்குறிப்பால் மலங்களும் வினைகளும் சேருகக்கொள்ளவைத்தார் என்க.

துயக்கு - தொடக்கு. அச்சேற்றுள் அழுந்துதற்கான பற் றுகிய தொடர்பை நீக்கி என்க. அறியாமையால் அங்கணத்து வீழ்ந்த குழந்தையை எடுக்கும் தாய்போலத் தூக்கி ஆண்டு கொண்டு என்க.

துன்பவடிவாகிய அளற்றுள் அழுந்த இருந்த அடியேனை, திருவடித்தாமரையாகிய இன்ப இருப்பைத் தந்து ஆண்டாய் என்பார் 'தூய்மலர்க்கழல் தந்து' என்றார்.

செல்வத்தின் அருமையறியாது செலவழிக்கும் மகனுக்குப் பலவகையில் நோய் தந்து வருத்திப் புத்திவரக்காட்டும் தந்தை போல நெடுநாட்பிரிந்து வருந்தவைத்துத் திருவடியருமை உணர்த்தியாட்கொண்டான் என்பார் 'கயக்கவைத்து' என்றார். கயக்க - கசக்க.

இத்திருப்பாடல் இயக்கிமார்களுக்கு எண்குணம் அருளியதுபோல என் மலக்கோலை நீக்கித் தூய்தாக்கிக் குருவடிவு காட்டினை என்றலின் சற்குரு தரிசனமாதல் காண்க.

# 31. கண்டபத்து

[நிருத்த தரிசனம்]

சிவஞானிகள் என்றும் அகலாத தில்லையம்பதியில் சென்று சிவாகமமுணர்ந்த சீலர்களாகிய தில்லைவாழந் தணர்கள் வழிபாடுசெய்யும் பொன்னம்பலத்தைக் கண்ட திருவாதவூரடிகள், அதனுள் ஆனந்தக்கூத்தனை அந்த மிலா வடிவினனாகக் கண்டு, கண்டபத்தாகிய இதனை அருளிச்செய்கின்றார்கள்.

சென்ற பதிகத்து, திருப்பெருந்துறையில் கண்ட குருவடிவைக் கழுக்குன்றிலும் கண்டு, தில்லைக்கு வந்தபோது, ஞானநடனமும் ஊனநடனமுமாகப் பரிபாகநிலைக்கு ஏற்பக் காட்சிவழங்கும் ஆனந் தக்கூத்தன் திருவுருவையும் கண்டு இதனை அருளுகின்றார்கள். ஆகவே அடிகள் இறைவனைக்கண்ட பத்துப்பாடல்களைக் கொண்ட தொகு பகுதியாம் இது என்க.

"சுட்டறு சுட்டாற் கண்டபத்து மட்டறு நிருத்த தரிசன மாகும்" என்பது அகத்தியச் சூத்திரம். முதற்பதிகத்திலே திரு வருளே தானுந்தன்மை பெற்றும், சதா நடன தரிசனத்தின் அளவு அருளைவேண்டி வற்புறுத்தித் தரிசனமே வீடென அருளிய அநு பவம் இப்பத்தில் உணர்த்தப்பெறுகின்றது என்பது பழையவுரை.

பழையகுறிப்பு நிருத்த தரிசனம் என்கிறது. பழையபுராணம், "இந்திரியவயம் மயங்காதே யெடுத்துத் தானுக்கு மெழிலானந்தம் கந்தமலி தில்லையினுட் கண்டேனென் றுவந்துரைத்தல் கண்ட பத்தாம்" என்று விளக்கந்தருகிறது. அதாவது, ஆன்மா இந்திரி யங்களின் வசப்பட்டு மயங்கி யழியாதபடி, கைதூக்கித் தாமாக்குந் தன்மைவாய்ந்த ஆனந்தத்தைத் தில்லையுட் கண்டேன் என்று மகிழ்ந்துரைப்பதாம்.

கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

473 இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா ஆனந்தம் அணிகொடில்லை கண்டேனே. 1

இ - ள் : ஐம்பொறிகளின் வசப்பட்டு அறிவு திரிந்து, இறந்து ஒழிவதற்கே காரணமாக ஆதரவின்றித் திரிந்து சென்று மிகக்கொடிய நரகில் வீழ இருந்த எனக்குச் சிந்தையைத் தெளியச்செய்து என்னைச் சிவமேயாக்கி ஆட்கொண்ட எல்லையற்ற ஆனந்தக்கூத்தினை அழகிய தில்லைநகருட்கண்டு உய்ந்தேன் என்றவாறு.

இந்திரிய சுகங்களிலேயே மயங்கி நரகில் வீழ இருந்த என்னைச் சிந்தைதெளிவித்துச் சிவமாக்கியாண்ட ஆனந்தத்தைத் தில்லையுட் கண்டேன் என்பது கருத்து.

முற்பதிகத்துக் கழுக்குன்றிற் காட்டினாய் என்ற அடிகள் இப்பத்தில் தில்லையுட் கண்டேன் எனல் காண்க.

பிரபஞ்ச விஷயங்களை இடைவிடாது இந்திரியங்கள் வாங்கிக் கொடுத்துக்கொண்டேயிருக்க, அவற்றை மனம்பற்ற, அவற்றை அகங்காரம் உள்ளே கொண்டுய்க்க, அவற்றைப் புத்திதத்துவம் குணங்கட்கேற்பச் சுகமாகவோ துக்கமாகவோ மோகமாகவோ நிச்சயிக்க, அவற்றை ஆன்மா வித்தை வாயிலாக அறிந்து, அவற்றின் வசப்பட்டு மயங்கி இறப்பதே தொழிலாதலின் 'இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய் என்றருளினர். ஆன்மா மும்மலச் சுழலிற்பட்டலையுமாயினும் அதனால் அது அறியவொண்ணாதது ஆகவே காட்சிக்குரியதாய் எளிதில் அறியப்படுவது ஐம்பொறிச்சுழலே என்க.

பழையவுரை, அநித்திய விஷயரூப இந்திரிய வேடரால் அலைவுற்று இறப்பதே காரணமாக என்னும்.

அந்தரமே திரிந்து - வானில் அலைந்து. வான் அருவாதலின் நிராதரவாய்த் திரிந்து என்பதனை இச்சொற்றொடரால் விளக்கியதாம். பழையவுரை அனேகபுவனவாசியாகத் திரிந்து என்னும். வேறுபட்டலைந்து என்றும் சிலருரைப்பர்.

சிந்தைதனைத் தெளிவித்து - இந்திரியவயமயங்கிய சிந்தையைத் தெளிவித்து. பித்தநோயால் மயங்கிப் படுகுழியில் விழ இருந்த ஒருவனை மருத்துவன் பித்தந்தெளிய மருந்தளித்து மயக்கம்போக்கித் தாமே படுகுழிக்கு விலகிச்செல்ல உதவுவது போல அருநரகில் விழ இருந்த என்னை இந்திரியசுகத்தின்வழி மயங்கிய என் சிந்தை மயக்கைப் போக்கித் தெளிவித்தான் என்பார் 'அருநரகில் வீழ்வேற்குச் சிந்தைதனைத் தெளிவித்து' என்றார்.

சிவமாக்கி - சிவத்துவம் அடையச்செய்து. சிந்தை சிந்திப்பதன் வடிவன்றித் தனக்கென ஒரு வடிவுமில்லாதது ஆதலால் இந்திரிய சுகங்களை விட்டுச் சிவத்தைப் பற்றியவழிச் சிவமே ஆயிற்று என்பார் 'சிவமாக்கி' என்றருளினர். சிலர், இந்திரிய வயமின்றித் தனித்து நிற்றலே சிவமாந்தன்மை என்பர். சுகம் என்பது நோய் நீக்கமும் இன்பப்பேறும் இணைந்தவழியன்றி உணரப்படாதவாறு போல, இந்திரிய வயமின்றிப் பிரிதலே சிவமாந்தன்மையாகாது; சிவச்சார்புபெற்று ஊன்றி நிற்கும் யோகானுபவ முதிர்ச்சியும் இன்றியமையாததென உணர்க.

ஆனந்தமே வடிவான சிவத்தை ஆனந்தம் என்றதாம். சிவமும் ஆனந்தமும் குண குணியின்றி அதுவே இரண்டுமாம் என்க. இக்கருத்து அறியாதார் குணியைக் குணமாக உருவகித்ததாக உரைப்பர். அது பொருந்தாமைச் சைவநூல்களிற் காண்க. உலகியல் ஆனந்தம், இந்திராதி பதவிகளிலுள்ள ஆனந்தம், இவற்றின் வேறுபடுத்தற்காக 'அந்தமிலா ஆனந்தம்' என்றார். தில்லைக்கூத்தனைக் கண்ட மாத்திரத்தே காந்தம் பற்றிய இரும்பு காந்தமாதல்போல, தீக்கதுவிய இரும்பு தீ வண்ணமும் தன்மையும் அடைதல்போல ஆன்மா காண்பது ஆனந்தம் ஒன்றையுமே ஆதலின் இங்ஙனம் கூறினர் எனலும் ஆம்.

இதுமுதற் பத்துத்திருப்பாடல்களும் அடிகள் தில்லையுள் ஆனந்தம் கண்ட அதிசயத்தை இயம்புதலின், இது நிருத்த தரிசனம் என்னும் பதிகக்கருத்திற்கு ஏற்புடைத்தாதல் அறிக.

474 வினைப்பிறவி யென்கின்ற வேதனையி லகப்பட்டுத்
தனைச்சிறிது நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை [யை
எனைப்பெரிதும் ஆட்கொண்டென் பிறப்பறுத்த இணையிலி
அனைத்துலகும் தொழுந்தில்லை யம்பலத்தே கண்டேனே. 2

இ - ள்: வினைவயத்தால் விளையும் பிறப்பு என்கின்ற துன்பத்திற் சிக்குண்டு, சிவபரம்பொருளாகிய தன்னைச் சிறிதும் தியானிக்காமல், தளர்ச்சியுற்றுக் கிடக்கின்ற என்னை, என் தலைவனாகிய சிவம் பெரிதும் ஆட்கொண்டு, என் பிறவி என்னும் துன்பவலையையறுத்த ஒப்பிலாதவனை எல்லாவுலகங்களும் தொழும் தில்லைநகரின்கண்ணதாகிய சிற்றம்பலத்தே கண்டேன் என்றவாறு.

பிறவிச்சுழலில் அகப்பட்டுக் கிடக்கின்ற என்னை ஆளாகக் கொண்டு பிறவியை நீக்கிய ஒப்பிலியைத் தில்லையில் சிற்றம்பலத்தே கண்டு உய்ந்தேன் உயர்ந்தேன் என்பது கருத்து.

பிறவி இடையறாது வருதலானும், நல்வினைப்பயனாகிய இன்பத்தை நுகர்த்தும்போதும் வருந்தி உழைத்தலாதியாய வேதனையை உண்டாக்குதலானும், துன்பத்தைப் புணர்த்தும் போது துன்பமேயாக மிகுத்துத் தோன்றலானும் பிறவி என்ற வேதனையில் அகப்பட்டு என்றார். பிறவிக்கு வித்து வினையா தலின் வினைப்பிறவி என்றதாம். வினைப்பிறவி - வினையான் வருவதும், வினைக்கு ஏதுவாவதும் ஆகிய பிறவி என்க.

தனைச் சிறிதும் நினையாதே; தன் - சிவம். இறைவன் செய்த உபகாரத்தை எண்ணி அவனைச் சிறிதும் நினையாமல் என்றவாறு. இன்பமேயான சிவத்தைத் தியானியாதபோது துன்பம் மிக்குத்தோன்றும்; அப்போது உள்ளமும் உயிரும் தளரும்; செயலற்றுக் கிடக்கநேரும் ஆதலின் 'நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை' என்றார்.

கிடப்பேனை ஆட்கொண்டு எனவே இயைதலின் நடுநின்ற 'எனை' என்பதனை ஆட்கொண்டு என்னும் வினைக்கு முதலாக்கி என்+ஐ எனப் பிரித்து என் தலைவனெனக்கூட்டுக. எதுகை நயமும் ஓசையினிமையும் நோக்கி எனைப் பெரிதும் என வல்லொற்றுமிக்கது. பொருளின்தரம் நுகர்ச்சிக்கு வந்தபோது தான் அறுதியிட்டு அறியப்பெறும். அதுபோல இறைவனும் வேறெதனாலும் எவராலும் நீக்கற்கியலாத வினையையும் பிறவி யையும் அறுத்து ஆட்கொண்ட அனுபவத்தைக்கொண்டு அவரை இணையிலி என்றார் ஆதலின் இது ஈண்டு அனுபவ ஞானத்தால் விளைந்த திருப்பெயராயிற்று.

அனைத்துலகும் என்றதற்குக் கந்தபுராணத்து அண்ட கோசப்படலத்தில் அறிவிக்கப்பெற்ற உலகங்கள் யாவும் கொள்க. புண்யபூமியாகிய மண்ணுலகில் விராட்புருடனுடைய இதயத்தானமாய், தகராகாசமாய், ஞானவெளியாய் விளங்கும் தில்லை வேறெங்கும் இன்மையானும், எல்லாவுலகும் இத்தில்லை யாற் பெரும்பயன் உறுதலானும் அனைத்துலகும் இதனைத் தொழுகின்றன. அங்ஙனம் தொழ அணிசெய்து நிற்பது அம்பலம், அம்பலத்திற்குயிர் இணையிலி என இயைய எண்ணச் செய்யும் வனப்பு உற்றுநோக்கி நயங்கொள்க.

*475 உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்தென் னுளமன்னிக்*
*கருத்திருத்தி யூன்புக்குக் கருணையினா லாண்டுகொண்ட*
*திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை*
*அருத்தியினால் நாயடியேன் அணிகொடில்லை கண்டேனே. 3*

இ-ள்: அடியேன் உருவு அறியப்படாத காலத்தே என் உள்ளே புகுந்து என்மனத்திலே நிலைபெற எழுந்தருளி, என் கருவையும் திருத்தி, ஊன்நிறைந்த என்மாதாவின் வயிற்றுட் புகுந்து கருணையினால் என்னை ஆண்டுகொண்ட திருத்துருத்தி என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை, தித்திக்கும் குஞ்சிதபாதத்தை நாயையொத்த அடியேன் ஆசையினாலே அழகிய தில்லைநகரில் கண்டேன் என்றவாறு.

கருவாய்க் கிடக்கின்ற காலத்திலேயே என்னுட்கலந்து என்னைத்திருத்தி ஆட்கொண்ட சிவனை அணிகொள் தில்லையிற் கண்டேன் என்பது கருத்து.

உருத்தெரியாக்காலத்தே - உருவு அறியப்படாத நாத பிந்து அணுவான கலப்பு நிலையிலேயே என்பதாம். தத்துவ துணைக்கருவியின்றி, கேவலாதீத உண்மையுடைய காலத்தில் என்பது பழையவுரை. இறைவன் உருவை யான் அறியாத காலம் என்பாரும், உருவம் தெரியாத தசைத்திரளாயிருக்குங் காலத்திலேயே என்பாரும் உளர்.

உள் புகுந்து - உள்ளே இருந்து என்பது பழையவுரை. உயிர்க்குயிராய் என்னுட்புகுந்து என்பாரும், மனத்துட்புகுந்து என்பாரும் உளர். என் உளம் மன்னி - என் மனத்தில் நிலை பெற்று. சூட்சுமபஞ்சகிருத்தியம் செய்து சகலப்படுத்தி என்பது பழையவுரை.

கரு+திருத்தி - கருவையே சிவப்பணிக்காகும்வண்ணம் திருத்தி; கருவில் திருத்தாவிடின் பிறந்து வினைக்கீடாகச் சுழலும்போது திருத்த இயலாதாகலின் கருவிலேயே திருத்தி என்றதாம். கருத்து+இருத்தி எனப் பிரித்து என் கருத்தைத் தன்னில் பிரியாதே இருக்கச்செய்து எனலுமாம்.

ஊன் புக்கு - உடலில் புகுந்து. கருவியாகுபெயர். தூல பஞ்சகிருத்தியம்செய்து என்பது பழையவுரை.

இறைவன் இவ்வண்ணம் தகுதியற்ற என் உள்ளம், கரு, ஊன் இவற்றுள் புக்கது கைம்மாறில்லாத கருணையே என்பார் 'கருணையினால் ஆண்டுகொண்ட' என்றார்.

திருத்துருத்தி - குத்தாலம் என இன்று வழங்குந்தலம். தித்திக்கும் சிவபதத்தை - கரும்பாய்த் தேனாய் இன்னமுதாய்த் தித்திக்கும் சிவபதத்தை என்றவாரும். சிவபதம் - சிவனுடைய குஞ்சிதபாதம் என்பது பழையவுரை. சீபஞ்சாக்கரமாகிய சொல்

எனலும் ஆம். கூத்தப்பெருமான் திருவுருவமே ஐந்தெழுத் தருணிலையாதலின் இங்ஙனம் கூறல் ஏற்புடைத்தென்க. முத்திப் பேறு என்பாரும், சுத்தபஞ்சகிருத்திய நடம் என்பாரும் உளர்.

நாயடியேன் - அடித்தாலும், புறம்போக்கினும் தன் தலை வனைச்சூழ வருதலேயன்றிப் புறம்போகாத நற்குணம் அமைந்த நாய்போன்ற அடியேன் என்பதாம். அருத்தி - அமையாத ஆசை. ஒருபொருளிடத்து ஒருவர்க்கு அயரா அன்புவிளையின் அதனையடைந்தேதீருதல் உறுதியாதலின் அருத்தியினால் தில்லை கண்டேன் என்றருளியதாம்.

அணிகொள்தில்லை-அழகியதில்லை. உலகிற்கே அணியாம் தன்மையைக்கொண்ட தில்லை எனலுமாம்.

சிவபதத்தைக் கண்டேன் என்றதால் இது குஞ்சிதபாத நிருத்ததரிசனமாயிற்று.

476 கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து வனப்பெய்தி யிருக்கும்வண்ணம்
பல்லோருங் காணவென்றன் பசுபாசம் அறுத்தானை
எல்லோரும் இறைஞ்சு தில்லை யம்பலத்தேகண்டேனே. 4

இ - ள்: சிவஞானத்தைப் பெறாத சிற்றறிவினால், கடைப் பட்ட நாயையொத்த என்னை, மிக வன்மையுடையவனாக எழுந்தருளி, யான் புதிய அழகுபெற்றுச் சிறப்புடனிருக்கும் படி, உலகினர் பலர்காண என் சீவபோதத்தையும், பாசங் களின் பிணிப்பையும் நீக்கிய சிவனை, எல்லோரும் வந்து வணங்குகின்ற தில்லையம்பலத்திற் கண்டேன் என்றவாறு.

கடைப்பட்ட நாயேனைப் பசுத்தன்மை பாசப்பிணிப்பு இவற்றை நீக்கி ஆட்கொண்ட சிவனைத் தில்லையம்பலத்திற் கண்டேன் என்பது கருத்து.

கற்றல் - பரிபாகப்படுதல். கல்வி அறியாமையைப் போக்கி அறிவை வளர்த்து மனத்தைப் பரிபக்குவப் படுத்துகிறது. ஆதலால் அங்ஙனம் பரிபாகமுறாத அறிவு புல்லறிவு. அதனை யுடைமையால் அடியேன் கடைப்பட்ட நாயேன் ஆயினேன் என்பார் 'கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை' என்றார். சிவனையறியக் கற்கவேண்டிய கல்வி சிவஞானமாதலின் அதனை அடையாத என்றார்.

நில்லாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறிவை யன்றிப் பிறவற்றைக்கல்லாத என்னை என்றுகூறும் பழையவுரை.

என்னை ஆட்கொள்ளவேண்டுமானுல் - என்வலிய வினைகளை நீக்கி உய்யக்கொள்ளவேண்டுமானுல் எளிதில் இயற்றுதல் ஒண்ணுது என எண்ணி மிக வன்மையுடையவனுக வந்தான் இறைவன் என்பார் 'வல்லாளனுய் வந்து' என்ருர். வல் + ஆளன் - வலிமையையாள்பவன், வலிய ஆள்பவன் என்றெல்லாம் கொள்க. எல்லாம் வல்ல சித்தனுக வந்தென்பது பழைய உரை.

உடலில் உள்ள நோய் நீங்கியவழி உடல் புத்தழகும் புது வளர்ச்சியும் பெற்று விளங்குதல்போல எனக்கு உள்ள சிற்றறிவுடைமை முதலான பசுத்தன்மையும், அறியாமை மயக்கம் முதலான பாசப்பிணிப்பும் நீங்கி யான் புத்தழகு பொருந்தும் வண்ணம் செய்தான் என்பதனை 'வனப்பு எய்தியிருக்கும் வண்ணம் பல்லோருங்காண என்றன் பசு பாசம் அறுத்தானை' என்றதால் குறித்தருளினுர். பசு - பசுத்தன்மை. பாசம் - பாசப் பிணிப்பு.

விண்ணவர் முதல் விஷ்ணுவரை அனைவரும் இம்மை மறுமை இன்பங்களை விரும்பி, அவரவர் பரிபாகநிலைக்கு ஏற்ப வணங்குகின்றனர் ஆதலின் 'எல்லோரும் இறைஞ்சு தில்லை' என்ருர். மக்கள் நரகர் முதலியோரும் வணங்கத்தக்க எளிமையுடைமையை விளக்கினுர் எனலுமாம். பெத்தர் முத்தர் எல்லோரும் என்பது பழையவுரை.

திருவைந்தெழுத்தில் பசு யகரமும், பாசம் ந ம என்பவை களுமாதலின் அவை இரண்டையும் அறுத்தது, அவற்றின் நீங்கி சிவ எனத் தன்முனைப்பின்றி அவற்றையே கண்டு அவையே தானேயாய் நிற்றலாகிய நிருத்ததரிசனம் அறிவிக்கப்பெற்றமை காண்க.

477 சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு [துக்
பேதைகுணம் பிறருருவம் யானெனதென் னுரைமாய்த்
கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே. 5

இ - ள் : சாதி குலம் பிறப்பு என்கின்ற நீர்ச்சுழியிலகப் பட்டுத் தடுமாறுகின்ற ஆதரவற்ற நாய்போன்ற என்னை, துன்பங்களைத் துடைத்து ஆட்கொண்டு, பேதைமை, குணம், உருவத்தால் பிறர், யான், எனது என்கின்ற சொல்லே இன்ருகக்கெடுத்து, எனக்குக் குற்றமற்ற அமுதம்போல ஆன சிவனை விளங்குகின்ற தில்லையிற்கண்டேன் என்றவாறு.

அடியேனை அல்லலறுத்தாட்கொண்டு, பேதஞானத்தையும் போக்கிய பெருமானைத் தில்லையிற்கண்டேன் என்பது கருத்து.

சாதி - கீழ்ச்சாதி மேற்சாதி என்னும் பாகுபாடு. இது தொழில்பற்றியே அமைவது என்பதைத் தொல்காப்பியத்து 'ஆயர் வேட்டுவர்' என்ற சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையானும் உணர்க. கோத்திரம் என்கிறது பழைய வுரை. சாதியாவது அந்தண்மை, ஆண்மை, செட்டுடைமை, அடிமை என்னும் நால்வகைப் பண்புகள் காரணமாக விளைந்த வருணம் என்பாரும் உளர்.

குலமாவது கூட்டம். இதனையே கோத்திரம் என்பாரும் உளர். மக்கள் அங்கங்கே கூடிவாழ்ந்தகாலத்து நெடுந்தூரத்துள்ள தம்மினத்தாரோடு உறவாட முடியாமையான் அமைந்த பிரிவு.

பிறப்பாவது ஊர்வன முதலான எழுவகையின. ஆகவே நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பினும், மக்கட்பிறவியிலே சாதி குலம் என்ற இரண்டினும் அபிமானங்காரணமாக அகப்பட்டுச் சுழலும் நாயேனை என்றவாறு.

சுழி நீருள் அழுத்துவதன்றி மேலெழுப்பாதவாறுபோல இவைகளும் மேனிலை அடையக்கடவதாகிய உயிரைத் தாழ்த்தி அழித்தலின் சுழியாக உருவகித்தார்.

ஆதமிலி - ஆதரவற்றவன். சுழிப்பட்டுத் தடுமாறும்போது ஆதரவாளர் யார் உதவுவர்? ஒருவருமிலர் ஆதலின் 'ஆதமிலி நாயேனை' என்றார்.

அல்லல் அறுத்து - சுழியினின்றும் கரையேற்றி. நல்லகுலம் என்றும் தீயகுலம் என்றும் சொல்லளவல்லாற் பயனில்லையாதலின் உடலையும் உழைப்பையும்பற்றி உண்டான அவற்றினின்றும் காத்து என்க.

ஆட்கொண்டு - அடிமையாக ஏற்று. வேற்றுமையற்ற தொண்டக்குலமாக்கி என்க.

பேதை, குணம், அறிவின்மை, குணமுடைமை என்றவேறுபாடுகளையும், உருவங்காரணமாகப் பிறர் யான் எனது என்னும் வேறுபாடுகளையும் அகற்றத் திருவுளங்கொண்டு, பேதை குணமுதலான சொல்வழக்கையே கெடுத்து என்க. இதனால் பேதஞானம் விலக இத்தகைய வழக்காற்றையே கெடுத்ததாம் என்றவாறு.

கோது - குற்றம். விடத்தொடு தோன்றுமை முதலான குற்றமற்ற அமுதம் ஆனுன் இறைவன். அவனைத் தில்லையுள் கண்டேன் என்பதாம்.

பிறப்பால் அந்தணராயினும் ஆட்சிமையால் அரசாவாரும் செட்டால் செட்டியாவாரும், உழவாலும் அடிமையாலும் அடிமையாவாரும் உளர். அங்ஙனமே பிறரிலும் ஆதலால் சாதி முதலிய பேதங்கள் உடலைப்பற்றிய உண்மையுணராமை காரணமாக விளைந்தனவாதலின் ஞானநெறிக்கு ஏலாது என இறைவன் அறுத்தான் என்று உணர்க. இத்திருப்பாடற்கு வலிந்து ஒரு பிறப்பு இரு பிறப்பு, சேர சோழ பாண்டியகுடி அல்லது குலம் அந்தணர் முதலிய சாதி இவற்றுள் அகக்கோலங்கொள்ளாத புறக்கோலங்கொண்டாரை மனத்தெண்ணியே அவைகளைச் சுழியாகக் கூறினர் என்பர் சிலர். அவை பொருந்தாமையுணர அடிகளே 'புல்லாகிப் பூடாய்......எல்லாப் பிறப்பும் பிறந்திளைத் தேன்' எனலால் பிறப்பு எவை என்பது உணர்த்துதல் கொண்டும் தெளிக.

*478 பிறவிதனை யறமாற்றிப் பிணிமூப்பென் றிவையிரண்டும்*
*உறவினொடு மொழியச்சென் றுலகுடைய வொருமுதலைச்*
*செறிபொழில்சூழ் தில்லைநகர் திருச்சிற்றம் பலமன்னி*
*மறையவரும் வானவரும் வணங்கிட நான் கண்டேனே.* 6

இ - ள்: பிறவியை அறவேநீக்கி நோயும் மூப்புமாகிய இவை இரண்டையும் உறவோடும் ஒழித்துப்போய் உலகம் அனைத்தையும் தமக்கு உடைமையாகப் பெற்ற ஒப்பற்ற முதல்வனை நெருங்கிய சோலைகள்சூழ்ந்த தில்லைநகரிலே திருச் சிற்றம்பலத்திலே நிலைபெற்று அந்தணர்களும் தேவர்களும் வணங்கிட நான் கண்டேன் என்றவாறு.

பிறப்புப் பிணி மூப்பு என்னும் நோய்களையும் அவற்றிற்கு உறவான வினை மரணம் முதலானவற்றையும் அறவே ஒழித்து உலகநாயகனை அமரரும் அந்தணரும் வணங்கத் திருச்சிற்றம் பலத்தில் கண்டேன் என்பது கருத்து.

எரிவதிழுத்தால் கொதிப்பது நிற்பதுபோலப் பிறவிக்கு ஏதுவாகிய வினைகளைச் செய்யாது, செய்கின்ற வினைகளையும் சிவனருளால் செய்வதாகச் சிந்தித்துச் செய்யின், உள்ள வினை அழிவதோடு வருவினையும் ஏருமற்போகவே பிறவி தானே நீங்குமாதலின் அங்ஙனம் ஒழுகினேன் என்பார் 'பிறவிதனை அறமாற்றி' என்றார்.

பிணி மூப்பு என்பன நம் தீவினையின் பயனாகவும், வினைக் கழிவாலும் விளைவன. வினையொழியவே நோயும் நோய்க்கு ஏதுவாய ஆதிபௌதிக, ஆதிதெய்விக ஆதியாத்மிகங்களாகிற ஏதுக்களும் மூப்புக்கு உறவாகிய நரை திரைகளும், இந்திரியங்கள் வலிகுன்றுதலும் உடனே ஒழியுமாதலின் 'பிணிமூப்பு என்றிவையிரண்டும் உறவினொடும் ஒழியச் சென்று' என்றருளினர். உறவு - உறவினர் எனலுமாம்.

உலகுடைய ஒருமுதல் - உலகெலாம் தமக்கே உடைமையாகப்பெற்ற முதல்வன். சங்காரகாரணனாகிய சிவன் என்க. கூத்தப்பெருமானுடைய பஞ்சகிருத்திய பரமானந்தக் கூத்தினாலேயே உலகம் இயங்குதலால் அவனே முதல்வன்; அவனுக்கே உலகம் உடைமையாம் என்பன உணர்கின்றோம் ஆதலின் இங்ஙனம் கூறினார்.

அத்தகைய முதல்வன், அந்தணரும் வணங்கத் தில்லையில் திருச்சிற்றம்பலத்தில் மன்னியிருப்பதைக் கண்டேன் என்று வியந்து கூறியவாற்றால் நிருத்த தரிசனம் ஆதல் காண்க.

479 பத்திமையும் பரிசுமிலாப் பசுபாசம் அறுத்தருளிப்
பித்தனிவ னெனவென்னை யாக்குவித்துப் பேராமே
சித்தமெனுந் திண்கயிற்றால் திருப்பாதங் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே. 7

இ - ள்: அன்பும் பண்புமில்லாத பித்தன் இவன் என்று என் தற்போதத்தையும் பாசங்களையும் நீக்கியருளி, என்னைத் தன்னடிக்கே அடிமையாக ஆக்கம்பெறச்செய்து, யான் அறியாமையால் அகன்றுவிடாதவண்ணம் சித்தம் என்னும் வலியகயிற்றால், தம் திருவடியாகிற தறியிலேகட்டிய பேரறிஞரான பெருமான் திருவிளையாடலை விளங்குகின்ற தில்லையிற் கண்டேன் என்றவாறு.

திருவடிச்சார்பிற்குரிய தகுதி யாதும் இல்லாத என்னைத் தகுதியூட்டி, யான் திருவடியைப் பிரியாது இருக்கச்செய்த பெருமானுடைய திருவிளையாடலாகிய ஐந்தொழிற்கூத்தைத் தில்லைநகரில் கண்டேன் என்பது கருத்து.

பத்திமை - அன்பு உடைமை. பரிசு - நல்லொழுக்கமாகிற பண்பு. இல்லாப்பித்தன் என இயைக்க.

பித்தன் செய்வன தவிர்வன அறியாது மயங்கித் துன்ப இன்ப வேறுபாடின்றி நுகர்ந்து உறக்கமின்றி உழல்பவன்.

உடலெடுத்ததன்பயன் சிவனிடம் அன்புசெய்து சிவநெறி நிற்க வேண்டியிருக்க அவற்றைச் செய்யாது புறம்புறந்திரிதலால் இவன் ஒருபித்தனெனத் திருவுளங்கொண்டு இறைவன் இவன் இங்ஙனம் திரிதற்குக் காரணம் இவனது சிற்றறிவும், பெத்த நிலையுமே என ஆய்ந்து, நோய்முதல் நாடி நோய் தீர்க்கும் மருத்துவன்போலப் பசுத்துவத்தையும் பாசத்தையும் அறுத்தான் என்னை உயர்த்தினன் என்பார் 'பசுபாசம் அறுத்தருளிப் பித்தனிவன் என என்னை ஆக்குவித்து' என்றருளினர். ஆக்குவித்து - ஆக்கம் விளைத்து.

முன்னே ஆட்கொண்டபோது பிரிந்து புறம்போந்ததை எண்ணி இன்றும் அங்ஙனம் நேராதவண்ணம் மனம் என்னுங் கயிற்றால் திருவடியென்னும் தறியிலே கட்டுவித்தான்; இது வோர் வித்தகச்செயல் என்பது போதர 'சித்தம் எனும் திண் கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த வித்தகனார்' என்றருளினர்.

விளையாடல் - தம் கூத்து ஒன்றானே ஐந்தொழில்களையும் களைப்பின்றிச் செய்யும் விளையாட்டு; விளையாடல் கண்டேன் என்றது நிருத்த தரிசனம் அறிவிப்பதாம் என்க.

480 *அளவிலாப் பாவகத்தால் அமுக்குண்டிங் கறிவின்றி*
*விளைவொன்றும் அறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக்*
*களவிலா ஆனந்த மளித்தென்னை யாண்டானைக்*
*களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே.* 8

இ - ள்: அளவற்ற எண்ணங்களால் அமுக்கப்பெற்று அறிவில்லாமல் அதனால் விளையவிருக்கும் பயனையும் அறியாமல், வீணாகக் கிடக்கின்ற எனக்கு எல்லையற்ற ஆனந்தத்தை யூட்டி, என்னையாண்ட பரம்பொருளை வஞ்சனையற்ற தேவர்கள் வந்து தொழுந்தில்லைநகரில் கண்டேன் என்றவாறு.

எத்தனையோ கற்பனைகளில் அமுங்கி அறிவிழந்திருந்த என்னை ஆனந்தமூட்டி ஆண்ட தில்லைக்கூத்தனைத் தில்லையில் கண்டேன் என்பதாம்.

பாவனை - ஒன்றனை மனத்தால் எண்ணுதல். பாவகம் - அங்ஙனம் எண்ணிய எண்ண முதிர்ச்சியால் எண்ணப்பட்ட பொருளாகவே இருத்தல். எண்ணங்கள் நம் நிலைக்கு ஏற்ப விளைதல் இல்லை. எத்தனையோ மனக்கோட்டைகள் விஞ்சிய நிலையில் விளைகின்றன. அந்த மனக்கோட்டைகளின் நடுவில் புதையுண்டு என்பார் 'அளவிலாப் பாவகத்தால் இங்கு அமுக்குண்டு' என்றார். பாவகம் - தீவினை என்னும் பழையவுரை.

அங்ஙனம் அமுக்குண்டபோது ஆன்ம அறிவு மழுங்குமாதலின் அறிவின்றி, மனக்கோட்டையமாய், அதனால் விளையும் பயன் இன்னவென்று உணராமல் வீணாகக் கிடந்த நிலைக்கு இரங்கி, எனக்கு ஆனந்தமளித்தான் என்னையாட்கொண்டான். இத்தகைய உபகாரியைத் தில்லையில் கண்டேன் என்பதாம்.

களவிலா வானவர் - கரவாடும் வன்னெஞ்சர்க்கு இறைவன் அரியனாகலின் வஞ்சனையில்லாத வானவர்கள் தொழுகின்றனர் என்றவாறு. களவு-தன்னலமும், பிறர்தீங்கும் வேண்டி வழிபடுதல். அங்ஙனமன்றி, என்கடன் பணிசெய்து கிடப்பதே என வழிபடுபவர்கள் என்பதாம்.

481 பாங்கினொடு பரிசொன்றும் அறியாத நாயேனை
ஓங்கியுளத் தொளிவளர வுலப்பிலா அன்பருளி
வாங்கிவினை மலமறுத்து வான்கருணை தந்தானை
நான்குமறை பயில்தில்லை யம்பலத்தே கண்டேனே. 9

இ-ள்: பாங்கும் பரிசும் அறியாத நாயையொத்த என்னை, என் உள்ளத்தே சிவஞானம் சிறந்து விளங்க அழியாத அன்பைக்கொடுத்து, என் வினைகளையகற்றி, மலங்கள் என்னைச் சாராமல் நீக்கி, பெரிய கருணையை வழங்கிய வள்ளலை நான்குவேதங்களும் இடைவிடாது பயிலப்படுகின்ற தில்லைத் திருச்சிற்றம்பலத்தே கண்டேன் என்றவாறு.

அன்பருளி, அடியேன் வினைகளை அகற்றி, மலங்களை வலி அடக்கிக் கருணை புரிந்த இறைவனைத் தில்லைச்சிற்றம்பலத்தே கண்டேன் என்பது கருத்து.

பாங்கு - தலைவனுக்கு உவப்பான செயல்கள். பரிசு - அவனுக்குப்பிடித்த குணங்கள். அல்லது அவனைக் கூடுதற்குரிய உபாயங்கள் எனலுமாம். பாங்கு - உரிமை, பரிசு - உரிமையால் விளையுங்குணம் என்பது பழையவுரை.

உளத்து ஒளி ஓங்கி வளர உலப்பிலா அன்பருளி எனக் கூட்டுக. இதற்கு, தகுதியற்ற அடியேனுள்ளத்தும் சிவஞானந் தழைத்தற்கு ஏதுவாகிய அழியாத சிவனடி மறவாத பற்றை ஊட்டி எனப் பொருள்கொள்க.

வாங்கி - அறியாமையிற்கிடந்த என்னை எடுத்து எனலுமாம். வினைவாங்கி எனக்கூட்டி அடியேன் மேன்மேலும் வினைகளைச் சாராது வினைகளையொழித்து எனக்கொள்க.

மலமறுத்து வான்கருணை தந்தானை - மலங்கள் நித்தியமாகலின் அவை எம்மைப்பற்றாது தொடர்புநீக்கி, மீளவும்

மலகன்மங்கள் வந்து பற்ருதவண்ணம் பாதுகாவலாகக் கருணையையும் அருளியவனை என்க.

அங்ஙனம் பரிபாகமுறுத்தி ஆட்கொண்டு கருணையும் வழங்கிய வள்ளலைத் தில்லையம்பலத்துத் தரிசிக்கப்பெற்றேன் என்பதாம்.

482 பூதங்க ளைந்தாகிப் புலனுகிப் பொருளாகிப்
பேதங்க ளனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே.

திருச்சிற்றம்பலம்

இ - ள்: ஐம்பூதங்களும், அவற்றிற்குக் காரணமான ஐந்து தன்மாத்திரைகளும், ஏனைய பொருள்களும், வேறுபாடுகளனைத்தும் ஆகி, தான் ஒரு மாறுபாடும் இன்றி விளங்கும் பெருமையையுடையவனும், என் துன்பங்களைப்போக்கி ஆண்ட மேன்மேலுங் கிளர்ந்தெழுகின்ற ஒளிபோல்பவனும் மரகதம்போல்பவனும் ஆகிய இறைவனை வேதங்கள் தொழுது வழிபடும் விளங்குகின்ற தில்லைநகரில் கண்டேன் என்றவாறு.

மண்முதற் குடிலையீருன தத்துவங்களாகியும், தாத்துவிகங்களாகிற பொருள்களாகியும், வேறுவேருன அனைத்துமாகியும் தான் தன்தன்மையிற் சிறிதும் பேதமின்றி விளங்கும் பெருமையனுகிய மரகத மணிபோல்பவனைத் தில்லையிலே கண்டேன் என்பது கருத்து.

பூதங்களைந்து - மண் நீர் அனல் கால் விண் என்ற ஐந்து பூதங்கள். புலன் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்து தன்மாத்திரைகள். அவற்றின் பேதங்கள் - தாத்துவிகங்களாகிய சிவதத்துவம் முதல் பிருதிவியீருன தத்துவங்களானியன்ற பொருள்கள். இவ்வண்ணம் எல்லாமாய்ப் பேதப்படினும், தான்மட்டும் விகாரியாகாமல் விளங்கும் பெருமை இறைவற்கே யுரிய சிறப்பிலக்கணம் என்பார் 'பேதங்கள் அனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனை' என்ருர்.

'பொன்மைநீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்க வற்றின்
தன்மையாய் நிற்கு மாபோற் சத்திதன் பேத மெல்லாம்
நின்மலன் தானுத் தோன்றி நிலைமையொன் ருயே நிற்பன்'

ஆதல் காண்க.

கேதங்கள் - துன்பங்கள். நோய்களை ஒளியாலும் மணியாலும் நீக்குதல் மருத்துவநூன்மரபு. ஆதலின் துன்பந் துடைக்கும் பெருமானைக் கேதங்கள் கெடுத்தாண்ட ஒளி என்றும் மரகதம் என்றும் கூறினர். கேதம் - யான் எனது என்னும் பொய் என்பது பழையவுரை. மரகதம் - பச்சைமணி. பச்சை தன்னைச்சார்ந்த பால்முதலியவற்றையும் பசுமையாகத் தோற்றுவித்து, பாலைச்சார்ந்த தான் வெண்மையாகாதது போல இறைவன் சத்திதன் பேதம் எல்லாம் தானாத்தோன்றியும் தன் நிலை ஒன்றாயே நிற்பன் என்றதை உருவகத்தாலும் உளங்கொள வைத்ததாம்.

இவ்வண்ணம் இப்பத்துப் பாடல்களாலும் தில்லையில் இறைவனை அந்தமிலா ஆனந்தமாகவும், இணையிலியாகவும், தித்திக்கும் சிவபதமாகவும், பசு பாசம் அறுப்பவனாகவும், கோதில் அமுதாகவும், உலகுடைய ஒருமுதலாகவும், ஆனந்தமளித்து ஆள்பவனாகவும், வான்கருணைதரும் மரகதமாகவும் கண்டதாகக் கூறுதல் காண்க.

# 32. பிரார்த்தனைப்பத்து

[சதாமுத்தி]

சில நாட்களுக்குப்பின் அடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருந்தபோது, தில்லையில் இறைவனைக் கண்ட ஆனந்தம் கருத்தைக் கவர, பசியால் வாடிய ஒருவனுக்கு உணவு கண்டாற்போலக் கண்டதில் அமைதியுறாது அவரிடம் இடையறா அன்புசெய்யவும், ஓவாது உருகவும் பரமானந்தப் பழங்கடல் மூழ்கவும், தளிர்பொற்பாதம் பெறவும், பேராமை பேரானந்தம் வைக்கவும், ஆனந்தமேயாக அபேதமாகி விளங்கவும் இறைவனை நோக்கிப் பிரார்த்தித்தலின் இப்பகுதி பிரார்த்தனைப்பத்தாயிற்று. இது திருப்பெருந்துறையில் அருளப்பெற்றது எனவும், தில்லையில் அருளப்பெற்றது எனவும் கூறப்படுகிறது.

பத்து எனப்படுமாயினும் பதினொரு பாடல்களைப் பெற்று, அந்தாதித்தொடையாக விளங்குவது இதன் தனிச்சிறப்பு.

'பிரார்த்தனைப் பத்துச் சதாமுத்திப் பேறே' என்பது அகத்தியச்சூத்திரம். முன்னைப்பத்தில் திருவருட்காட்சி கண்டும் எதிர் தோன்றாது சிவாநுபவமே சுவாநுபூதிகமாக நிட்டை பெறுங்காலம் திருத்தொண்டை அளவளாவி அடியார் உறவே நீங்காப் பெருமை நெறியென வேண்டுதல் என்பது பழையவுரையின் கருத்து.

பழையகுறிப்பு சதாமுத்தி; என்பது ஆன்மாக்களுக்கு முத்தி நிச்சயம்பண்ணுதல் என்கின்றது.

திருவாசகச் சிறப்புக்கூறும் பழையபுராணம் 'அத்தமிலா ஆனந்த சத்தகலாமல் எனை அழுத்தி ஆள்வாயென்று சிந்தைகலந் துரைத்ததுவே பிரார்த்தனைப் பத்தாய்ப் புகலும் செய்கையாமே' என்னும். இடைவீடில்லாது சிவானந்தப் பெருங்கடலில் திளைக்கத் திருவருள்புரிக என வேண்டிக்கொள்ளுதலே பிரார்த்தனைப் பத்தாதல் காண்க.



முடிமன்னன் வாதவூரடிகள் திருவடிகளில் வணங்குதல்

## ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

483 கலந்து நின்னடி யாரோ
 டன்று வாளா களித்திருந்தேன்
புலர்ந்து போன காலங்கள்
 புகுந்து நின்ற திடர்பின்னாள்
உலர்ந்து போனேன் உடையானே
 உலவா வின்பச் சுடர்காண்பான்
அலந்து போனேன் அருள்செய்யாய்
 ஆர்வங் கூர அடியேற்கே. 1

இ - ள்: நீ ஆட்கொண்ட அன்று, நின் அடியார்களோடு கலந்து சும்மா மகிழ்ந்திருந்தேன்; என் ஆயுட்காலம் பயனின்றிக் கழிந்தன; பின்னாளிலே துன்பம்புகுந்துநின்றது; அதனால் அடியேன் வாடினேன்; என்றும் வற்றாத இன்பமேவடிவான ஒளியைக் காணும்பொருட்டு வருந்தினேன்; என்னை ஆளாக உடையவனே! அடியேற்கு அன்பு மிகும்படி அருள்செய்க என்றவாறு.

அடியாரோடு கூடியகாலத்தும் வீணாகக்களித்துக் காலம் போக்கினேன்; துன்பம் வந்தது; வாடிப்போனேன்; இன்ப வொளி காண எய்த்தேன்; ஆதலால் உடையானே! அதனை அடைதற்குரிய அன்பை எனக்கு அருளுக என்பது கருத்து.

அன்று: காலம் கருதிய சுட்டுப்பெயர். குருந்தடியில் நீ குருவாக எழுந்தருளி அடியேனை முதன்முதலாக ஆட்கொண்ட அன்று என்க. அடியார்கூட்டத்தில் கலக்கப்பெற்றால் சிரித்தும் களித்தும் தேனித்தும் திரண்டு திரண்டு சிவன்புகழைப் பேசியும் மகிழவேண்டிய யான் பயனின்றிக் களித்தே காலம் போக்கினேன் என்பார் 'வாளா களித்திருந்தேன்; காலங்கள் புலர்ந்து போன' என்றார்.

திருவருளில் திளைத்துத் தியானித்துப் பயன்பெறவேண்டிய காலம் கிடைத்தும் பயன்படாமல் நழுவியதால் பின்னாளிலே பலவகையான துன்பங்கள் தலைக்காட்டலாயின என்பார் 'பின்னாள் இடர் புகுந்து நின்றது' என்றார். வருவன தாமே வரும் என்றாற்போலத் துன்பம் தானேவரும் தடுத்தற்கியலாது என்பது போதர 'இடர்புகுந்து நின்றது' என்றார்.

எதனையுந்தாங்கும் ஆற்றலற்றகாலத்தே துன்பந்தோன்றுமாயின் அதனைப் போக்கிக்கொள்ள முடியாமல் வருந்துதலே

நிகழக்கூடியதாகலின் 'உலர்ந்து போனேன்' என்கின்றார். உலர்தல் - ஈரம் வற்றிச் சருகாதல்; அன்பும் ஆதரவும் அற்றுப் போதலுமாம்.

இத்தனைத் துன்பச்சூழல்களுக்கு இடையிலேயும் ஓராசை; எப்படியாவது என்றும் மாறாத இன்ப ஒளியைக் காணவேண்டு மென்று. அவ்விருப்பம் எளிதில் ஈடேறாமையால் 'அலந்தே போனேன்' என்றார்.

தந்தை தன்மகனுக்குத் தன்செல்வமுழுதையுமே கொடுப்பா னாயினும், அறிவுள்ள தனயன் தந்தையை நோக்கி, எனக்கு முதல் கொடு அதனை வைத்து உழைத்து ஊதியம் பெருக்கிச் செல்வனாய் இன்பம் துய்ப்பேன் என்கிறான். அவன் நோக்கம் தான்தேடாப் பொருளால் இன்பமுமில்லை புண்ணியமுமில்லை என்பதாம். அதுபோல அடிகள் இறைவனிடம் பேரின்பம் அருளுக எனப் பிரார்த்திப்பாராயின், பெருங்கருணைத் தடங் கடலாகிய பெருமான் அதனையும் அருள்வர். ஆயினும், அன்பு செய்து சிவஞானம் பெற்றுச் சிவபோகம் துய்க்க விரும்பி, எனக்கு ஆர்வம் அருளாய் என வேண்டுகின்றார். ஆர்வம் - போதும் என்று அமையாத அன்பு.

தைலதாரை போன்ற இடையீடில்லா அன்பே சிவமாய் இன்பாம் ஆதலின் சதாமுத்தியாதல் காண்க.

484 *அடியார் சிலருன் னருள்பெற்றார்*
*ஆர்வங் கூர யானவமே*
*முடையார் பிணத்தின் முடிவின்றி*
*முனிவால் அடியேன் மூக்கின்றேன்*
*கடியே னுடைய கடுவினையைக்*
*களைந்துன் கருணைக் கடல்பொங்க*
*உடையா யடியேன் உள்ளத்தே*
*ஓவா துருக அருளாயே.* 2

இ - ள்: உடையாய்! மெய்யடியார்கள் சிலர் நின்மேல் ஆர்வம் மிகுதலால் உன் அருளைப் பெற்று உய்ந்தார்கள்; அடியேனாகிய யான், முடைநாற்றம் வீசும் பிணத்தைப்போல வீணாக முடிவேயில்லாமல் வெறுப்பினால் மூப்படைகின்றேன்; கடியவனாகிய என்னுடைய கொடிய வினைகளாகிற களைகளைக் களைந்து, உன் கருணையாகிற கடல் பொங்கி என்மீது பாய, அடியேன் மனத்தகத்து அன்பைத்தந்து யான் இடைவிடாது உனதருளையேபற்றி மனமுருகப்பணித்தருள்வாய் என்றவாறு.

ஆர்வமிக்க அடியார்கள் அருள்பெற்றுய்ய, யான் மட்டும் அஃதின்மையால் பிணம்போலப் பயனின்றி வெறுப்பால் வளர்கின்றேன் ; அதற்குக் காரணமாய வினைகளைப் போக்கி, அன்பைத்தந்து அடியேன் மனம் கசிந்து உருகக் கருணை செய் என்பது கருத்து.

'அடியார் சிலர் ஆர்வங்கூர உன் அருள் பெற்றார்' என இயைக்க. ஆர்வம் அருள்பெறுதற்கு உபாயம் என்றறிந்தும் என, அவமே மூத்தமைக்கு ஏது உணர்த்துகின்றார்.

பிணத்தின் அவமே மூக்கின்றேன் என முடிக்க. பிணம் பயன்படாததுபோல யானும் வீணாகப் பயனின்றி மூக்கின்றேன் என்றவாறு. 'அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை என்புதோல் போர்த்த உடம்பு' என்பவாகலின் ஆர்வங்கூராத தன் வாழ்க்கைக்குப் பிணத்தை உவமித்தமை உணர்க. பிணம் சிறிது காலந்தாழ்த்து எடுப்பதற்கும் இயலாமல் முடைநாற்றம் வீசும். அதுபோல யானும் சிவபுண்ணியம் செய்து சிவானந்தம் கலந்து நாறாது வாழ்ந்தேன் என்பார் 'முடையார் பிணத்தின் மூக்கின்றேன்' என்றார்.

என் வாழ்க்கையில் எனக்கு உண்டான வெறுப்பிற்கோர் எல்லையின்று என்பதனை உணர்த்த 'முனிவால் முடிவின்றி மூக்கின்றேன்' என்றார்.

கடியேன் - கடுந்தன்மையுடையேன். கடுவினைகள் கொடிய வினைகள். கடுவினைகளின் சார்பால் கடியனாயினேன் அன்றி, என் இயற்கைக் குணம் அன்று ; ஆதலால், அவ்வினைகளை மாற்ற அடியேன் நின் கருணைக்கிலக்காகும் தகுதிவாய்ந்தவன் என்பார் 'அடியேனுடைய கடுவினையைக் களைந்து அன்பு ஓவாதுருக அருளாய்' என வேண்டுகின்றார்.

உள்ளத்தே அன்பை உதவி, என் நெஞ்சு ஓவாதுருக அருளாய் என வேண்டிய சொற்களை வருவித்துப் பொருள் கொள்க.

கருணைக்கடல் பொங்கிப் பாயவும், ஓவாது உருகவும் வேண்டுதலின் இத்திருப்பாடல் சதாமுத்தியுணர்த்துவதாதல் காண்க.

பழையவுரை, முனிவால் அடியேன் முகக்கின்றேன் எனப் பாடங்கொண்டு வெறுப்பால் தீவினையை முகக்கிறேன் என்று உரை வகுக்கும்.

485 அருளா ரமுதப் பெருங்கடல்வாய்
அடியா ரெல்லாம் புக்கழுந்த
இருளா ராக்கை யிதுபொறுத்தே
எய்த்தேன் கண்டா யெம்மானே
மருளார் மனத்தோ ருன்மத்தன்
வருமா லென்றிங் கெனைக்கண்டார்
வெருளா வண்ணம் மெய்யன்பை
உடையாய் பெறநான் வேண்டுமே. 3

இ - ள்: எம்மானே! அடியார்கள் அனைவரும், திருவருளாகிற பெரிய அமுதக்கடலிலே புகுந்து திளைக்க, அடியேன் மட்டும் அஞ்ஞானமாகிற இருள்நிறைந்த உடலாகிய இதனைச் சுமந்து இளைத்தேன்; இதனைச் சிறிது கடைக்கணித்தருள்க; உடையவனே! இவ்வுலகில் என்னைக் கண்டவர்கள், மயக்கம் நிறைந்த மனத்தையுடைய ஒரு பைத்தியக்காரன் வருகிறான் என்று வெருண்டு ஓடாதவண்ணம் நான் உண்மையன்பைப் பெறவேண்டும்; நீ அருள் என்றவாறு.

அடியார்கள் அனைவரும் கருணைக்கடலில் திளைத்தனர்; அடியேன் உடற்பொறையாற்றாது உலைகின்றேன்; இவன் ஒரு பித்தன் என்று உலகவர் ஏளனம் செய்யாமல் உண்மையன்பை உதவி உயர்த்து என்பது கருத்து.

எல்லாம்எனல் பொதுப்பெயர் ஆதலின் அடியாரெல்லாம் என நின்றது. அழுந்த என்பதற்கு அதில் மூழ்கித் திளைக்க என்ற அளவே பொருள்கொள்க.

இருள் - அறியாமை. இருளாராக்கை - அறியாமை காரணமாகவரும் உடல். இவ்வுடல் இழிவென்றுணர்ச்சி வந்தபின்பு இது எப்போதுவிழுமென்று சுமையாகத் தாங்கினேன் என்பார் 'ஆக்கை இது பொறுத்தே எய்த்தேன்' பொறுக்க இயலாத சுமையைப் பொறுப்பவன் இளைப்புக்கொள்ளுதல்போல இவ்வுடலைச் சுமந்து இளைத்தேன் என்றார். கண்டாய் - இதனைக் கடைக்கணித்தருள்; முன்னிலை அசையுமாம்.

மருள் - மயக்கம். உன்மத்தன் - பித்தன். பித்தனைக்கண்டவர் அஞ்சி வெருண்டோடுவர்; அங்ஙனம் ஓடாதவண்ணம் தெருள் பிறக்க மெய்யன்பைப் பெற வேண்டியவாறும்.

சதாமுத்தியடைதலாகிய பயனை விரும்பி, அதற்கேதுவாய மெய்யன்பை விழைதலின் இச்செய்யுள் இப்பதிகக் கருத்திற்கு இயைதல் காண்க.

486 வேண்டும் வேண்டும் மெய்யடியார்
உள்ளே விரும்பி யெனையருளால்
ஆண்டா யடியேன் இடர்களைந்த
அமுதே யருமா மணிமுத்தே
தூண்டா விளக்கின் சுடரனையாய்
தொண்ட னேற்கும் உண்டாங்கொல்
வேண்டா தொன்றும் வேண்டாது
மிக்க அன்பே மேவுதலே. 4

இ - ள்: மிக மிக விரும்பும் மெய்யடியார்களுள்ளே மிக விரும்பி என்னையும் கருணையால் ஆண்டாய்; அங்ஙனம் ஆண்டு அடியேனுடைய துன்பங்களையெல்லாம் வேரொடும் அகற்றிய அமுதமே! கிடைத்தற்கரிய பெரியமணியே! முத்தே! தூண்டா விளக்காகிய இரத்தினதீபத்தின் ஒளியை ஒத்தவனே! தேவரீர் விருப்பப்படாத ஒன்றையும் யானும் விரும்பாமல், நின்பால் மிக்க அன்படைதல் தொண்டனாகிய எனக்கும் உண்டாமோ என்றவாறு.

மிக நெருக்கமான அடியார்களுக்குள் என்னையும் ஒருவனாக நீயே விரும்பி ஆண்டாய்; யானும் தேவரீருக்கு உகப்பில்லாத ஒன்றனையும் உகந்திலேன்; ஆதலால் அடியேனுக்கு மேலான அன்பைப் பெறுதல் கிட்டுமோ என்று வினவுகின்றார்.

வேண்டும் வேண்டும் மெய்யடியார் - மிகமிக விரும்பும் உண்மை அடியார்கள். பழையவுரை, மெய்யடியார் உள்ளே - சீரடியார் திருவுளத்திலே, வேண்டும் வேண்டும் விரும்பி - வேண்டுங்கால் வேண்டுவதே கருத்தறிந்தீவதான இச்சையே கொண்டு, எனை அருளால் ஆண்டாய் - அடியேனை இரட்சித்து இடர் களையாய் என்று கூறும். சிலர் வேண்டும் வேண்டும் வேண்டாது ஒன்றும் வேண்டாது எனக்கூட்டி, இத்தனை அல்லல்களும் எனக்கு வேண்டும் வேண்டும்; வேண்டத் தகாதது ஒன்றனையும் வேண்டாமல் வேண்டிய அன்பையே வேண்டினேன் என்றும் உரைப்பர்.

மெய்யடியாருள்ளே எனை விரும்பி அருளால் ஆண்டாய் என்று கூட்டுக. இதனால் இறைவனது எளிவந்த கருணை இனிது விளக்கப் பெறுகின்றது. இத்துணை அடியார்கள் இருக்க என்னை ஆண்டது என் தகுதியாலன்று; நின் கைமாறு வேண்டாத கருணைப்பெருக்கால் என்றவாறு.

தேவாமுதம் தேவர்கட்கு எடுத்த உடலை அழியாது காத்து வினைப்போகத்தை நீடிக்கச்செய்து இடர்ப்படுத்துவது. சிவமாகிய அமுதம் எடுத்த உடலிலேயே வினைப்போகம் முழுதையும் ஊட்டியும் நீக்கியும் விரைவில் இடர் களைவது. ஆதலின் இறைவனை அவ்வமுதில் பிரித்துணர்த்த 'அடியேன் இடர் களைந்த அமுதே' என்றார்.

அருமாமணி! முத்தே! என இரண்டையும் விளியாக்குக. அன்றி, அரிய பெரிய மணிமுத்தமானவனே எனலுமாம். மணிமுத்து: ஒருபொருட்பன்மொழி.

தூண்டா விளக்கு - (இரத்தினதீபம்) மணிவிளக்கு. சுடர் - ஒளி. மணிவிளக்கின் ஒளி இடையீடின்றி என்றும் பொருள் புலப்படுத்தி இன்பூட்டுதல் போல என்னுடைய அறியாமை யிருளை அகற்றி, என்னையும் நின்னையும், நின்னை அடையும் உபாயத்தையும், உறுபயனையும் புலப்படுத்துதலின் இங்ஙனம் கூறினார் என்க.

ஒரு தலைவனிடம் நெருங்கிப் பழகி, மிக்க அன்பைப்பெற்றோர் ஓரொருக்கால் அவனுக்கு உகப்பில்லாதவற்றையும் விரும்புவர். அவனும் வாரம்பட்டுழித் தீயவும் நல்லவாமாதலின் மறாதே அளிப்பன். பின்பு என்னே இவனறியாமை! எமக்கு உகப்பில்லாத ஒன்றனை விரும்பினனே! இதனால் வரும் பயனை அவனே கண்டு கழிக்கட்டும் என்று பராமுகமும் செய்வன். அத்தகைய நிலை அடியேற்கு என்றும் வேண்டாம்; உனக்குப் பிடிக்காதது எனக்கும் பிடிக்காததே; ஆதலால், சிறந்த அன்பை உதவு என வேண்டுகிறார்.

இத்திருப்பாடலும் சதாமுத்திக்கேதுவான மிக்க அன்பை வேண்டுதல் காண்க.

487 மேவு முன்றன் அடியாருள்
விரும்பி யானும் மெய்ம்மையே
காவி சேரும் கயற்கண்ணாள்
பங்கா வுன்றன் கருணையினால்
பாவி யேற்கும் உண்டாமோ
பரமா னந்தப் பழங்கடல்சேர்ந்
தாவி யாக்கை யானெனதென்
றியாது மின்றி யறுதலே. 5

இ - ள்: விரும்பி உன்னை வந்தடைந்த உன்னடியாருள் ஒருவனாக யானும் விரும்பி யானும் மெய்ம்மையாகவே

அடைந்தேன்; நீலமலரைச் சேர்ந்து விளங்கும் கயல்மீன் போலும் கண்களையுடைய உமாதேவியாரை ஒருபாகமாகக் கொண்டவனே! மேலான சிவானந்தமாகிற பாழுங்கடலிற் சேர்ந்து, உடலும் உயிரும் யான் எனது என்னும் பற்றுக் களும் சிறிதும் இன்றி நீங்குதல் பாவியாகிய எனக்கும் உன் கருணையால் உண்டாகுமோ என்றவாறு.

அடியேனும் அடியருள் ஒருவனாக உண்மையாகவேயடைந் தேன்; எனக்கும் பரமானந்தப் பழங்கடலில் தோய்ந்து உடற் பற்று உயிர்ப்பற்று அகங்கார மமகாரங்களினின்றும் நீங்கப் பெறுதல் உன் கருணையாலுண்டாகுமோ என்று வினவுகிறார்.

மேவும் - விரும்பும். 'மே விருப்பாகும்' என்பது சூத்திரம். உன்னை விரும்பும் அடியாருள் (ஒருவனாக) யானும் உண்மை யாகவே விரும்பி (ஆட்பட்டேன்) எனச் சில சொல் வருவித்து முடிக்க.

கண் காவியும், விழி கயலும்போல்வனவாதலின் கண்ணுள் விளங்கும் விழியைக் காவிசேரும் கயற்கண் என்றார். நீல மலரைச் சேர்ந்து விளங்கும் கயல்மீன்போலுங்கண் என்பதாம். கண்ணாள்பங்கா என்றது எனக்கும் அருளல்வேண்டுமென்னும் குறிப்பிற்று.

கடல் சேர்ந்து, யாதுமின்றி அறுதல் கருணையினால் பாவி யேற்கும் உண்டாமோ எனக் கூட்டுக.

இதனைக்காட்டிலும் சிறந்த ஆனந்தம் ஒன்றின்மையின் சிவானந்தத்தைப் பரமானந்தம் என்றும், எல்லாம் ஒடுங்கிய காலத்தும் விளங்குவதாகலானும் எல்லையற்றிருப்பதானும் பழங்கடல் என்றும் கூறினர். பரமானந்தத்தைச் சேர்ந்தவுடன், வினைக்கீடாகிய உடலும் அகப்பற்றும் புறப்பற்றும் அறுமாத லின் அது எனக்கும் உண்டாகுமோ என வினவுதல் வாயி லாகத் தம் பிரார்த்தனை இதுவென விண்ணப்பிக்கின்றார்

பாவியேற்கும் - பாவியாகிய எனக்கும்; திருவடியை இடை விடாது பாவிக்காத எனக்கும் எனலுமாம்.

ஆவி ஆக்கை யான் எனது என்று யாதும் இன்றி - உயிரும் உடலும், அகங்கார மமகாரங்களுமாகிய ஒன்றுமின்றி. அன்றி ஆவியைப்பற்றியதாகிய யான் என்பதும் ஆக்கையைப்பற்றிய தாகிய எனது என்பதும் ஒருசிறிதும் இன்றி எனலுமாம்.

ஞாயிறு எழ இருள் நீங்குதல்போலப் பரமானந்தப் பழங் கடல் சேர்தலும் பற்றறுதலும் ஒருகாலத்து நிகழும் செயலா யினும், சேர்ந்து அறுதல் கூடுங்கொலோ என்று முன்பின் செயல்களாகக் கூறினர் உபசாரம்பற்றி என்க.

இப்பாட்டிற்கு இங்ஙனம் கூருது, பங்கா! உன்றனடியார் உள்மேவும் பரமானந்தப் பழங்கடல் யானும் மெய்ம்மையே சேர்ந்து அறுதல், உன்றன் கருணையினல் பாவியேற்கும் உண் டாமோ எனக்கூட்டிப் பொருள் கூறுவாரும் உளர்.

பரமானந்தப் பழங்கடல் சேருதலை வேண்டுதலின் இத் திருப்பாடல் சதாமுத்தியை அறிவிப்பதாயிற்று என்க.

488 *அறவே பெற்ருர் நின்னன்பர்*
*அந்த மின்றி யகநெகவும்*
*புறமே கிடந்து புலைநாயேன்*
*புலம்பு கின்றேன் உடையானே*
*பெறவே வேண்டும் மெய்யன்பு*
*பேரா வொழியாப் பிரிவில்லா*
*மறவா நினையா அளவிலா*
*மாளா வின்ப மாகடலே.* 6

இ - ள்: உடையானே! நின் அன்பர்கள் இன்பத்தை மிகப் பெற்ருர்கள்; கீழான நாயை ஒத்த யான், எல்லையின்றி மனம் உடையவும், நின் இன்ப உலகிற்குப் புறமாக இருந்து புலம்புகின்றேன்; இடம்பெயராததும், என்றும் நீங்காததும், பிரிவில்லாததும், மறக்கவும் மீட்டும் நினைக்கவும் முடியாத தும், எல்லையற்றதும் ஆகிய பெரிய இன்பக்கடலே! நின்பால் மெய்யன்புபெற வேண்டுகின்றேன் என்றவாறு.

நின் அன்பர்கள் இன்பத்தை மிகப்பெற்ருர்கள்; யான் மட்டும் பிரிந்து வருந்துகிறேன்; அதற்குக்காரணம் என்பால் மெய்யன்பு இன்மையே; ஆதலால் இன்பக்கடலே! எனக்கு உண்மையன்பை உதவுக என்பது கருத்து.

உனக்கு அன்பராயினர் நின்பால் எய்தும் இன்பத்தை மிகப்பெற்றனர்; ஏகபோகமாகப் பெற்றனர். அறவே - மிகுதி யாக. தான் உண்மையன்பு பெருமையால் மனிதகுலத்திற்கே ஒவ்வாத இழிதகைமையுடையேன் என்பார் தன்னைப் புலை நாயேன் என்ருர். ஏனையோர் பேரின்பம் பெற்றதைக் கண்டு யான் மனமுடைகின்றேன்; ஓராண்டா? ஈராண்டா? எல்லை யில்லாதகாலம் மனமுடைகின்றேன்; அதனல் புலம்புகின்றேன்;

உபாயம் அறிந்து அதன்படி ஒழுகி உண்மையன்பைப்பெற்று உய்யவேண்டிய யான் செயலற்றுப் புலம்பிப் பயனென்ன? இருப்பினும் இன்பக்கடலே! நீ மெய்யன்பு உதவவேண்டும் என்று பிரார்த்திக்கின்றார்.

கடலில் எத்தனைபேர் எத்தனைகுடம் முகந்தாலும் நீர் குறையாதவாறுபோல, பேரன்பர்கள் மிக மிக நுகர்ந்தாலும் உன் இன்பம் குறையாது என்றுணர்த்த 'இன்பமாகடலே' என்றும், ஏனைய இன்பத்திற்குள்ள தீயகுணங்கள் ஒன்றும் இல்லை என்பார் 'பேரா, ஒழியா, பிரிவில்லா, மறவா, நினையா, அளவில்லா, மாளா இன்பம்' என்றும் அருளினர்.

மெய்யன்பு பெறுதல் ஒன்றே அமையும்; அதன்வாயிலாக இன்பப்பேறு தானே சித்திக்கும்; ஆதலின் அதனை வேண்டு கின்றார். அதனால் இது சதாமுத்தி கூறுவதாயிற்று.

489 கடலே யனைய ஆனந்தம்
கண்டா ரெல்லாங் கவர்ந்துண்ண
இடரே பெருக்கி யேசற்றிங்
கிருத்த லழகோ அடிநாயேன்
உடையாய் நீயே யருளுதியென்
றுணர்த்தா தொழிந்தே கழிந்தொழிந்தேன்
சுடரா ரருளால் இருள்நீங்கச்
சோதீ யினித்தான் துணியாயே. 7

இ - ள்: உடையாய்! கண்டவர்களெல்லாம் கடலை ஒத்த பேரின்பத்தைக்கவர்ந்து அனுபவிக்க, அடிமையாகிய நாயேன் மட்டும் துன்பங்களை மிகச்செய்து வருந்தி இங்கு இருப்பது உனக்கு அழகோ? நீயே அருளுவாய் என்று திருமுன்னர்த் தெரிவியாது இருந்து காலங்கழித்து ஒழித்தேன்; சோதீ! இனியாவது ஒளிப்பிழம்பான திருவருளால் என் மலவிருள் நீங்கத் திருவுளம் பற்றுவாயாக என்றவாறு.

கண்டவர்களெல்லாம் ஆனந்தமடைய நான் வருந்துவது உன் பெருமைக்கு அழகோ? முதல்வனுக்குத் தெரியாதா? அவரே அருளுவர் என்றிருந்து காலங்கழித்தேன்; சோதீ! இனியாவது என் மனவிருள்கெடத் திருவருள்செய் என்பது கருத்து.

கண்டார் எல்லாம் என்றது இறைவன் தம்மைப் புறக் கணித்ததன் காரணமாகச் சிறு கோபஞ் சிந்தையில் விளையக்

கூறியது. ஒருதொடர்புமின்றிக் கண்டவர்களெல்லாம் வேண்டியபடி இன்பம் நுகர, வழிவழி அடிமையான யான்மட்டும் வருந்த விடுவது உன் முதன்மைக்கு அழகா? எண்ணிப்பார் என்கின்றார்.

ஆண்டான் இங்ஙனம் புறக்கணித்தமையால் அதனையே எண்ணி எண்ணித் துன்பமே பெருக்கி வருந்துகின்றேன் என்பார் 'இடரே பெருக்கி ஏசற்று' என்றார். இடர் - ஈண்டு வினைவயத்தான்வந்த துன்பம் அன்று; பிரிவுத்துன்பமும் பிறர் இன்பம் எய்தத் தானெய்தாத அவமதிப்பால் விளைந்த துன்பமும் என்க.

அடிமைக்குப் பணி செய்வது கடமை. அறிந்து பயனூட்டுவது முதல்வன் கடமையாயிற்றே. அன்றியும், எனக்கு அதைக் கொடு இதைக் கொடு என்று கேட்க அடிமைக்கு உரிமை ஏது? ஆதலால், முதல்வனுக்குத் தெரியாதா அவரே நமக்கு அருள் புரிவாரென்றிருந்தேன். அதன் பயன் காலம் கடந்தது அவ்வளவே! அழுத பிள்ளைதான் பால் குடிக்கும். கேட்டாற்றான் பெறலாம் என்பதை இப்போது உணர்கின்றேன். இதுவரை இருந்த அறியாமையை நீக்கி, உண்மை அன்பை உதவு என வேண்டுகிறார்.

இத்திருப்பாடலும் இன்பவிழைவால் அன்புவேண்டுதலால் சதாமுத்தியாயிற்று.

490 துணியா வுருகா அருள்பெருகத்
தோன்றுந் தொண்ட ரிடைப்புகுந்து
திணியார் மூங்கிற் சிந்தையேன்
சிவனே நின்று தேய்கின்றேன்
அணியார் அடியா ருனக்குள்ள
அன்புந் தாராய் அருளளியத்
தணியா தொல்லை வந்தருளித்
தளிர்ப்பொற் பாதந் தாராயே. 8

இ - ள்: சிவனே! நின்னருள் மேன்மேலும் பெருகுவதால், பொய்ப்போகங்களினின்று பிரிந்து, மனமுருகி இன்பக் களிப்பிற் காணப்படுகின்ற மெய்யடியார்களின் நடுவிலே திணிந்த மூங்கிலைப்போன்ற மனத்தையுடைய யான் புகுந்து நின்று தேய்ந்துபோகின்றேன்; நெருக்கத்திலுள்ள அடியார்களிடத்து உனக்குள்ள அன்பைத் தருவாயாக; கருணை கனிய, காலந்தாழ்க்காது விரைவாக வந்து தளிர்போன்ற பொன்மயமான திருவடியைத் தந்தருள் என்றவாறு.

கனிந்தமனத்து அடியவர்கூட்டத்தில் கல்மூங்கில்போன்ற மனமுடைய யானும் இருந்து தேய்கின்றேன்; அடியார்மீது நீ செலுத்தும் அன்பைத் தர விரைந்து உன் கழலையும் தா என வேண்டுகின்றார்.

அருள் பெருக, துணியா, உருகாத் தோன்றும் தொண்டரிடைப்புகுந்து எனக்கூட்டுக. உலகத்தோடு ஒட்டி வாழ்ந்த அடியார்கள் நின் அருள்பெருக அதனால், அதினின்று துணிபட்டு, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கும் தோற்றத்தைப் பெற்றார்கள்; அதாவது அன்புமயமாயினர்; யானோ கல்மூங்கில் போன்ற மனமுடையன் ஆகின்றேன்; அதனால் நாளுக்குநாள் பயனின்றித் தேய்கின்றேன் என்பார் 'திணியார் மூங்கிற் சிந்தையேன் நின்று தேய்கின்றேன்' என்கின்றார். கல்மூங்கில் உட்டுளை இல்லாதது; உறுதியானது. அதுபோல அன்பும் புக இயலாத இடைவெளியற்ற சிந்தையன் ஆயினேன் என்றவாறு.

திணியார் மூங்கில் என்பதற்குத் திண்மைநிறைந்த மூங்கிலின் கணுவை ஒத்து என்பாரும், உள்ளீடு அற்ற மூங்கில் என்பாரும் உளர். கணுவுக்குக்கணு முள் நிறைந்திருக்கும் மூங்கில் போலத் தீமைபொருந்தியவன் என்பது. ஏனைய அடியார்கள் மூங்கிலின் வழுவழுப்பும் பசுமையும் தண்மையுமுடைய பகுதியாகவும், அடியார்களிடைப் புகுந்த இவர் அதன் கணுவாகவும் கருதியதாகக்கொள்க. உள்ளீடு அற்ற மூங்கில் என எதிர் மறைப்பொருள் கோடலும், உள்ளீடாகிய அறிவு இல்லாமைக்குக் கூறினர் என அதுபற்றி எழும் நயங்கூறலும் ஈண்டுப் பொருந்தாமையைத் 'திணி ஆர் மூங்கில்' என்ற சொல்லமைப்பாலேயே தெளிக. உட்டுளையுடைய மூங்கிலையே சுமைகளைத் தூக்கவும், வீடு மேயவும் பயன்படுத்துவர். கல்மூங்கில் ஊன்றுவதற்கும் அடிப்பதற்கும் அன்றிப் பயன்படாமையும் காண்க. தேய்கின்றேன் என்றது பயன்படாமையைக் கருதிக் கூறியது. துணியா என்பதற்கு அருள் பெருகுதலால் ஐயந்தெளிந்து எனக் கூறுதலுமாம்.

அணியார் அடியார் - அணுக்கத்தொண்டர். அணுக்கத் தொண்டர்களிடத்துத் தலைவற்குத் தனித்ததோரன்பு இருத்தலும், சேய்மைக்கண் உள்ளார்பால் பொதுவகையான அருள் இருத்தலும் இயல்பு ஆதலின் சிறப்பாக அணுகியார்மாட்டு உனக்குளதாம் அன்பை அருளவேண்டுகிறார். அடியார்க்கு உன்னிடமுள்ள அன்பு என உருபு பிரித்துக்கூட்டிப் பொருள் கூறுவாருமுளர்.

அருள் அளிய - அருள் கனிய. தணியாது - தாழ்க்காமல். விரைந்து வந்து திருவடியுந்தந்தருள் என்றவாறும்.

491 தாரா அருளொன் றின்றியே
தந்தா யென்றுன் தமரெல்லாம்
ஆரா நின்றார் அடியேனும்
அயலார் போல அயர்வேனோ
சீரா ரருளாற் சிந்தனையைத்
திருத்தி ஆண்ட சிவலோகா
பேரா னந்தம் பேராமை
வைக்க வேண்டும் பெருமானே. 9

இ - ள்: சிறந்த அருளால் என் மனத்தைத் திருத்தி ஆட் கொண்ட சிவலோகா! பெருமானே! உன் தமர்களாகிய அடியார்கள் அனைவரும், 'தரப்படாது எஞ்சிய அருள் ஒன்று மின்றித் தந்துவிட்டாய்' என்று களிப்போடு நுகர்ந்தனர்; அடியேனும் அயலார்போல உன் அருளை நுகராது இருந்து வருந்துவேனோ? நின் பேரானந்தத்தில் என்றும் நீங்காத வண்ணம் என்னையும் வைக்கவேண்டும் என்றவாறு.

நின் அடியார்கள் அருளனைத்தையும் அளித்துவிட்டாய் என்று அகக்களிப்போடு அருளை அனுபவிக்கின்றார்கள்; யான் மட்டும் அயலானோ? நான் வருந்தவேண்டுமோ? விரைந்து பேரானந்தத்திலே இருத்து; என்றும் நீங்காதபடி இருத்து என்பது கருத்து.

தமர் - தம்மைச்சேர்ந்தவர்; உறவினர். உன் தமரெல்லாம் என்றது தாம் அருளாராமை காரணமாக எழுந்த சினம்பற்றிய உரை என்க. இரு குழந்தைகள் விளையாடுகின்றபோது, ஒரு குழந்தை இதோ பார்! அப்பா எல்லாப்பழங்களையும் என்னிடம் கொடுத்துவிட்டார் என்று சொல்லிக்கொண்டே தின்னுமாயின் மற்றொரு குழந்தை அயல்வீட்டுக் குழந்தை போலத் தூரநின்று அழும். அதுபோல நின்னடியார், மிச்சமில்லாமல் அருள்முழுதையும் எம்மிடமே கொடுத்தாயென்று கூறிக்கொண்டே அருளை அனுபவிக்க, யான் அயலார்போல அயர்வேன் என்கின்றார்.

புறம்போதற்குக் காரணமாக இருந்தது என் மனமே எனத் தன் குறையைத் தானுணர்ந்து, இறைவன் திருவருளால் தன் சிந்தையைத் திருத்தியதை முற்கூறுகின்றார் 'சீரார் அருளால் சிந்தனையைத் திருத்தி ஆண்ட சிவலோகா' என்று.

மேல் சிந்தை திருந்தியமையால் உனது பேரானந்தம் என்றும் பேராமை அருளவேண்டுமென்று உரிமை தோன்ற விண்ணப்பித்தவாறு.

492 மானேர் பங்கா வந்திப்பார்
மதுரக் கனியே மனநெகா
நானேர் தோளாச் சுரையொத்தால்
நம்பி யித்தால் வாழ்ந்தாயே
ஊனே புகுந்த வுனையுணர்ந்தே
உருகிப் பெருகும் உள்ளத்தைக்
கோனே யருளுங் காலந்தான்
கொடியேற் கென்றோ கூடுவதே. 10

இ - ள்: மான்போன்ற உமாதேவியாரை ஒருபாகத்தில் உடையவனே! வணங்குகின்ற மெய்யன்பர்களுக்கு இனிமையான கனியை ஒத்தவனே! தலைவா! மனம் நெகிழாத அடியேன் துளைக்கப்படாத ஒரு சுரைக்காயை ஒத்திருப்பேனாயின், இதனை நம்பி நீ வாழ்ந்தாய்; இவ்வுடலில் புகுந்த உன்னை நன்றாக உணர்ந்து உருகி அதனால் ஆக்கத்தை அடையும் மனத்தை நீ அருளுங்காலம் கொடியேனாகிய எனக்கு என்று கூடும்? இயம்பியருளுக என்றவாறு.

மனமிளகாத என்னை நம்பி நீ வாழ்ந்தாய் போ! என்மனம் நெகிழுங்காலம் என்றுகூடும்? சொல் என்பது கருத்து.

மான் உவம ஆகுபெயராக மான்போன்ற உமாதேவியாரை உணர்த்திற்று. மானேர்பங்கா என்றது தாயோடுகூடிய தந்தையாகிய நீ விரைந்து அருளவேண்டும் என்னும் குறிப்பையுட் கொண்டது. மனைவியோடு இருப்பவர்கள் இரவலர் ஏதேனும் இரப்பின் தனக்கு மனமில்லையாயினும் மனைவி மகிழவும் தன்னை மதிக்கவுமாகக் கொடுப்பர். இது உலகியல். அதனை எண்ணி மானேர்பங்கனாகிய உன்னைச் சமயம்பார்த்துக் கேட்கின்றேன்; மனம் நெகிழச்செய் என்றார் எனினுமாம்.

வந்திப்பார் - வணங்குகின்றவர்கள். வந்தனை என்பது தன்முனைப்பற்றுத் தலைவன்பால் விளைந்த இடையீடில்லாத பேரன்பால் நிகழ்வது. அங்ஙனம் வணங்குவார் பேரின்பத்தை எய்தச் செய்கின்றான் இறைவன் ஆதலின், 'மதுரக் கனியே' என்றார். மதுரம் - இனிமை. வாயிலிட்டது முதல் உண்டு, முன்னறி காட்சியாக உணர்வில் ஒட்டியிருக்கின்ற ஆயுட்காலம் வரை இனிமை மறவாமையின் இறைவனை மதுரக் கனியாக அனுபவிக்கின்றார். ஔவையுண்ட நெல்லிக்கனிபோல்பவனே

எனப் பொருள்கொண்டு, முன் துவர்த்துச் சிறிது புளித்து, பின்னர் முற்றும் இனித்து வாழ்வளிப்பவனே எனலுமாம்.

மனம் நெகுதலாவது இறைவனை - அவன் செய்த உபகாரங்களை எண்ணியபோது ஆன்மபோதமுழுவதும் உருகுதல். கணவனைவிட்டுப் பல்லாண்டு பிரிந்து, அவனையே நினைந்து நினைந்து நைந்திருந்த கற்பரசி, கணவன் வர இருக்கின்றான் வந்துவிட்டான் என்றபொழுது எந்நிலையில் இருப்பாளோ அந்நிலையில் மனம் இளகுதல்.

அங்ஙனம் நெகாமையால் நான் ஒரு தோளாச்சுரையை ஒத்தேன் என்கின்றார். துளைத்த சுரைக்காய் நீருள் ஆழ்ந்து நீரை முகந்துகொள்ளும் இயல்பினது. தோளாச்சுரை பெரு வெள்ளமாயினும் மிதக்குமேயல்லாது முழுவதும் நனையாது. அதுபோல, அடியேன் நின் வெள்ளத்து ஆழ்ந்து அதன் வியாபகத்துள் வியாப்பியமாய் அடங்கியும், அருளின் கொள்கலமாய் ஏற்றும் பேரானந்தத்துத் திளைக்கவேண்டியவாய்ப்பை விட்டிருக்கின்றேன் என்பார் இங்ஙனம் கூறினார்.

தோளாச்சுரை என்பதற்குத் தோண்டாத பாரை எனப் பொருள் கொண்டு, பயன்படாத கருவியானேன் என்பாரும் உளர். இதனால் போந்த பொருள்நயம் இன்மை உணர்க. 'பொத்தல் சுரைக்காய் நீச்சலுக்கு ஆகாது' என்ற பழமொழி இதன் கருத்தை நன்கு விளக்குதலும் நோக்க.

இத்தால் நம்பி வாழ்ந்தாயே - இதனை நம்பி வாழ்ந்தாய் என்பது. நீ இதனை நம்பி இதனால் வாழ்ந்தாயே எனலுமாம். வாழ்ந்தாய் என்பது இகழ்ச்சிக் குறிப்பு. பொத்தற் சுரைக்காயை நம்பி கடலைக்கடக்கமுயல்பவன் கதிபோலாகும், என்னை நம்பி நீ அடிமைகொண்டது என்க.

ஊன் ஆகுபெயராக உடலை உணர்த்திற்று. 'உடலிடங் கொண்டாய்' எனப் பலவிடத்தும் கூறுதல் காண்க. மாயேயமான உலகப்பொருள்கள் உருகுமானால் தேயும்; என் மனமோ உன்னை நினைத்து உருகுமாயின் அது பெருகும் என்பார் 'உனை உணர்ந்து உருகிப் பெருகும் உள்ளத்தை' என்றார்.

கொடியேனாகிய என் உள்ளத்திற்குத் தானே உருகும் தன்மை இல்லாமையால் பெருகி வாழ்வதற்குரிய வாய்ப்பை இழந்திருக்கிறது. அடியேற்கு வாழ்வளிப்பதற்குமுன் அதற்கு வாயிலாகிய மனமுருகும் உபாயத்தை உதவினால் போதும்; அப்போதுதான் நீ அருளும் பெருக்கத்தை நான் சுவைத்து

அனுபவிக்க இயலும்; அதனை விரைவில் அருளவேண்டும் என விரைகின்றார்.

உருகிப்பெருகும் உள்ளத்தை வேண்டுதலால் இச்செய்யுள் சதாமுத்தியை விழையும் குறிப்பினது.

493 கூடிக் கூடி யுன்னடியார்
குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா
வாடி வாடி வழியற்றேன்
வற்றன் மரம்போல் நிற்பேனோ
ஊடி யூடி யுடையாயொடு
கலந்துள் ளுருகிப் பெருகிநெக்
காடி யாடி யானந்தம்
அதுவே யாக அருள்கலந்தே. 11

திருச்சிற்றம்பலம்

இ - ள்: நின் மெய்யடியார் பலரும் கூடிக்கூடிக் கூத்தாடுவார்களாகவும் மகிழ்பவர்களாகவும் ஆனந்தாநுபவத்திற் செருக்கி நிற்க, யான்மட்டும் வற்றல்மரம்போல வாடிவாடி உய்யும் வழியும் அற்று இருப்பேனோ? என்னை உடைமையாகப் பெற்றவனே! உன்னோடு பலகால் ஊடியும் கூடியும் இரண்டறக்கலந்து, உள்ளம் உருகி, அதனால் ஆனந்தம் பெருகி, நெகிழ்ந்து, பரவசமாய் ஆடியாடி, ஆனந்தமே யாளுக நின் திருவருளோடு கலந்து நிற்பேனோ? தேவரீர் திருவுளம்பற்ற வேண்டும் என்றவாறு.

நின்னடியார்கள் சிவானுபவமேலீட்டால் சிரித்தும் களித்தும் செருக்கி நிற்க, யான் மட்டும் வற்றல்மரம்போல வாடி வீழ வழியற்று இருப்பேனோ? உன்னோடு ஊடியும் கூடியும் கலந்து, உள் உருகி ஆனந்தமேயாக விளங்குவேனோ? தேவரீரே நினைத்துப் பார்க்கவேண்டும் என்பது கருத்து.

இது மாற்றாள் கலந்து மகிழ்வதைக்கண்ட கற்பரசி, ஆற்றாமையால் கிளைத்துத் தளிர்த்துப் பூத்துக் காய்த்துக் கனியாத வற்றல்மரம்போல • புதல்வர்களைப்பெற்று வழிவிளங்க வாழாமலிருப்பதற்குவருந்தியும் ஊடியும் கூடியுங்கலந்தும் வழிபெருகத் தளிர்த்த மரமாகவாழ்தலை விரும்பியும் நிற்கும்நிலையில் அடிகள் அருளியதுபோல அமைந்திருத்தல் காண்க.

அடியார்கள் தங்கள்தங்களுக்கு இறைவனுதவிய அருளனுபவம் தனித்தனியே சிறந்திருந்தமையை ஒருவருக்கொருவர்

வியந்து கூடிக்கூடிப் பேசியும் ஆடியும் சிரித்தும் களிக்கின்றூர்கள் என்பார் 'கூடிக்கூடி உன்னடியார் குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா' என்றூர். ஆக என்ற செயவெனெச்சம் ஆ என ஈறு குறைந்து நின்றது. குனிப்பாராக, சிரிப்பாராக என ஒவ்வொன்ரேடும் கூட்டுக.

வாடி வாடி என்றது அத்தகைய ஆனந்தக்களிப்பு தமக்கு உண்டாகாத ஏக்கத்தால் இயம்பிய எச்ச அடுக்கு. தலைவன் கூடிஞல்லது வழியாகிய சந்ததி பெருகுதல் கற்புடைய நங்கைக்கு இன்ருதலின் 'வற்றல்மரம்போல் வழியற்றேன்' என்கிருர். இப்போதும் மணமாகியும் நெடுநாள் மகப்பேறில்லாதாளை வற்றல்மரம் என்றல் உலகவழக்கு.

ஊடுதல் காமத்திற்கு இன்பமாதலின் பலகாலும் ஊடுதலை வேண்டுகின்றவர் 'ஊடிஊடி' என்கின்ருர். ஊடுதற்கு உரிமை எனக்குண்டு என்னும் உரிமையை விண்ணப்பிப்பார் 'உடையாய்' என்ருர். எவன் என்னைக் கூடுதற்குரியனே அவனெடு நான் ஊடுதற்குரியேன் என்பது கருத்து.

கலந்து, உருகி, பெருகி, நெக்கு, ஆடியாடி, ஆனந்தமேயாக அருள்கலத்தல் படிமுறையான ஆனந்தானுபவம். இவ்வாருக இத்திருப்பாட்டும் சதாமுத்தியை வேண்டி நிற்பதை அறிவித்தல் காண்க.

சதாமுத்தியைப் பிரார்த்திப்பதாகிய இப்பிரார்த்தனைப் பத்தில் அடிகள் உலர்ந்துபோனேன்; முனிவால் அடியேன் மூக்கின்றேன்; யாக்கை பொறுத்து எய்த்தேன்; புறமே கிடந்து புலம்புகின்றேன்; தேய்கின்றேன்; அயலார்போல அயர்கின்றேன்; வாடி வாடி வழியற்றேன் என்றெல்லாம் சிவானுபவம் பெற்று இழந்த பிரிவுத்துன்பத்தைக் கூறி, ஆனந்தமேயாக இருக்கும் அருள்நிலையை வேண்டிக்கொள்கின்ருர்கள் என்ற தொகுப்புக்காண்க.

# 33. குழைத்தபத்து

[ஆத்தும நிவேதனம்]

வாதவூரடிகள் இறைவன் தன்னை ஆட்கொண்டு மீட்டும் விடுத்து, தன்னைக் குழைவித்த அருமைப்பாடுகளை விளக்கித் திருப்பெருந்துறையில் விண்ணப்பிக்கின்றார்கள்.

வினைகளால் உயிரைத் தன்னிலை திரியுமாறு குழையச்செய்தல் குழைத்தல். சோறு குழைந்தது என்றவழிப் பதனுகிய சோறு தன் னிலையில் திரிந்து அளிந்து கஞ்சியோடு கஞ்சியாய்ச் சோற்றுரு வின்றி மெலிதல். அதுபோல இருவினைகளும் எடுத்த உடல் அழி யாமையால் உயிரைக் குழைத்தது எனக் கூறுதலின் இப்பெயர்த் தாயிற்று.

'குழைத்தால்' எனத் தொடங்கிப் பத்தாம் பாட்டினிறுதியில் 'குழைத்தாயே' என மண்டிலமாய் முடிதலின் இப்பெயர்த்தாயிற்று எனலுமாம்.

பழையவுரை, "நிராமய குழைத்தபத்து, ஆன்ம நிவேதனம்" என்ற அகத்தியச்சூத்திர மேற்கோளைத் தந்து, அடியாருறவாகிய பேரின்பமுற்றும், உருத சகலரைப்போலச் செருக்கு இன்றி, முன் போலப் பல வழக்கின் குழைந்திருப்பதே குழைத்தபத்து என்னும். இதனுல் முற்பதிகமாகிய பிரார்த்தனைப்பத்திற் கூறியது போல, அடியார்கூட்டத்தில் அமர்ந்திருக்கும் பேறுகிய பேரின்பம்பெற்றும், பெற்றேமே என்னும் தன்முனைப்பு இன்றி அவ்வின்பம் நிலைக்க வேண்டிப் பெறுதார்போலப் பலவாற்றுனும் மனம் குழைவதாக அறிவிப்பது என்பது பெறப்படும்.

பழைய குறிப்பு, ஆத்தும நிவேதனம்; அதாவது தேயத்தோடு ஒன்றல் என்பது கருத்தாகும் என்கின்றது.

பழைய புராணம், "இழைத்தேன் இவ்வாக்கை பொறுத்தினிக் கணமும் பொறுக்கலேன் ஏழையேனைக், குழைப்பதேன் பிழை பொறுத் தாளென இரங்கிக் கூறுதலே குழைத்த பத்தாம்" என்று பதிகவிளக்கம் தருகிறது.

இவை அனைத்தையும் இணைத்து எண்ணும்பொழுது தனக் கென்று ஒருரிமையும் இல்லாமையும், நல்லன செய்தலும் அல்லன ஒழிதலுங்கூட அருள்வயப்பட்டு ஆற்றப்படுவனவே என்றும்

விண்ணப்பித்துத் தான் என்பதொரு பொருள் இன்றி மெலிந்ததாக அறிவிக்கும் பத்துப்பாடல் கொண்ட இப்பகுதி குழைத்தபத்தாயிற்று என்று அறியக்கிடக்கின்றது.

புராண ஆசிரியர் கூற்றுப்படி, ஆட்கொண்ட நீ இவ்வுடலை அழிக்காமையால், அதனைத்தாங்கி மேலும் வினைகளை இழைத்து நொந்தேன்; இனிக் கணமும் பொறுக்கேன்; அடியேனை இங்ஙனம் மெலிவிப்பது எதற்கு? நான் எவ்வளவு பிழை செய்திருப்பினும் அவை அனைத்தையும் பொறுத்து ஆட்கொள்ளவேண்டும் என்று இறைவன் திருமுன் தன்னைப்பற்றி விண்ணப்பித்துக்கொள்ளுதலே ஆத்தும நிவேதனமாகிய குழைத்த பத்தாம். ஆத்தும - தான். நிவேதனம் - நன்றாக அறிவித்தல்.

சிலர், தன் அறியாமையால் தான் குழைவதை நீக்காது வஞ்சித்தமைதோன்ற விண்ணப்பித்தது என்பர்.

இப்பகுதிப் பாடல்கள் பத்தும் அந்தாதித் தொடையாலும், முதற்பாடலும் இறுதிப்பாட்டினிறுதிச்சீரும் மண்டலித்தும் முடிந் திருத்தல் காண்க.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

494 குழைத்தாற் பண்டைக் கொடுவினைநோய்
காவா யுடையாய் கொடுவினையேன்
உழைத்தா லுறுதி யுண்டோதான்
உமையாள் கணவா எனையாள்வாய்
பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ
பிறைசேர் சடையாய் முறையோவென்
றழைத்தால் அருளா தொழிவதே
அம்மா னேயுன் அடியேற்கே. 1

இ - ள்: என்னை ஆளாக உடையவனே! மிகப் பழைமையான கொடிய வினைகளால் விளையும் துன்பங்கள் என்னைக் குழைத்தால் காப்பாயாக; உமையம்மையாரின் தலைவனே! கொடிய வினைகளையுடைய யான் திருவடியிற்சேர்ந்து உய்யும் பொருட்டு முயன்றால் பயனுண்டோ? ஆதலால் நீயே திருவுள்ளம் இரங்கி என்னை ஆள்வாயாக; ஒருகலைப்பிறை தங்கிய சடையை உடையவனே! அடியேங்கள் தவறிழைத்தால் பிழைகளைப் பொறுக்க வேண்டாமோ? யான் முறையோ என்று உன்னை அழைத்தால் அம்மானே! உன் அடியானாகிய எனக்கு நீ அருளாது ஒழிவது தகுமோ? கூறியருள் என்றவாறு.

வினைகள் என்னைக் குழைக்கின்றன; வினைத்தடையிருக்கும் போது யான் உழைத்தாற் பயனுண்டோ? அடியேங்கள் பிழை செய்தால் பொறுக்கவேண்டாவோ? யாம்கூவினும் அருளாது ஒழிவது முறையோ என்பது கருத்து.

ஆன்மா கேவலத்துட் கிடக்கும்போதே சூக்கும கன்மமாய் உயிரைப்பற்றி நின்று, பிறவிகள்தோறும் விளைந்து பெருகி இடையறுது வருதலின் அதனைப் 'பண்டைக்கொடுவினைநோய்' என்றார்.

கய்முதலிய நோய்கள்வந்து ஆளை உருத்தெரியாது உருக் குலைப்பதுபோல வினைகள் உயிரினது அறிவையும் அஃதடைய இருக்கும் வீட்டின்ப முயற்சிக்குரிய ஆற்றலையும் வலியொடுக்கு கின்றது என்பார் வினைப்பயனை நோய் என்றும், அதன் துன்பைக் குழைத்தால் என்றும் கூறினார்.

காவாய் என்றது, பிணியால் இறக்குந்தருவாயில் இருப் பவனைப் பணம்கேட்டு உயிரைப்போக்கும் உலக மருத்துவன் போலாது வலிய விரைந்து வந்து காக்கவேண்டும் என்பார் விரைவுதோன்றக் 'காவாய்' என்றார்.

உடைமைகளைக் காப்பாற்றிக்கொள்வதில் உடையவற்கே பொறுப்பு அதிகம்வேண்டுவது. உடைமைக்கென்ன என்று தன்னைக் காக்கவேண்டியதன் இன்றியமையாமையை விளக்க 'உடையாய்' என்றார்.

படலம்மறைத்த கண் பார்க்க இயலாதது போலவும், விலங்கிட்ட கை வேலைசெய்ய முடியாததுபோலவும் என்வினை, வாயை வாழ்த்தவும், தலையைவணங்கவும், நெஞ்சை நினைக்கவும் விட்டிலது அதனால் மனம் மொழி மெய்களால் யான் எவ்வளவு முயன்றாலும் பயனென்ன என்பார் 'கொடுவினையேன் உழைத் தால் உறுதியுண்டோ' என்றார். தான்: அசை.

என் பிழைகண்டு ஒதுக்கிவிடாமல் ஆட்கொள்ளத்தான் வேண்டும் என்பார் 'உமையாள் கணவா எனை ஆள்வாய்' என்கிறார். எம்போலியர்க்கு அருள்வழங்கவே உமாசகாயராக எழுந்தருளியிருக்கின்றீர் என்றது குறிப்பு. கணவனை ஒரேழை ஒன்றைக்கேட்க, அக்கணவன் தன் மனைவியின்முன் மறுக்கக் கூசவேண்டிவருமே; அங்ஙனம் நிகழாதவண்ணம் நீ ஆட் கொள்வாய் என்பார் 'உமையாள் கணவா எனை ஆள்வாய்' என்றார் எனலுமாம்.

ஆன்மாக்களின் இயல்பு பிழை செய்தலே. அவற்றைப் பொறுத்தும், மீளவும் அவை நிகழாதவண்ணம் தடுத்தும் ஆட்கொள்ளவேண்டுவது தலைவர் கடமையன்றோ என்பார் 'பிழைத்தாற் பொறுக்கவேண்டாவோ' என்றார்.

பிழைகளைப் பொறுத்தல் தேவரீருக்கு வழக்கம் என்பதை சிரத்திலுள்ள பிறை காட்டிநிற்கவும் என்வகையில் அங்ஙனம் செய்யாமைக் காலந்தாழ்ப்பது கருணையன்று என்பார் 'பிறை சேர் சடையாய்' என விளித்தார்.

அம்மான் - தலைவன். வேலி பயிரைக்காக்க உதவுவது. அதுவே பயிரை அழித்தல் ஆகாது. முறைசெய்து காப்பாற்று பவனே இறைவன். அங்ஙனமாகவும் அடியேன் முறையோ என்று அழைத்தால் அருளாதொழிவதே? என வினவுகின்றார். அன்றியும் யான் உன் அடியான் அன்றோ? அடியானுக்குற்ற அவதியைப் போக்காத ஆண்டவனு நீர் என்று கருணை தோன்ற விளிக்கின்றார்.

இத்திருப்பாட்டில், உடையாய் முதலிய விளிகள் தம் வேண்டுகோளுக்குப் பொருந்த அமைந்திருப்பதால் அவற்றை முற்கூறியவாறு ஆங்காங்குத் தனித்தனி அமைத்துப் பொருள் செய்தலே நயமாம். அன்றி, உடையாய்! கணவா! சடையாய்! அம்மானே! என விளிகளை அடுக்கி ஏனையவற்றை ஒருதொட ராக்கி உரைப்பாரும் உளர். அது நயமின்மை அறிக.

இவ்வண்ணம் ஆன்மா தன்னிலைகளை எடுத்து இறைவன் மூன் விண்ணப்பிப்பதால் இத்திருப்பாடல் ஆத்துமநிவேதன மாதல் காண்க.

495 அடியேன் அல்ல லெல்லாமுன்
அகல ஆண்டா யென்றிருந்தேன்
கொடியே ரிடையாள் கூறுஎம்
கோவே யாவா என்றருளிச்
செடிசே ருடலைச் சிதையாத
தெத்துக் கெங்கள் சிவலோகா
உடையாய் கூவிப் பணிகொள்ளா
தொறுத்தால் ஒன்றும் போதுமே. 2

இ - ள்: மின்னற்கொடியை ஒத்த இடையினையுடைய உமாதேவியை ஒருபாகமாக உடையவனே! எம் அரசே! அடியேனுடைய துன்பங்கள் அனைத்தும் தாமே விலக ஆட் கொண்டாய் என்று எண்ணியிருந்தேன்; ஆ! ஆ!! என

இரங்கி, வினைகள் சேர்தற்குக் காரணமாகிய இவ்வுடலை இன்னும் அழிக்காதது ஏனோ? எங்கள் சிவலோகா! எம்மை உடையவனே! அடிமைகளாகிய எம்மை அழைத்துப் பணிகொள்ளாமல் ஒறுத்தால்மட்டும் போதுமா? அருளவும் வேண்டாமா என்றவாறு.

ஆட்கொண்ட அன்றே வினைகள் அகன்றன என்றிருந்தேன்; இவ்வுடலம் அழியாமையால் வினைச்சேடங்கள் இன்னும் உள்ளன என்று அறிகின்றேன்; வினைவிளை புலமாகிய இவ்வுடலைச் சிதைக்காத காரணம் என்ன? ஆட்கொண்டு வேலை வாங்காமல் தண்டித்தால்மட்டும் போதுமா? அருளவும் செய் என்பது கருத்து.

இதற்கு இங்ஙனமன்றி, அடியேனுடைய துன்பங்களைத் தும் நீங்க ஆண்டாய் என்றிருந்து ஏமாந்தேன்; ஆ! வா என்று அருளி, வினைக்கீடான உடலைச் சிதையாதது ஏனோ? எங்களை ஆளாகக் கூவி, வேலை வாங்கிக்கொள்ளாமல் வாளா வைத்து ஒறுத்தால் அது ஒன்றுமே உண்மையான அடிமைக்குத் தண்டனையாக அமையுமே! அதைவிட்டு உடலைச் சிதையாது இருக்கின்ற அதாவது உடற்சிறையுள் அடைக்கின்ற தண்டனையும் வேண்டாமே என்று உரைத்தலுமாம்.

வேலைக்கு ஆளை அமர்த்தி, முதல்வன் அவனை அழைத்து வேலை வாங்காமலிருப்பதே அவனுக்கு உயர்ந்த தண்டனையாதலை உலகியல்நோக்கியும் உணர்க.

'அல்லல் அகல ஆண்டாய்' என்றது விளக்குப் புக இருள் மாய்ந்தாங்கு என்பதுபோல்வதோர் வழக்கு. 'என்று இருந்தேன்' என்றது பிராரத்தசேடம் இன்னும் உண்மையை அறியாது அயர்ந்தேன் என்பதாம்.

நியதியின்வழி ஆன்மாக்களை இயக்கிப் பணிகொள்ளும் இறைவன் வினைகள் அனைத்தையும் போக்கிலன்; ஏமாற்றினன்; அதனை அறியாது இருந்தேன் என்பர் சிலர். இறைவனிலைக்கு ஏமாற்றினன் என்பன போன்ற வழக்காறும் பாவமாதல்கண்டு தெளிக.

உமையாள்கூறு! கோவே! என்றவிளிகள் இறைவனுடைய பரமகருணையையும், நடுநிலை தவறாமையையும் குறிப்பித்து நின்றன. புண் பொதிந்துவைத்து மூடாத மருத்துவன்போல இறைவன் வினைச்சேடம் நுகர்தற்குக் கருவியான உடலிருக்க,

வினையெல்லாம் அகல ஆண்டாளுமினும் பிராரத்தசேடத்தை நுகரவைத்து ஆண்ட அள்வே கொள்ளப்பெறும்.

செடி - சிறு தூறு. உவமவாகுபெயராக வினைகளையுணர்த் திற்று. செடி சேர் உடல் - வினைகள் சேர்தற்குக் காரணமான உடல் எனக் காரணப்பொருள் தோன்ற விரிக்க. சிதைத்தல் - செடிகளைப் பின் தழைக்காதவண்ணம் வெட்டிக்கொத்தி எறிதல் போல உடலைத் தம்நிலை கெடுத்தல்.

'உடையாய் கூவிப் பணிகொள்ளாது ஒறுத்தால் ஒன்றும் போதுமே' என்பதற்கு, அநாதியே பிரிவில்லாது உடையாய்! மகாகேவலத்திலே இருந்த என்னைப் பரிபாக கேவலத்திற்கு அழைத்து அடிமையாக்கியவண்ணமே சகலகேவலத்திலிருந்த என்னைச் சுதந்தரவீனமான சுத்தஞ்செய்யத் திருவுளமில்லாத கோபப் பிரசாதம் அருளினும் கிருபை பெறுவேனே என்று கூறும் பழையவுரையின் நயம் சிவாகம நெறிநின்று சிந்தித்து அனுபவிக்கவேண்டிய பகுதியாம் என்க.

நீ என்னுடைய துன்பங்கள் முழுவதும் அகலுமாறு ஆண்டு தீர்த்துவிட்டாய். ஆதலின் இனிச் செய்யவேண்டியது என்? என்று வாளா இருந்தேன்; அக்காலை என்னுடல் என்னைத் தன்வயமேயீர்த்து அல்லலுட் செலுத்தியது. அதுபோது என்னிலையை எண்ணினேன். நின் வஞ்சம் புலனாயிற்று; நீ உடலுயிர் வேறு செய்யாமல் ஒன்றுபடுத்தியே ஒறுக்கின்றாய் என்பதனை உணர்ந்தேன் என்பாரும் உளர். சிறந்தன தெரிக.

இத்திருப்பாடல் உடல் சிதையாமையால் உளதாம் கேடுகளை உணர்த்துதலின் ஆத்தும நிவேதனமாதல் காண்க.

496 ஒன்றும் போதா நாயேனை
உய்யக் கொண்ட நின்கருணை
இன்றே யின்றிப் போய்த்தோதான்
ஏழை பங்கா எங்கோவே
குன்றே யனைய குற்றங்கள்
குணமா மென்றே நீகொண்டால்
என்றான் கெட்ட திரங்கிடாய்
எண்டோள் முக்கண் எம்மானே. 3

இ - ள்: எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும் உடைய எம்மானே! உமாதேவியை ஒருபாகமுடையவனே! எம் கோவே! மலையை ஒத்த குற்றங்களையும் குணமாக நீ கொண்டால் கெட்டது என்னவோ? ஒன்றற்கும் பற்றாத நாய்

போன்ற என்னை உய்ய அன்று ஆட்கொண்ட தேவரீரது திருவருள் இன்று இல்லாமற்போயிற்றோ? திருவுள்ளம் இரங்குவாயாக என்றவாறு.

அன்று ஆட்கொண்ட திருவருள் இன்று இல்லாமலா போயிற்று; அரசனாகிய நீ என் குற்றங்களையெல்லாம் குணமாகக்கொண்டால் கெட்டது என்ன இரங்குக என்பது கருத்து.

ஒன்றும் போதா நாயேனை உய்யக்கொண்ட நின்கருணை - குருந்தடியில் அன்று குருவாகவந்து ஆட்கொண்டகாலத்து, தம் நிலைமை இவ்வாறு இருந்தது என விண்ணப்பிக்கின்றது. உன்னால் ஆட்கொள்ளப்பட்டவர்கள் அவரவர்கள் பரிபாக நிலைக்கும், மேற்கொண்ட உபாயங்களுக்கும் ஏற்பச் சாலோகாதி நிலைகளையும், மந்ததரமுதலான சத்திநிபாதநிலை வேறுபாடுகளையும் எய்தற்கு உரியராயினர். நானோ இவற்றுள் ஒன்றற்கும் உரிமையாகாத உலோகாயதன் போல இருந்தேன். ஆனால் நன்றி அறிதலாகிய தன்மைமட்டும் ஏதோ பண்டை நற்றவத்தாற் சிறிது என்பால் இருந்தது என்பார் 'ஒன்றும் போதா நாயேனை' என்றார்.

அன்றியும் இன்றோ அடியேன், உன்னை 'எம்கோ' என்றும் 'ஏழைபங்கன்' என்றும் அறியும் தகுதியும், விளிக்கும் தகுதியும் பெற்றுள்ளேன்; குற்றஞ்செய்தல் உயிரினியல்பு என்பதனை உணர்ந்து, குற்றமே செய்யினும் குணமெனக் கருதுங் கொள்கை நின்பால் இருப்பதையும் தெளிந்த சிவஞானியானேன்; இப்போது தேவரீர் ஆட்கொள்ளத் தடையில்லை என உரிமையும் தகுதியும் உடைமையை விண்ணப்பிக்கின்றார்.

என்பால் கருணையில்லாமை ஒன்றே காரணம் என்பார் 'இரங்கிடாய்' என்றார்.

திசைகள் யாவும் நின் தோள்களாகவும், ஒளிகள் யாவும் நின் கண்களாகவும் விளங்குவதால் நீ அல்லாற் பிறிது மற்றின்மை உணர்கின்றேன் என்பார் 'எண்டோள் முக்கண் எம்மானே' என்றார். எண்டோள் - திசைகள். முக்கண் - சோம சூரியாக்கினி. ஆகவே உலகமனைத்தும் இறைவடிவு என்பதை உணர்கின்றேன் என்பதாம்.

இவ்வண்ணம் தன்னிலைமைகளைத் தெரிவித்துக்கோடலின் இச்செய்யுள் ஆத்துமநிவேதனமாதல் காண்க.

497 மானேர் நோக்கி மணவாளா
மன்னே நின்சீர் மறப்பித்திவ்
ஊனே புகவென் றனை நூக்கி
உழலப் பண்ணு வித்திட்டாய்
ஆனா லடியேன் அறியாமை
அறிந்து நீயே யருள்செய்து
கோனே கூவிக் கொள்ளுநாள்
என்றென் றுன்னைக் கூறுவதே. 4

இ - ள்: மான் நோக்கினை ஒத்த நோக்கத்தையுடைய உமாதேவியின் மணவாளா! அரசே! உன் புகழை மறக்கச் செய்து, இந்த உடலிற்புகுந்து உழலும்படியாக என்னைச் செலுத்திவிட்டனை; கோனே! ஆனால், அடியேனது அறியாமையை யானறிந்து உய்யும்வண்ணம் நீயே அருள்வழங்கி என்னை அழைத்துக்கொள்ளும் நாள் என்றைக்கு? உன்னைப் புகழ்ந்துகூறும் நாள் என்றைக்கு? என்றவாறு.

நின்புகழை மறக்கச்செய்து இவ்வுடலிற் புகுத்திவிட்டாய்; நான் அறியாமையால் வருந்துகின்றேன்; அறியாமையைப் போக்கி நின்னை அறியும் அறிவினை விரியச்செய்து உன்னையே புகழும் நாள் என்றோ என்று குழைந்தவாறு.

சிவபூசா துரந்தரர்களாக இருந்த திரிபுராரிகளைத் திருமாலைக்கொண்டு பௌத்த மதத்தை உபதேசிக்கச்செய்து, சிவநேசத்தை மறக்கச்செய்து, பின்னர் அவர்கள் செருக்கடக்கி உய்யக்கொண்ட வழக்கம்போல, இன்று என்னையும், நின்புகழை மறக்கச்செய்து இவ்வுடலிற் புகுத்தினாய்; அடியேனோ நீ தந்த தீட்சையாதி சம்ஸ்கார விசேடங்களால் அறியாமை அறிந்து அறிவகற்றினேன்; நீயே கூவிக்கொள்ளும் நாளையும் நின்னைப் புகழும் நாளையும் எதிர்நோக்கியிருக்கின்றேன் என்பதாம்.

'மறப்பித்து' என்றது நின் சீடனாகிய யான் மறவாமல் உறுதியுடன் எண்ணிக்கொண்டேயிருந்தேன்; அத்தகைய என்னையும் மறக்கச்செய்தாய்; இதுவே நின் கருணையினாற்றல் என்பது குறித்ததாம்.

உடற்கணுள்ள அருவருப்புத்தோன்ற 'இவ்வூனே புக' என்றும், மன்றுபுக மறுக்கும் மாடுபோலப் பலகாலும் இவ்வுடற்கண் புகேன் நின்னருள் வாழ்விலேயே இருப்பேன் எனவும் என்னை வலிந்து புகுத்தினாய் என்பார் 'புக என்றனை நூக்கி'

என்றும், புகுந்த உடலில் நின்னருளாரமுதமுண்டு இன்புற்றிருக்க வைக்கக் கூடாதா? அதனைவிட்டு வருந்தச் செய்தாய் என்பார் 'உழலப்பண்ணுவித்திட்டாய்' என்றும் அருளினர்.

அறியாமை அறிந்து ஆண்டான் புகச்செய்ததையே வாய்ப்பாகக்கொண்டு நானும் நின்சீர் மறந்து, என்சீர் போற்றி மயங்கிவிட்டேனே என்னும் என் அறியாமையை உணர்ந்து உய்ந்தேன் என்றருளினர். இதனையே சித்தியாரினும்,

" அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை
அருளினு னறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயின் "

எனக் குழையும் உபாயமாக எடுத்தாளுதல் காண்க.

நீயே அருள்செய்து கூவிக்கொள்ளும் நாள் என்று? எனக் கூட்டுக. இங்ஙனம் ஊனுடலில் புகுத்தி உழலவித்த நீயே இரங்கி ஆவா என்று அழைத்துக்கொள்ளும் நாள் என்றைக்கு என்றூர், ஆன்மாக்களுக்கு என்றும் சுதந்திரம் இன்மையை உணர்த்த.

அடியேனுடைய குறிக்கோள் எப்போதும் உன்னைப்பற்றிப் புகழ்வதொன்றே. அதனை மறப்பித்தமை என்னால் ஆற்றெணுத் துயராகியது. அந்நிலை மாறி, என்றும் உன்னையே கூறிக்கொண்டிருக்கவேண்டும். அதில் ஈடற்ற இன்பம் எனக்கு இருக்கிறது. அப்புகழைக் கூறுவது என்று? என்றூர்.

உழலப்பண்ணுவித்தமையால் தன்னைக் குழைத்தமை கூறுதலின் இது குழைத்தபத்திற்கு இயைபுடைத்தாயிற்று.

498 கூறு நாவே முதலாகக்
கூறுங் கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ
தீமை நன்மை முழுதுநீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை
மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கில்
தேறும் வகையென் சிவலோகா
திகைத்தால் தேற்ற வேண்டாவோ. 5

இ - ள்: பேசும் நா முதலாகக் கூறப்படுகின்ற கரணங்கள் யாவும் நீயே; தெளிதற்கான உபாயங்களும் நீயே; மறதியும் நீயே; எனக்குளதாம் நன்மை தீமைகள் அனைத்தும் நீயே;

அடியேற்கென்று தனித்ததோர் தன்மை சிறிதுமில்லை; இது சத்தியம்; யான் திகைத்தால் கடைத்தேறும் உபாயமாக உன்னைப்பற்றியே விரித்து விரித்து புகழ்ந்துகூறின், சிவலோகா! அடியேனைத் தெளிவிக்க வேண்டாவோ என்றவாறு.

'அடியேனுடைய அகக்கரணம் புறக்கரணம் அனைத்தும் நீ; தேறும் உபாயமும் திகைப்பும் நீ; நன்மை தீமை எல்லாம் நீ; எனக்கென்று தனித்தன்மை ஒன்றுமில்லை; இது சத்தியம்; யான் கடைத்தேற உன்னையே புகழ்கின்றேன்; அதுகொண்டு திகைத்த என்னைத் தேற்றவேண்டாவோ என்று குழைந்தமையைத் தெரிவிக்கின்றார்கள்.

கரணங்களில் அகக்கரணமும் புறக்கரணமும் ஆக இருவகையுள்ளன. அகக்கரணங்கள் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. புறக்கரணங்களில் செய்கரணமும், அறிகரணமும் ஆக இருவகை உள்ளன. அவற்றுள் செய்கரணங்கள் வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என்பன. அறிகரணங்கள் மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன. இவைகளுள் அடிகள் 'கூறும் நாவே முதலாகக் கூறும் கரணம்' என்றமையால், நா கூறுதலாகிய தொழிலால் செய்கரணமாயும், சுவையறிதலாகிய பண்பால் அறிகரணமாயும் இருக்கும் இயைபால் இருவகைப் புறக்கரணங்களையும் குறித்தலின் என்க. புறக்கரணம் கூறவே அவற்றை இயக்குகின்ற அகக்கரணங்களும் கொள்ளப்பட்டன.

தேறும்வகை நீ - தெளியும் உபாயமும் நீயே. மாயையில் அழுந்தி, மாயேயங்களை நுகரும்போது, தேனுள் வீழ்ந்த வண்டுபோல மாயேயங்களே தானாக மயங்கிநிற்கின்ற வேளையிலே யான் இறைவன்; உன் வினைக்கேடனென்று உண்மையுணர்த்தித் தெளிவித்தலின் இங்ஙனம் கூறினார்.

தெளிந்து, திருவடிகளைச் சார்ந்தபோது திருவருளன்றி வேறொன்றும் புலப்படாமையால் திகைப்புண்டாயிற்று என்பார் 'திகைப்பும் நீ' என்றார்.

அறிவு திரிந்த மகனை ஆட்கொள்ளுகின்ற ஆசிரியன், அறியாமையிற் சாராது சார்ந்து மகனேடொன்றி அவனைத் திருத்துவதுபோல, யான் செய்யும் துரிசுகட்கு உடனாகியும், துரிசுபோக்கித் தூய்மையளித்து இன்பமூட்டியும் அருளுதலின் 'தீமை நன்மை முழுதும் நீ' என்றார். ஆகவே பாகன்வழி இயங்கும் யானைபோலத் தமக்கு எதிலும் சுதந்திரமின்மையைச் சொல்லியவாறும். இங்ஙனம் தன்னை அர்ப்பணித்தலால் வரும் பயன் ஆகாமிய சஞ்சித வினைகள் ஏறாமையாம் என்க.

துன்ப இன்ப நுகர்ச்சியும் இறைவனுகவே, நுகர்பவனுகிய ஆன்மா உண்டு என்றமுனைப்பும் மடங்கிப்போதலின்-எல்லாம் சிவமயமாகக் காணப்படுதலின் 'வேறோர் பரிசு ஒன்று இங்கு இல்லை' என்றதாம்.

மெய்ம்மை - சத்தியம். இவ்வனுபவம், பேய்கோட்பட்டான் பேய்வசமாகச் சில்காலம் விளங்குதல் போலவும், ஆவேசங் கொண்டவன் சிலகணம் தெய்வத்தன்மையிற் சிறத்தலும் போல் வதன்று; சிவாநுபவி என்று உலகவர்சொல்லப் பொய்ம்மையாக ஏற்றுக்கொண்டதுமன்று; சத்தியம் என்றவாறும்.

இங்ஙனமன்றி, மெய்ம்மை உன்னை விரித்துரைக்கில் என ஒருதொடராகக்கொண்டு உரைத்தலுமாம்.

ஐம்புலவின்பங்களை ஆரத்துய்ப்பான் துய்க்குங்கணத்து அதுவதுவாயே இருந்து துய்ப்பானே அன்றி, இங்ஙனம் இருந்தது என்று சொல்லவும் மாட்டான். அவற்றில் பிரிந்து தனியான காலத்திலேயே 'வற்றுது முற்றுது இவணலமே' என்பான். அதுபோலக் கருவி கரணங்களும் துன்ப இன்பங் களும் இறைவனுகவே அனுபவிக்கின்றவர், இறைவனைப்பற்றி விரித்துரைப்பது என்றல் அதுவுமோர் திகைப்பு ஆதலின், அதனை உளங்கொண்டு 'உரைக்கில் தேறும் என்' என்று திகைத்து, 'திகைத்தால் தேற்ற வேண்டாவோ' என்றும் விண் ணப்பிக்கின்றர்கள்.

இவ்வண்ணம் தன்னைப்பற்றி விண்ணப்பித்தலின் இத் திருப்பாடல் ஆத்துமநிவேதனமாதல் காண்க.

499 வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தாய்
யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே. 6

இ - ள்: அடியேன் விரும்பத்தக்க பொருள்கள் இவை என்பதை யான் விண்ணப்பிக்காமலே அறிபவன் நீ; அடியேன் அதையறிந்து நின் திருவுள்ளக் குறிப்பின்வண்ணம் வேண்டிக் கொள்ள, அவை முழுதையும் அருள்பவனும் நீயே; இடை விடாது அதுவேண்டும் இதுவேண்டும் என்று வேண்டிக்

கொண்டேயிருக்கின்ற திருமாலுக்கும் அயனுக்கும் அரியவன் நீ; அடியேன் தகுதி அறிந்து, அடியேனை விரும்பிப் பணி யாளாக ஏற்றனை; 'இவ்வடிமைக்கு இதுபோது இன்னது வேண்டும்' என்று நீ எதனை விரும்பி அருள்செய்தாயோ, அதனை அடியேனும் விரும்பினேனல்லது, என்னால் விரும்பப்படும் தன்மையது ஒன்று வேறாக உண்டானால் அதுவும் தேவரீர் திருவுள்ளக்குறிப்பேயாம் என்றவாறு.

அகப்பற்று புறப்பற்றுக்களைவிட்டு, நுகர்வனவும் நுகர்ச்சி யும் நுகர்த்துவானும் இறைவனே ஆதலின் என் விருப்பமிது என்று வேண்டிக்கொள்ள எமக்கு என்ன இருக்கிறது என்று சிவனருளில் அடங்கிக் கிடக்கின்ற எனக்கு வேண்டிய எல்லாம் அருளித்தருள்கிறாய்; தன்முனைப்பால் பகை ஒழியவேண்டும், பதவி நீடிக்கவேண்டும், படை அருளவேண்டுமென்று எஞ் ஞான்றும் எதனையாவது வேண்டிக்கொண்டேயிருக்கின்ற மால் அயன் முதலியவர்களுக்குக் காணுதற்கும் அரியனாகின்றாய் என இறைவன், தற்போதமிழந்து தலைவனருளில் ஈடுபட்டார்க்கு எளியனாகவும், தன்முனைப்பும் தன்னலமும் உடையவர்களுக்கு அரியனாகவும் இருத்தலை உணர்த்துகிறது இத்திருப்பாடல்.

காய்ச்சல் கண்ட குழந்தை புளியை விரும்பினால், தாய் புளியைக்கொடுத்து, போனகாய்ச்சலைப் புளியிட்டழைப்பாளா? மாட்டாள். அதுபோல, இறைவனும் ஆன்மாக்களுடைய பரிபாகநிலைக்கு ஏற்ப இன்னகாலத்து இன்னது வேண்டும் என்பதை அறிவார் என்பார் 'வேண்டத்தக்கது அறிவோய் நீ' என்றார்.

தாய்க்குப் பாலூட்ட வேண்டுமென்ற விருப்பமிருப்பினும், குழந்தை அழுதாலன்றித் தூக்கி மார்போடணையாள், அது போல, இறைவனும் இவ்வுயிர்க்கு வேண்டுவது இதுவெனத் திருவுளங்கொள்ளினும், அவ்விருப்பை அவ்வுயிர்கள்மாட்டுத் தோன்றச் செய்து, அவைகள் வேண்டத் தருவார் என்பது விளங்க 'வேண்டத் தக்கது' என்றார்.

எல்லையில்லாத தாயன்பு வயிறுநிறையப் பாலூட்டுவது போல, இறைவனும், ஆன்மா தான் தந்த உணர்வின்வழி நின்று ஓரளவு வேண்டிக்கொள்ள, உணவுக்கு அரிசி கேட்ட இரவலன் நிலைநோக்காது, தன்தகுதிக்கேற்ப யானையும் யானை சுமக்கும் பொன்னும் தந்த வள்ளல்போலப் பெரிதும் அனைத் தும் உதவுகின்றான் என்பார் 'வேண்ட முழுதும் தருவோய்' என்றார்.

வேண்டுதல் - தன்னலங்காரணமாகக் காமியப்பயன்களைக் கருதிப் பிரார்த்தித்தல். என்னைப்போல் என்கடன் பணிசெய்து கிடப்பதே என்று அவர்களிருந்தால், தலைவன் 'தன் கடன் அடியேனையும் தாங்குதல்' என்று பேரின்பமுழுதும் அருளியிருப்பன். தன் தகுதிக்கு ஏலாதவற்றைப் பெறவும், வினைகாரணமாக வரும் நலந்தீங்குகளைப் பயப்பனவற்றை மாற்றியமைத்துக்கொள்ளவுமாக வேண்டுவர். அதனால் இறைவன் அவர்கட்கு அரியனாகின்றான் என்பதாம்.

பணி - பணியாள். தொழிலின்பெயர் தொழில்முதலையுணர்த்தியதால் தொழிலாகுபெயர். தொழிற்பெயராகவே தொண்டினைக் கொண்டாய் எனலுமாம். அடியேன் நின்னருள்நிழலிலேயே வாழும் தகுதியற்றவனாயினும் என்னைக் கருணைகொண்டு விரும்பிப் பணிகொண்டாய்; அடியேனும் இறைவன் நம்மை விரும்பிப் பணிகொண்டனரே என்னும் மிகையால் என் விருப்பமிது எனத் தெரிவியேன்; உன்விருப்பெதுவோ அதுவே என் விருப்பம் என்பேன் என்பார் 'நீ யாதுவேண்டியருள்செய்தாய் யானும் அதுவே வேண்டின் அல்லால்' என்றார்.

தேவரீர் திருவுள்ளக் குறிப்பிற்கு மாறாக என்னிடம் எத்தகைய விருப்பமும் எந்தச் சூழ்நிலையிலும் விளையாது; அங்ஙனம் விளையுமாயின் அதுவும் உன் உள்ளக்குறிப்பாகவே இருக்கும் என்பார் 'வேண்டும் பரிசு ஒன்று உண்டென்னில் அதுவும் உன்தன் விருப்பன்றே' என்றார்.

இவ்வண்ணம் தற்போதம் கெட்டு, எல்லாம் அருள்மயம் என்றிருக்கும் தன்னிலையைத் தெரிவித்தலின் இத்திருப்பாடல் ஆத்தும நிவேதனமாயிற்று.

500 *அன்றே யென்றன் ஆவியும்*
*உடலும் உடைமை யெல்லாமும்*
*குன்றே யனையாய் என்னையாட்*
*கொண்ட போதே கொண்டிலையோ*
*இன்றோ ரிடையூ றெனக்குண்டோ*
*எண்டோள் முக்கண் எம்மானே*
*நன்றே செய்வாய் பிழைசெய்வாய்*
*நானோ இதற்கு நாயகமே.* 7

இ - ள்: எட்டுத் தோள்களையும், மூன்று கண்களையும் உடைய எம் தலைவனே! மலையை ஒத்தவனே! அடியேனை ஆட்கொண்ட அன்றைக்கே, என் உடல் பொருள் ஆவி மூன்றையும் நினவாக ஏற்றுக்கொண்டனை அன்றோ! அடிமை

யாகிய எனக்கு இன்று ஏதாயினும் துன்பம் உண்டோ? எனக்கு நன்மையைச் செய்; தீமையைச் செய்; இதற்குத் தலைவன் எளியேன் அல்லேன் என்றவாறு.

குருந்தடியிற் குருவாக வந்து ஆட்கொண்ட காலத்து என் உடல் பொருள் ஆவி மூன்றையும் நின்னுடையனவாக ஏற்றுக் கொண்ட பிறகு எனக்கென்று என்ன இருக்கிறது? எனக்கு இடையூறுகள் அனைத்தும் உனக்கே நட்டம் விளைப்பன; ஆதலால் எனக்கு நன்மை செய்; தீமை செய் இதற்குரிமை எனக்கு ஏது? என்பது கருத்து.

குன்று - மலை. இறைவன் ஆனந்தமலையாதலின் 'குன்றே அனையாய்' என்றார். குன்று தன்னடைந்தார்க்கு இன்பங்கள் தருதல்போலவும் துன்பங்கள் சாராதவண்ணம் தடுத்துக் காத்தல்போலவும் இறைவன் அருள்செய்தலின் இங்ஙனம் கூறினார்.

உயிர்கள் அநாதியே இறைவனுக்கு அடிமையாயினும் அன்றே என்றன் ஆவி கொண்டிலையோ என்றது, இதுவரை மலமறைப்பால் யான் உன் அடிமை என்பதையும், நீ ஆண்டா னென்பதையும் அறியாதிருந்தேன்; நீ ஆட்கொண்ட அன்று தொடங்கி, என் மலமறைப்பு அகன்றதாதலின் யான் என்பதும் எனது என்பதும் இல்லாமையையும் அவை அனைத்தும் நின் னுடைமை என்பதையும் உணர்ந்தேன் என்றருளினர்.

உடல் - வினைப்போகத்திற்காக இறைவனால் வினைக்கீடாக அருளப்பெற்றது. அதனை ஆண்டவனிடம் ஒப்பிக்கவே அவ் வுடல் வழிதவறித் தீமைபுரியாதென்பதும், அங்ஙனம் புரியினும் அத்தீமை இறைவனதாமேயன்றி, என்னைச் சாராதென்பதும், அதனால் வினையும் துன்பங்கள் என்னை வாதியா என்பதும் விளக்க 'இன்றோரிடையூறு எனக்கு உண்டோ' என்றார். உண்டோ என்ற ஓகாரம் இல்லையென்ற எதிர்மறை உணர்த்தி நின்றது.

இறைவற்கு எட்டுத்திசைகளும் தோள்கள். முச்சுடர்களும் கண்கள். ஆகவே, இறைவன் விசுவரூபன். உயிர் எது செய்யி னும், எதை விரும்பினும், எதைப் பெறினும் எல்லாம் நினதே என்பார் 'எண்தோள் முக்கண் எம்மானே! நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகம்' என்று அருளினர். நாயகம் - தலைமை.

நன்றே செய்வாய் பிழையே செய்வாய் உன்னைக் கேட்பார் யார்? நீ செய்தவற்றை நல்லனவாகவே கொள்ளுதல் என் கடமையாம் என்றார் என நயமுரைப்பர் சிலர். கேட்பார் இன்மையான் இறைவன் எது செய்யினும் செய்க எனின் அது இறைவனுடைய நடுநிலைக்கும், கருணைக்கும் இழுக்குப் பயத்தலானும் யானும் என் மாட்டாமையால் நீ செய்த தீமைகளையும் நல்லனவாகக் கொள்வேனென்றது உயிரின் மாட்டாமையையும் உணர்த்துதலானும் இது இலக்கிய நயமாக இனிப்பதாயினும் சிவநெறி மரபிற்கு ஏலாமை காண்க. ஆதலான் ஆன்மா பெத்த நிலையினும் முத்தி நிலையினும் சுதந்தரமற்றது என்ற உண்மையை உணர்த்துவதாகவும், ஆன்மா அதனை அறிந்து அனுபவிக்கும் ஆற்றல் அருளப்பெற்றிருப்பதாகவும் விளங்குதல் காண்க.

தான் தலைமை அல்லேன் என்பதை உணர்ந்து, எல்லாம் உன் பரம் என விண்ணப்பிக்கின்றமையின் இத்திருப்பாடல் ஆத்துமநிவேதனமாதல் காண்க.

501 நாயிற் கடையாம் நாயேனை
நயந்து நீயே யாட்கொண்டாய்
மாயப் பிறவி யுன்வசமே
வைத்திட் டிருக்கும் அதுவன்றி
ஆயக் கடவேன் நானோதான்
என்ன தோவிங் கதிகாரம்
காயத் திடுவா யுன்னுடைய
கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே. 8

இ - ள்: நெற்றியில் கண்ணுடைய பெருமானே! நாயினும் கீழான நாயை ஒத்த அடியேனை, விரும்பி, நீயே ஆளாக ஏற்றுக்கொண்டனை; எனக்கு இனி வர இருக்கும் மாயா காரியமான பிறவிகளை உன்வசமாக வைத்திருப்பதல்லாமல், நானோ இதனைப்பற்றி ஆராயக் கடமைப்பட்டவன்; இதில் அதிகாரம் என்னுடையதோ? உடற்சிறையில் இடு; அல்லது உன்னுடைய திருவடியின் நிழலிலே இருத்து; எதுவேண்டுமாயினும் செய் என்றவாறு.

இறைவா! இனி வரக்கடவ பிறவிகள் யாவும் உன்வசமாக அமைந்தவை; ஆதலால் என்னை மீளவும் பிறக்கச்செய்; அல்லது பேரின்பக்கடலாகிய திருவடியிலே இருத்து; நீ எது வேண்டுமாயினும் செய் என்பது கருத்து.

நாய் பிறப்பால் இழிந்ததாயினும், நன்றிமறவாத் தன்மை யால் உயர்ந்தது. 'நாயனையார் கேண்மை கெழீஇக்கொளல் வேண்டும்' என்பர் பிறரும். அதிலும் கடையாய நாய் புழுத்தலை நாய். புழுத்து அலைகின்ற நாய் தன்னைக்காப்பார் பிறர் இலர் என்ற உறுதியால் தன்னை வளர்த்த தலைவனையே சாரும். அது போல அடியேனும் இழிந்த பிறவியால் இருவினை நோயுற்று உழல்வேன் என்பார் ' நாயிற்கடையாம் நாயேனை' என்றார்.

எத்தனையோ முனிவர்களும், சிவஞானியரும் நின்னருள் வேண்டித் தவங்கிடக்க, ஒன்றற்கும் பற்றாத என்னை நீ விரும்பி ஆட்கொண்டமைக்குக் காரணம் இரங்கத்தக்க இவனை ஆட் கொள்ளுதலே எம் பெருமைக்கு எல்லை என்பதை உலகவர் உணர்ந்து ஈடேற 'நீயே நயந்து ஆட்கொண்டாய்' என்றார்.

பிறவி மாயாகாரியமாக வினைக்கீடாக இறைவன் ஆணை யால் உயிர்களைச் சார்வது. ஆதலால், அப்பிறவி 'மாயப் பிறவி' எனப்பட்டது. அப்பிறவியோ உன்வசமாயுள்ளது. நீ தந்தால் என்னைச் சாரும். நீ தடுத்தால் என்னை விலகும். ஆதலால், இறைவனருள் விட்டவழி நாம் நடப்போம் என்று இராமல், இப்பிறவி எங்ஙனம் வந்தது? வராமல் தடுக்கும் உபாயம் என்ன? என்றெல்லாம் ஆராய எனக்கு உரிமை ஏது? என்பார் 'மாயப்பிறவி......ஆயக்கடவேன் நானோதான்' என்று அருளினார்.

'இடுவாய்' என்ற வினைச்சொல்லின் ஆற்றலால் காயம் சிறையெனக் கருதக் கிடத்தல் காண்க. காயத்திடுதல் நரகத் துட் புகுத்துதல் போலத் தண்டனையாயும், கழற்கீழ்வைத்தல் பேரின்ப வீடாகிய அருளலாகவும் கொள்ளக்கிடக்கின்றன.

கண்ணுதலே என்றது 'தொழுதெழுவார் வினைவளம் நீறெழ நீறணி அம்பலவன்' என்றதுபோல, வினைகளும் மலங் களுமாகிய முப்புரங்களை எரித்த உனக்கு என் வினைகளை எரிப் பது அருமையன்று என்று விண்ணப்பித்தவாறும்.

தற்போதமிழந்து பதிவசமாகத் தான் விளங்குதலைக்கண்டு கூறலின் இத்திருப்பாடல் ஆத்தும நிவேதனமாதல் காண்க.

502 கண்ணார் நுதலோய் கழலிணைகள்
கண்டேன் கண்கள் களிகூர
எண்ணா திரவும் பகலுநான்
அவையே யெண்ணு மதுவல்லால்

மண்மேல் யாக்கை விடுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா எண்ணக் கடவேனோ
அடிமை சால அழகுடைத்தே. 9

இ - ள் : நெற்றியில் கண்ணையுடையவனே! அண்ணா! என் கண்கள் களிப்பு மிக, நின் திருவடிகள் இரண்டையும் கண்டுய்ந்தேன்; பிறபொருள்களை எண்ணாமல் இரவும் பகலும் அவைகளைத் தியானிப்பதல்லாமல், இம்மண்ணுலகில் எடுத்த இவ்வுடலை விடுமாற்றையும் சிவபுரத்திற்கு வந்து உன் திருவடிக்கண் பொருந்துமாற்றையும் எண்ணும் கடமையைப் பெறுவேனோ? என் அடிமை மிக அழகானது என்றவாறு.

உன் திருவடிகளை எண்ணுவதன்றி, எப்போது இவ்வுடல் கழியும்? எப்போது திருவடிசாரும்பேறு உண்டாகுமென்று எண்ணக்கடவேனோ? அப்படி உழைப்பைவிட்டுப் பயனையே கருதும் என்னடிமை மிக அழகாக இருக்கிறது என்கின்றார்.

கண்ணார் நுதலோய்! என விளித்து, கழலிணைகள் கண்டேன் என்றது முடி முதல் அடிகாறும் நின் திருவுருவைத் தரிசிக்கும் பேறு பெற்றேன் என்றதாம். கண்ணார் நுதலோய் என்றது இறைவனுக்கே உரிய சிறப்படையாளம் தெரிவித்தவாறு. கழல், தானியாகுபெயராய்த் திருவடிகளை உணர்த்திற்று. திருவடிகள் அழகுக்குறைவிடமாக இருத்தலின், அழகை அநுபவிப்பதில் கண்களுக்கு ஆனந்தம் ஆதலின் 'கண்கள் களிகூரக் கழலிணைகள் கண்டேன்' என்றார்.

எண்ணாது - பிறவற்றைத் தியானிக்காமல். ஏனைய இந்திரியங்களுக்கு விஷயமாய், மாயேயமான போகப்பொருள்களை நினையாமல் என்றபடி.

இரவும் பகலும் திருவடிகளையே எண்ணுவதன்றி, அதன் பயனை எண்ணுவேனோ? அங்ஙனம் எண்ணுவேனாயின் என் அடிமை அழகாயிருக்குமே என்றாராம்.

பிராரத்தகன்மங்கள் ஒழிந்து எடுத்த உடல் விழுமாற்றையும், அறுகயிற்று ஊசல்போல உடல் விழுந்தவுடன் உயிர் திருவடியைப் பற்றுமாற்றையும் எண்ணுவதற்கு யான் யார்? எப்போது பொழுது சாயும், எப்போது கூலி கிடைக்குமென்று எண்ணுகின்ற கூலியாள்போலாது, அடிமைக்கு இடைவிடாது எண்ணுதல் கடமையேயன்றி எப்போது திருவடிப்பேறாகிய முத்தி கிடைக்கும் என்று எண்ணுதலும் கூடாது என்பதாம்.

அண்ணா - தந்தையே: அண்ணா எனலுமாம். தம்பியின் விருப்பம் அறிந்து கருத்தை முடிப்பது தந்தைபோல்பவனாகிய அண்ணனின் கடமை ஆதலின், நான் பயனை எண்ணேன் என்பதற்கியைய அண்ணா என விளித்தார்.

திருவடிக் காட்சியும் - கண்டதை இடைவிடாது எண்ணுதலுமே ஆன்மாவின் கடமை; உடல் நீக்கமும் வீடுபேறும் அருள்வது ஆண்டவன் கடமை; அதனை எண்ணுதலும் கூடாது என ஆன்மாவின் முதிர்ந்த பரிபாகத்தை விண்ணப்பித்தலின் இத்திருப்பாடல் ஆத்தும நிவேதனமாயிற்று.

503 அழகே புரிந்திட் டடிநாயேன்
அரற்று கின்றேன் உடையானே
திகழா நின்ற திருமேனி
காட்டி யென்னைப் பணிகொண்டாய்
புகழே பெரிய பதமெனக்குப்
புராண நீதந் தருளாதே
குழகா கோல மறையோனே
கோனே யென்னைக் குழைத்தாயே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள்: உடையானே! மிகப் பழைமையானவனே! இளையோனே! அழகிய அந்தணனே! அரசே! ஒளி விளங்குகின்ற திருமேனியைக்காட்டி என்னைப் பணியாளனாக ஏற்றருளினை; அழகான தொண்டுகளைச்செய்து அடிமையாகிய நாயேன் புலம்பித் திரிகின்றேன்; அடியேற்குப் புகழால் பெரிய திருவடியைத் தந்தருளாது என்னைக் குழைய வருத்தினாய்; இது தகவோ? என்றவாறு.

யாருங்காணாத திருமேனியைக் காட்டி என்னையாட்கொண்டாய்; யானும் திருவடிக்கொப்பான தொண்டுகளைப் புரிந்தும் இன்பம் பெறாது அதனை எதிர்நோக்கிப் புலம்புகின்றேன்; பெரிய பதவியாகிய திருவடிப்பேற்றை அளியாது குழையச் செய்கின்றாய்; இது தகுதியா? என விண்ணப்பிக்கின்றார்.

உடையானுக்கு உடைமைகளைப் பாவிக்கும் முறை தெரிய வேண்டும். உடைமையாகிய யான் வருந்த உடையானாகிய நீ களித்தல்கூடாது என்பார் 'உடையானே' என முதற்கண் விளித்தார்.

அன்று கண்ட திருமேனிக்காட்சி இன்றும் என்மனத்தில் நின்று நிலவுகின்றது என்பார் 'திகழா நின்ற திருமேனிகாட்டி

என்னைப் பணிகொண்டாய்' என்றார். திருமேனியின் அழகும் ஒளியுமே என்னைத் தொண்டனாக்கின என வியந்தவாறும்.

உலகில் புகழத்தக்க பதவிகள் யாவற்றினும் சிறந்த புகழத் தக்க பதவி திருவடிப்பேறே என்பார் 'புகழே பெரிய பதம்' என்றார். புகழால் பெரிய பதவி எனப் பொருள் கொள்க.

புராணன்-புராதனன் என்பதன் திரிபு. பழமைக்கெல்லாம் பழமையானவன் என்பதாம்.

தலைநாட்கண்ட திருமேனியில், என்றும் மாறாத இளமை யும், அழகும் தம்மை வசப்படுத்தின என்றறிவிப்பார் 'குழகா! கோலமறையோனே!' என்கின்றார்.

அழகான தொண்டு செய்யும் அடிமையைக் குழைவித்தல் கோனுக்கு அழகன்று என்று குறிப்பிக்க 'கோனே என்னைக் குழைத்தாயே' என்று அருளுகிறார். பழையவுரைகாரர் அழகே! புகழே! புராண! முதலியவற்றை விளியாக்குவர். புரிந்திட்டு - விரும்பி எனவும் கொள்வர்.

இங்ஙனம், தாம் அடிமையில் தவறாமையையும், ஆண்டான் அடிமையைக் காவாது குழைக்கின்றமையையும் கூறுதலின் இது ஆத்தும நிவேதனமாதல் காண்க.

இப்பத்தாலும், அடிகள் ஆன்ம இயல்பு பிழைசெய்தல், ஆண்டவன் இயல்பு அவற்றைப் பொறுத்து ஆட்கொள்ளுதல், நீ ஆட்கொண்டபோதே என் துன்பங்கள் அனைத்தும் அகன் றன என்று இருந்தேன்; துன்பக்கொள்கலமான இவ்வுடலைச் சிதைக்காமல் மேலும் நீ துன்புறுத்துகின்றாய்; ஆட்கொண்ட காலத்திருந்த கருணை இன்றில்லையோ? என் கருவி கரணங் கள் அனைத்தும் நீ; என் விருப்பமும், விருப்பத்தை முடிப்பவ னும் நீ; உடல் பொருள் ஆவி அனைத்தும் உனக்குச்சொந்தம்; எனக்கு இடையூறு ஒன்றும் இல்லை; நீ உடலில் இட்டுவை; அல்லது வீடுபேறளி; எனக்கு என்ன சுதந்திரம் இருக்கிறது; ஆனாலும் ஒன்று விண்ணப்பிக்கின்றேன்; நீ வீட்டுலகைத் தந்தருளாது என்னைக் குழைக்கின்றாய்; இது தகாது; திருவுளங் கொண்டருளவேண்டும் என்று விண்ணப்பிக்கின்ற அழகு அன்புநிறையுள்ளத்திற்கு அமுதமாதல் காண்க.

# 34. உயிருண்ணிப்பத்து

[சிவானந்தமேலிடுதல்]

அடிகளார் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, இறைவன் ஊனுர் உயிர்கலந்து உள்ளத்தைவிட்டுப் பிரியாது பேரின்பத்திருத்திய பெற்றியில் திளைத்து, அவ்வநுபவ அதிசயங்களை இப்பத்துப் பாடல்களாலும் அருளிச்செய்கின்றார்கள்.

தில்லையை அணுகி, ஆனந்தக்கூத்தன் திருவுருவைக் கண்ட ஆனந்தம்மேலிடத் தன்வசமற்று, திருப்பெருந்துறைப்பெருமான் இதுகாறும் இன்பம் அளியாமைக்கு இரங்கியருளியதால் இப்பத்து தில்லையில் அருளப்பெற்றது என்பாரும் உளர். பழையவுரைகாரரும், இங்ஙனமே கொண்டார். தில்லையில் அருளப்பெற்றதாயினும், பேரின்பநிலையில் உயிருண்ணப்பெறுவதாகிய தற்போதம் இழந்த நிலையில் திருப்பெருந்துறைப்பெருமான்செய்த கொடுமை தோன்றுதாகலானும், அங்ஙனம் தோன்றுமேல் தற்போதம் அழிதலாகிய உயிருண்ணிப்பத்தாகாமையானும் அக்கருத்து ஏலாமை தெளிக.

பழைய குறிப்பு, சிவானந்த மேலிடுதல் அதாவது நேயம் மேலிடுதல் என்னும். மேலிடுதல் என்பது தோய்ந்ததை அகப்படுத்துதல். சிவானந்தமாகிய வெள்ளம் தோய்வதாகிய ஆன்மாவைத் தன்னகப்படுத்தி வெள்ளம் மேலிடுதல். அதாவது தன் தன்மை கெட்டு இன்பவடிவாயிருத்தல் என்பதாம்.

உண்ணி - உண்பது. உயிர் உண்ணி - உயிரையுண்டபொருள். உயிர் உண்ணப்பட்டுச் சிவமே மிக்கு விளங்குதலின் உயிரின் தன்மை இல்லையாயிற்று. இந்நிலையை எடுத்து விளக்குவது இப்பத்தாதலின் உயிருண்ணிப்பத்து எனப்பெற்றது.

"செயலறு செயலாம் உயிருண்ணிப் பத்துச், செயிரறு சிவானந்த மேலீ டாகும்" என்பது அகத்தியச்சூத்திரம்.

பழையவுரைகாரர் முற்பதிகத்திலே கூடாதே வாடாதே குழைந்திருப்பதான அடிமையின்ப அன்பைப்பேசி, இப்பத்தில் என்னுயிரையும் பலிகொண்டது அருளன்றிவேறில்லையென உண்மை சாதித்து, அதனுள்ளே அழுந்தியமை தெரிவிக்கின்றார் என்பர்.



திருச்சாழல்பாடி, ஊமைப்பெண்ணைப் பேசவைத்தது.

"தழைத்து வளர் பேரின்பத் தானாகி உயிர்தோன்றாத் தன்மையாய்த் துன்(பு) ஒழித்து நிறைவைப் பெறுதல் உயிருண்ணிப் பத்தாய் இங்கு உரைத்ததாமே" என்பது பழைய திருப்பெருந் துறைப் புராணம். இவற்றால், இறையருளாகிற வியாபகத்துள் உயிர் அடங்கி உணர்வுகெட்டு இன்பமே தானாய் நிற்றலாகிய அநுபவங்கூறுவது இப்பத்து என்பது பெறப்படும்.

## கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

504 *பைந் நாப்பட வரவேரல்கு*
*லுமைபாகம தாயென்*
*மெய்ந்நாடொறும் பிரியாவினைக்*
*கேடாவிடைப் பாகா*
*செந்நாவலர் பரசும்புகழ்த்*
*திருப்பெருந்துறை யுறைவாய்*
*எந்நாட்களித் தெந்நாளிறு*
*மாக்கேனினி யானே.* 1

இ-ள்: பையினையும் நாவையும் உடைய பாம்பினது படத்தை ஒத்த அல்குலையுடைய உமாதேவியை இடப்பாகத் திற்கொண்டு, எனது உடலை நாடோறும் பிரியாமல் எழுந்தருளியிருக்கின்ற வினைக்கேடனே! இடபவாகனத்தையுடையவனே! செம்மையான புலவர்கள் துதிக்கின்ற புகழினையுடைய திருப்பெருந்துறைக்கண் உறைபவனே! இனி, யான் எந்நாளும் களித்து எந்நாளும் இறுமாந்திருப்பேன் என்றவாறு.

அம்மையப்பராக என் உடலிடங்கொண்டு என் வினைகளைக் கெடுப்பவனே! விடைப்பாகா! திருப்பெருந்துறையுறைபவனே! இனி யான் எந்நாளும் களித்து எந்நாளும் இறுமாந்திருப்பேன் என்பது கருத்து.

பை நா அரவுப்பட ஏர் அல்குல் எனக்கூட்டுக. பை+நா உம்மைத்தொகை. பையையும் நாவையும் உடைய அரவின் படத்தை ஒத்த அல்குல் என்க. பை-விடப்பை. பசியநா எனலுமாம். அரவின்படம் அல்குலுக்கு உருவுவமை; ஈண்டுப் பண்புவமை அன்று என்க. ஏர் உவமவுருபு; அழகு எனினுமாம். உமைபாகமதாய் என் மெய் நாடொறும் பிரியா வினைக்கேடா எனக் கண்ணழித்துப் பொருள் கொள்க. அம்மையப்பராக எழுந்தருளியே இறைவன் ஆன்மாக்களின் மல மாயை கன்மங்களைப் போக்கி ஆட்கொள்கின்றாராதலின் இங்ஙனம் கூறினார்.

பாகமது ஆய் என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. முன்னர்ப் பலவிடங்களிலும் 'என் உடலிடங்கொண்டாய்' என்றது போல ஈண்டும் 'என் மெய் நாடொறும் பிரியா' என்றார். திருமூலரும் "ஊனுடம்பு ஆலயம்" என்றதும் காண்க. சிலர், என் உண்மைப்பேற்றைத் தருதற்கு உரிய நாள்கள்தோறும் பிரியாத இருவினையைக்கெடுப்பவனே என உரைப்பர். அதற்கு விளக்கமாக, மெய்ந்நாள் - வீடுபேற்றிற்குரிய நாள்; ஏனையவை பொய்நாள், அந்நாட்களிலே இறைவன் கரந்துநிற்பன், அப்போது வினை மேலிடும் எனவும் உரைப்பார். இத்திருப்பாடல் உயிருண்ணிப்பத்திலுள்ள முதற்பாடல். ஆகவே இது சிவானந்த மேலீட்டை அறிவிப்பது. 'சிவானந்தம் மேலிட்ட நிலையில் இறைவன் ஒன்றாய் நிற்பன்; அவன் வேறாய் நிற்கும் நிலை இந்நிலை எய்தினார்க்கு இல்லையாம். இதனை "மாலற்றாரை மேவியே நிற்பன் விரைந்து" என்னும் சிவாநுபவ வாக்கசிய சித்தாந்தசிகாமணிகொண்டும் தெளிக.

வினைக் கேடன் - ஆகாமிய சஞ்சிதமாகிய வினைகள் ஆன்மாவைச் சாராவண்ணம் கெடுப்பவன். பிராரத்த வினையும் தன் வன்மை கெட்டு ஏதோ உடலுள்ளவரை வினை உண்டு என்னும் அளவினதாக மெலிவித்து ஊட்டுபவன் என்க. முன்னர் 'வினைக்கேடன் என்பாய் போல' எனவுரைத்ததும் காண்க.

விடைப் பாகா - இடபத்திற்குப் பாகனே. இறைவனூரும் இடபம் பதிபுண்ணியங்களும் பசுபுண்ணியங்களுமான அறவடிவானது. இம்மரபறியாதார் இல்லற துறவறமாகிய விடை என்பர். இல்லற துறவறங்கள் சகலான்மாக்களைப் பரிபாகப் படுத்தும் நிலைகளே ஆதலின் அவை இறைவனூரும் விடை ஆகாமை தெளிக.

செந்நாவலர் - திருவருள் விளக்கம் பெற்ற புலவர்கள். இவர்களையே பெரியபுராணம் பொய்யடிமையில்லாத புலவர் என்னும். அவர்கள் பரசும் புகழை உடையது திருப்பெருந்துறை. பரசும்புகழை உறைவானுக்கு இயைத்துப் பொய்யில் புலவர் புகழும் திருப்பெருந்துறையான் எனலுமாம். திருவருள் ஞானம் பெற்றோரே செந்நாவலர் ஆவர் என்பது பழையவுரை.

இனி எந்நாளும் களித்து எந்நாளும் இறுமாக்கேன் எனக் கூட்டி உம்மையும் வருவித்துப் பொருள்கொள்க. இதற்கு இனி வரும் காலத்து எந்நாள் களித்து, எந்நாள் இறுமாப்பேன் என்று வருந்திக் கூறியதாக உரைப்பர் சிலர். சிவானந்தம் மேலிட்டபோது.

"எங்கும்யா மொருவர்க்கும் எளியோ மல்லோம்
யாவர்க்கு மேலானோம் என்றிறுமாப் பெய்தித்
திங்கள்முடி யாரடியா ரடியோம் என்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தி யுடையோரே"

என்றவாறு களித்து இறுமாந்து இருப்பர் என்பதே ஞான நூல்களாற் பெறப்படுதல் கண்டு, அவ்வுரையின் நயமின்மை தெளிக.

பழையவுரை 'என்காலம் வீணட்படக் களித்து இறுமாப் பேனோ' என்னும். இதன் கருத்து, சிவானந்தத்தழுந்திக் களித்து இறுமாத்தலன்றி, பெத்தநிலையில் மல மயக்கான் இறுமாக்கமாட்டேன் என்பது. இஃதெண்ணுதார் இதற்கு எந்தக் காலத்தையும் களிப்பாலும் இறுமாப்பாலும் வீணாக்கேன் என்று கூறியதாக உரைப்பர். இவற்றின் தரமறிந்து சிவாகமநூன் மரபுபற்றிப் பொருள் காண்டலே ஞானவாக்கிற்கு ஏற்றதாதல் தெளிக.

இத்திருப்பாடல், இனி யான் எந்நாளும் களித்து, எந் நாளும் இறுமாந்திருப்பேன் எனச் சிவானந்த மேலீட்டை விளக்குதல் காண்க.

505 நானாரடி யணைவானொரு
நாய்க்குத்தவி சிட்டிங்
கூனாருடல் புகுந்தானுயிர்
கலந்தா னுளம்பிரியான்
தேனார்சடை முடியான்மன்னு
திருப்பெருந்துறை யுறைவான்
வானோர்களும் அறியாததோர்
வளமீந்தனன் எனக்கே. 2

இ - ள்: திருவடியைச் சார்வதற்கு யான் யார்? தேன் நிறைந்தமையால் வண்டுகள் மொய்க்கின்ற சடைமுடியை யுடையவனும், திருப்பெருந்துறை உறைபவனுமாகிய சிவ பெருமான் ஒருநாய்க்குத் தவிசு இட்டாற்போல் என் ஊன் நிறைந்த உடலின்கண் புகுந்தான்; அடியேனுக்குத் தேவர் களும் அறியாத ஒப்பற்ற இன்பத்தை உதவினான் என்றவாறு.

சிவபெருமான், நாய்க்குத் தவிசிட்டாற்போல என் உடலுள் புகுந்து உயிரோடு கலந்து, உள்ளத்திற் பிரியாமல் எழுந் தருளியிருந்து, தேவர்கட்கும் கிடைக்காத இன்பத்தை எனக்கு உதவினான் என்பது கருத்து.

திருவடி இன்பவடிவானது. அதனை அடைந்தால் வற்றாத முற்றாத சிவானந்தத்திற்றிளைத்திருக்கலாம் எனச் சிவாகமங்கள் கூறுவதால் எனக்குத் திருவடி அடையலாம் என்ற விருப்பம் விளைகிறது. அதற்கான உபாயச் சரியையாதிகளைச் செய்ய லாமே என்ற முயற்சியும் தோன்றுகிறது. இருந்தாய்ந்தபோது இவ்வளவு எண்ணவும் இயற்றவுந்தான் எனக்குச் சுதந்திர மேது என்ற உண்மை தோன்ற 'அடியனேனவான் நான் ஆர்' என்றருளுகின்றார்கள். அவனருளாலே அவன்றாள் வணங்க லாமேயன்றிச் சிவனருளால் அவன் திருக்கடைக்கண் சாத்தத் திருவடி சேரலாமேயன்றி ஆன்மா பாச பசு ஞானங்களால் முயன்று அடையமுடியாதது என்ற உண்மையை உரைத்த வாறு. தேவரீர் திருவடிஞானம் பெற யான் ஆர் என்ற பழைய வுரையும் இக்கருத்தையே வற்புறுத்துதல் காண்க.

தேன் - வண்டினுள் ஒருசாதி. தேன் ஆர் சடைமுடியான் - அடியார்கள் சாத்திய மொட்டறுமலர்கள் நிறைந்து விளங்குத லின் அவற்றில் வண்டுகள் மொய்க்கின்றன என்பார் இங்ஙனம் கூறினர்.

எக்காலத்தும் நிலைபேறுடைமையின் 'மன்னுதிருப்பெருந் துறை' என்றார்.

தவிசு - யானை குதிரை முதலியவற்றின்மேல் இடப்படும் இருக்கை. யானைக்கிடப்படும் இதனை அம்பாரி என்பர். அதனை நாய்க்கிடுதலாவது தாங்காத ஒன்றற்குத் தகாத பதவியை அளித்தல். அதுபோலப் பெத்தான்மாவாக இருந்த எனது உள்ளத்தை அன்று இருப்பிடமாக்கினான் என்று உவமைக்கும் பொருளுக்கும் இயைபுகாண்க.

ஊனார் உடல் என்றது உடலின் இழிவுதோன்றக்கூறியது. உடல் குடில் போல்வதாய், உயிராகிய உணர்ந்த உணரும் சித்து உறைதற்கு இடமாகிய சடமாதலின் 'உடல் புகுந்து' என்றார். உயிர் சித்தாகலின் அறிவுருவாகிய சிவம் அதனொடு கலந்தது என்று குறிப்பித்தார். அங்ஙனம் உயிரில் கலந்து காண்பன, கேட்பன, உண்பன, உறுவன முதலியயாவும் சிவா னந்தமாகவே நுகர்தலானும், உளம் வேறொன்றையும் பற்றாது சிவமயமாகவே விளங்குதலானும், 'உளம்பிரியான்' என்றார். உளம் பிரியாமையாவது என்றும் சிவத்துவ வியாபகத்துள் ளேயே அடங்கியிருக்கச்செய்தமை.

பதவிகளிலுள்ளாராகிய தேவர்களும் சகலான்மாக்களே யாவராதலின் இத்தகைய சிவானந்தானுபவம் அவர்களுக்கு

அறியப்படாததாயிற்று. அத்தகைய் இன்ப வெளத்தை எனக்கு உதவினன் என்று போற்றியவாறு.

சிலர் அடியனை வான் ஊன் ஆர் உடல்புகுந்தான்; வளமீந்தனன்; அதனைப்பெறுதற்கு யான் ஆர் எனக் கூட்டியுரைப்பர். இறைவன் ஆசாரியனாக எழுந்தருளிச் சிவானந்தமருளியபின் ஆன்மா அதனையடைய எனக்குத்தகுதியுண்டோ என்றுஐயுறுது இறைவன் கருணையிருந்தால் கொதுகுங் கருடனும் ஆதலின் தானும் சிவமேயாய் அந்த முத்தியினிற் கலக்கும்; ஆதலின், அவ்வுரை சைவமரபிற்கேலாதெனத் தெளிக.

இத்திருப்பாடல் வளமீந்தனன் எனச் சிவானந்த மேலீட்டைத் தெரிவிப்பதால் பதிகக்கருத்தை விளக்குதல் காண்க.

506 எனைநானென்ப தறியேன்பக
லிரவாவதும் அறியேன்
மனவாசகங் கடந்தானெனை
மத்தோன்மத்த னாக்கிச்
சினமால்விடை யுடையான்மன்னு
திருப்பெருந்துறை யுறையும்
பனவன்னெனைச் செய்தபடி
றறியேன் பரஞ்சுடரே. 3

இ - ள்: சினம்பொருந்திய பெரிய இடபத்தையுடையவனும் நிலைபெறுன திருப்பெருந்துறை உறையும் அந்தணனும் என் மன மொழிகளைக் கடந்தவனும் ஆகிய சிவபெருமான், என்னைப் பெரும்பித்தனாக்கி எனக்குச்செய்த மாயம் இன்னது என்று அறியேன்; என்னை நான் என்பதும் அறியேன்; பகல் இரவு என்ற வேறுபாடும் அறியேன்; எல்லாம் பரஞ்சுடரேயாக அறிகிறேன் என்றவாறு.

இறைவன் என்னைப் பெரும் பித்தனாக்கி, என்ன மாயம் செய்தானோ எனக்குத் தெரியாது; அதுமுதல் 'நான்' என்ற ஒருபொருள் இருப்பதும் அறிந்திலேன்; இது பகல் இது இரவு என்ற பேத ஞானமும் விளையவில்லை; எல்லாம் எங்கும் பரஞ்சுடரே காண்கின்றேன் என்பது கருத்து.

பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் என்பதாம்.

பரஞ்சுடரே - எங்கும் பரஞ்சுடர்மயமே என முடிக்க. அதாவது விகற்பஞானம் தோன்றாமல் ஒளிமயக் காட்சியே என் அனுபவத்திற்கு வருவதாம் என்று அருளியவாறு.

எனை நான் என்பது அறியேன் - சூரிய ஒளியுள் மின்மினி அறியப்படாதவாறு போலச் சிவானந்தம் மேலிட்டபொழுது என்னை, நான் வாதவூரன், அமாத்தியன், அமைச்சன், அரச பணியினின்று துறந்தோன் என்பன முதலியவற்றை உணர்ந்திலேன். அதாவது உயிருண்ணப்பட்டமையால் தற்போதம் அழிந்தது என்பதாம்.

பகலாவதும் இரவாவதும் அறியேன் எனப் பிரித்துக் கூட்டுக. எல்லாம் ஒளிமயமாகக் கண்டு அதனுட்கலந்து அதுவாயே நிற்பார்க்குப் பகல் இரவு, துன்பம் இன்பம், உறவு பகை முதலிய பேதஞானம் தோன்றாமையின் இங்ஙனம் அருளியவாறும்.

மனவாசகம் கடந்தான் - உணர்தற்குக் கருவியாகிய மனத்தையும் அங்ஙனம் உணர்ந்த அளவாகத் தொகுத்து உரைக்கப்படும் மொழியையும் கடந்து விளங்குபவன் சிவன் என்றவாறு. கருவி கரணங்கட்கு அப்பாற்பட்டவன் என்பதாம்.

மத்த உன்மத்தன் - பித்தன் - பெரும்பித்தன். ஆகவே மத்தோன்மத்தனுக்கி - பெரும்பிச்சு ஏற்றி என்பது பொருள். என்னைச் செய்த படிறு - என்னைச் செய்த மாயம். பித்து - பற்றிய ஒன்றில் உள்ளத்தை நிலைக்கச்செய்து, காண்பனவும் கேட்பனவுமாகிய அனைத்தையும் அதுவாகவே தோற்றச்செய்வது. அதுபோல இறைவன் தன்னையன்றி ஒன்றும் தோன்றாமல் செய்தான் என்பார் 'மத்தோன்மத்தனுக்கிச் செய்த படிறு' என்றார். படிறு - வஞ்சனை என்பாரும் உளர்.

இந்திரசாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கியது போல என்னை மயக்கினான்; யான் அவனையன்றி ஒன்றையும் அறியேன் ஆயினேன் என்பதாம்.

ஒன்றும் அறியாவிடின் அநுபவந்தான் இருந்தபடி எங்ஙனே என்று வினவுவீராயின் 'பரஞ்சுடரே' என எல்லாம் ஒளிக்காட்சியாக விளங்கியமை உணர்த்துகின்றார்.

பனவன் - அந்தணன். அந்தணனாவதும் காட்டிவந்து ஆண்டதை எண்ணிக் கூறியதாம். முனிவன் எனலுமாம்.

என்னைப் பெரும் பித்தனுக்கிச்செய்த மாயத்தை அறியேன்; பரஞ்சுடரை அறிவேன் எனத் தாம் சிவானந்த மேலீட்டில் திளைத்தலைக் கூறுதல் காண்க.

507 வினைக்கேடரும் உளரோபிறர்
சொல்லீர் வியனுலகில்
எனைத்தான்புகுந் தாண்டானென
தென்பின்புரை யுருக்கிப்
பினைத்தான்புகுந் தெல்லேபெருந்
துறையிலுறை பெம்மான்
மனத்தான்கண்ணி னகத்தான்மறு
மாற்றத்திடை யானே. 4

இ - ள்: திருப்பெருந்துறையில் விளக்கமாக உறையும் பெருமான், தானே வலியவந்து என்னுட்புகுந்து, எலும்புத் துளைகள்தோறும் உருகப்பண்ணி, பின்பு என் உயிருடன் ஒன்றி ஆண்டான்; என் மனத்தகத்தான்; கண்ணிற் கருமணி யாய் - மணியாடு பாவையாக உள்ளான்; யான் கூறும் மறு மாற்றமாகிய விடைகளிலும் கலந்துள்ளான்; இவ்வகன்ற உலகில் இவனையன்றி வினைக்கேடர்கள் பிறர் எவரேனும் உளரோ? நீங்களே சொல்லுங்கள் என்றவாறு.

இறைவன் என்னை ஆட்கொண்டு, என் மனமொழி மெய் களிடமாக விளங்குகின்றான்; அவனைவிட வினைக்கேடர் இவ் வுலகத்து வேறு யார் என்பது கருத்து.

இத்திருப்பாடற்கு, அவன் செய்த படிற்றான், என் மனத் தகத்தும், கண்ணிலும், அன்னபிறவற்றிலும் புகுந்து என்னை மயங்கவைத்தமையால் என்னைப்போல வினைக்கேடர் பிறர் உளரோ எனவும், இவ்வுலகில் என்னைப்போல வினையாற் கெட்ட பாவிகள் உளரோ சொல்லுங்கள் உலகீர்! என்னையும் பொருளாகக்கொண்டு ஆண்டு என் மன மொழி மெய்களில் விளங்குகின்றான் சிவன் எனவும் பொருளுரைப்பர்.

முன்னைய பாடல்களில் வினைக்கேடன் என்பது இறைவனை உணர்த்தி வருதலின் ஈண்டும் அங்ஙனமே உரை கோடல் பொருந்தும்.

என்னை என்பதற்கு வினைத்தொடர்பில் சிக்கிய என்னை எனவும், ஆண்டான் என்பதற்கு வினைநீக்கி உய்யக் கொண் டான் எனவும் உரைகொண்டு, வினைச்சூழலிற் சிக்கிய என்னை ஆண்டமையால் அவன் வினைக்கேடனாயினான் என்க.

வினைக்கேடர் - வினைகளைக் கெடுப்பவர். இயற்றவேண்டிய வினைகளைவிட்டுக் கெட்டவர். இது இப்பொருளில் இஞ்ஞான்று

மெனக்கெட்டவன் எனமரீஇவழங்குதல் காண்க. நல்ல உழைப் பாளி, நன்செய்யில் செந்நெற்பயிர் செய்வான். உவர் மண் ணில் உழைப்பவன் வினைகெட்டவன். திருந்துவனவற்றைத் திருத்துவான் அறிஞன். திருந்தாதவற்றைத் திருத்த முயற்சிப் பவன் சுணங்கனின் வால்கோணலை நிமிர்ப்பான்போல வினை கெட்டவன். இறைவன் வினைக்கேடன்; சகலான்மாவாகிய என்னை ஆட்கொண்டான்; அன்பளித்தான்; திரிகரணங்களி லும் பொருந்தி விளங்குகின்றான். இவனையன்றிப் பிறர் யாரே னும் வினைக்கேடர்கள் இவ்வுலகில் உள்ரோ என நகைச்சுவை தோன்றக் கூறியமை காண்க.

எற்புத் துளைதோறும் அன்பூட்டி நெக்குருகச் செய்தலை 'என்பின்புரை உருக்கி' என்றார். புரை - தொளை.

'எல்லே இலக்கமாக' அதாவது விளங்கித்தோன்றும்படி உறை பெம்மான் என்க. இதனை இரக்கக்குறிப்பு என்பாரும், வியப்பிடைச்சொல் என்பாரும், நாணுமல் அதாவது வெளிப் படையாக எனப் பொருள் கொள்வாரும், தோழியை விளித்த தாகக்கொள்வாரும் ஆகப் பலவாறு உரை கொள்வர்.

இறைவன் மனமொழிகளிலும் கண்ணிலும் விளங்குவதை "மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்" "கண்ணே கண்ணுட் கருமணியே மணியாடு பாவாய்" எனவரும் அப்பர் தேவாரங்களாலும் அறிக.

மறுமாற்றம் - பதில். திருத்தாண்டகத்திலும், மறுமாற்றத் திருத்தாண்டகம் என்பது ஒன்று. அரசன் அழைக்கவும் நீர் வாராமைக்குக் காரணம் என்னவோ? என்று வினவிய அன் பர்க்கு அப்பரடிகள் அளிக்கும் பதில்போல அமைந்திருப்பது. அதுபோல ஈண்டும் யான் கூறும் பதிலுரைகளில் கலந்து விளங்குகின்றான் என்பார் 'மறுமாற்றத்திடையானே' என்றார்.

இவ்வண்ணம் இறைவன் வலியவந்தாண்டு என்பெலாம் புரைபுரைகனிய மனமொழி மெய்களில் கலந்து விளங்குகின்ற தாகிய சிவானந்தம் மேலிடத் தானழிந்தமை கூறலின் இத் திருப்பாட்டு உயிருண்ணிப்பத்தாதல் காண்க.

508 பற்றாங்கவை யற்றீர்பற்றும்
பற்றாங்கது பற்றி
நற்றாங்கதி யடைவோமெனிற்
கெடுவீரோடி வம்மின்

தெற்றார்சடை முடியான்மன்னு
திருப்பெருந்துறை யிறைசீர்
கற்றாங்கவன் கழல்பேணின
ரொடுங்கூடுமின் கலந்தே. 5

இ - ள்: யான் எனது என்னும் அகப்பற்றுப் புறப்பற்றுக்களை அற்றவர்களே! பற்றத்தக்க பற்றாகிய திருவடிப்பற்றைப் பற்றி நல்லகதியை அடைவோம் என்று முயல்வீர்களாயின் கெட்டொழிவீர்கள்; விரைந்து ஓடிவாருங்கள்; பின்னிக் கிடக்கின்ற சடைமுடியை உடையவனும், நிலைபெற்ற திருப்பெருந்துறையுறை இறைவனுமாகிய சிவபெருமானுடைய புகழைக் கற்று, அவன் திருவடிகளையே வழிபடும் மெய்யடியார்களோடு கலந்து கூடுங்கள் என்றவாறு.

பற்றற்று, பற்றற்றான் பற்றினைப்பற்றி நீங்களாகத் திருவடி அடைதல் என்பது இயலாத காரியம்; அவனடியாருடன் கூடி முயலுதலே இயலுவதாம்; ஆதலால் விரைந்து வாருங்கள் என்பது கருத்து.

ஆங்கு என்பன இரண்டும் அசை. நற்று - நன்று என்பது எதுகைநோக்கி வலித்தல்விகாரம் பெற்றது. ஆம் - ஆகும் என்பதன் திரிபு.

இறைவன்திருவடி அடைதற்கு உலகியற்பற்று அறுதலும், இறைவன் திருவடியைப் பற்றுதலுமே உபாயமென உணர்ந்து, காட்டுவானின்றிக் காணப்புகுவீரேல் நும் முயற்சி கைகூடாது கெட்டொழியும்; ஆதலாலே கண்டு காட்டும் மெய்யன்பர் கூட்டத்தில் கலந்து நல்லாவின் இடைப்பட்டுக் குருட்டாவும் ஊர் புகுவதுபோலத் திருவடி அடையுங்கள் என்றாராம்.

'பற்றாங்கவை...பற்றி' என்ற பகுதி 'பற்றுக பற்றற்றான்' என்ற திருக்குறளை நினைவூட்டுதல் காண்க.

தெற்று - பின்னல்.

இத்திருப்பாடலால், சிவானந்தமேலிட்ட அடிகளார் உலகவர் நிலைக்கு இரங்கி 'அவன் கழலே பேணினரொடும்' என அணைந்தோர்தன்மை உணர்த்துதலின் பதிகக்கருத்து விளங்குதல் காண்க.

509 கடலின்றிரை யதுபோல்வரு
கலக்கமல மறுத்தென்
உடலும்மென துயிரும்புகுந்
தொழியாவண்ண நிறைந்தான்

சுடருஞ்சுடர் மதிசூடிய
திருப்பெருந்துறை யுறையும்
படருஞ்சடை மகுடத்தெங்கள்
பரன்றான்செய்த படிறே. 6

இ - ள் : சிவபெருமான், கடலின் அலைபோல ஒன்றன் பின் ஒன்றாக இடையறாது வரும் துன்பங்களை விளைவிக்கின்ற மலத்தை அகற்றி, என் உடலிலும் உயிரிலும் புகுந்து, நீக்க மின்றி நிறைந்தான்; திருப்பெருந்துறைக்கண் உறையும் படருஞ்சடை மகுடத்தைத் தாங்கிய - ஒளிவிடுகிற மதியைச் சூடிய எங்கள் பரமன்செய்த மாயம் இதுவாம் என்றவாறு.

சிவபெருமான், என் மலமகற்றி என் உள்ளும் புறம்பும் நிறைந்தான்; இதுவே இறைவன் செய்த மாயம் என்றார் என்பது கருத்து.

'எனை நான் என்பதறியேன்' என்ற திருப்பாட்டில், 'பரன் வன் எனைச்செய்த படிறு அறியேன்' என்ற அடிகளார் இத் திருப்பாட்டில் 'ஒழியாவண்ணம் நிறைந்தான்; பரன்தான் செய்த படிறே' என்று அவன்செய்த மாயம் இது என்று வரையறுப்பது காண்க.

கலக்கம் மலம்: உம்மைத்தொகை. கலக்கம் - துன்பம். மலம் - ஆணவம் முதலான மலங்கள். இடையறாது வருதலின் துன்பங்களையும், அதனை விளைவிக்கும் மலத்தையும் கடலில் எழும் அலைகளுக்கு உவமித்தார்.

மணியின்கண் ஒளிபோலவும், பாலின்கண் சுவைபோல வும் உயிரின்கண் இறைவன் நீக்கமின்றி நிறைந்திருத்தலின் 'ஒழியாவண்ணம் நிறைந்தான்' என்றார்.

சுடருஞ்சுடர் மதி சூடிய படரும்சடை மகுடத்து எங்கள் பரன் எனக் கூட்டுக. சுடருஞ்சுடர் மதி - ஒருகாலைக்கொருகால் மிக்கு ஒளிவிடும் ஒளியையுடைய பிறைமதி என்க.

படரும் சடை - நான்கு திசைகளிலும் பரவிய சடை. இறை வற்குச் சடையே மகுடமாக விளங்குதலின் 'சடைமகுடத்தெங் கள் பரன்' என்றார். சடாமகுடமும் கரண்டமகுடமும் எனப் பல வகையுள்ளன; அவற்றுள் சடாமகுடம் குறிப்பிக்கப்பட்டதாம்.

இத்திருப்பாட்டில், வினையகற்றி, மலம் அறுத்து, ஊனும் உயிரும் கலந்து சிவம் நிறைந்திருத்தலை உணர்த்துதலால் தானழிதலாகிய உயிருண்ணிநிலை உணர்த்தப்பெற்றது.

510 வேண்டேன்புகழ் வேண்டேன்செல்வம்
வேண்டேன்மண் ணும் விண் ணும்
வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம்
வேண்டார்தமை நாளும்
தீண்டேன்சென் று சேர்ந்தேன்மன் னு
திருப்பெருந்துறை யிறைதாள்
பூண்டேன்புறம் போகேனினிப்
புறம்போகவொட் டேனே. 7

இ-ள்: நிலைபெற்ற திருப்பெருந்துறைக்கண் எழுந்தருளியுள்ள இறைவனைச் சென்றடைந்தேன்; அவர் திருவடிகளை அணியாகப் பூண்டேன்; அவற்றைப் பிரிந்து புறம்போகேன்; இனி இறைவனையும் புறம்போக விடேன்; ஆகையால் யான் புகழ் வேண்டேன்; பொருள் வேண்டேன்; மண்ணுலக ஆட்சி விண்ணுலக ஆட்சிகளையும் வேண்டேன்; பிறப்பு இறப்பு இவைகளையும் வேண்டேன்; சிவத்தை விரும்பாத புறச்சமயத்தாரை ஒருநாளும் தீண்டவும் செய்யேன் எ-று.

இறைவனைச் சார்ந்து அவனடிகளைப் பூண்டு யான் புறம் போகாதும் இறைவனைப் புறம்போக்காதும் உறுதியாகப் பற்றினேன் ஆதலின் யான் புகழ் பொருள் அரசு பிறப்பு இறப்பு எதுவும் வேண்டேன்; புறத்தாரைத் தீண்டேன் என்கின்றார்.

இதனால் இறைவனையேபற்றி அவனானந்தத்தில் திளைக்கும் உறுதிப்பாடு உணர்த்தப்பெறுகின்றது.

புகழ், பொருள்போல விருப்பத்தை விளைவித்து, தன்னையும் விற்றுக்கொள்ளுந்தகையதாய், தன்னை விரும்புவார்க்குச் சிவபூசையும் சிவபுண்ணியமும் செய்ய விருப்புண்டாக்காமையேயன்றிச் சமய உண்மைகளையும் மறக்கச்செய்தலானும் தன் முனைப்பிற்குக் காரணமாதலானும் 'புகழ்வேண்டேன்' என்றார்.

பொருள், உலகவின்பத்திற்குக் காரணமாய், மேன்மேலும் பற்றுள்ளத்தைப் பிறப்பித்து வினைகளை ஈட்டுதற்குக் காரணமாதலின் 'பொருள் வேண்டேன்' என்றார்.

மண்ணாட்சியும் விண்ணாட்சியும் பதவிப்பித்தை விளைவித்து, போரும் அமைதியுமாய்க் காம லோப குரோதங்கட்கு வித்தாய் நிலையாமனத்தை உண்டாக்குதலின் 'மண்ணும் விண்ணும் வேண்டேன்' என்றார். மண் விண் என்பன அவற்றை ஆளும் ஆட்சியை உணர்த்தின.

பிறப்பும் இறப்பும் சகடக்கால்போல மேலுங்கீழுமாக மாறி மாறி வருதலானும் கடற்றிரைபோல இடையறாது வருதலானும் வினைக்கழிவாயும், வினைவிளைவிற்குக் காரணமாயும் முடிதலான் அவற்றையும் வேண்டேன் என்றார்.

நரர் பயில் தேயந்தன்னில் நான்மறை பயிலா நாட்டில் விரவுதல் ஒழிந்து, தரையினில் கீழைவிட்டுத் தவஞ்செய் சாதியினில் வந்தும் சிலர் சிவமே முழுமுதற் கடவுள் என்பதை உணராமல் பரசமயங்களிற் சென்று வருந்துதலின் அவர்கள் புண்ணியமிலராவர்; அவர்களை நான் ஒருபோதும் தீண்டேன் என்கின்றார். பாவகாரிகளைப் பார்த்தலும் தீண்டலும் பாவமாதலின் இங்ஙனம் கூறினர்.

திருவடி அணிபோல அழகுசெய்வதாதலின் 'தாள் பூண்டேன்' என்றும், திருவடிச்சார்பே எனக்குப் பேரின்பமளித்தலின் அதனைவிட்டுப் புறம்செல்லேன் என்பார் 'புறம்போகேன்' என்றும், நான் புறம்போகாமைமட்டும் அன்று ஆட்கொண்ட அன்றைக்கு அடியார்கள் புடைசூழ மறைந்துபோனதைப் போல என்மனத்து எழுந்தருளிய சிவமாகிய உன்னையும் புறம் போகவிடேன் என்பார் 'புறம்போகலொட்டேன்' என்றும் கூறினார்.

இவ்வண்ணம், சிவானந்தம் மேலிட்டு, வேண்டாமையும், திருவடியொன்றையே வேண்டுதலும் தோற்றுவித்த சிவத்தை விட்டுப் பிரியேன் அவரையும் பிரியவிடேன் எனத் தன்மயமாதலுணர்த்துகின்றமையின் இத்திருப்பாடல் உயிருண்ணிப்பத்திற்கு இயைபுடைத்தாதல் காண்க.

511 கோற்றேனெனக் கென்கோகுறை
கடல்வாயமுதென்கோ
ஆற்றேனெங்கள் அரனேயரு
மருந்தேயென தரசே
சேற்றார்வயல் புடைசூழ்தரு
திருப்பெருந்துறை யுறையும்
நீற்றார்தரு திருமேனிநின்
மலனேயுனை யானே. 8

இ - ள் : எங்கள் சிவனே ! கிடைத்தற்கரிய அமுதமே ! என்து அரசரே ! சேறுமிக்க வயல் சூழ்ந்த திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள, திருநீறு பொலியும் திருமேனியையுடைய நின்மலனே! உன்னை அடியேன், எனக்குக் கிடைத்த

கொம்புத்தேன் என்பேனோ? ஒலிக்கின்ற கடலினின்று எழுந்த அமுதம் என்பேனோ? நின்னின்பம் இவ்வாறிருந்தது என்று சொல்லல் ஆற்றேன் என்றவாறு.

இறைவா! உன்னைக் கொம்புத்தேன் என்பேனோ? தேவாமுதம் என்பேனோ? எவ்வாறிருந்தது என்று சொல்லமாட்டேனாயினேன் என்பது கருத்து.

சிவானந்தம் மெய்யன்பர்கள் கூட்டத்தில் கலந்துநின்றே நுகரத்தக்கது என்பதை முன் 'அவன் கழல்பேணினரொடுங் கலந்து கூடுமின்' என்ற பகுதியால் விளக்கினாராதலின், ஈண்டு அடியார்களையும் தம்மோடுசேர்த்து 'எங்கள் அரனே' என விளிக்கின்றார்.

அருமருந்து, தேவாமுதம்போலப் பாற்கடலில் தோன்றாததாய், தேவாசுரப்போரை விளைவியாததாய், சிவயோகியர் உள்ளத்தினின்று ஊறி, உச்சந்தலைமுதல் உள்ளங்கால்வரை இன்பமயமாகச் செய்வது. சிவயோகியர் இதனை 'மதிமண்டலத்தமுதம்' என்பர்.

நல்லவற்றில் ஊக்கியும் தீயவற்றினின்று விலக்கியும் காத்தலின் இறைவனை 'எனது அரசே' என்கின்றார்கள்.

எஞ்ஞான்றும் கண்டுதொழ எளியனாக இம்மண்ணுலகில் உறைகின்றான் என்பார் 'சேற்றார் வயல் புடைசூழ்தரு திருப்பெருந்துறையுறையும் நின்மலனே' என்றும், மக்களுக்கு மலநாசம் செய்யும் திருநீறு தேவரீர் திருமேனிக்கு அழகு தருவதாக அமைந்தது என்பார் 'நீற்றார்தரு திருமேனி' என்றும், தேவரீர் அநாதியே மலங்களொடு பொருந்தாதவர் என்பார் 'நின்மலனே' என்றும் அருளினார்.

கோற்றேன் - கொம்புத்தேன். எடுக்கப்பெற்ற இடமும் இருல் தொடுக்கப்பெற்ற இடமும் தூய்தாய் முற்றி இனிமை மிக்கதாதலின் சிவானந்தத்தைக் 'கோற்றேன் என்கோ' என்று வியந்தார். அங்ஙனமே இறவாமையும், இன்பமும் பயத்தலின் 'அமுதென்கோ' என்றார். ஆகவே சிவானந்தானுபவம் இங்ஙனமிருந்தது என்று சொல்லும் உரையளவிற்கு வாராதது, மனனுணர்வாலே ஆன்மபோதம் அடங்கி அனுபவிக்கத்தக்கது என்றவாறும்.

இங்ஙனம் ஆனந்தமேலீட்டை அறிவித்தலால் இத்திருப்பாடல் சிவானந்தமேலீடாகிய உயிருண்ணிப்பத்தில் ஒன்றுயின்மை காண்க.

512 எச்சம்மறி வேனுனெனக்
இருக்கின்றதை யறியேன்
அச்சோவெங்கள் அரனேயரு
மருந்தே யெனதமுதே
செச்சைமலர் புரைமேனியன்
திருப்பெருந்துறை யுறைவான்
நிச்சம்மென நெஞ்சின்மன்னி
யானாகிநின் ருனே. 9

இ - ள் : எங்கள் அரனே! அருமருந்தே! அமுதமே! இரு வெட்சிமலரை ஒத்த சிவந்த திருமேனியை உடையவனும், திருப்பெருந்துறையில் உறைபவனுமாகி எனது மனத்தில் நாடோறும் எழுந்தருளி யானேயாகிநின்றவனே! எனக்குள்ள வினைச்சேடத்தை அறிவேன்; ஆனால் எனக்கு வரக்கூடியன வாக இருக்கின்ற வினைமூட்டைகளை அறியேன்; அச்சோ என்றவாறு.

சிவனே! என் மனத்தில் எழுந்தருளி ஒன்றாகிக் கலந்து யானே தானாகி நின்றாய்; அதனால் பிராரத்தசேடத்தைத் தேகம் உண்மையால் அறிகின்றேன்; ஆகாமிய சஞ்சிதங்கள் எவ் வளவு இருக்கின்றன என்பதை அறியேன்; அவை என்ன செய்யுமோ! ஐயோ! என்று இரங்கினார் என்பது கருத்து.

சிவானந்தமேலீட்டால் தற்போதமிழந்தார்க்கு வினையுண் மையும் அதனால் வினையுந்தீங்கும் விளங்குமோ எனின், விளங் காததுதான். ஆயினும் சிவானந்தத்தில் திளைக்க முற்படுகின்ற காலத்து இத்தகைய பேரின்பம் நிலைத்திருக்கவேண்டுமே; முன்போல்கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போகக்கூடாதே; எடுத்த இத்தேகம் இருப்பதால் வினைச்சேடம் இருக்கிறதென் பதை அறிகிறேன்: இதனால் அச்சமில்லை. இவ்வுடல் சிவானு பவத்திற்குத் துணையாக உதவும்; இனி, வரக்கடவ வினைகளைத் தான் அறியேன் என்று உணர்கின்ற அளவு விளங்கி, திருவடி யைச் சிக்கெனப் பிடிக்கும் சித்தத்தை விளைவித்து, சிவானந்த மேலீட்டிலேயே இருக்கச்செய்யும் என்க. அதனாலேயே 'எச்சம் அறிவேன் நான்; எனக்கு இருக்கின்றதை அறியேன் அச்சோ' என்கின்றார்.

எச்சம் - வினைச்சேடம். இது பிராரத்தவினையில் உண்டு கழிந்ததுபோக மிச்சமாக உள்ளது. இருக்கின்றது - வருவினை யும் மேல்வினையுமாகக் குவிந்திருப்பவை.

நான் எச்சம் அறுவேன் என - நான் குறைபாடிலேன் என்று எண்ணி என்பது பழையவுரை.

அரன் - பாவநாசன். பாவங்களால் விளையும் பிறவிப் பிணியைப்போக்கும் மருந்தாக இறைவன் உதவுவதை 'அரு மருந்தே' என்பதால் உணர்த்தினர்கள். பிற மருந்துகள் உண்டாலன்றிப் பிணியைப்போக்கா; இறைவனாகிய மருந்தோ எண்ணினாலே பிணிபோக்குமாதலின் அருமருந்தே என்றார் என்க. எண்ணியமாத்திரத்தே என்னுட்சென்று பிணிபோக்கு தலேயன்றி இனிக்கவும்செய்கிறது என்பார் 'அமுதே' என்றார்.

இவ்வண்ணம் அறிவால் அனுபவிக்கப்பெறும் பொருளாக விளங்கிய இறைவன் என் கண்ணிற்கு விருந்தாயினான் என் பார் 'செச்சைமலர் புரை மேனியன்' என்றார். செச்சைமலர் - இருவெட்சிமலர். நிச்சம் - நித்தியம் என்பதன் திரிபு. "நிச்ச நிரப்புக் கொன்றாங்கு" என்ற திருக்குறளிலும் இப்பொருள் தாதல் காண்க.

அவன் தான் என்ற பேதமின்றிக் கலந்து அவனேதானே யாகிய அத்துவிதநிலையில் விளங்கினன் என்பார் 'நிச்சம் என நெஞ்சில் மன்னி யாகி நின்றான்' என்றார். என் நெஞ்சு - என் நெஞ்சு; அகரம் சாரியை, உருபன்று; பன்மையுணர்த்தா மையின்.

யான் ஆகி நிற்கும் சிவானந்தம் மேலிட்டு அது பிரியா மையை விரும்புதலின் இது பதிகக்கருத்திற்கு இயைய நிற்றல் காண்க.

513 வான்பாவிய வுலகத்தவர்
தவமேசெய அவமே
ஊன்பாவிய வுடலைச்சுமந்
தடவிமர மானேன்
தேன்பாய்மலர்க் கொன்றைமன்னு
திருப்பெருந்துறை யுறைவாய்
நான்பாவியன் ஆனாலுனை
நல்காயெனலாமே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள் : தேன் ஒழுகுகின்ற மலர்களையுடைய கொன்றை மரங்கள் நிறைந்து விளங்கும் திருப்பெருந்துறைக்கண் உறை பவனே! ஞானவெளியிற் பரவிய உலகவராகிய சிவஞானியர்

தவங்களைச் செய்ய, யான், ஊன் நிறைந்த இவ்வுடலைச் சுமந்து வீணுகக் காட்டுமரமானேன்; நான் பாவங்களை உடையவனுனல், உன்னை நோக்கி, 'அருளுவாய்' என்று கேட்டல் பொருந்துமோ என்றவாறு.

ஞானவானிற் பரவிய சிவஞானியர்கள் தவஞ்செய்ய, மண்ணுலகிற் பிறந்த யான் இவ்வுடலைச்சுமந்து காட்டுமரம் போலப் பயன்படாதொழிந்தேன்; எண்ணிப்பாரும்; நான் பாவியாஞல் உம்மை நோக்கி அருளாய் என்பேனு? என்குற்றம் உணர்ந்து சும்மா இரேனு? என்கின்ருர் என்பது கருத்து.

உம்மால் விரும்பியாட்கொள்ளப்பட்டேனுகையால், பாவியல்லேன் என்பதை உணருகிறேன். ஆகையினுலேயே 'நம்பியினித்தான் நல்காயே' 'அருளாதொழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் ஆர்?' 'ஒல்கா நிற்கும் உயிர்க்கு இரங்கியருளாய்' என்றெல்லாம் உரிமையோடு இரக்கின்றேன் என்பார் 'நான் பாவியன் ஆனுல் உன்னை நல்காய் எனல் ஆமே' என்கின்ருர்.

இங்ஙனமன்றி, நான் பாவிதான்; ஆனுலும் நீ நல்குக எனல் தகுமா எனப் பொருளுரைப்பாரும் உளர்.

வான் பாவிய உலகத்தவர் - சிதாகாயப் பெருவெளியிற் பரந்துள்ள உலகத்தவர்கள்; சிவஞானியர். சிவஞானியர் சிவத்தோடு இடையருது கலந்திருக்கத் தவம் செய்கின்றனர்; நான்மட்டும் வினைப்போக்கத்திற்காக நீ உதவிய இவ்வூனுடலைச் சுமந்து காட்டுமரமானேன் என்கின்ருர்.

காட்டுமரம் பழமரமாயினும் இருக்குமிடம் சரியன்மையின் பாம்பும் பல்லியும், புலியும் கரடியும் உறைதற்கு இடமாகிப் பறவைகட்கும் மக்களுக்கும் எவ்வகையினும் பயன்படாதாகி வீணேநிற்கும்; அதுபோல நானும் யார்க்கும் பயன்படாதவனுனேன் என்ருர்.

திருப்பெருந்துறையே பொன்னூர் மேனியனுகக் காட்சி அளிக்கின்றது என்பார் 'மலர்க்கொன்றை மன்னு திருப்பெருந்துறை' என்ருர்.

'நல்காய்' எனத் தன்வசமழிந்த ஆனந்தநிலையை வேண்டுதல் சிவானந்தமேலீட்டைக் குறிப்பதாதலால் இத்திருப்பாடல் உயிருண்ணிப்பத்திற்கு இயைபுடைத்தாதல் காண்க.

இப்பத்தால், அடிகள், 'எந்நாளும் களித்திறுமாக்கேன், வானோரும் அறியா வளமீந்தனன், மத்தோன்மத்தனுக்கி என்னைச் செய்த படிறு அறியேன், மன மொழிகளிற் கலந்திருக்கின்றான், தற்போதம் அழிந்து அடியார்கூட்டத்துள் கலந்தாற்றான் அவன்கழல் சார்தல் இயலும், என்னுள் எங்கும் நிறைந்தான், அதனால் எனக்குப் பொன் புகழ் விண் மண் ஒன்றும் வேண்டாம், அவன் திருவடி ஒன்றே அமையும், அதனை இறுகப்பற்றினேன், அவன் ஆனந்தத்தைக் கொம்புத்தேன் என்பேனோ? அமுதம் என்பேனோ? இன்னதென்று உரைக்க அறியேன் என்று பசுபோதம் கெட்டுச் சிவானந்தமேலிட்டு அதன் மயமாக இருத்தலை அறிவிக்கின்றார்கள்.

# 35. அச்சப்பத்து

ஆனந்தமுறுதல்

வாதவூரடிகள் தில்லையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, சிவானந்தானுபவம் சிறந்து விளங்க, அதிலே தோய்ந்து அநந்நியமாய் இருக்கின்ற அநுபவநிலையில், அதற்குப் புறம்பானவர்களைக் காணநேர்ந்தபோது, எவற்றிற்கும் அஞ்சாத எமக்கு, இவர்களைக் காண்பதுமட்டும் அச்சம் ஆகின்றது என்று இதனை அருளிச்செய்தார்கள்.

அச்சப்பத்து என்பது அஞ்சுதற்குரிய காரணங்களைப் பொருளாகக்கொண்டு, அவற்றினின்று தப்பி உய்ய அருளை விரும்பும் நோக்குடன் விண்ணப்பிக்குமுறையில் அமைந்த பத்துப் பாடல்களையுடையது. இதனானே பெயர்க்காரணமும் இனிது விளங்கும். அமுதமுண்டார் அவ்வினிமையையே என்றும் விரும்புவதல்லது வேம்பு தின்ன விரும்பார். அதுபோலச் சிவானந்த மேலீட்டில் திளைக்கும் அடிகளார் அதிலேயே நிலைத்துநிற்க விரும்பி, அதற்கு எதிரான புறச்சூழலைக் கண்டு அஞ்சுவதாக விண்ணப்பிக்கின்றார்கள் என்பதாம்.

அச்சப்பத்தாவது ஆனந்தமுறுதல்; அதாவது நேயத்திலே ஒன்றுபட்டுச் சிக்கென அழுந்தினமை என்பது பழைய குறிப்பு.

“தரையில் வளர் வினைமுழுதும் வரினும் அஞ்சேன் சிவசமயத் தவஞ்சாராதார் அருகில்வரக் காண்கின் மனம் அஞ்சுமென இகழ்ந்துரைத்தல் அச்சப்பத்தாம்” என்பது பழையபுராணம்.

“அருளுரு நச்சார்க்கு அச்சப்பத்துத் தெருள்தரு சிவானந்தத்தின் முறுகுதல்” என்பது அகத்தியச் சூத்திரம்.

இதற்குரிய பழையவுரை, ‘முன்பத்தில் திருவருளான சிவானந்தம் முற்றுப்பெற்று, முன் பிழைத்ததற்கிரங்கி அன்பும் வேடமும் கண்டிகையும் திருநீறுமாகிய சாதனங்களுமே இன்பம் என்று அறிந்ததை உணர்த்துவது’ என்னும்.

இவையனைத்தையும் இணைத்து எண்ணும்போது நேயமாகிய சிவானந்தத்து வேறின்றி அழுந்தினமையால், சிவத்தோய்வில்லாத எதனைக் கண்டாலும் அஞ்சுவது இயல்பாதலின், ‘அம்ம

நாம் அஞ்சுமாறே' என்ற மகுடத்தைக்கொண்டு எழுந்தது இப் பத்து என்பது பெறப்படும்.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

514 புற்றில்வா ளரவும் அஞ்சேன்
பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்
கற்றைவார் சடையெம் அண்ணல்
கண்ணுதல் பாதம் நண்ணி
மற்றுமோர் தெய்வந் தன்னை
உண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 1

இ - ள்: புற்றில் வாழ்கின்ற ஒளிபொருந்திய பாம்பிற்கும் அஞ்சேன்; பொய்யர்களாகிய புறச்சமயத்தார் பேசும் மெய்ம்மைபோன்ற கூற்றுக்களுக்கும் அஞ்சேன்; நாம் அஞ்சுகின்ற நெறி எது? எனின் தொகுதியான நீண்ட சடையினையுடைய எம் அண்ணலாகிய சிவபெருமானுடைய திருவடிகளை அடைந்தும், வேறொரு தெய்வம் உண்டு என்று எண்ணி எம் தலைவனாகிய சிவன் புகழைப் பேசாதவர்களைக் காணின் அம்ம அஞ்சுவேன் என்றவாறு.

அஞ்சத்தக்க அரவு, பொய்யர்தம் மெய் இவற்றிற்கும் அஞ்சேன்; சைவசமயத்திலே தோன்றியும் புறந்தொழும் பொல்லாதவர்களைக் காணின் அஞ்சுவேன் என்பது கருத்து.

அரவு தீண்டின் உடலழியுமேயன்றி உயிருக்குத் தீங்கில்லை ஆதலால் அதற்கு அஞ்சவேண்டிய நிலை எனக்கு இல்லை என்றார்.

பாலையுள் பசும்புல் தோன்றுதலுபோலப் பொய்யர்களிடம் மெய் தோன்றுது; அங்ஙனம் தோன்றுமேல் அது மெய் விளைக்கும் நிலைத்த இன்பத்தையும் உதவாது. ஆனல் மயக்க உணர்வினரை மெய்யென நம்பச்செய்து மயக்கம் தரும். மும்மலங்களோடு கூடிய பொய்யர்களாகிய தேவர்களைச்சார்ந்த அமுதம் இறவாமையாகிய நன்மை பயப்பதாயினும், அதனுடன் செருக்கையும் விளைத்து அவர்களைத் தீநெறிக்கண் செலுத்தியது போலப் பொய்யர்தம் மெய் உண்மையைத் திரித்து உணரச் செய்து தீநரகிற் செலுத்தும். ஆயினும் உண்மையுணர்ந்த

காலத்து அதனின்று தப்பி உய்யவுங்கூடும் ஆதலால் அதனுலை வருந்தீங்கு பெரிதன்று என்று திருவுளங்கொண்டு அதற்கும் அஞ்சேன் என்ருர்.

கற்றைச்சடை, வார்சடை என்க. அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். கண்ணுதல் - நுதலிற்கண்ணுடையானுகிய முதல்வன். நண்ணி, நினைந்து கற்றிலாதவரைக் கண்டால் அஞ்சுமாறே எனக் கூட்டுக.

சைவமாம் சமயஞ்சார்ந்தும், சிவன் திருவடியை நண்ணி, நம்பனருளாமையால் வேருேர்தெய்வத்தை நினைந்து எம்பெருமானைக் கற்றிலாதவரைக் காணின் அஞ்சுவேன் என்ருர்.

மற்றுமோர் தெய்வந்தன்னை நினைந்து, அண்ணல் கண்ணுதல் பாதம்நண்ணி எம்பெம்மாற் கற்றிலாதவரைக் காணின் அஞ்சுவல் எனக்கூட்டி முடித்தலுமாம்.

பெம்மாற்கு அற்று இலாதவரை எனப் பிரித்து, பெருமான் பொருட்டு (உடல் பொருள் ஆவி இம்மூன்றையும்) அற்றுப் போகாதவரை என உரைப்பாரும் உளர். 'பெம்மான் கற்றிலாதவர்' என்பது இரண்டன்தொகையாதலால் பொதுப்பெயர் உயர்திணைப் பெயர்களினீற்றுமெய் வலிவரினியல்பாம் என்ற விதிப்படி திரியாது இயல்பாக வேண்டியது 'பெம்மாற் கற்றிலாதவரை எனத் திரிந்துமுடிந்தது ஆதலின் மரபுபற்றி 'பெம்மான் கற்றிலாதவரை' எனவே பிரித்துப் பொருள்கொண்டாம்.

சிவன் திருவடிக்கண் பற்றில்லாதவரைக் காணின் நாம் அஞ்சுமாறு இதுவாம் என உரைத்தல் வாயிலாகத் தமது ஆனந்தப்பேறு அறிவிக்கப்பெறுதலின் இது அச்சப்பத்துக்குரியதாயிற்று.

515 வெருவரேன் வேட்கை வந்தால்
வினைக்கடல் கொளினும் அஞ்சேன்
இருவர்தான் மாலு காணு
எம்பிரான் தம்பி ரானும்
திருவுரு வன்றி மற்ருேர்
தேவரெத் தேவ ரென்ன
அருவரா தவரைக் கண்டால்
அம்ம நாம் அஞ்சு மாறே.

இ-ள்: ஆசை என்னகத்தெழினும் அஞ்சேன்; வினையாகிற கடல் என்னை அகப்படுத்திக்கொள்ளினும் அஞ்சேன்; தம்முள்

மாறுபட்ட அயனும் திருமாலுமாகிய இருவராலும் காணமுடியாத எம் தலைவனும், தமக்குத் தலைவன் தானேயானவனுமாகிய எமது பெருமானுடைய திருவுருவையன்றி, வேறொரு தேவரைக் காணநேரின் அவர் எத்தேவர் என்று வெறுப்புக் கொள்ளாதவர்களைக் கண்டால், அதுவே நாம் அஞ்சுகின்ற நெறியாம் என்றவாறு.

ஆசைக்கும், அதனால் வினையும் வினைக்கடலுக்கும் அஞ்சேன்; இறைவனுடைய அருளுருவையன்றி வேறு தேவரைக் கண்டபோது இவர் எத்தேவர் என்று வெறுத்தொதுக்காத வீணரைக் காணின் அஞ்சுவேம் என்றார் என்பது கருத்து.

வேட்கையாவது பொருள்கள்மேற்றோன்றும் பற்றுள்ளம். இதுவே மேல்வினைவிளைவுக்குக் காரணமாயினும், நீரை மடைமாறிவிடுதல்போல விஷயசுகத்தில் உண்டான வேட்கையைச் சிவன் திருவடிக்கண் செல்ல மாற்றிவிட்டால் வேட்கையால் விளையுந்தீங்கொன்றுமில்லையாம். அங்ஙனம் மாற்ற மறந்தோ தாமதித்தோ வேட்கையால் தீங்குநேரினும் அதனைத் திருவருட் சார்பினால் நீக்கி உய்யலாம் ஆதலால் 'வேட்கைவந்தால் வெருவரேன்' என்றார். வந்தால் என்பது வாராது என்னும் துணிபு உணர்த்திநின்றது.

ஆன்மபோதங்கெட்டுச் சிவபோதத்தில் அழுந்தியிருக்கும் என்னை ஒருபோதும் வினை வாதியா ஆதலால் 'வினைக்கடல் கொளினும்' என்றார். வினை ஒன்றன்பின் ஒன்றாக வந்து தன்னையுடையவனைத் தன்னகப்படுத்துதலின் அதனைக் கடலாக உருவகித்தார்.

மாறு இருவர் - மாறுகொண்ட இருவர்; அயனும் மாலும். இவர்கள் தம்முள் யார் முதல்வன் என்று கலாய்த்தனர். ஆணவத்தால் அறிவு மயங்கிக் கலகம் விளைக்கும் தம்மின் வேறாக ஒரு தலைவனிருப்பதை உணரார் ஆதலின் 'மாறு இருவரால் காணா தம்பிரான்' என்றார்.

தம்பிரான் - தமக்குத் தலைவன் தாமேயானவன். வேறு தலைவன் இல்லாதவன் என்றவாறு. தம்பிரானும் திருவுரு சிவனாகிய வடிவம். என்ன என்பதை என்று எனத் திரித்து, என்று அருவராதவரை எனக் கூட்டுக. மற்றோர் தேவர் - களிப்பிற்களித்து, மருளில்மருண்டு மலவயப்பட்டுநிற்கும் பிரமன் முதலிய தேவர். எத்தேவர் - எத்தகைய தேவர்கள்.

இறைவன் ஒருவனே அறியத்தக்கவன்; காணத்தக்கவன் என்ற உறுதியை விளக்குதலின் இத்திருப்பாடல் ஆனந்தமுறுதலானமை காண்க.

516 வன்புலால் வேலும் அஞ்சேன்
வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்
என்பெலாம் உருகநோக்கி
யம்பலத் தாடு கின்ற
என்பொலா மணியை யேத்தி
யினிதருள் பருக மாட்டா
அன்பிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே.

இ - ள்: வலிய புலால்மணம் கமழும் வேலிற்கும் அஞ்சேன்; வளையலையணிந்தகைகளையுடைய பெண்களின் கடைக்கண் பார்வைக்கும் அஞ்சேன்; சிற்றம்பலத்தே திருநடம் புரிகின்ற என் முழுமணிபோல்வானாகிய தில்லையம்பலக்கூத்தனை எலும்புகள் அனைத்தும் உருகத் தரிசித்து வழிபட்டு, அவர் அருளை இனிமையுடன் பருகமாட்டாத சிவனடிக்கு அன்பிலாதவரைக் கண்டால், அம்ம நாம் அஞ்சுமாறு அதுவொன்றுமேயாம் என்றவாறு.

கொல்லும் வேலுக்கும், மாதர்களின் வேல்போன்ற கண்களுக்கும் அஞ்சேன்; என்பும் உருகத் தில்லையம்பலத்தே திருக்கூத்தாடும் சிவனடிக்கு அன்பிலாதாரைக் காணின் நாம் அஞ்சுவது அஃதொன்றற்கேயாம் என்பது கருத்து.

வலியவேல் புலால்வேல் என்றது அதன் கொலைத்தன்மையைக் குறித்தது. வேலும், மாதர்விழியும் வருத்தும் என்பது தெரிந்தவுண்மை. புறப்பகையாகிய அவற்றிற்குத் தப்புதல் எளிது. உட்பகையாய்ச் சைவனாக இருந்தும் ஆனந்தநடராசப் பெருமானைக் கண்டு என்பெலாம் நெக்குருக அன்பு செய்ய வேண்டிய ஒருவன், அன்பு செய்யாது கல்மனக்காரனாக இருப்பின் அவனையே நாம் அஞ்சுவது என்றவாறும்.

வேல் தாழாகக் கொல்லாது; ஒருவன் எறியத்தான் கொல்லும்; அதனால் அதற்கு அஞ்சவேண்டுவது இன்றாம். வளைக்கையார் கடைக்கண்ணோ இளமையும், அறியாமையும், காமமும் உடையாரையே வருத்தும்; மனவுறுதியும் மூதறிவும் முதுமையும் உடையாரை ஒன்றும் செய்யாது ஆதலால் அதற்கும் அஞ்சேன் என்றார்.

கூத்தப்பெருமான் திருவடிக்கு அன்பில்லாதவர்கள் தாம் இருக்கும் சூழலையும் தம்மைச் சார்ந்தாரையுமே கெடுத்து, சிவ நெறிக்குப் புறம்பாக்குதலின் அத்தகைய தீயோர்க்கே நாம் அஞ்சுவது என்கின்றார்கள்.

பெருமானை ஒருமுறை அன்போடு கண்டாலேபோதும்; எற்புத்துளைதொறும் அற்புநீர் சுரக்க அருளார் அமுதத்தைப் பெருக்கி, தேனாய் இன்னமுதமாய்த் தித்திப்பான். அவனருளை வாரிப்பருக வாய்ப்பு இருந்தும் அதனைச் செய்யமாட்டாதவர் களைக் கண்டாலே எம்மனமும் அத்தகைய நிலையை அடைந்து விடுமோ! அவ்வன்பர்களால் எத்துணை உயிர்கள் புறநெறி சென்று புலன்வழிபற்றிக் கெடுமோ! என்று யாம் அஞ்சுவோம் என்று இரங்கியவாறு.

தாம் ஆனந்தமுற்றதால், ஆனந்தம் அடையவேண்டிய பிறரும் அங்ஙனம் உற்றிலரே என்று அஞ்சி விண்ணப்பிப்ப தால் இது ஆனந்தமுறுதலாகிய அச்சப்பத்திற்கு உரியதாதல் காண்க.

517 *கிளியனார் கிளவி யஞ்சேன்*
*அவர்கிறி முறுவல் அஞ்சேன்*
*வெளியநீ றாடு மேனி*
*வேதியன் பாத நண்ணித்*
*துளியுலாங் கண்ண ராகித்*
*தொழுதழு துள்ள நெக்கிங்*
*களியிலா தவரைக் கண்டால்*
*அம்மநாம் அஞ்சு மாறே.* 4

இ - ள்: கிளியை ஒத்த மகளிரது சொல்லுக்கும் அஞ் சேன்; அவர்களுடைய மயக்கத்தை விளைவிக்கும் சிரிப்பிற்கும் அஞ்சேன்; வெண்மையான திருநீற்றையணிந்த திருமேனியை யுடைய அந்தணனாகிய சிவபெருமானுடைய திருவடிகளைச் சார்ந்து, ஆனந்தநீர் ததும்புகின்ற கண்களை உடையவர்க ளாகிக் கைகளால் தொழுது, அழுது, மனம் கசிந்து, இங்கு அளியாதவரைக் காணின் அம்ம! நாம் அஞ்சுமாறு இது ஒன்றற்கேயாம் என்றவாறு.

மாதர்களின் சொல்லுக்கும் புன்னகைக்கும் அஞ்சேன்; அவற்றைவிடக் கொடிய தன்மையர், சிவனடிக்கன்பு செய்யாத வர்கள்; அவர்களைக் காண அஞ்சுவேன் என்பது கருத்து.

கினி பார்க்கப் பசுமையாய்க் கண்வழியாகக் கருத்தைக் கவர்வதோடன்றி, மழலைமொழியாலும் மனத்தைப் பிணிப்பது: அதனை ஒத்தவர்கள் மாதர்கள் என்றது மேனி அழகாலும் சொல்லினிமையாலும் வசப்படுத்திக் காமத்தீயைக் கொளுத்தி, புன்முறுவலால் அதனைக் கொழுந்துவிட்டெரியச் செய்பவர்கள் என்பதாம். அவர்கள் கிளவியும் முறுவலும் அங்ஙனம் செய்யுமாயினும் திருவருட்சார்பு சிவனடியார் நேசம் இவற்றைப் பெறின் அவற்றினின்றும் தப்பலாம்; மனங்கனியாத உலோகாயதர்காட்சி அத்திருவருட் சார்புறுதற்குரிய ஞானவாயிலையே அடைத்துவிடுதலின் அதுவொன்றே யாம் அஞ்சுநெறியென்றதாம். கிறி - மயக்கம்; வஞ்சனையுமாம்.

இறைவனே எமது மலமாயைகளைப் போக்கவே தமது திருமேனியில் வெண்ணீறணிந்து விளங்குகின்றார். வேதியனாக எழுந்தருளி ஞானோபதேசம் நல்குகிறார். அங்ஙனம் அவர் எளிவந்து அம்பலத்தே நிற்கும்போது, யாம் அவர்திருவடியையணுகவேண்டியதொன்றே செயற்பாலது. அணுகின் நம்மனங் கசியும். கண் ஆனந்தக்கண்ணீர் சொரியும். உள்ளம் நெக்கு உருகும். நாம் அன்புமயமாவோம்; அவரருளுக்குக் கொள்கலமாவோம். இஃதறியாத - உய்யும்நெறியென்று உணராத கன்னெஞ்சரைக் காண்பதற்கு நாம் அஞ்சுவேம் என்பதாம்.

துளியுலாங்கண்ணராகி என்பன முதலியவற்றால், ஆனந்த முற்றார் எய்தும் மெய்ப்பாடுணர்த்தி, அங்ஙனமில்லாதாரைக் காணவும் அஞ்சுவதாகத் தெரிவித்தலின் இத்திருப்பாடல் அச்சப்பத்தாகிய ஆனந்தமுறுதலை அறிவிப்பதாதல் காண்க.

518 *பிணியெலாம் வரினும் அஞ்சேன்*
*பிறப்பினோ டிறப்பும் அஞ்சேன்*
*துணிநிலா அணியி னான்றன்*
*தொழும்பரோ டழுந்தி அம்மால்*
*திணிநிலம் பிளந்துங் காணாச்*
*சேவடி பரவி வெண்ணீ*
*றணிகிலா தவரைக் கண்டால்*
*அம்மநாம் அஞ்சு மாறே.*

இ - ள்: நோயனைத்தும் ஒருங்கு திரண்டுவரினும் அஞ்சேன்; பிறப்பு இறப்பு இவைகட்கும் அஞ்சேன்; பிறைமதியையணிந்த பெருமானுடைய அடியார்களோடு கூடிக்கலந்து,

காத்தல்பதவியிலிருக்கும் அத்திருமால் உறுதியான நிலத்தைப் பன்றியாய்த் தோண்டிச்சென்றும் அறியமுடியாத திருவடியை வணங்கித் திருநீறணியாதவர்களைக் கண்டால், அம்ம நாம் அஞ்சுமாறு அதுவொன்றுமேயாம் என்றவாறு.

பிணி பிறப்பு இறப்பு இவைகள் வினையானும் நியதியானும் வருவன. ஆதலால் அவற்றிற்கு அஞ்சேன்; ஆனால் அடியார்கள் கூட்டத்திற்கலந்து சிவன் சேவடியைத் தொழுது திருநீறு அணியாதவர்களைக் காணின் அஞ்சுவேன் என்பது கருத்து.

பிணி பிறப்பு இறப்பு என்பன உடலைப்பற்றியனவாய் உயிருக்கு ஊறுமட்டும் விளைப்பன; இவர்கள்காட்சி உயிரின் உணர்வைத் திரித்து நெறியல்லா நெறிக்கண் செலுத்துவன. ஆதலால் இவர்க்கு அஞ்சுவேன் என்றவாறும்.

சேவடிபரவும் திரு வாய்க்கப்பெற்றிலராயினும் திருவடியைக் கண்டாற்போதும்; கருதினாற்போதும்; பெரும்பாவியாகிய பிறைமதியைக் காத்ததுபோலக் காப்பானிறைவன் என்பார் ‘துணிநிலா அணியினான்’ என்றார். இதனால் குற்றமே செய்யினும் குணமெனக் கருதுங்கொள்கையன் இறைவன் என்பது உணர்த்தியவாறும்.

அம்மால் என்ற சுட்டு, திருமாலின் சிறப்புக் கருதநின்றது. திருமால் பெருமுயற்சி செய்தும், அறிய முடியாதது திருவடி என அதன் அருமை விளங்க ‘அம்மால் திணிநிலம் பிளந்தும் காணாச் சேவடி’ என்றார். சேவடி என்றது அதன் செம்மை நிறம் என்னைக் கவர்ந்தது; கண்ணால் யானும் கண்டேன் காண்க என்று சுட்டிக்கூறியதாம்.

அன்பர் கடமை, கழலே நினைதலும், திருவாய் பொலியச் சிவாயநமவென நீறணிதலும் ஆம். அதனைச் செய்யாதவர்கள் கடமைதவறிய கயவர்கள். அவர்களைக் காணலும் ஆகாது என ஆனந்தமுறுதார் வாயிலாக ஆனந்தமுறுதலின் இலக்கணம் தெரிவித்தலின்' இத்திருப்பாடல் ஆனந்தமுறுதலாகிய பதிகக் கருத்தை விளக்குதல் காண்க.

519 வாளுலாம் எரியும் அஞ்சேன்
வரைபுரண் டிடினும் அஞ்சேன்
தோளுலா நீற்றன் ஏற்றன்
சொற்பதங் கடந்த அப்பன்

தாளதா மரைகள் ஏத்தித்
தடமலர் புனைந்து நையும்
ஆளலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 6

இ - ள் : ஒளிவீசுகின்ற தீயினுக்கும் அஞ்சேன் ; மலையே புரண்டுவரினும் அஞ்சேன் ; தோளின்மீது விளங்குகின்ற திருநீற்றினையுடையவனும், இடபவாகனத்தையுடையவனும், சொல்லளவைக் கடந்த தந்தையுமாகிய சிவபெருமானுடைய திருவடித்தாமரைகளைத் தொழுது பெரிய மலர்கள்கொண்டு அர்ச்சித்து மனம் கனிகின்ற மக்களல்லாதாரைக் காணின், அம்ம ! நாம் அஞ்சுநெறி அது ஒன்றேயாம் என்றவாறு.

தீக்கும் அஞ்சேன் ; மலை உருண்டுவந்தாலும் அஞ்சேன்: சிவபெருமானுடைய திருவடித்தாமரைகளில் மலர்கொண்டு அர்ச்சித்து மனம் கனியாதவர்களைக் காணநேர்ந்தால் அஞ்சுவேன் என்கின்றார்கள்.

வாள் - ஒளி. கண்ணைப் பறிக்கும் பேரொளியை வீசுகின்ற எரியும், உருண்டோடி வருகின்ற மலையும் அழிப்பது உடலை. உடல் அழியின் வினைப்போகம் கழிந்தது என்னும் உவப்பே யன்றி எனக்கு உவர்ப்பில்லை ஆதலால் அவைகட்கு அஞ்சேன் என்றார்கள். இறைவனைப் பூசியாதவர்களோ உணர்வையே கெடுப்பவர்கள் ஆதலின் அவர்களைக் காண அஞ்சுவேன் என்கின்றார்கள்.

மலையே வந்து வீழினும் மனிதர்காள் நிலையிற் கலங்கிடேல் என்பது அப்பர்சுவாமிகள் அடியார்களுக்குத்தந்த உபதேச மாதலின் அடிகளாரும் 'வரைபுரண்டிடினும் அஞ்சேன்' என்று தன்மேல்வைத்து அவ்வுபதேசத்தை அருளுகின்றார்கள்.

சொற்பதம்-சொல்லினளவு அது கண்ட அளவாகக்கருத்தி லுறையும்; கருத்தில் உறைந்த அளவே சொல்லால் வெளிப் படும். கடவுள் கருதும் மனத்திற்கும், காணும் பொறிகட்கும் அப்பாற்பட்ட - அடங்காத குணநலங்களை உடையனாதலின் அவனை உரையளவையால் உரைப்பதும், உணர்வதும் எப்படி என்பார் 'சொற்பதங்கடந்த அப்பன்' என்றார். முன்னரும் 'சொற்பதங்கடந்த தொல்லோன்' என்றது காண்க.

தாளதாமரை என்பதில் அகரம் சாரியை. தடமலர் - பெரிய மலர். குளத்திலுள்ளமலர் எனப் பொருள்கொண்டு திருவடித் தாமரையில் குளத்தாமரையைக் கொண்டுவந்து சாத்தி, நிறத்

தாலும், அழகாலும், மென்மையாலும், கருத்தைக்கவருந்தொழிலானும் திருவடியும் தாமரையும் ஒன்ருக இருத்தலைக் காட்சியளவையானுங் கண்டு மகிழ்ந்து எனலுமாம்.

தடமலர் - குளத்தாமரை. அது புருவமத்தியிலுள்ள விசுத்தித்தாமரையைக் குறிக்கும். ஆக்வே திருவடியைப் புருவமத்தியில் வைத்து என்று கூறுகிறது யோகபரமான சிவானந்த யோகீசுரர் உரை.

ஆள் அலாதவர் - மக்கள் அல்லாதவர். மக்களாக இருந்தால் திருவடியைத் தரிசித்தலும் பூசித்தலும் செய்தல்வேண்டும். அது செய்யாதவர்கள் உறுப்பான் மக்களே போல்வாராயினும் உணர்வால் ஆளல்லர் என்றவாறு. தீயாரைக் காண்பதுவும் தீதேயாதலின் 'ஆளலாதவரைக்கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே' என்கின்ருர்கள்.

இதனுலும், திருவடித் தாமரைகளை ஏத்துதலும், மலர் கொண்டு சாத்துதலுமாகிய ஆனந்தமுறுதற்குரிய உபாயங்களுணர்த்தப்பெறுதலின் பதிகக்கருத்து விளங்குதல் காண்க.

520 தகைவிலாப் பழியும் அஞ்சேன்
சாதலை முன்னம் அஞ்சேன்
புகைமுகந் தெரிகை வீசிப்
பொலிந்தஅம் பலத்து ளாடும்
முகைநகைக் கொன்றை மாலை
முன்னவன் பாத மேத்தி
அகநெகா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 7

இ - ள்: தடுக்க இயலாத பழிகள் வரினும் அஞ்சேன்; முதலில் இறத்தற்கு அஞ்சேன்; புகையோடு கூடிய தீயைத் திருக்கரத்தில் ஏந்திநின்று வீசித் திருவம்பலத்துள் விளங்கித் திருநடம்புரிகிற - மொட்டாயும் மலர்ந்துமுள்ள கொன்றை மலர் மாலையை அணிந்த முதல்வனுகிய சிவபெருமானுடைய திருவடிகளைப் புகழ்ந்து மனம் இளகாதவர்களைக் காணின் அம்ம நாம் அஞ்சும்நெறி இது ஒன்றேயாம் என்றவாறு.

பழிக்கும் மரணத்திற்கும் அஞ்சேன்; தில்லைக் கூத்தன் திருவடிக்கு மனம் இளகாதவரைக் காணின் அஞ்சுவேன் என்பது கருத்து.

பழியும் மரணமும் வினைவயத்தால் வருவன. வானத்தின் கீழ் வாழ்ந்து இடிக்கு அஞ்சலாகாமை போலப் பிறந்தபின்

இவை இரண்டற்கும் அஞ்சலாமா? ஆதலால் அஞ்சேன். அன்றியும், இவற்ருல் விளைவன விணைக்கழிவாகிய நன்மையே. அன்பரல்லாரைக் காணுதலோ விணைக்கு விளைவாவதாதலால் அதற்கே அஞ்சுகின்றேன் என்றதாம். முன்னம் முன்னே; குறிப்பாகவும் எனலுமாம்.

முகந்த எரி என்பது முகந்தெரி எனப் பெயரெச்சத்து அகரம் தொக்கது. இறைவன் திருக்கரத்திலுள்ள எரி புகையா தாயினும் இங்ஙனம் கூறியது எரியின் பொதுவிலக்கணம்பற்றி என்க. கொன்றை மொட்டும் மலரும் விரவிக் கொத்தாகப் பூக்குமாதலின் 'முகைநகைக் கொன்றைமாலை' என்ருர்.

திருவடி தொழுதலும், மனம் உருகுதலும் ஆனந்தமுறுவார் இயல்பு என்று ஓதுகின்றமையின் இதுவும் பதிகத்தோடியைந் தமை காண்க.

521 *தறிசெறி களிறும் அஞ்சேன்*
*தழல்விழி யுழுவை யஞ்சேன்*
*வெறிகமழ் சடைய னப்பன்*
*விண்ணவர் நண்ண மாட்டாச்*
*செறிதரு கழல்க ளேத்திச்*
*சிறந்தினி திருக்க மாட்டா*
*அறிவிலா தவரைக் கண்டால்*
*அம்மநாம் அஞ்சு மாறே.* 8

இ-ள்: கட்டுத்தறியில் கட்டப்படுகின்ற ஆண்யானைக் கும் அஞ்சேன்; தழல்போலும் விழிகளையுடைய புலிக்கும் அஞ்சேன்; மணம் வீசுகின்ற சடையையுடையவனும் எங்கள் தந்தையுமாகிய சிவபெருமானுடைய, தேவர்களால் அணுக வும் முடியாத வீரக்கழல் செறிந்த திருவடிகளை வணங்கி, இன்பத்தோடு சிறக்க வாழத் தெரியாத அறிவிலிகளைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறு இது ஒன்றேயாம் என்ற வாறு.

யானை புலி முதலிய விலங்கினங்கட்கும் நான் அஞ்சேன்; திருவருளைச் சார்ந்து வாழத்தெரியாத அறிவிலிகட்கே யாம் அஞ்சுவது என்ருர் என்பது கருத்து.

தறி - கட்டுத்தறி. பழகிய யானையை அவிழ்த்துவிடுதல் இயல்பு. மதம் பிடித்திருக்குமாயின் மதம் தணியும்வரையில் கட்டுத்தறியில் கட்டியே போட்டுவிடுவது வழக்கம் ஆதலின் ஈண்டு மதம் பிடித்த யானைக்கும் அஞ்சேன் என்பார் 'தறி செறி களிறும் அஞ்சேன்' என்ருர்.

புலி எப்போதும் சினத்தோடு இருப்பதாகலின் 'தழல்விழி உழுவை' என்றதாம். உழுவை - புலி. இவை இரண்டையும் மந்திர மணி மருந்துகளால் அடக்கியாளலாமாதலின் அவைகளுக்கு அஞ்சேன் என்றார்.

வெறி - மணம்; ஈண்டுத் தெய்வமணத்தை உணர்த்தியது. இறைவன்சடை எப்போதுமே மணமும், மேலும் அடியார்கள் சாத்திய கொன்றை கூவிளம் மத்தம் மல்லிகை முதலிய பூக்களின் மணமும் கமழ்வதால் 'வெறி கமழ் சடையன்' என்றார்.

விண்ணவர் நண்ணமாட்டாமைக்கு ஏது முன்னரே கூறப்பட்டது. கழல் ஆகுபெயராகத் திருவடியை உணர்த்தியமையின் 'செறி தரு' என்பதற்கியைய வீரக்கழல் என்பது வருவித்துரைக்கப்பட்டது. திருவடியில் செறிந்துள்ள கழல்களை என்பாரும் உளர்.

எல்லாரினும் மிக்கிருத்தற்கும், இன்பமுடன் இருத்தற்கும் திருவடிகளை ஏத்துதல் எளிமையான உபாயமாக இருந்தும் அதனையறிந்து ஈடேறும் ஞானமில்லாத தேவர்களைக் 'கழல்கள் ஏத்திச் சிறந்தினிதிருக்கமாட்டா அறிவிலாதவர்' என்றார். அத்தகைய அறிவிலாதவரே தம்மால் அஞ்சத்தக்கவர் என்கிறார்.

களிறு முதலியவற்றிற்கு அஞ்சேன்; ஞானசூனியர்களைக் கண்டாலே யான் அஞ்சுவேன் என்பதால் இத்திருப்பாடல் அச்சப்பத்தினதாதல் காண்க.

522 மஞ்சுலாம் உருமும் அஞ்சேன்
மன்னரோ டுறவும் அஞ்சேன்
நஞ்சமே யமுத மாக்கும்
நம்பிரான் எம்பி ரானாய்ச்
செஞ்செவே யாண்டு கொண்டான்
திருமுண்டந் தீட்டமாட்டா
தஞ்சுவா ரவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 9

*இ - ள்* : மேகங்களில் விளங்கும் இடிக்கும் அஞ்சேன்; அரசர்களோடு நெருங்கிப்பழகும் உறவையும் அஞ்சேன்; பாற்கடலிலிருந்து எழுந்த நஞ்சை அமுதாக உட்கொண்டருளிய நம் தலைவன் எம் தலைவனாகிச் செம்மையாக ஆட்கொண்டான்; அவன் அருள்விளக்கமாகிய திருநீற்றினை நெற்றியில் தீட்டாது அஞ்சுபவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சும் நெறி இதுவொன்றேயாம் என்றவாறு.

இடிக்கும், அரசரோடு உறவாக வாழ்தற்கும் அஞ்சேன்; திருநீறிடாதாரைக் காணின் அஞ்சுவேன் என்பது கருத்து.

மன்னரோடு பகைகொள்ளுதலைக்காட்டிலும் உறவுகொள்ளுதல் மிகத் தீமை பயப்பதாகும். பகை இதுபோது தீமை விளைக்கும் என்றறிந்து ஒதுங்கி உய்யவுங்கூடும். உறவு எக் கணமும் தீமை பயப்பது. அதனை முதலமைச்சராக இருந்து, அரசனுடைய முழு நம்பிக்கைக்கும் உரியவராக வாழ்ந்து, பின்னர் படாதபாடு பட்டவர் அடிகளாதலின் அவ்வுறவும் அஞ்சேன் என்கிறார். இதனால் இடியோடு அரச உறவையும் ஒருங்குவைத்துக் கூறினமை காண்க.

இறைவன் குற்றங்களைக் குணமாக்கொள்ளும் தன்மையனுதலை, நஞ்சை அதன் தீயகுணம் போக்கி, அமுதாகச் செய்து அழகுப்பொருளாக்கிச் செம்மையான தன்திருமிடற்றிற்கொண் டமையால் விளங்கும் என 'நஞ்சமே யமுதமாக்கும் நம்பிரான்' என்ற பகுதியால் உணர்த்துகிறார்கள்.

நம்பிரான் என்பதால் அடியார்கள் பலருக்கும் தலைவன் என இறைவன் பொதுமையினிற்றலையும், எம்பிரான் என்பதால் தமக்கே தலைவனுகச் சிறப்பினிற்றலையும் தெரிவிக்கின்றார்கள். செஞ்செவே - செவ்வையாக. முத்திக்காலத்திலும் எவ்விதமான சுதந்திரமும் கொடாமல், பொய்யான சுதந்திரத்தை ஏறட்டுக் கொண்டு ஆன்மாவின் ஞானத்தை மறைக்கும் மலங்களைப் புண்வைத்துப் பொதிந்து மூடாத மருத்துவன்போல நன்றாக அகற்றி அடிமைகொண்டான் என்பது 'செஞ்சவே ஆண்டு கொண்டான்' என்பதால் உணர்த்தப்பெறுகின்றது.

திரு - திருநீறு. திரு - செல்வம்; அதாவது விபூதி. வட மொழி நிகண்டாகிய அமரகோசத்தில் விபூதி பூதி ஐஸ்வரியம் என்பன செல்வத்தைக் குறிக்கும் எனப்பட்டது. விபூதி என்பது திருநீற்றிற்கும் செல்வத்திற்கும் பொதுப்பெயராதலை அறிவோம். செல்வத்துட்செல்வம் திருநீறேயாதலையும், அடைமொழியின்றி ஐஸ்வரியம் என்ற சொல் விபூதியையே குறித்தலையும் சிவரகசியத்தும் உபதேசகாண்டத்தும் திருநீற்று மகிமை உரைத்த அத்தியாயத்தாலும், பஸ்மஜாபாலத்தாலும் தெளிக. அடிகள் விபூதி என்ற செல்வத்தின் மறுபெயராகவே திரு என்றசொல்லை எடுத்தாண்டார் என்பதைப் பின்வரும் தொடர்களாலும் அறிக.

திருமுண்டம் தீட்டமாட்டாது அஞ்சுவார் - திருநீறாகிய விபூதியை நெற்றியில் தீட்டமாட்டாமல் அஞ்சுகின்றவர்கள்

என்க. முண்டம் - நெற்றி. திருமுண்டம் என இணைத்துக் கபாலத்திருவோட்டை அவனைப்போலவே பிச்சையேற்றற்குக் கையில் எடாராய் அதனைக்கண்டு அஞ்சுவார் என உரை வகுத்து அதற்குப் "பவித்திரமார் திருமுண்டத்தானை மறக் கிற்பனே'' என்று மேற்கோளும் தாமே படைத்துக்கொண்டு கூறுவர் சிலர். எடுத்துக்காட்டு படைத்துமொழியாயினும், முன்னர், 'பிணியெலாம் வரினும் அஞ்சேன்' என்ற திருப்பாட்டில் 'வெண்ணீ றணிகிலாதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே' எனக்கூறினமையின், மீண்டும் அதே கருத்து வருதல் பொருந்தாது என எண்ணிப்போலும் கபாலமாகிய திருவோடு எடுக்க அஞ்சுவாரைக்காணின் எனப் பொருள் உரைத்தார் அவர். அப்பர்சுவாமிகள் அருளிய திருக்குறுந்தொகையில்,

"கண்டி பூண்டு கபாலங்கைக் கொண்டிலர்
விண்ட வான்சங்கம் விம்மவாய் வைத்திலர்
அண்ட மூர்த்தி அழல்நிற வண்ணனைக்
கெண்டிக் காணலுற் றாரங் கிருவரே''

என வரும் பகுதி இக்கருத்திற்கு அரண்செய்யும் என்க.

இவ்வண்ணம் திருநீறு அணியாதாரை அல்லது கபாலம் ஏந்தக் கூசுவாரைக் காணின் அஞ்சுவல் என்பதால் அச்சப் பத்தாதலும், செஞ்செவே ஆண்டு கொண்டான் என்பதால் ஆனந்தமுறுதலும் விளக்குவது இத்திருப்பாடல்.

523 கோணிலா வாளி யஞ்சேன்
கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்
நீணிலா அணியி னானை
நினைந்துநைந் துருகி நெக்கு
வாணிலாங் கண்கள் சோர
வாழ்த்திநின் றேத்த மாட்டா
ஆணலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 10

திருச்சிற்றம்பலம்

இ-ள்: நேரான அம்பிற்கும் அஞ்சேன்; இயமனுடைய சினத்திற்கும் அஞ்சேன்; நீண்ட பிறைமதியை அணியாகக் கொண்ட சிவபெருமானைத் தியானித்து, நைந்து உருகி நெக்குநெக்கு ஒளிபொருந்திய கண்களிலிருந்து நீர் சொரிய வாழ்த்தி, திருமுன் நின்று துதிக்கமாட்டாத பேடிகளைக் கண்டால் அம்ம நாம் அஞ்சும் நெறி இதுவொன்றேயாம் என்றவாறு.

அம்பிற்கும், யமன் கோபத்திற்கும் அஞ்சேன்; பின்னர், அஞ்சுவது எதற்கோ எனின், சிவபெருமானைத் தியானித்து மனமுருகாத பேடிகளைக் கண்டால் அஞ்சுவேம் என்கின்றார் என்பது கருத்து.

கோண் இலா வாளி - கோணல் இல்லாத நேரிய அம்பு. "கணைகொடிது யாழ்கோடு செவ்விது" என்ற குறட்கருத்தோடியைந்திருத்தல் காண்க. இஃதன்றி, கோண் என்பதற்குக் கூர்மை என்று கூறும் பழையவுரை. கோள் நிலா வாளி எனப் பிரித்து உயிரைக்கொள்ளும் தன்மையில் விளங்கும் அம்பு என்பாரும் உளர்.

அம்பு எய்பவனின்றி இயங்காதாகலின் அதற்கு அஞ்ச வேண்டுவதின்று; யமன்சீற்றம் சிவனடியார்மேற்செல்லாதாகலின் அதற்கும் அஞ்சவேண்டாம் என்பது.

நீள்நிலா என்னும் வினைத்தொகையை, நீளும் நிலா என விரிக்க. இறைவனருள் பெற்றமையால் வளரும் நிலா எனக் கருத்துக்கொள்க.

ஆண் அலாதவர் எனின் பெண் எனக்கொள்ளின் அவர்கட்குப் பெட்பே பண்பாய்த் தலைவனை நினைந்துருகி நெக்கு வாழ்த்தி வாழ்தல் இயல்பாம். இவர்கள் அதுவும் செய்யாமையான் பேடி எனப் பொருள் கண்டனம்.

இத்திருப்பாட்டு மகுடத்தால் அச்சப்பத்தாதலும், புறத்தார் மேல்வைத்து அடியார் ஆனந்தமுறும் மெய்ப்பாடுகளை உணர்த்துதலின் பதிகக்கருத்தும் நன்கு விளங்குதல் காண்க.

இங்ஙனம் பத்துப்பாடல்களாலும் பெருமானைப்புகழ்தலும், இவர் தேவர் என இரண்டாட்டாமையும், திருவருளைப் பருகித் திருவடிக்கன்பராதலும், மனங்கனிதலும், வெண்ணீறணிதலும், சிவார்ச்சனை செய்தலும், திருவடியை ஏத்திக்கொண்டு செயலற்றிருத்தலும், கபாலம் ஏந்துதலும், கண்கள் நீர்வார ஏத்துதலும் ஆனந்தமுற்றார் மெய்ப்பாடுகளாதலை அறிவித்து, அவற்றைச் செய்யாதாரையே நாம் அஞ்சுவது என்று திருவாய்மலர்ந்தருளுகின்றார்கள். இதன்பயன் அடியாரோடு கூடுக, அடியாரல்லாரோடு சேரற்க என்பது.



திருவா சகமென்னுஞ் செந்தமிழின் பெருநூலை
அம்பலத்தான் படியெடுத்து அனைவருக்கும் உவந்தளித்தல்

# 36. திருப்பாண்டிப்பதிகம்

[சிவானந்த விளைவு]

வாதவூரடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளி யிருந்தகாலத்து, தென்பாண்டி நாட்டானாகிய சிவபெருமான் பரிமேலழகராக எழுந்தருளிவந்து ஆட்கொண்ட அருமையை எண்ணி வியந்து, அதனையே பொருளாக அமைத்து இதனை அருளிச்செய்கின்றார்கள்.

பாண்டிப்பிரான் தம்மை ஆட்கொண்டதையே பொருளாகக் கொண்டு பாடுதலின் இப்பத்துப்பாடலும் திருப்பாண்டிப்பதிகம் எனப் பெயர்பெற்றது. இது சில ஏடுகளிலும், பழைய உரைப் புத்தகத்திலும் திருப்பாண்டிவிருத்தம் என வழங்கப்பெறுகின்றது. இப்பதிகம் கட்டளைக்கலித்துறையான் ஆயது. அப்பர் திருமுறையுள் கட்டளைக்கலித்துறை திருவிருத்தம் என வழங்கப்பெறுதல் போல இதுவும் திருப்பாண்டிவிருத்தம் என் வழங்கப்பெற்றது போலும்.

சிவானந்த விளைவு அதாவது சுகமேலீடு என்பது திருவாசகத் திருவுள்ளக்கிடைக்குறிப்பு. தாம் பெற்ற சிவானந்த விளைவை அனைவரும் பெறுங்கோள் என்று மெய்யடியார்களை விளித்துக் கூறுவதுபோல் பாடற்போக்கு அமைந்துளது.

திருப்பாண்டி விருத்தம் - சிவானந்த விளைவு என்பது அகத்தியச்சூத்திரம். முற்பதிகத்தில் அருளிய அருள் திருவேடந்தாங்கிய அடியார்களுக்கு ஆடல்செய்யும் சிவானந்தவடிவு எனக்கண்டு இன்புற்றுத் தற்பணி அற, அதுவே பொருளென நிற்பதான நிட்டையநுபூதி என்பது பழையவுரை. இதன் கருத்து அச்சப் பத்தில், திருவேடந்தாங்குதலும் சிவன்கழல்பேணுதலுமே இன்பமென்று உறுதிகொண்டமையால் இதில் தற்போதங்கெடச் சிவபோதமாக நிற்கும் நிட்டையையுணர்த்துகின்றார் என்பது.

'புரவியின்மேற் பாண்டியன் முன்வரும் பதத்தை யாம் பெறுமற்புதம் போலியாகும், விரவுமின்கள் என்று அடியார்க்கு உறுதி சொலல் திருப்பாண்டி விருத்தமாமே' என்பது பழைய திருப்பெருந்துறைப்புராணம்.

இவற்றின் கருத்து, பாண்டிப்பிரான் எளிவந்த கருணையால் குதிரைச் சேவகனுக எழுந்தருளி ஆட்கொண்டதால் விளைந்த சிவானந்தத்தால் உண்டான இன்பத்தை மெய்யடியார்கள் அனைவரையும் அழைத்து அளிப்பதாக அமைந்தது இப்பகுதி என்பது.

## கட்டளைக்கலித்துறை

திருச்சிற்றம்பலம்

524 *பருவரை மங்கைதன் பங்கரைப்*
*பாண்டியற் காரமுதாம்*
*ஒருவரை யொன்றுமி லாதவ்*
*ரைக்கழற் போதிறைஞ்சித்*
*தெரிவர நின்றுருக் கிப்பரி*
*மேற்கொண்ட சேவகனர்*
*ஒருவரை யன்றி யுருவறி*
*யாதென்றன் உள்ளமதே.* 1

இ - ள்: பருத்த மலையாகிய இமயமலையரசன் மகளான உமாதேவியாரை ஒருபாகத்துக்கொண்டவரும், பாண்டிய மன்னர்க்குக் கிடைத்தற்கரிய அமுதம் கிடைத்தாற்போல இனிக்கும் ஒருவரும், தனக்கென்று உருவம் குணம் ஒன்றுமில்லாதவரும், அடியேன் திருவடித்தாமரைகளை வணங்குதலால் வெளிப்பட்டு நின்று மனத்தையுருக்கிக் குதிரையின் மேல் எழுந்தருளி வந்த வீரரும் ஆகிய சிவபெருமான் ஒருவரையன்றி, வேறு ஒருவர் உருவத்தையும் என் உள்ளம் அறியாது என்றவாறு.

முற்பதிகத்து, எம்பிரான் திருவுருவன்றி மற்றோர் தேவரைத் தேவர் என்ன அருவராதவரைக் காணின் நாம் அஞ்சுவேம் என்றவர், இத்திருப்பாடலில் சிவபெருமான் திருவடியை அன்றி வேறு யார்கழலையும் பூசியேன்; நேசியேன் என்கிருர்.

சிவன் திருவடியும், அவனுருவும் அன்றி வேறெதுவும் என் அறிவிற்கு அறியவாராது என்பது கருத்து.

தம்து உள்ளம் சிவபெருமானை உமையொருபாகராகவும், பாண்டியகுல தெய்வமாகவும், நாம ரூபம் இல்லாதவராகவும், தமக்காகக் குதிரைமேல்வந்த வீரராகவும் எண்ணி அனுபவிப்பதைக் கூறி, உள்ளத்தின் உறுதியை வெளிப்படுத்துகிருர்கள் அடிகளார்.

என்றன் உள்ளம் பங்கரையன்றி இறைஞ்சி உருவறியாது; அமுதாம் ஒருவரையன்றி இறைஞ்சி உருவறியாது; ஒன்றுமிலாதவரையன்றி இறைஞ்சி உருவறியாது; சேவகனுர் ஒருவரையன்றி இறைஞ்சி உருவறியாது எனத் தனித்தனியே கூட்டிப் பொருள் காண்க.

முதற்கண் அம்மையப்பரான உருவடிவாகவும், அடுத்து ஆரமுதாகும் அருவுருவாகவும், பின் ஒன்றுமேயில்லாத அருவமாகவும் நினைத்தமை உன்னுக.

உலகிலுள்ள மலைகள் அனைத்தினும் பெரியது ஆகலின், இமயத்தைப் 'பருவரை' என்ற சொல்லால் குறித்தார்.

பாண்டியன் - அரிமர்த்தனபாண்டியனுமாம். தன்பொருட்டாகக் குதிரைவீரனுக எழுந்தருளிவந்து பாண்டியற்கும் காட்சி தந்து, பேரின்பத் திருத்தியமையான் 'பாண்டியற்கு ஆரமுதாம் ஒருவர்' என்ருர்.

ஒன்றுமிலாதவர் என்றது கடவுளராக விளங்கும் பிறரிடமுள்ள எப்பொருளும், எப்பற்றும், எவ்வுருவும், எப்பெயரும் தம்மிடம் இல்லாதவர், மனவாசகம் கடந்தவர் என்பதை விளக்கிற்று. இதன் கருத்து, ஒரு நாமம் ஓருருவம் இல்லானுக்கு ஆயிரம் திருநாமம் அமைதல் வழக்காதலின் எல்லோமும் அவன் அடிமையும் உடைமையுமாவேம் என்பது.

கருவி கரணங்கடந்து நிற்கும் பெருமான் யாம் கண்ணுற்கண்டு அறியாமை நீங்கி அறிவுபெற்று அருளேற்று ஈடேற வெளிப்பட்டு நின்ருன்; தன் திருவுருவைக் காட்டினுன் ;- கண்டேன் உருகினேன் என்பார் 'தெரிவர நின்று உருக்கிப் பரிமேற்கொண்ட சேவகனுர்' என்ருர்.

நான் அறியேன் என்பார் என் உள்ளம் அறியாது என உள்ளத்தை வேறு வைத்து ஓதினுர், -'என் வாய் சொல்லாது, என் கை செய்யாது' என்பனபோல; உறுதியை உணர்த்த.

உள்ளம் அறியாது எனச் சிவானந்தத்தால் விளைந்த உறுதியாகிய விளைவை உணர்த்துதலின் இத்திருப்பாடல் சிவானந்த விளைவும், பாண்டியற்கு ஆரமுதாம் என்றமையால் பாண்டி விருத்தமும் ஆயிற்று.

525 சதுரை மறந்தறி மால்கொள்வர்
சார்ந்தவர் சாற்றிச்சொன்னேம்
கதிரை மறைத்தன்ன சோதி
கழுக்கடை கைப்பிடித்துக்

குதிரையின் மேல்வந்து கூடிடு
மேற்குடி கேடுகண்டீர்
மதுரையர் மன்னன் மறுபிறப்
போட மறித்திடுமே. 2

இ - ள்: சூரியனையும் மறைத்தாலொத்த பேரொளிப் பிழம்பினனும், மதுரையர் மன்னனுமாகிய சிவபெருமான், தாற்றுக்கோலைக் கையிலேந்தி, குதிரையின்மேல் எழுந்தருளி வந்து நம்மைக்கூடுவனாயின், மறுபிறப்பு தானே ஓடும்வண்ணம் தடுப்பன்; அதனால் நமக்குக் குடிகேடாம்; காணுங்கள்; ஆகையால் இவ்வுண்மையைப் பறைசாற்றிச் சொன்னோம்; இதனைக்கேட்டு வந்தவர்கள், தம் சாமர்த்தியத்தை மறந்து ஞானப்பித்துக் கொள்வர் என்றவாறு.

இறைவன் குதிரைச்சேவகனாக வந்து எம்மிடைச் சேருவனாயின் மறுபிறப்பகலும்; குடிப்பிறப்பு ஒழியும். இவ்வுண்மையைப் பறைசாற்றிச் சொன்னோம்; இதைக் கேட்டு வந்தவர்கள், பசுபோதமழிந்து சிவபோதமிகுவர் என்பது கருத்து.

சோதி, மன்னன் பிடித்து வந்து கூடிடுமேல், பிறப்பு ஓட மறித்திடும்; குடிகேடு கண்டீர்; சாற்றிச் சொன்னோம்; சார்ந்தவர் மறந்து அறிமால் கொள்வர் எனக் கூட்டிப் பொருள்கொள்க.

பேரொளிப் பிழம்பான இறைவன் முன்னிலையில் ஏனைய ஒளிகளெல்லாம் மழுங்கிக் கெடுதலின் இறைவனைக் 'கதிரை மறைத்தன்ன சோதி' என்றார்.

மதுரையர் - மதுரையில் வாழ்கின்ற மக்கள். சௌந்தர பாண்டியனாக எழுந்தருளி மணிமகுடம் தரித்துத் தடாதகைப் பிராட்டியாரை மணந்து அரசாண்டமையால் 'மதுரையர் மன்னன்' என்றார்.

கழு - முள். கழுக்கடை - முள்ளைக் கடைசியிலே உடைய அதாவது தாற்றினைக் கோலின் நுனியிலேயுடைய தாற்றுக் கோல். சூலம் என்பர் பிறர். அது பொருளாயினும், குதிரையின்மேல் வருதற்கு ஏலாமையின் ஈண்டு இயையாதென்பது தெளிக.

குதிரையின் மேல்வரும் வீரன் எதிரியை ஓடஓட வெருட்டி மேலேறவிடாது மறிப்பதுபோல இறைவன் குதிரைச்சேவகனாக வந்து மறுபிறப்பென்கிற பகைவனை ஓட வெருட்டி, மீளவும் நம்மைச் சாராதவண்ணம் தடுப்பன் என்பதனை 'மறு பிறப்பு ஓட மறித்திடுமே' என்பதால் உணர்த்தினார்.

அங்ஙனம் பிறப்பறுக்குமாயின், அதனால் வரும் பயன் குடி கெடும் என்பதாம். குடி கெடுதலாவது பிறவியால் உண்டாம் குலப்பெருமையும் அதனால் விளையும் செருக்கும் அழிதலாம். இதனை நகைச்சுவை தோன்றக் 'குடிகேடு கண்டீர்' என்கிறார்.

இவ்வண்ணம் இறைவன் சார்வானாயின் பிறவியறும், குலப் பெருமை இல்லையாம் என்ற அருமறையை யாம் பலரறியப் பறைசாற்றிச் சொன்னோம் என்கின்றார். சாற்றி என்பதற்கியைய பறையென ஒரு சொல் வருவிக்க.

சார்ந்தவர் - கேட்டு வந்தவர்கள். சதுர் - சாமர்த்தியம்; அதாவது தன்முனைப்பு. அறிமால் - ஞானப்பித்து. எம் உரையைக்கேட்டு வந்தவர்கள் இறைவனை எதிர்ப்படுதலின் தன் முனைப்படங்கிச் சிவபோதம் தலைப்பட்டு எல்லாம் சிவமாகக் காணும் ஞானப்பித்துக் கொள்வர் என்பதாம்.

இத்திருப்பாடலுக்கு, ஞாயிறு தன்னையொழிந்த திங்கள் முதலான ஒளிப்பொருள்களை மறைத்தாலொத்த சோதியாகிய இறைவன், மதுரை மன்னனாகிய பாண்டியனுக்கு மறு பிறப்பு மேல் விளையாதபடி அப்போது தன் குதிரையை மறித்திடுவானாயினன். அவன் இப்போது கையில் சூலம்பிடித்துக் குதிரை மேல் வருவானாயின், அவனைச் சார்ந்தவர்கள் தமது சதுரப் பாட்டினை மறந்து பற்றியதையே பற்றி அறிவு மழுங்கப்பெறுவர். ஆதலால் அதனைக்கண்ட நீவிரேயன்றி நும் குடிமுழுதும் கேடு அடையும் என மேற்கோள்காட்டிக் கூறினோம் கண்டீர்; இவ்வாறுதலினாலே பிறவிக்கு நல்லீர் வாரற்க; அல்லீர் வருக எனப் பொழிப்புரைப்பர் சிலர்.

இதனால், சிவானந்த விளைவு என்னும் பதிகக்கருத்திற்கு ஏலாமையும், பாடலில் இல்லாத சொல்லும் பொருளும் வேண்டியவாறே விதக்கப் பெற்றுள்ளமையும் காண்க.

பழையவுரை, கதிரை மறைத்தன்ன சோதி என்பதற்குச் சூரியப் பிரபை இருட்டாகத்தக்க ஞானச்சோதி என்றும், கழுக்கடை என்பதற்கு ஈட்டி என்றும், மதுரையர் மன்னன்...மறித்திடும் என்பதற்கு மதுரை மன்னன் இனிப் பிறவாவண்ணம் வழியடைக்கும் என்றும் கூறும். இவ்வுரை பெரிதும் எம் உரைக்கு அரண்செய்தலும் உன்னுக.

'அறிமால் கொள்வர்' என்றதால், சிவானந்த விளைவும், 'மதுரையர் மன்னன்' என்றமையால் பாண்டிவிருத்தமாதலும் காண்க.

526 நீரின்ப வெள்ளத்துள் நீந்திக்
குளிக்கின்ற நெஞ்சங்கொண்டீர்
பாரின்ப வெள்ளங் கொளப்பரி
மேற்கொண்ட பாண்டியனார்
ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு
தொண்டரை யுள்ளங்கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ
லேசென்று பேணுமினே. 3

இ - ள்: இந்தப் பூமி முழுவதும் இன்பவெள்ளம் பாய, குதிரையின்மேல் எழுந்தருளிவந்த பாண்டியனாகிய சிவன், ஒப்பற்ற இன்பவெள்ளமாகிய திருவடிவு கொண்டு மெய்யடியார்களை ஆட்கொள்ளத் திருவுள்ளம்பற்றினார்; ஆகையால் இன்ப வெள்ளத்தில் நீந்திக்குளிக்கின்ற எண்ணம் படைத்தவர்களாகிய நீங்கள் வீட்டுலகமாகிற பேரின்ப வெள்ளத்துள் செலுத்தும் திருவடியைச் சென்று இறுகப்பற்றுங்கள்; போற்றுங்கள் என்றவாறு.

பேரின்பத்துள் திளைக்க விரும்பிய பேரன்பர்களே! இப்பூமியெங்கும் இன்பவெள்ளம் பெருக, ஓரின்ப உருக்கொண்டு குதிரை வீரனாகப் பெருமான் எழுந்தருளி அடியார்களைத் திருவுளம் பற்றினார் ஆதலால் நீங்கள் இன்பக்கடலில் செலுத்தும் திருவடியைச் சென்று போற்றுங்கள் என்பது கருத்து.

இறைவன் குதிரைவீரனாக எழுந்தருளியதால் இந்தப் பூமி முழுதும் ஒளிபெற்று இன்பமயமாயிற்று என்பார் 'பார் இன்ப வெள்ளங்கொளப் பரிமேற்கொண்ட பாண்டியனார்' என்றார்.

இறைவன்திருமேனி எம்போலியர்மேனிபோல மாயேயமானதன்று; உண்மையும் அறிவும் ஆனந்தமுமே அவன் வடிவு என்பார் 'ஓரின்ப வெள்ளத்துருக்கொண்டு' என்றார்.

இறைவன் அருள்மேனி தாங்குவதும், உருமேனி தாங்குவதும், குருமேனி தாங்குவதும் தன் நன்மைக்காக அன்று, ஆன்மாக்களை உய்யக்கொள்வதாகிய பரகருணையே என்பார் 'தொண்டரை உள்ளங்கொண்டார்' என்றார்.

இறைவன் திருவடி பேரின்பக்கடலுள் செலுத்துவது என்பதனைப் 'பேரின்பவெள்ளத்துள் பெய்கழல் என்றார்.

திருவடியைச் சென்று பற்றுதலும் போற்றுதலுமே வீட்டுலகளிக்கும் என்றவாறும்.

எங்கும் இன்பவெள்ளமாக விளங்குதலை உணர்த்துதலால் இத்திருப்பாடல் சிவானந்த விளைவாதலும், 'பாண்டியனார்' என்றமையால் திருப்பாண்டி விருத்தமாதலும் காண்க.

527 செறியும் பிறவிக்கு நல்லவர்
செல்லன்மின் தென்னனன்னாட்
டிறைவன் கிளர்கின்ற காலமிக்
காலமெக் காலத்துள்ளும்
அறிவொண் கதிர்வா ளுறைகழித்
தானந்த மாக்கடவி
எறியும் பிறப்பை யெதிர்ந்தார்
புரள இருநிலத்தே. 4

இ - ள்: பாண்டியனுடைய நல்ல நாட்டிற்கு இறைவ கிய சிவபெருமான், எக்காலத்துள்ளும் கிளர்ந்து போருக் கெழுகின்ற காலம் இக்காலம்; அவன், ஞானமாகிற ஒளி பொருந்திய வாளை உறையிலிருந்து உருவி, ஆனந்தமாகிற குதிரையைச்செலுத்தி எதிர்ப்பட்டாருடைய பிறப்பை, இப் பெரிய பூமியிற் கிடந்து புரளும்படி வெட்டி வீழ்த்துவன்; ஆகையால் செறிகின்ற பிறவிக்கு நல்லவர்களே! அவனெதி ரிலே செல்லாதீர்கள் என்றவாறு.

எந்நாளிலும் இந்நாள் இறைவன் ஞானவாளை ஏந்தி, ஆனந்தக்குதிரையேறி, போருக்குக் கிளர்ந்தெழுகின்ற காலம்; அவன் எதிர்ப்பட்டாரின் பிறப்பை அறுப்பான்; ஆகையால் பிறவியை விரும்புகின்ற மக்களே! அவன்முன் செல்லாதீர்கள் என்றார் என்பது கருத்து.

பிறவி வேண்டாதவர்கள் அவனைக் கண்டு பிறவி அறுத் துக்கொள்ளுங்கள் என்பதாம்.

தென்னன் நன்னாடு - பாண்டிநாடு. அந்நாட்டிறைவன் - சொக்கலிங்கப்பெருமான்.

உயிர்கள் அறியாமை வயப்பட்டு உலக இன்பங்களில் மயங்கிக் கிடக்கின்ற காலங்கள் பலவற்றுள்ளும் யாம் வாழும் இக்காலம் நற்காலம், பொற்காலம், இறைவன் குதிரைவீரனாகப் போர்க்கோலம் கொள்ளுங்காலம் என்பார் முன்காலத்தை வியப்பாராக 'எக்காலத்துள்ளும் இறைவன் கிளர்கின்ற காலம் இக்காலம்' என்றருளினார். ஆன்மாக்கள் பரிபாகமுற்ற காலம் என்றபடி.

பிறப்பு அவிச்சையால் வருவதாகலின் அதன் காரணமாகிய அறியாமை விலகினாலன்றிப் பிறப்பறாது என்பதைத் திருவுளத் தெண்ணிப் பிறப்பறுக்க அதன்காரணம் தானே ஒழிய ஞான வாளை உறைகழித்தான் என்றார்.

அவன் ஏறும் குதிரை ஆனந்தமாதலின், ஆன்மாக்கள் தங்கும் துன்பநிலம் அதனால் விரைவில் கடந்து வெல்லப்படும்; ஆன்மாக்களும் இன்பநிலத்து அழைத்துச் செல்லப்படுவர் என்பதைக்குறிக்க ஆனந்தமாக் கடவி பிறவி எறியும் என்றார்.

எதிர்ந்தார் பிறப்பை இருநிலத்தே புரள எறியும் எனக் கூட்டுக. எதிர்ந்தார் - சிவஞானிகளாய் இடைவிடாது சிவசந் நிதியிலே உறைவார். அவர்களை மலமாயைகள் சாராவாகலான் அவர்கட்குப் பிறப்பறும் என்பார் 'பிறப்பை எறியும்' என்றார்.

வெட்டிய பொருள் குருதியோட்டம் கழிகின்றவரை பூமியில் கிடந்து புரளுமே! இப்பிறவியாகிற பகைவன் எங்கே புரளும் எனின் இப்பூமியிற்கிடந்து புரள்கின்றான் என்று அணிநயம் தோன்ற அறிவித்தார்.

பிறவிக்குநல்லவர் என்றது பிறவியை விரும்புகின்ற பெத் தான்மாக்களை. நல்லவர் என்றது குறிப்பாக அறிவிலிகளே என விளித்தவாறு. பிறவியை விரும்புகின்ற பேதைகளே! இறைவன்முன் செல்லாதீர் என்று உலகவர் பேதைமைக்கு இரங்கி நகையாடியவாறு.

இத்திருப்பாட்டில் 'தென்னன் நாட்டிறைவன்' என்றதால் பாண்டி விருத்தமும், கிளர்கின்ற காலம் இக்காலம் பிறவியறுப் பான் என்பனவற்றால் சிவானந்த விளைவும் உணர்த்தப்பெறு கின்றன.

528 காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே. 5

இ - ள்: எண்ணவும் முடியாத நல்ல காலம் கிடைத்த போதே இறைவன்மீது அன்பு செலுத்தி உய்யுங்கள்; உலக முண்ட பெருவாயனாகிய திருமாலும், நான்கு முகங்களை

யுடையவனாகிய பிரமனும், ஏனைய தேவர்களும் அணுகுதற்கும் அரிய ஆலகாலவிடத்தைப் பருகிய பெருமானாகிய எமது பாண்டிப்பிரான் தன் அடியவர்களுக்குச் சேமநிதியை வழங்குகின்றான் வந்து முந்துங்கள் என்றவாறு.

இறைவன் அனைவருக்கும் சேமநிதியாகிய திருவருள் இன்பத்தை வழங்குகிறான்; காலத்தோடு அன்புசெய்து உய்யுங்கள் என்பது கருத்து.

பகை வென்று வெற்றிகண்ட வீரன் வெற்றிக் களிப்பால் பகைமன்னரிடம்கொண்ட பொருளையும் தன் சேமநிதியையும், பாணர்க்கும் பாவலர்க்கும் இரவலர்க்கும் ஏனையோர்க்கும் வாரி வழங்குவன். அதுபோலப் பாண்டிப்பிரானும், அடியார்களின் பிறவிப்பகையை ஒழித்துச் சிவானந்தமாகிய மூல பண்டாரத்தை வழங்குகிறான்; அதற்கு நீங்கள் உங்களைப் பரிபாகப் படுத்திக்கொண்டு வந்து முந்துங்கள் என்பதாம்.

உடையவனே வந்து உதவக்கூடிய இத்தகைய காலத்தை நீங்கள் எண்ணிப்பார்த்திருக்கவும் முடியாது என்பார் 'கருதரிய காலமுண்டாகவே' என்றார். கருதவும் அரிய எனச் சிறப்பும்மை விரித்துக்கொள்க.

திருமால் ஞாலமுண்டானாயினும் அவன்பாற் சைவசீலம் இன்மையின் சிவன்பால் நண்ணவும் முடியாதவனாயினன். நான்முகனும் தேவர்களும் தத்தம்பதவிகளில் மயங்கிநிற்பவர்கள் ஆதலின் அவர்களும் இறைவனுடைய உண்மையியல்பினை உணர்ந்து உய்யமாட்டாராயினர்.

நண்ணரிய ஆலம் எனக் கூட்டிப் பொருள்கோடலுமாம். மூலபண்டாரம் - யாவற்றிற்கும் மூலமான சேமநிதி; என்றது சிவானந்தத்தை.

இவ்வண்ணம் தாம் பெற்ற சிவானந்தப்பேற்றை ஏனையோரும் பெற விளித்தலின் சிவானந்தவிளைவை உணர்த்துவதாயிற்று இப்பாடல்.

529 ஈண்டிய மாயா விருள்கெட
எப்பொரு ளும்விளங்கத்
தூண்டிய சோதியை மீனவ
னுஞ்சொல்ல வல்லனல்லன்

வேண்டிய போதே விலக்கிலை
வாய்தல் விரும்புமின்றாள்
பாண்டியனாரருள் செய்கின்ற
முத்திப் பரிசிதுவே. 6

இ-ள்: செறிந்ததும் மாயாததும் ஆகிய அறியாமை மாய, எல்லாப்பொருளும் நன்குவிளங்க, அடியேனை உள்ளிருந்து தூண்டியசோதி வடிவான சோமசுந்தரப்பெருமானை, நேரில் ஊனக்கண்ணாலும் கண்டு அனுபவித்த பாண்டியனும் விதந்து தம்மநுபவம் இன்னவாறு எனச் சொல்லவல்லன் அல்லன்; அவனை நாம் காணவேண்டியபோது காணற்குத் தடையேதுமில்லையாம்; ஆதலால் திருவடிபெறுதலை விரும்புங்கள்; பாண்டிப்பெருமான் அடியார்களுக்கு அருள்கின்ற முத்தியின்தன்மை இதுவேயாம் என்றவாறு.

அறியாமையைப்போக்கி ஞானத்தை நல்கிய பெருமானைப் பாண்டியமன்னனும் சொல்ல வல்லனல்லன்; யாம் விரும்பிய போது திருவடிபெறுதற்குத் தடை ஏதுமில்லையாம். ஆதலால் தாளினை அடைய விரும்புங்கள்; தென்பாண்டிப்பெருமான் அருளும் முத்தியின் தன்மை இதுவேயாம் என்பது கருத்து.

அடைந்தவர் அநுபவிக்கலாமேயன்றிச் சொல்லாராதலின் நீங்களும் திருவடியடைய முயற்சியுங்கள் என்பதாம்.

ஈண்டிய இருள், மாயா இருள் எனக்கூட்டுக. உயிரினிடமாகச் செறிந்து உணர்வை மறைத்து இருக்கும் ஆணவமல காரியமாகிய அறியாமை ஈண்டிய இருள்; இறைவனுடைய திருவருள் ஒன்றானன்றி வேறொன்றானும் வலிகுன்றாத இருள் மாயா இருள் என்க. அது தன்தன்மை கெட என்றவாறும். தூலவுடலிலே யான் எனது என்ற ஆணவம் மாயை என்ற பாசத்தார்விட என்பது பழையவுரை. திரிபுணர்ச்சியாகிய இருள்கெட என்பாரும் உளர்.

இருள் கெட்டு ஒளிபரவ உலகில் எப்பொருளும் விளங்குதல் போல, அறியாமை கெட்டு ஆன்மாவினிடமாக அறிவு விளங்கியபோது. ஆன்மா தன்னையும் தடையையும் தலைவனையும் ஒருசேர அறியுமாகலின் 'எப்பொருளும் விளங்க' என்றார். 'சடசித்திரண்டும் திருவருட்பிரேரகமாக என்னறிவில் விளங்க' என்னும் பழையவுரையும் இக்கருத்தை நன்கு வலியுறுக்கும். சடம் - தடையாகிய மலம். சித்து - உணர்த்த உணரும் சித்தாகிய உயிரும், தானே முழுதும் உணரும் சித்தாகிய சிவமும்

ஆகிய இரண்டும். மெய்ப்பொருள் பொய்ப்பொருளாகிய எல்லாப்பொருளின் தீமை நன்மைகளும் விளங்கித்தோன்ற என்று கூறுவாருமுளர்.

தூண்டிய சோதியை - பிரேரகம்செய்த அதாவது தொழிற்படுத்திய ஞானவொளி மயமான பெருமானை. மீனவனும் சொல்லவல்லன் அல்லன் என்க. மீனவன் - பாண்டியன். கண்ணுதற்பெருமான் குதிரைவீரனுக வந்தும், வந்தியாளாய்வந்து அவன்கையாற் பிரம்படிபட்டும் காட்சிவழங்கக் கண்டுய்ந்த அரிமர்த்தன பாண்டியனும் சொல்ல வல்லனல்லன் என்றதாம். தன்னை மருகனுகப் பெற்ற மலயத்துவசனும் சொல்லவல்லன் அல்லன் என்றதும் ஆம்.

மலநீக்கமும் திருவருட்பேறும் திருவடிச்சார்பும் எப்போது பெறலாம் என்று ஏமாந்திருக்கவேண்டாம்; விரும்பியகாலத்தே பெறுதற்குத் தடையேதும் இல்லையாம் என்பார் 'வேண்டிய போதே விலக்கிலை' என்ருர்.

தாள் வாய்தல் விரும்புமின் - திருவடி தானே வந்து பொருந்துதலை விரும்புங்கள். திருவடியைச் சென்றுகூடுதற்கும் உயிர்க்கு உரிமையின்ருதலின் வாய்தல்தொழிலைத் திருவடியதாக்கியும், விரும்புதல் ஒன்றே ஆன்மா செய்யக்கடமைப்பட்டதென விரும்புதலை அன்பர்தொழிலாக்கியும் உரைத்தார்.

பாண்டியனுர் - பாண்டிப்பிரானுகிய சிவம். திருவடியருளுதலே முத்தி என்றவாரும்.

இறைவனைப் பாண்டியனுர் எனலால் பாண்டிப்பதிகமும், மாயா இருள் கெடுதலும் எப்பொருளும் விளங்குதலும் சிவானந்த விளைவாதலும் காண்க.

530 மாய வனப்பரி மேல்கொண்டு
மற்றவர்க் கைக்கொளலும்
போயறு மிப்பிறப் பென்னும்
பகைகள் புகுந்தவருக்
காய வரும்பெருஞ் சீருடைத்
தன்னரு ளேயருளும்
சேய நெடுங்கொடைத் தென்னவன்
சேவடி சேர்மின்களே. 7

இ - ள்: மாயமான காட்டில் வாழும் குதிரைகளின்மேல் எழுந்தருளிவந்து, ஏனையோர்களை ஏற்றுக்கொண்டவுடன்

இந்தப் பிறவி என்னும்பகைகள் நீங்கும்; நம்மை வந்தடைந்தவருக்குப் பெறுதற்கு அரிய பெரிய சிறப்பினையுடைய தமது திருவருளே அருளுவன்; ஆதலால் செம்மையாகிய பெரிய கொடைத்தன்மைவாய்ந்த பாண்டிப்பிரான் திருவடியைச் சென்றடையுங்கள் என்றவாறு.

சிவபெருமான் குதிரைவீரனாக எழுந்தருளி, ஏனையோரை ஏற்று, பிறவிப்பகையை நீக்கி, தன்னருளை அருளுவனுதலால் நீங்கள் மிகப் பெரிய வள்ளன்மையுடைய தென்னவன் சேவடி சேர்மின்கள் என்பது கருத்து.

மாய வனப்பரி மேற்கொண்டு, மற்றவரைக் கைக்கொளலும், இப்பிறப்பு என்னும் பகைகள் போயறும்; புகுந்தவர்க்கு ஆய அரும்பெரும் சீருடைத் தன்னருளே அருளும்; சேய நெடுங்கொடைத் தென்னவன் சேவடி சேர்மின்கள் என்று தொடர்புறுத்திப் பொருள் கொள்க.

இறைவன் தம்பொருட்டுக் குதிரைச் சேவகனாக வந்த எளிமை, அடிகளார் மனத்து அன்பு சுரக்கும்வாயிலாக நின்று நிலவுதலின், அதனைப் பாடல்தோறும் வியந்து உரைப்பார் ஈண்டும் 'மாய வன்ப்பரிமேற்கொண்டு' என்றார். வனப்பரி - காட்டில் வாழும் இயல்புடைய குதிரை. இறைவன் ஏறும் குதிரை வேதக்குதிரையாயினும் மாயக் குதிரை வனக்குதிரை என்றது சாதியடையும், தமக்காக நடத்திவந்த நரிக்குதிரையையுமாம் என்க.

மாயவன் ஐ பரிமேற்கொண்டு - சுத்த, அசுத்த, சுத்தா சுத்த மாயாப் பிரேரகனை சிவனாகிய தலைவன் குதிரைமேல் எழுந்தருளி என்பது பழையவுரை.

மாய வனப்பு அரிமேற்கொண்டு - மாயம் பொருந்திய அழகிய குதிரைமேற்கொண்டு என்பர் சிலர். வனப்பு-அழகு.

மற்றவர் கைக்கொளலும் - மலமாயைகளோடுகூடிய உயிர்களைத் திருவருள் சுரந்து தாம் ஏற்றுக்கொண்டவுடன். எல்லா உயிரையும் அடிமைப்பணி கொள்ளுவதாகையால் என்பது பழையவுரை. பிறவிக்கு நல்லர் அல்லாதாரைக் கைவசப்படுத்திக் கொள்ளுதல் என்பர் சிலர்.

இப்பிறப்பு என்னும் பகைகள் போய் அறும் - வினைவயத்தால் கிடைத்த இப்பிறவி என்னும் பகைகள் போய் அகலும். இனி வாரா என்பார் 'போயறும்' என்றார். ஆன்மா திருவடி சார்தலைத் தடுத்துத் தீமைசெய்தலின் பிறவியைப் பகை என்றார்.

இப்பிறப்பு என்னும் பகைகள் புகுந்தவருக்கு அவை போய் அறும் எனக்கூட்டி, இந்தப் பிறவி என்னும் பகைகள் புகுந்து இடங்கொள்ளப்பட்ட அவர்க்கு அவை முதுகிட்டுப் போய் வேருய் நீங்கும் என்பாரும் உளர்.

புகுந்தவருக்கு ஆய அரும்பெருஞ் சீருடைத் தன்னருளே யருளும் - அங்ஙனம் பிறப்பென்னும் பகையறுவதுமட்டுமன்றி, தன்பால் அன்பாய் வந்தடைந்தவர்கட்கு ஆகிய அரிய பெரிய சிறப்பினையுடைய தன்னருளை அருளுவர் என்பதாம். ஆய அருள், சீருடைத்தன்னருள் எனக்கூட்டுக. புகுந்தவர் - உற்ருர் ஆருளரோ உயிர்கொண்டு போம்பொழுது, குற்ருலத்துறை கூத்தனல்லால், உற்ருராருளரோ என்ற உண்மையை ஓர்ந்து தம்மையே அடைக்கலமாகப் புகுந்தவருக்கு என்க. புகும் தவர்க்கு எனப்பிரித்து புகுகின்ற தவமுடையார்க்கு எனலுமாம். ஆய - அவரவர் பரிபாகநிலைக்கு ஏற்ற. அருள் யார்க்கும் எளிதில் கிடைத்தற்கு அரியதாதலின் அதனை 'அரும் அருள்' என்றும், எல்லா உயிர்களையும் தன்னகத்தடக்கி ஆட்கொள்ளு தலின் 'பெரும் அருள்' என்றும் அருளினர். அருளும்: செய்யு மென்முற்று.

உலகினர் வழங்கும் கொடை ஒருவேளைக்கு உதவுவதாய், ஓராண்டு ஓராயுள்வரை உதவுவதாய்மட்டும் அமைவது. இறைவன் வழங்கும் வள்ளன்மை என்றுமழியாத பேரின்பத் திருத்துவது ஆகையால் அவன் திருவடி உதவுதலைச் 'சேய நெடுங்கொடை' என்ருர்.

'மற்றவர் கைகொளலும்' என்னும் பாடத்திற்கு வஞ்சனை யாக நரிகளைப் பரிகளாக்கிய குதிரைமேல் வந்து, பாண்டியன் ஏவலர்களாகிய மற்றவர்கள் கயிறுமாறி ஏற்றுக் கொண்ட வுடன் இந்தக் குதிரையாகிய பிறப்பகலும்; தவத்தோராகிய எம் போலியர்க்குப் பகைகள் புகும்; அவர்களைக் காப்பதற்கேற்ற அரிய பெரிய சிறப்புக்களோடு கூடிய தன்னருளே யருளும் என்னும் மிகப் பெரிய கொடையினையுடைய தென்னவன்சேவடி யைச் சேர்மின்கள் என அடிகளார் வரலாற்றை விளக்கும் பொருள் தோன்றநிற்றல் காண்க.

குருவழி நின்ருரன்றிப் பிறர் யாரும் எளிதில் உணரமுடி யாத மாயமான வாசியை ஊர்ந்து, அவ்வாசியைச் சாதகர்க ளாகிய மற்றவர்களும் கைக்கொண்டவுடன் இப்பிறவி என் கின்ற பகைவர்க்கங்கள் அறும்; சரணுகதி அடைந்தவர்கட்குத் தன்னருளே அருளுவன்; ஆகையால் அவர் திருவடியைச்

சென்று சேர்மின்கள் என யோகநூன்முறைபற்றி உரை கூறுவாரும் உளர். வாசியூர்தல் - பிராணாயாமம் புரிதல். மற்றவர் கைக்கொளல் - வாசி மாறிப்பழகுதல். அதாவது இடைகலை பிங்கலைகளில் மாறிச் செலுத்தப்படுதல்.

இவ்வண்ணம் பிறப்பறுதலும் அருள்வழங்கலும் ஆகிய சிவானந்த விளைவையும், தென்னவன் சேவடி சேர்மின்கள் என்பதால் பாண்டி விருத்தமாதலையும் உணர்த்துவது இத் திருப்பாடல்.

531 அழிவின்றி நின்றதொ ரானந்த
வெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக்
கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றறுத் தாண்டவன்
பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான் கொடை
யேசென்று முந்துமினே. 8

இ - ள் : நிலைத்ததும் ஒப்பற்றதுமான ஆனந்தவெள்ளத்தில் அடியார்களை அழுந்தச்செய்து, என்றைக்கும் நீங்காத கருணையைச்செய்து, தீய வினைகளைப் போக்கி, இவையனைத்திற்கும் காரணமாகப் பிறவிகள்தோறும் தொடர்ந்துவரும் பழைமையான ஆணவமலத்தொடர்பை அறுத்து ஆண்ட முதல்வன், பாண்டிப்பதத்தைமட்டுமா! உலகமுழுவதையுமே கொடையாக வழங்கியருளுவன்; அதனைப்பெறுதற்கு வந்து முந்துங்கள் என்றவாறு.

இறைவன் மெய்யன்பர்களை ஆனந்தவெள்ளத்தழுத்திக் கருணையைக் காட்டி, கடுவினைகளைப் போக்கி, மலநாசம் செய்வித்து, உலக முழுவதுமே ஆளத்தருவன்; வந்து முந்துங்கள் என உலகவரைநோக்கி அருளியவாறு.

சிவானந்தம், அழிவும் வளர்ச்சியும் விளக்கமும் அஃதின்மையும் இன்றி என்றும் ஒருபடித்தாயிருப்பது ஆதலின், 'அழிவின்றி நின்றதொர் ஆனந்தவெள்ளம்' என விதந்தார். வற்றாதும் முற்றாதும் பல உயிர்களையுந் தன்னகத்தடக்கி இன்பூட்டுதலின் வெள்ளமென்றும், தேனில் விழுந்த ஈப்போல உயிர்கள் சிவானந்தத்தில் தோயின் புறம்போகா ஆதலால் வெள்ளத் திடையழுத்தி என்றும், உயிர்கள்மாட்டு இறைவன் காட்டிய அருள் என்றும் மாறாது ஒருபடித்தாதலால் கழிவில் கருணையை

என்றும், இறைவன்கருணை வலியவரினும் காட்டும் உபகாரத்தைப் பெருமான் செய்யாவிட்டால் பிறவிக்குருடனுக்குப் பொற்கிழி எதிர்ந்தாற்போல இடறிச் செல்வதன்றி அழுந்தி அனுபவிக்க இயலாமையின் கருணையைக் காட்டி என்றும், காட்டிய கருணையைக் காணுதவாறு இடையிடையே வினைகள் தடுக்குமோ என்று இரங்கிக் கடிய்வினை அகற்றி என்றும், இத்தனை கேடுகளுக்கும் தாரகமாய் இருப்பது மலமாதலின் தொன்று தொட்டு வந்த அதனையும் கெடுத்து ஆண்டான் என்பது போதர பழமலம் பற்றறுத்து ஆண்டவன் என்றும் கூறினர்.

பாண்டிப் பெரும்பதம் - பாண்டியநாட்டை ஆளும் பெரிய பதவி. இஃது ஒன்றைமட்டுமா அருளுவன்; கொடையாக எல்லா அண்டங்களிலும் உள்ள எல்லா உலகங்களையும் அருளுவன் என்பார் 'பாண்டிப் பெரும்பதமே அருளுவன்! கொடையேயாக உலகம் முழுதும் தருவான்' என்றார்.

அமுதமழை பெய்கின்றபோது வாயேந்திக் கையேந்தி நிற்பார்போலப் பெரிய கொடையைப் பெற்றுய்ய உலகவர்களே! முந்திச் சென்று உய்ந்துபோதலே நும் கடமை என்று கூறியவாறு.

பாண்டிப் பெரும் பதமேயாகிய உலகமுழுதையும் தருவன்; வந்து முந்துமின்கள் எனலுமாம்.

ஆனந்தவெள்ளத்திடை அழுத்திப் பழமலமகற்றிப் பிறவி அறுத்தமை இத்திருப்பாட்டில் பேசப்பெறுதலின் சிவானந்த விளைவும், பாண்டிப் பெரும் பதமே! முழுதுலகுந்தருவான் என்பதால் பாண்டிவிருத்தமாதலும் உணர்த்தப்பெற்றமை காண்க.

532 விரவிய தீவினை மேலைப்
பிறப்புமுந் நீர்கடக்கப்
பரவிய அன்பரை யென்புருக்
கும்பரம் பாண்டியனார்
புரவியின் மேல்வரப் புந்திகொ
ளப்பட்ட பூங்கொடியார்
மரவியன் மேல்கொண்டு தம்மையுந்
தாமறி யார்மறந்தே. 9

இ - ள் : கலந்த தீவினைகளால் விளையும் இனிவரும் பிறப்பாகிய கடலைக்கடந்து கரையேறுகைக்காக வழிபட்ட அடியார்களை, என்பையும் உருகப்பண்ணி ஆட்கொள்ளும் மேலான

பாண்டிப்பெருமான் குதிரைமேல் எழுந்தருளிவர, அதனைக் கண்டு அறிவு கவரப்பட்ட பூங்கொடிபோலும் பெண்கள், தம்வசமழிந்து மரத்தின் தன்மையை அடைந்து தம்மையே தாம் அறியாராயினர் என்றவாறு.

தென்பாண்டிப் பெருமானார் பரிமேலழகராக எழுந்தருளிய கோலத்தைக் கண்டு பெண்கள் தம்வசமழிந்து தம்மையே தாம் அறியாராயினர் என்பது கருத்து.

நன்மைகளோடு கலந்த தீவினையை 'விரவிய தீவினை' என்றார். நல்வினையும் தீவினையுங்கலந்து நுகர்ச்சிக்கு வருவதனாலேயே உயிர்கள் மயங்கி மேலும் வினைகளிலழுந்திப் பிறவித் துன்பத்தைப் பற்றிச் சிந்தியாது ஒழிகின்றன; சிவன் அருள் சேர்ந்த பரிபாகியான உயிர்மட்டும் அதனைத் துன்பமாகக் கண்டு பிறப்பறுக்க முயலுகின்றது என்பதாம்.

மேலைப் பிறப்பு என்றது இனி வரும் பிறவிகள். கழிந்த பிறவிகளைப்பற்றிய கவலை இல்லை; எடுத்த பிறவியில் நுகரும் துன்பந்தான் வரும் பிறவியில் அச்சத்தைத் தோற்றுவிக்கும் ஆதலான் அதனைக் கடலாகக் கடக்கமுடியாததாகக் கருதி அன்பர் அதனைக்கடக்கக் கடவுள் துணையைப் பரவுகின்றனர் என்கின்றார்கள்.

என்புருக்கும் பரம்பாண்டியனார் என்றது ஊனை உருக்கி உணர்வைப்பெருக்கும் நன்றிபுரிந்த இறைவன் என்பதாம்.

பெண்களின்மேல் வைத்து மெய்யன்பர்நிலை விளக்கியது மேல்வரும் பகுதி. புந்திகொளப்பட்ட பூங்கொடியார் - சோம சுந்தரப்பெருமான் குதிரைவீரனாக எழுந்தருளிவர, அதனைக் கண்டு நிலைதிரிந்து, தன்னுமங்கெட்டு மயங்கிய பெண்கள்.

ஊறுணர்ச்சியையன்றி வேறுணர்ச்சிகளை வெளிப்படுத்த மாட்டாத மரத்தின்தன்மையைப் பெற்றனர் என்பார் 'மரவியல் மேற்கொண்டு' என்றார்.

உயிருணர்வுகெட்டுத் தலைவனுணர்வே உணர்வாக அடங்கிக்கிடந்தாள் என்பார் 'மறந்து தம்மையுந்தாமறியார்' என்றார். இது தற்போதம் அழிதலையும், சிவபோதமிகுதலையும் உணர்த்துவது. இதனால் சிவானந்தவிளைவும், பாண்டியனார் புரவியின் மேல்வர என்றதனால் பாண்டிவிருத்தமாதலும் உணர்த்தப் பெறுதல் காண்க.

533 கூற்றைவென் றாங்கைவர் கோக்களை
யும்வென் றிருந்தழகால்
வீற்றிருந் தான்பெருந் தேவியுந்
தானுமோர் மீனவன்பால்
ஏற்றுவந் தாருயி ருண்ட
திறலொற்றைச் சேவகனே
தேற்றமி லாதவர் சேவடி
சிக்கெனச் சேர்மின்களே. 10

திருச்சிற்றம்பலம்

இ-ள்: ஒப்பற்ற பாண்டியமன்னனிடம், நமக்காக ஏற்றுக் கொண்டு எழுந்தருளி, அவனுடைய ஆன்மபோதத்தை யழித்து ஆட்கொண்ட வலிமையையுடைய ஒப்பற்ற வீரனே, மார்க்கண்டற்காக யமனை வென்று, ஐந்திந்திரியங்களாகிய அரசர்களையும் வென்று உமாதேவியும் தானுமாக அழகோடு வீற்றிருந்தான்; தெளிவில்லாத மக்களே! அவனுடைய சிவந்த திருவடிகளைச் சென்று உறுதியாகப் பற்றுங்கள் என்றவாறு.

இது உலகவரை நோக்கி, தெளிவற்ற மக்களே! குதிரை மேல் வந்த வீரனே கூற்றினை உதைத்து, இந்திரியங்களையும் வென்று, உமாதேவியும் தானுமாக வீற்றிருந்த சோமசுந்தரக் கடவுள்; அவனடியைச்சென்று சிக்கெனச் சேருமின் என்று கண்டுகாட்டியவாறு.

மீனவன் - அரிமர்த்தனபாண்டியன். இவன் இறைவன் குதிரைச்சேவகனாக வரவும் அறியாது குதிரைவீரன் என்றே மதிக்கும் அறியாமையுடையவனாக இருந்தும், தமக்காக எழுந்தருளி அவனறியாமையைப் போக்கி ஆட்கொண்ட திறலை 'மீனவன்பால் ஏற்றுவந்து ஆருயிர் உண்ட திறல்' என்று அருளினார்.

ஒற்றைச் சேவகன் - தன்னைப்போல் பிறரில்லாத வீரன். சேவகனே தேவியும் தானும் வீற்றிருந்தான்; தேற்றமிலாதவர் சேவடி சேர்மின்கள் எனக் கூட்டுக.

கூற்றை வென்றதும் புலன்களை வென்றதுமாய வீரங்களை அறிவித்தது. அடைக்கலம் புகுதற்கு உரியவன் என்பதைத் தெளியாத மக்கள் தெளிவதற்காக என்க.

தேவியுந்தானும் வீற்றிருந்தான் என்றது, அருட்கோலம் கொண்டிருந்தான்; அடியடைதற்குரிய காலம் இதுவே என

மக்களுக்கு உணர்த்த. அறிவில், சந்தேக ஞானமும் விபரீத ஞானமும், உண்மை ஞானமும் என மூவகை உண்டு. அவற்றுள், ஒன்றை ஒன்றாக உணர்ந்த விபரீதஞானமுடையார்க்கு ஒருபோதும் உண்மைஞானத்தை உணர்த்த இயலாதாம். அங்ஙனம் உணர்த்த முற்படின் காணாதார்க்காட்டுவான் தான் காணான் என்று பழிக்கப்படுநிலை வினையுமாதலின் மதின்மேல் பூனைபோல, இதுவோ அதுவோ என்ற ஐயஞானமுடையவர்களையே அடிகள் 'தேற்றமிலாதவர்' என விளித்தார்.

இங்ஙனம் சிவானந்த வெள்ளத்துள் திளைக்கும் அடிகள் தெளிவற்ற மக்களுக்கு அதனைப்பெறும் உபாயத்தையுணர்த்து முறையாக இப்பாடல் அமைந்தது. அதனால் இத்திருப்பாடல் பதிகக் கருத்திற்கு இயைபுடைத்தாதல் அறியப்பெறும்.

இவ்வண்ணம் இப்பத்துத் திருப்பாடலகளும் சிவானந்த விளைவு என்பும் ஊனும் உளமும் உருக்குதலையும், குதிரை வீரனாகவே எண்ணி ஏமாந்த மீனவனுக்கும் அறிய இயலாத ஆண்டவனியல்புகளையும், இறைவன் அடியார்க்கு மூலபண்டாரம் வழங்கும் வள்ளன்மையினையும் பலமுறைகளால் உணர்த்தி முந்துமின், சேர்மின், சிக்கெனச் சேர்மின என் அடிகளார் அன்பர்களுக்கு அறிவிக்கும் உபதேசமாக அமைந்திருத்தல் காண்க.



காட்சிதந்த கழுமலவள நகர்

# 37. பிடித்தபத்து

*[முத்திக்கலப்புரைத்தல்]*

குருமூர்த்தியின் அருளாணையின்வண்ணம் மதுரையி லிருந்து புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கிவருகின்ற வாதவூரடிகள் சீகாழித்தலத்தை அடைந்தார்கள். அங்கே மலையைப்போல விளங்குகின்ற கோபுரவாயிலைக் கடந்து, உட்புகுந்து, திருக்கயிலை போல்வதாகிய திருத்தோணி புரத்தை வணங்குகின்றபோது, தில்லையம்பலத்துத் திருக் கூத்தாடுகின்ற குஞ்சித பாதத்தின் நினைவுவர, அதனைச் சிக்கெனப் பிடித்த சிந்தையராய்த் திருத்தோணிபுரத்தீசன் திருமுன் நின்று, பிடித்தபத்தாகிய இதனை அருளிச்செய் கின்றார்கள்.

இப்பத்து, 'சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவதினியே' என்ற மகுடம் உடைமையின் பிடித்தபத்து எனப் பெயர்பெற்றது.

பழைய குறிப்பு 'முத்திக் கலப்புரைத்தல் அதாவது மற்றுமுள்ள ஆன்மாக்களுக்கு முத்தியின் சுகத்தைச் சொல்லியது' என்னும். இறைவனை இன்ப வடிவினனாகக் கண்டு, அவனுடன் வேறின்றித் தோய்ந்தநிலையில் அவ்வின்பம் இனித் தன் கையைவிட்டுத் தவறாதென்ற எழுச்சி மிக, அதனால் பிடித்தேன் என்று பேசுந்துணிவு பிறக்கும். அதனையுணர்த்துவதால் இப்பத்து பிடித்தபத்தாம் என்க.

"நடித்த பாதம் பிடித்தபத்து, சித்த மலமறு முத்திக் கலப்பு உரைத்தல்" என்பது அகத்தியச் சூத்திரம். இதன் பொழிப்பாகப் பழையவுரை கூறுவது, "பேரானந்தப் பெருங்கடலில் அமுதம் ஆராதருந்தி, அதன்மேற்கொண்டு பெற்ற இன்ப அன்பாகி, மற்றொன்றறியா வியாபகவகையால், அதனுள் அடங்கிச் சிவானந்த சுவானுபூதி அதுவாய் இருத்தலால் பரத்தைத் தொடும் பண்பு இல்லை என்ற அத்துவிதக்கலப்பு அநுபூதி உரைப்பது' என்பது.

இதனால், முத்தியிற் கலந்திருப்பதால், இவ்வநுபூதிக்கு வேறான ஒன்றையும் விரும்பாமை விளக்கப்பெறுதல் காண்க.

"மிக்க பிறவித்துயரெலாம் ஒழித்து விபுத்துவமிங்களித்தலாலே பிக்கறச் சிக்கெனப் பிடித்தே னுன்னை யென்று துணிவு செப்பல் பிடித்தபத்தாம்" என்பது பழையபுராணம்.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

534 உம்பர்கட் கரசே யொழிவற நிறைந்த
யோகமே யூற்றையேன் றனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 1

இ - ள் : தேவர்களனைவருக்கும் அரசனே! எங்கும் நீக்கமற நிறைந்துள்ள சிவயோக வடிவானவனே! ஊனுலாகிய உடம்பினையுடைய அடியேனுக்கு, புதுமையாகப் பழுத்து என் குடிமுழுதையும் ஆட்கொண்டு, வாழவேண்டிய இக வாழ்வு இல்லையாம்வண்ணம் வாழச்செய்த தேவாமுதமே! எல்லா நூல்களானும் அனுபவத்தானும் துணியப்பெற்றதான செம்பொருளே! சிறப்புக்கள் பலவும் உடைய திருவடியே! ஞானச்செல்வமே! சிவபெருமானே! எமக்காக உன்னை இறுகப் பற்றிக்கொண்டேன்; எம்மைவிட்டு இனி எங்கே எழுந்தருள்வது? என்றவாறு.

எமக்கு அரசாயும், யோகமாயும், அமுதாயும், செம்பொருளாயும், திருவடியாயும், ஞானச்செல்வமாயுமுள்ள பெருமானே! எங்களுக்காக இறுகப் பற்றினேன்; இனி, எழுந்தருளுவது எங்கே? என்பது கருத்து.

உம்பர் - மேலோராகிய வானவர். அவர்கள் விண்ணுலக வாசிகள் முதல் ஸ்ரீகண்டருத்ரபுவனம் வரையுள்ள தேவர்கள். அவர்கள் அனைவருக்கும் அரசாக - அவர்கள் அனைவரையும் தம் ஆணைவழி நடத்தும் சிறப்புடையது பரசிவம் ஒன்றே ஆதலின் 'உம்பர்கட்கு அரசே' என்றார்.

மணியின்கண் ஒளியும் பாலின்கட்சுவையும்போல எங்கும் நீக்கமின்றி நிறைந்தும், கலந்து ஒன்றாகியும் விளங்குதல் சிவத்தின் சிறப்பிலக்கணமாதலின் 'ஒழிவறநிறைந்தயோகமே' என்றார். யோகம் - ஒரொருக்கால் உளதாம் உள்ளத்துயர்வு. இதனை யோகசாலி முதலிய வழக்கானும் அறிக. அங்ஙனம் ஆகாது இறைவன் என்றும் எங்கும் நிலவும் யோகமாக

விளங்குகின்றான் என்பார் இங்ஙனம் கூறினர் எனலுமாம். சர்வ வியாபக சச்சிதானந்த சிவயோகன் என்பது பழையஉரை.

ஊற்றை -அழுக்கு. இஞ்ஞான்று ஊத்தை என வழங்கும். ஊற்றையேன் - அழுக்காகிய மலமுடைய யான் எனலுமாம். வம்பு - காலமல்லாத காலத்துப் பழுத்த கனி முதலியன. மல கன்மங்களினின்றும் நீங்காமையால் பரிபாகப்படாத என்னிடத்தும், காலமல்லாத காலத்துக் கனிந்த கனிபோல என் குடியை வாழவைத்தான் எனக் கருணையின் சிறப்பைக் காட்டுவார், 'ஊற்றையேன்றனக்கு வம்பெனப் பழுத்து, என் குடி முழுது ஆண்டு வாழ்வற வாழ்வித்த மருந்தே' என்றார். வாழ்வற வாழ்வித்தலாவது, இந்த உலகில் வாழவேண்டிய இன்பத் துன்ப வாழ்வு இனியும் எஞ்சியுள்ளது என்னுதபடி எல்லா வகையானும் வாழச்செய்த என்பதாம். அன்றி, இவ்வுலக வாழ்வாகிய இருவினைவாழ்வு நீங்கச் சிவஞானவாழ்வு வாழ்வித்த எனலுமாம். 'வாழ்வில்லாத பேரானந்த சுகம் அருளிய பிறவிப்பிணிக்கோர் மருந்தே' என்பது பழையவுரை.

துணிவு (ஆன) செம்பொருளே என ஏகாரம் பிரித்துக் கூட்டி, எல்லாச்சமய நூல்களானும் இதுவே பரம காரண மானது என்று துணியப்பெற்றதான சிவமே என்க. சிறப்பு என்னும் செம்பொருளான அறிவே என்பது பழையவுரை. துணிவு - துணியப்பட்ட அறிவு.

கழல் - வீரக்கழல். அது தானியாகுபெயராகக் கழலை அணியும் திருவடியை உணர்த்தியது. சீர் - புகழ். கழலென்பது அடிகள் என்பது போல்வதோர் வழக்கு. சீருடைக் கழலே - புகழினையுடைய அடிகளே என்பதாம். பழையவுரைகாரரும் திருவடியே எனல் காண்க. வீரக்கழலை அணிந்த திருவடியைத் தருவானே என்றெல்லாம் உரைகாண்பாரும் உளர்.

செல்வம் - சிவஞானச்செல்வம். திருவருட்செல்வம் என்பது பழையவுரை. அடியேன் திருவடியைப் பற்றுவது அடியேன் உய்வதற்காக மட்டுமன்று; அடியார்களாகிய நாங்கள் உய்ய என்பார் 'எம்பொருட்டு' என்றார்.

'இனி' என்பது எம்மைப் பிரிந்து இனிமேல் என்னும் பொருள்தந்தது. ஆகவே எம்மைவிட்டு இனிப் பிரிய இயலாது என்பதை விண்ணப்பித்தவாறு.

திருவடியைப் பிடித்தல் முத்திக் கலப்பாதலின் இத்திருப் பாடலும் இனிவரும் பாடல்களும் பதிகம் நுதலிய பொருளை நன்கு விளக்குதல் காண்க.

535 விடைவிடா துகந்த விண்ணவர் கோவே
வினையனே னுடையமெய்ப் பொருளே
முடைவிடா தடியேன் மூத்தற மண்ணாய்
முழுப்புழுக் குரம்பையிற் கிடந்து
கடைபடா வண்ணங் காத்தெனை யாண்ட
கடவுளே கருணைமா கடலே
இடைவிடா துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 2

இ-ள்: இடபத்தை விடாமல் ஊர்தியாக விரும்பிய தேவதேவனே! வினையுடையேனுக்கிய என் மெய்ப்பொருளே! அடியேன் முடைநாற்றம் வீசும் இந்த உடலை விடாமல் முதிர்ந்து மண்ணாய் அழிய, முழுதும் புழுமயமான இவ்வுடலில்கிடந்து கீழாகாவண்ணம் அடியேனைக்கலந்தாட்கொண்ட கடவுளே! பெரிய கருணைக்கடலே! உன்னைச் சிறிதும் இடைவிடாமல் இறுகப் பிடித்துக்கொள்வேன்; இனித் தேவரீர் எழுந்தருள்வது எங்கே? என்றவாறு.

இப்புன்புலால் யாக்கையிற்கிடந்து வருந்தி அழியாவண்ணம் காத்த பெருமானே! அடியேன் தேவரீரைச் சிக்கெனப் பிடித்தேன்; இனி நீர் எழுந்தருள்வது எங்கே என்பது கருத்து.

இறைவன் எஞ்ஞான்றும் அருளலையே மேற்கொண்டிருத்தலின் 'விடையினை விடாதுகந்த கோ' என்றார். விடை இறைவனைப் பிரிய மனமில்லாது ஊர்தியாவதற்கு உகந்த கோவே எனலுமாம். வினையனேன் என்புழி அன்சாரியை தவிர்வழி வந்ததாகக் கொள்க. வினையேன் என்பதே சொல். வினையேனை உய்விப்பதற்காகக் கிடைத்த உண்மைப் பொருள் ஆவார் இறைவன் என்பார் 'வினையனேனுடைய மெய்ப்பொருளே! என விளித்தார்.

முடை - ஊனாற்றம். முடை என்ற நாற்றத்தின் பெயர் அதனையுடைய உடலுக்கானமையின் பண்பாகுபெயர். உடலை விடாது மூத்து மண்ணாய் அறக்கிடந்து எனக்கூட்டுக. மூத்து- பயனின்றி மூத்து என்க.

கடைபடாவண்ணம் - கீழ்ப்படாவண்ணம். வருந்தாவண்ணம் எனலுமாம். காத்தலாவது: மேலும் மேலும் வினைகளைச் செய்து இழிபிறவியை எடுத்துக் கீழாகாவுண்ணம் அடியேனைக் காப்பாற்றி என்க.

இறைவன் தம்மைப் பிறவாவண்ணம் காத்தமை கூறிச் சிக்கெனப் பிடித்தமையை விண்ணப்பித்தலின் இத்திருப்பாடல் முத்திக்கலப்பாகிய பிடித்தபத்தாதல் காண்க.

536 அம்மையே யப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்தவா ரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 3

இ - ள்: அடியேற்கு அன்னையே! அப்பா! ஒப்பற்ற மாணிக்கமணியே! என் அன்பில் விளைந்த அரிய அமுதமே! பொய்மையான பயனற்ற காரியங்களையே மிகச்செய்து, வாழ்நாளைச் சுருக்கிக்கொள்ளும் புழுத்து அலைகின்ற நாயை ஒத்த இழிதகைமையுடையேனாகிய எனக்குச் செம்மையான சிவபதத்தை அருளிய செல்வமே! சிவபெருமானே! இப்பிறப்பிலேயே உன்னை உறுதியாகப் பற்றினேன்: ஆகையால், இனித் தேவரீர் எழுந்தருள்வது எங்கே? என்றவாறு.

பயனற்ற காரியங்களைச் செய்து வாழ்நாளை வீணாகச் சுருக்கும் எனக்கும் ஈறிலா இன்பம் அளித்த பெருமானே! எடுத்த இப்பிறவி வீண்போகாதவண்ணம் இம்மையிலேயே இறுகப்பற்றினேன்; இனி, எங்கு எழுந்தருள்வது என்கின்றார் என்பது கருத்து.

இறைவன் தனக்கு. இன்பமே பெருக்கி. யான் செய்யும் குற்றங்களைஎல்லாம் மறந்து அன்பேபொழிதலால் அம்மையே என்றும், தீயரைக் கண்டவிடத்துக் கண்டித்துத் திருத்தி நல்வழிப்படுத்துதலின் அப்பா என்றும், கிடைத்தற்கு அரிய மணியாயும் பிறவிநோயகற்றும் மணியாயும் விளங்குதலின் ஒப்பிலா மணியே என்றும் கூறினர்.

அன்பு ஒரு புலம். அப்புலத்துள் விளைந்த அமுதமாய இனித்தலின் 'அன்பினில் விளைந்தவமுதே' என்றார். இங்ஙனம் முறையே இப்பிறப்பு மெய்ம்மையாம் உழவைச்செய்து சிவபோகம் விளைக்க உதவப்பெற்றது; அத்தகைய பிறப்பைப் பொய்மையை விளைத்து, மெய்மைக்குரிய காலத்தைப் பாழ்படுத்தியதால் அதற்குரிய காலம் சுருங்கியதென்பார் 'பொய்ம்மையே

பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும் புலையனேன்' என்றருளினார். பொய்ம்மை - நிலையாமையையுடைய உலகமும், உலகபோகங் களும், அதற்கான இவ்வுடலும், இதனை வளர்ப்பதற்காக மேற் கொண்ட முயற்சிகளும் ஆம்.

நாய் காரியமின்றி அலையும் குணம் உடையது. அதிலும் அது புழுக்கண்டதாயின் அதனைப் போக்கிக்கொள்ளும் அறி வின்மையால், தன் உடற்புண்ணில் புழு நெளியும்போதெல் லாம் அந்நோய் பொறுக்கமாட்டாது அலைந்துகொண்டே யிருக்கும்; அதுபோல வினையின்றி அலைகின்றேன் என்பார் 'புழுத்து அலைப் புலையனேன்' எனத் தன்னைக் குறித்தார்.

சிவபதம் - பேரின்பநிலையாகிய முத்தி. செம்மை - நேர்மை; அதாவது கோணல் இல்லாதது. மலக்கோண் நீங்கியது. ஆதலால் மலக்கோணலும், அதன் விளைவாகிய அறியாமையும், அதன் விளைவாகிய அகங்கார மமகாரங்களும் நீங்கியதால் உளதாம் இன்பநிலையார்தலின் அதனைச் 'செம்மையேயாய சிவ பதம்' என்றருளினர்.

இம்மை - எடுத்த இப்பிறவி. தேவரீர் குருவாக எழுந்தருளி வந்து காட்டாதனவெல்லாம் காட்டித் தாட்டாமரை காட்டித் தன்கருணைத் தேன்காட்டி ஆட்கொள்ளும் பேறு பெற்றேன் ஆதலின் இப்பிறவியிலேயே உம்மைச் சிக்கெனப் பிடித்தேன்; பிடிக்கும் அறிவும், ஆற்றலும், திருவருளால் என்மாட்டு விளைந் தன என்பதாம்.

பத்திவலையிற் படுவோனாதலின் இனி நீர் எழுந்தருளுவது எங்கே என்ற உறுதியைக் காண்க.

சிவபதம் அளித்த செல்வமே! என் விளித்தலால் முத்திக் கலப்பும், சிக்கெனப் பிடித்தேன் என்பதால் பிடித்தபத்தின் இயைபும் விளங்கநிற்றல் காண்க.

537 அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

இ - ள் : அருளாகிற ஒளியையுடைய சுடரே! அளிந்த ஒப்பற்ற கனியே! மிக்க ஆற்றலோடுகூடிய அரிய தவத்தைச் செய்யும் முனிவர் பெருமக்கட்கெல்லாம் தலைவனே! மெய்ப் பொருளை அகத்தடக்கிய சிவஞானக்கலையே! உலகவர் உரை யளவையில் அடங்கிக்கிடக்கும் புகழ்ச்சியைக் கடந்த அநு பவமே! சிவயோகத்தால் விளையும் விளக்கமே! மலநீக்கம் பெற்றுத் தெளிந்தகாலத்து அடியார்கள் மனத்திற் புகுந்த செல்வமே! சிவபெருமானே! என்னை நானறியாத இன்பத்தால் இருளான நிலையில் உன்னைச் சிக்கெனப்பிடித்தேன்; இனி எழுந்தருளுவது எங்கு? என்றவாறு.

சுடரே! கனியே! அரசே! போகமே! பொலிவே! செல்வமே! சிவபெருமானே! இன்பத்தால் அறிவிழந்தநிலையில் உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் ; இனி, எங்கு எழுந்தருள்வது? என்பது கருத்து.

சுடர் - தீப்பிழம்பு. இறைவன் தீப்பிழம்பு. அதன் ஒளி அருள். ஆதலின், திருவருளாகிற ஒளியோடுகூடிய தீப்பிழம்பு என இறைவனை விளித்தார். இதனால் சத்தியோடு கூடிய சிவமே என விளிக்கப்பட்டமை காண்க.

சிவானுபவ காலத்துச் சிவம் நுகர்ச்சிக்கு வரும்போது, கனியைப் பாலைத் தேனை ஒத்திருக்கும் எனச் சிவாகமங்கள் கூறுதலின் 'அளிந்ததோர் கனியே' என்ற அனுபவம் கூறியது காண்க.

அருந்தவர் - பிறரால் செய்தற்கு அரிய தவம் செய்தவர். அவர்களுக்கு உரிய பெருந்திறல் சாப அனுக்கிரக ஆற்றல். இங்ஙனம் ஆக்கவும் அழிக்கவும் வல்ல பேராற்றல் வாய்ந்த சனகாதி முனிவர் போன்றவர்கள் அனைவருக்கும் அரசன் சிவனெனக் காட்டி விளித்தார் 'பெருந்திறல் அருந்தவர்க்கு அரசே' என.

இங்ஙனமன்றி, இச்சொற்றொடரைத் தவர், அருந்தவர், திறலருந்தவர், பெறலருந்தவர் என யோகவிபாகம் செய்து முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகை நிலையிலுள்ளாரை உணர்த்தியதாகக் கொள்ளலுமாம்.

மனனுணர்வான் உணரப்படுவனவாகிய அனைத்துமே கலைதான். ஆயினும், ஒருகணத்து அறியப்பெற்ற கலை மறு கணத்து மறையும் நிலையாமையுடையது. இறைவனோ அவ்வா றன்றி எஞ்ஞான்றும் நின்று நிலவி, தம்மை உணர்வார்க்குப்

பொய்க்கலையில் புந்திசெல்லாதவாறு தடுத்து ஆட்கொண்டு மெய்ப்பொருளாகிய முத்தியிலேயே நிலைபெறுத்துபவனாதலின் அவனைப் 'பொருளுடைக் கலையே' என்றார்.

புகழ்ச்சி, தாம் செய்யும் நன்மைகாரணமாகப் பிறர்வாயில் பிறந்து சில காலம் நின்று நிலவுவது; பிறருடைய அன்பு, அறிவு, உரை, ஆற்றல் இவைகளால் அளக்கப்படுவது. போகம் - நுகர்ச்சியால் விளையும் இன்ப உணர்வு. இறைவன் மனனுணர்வால் உணரப்பட்டு உரையளவையில் அடங்கிக் கிடக்கும் புகழில் அடங்கியிருக்கும் அத்துணைச்சிறிய நுகர்ச்சி யின்பம் அல்லன்; கடந்த எல்லையற்ற இன்ப வடிவினன் என்பார் அவனைப் 'புகழ்ச்சியைக் கடந்த போகமே' என்றார்.

யோகம் - கலப்பு. தம் அறிவை எப்போதும் இறை ஒளியி லேயே கலந்திருக்கச் செய்யும் தவம். அத்தகைய யோகம் உடையாரிடம் எரிகிற சுடர்போல ஒருவகை விளக்கம் இருக்கக் காண்கின்றோம். அது இறையொளியே என்பார் 'யோகத்தின் பொலிவே' என்றார்.

உயிர், மாயேயமான தனுகரணாதிகளோடு கூடித் தடுமாறு கின்றகாலத்து விளைவது பொன்னும் மணியும் மாடும் மனையு மாகிய பொருள்கள். இறைவனோ மலபரிபாகமும் இருவினை ஒப்பும் இயைந்த தெளிவானகாலத்து மெய்யடியார்கள் மனத் திலே விளங்கித் தோன்றுபவன் ஆதலால் 'தெருளிடத்து அடியார் சிந்தையுள் புகுந்த செல்வமே' என்றார்.

இவ்வண்ணம் பலவகையான தம் அனுபவம் காரணமாக உருவகித்துவந்த அடிகளாருடைய கற்பனைக் களஞ்சியமான மனம் செயலற்றுப்போனமையால் உணர்வு இழந்து அவன் திருப்பெயரான சிவபெருமானே என்று விளிக்கின்ற அளவில் அமைந்தது என்க.

இறைவனை அருளுடைச்சுடர் முதலாகக்கண்ட அடிகள் இருளிடத்து உன்னைப் பிடித்தேன் என்கின்றார்கள். இருள் - அறியாமை. அறியாமையாவது மல மாயைகளில் அழுந்தியிருக் கும் பெத்தநிலையில் என்பதன்று; அந்நிலையில் இறையுண் மையை ஆன்மா அறியாது முழுமூடமாக இருக்குமாதலின். பின்னர் ஈண்டு இருள் என்றது பேரொளியில் கண் திளைக் கின்றபோது கண் இருள்வதுபோலப் பேரின்பத்தில் திளைக் கின்றபோது தன்வசமழிந்து அறிபவனும் அறிவும் மழுங்கிய நிலையினை. புணர்ச்சிக்காலத்து மெய்ம்மறந்த தலைவி பின்னர்த்

தெளிவதுபோல, அடிகள் அந்நிலையில் சிக்கெனப் பிடித்தமையைத் தெளிந்தபின் உணர்ந்து உரையாலும் விண்ணப்பித்து, இனித் தாங்கள் செல்வது எங்கே? என்று இன்ப உரிமையால் வாதிடவும் துணிந்தார் என்க. ஏனையவிடங்களிலும் இங்ஙனம் கொள்க.

இங்ஙனம் இத்திருப்பாடல் அநுபவக் கருவூலமாக முத்திக் கலப்பினை விளக்குதலாதலும், சிக்கெனப்பிடித்தேன் என்பதால் பிடித்தபத்தாதலும் காண்க.

538 ஒப்புனக் கில்லா வொருவனே அடியேன்
உள்ளத்து ளொளிர்கின்ற வொளியே
மெய்ப்பத மறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோர் அன்பே
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெருமானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 5

இ - ள்: உனக்கு ஒப்பாவார் யாருமில்லாத ஒருவனே! அடியேன்மனத்துள் ஒளிர்கின்ற ஒளியே! உண்மைநிலை இது என்பதை அறிந்துய்யமாட்டாத முடிவற்ற எனக்கு மிகச் சிறந்ததாகிய முத்திப்பேற்றினை வழங்கிய ஒப்பற்ற அன்பு வடிவானவனே! சொல்லுதற்கரிய செழுமையான சுடர் உருவானவனே! செல்வமே! சிவபெருமானே! இளைத்தகாலத்து உன்னை இறுகப்பற்றினேன்; இனி நீ எழுந்தருள்வது எங்கு? என்றவாறு.

சிவபெருமானே! வறியன் பொன்னைப் பெற்றது போல இளைத்தகாலத்து உன்னைப்பற்றினேன்; விடுவேனோ? நீ எங்குப் போவது என்கின்றார் என்பது கருத்து.

அழகாலும் ஆற்றலாலும் உடைமையாலும் பெருமையாலும் உலகில் ஒன்றற்கு ஒன்றை ஒப்புரைப்பது வழக்கு. இவ்வொப்புக்காரணங்கள் மனம் முதலிய கருவி கரணங்களால் கண்டுரைக்கப்பெறுவன. இறைவனாகிய நீயோ கருவி கரணங்களைக் கடந்த உள்ளத்துணர்வாலே உணரப்படும் இன்ப வடிவினன். ஆதலால் உன்னை அனுபவித்து, உனக்கு ஒப்பு இல்லை நீ ஒருவனே உனக்கு ஒப்பு என உணர்ந்து தெளிகின்றேன் என்பார் 'ஒப்புனக்கு இல்லா ஒருவனே' என்றார்.

உள்ளம் பெருங்கோயில்; அங்கு, தீபச்சுடர்போல விளங்கும் ஒளிப்பிழம்பே சிவம் என்பது சிவாகமவாக்கு; ஆதலின் 'உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே' என விளித்தனர்.

ஈறிலி - முடிவற்றவன். மெய்ப்பதம் - உண்மையான, அழிவற்ற நிலை. அதனை அறியாத முடிவற்ற வினைகளையுடையேன் என்பார் தம்மை 'மெய்ப்பதம் அறியா ஈறிலியேன்' என்றார். வீறு இலியேன் எனப் பிரித்துரைத்து, பெருமையற்ற யான் என்பாரும் உளர்.

முத்தியின்பமாகிய சிவானுபவம் இத்தகையது என்று உரைக்கமாட்டாமையின், அதனுடைய பெருமையை மட்டும் உணர்த்துமுகத்தான் 'விழுமியது' என்றருளினர்.

எய்ப்பு - இளைத்தகாலம். வறியன் கையில் காசு சிக்குமானால் இத்தனை நாளும் இக்காசைக் காணத் தான்பட்ட துன்பத்தை எண்ணி எங்ஙனம் சிக்கெனப் பிடிப்பானோ, செலவு செய்யமாட்டானோ, கை நழுவ விடமாட்டானோ அங்ஙனம் பற்றினேன் என்பார் 'எய்ப்பிடத்து உன்னைப் பிடித்தேன்' என்றார்.

விழுமிய தளித்ததோர் அன்பே என்பதால் முத்திக்கலப்பையும், சிக்கெனப் பிடித்தேன் என்பதால் பிடித்தலையும் விண்ணப்பித்தலால் இத்திருப்பாடல் பிடித்தபத்திற்கு இயைபுடைத்தாதல் அறிக.

539 அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்
டளவிலா ஆனந்தம் அருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரியவெம் பொருளே
திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 6

இ - ள்: ஆதரவற்றவனாகிய அடியேன்மனத்தைக் கோயிலாகக்கொண்டு, என்னையும் ஆட்கொண்டு, எல்லையற்ற ஆனந்தத்தை எனக்கருளிப் பிறவியின்வேரை அறுத்து, என் குடி முழுவதையும் ஆண்ட பிஞ்ஞகனே! பெரியவற்றிற்கெல்லாம் பெரிய எனது பொருளே! திறந்த வெளியிலே யான் கண்ட காட்சிப் பொருளே! செல்வமே! சிவபெருமானே! இறுதிக்காலத்து உன்னை இறுகப்பற்றினேன்; இனி எழுந்தருளுவது எங்கு? என்றவாறு.

சிவபெருமானே! இறுதிக்காலத்தில் உன்னை இறுகப் பிடித்தேன்; ஆயினும், நீ என் மனமே கோயிலாக முன்னர் எழுந்தருளினை; பெறற்கரிய ஆனந்தத்தை அருளினை; அங்ஙனம் கலந்த நீ இனி எழுந்தருளுவது எங்கு என்பது கருத்து.

அறவையேன் - அற்றவனாகிய யான். தாயே தந்தையென்றும், தாரமே சுற்றமென்றும் ஒவ்வொருகாலத்து ஒவ்வொருவரை ஆதாரவாகக் கொண்டியங்குவது மக்களுடைய இயல்பு. உயிர்கொண்டு போகும்பொழுது இவர்கள் உறுதுணையாகார் என்பது விளங்கும். அப்போதுதான் தான் ஆதரவற்றவன் என்பதை ஆன்மா அறிவன். அந்த நிலையை அறிந்த அடிகள், தம்மை அறவையேன் என்று அறிவித்துக்கொள்கின்றார்கள். அன்பற்றவன் எனக் கூறுவாரும் உளர்.

இங்ஙனம் தம்மை ஆதரவற்றவனாக எண்ணும்பொழுது எம்மை உடனிருந்து இயக்கும் தலைவன் யார்? அவனிருக்கும் இடம் எங்கே? அவனால் நாம் பெறும் பயன் யாது? என்ற ஆய்வு தோன்றும். அதற்கு விடையாக அடிகள் 'மனமே கோயிலாக்கொண்டு ஆண்டு ஆனந்தம் அருளிப் பிறவிவேர் அறுத்து ஆண்ட பிஞ்ஞகா' என்று இறைவனை விளிப்பதன் வாயிலாக உணர்த்துகின்றார்கள். 'உள்ளம் பெருங்கோயில்' என்னும் திருமந்திரக்கருத்து 'மனமே கோயிலா' என்பதனுள் மிளிர்கின்றது.

சிவானந்தம் காலத்தானும் கருவிகளானும் அளந்தறிய ஒண்ணாதது ஆதலின் 'அளவிலா ஆனந்தம்' என்றார்.

சிவானந்தம் பெற்றசீவன் சிவன்வயப்பட்டுப் பசுபோதம் கெட்டுப் பிராரத்த கன்மங்களை நுகர்தலின் வினைகள் ஏறா; வினையான்வரும்பிறவி விளையாது; ஆதலால், பிறவிவேரறுத்து என்றார். ஒருகுடியுள் ஒருவன் வாழ்வதால் அக்குடியே உயரும் என்பது வள்ளுவர் கருத்து. அடிகள் வாழ்ந்ததால் அவர்குடி முழுதும் வாழ்ந்தது என்பார் என்குடிமுழுது ஆண்ட என்றார்.

பிஞ்ஞகன் - தலைக்கோலம் அணிந்தவன். அத்தலைக்கோலம் மயிற்பீலியாலானது என்பது தொன்னூல் மரபு. தலைப்பாகை அணிந்தவன் என்பாரும் உளர்.

முன்னர் 'மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே' 'தோன்றாப் பெருமையனே' என்றமைக்கேற்ப, ஈண்டும் 'எம் பெரிய பொருளே' என விளித்தார். பெரிய பொருள் என்றது உருவா ன்ன்றித் தன்மையானும் ஆம்.

திறவு - திறந்தவெளி; தொழிலாகுபெயராய் வெளியைக் காட்டிற்று. சிற்றம்பலம் திறந்த வெளியாய் இருத்தலை "ஐயர் தாம் வெளியே நின்று ஆடுகின்றாரை" என்ற பெரியபுராணப் பகுதியானும் அறிக. ஞானவெளியிலே கண்ட அறிவுருவக் காட்சி இறைவனாதலின் 'திறவிலே கண்ட காட்சியே' என்றார்.

வெளியிற்கண்ட காட்சி ஒளிக்காட்சியன்றி இருட்காட்சியா யிருத்தல் இயலாது ஆதலின், காட்சியே என்றது ஒளியை என்க. அடியேன் கண்ட காட்சியே எனக் கூட்டுக.

இறவு - இறப்பு. திருக்கோவையாரினும் 'இறவியை யார்க்கும் அறிவரியோன்' என்று இப்பொருளில் வந்துள்ளமை காண்க. உள்ள நாளெல்லாம் பாழுக்கிறைத்தேன் பரம்பர னைக் காணாதே என்றாங்கு வினைவயப்பட்டு, கலந்த இறைவனைக் காணாதிருந்தேன்; சாருங்காலத்திலே இறுகப் பற்றினேன் என்று கழிந்தகாலத்திற்கு இரங்குவாராக 'இறவியே உன்னைச் சிக்கெனப்பிடித்தேன்' என்கின்றார்.

இதனால் அளவிலா ஆனந்தம் அருளியதைக் குறித்துப் பின்னர் சிக்கெனப் பிடித்தமையைத் தெரிவித்தலின் இத்திருப் பாடல் முத்திக்கலப்பு உரைத்தலாகிய பிடித்தபத்தினதாதல் காண்க.

540 பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை யுகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
ஈசனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 7

இ - ள்: ஆணவ மலத்தின் ஆணிவேரை அறுக்கும் பழம் பொருளாகிய தன்னைப் பற்றும்வண்ணம் அடியேற்கு அருள் செய்து, என்னாற் செய்யப்படும் பூசைகட்கு உவந்து, என் மனத்துள் இடைவிடாது எழுந்தருளியிருந்து, திருவடிக் காட்சியைத் தருகின்ற செம்பொருளே! ஒளியையுடைய விளக்கே! விளக்கினுள் எரியும் செழுமையாகிய சுடர் வடிவாகிய மூர்த்தியே! செல்வமே! சிவபெருமானே! ஈசனே! உன்னை இறுகப்பற்றினேன்; இனி நீ எழுந்தருளுவது எங்கு? என்றவாறு.

அடியேற்கு அன்பை உதவி, ஞானவொளியைத் தந்து, திருவடிக்காட்சியை உதவிய சிவபெருமானே! உன்னை இறுகப் பற்றினேன்; இனி எழுந்தருளுவது எங்கு என்பது கருத்து.

ஆற்றுநீர் ஓட்டம்போல இடையறாது வருவது பிறப்பு. அதற்குக் காரணம் உயிர்களை அநாதியே பற்றியுள்ள ஆணவ மலம். அதுவே அகப்பற்றுப் புறப்பற்றுக்களுக்குக் காரணம். ஆதலின் ஆணவமலத்தைப் 'பாசவேர்' என்றார். வேரற்ற மரம் வாழாதவாறுபோல மூலமலமான ஆணவம் அறின் பற்று ஒழியும்; பற்று ஒழியப் பிறவி நீங்கும்; இத்தகைய நன்றியை உதவுபவன் இறைவனாகிய பழம்பொருள்; ஆதலின் 'பாச வேரறுக்கும் பழம்பொருள்' என்றார்.

பழம்பொருளாய இறைவன் தன்னைப் பற்றுமாறு அடியனேற்கு அருளினான். 'காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே' என்றவாறு இறைவன் தன்னைப் பற்றுமாறு நம் மனத்தில் அன்பை உதவாவிட்டால் நாம் அவனைப் பற்றி உய்யோம் ஆதலால், கருணைக்கடலாகிய இறைவன் முதலில் தன்னைப் பற்றுமாறு அருளினான் என்றார்.

மனைவியிடம் காதல், அவளுக்குச் செய்யும் தலையளிவகைகளையும், அவளைப் பெற்றார்க்கும் அவள் உடன்பிறந்தார்க்கும் செய்யும் உபசார அன்புகளையும் வாயிலாகக்கொண்டு வெளிப்படுதல்போல, இறைவனைப் பற்றிய பற்று, பூசனை செபம் தியானம் இவற்றால் வெளிப்படவேண்டுதலின், யான் இடைவிடாது பூசனை செய்வேன்; பெருமான் அதனை உகந்து என் சிந்தையுள் நின்று திருவடிக் காட்சியைத் தந்துகொண்டேயிருக்கின்றான் என்பார் 'பூசனை உகந்து என் சிந்தையுள் புகுந்து பூங்கழல் காட்டிய பொருளே' என விளித்தார்.

ஈசன் - எல்லாவற்றையும் உடையவன்.

ஆணவமலத்தை அகற்றித் திருவடிக்காட்சியை வழங்குதலாகிய முத்திக் கலப்பையும், சிக்கெனப் பிடித்தேன் எனப் பிடித்தமையையும் உணர்த்தலின் இத்திருப்பாடல் பதிகக்கருத்தோடு இயைபுடைத்தாதல் காண்க.

541 அத்தனே அண்ட ரண்டமாய் நின்ற
ஆதியே யாதுமீ றில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெரு மானே

பித்தனே யெல்லா வுயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை யல்லையாய் நிற்கும்
எத்தனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 8

இ-ள்: தந்தையே! தேவர்களாகவும் அவர்கள் வாழ்கின்ற உலகமாகவும் நின்ற முதல்வனே! ஒருசிறிதும் முடிவு இல்லாத சித்திகளை உடையவனே! மெய்யன்பர்கள் இறுகப் பற்றிய செல்வமே! சிவபெருமானே! பித்தனே! எல்லாவுயிர்களிடத்தும் கலந்து நின்று அவைகளைத் தழைக்கச்செய்து அவற்றுள் பிழைசெய்தவை அல்லையாய் நிற்கின்ற எத்தனே! உன்னை இறுகப்பற்றினேன்; இனி எழுந்தருளுவது எங்கு? சொல் என்றவாறு.

எல்லாவுயிரோடும் இரண்டறக் கலந்திருந்தும் அவைகளுள் சில பிழைசெய்யின் அவற்றின் வேறானவனாய் நிற்கும் எத்தனாதலின் உன்னை இறுகப் பற்றினேன்; இனி எழுந்தருளுவது எங்கே என்றார் என்பது கருத்து.

எல்லா உயிர்களுக்கும் இறைவன் தந்தை போல்பவன் ஆதலின் 'அத்தனே' என்றும், உலகாயும் உயிராயும் கலந்து நின்று அவற்றைக் காக்கும் முதற்பொருளாயும் இருத்தலின் 'அண்டரண்டமாய் நின்ற ஆதியே' என்றும், ஒருசிறிதும் அழிவு இல்லாமையின் 'யாதும் ஈறில்லாச் சித்தனே' என்றும், மெய்யன்பர்க்கன்றி மற்றவர்க்கு அகப்படாமையின் 'பத்தர் சிக்கெனப்பிடித்த செல்வமே' என்றும் அருளினார்.

யாதும் ஈறில்லாச் சித்தனே என்பதற்கு எப்பொருளிடத்தும் முடிவற்ற திருவுள்ளப்பாங்கு உடையவனே என்பாரும், பற்றற்ற சித்தனே என்பாரும் உளர்.

பித்தனே - பைத்தியம் பிடித்தவனே. தனக்கு ஒருபயன் கருதாது இடைவிடாமல் ஆக்குதலும், ஆக்கியவற்றைத் தத்தம் கால எல்லைவரையில் காத்தலும், அழித்தலும் இடைவிடாது இயற்றலின் 'பித்தனே' என்றார்.

இயங்குவ நிற்பவான உயிர்கள் எல்லாவற்றிலும் கலந்து வளரவும் பயன் உதவவும் செய்து உடன் கலந்திருந்தும் அவைகளும் சில தற்போத முனைப்பால் தவறிழைக்குமாயின் அவற்றோடு ஒன்றாது உடனுயிருந்தும் வேறாயிருந்தும் தவற்றினைக்கண்டு ஒறுத்தலின், 'எல்லா உயிருமாய்த் தழைத்துப் பிழைத்தவை யல்லையாய் நிற்கும் எத்தன்' என்றார். எத்தன் - ஏமாற்றுபவன்.

ஏமாற்றுபவனை இறுகப்பற்றுதலே மரபாதலின் 'சிக்கெனப் பிடித்தேன்' எனத் தெரிவித்தார்.

இவ்வண்ணம் இத்திருப்பாடல் இறைவன் எல்லா உயிருமாய்த் தழைத்து இன்பமயமாய் விளங்குதலை அறிவிப்பதால் முத்திக்கலப்பையும் சிக்கெனப் பிடித்தேன் என்பதால் பிடித்தமையையும் உணர்த்துதலின் இது முத்திக்கலப்பாகிய பிடித்த பத்தினதாதல் தெளிக.

542 பாலினை நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 9

இ - ள்: குழந்தையின் பசியை நினைந்து பாலூட்டுகின்ற தாயைக் காட்டிலும் நீ மிக அன்பு கூர்ந்து, பாவியாகிய அடியேனுடைய உடலை உருக்கி உள்ளொளியாகிய ஞானத்தைப் பெருக்கி, வற்றாத ஆனந்தமாய தேனினைச் சொரிந்து, புறத்துக்குப் புறமாகத்திரிந்த செல்வமே! சிவபெருமானே! யான் உன்னைவிடாது தொடர்ந்து இறுகப்பற்றினேன்; இனி எழுந்தருளுவது எங்கு? சொல்வாயாக என்றவாறு.

எல்லையற்ற ஆனந்தத்தை எனக்குதவி இன்பமயமாக்கிப் புறத்தேதிரிந்த செல்வமே! உன்னைத் தொடர்ந்து பற்றினேன்; இனி நீ எங்கும் செல்ல இயலாது என்பது கருத்து.

குழந்தையின் வயதையும் உடல் நிலையினையும் கால நிலையினையும் நினைந்து நினைந்து 'ஐயோ, இருபதுநாட்குழந்தையாயிற்றே, இரண்டு ஆண்டுக் குழந்தையாயிற்றே, நெஞ்சு உலர்ந்துவிடுமே, உடல் தளர்ந்துபோகுமே' என்று எண்ணியெண்ணித் தன்பாலையும் ஆவின்பாலையும் ஊட்டுவது தாயின் இயல்பு. அவளைக்காட்டிலும் நீ பரிந்து வளர்த்தனை என்பார் 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' என்றார்.

தாய் பாலையூட்டி உடலை வளர்ப்பாள்; பீரம் பேணிப் பாரந்தாங்கச் செய்வாள். உடற்கொழுப்பால் உள்ளொளியாய அறிவை மழுங்கச் செய்பவள். இறைவனோ உடலை உருக்கி

உணர்வைப் பெருக்குகிறான்; அழியாத ஆனந்தத்தை அளிக்கிறான் ஆதலால், இறைவன் தாயினுடைய பரிவைக்காட்டிலும் சிறந்த பரிவுடையனாயினான் என்க.

சிவானந்தம் என்றும் வற்றாததாய், ஒருகாலைக்கொருகால் வளர்வதாய், தேன்போல் இனியதாய் இருப்பது. அத்தகைய ஆனந்தத்தை எமக்குதவி இறைவன் தொடர்பிலான்போலப் புறமே திரிகின்றான் என்றார். புறம்புறம் திரிதல் - புறம்பாயும் புறம்பிற்குப் புறம்பாயும் திரிதல்; அதாவது மிகச்சேயனாதல். இதற்கு வேறாகக்காட்டி வேறாகாமல் அபேதமாய் நிற்பவன் என்றும், புறம்பே புறம்பே கைகொடுத்து வந்தனைந்த என்றும் கூறுவர் சிலர். காக்கும் பொருட்டுத் தாயைப்போல நான்கு பக்கங்களிலும் என்னைப் பிரியாமல் என் பின்னாலேயே அங்கு மிங்குமாக ஓடித்திரிந்த எனலும் ஆம்.

அங்ஙனம் மிகச் சேயனாய் விலகி விலகிச் செல்லுதலின் 'தொடர்ந்து பிடித்தேன்' என்றார்.

உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து என்பதால் முத்திக்கலப்பும், சிக்கெனப் பிடித்தேன் என்பதால் பிடித்தபத் தானமையும் விளங்குதல் காண்க.

543 புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காந்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ
இன்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள்: இழிந்த புலால் மணம் வீசுகின்ற உடல் துளைகள் தோறும் நெகிழ உடலையே பொன்னாலாகிய பெரிய கோயிலாகக்கொண்டு எழுந்தருளி, என் எலும்பனைத்தையும் உருக்கி, எளியனாக எழுந்தருளி ஆட்கொண்ட முதல்வனே! குற்றமிலாத மணியே! துன்பமும் பிறப்பும் இறப்பும் மயக்கமும் ஆகிய வினைத்தொடர்புகள் அனைத்தையும் நீக்கியருளிய நல்ல ஒளியே! இன்பமே! உன்னை இறுகப்பற்றினேன்; இனி எழுந்தருளுவது எங்கு? சொல்வாயாக என்றவாறு.

என் உடலிடம் கொண்டு என்னுடைய மலமாயா கன்மங் களைப் போக்கி, இன்ப வடிவாக இருந்தவனே! உன்னை இறுகப் பற்றினேன் ; நீ எங்கும் எழுந்தருள இயலாதென்பது கருத்து.

வினையின் வந்தது, வினைக்கு விளைவாயது, புனைவன நீங்கில் ஈளையும் கோழையும் பீழையுமாகப் புலால் புறத்திடுவ தாகலின் யாக்கையைப் 'புன்புலால் யாக்கை' என்றருளினர்.

இறைவன் யாக்கையையே கோயிலாகக்கொண்டு இன்ப அன்பு சுரக்கச்செய்தலால் 'புரைபுரை கனியப் பொன்னெடுங் கோயிலாப் புகுந்து' என்றருளினர்.

சிவச்சோதியை இடைவிடாது சிந்திக்கின்ற சிந்தனை வெப்பமாய் உடம்பை உருக்குதலின் 'என்பெலாம் உருக்கி' என்றருளினர்.

என் உடலின் இழிவு எங்கே? மலபெத்தனாய் அறியாமை யுள் அழுந்தி நின்று ஆகாதனவற்றையே செய்யும் அடியேன் எங்கே? இறைவனுடைய எல்லையற்ற அருளும், அதன் உயர்வும் எங்கே? என்று இறைவன் உயர்வையும், உயிரின் இழிவையும் எண்ணிப் பார்க்கும்போது இறைவன் தம்மீது வைத்த கைம்மாறு வேண்டாத கருணையினாலே இத்துணைத் தூரம் இரங்கி எளிவந்தான் என்பது புலப்படுதலின் அதனை வியந்து 'எளியையாய் ஆண்ட ஈசனே' என்கின்றார்.

மாசிலாமணி - காகபாதமும் கருப்பத்துளையவும் ஏகையும் முதலான குற்றங்களில்லாத இயற்கையான ஒளியோடு கூடிய மணியே என விளிக்கின்றார். மணிமுழுதும் ஒளி நிறைந்திருத் தல் போலச் சிவத்துவவிளக்கம் தம்மிடம் செறிந்திருத்தலைத் திருவுளத்தெண்ணி 'மாசிலாமணியே' என்றார்.

தொடக்கு - பாசபந்தம். இதனால் விளைவனவே துன்பம் பிறப்பு இறப்பு முதலாயின. தொடக்கு அறவே இவை நீங்கும். தொடக்கு அறுப்பன நீரும் நெருப்பும். நீர் அரித்து அறுக்கும்; நெருப்பு எரித்து அறுக்கும். அரித்து அறுத்தவற்றுள் எஞ்சி யிருப்பின் பின் முளைக்கவும் கூடும். எரித்து அறுத்தவற்றுள் சிறிதும் எஞ்சாது; எஞ்சினும் அங்குரியாதாதலின் 'அறுத்த சோதீ' என்று தீப்பொருளாக உருவகித்து விளித்தார்.

தொடக்கறுத்தபோது தோன்றுவது இன்பம் ஒன்றே யாதலின் 'இன்பமே' என இறைவனை விளிக்கின்றார்.

இவ்வண்ணம் இத்திருப்பாடல் இறைவன் எளிவந்து ஆட்கொண்ட பெருமையையும் இன்பமேயாக விளங்கும் அருமையையும் விளக்குதலின் முத்திக்கலப்பாகிய பிடித்தபத் தினதாயிற்று.

இப்பத்துப் பாடல்களாலும் இறைவன் திருவடியே பற்றுக் கோடாய் இருப்பவர்களுக்கு அங்கங்கே வந்து அருள்புரியும் அருமையையும், தந்தையும் தாயுமாய் ஒப்பற்ற பெரும் பொரு ளாய் எழுந்தருளி உடலிடம்கொண்டு பாசவேர் அறுத்துப் பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து பாதுகாத்து உலப்பிலா ஆனந்தத்தை உதவி இன்பவடிவாய் இருத்தலின் உன்னை நான் விடேன்; நீயும் இனி எங்கும் எழுந்தருள இயலாது என்று தம் உறுதியையும், தலைவனுடைய கடமையை யும் உணர்த்தியவாறு தெளிக.



மாணிக்கவாசகர் திருவாசகத்திற்குப்பொருள் அம்பலக்கூத்தனே என்று சொல்லிச் சிவச்சோதியிற் கலத்தல்

T. N. Jaganathan.

# 38. திருவேசறவு

[சுட்டறிவொழித்தல்]

வாதவூரடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளி யிருக்கின்றகாலத்து இறைவன் தமக்காக நரிகளையெல்லாம் குதிரையாக்கித் தாமும் குதிரைவீரனாக எழுந்தருளி ஆட்கொண்டவிதத்தை எண்ணியெண்ணி ஏசறுகின்றார்.

ஏசறவு என்பது விருப்பம், தோத்திரம், துக்கம் என்ற பல பொருள் உடையது. விரும்பியதொன்றனை அடைய நெடுநாள் முயன்று வருந்தியவன் 'வேசாறிப்போயிற்று' 'வேசாடிப்போயிற்று' என்றலும், அலைந்து களைத்தவன் 'வேசாடிவந்தேன்' என்றலும் உலகியலில் வழங்கக் காண்கிறோம். ஏசறவு அல்லது வேசறவு என்ற சொல், விருப்பங்காரணமாக விளைந்த துக்கத்தை அறிவிப்பதாதல் தெளிவு. ஆகவே, திருவேசறவு என்னும் இப்பகுதி விருப்பத்தையும் அது கிடைக்கத் தாழ்க்கின்றமையால் விளையும் வருத்தத்தையும் உணர்த்துதலின் இப்பெயர் பெற்றது. திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய திருவாரூர்த் திருவிருத்தத்தில் 'ஈசனையே நினைந்து ஏசறுவேனுக்கும் உண்டுகொலோ' எனவும், திருவாலவாய்த்திருநேரிசையில் 'என்பொனே ஈசா என்றென்று ஏத்திநான் ஏசற்றேனுக்கு' எனவும் வரும் பகுதிகளைக்கொண்டு இச்சொல் ஏசறவு எனவே வழங்கியமையும், அதுவே உலகியலில் வேசறுதலாயிற்று எனவும் துணியலாம்.

இப்பதிகம், இறைவன் வலியவந்தாட்கொண்டதும், திருவடி காட்டியதும் முதலான ஆட்கொண்டமுறைகளை அறிவித்து, அவன் அருளிய சிறப்புக்களைத் தெரித்து, தமது விருப்பமும் உறுபயனும் உரைக்கிறது. பழையவுரை, 'பாசமதறு திருவேசறவு பத்தெட்டனை நீங்காச் சுட்டறிவொழிதல்' என்ற அகத்தியச்சூத்திரத்தை எடுத்துக்காட்டி, தன்னிழப்பதனை அருளால் சாதித்தது உரைத்தல் என்னும்.

பழைய குறிப்பு சுட்டறிவு ஒழித்தல்; என்பது தன்செயல் அறநிற்றல் என்கின்றது. இதன் கருத்து, சீவச்செயல் அனைத்தும் அற்றுச் சிவச்செயலாய் நிற்றலாம். ஒன்றற்கும் பற்றாத நரியை அரசர்க்குரிய அங்கமான பரியாக்கியதுபோல, அடியேனையும் பெரிதாக்கித் திருவடிக்கீழ் வைத்த பெருமைதான் என்னே என்று

ஏசற்றுக் கூறுதல் என்பதாம். இவ்வனுபவம் தன்செயல் அற்றுத் தாமற்றபின் அன்றித் தோன்ருது ஆதலின் சுட்டறிவு ஒழித்த லாயிற்று. 'தக்கபரியாய் நரியை யாக்குதல்போல் எனைப்பெரிதாய்த் தாக்கித் தாட்கீழ் அக்கணம் வைத்தனையே என்றிரங்கல் திருவேசற வென் றியம்பலாமே' என்பது பழைய திருப்பெருந்துறைப்புராணம். இதனால் ஏசறவு-இரங்கல் என்னும் பொருளதாதல் காண்க.

முத்திக்கலப்புரைத்தலால் விளையும் அநுபவம் பரிபூரணமாக எங்கும் ஒருபடித்தாக நிறைந்து, சுட்டறிவாகிய ஏகதேசஞானத்தை விட்டு நீங்குதலாதலின் இப்பதிகம் பிடித்தபத்தின்பின் வைக்கப் பெற்றது.

## கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

544 இரும்புதரு மனத்தேனை யீர்த்தீர்த்தென் என்புருக்கிக்
கரும்புதரு சுவையெனக்குக் காட்டினையுன் கழலிணைகள்
ஒருங்குதிரை யுலவுசடை யுடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கியவா றன்றேயுன் பேரருளே. 1

இ - ள்: அலைகளையுடைய கங்கையாற்றினது ஒருசேர உலாவி வருகின்ற திருச்சடையையுடைய பெருமானே! இரும்பினை ஒத்த மனத்தையுடைய அடியேனை இழுத்திழுத்து என் எலும்பையும் உருகப்பண்ணி, உன் திருவடிகள் இரண்டிலும் ஊறுகின்ற கரும்பை ஒத்த சுவையினை எனக்குக் காட்டியருளினை; நரிகள் அனைத்தையும் பெரிய குதிரையாக்கியது அன்றோ உன் பேரருள் என்றவாறு.

இறைவன் பேரருள் நரிகளைப் பரிகளாக்கியது; அது போல, இரும்புமனமுடைய என்னைப் பலகாலும் அருகழைத்துத் திருவடிகளினின்று ஊறும் சுவை ஊட்டினை என்பது கருத்து.

தகாத நரியைத் தகுதி வாய்ந்த பரியாக்கியதுபோல, கனியாத மனத்தைக் கனியவைத்தாய் என்பதாம்.

திரை ஒருங்குலவு சடை உடையானே என மாறிக் கூட்டி, அலைகளையுடைய கங்கை தன்வேகம் அடங்க ஒருங்கு சேர்ந்து உலவுகின்ற சடையை உடையவனே! என்றவாறும். இது வேகம் கெடுத்தாண்டமை உணர்த்திற்று.

இரும்பு எளிதில் உருகாதது; வலிது; ஒளியில்லாதது; அதுபோல என் மனமும் எளிதில் கனியாதது; இளகாதது;

ஞான ஒளி மழுங்கியது என்பார் 'இரும்புதரு மனத்தேனை' என்றார்.

வெளியில் ஓடிப்போகும் குழந்தையைத் தாய் அடிக்கடி இழுத்தணைப்பதுபோல அடியேன் புறம்புறந்திரியும் இயல்பின னாதலின், என்னைப் புறம்போகவிடாது அடிக்கடி இழுத்துத் தன் திருவடிக்கண் பற்றச்செய்தான் என்பார் 'ஈர்த்து ஈர்த்து' என்றார்.

இறைவன் செய்த மாயம், இரும்புதரு மனத்தை இளகச் செய்ததுமட்டுமன்றி உணருந்தன்மையே இல்லாத எலும்பை யும் உருகச்செய்தனன் என்பார் 'என்புருக்கி' என்றார்.

இங்ஙனம் அடியேன் பரிபாகமுற்றதற்குக் காரணம் உன் திருவடிகளை நீ காட்டக் கண்டேன்; அது கரும்பின் சுவை போல இனித்தது என்பதனை 'உன் கழலிணைகள் காட்டினை; கரும்புதரு சுவை எனக்குக் காட்டினை' என்பதனால் உணர்த்தி னார். காட்டினை என்பதனை ஈரிடத்தும் ஒட்டுக.

மது உண்ட வண்டு மயங்கியதுபோல, திருவடி கண்ட யான் திருவடி இன்பமேயாய்த் தன்வசம் அழிந்தேன் என்பத னால் சுட்டறிவொழித்து, நின் பரிபூரண ஞானத்துள் அடங்கி யமை அறிவித்தலையும், நரிகளை உயர்ந்த குதிரைகளாக்கிப் பேரருளை யாம் உணர்ந்து உய்யச் செய்தாய் என்றமையின் ஏசற்று நிற்றலையும் காண்க.

545 பண்ணார்ந்த மொழிமங்கை பங்காநின் ஆளானார்க்
குண்ணார்ந்த ஆரமுதே யுடையானே யடியேனை
மண்ணார்ந்த பிறப்பறுத்திட் டாள்வாய்நீ வாவென்னக்
கண்ணார வுய்ந்தவா றன்றேயுன் கழல்கண்டே. 2

இ-ள்: இசைபோல் இனிய மொழிகளையுடைய உமா தேவியை ஒருபாகத்து உடையவனே! உனக்கு அடிமையான வர்கட்கு உண்ணத்தக்க நிறைந்த அரிய அமுதமே! எம்மை அநாதியே ஆளாக உடையானே! அடியேனை இக்கன்மபூமி யான மண்ணிற்பொருந்திய மனித்தப் பிறவியைப் போக்கி ஆட்கொள்பவனே! நீ அடியேனை வாவென்று அழைக்க [வந்து] நீ காட்டிய திருவடியைக் கண்ணாரக்கண்டு உய்ந்த படியை என்ன சொல்லுவேன் என்றவாறு.

உமையொரு பங்கா! ஆரமுதே! நீ வா என்று அழைக்க வந்து, உன் திருவடிகளைக் கண்ணாரக் கண்டு உய்ந்தேன் அன்றோ என்கின்றார்.

நீ அருட்கோலங்கொண்டு அம்மையப்பராக எழுந்தருள் என்பார் 'மங்கை பங்கா' எனவும், மங்கையின்மொழி இசை போன்று இனியவாக இருத்தலின் 'பண்ணூர்ந்தமொழி' எனவும் உரைத்தார்கள்.

உமையவள் மொழி நின் செவிக்கு இனிக்கிறது; நீ அடியார்கள் உண்ணும் நாவிற்கு இனிக்கின்றாய் என்பதாம்.

ஆர்ந்த - பொருந்திய. வினைப்போகங்களைத் துய்ப்பதற்காகப் பொருந்திய இடம் மண் ஆதலின் 'மண் ஆர்ந்த பிறப்பு' எனப்பட்டது. அதனை அறுக்க மேல்வரும் வினைகளைச் சாரா தொழித்தலும், இந்தப் பிறப்பில் வினைகள் ஏறாது தடுத்தலும், அதனால் மலவன்மை ஒடுக்குதலும் ஒருங்கே அருளினமையைப் 'பிறப்பறுத்திட்டு ஆள்வாய்' என்பதனால் உணர்த்தினார்கள்.

உழைத்தவன் ஊதியம் கேட்பது போல, எனக்கு உன் கழல்காட்டு என்று கேட்க உரிமையின்று; முதல்வன் விரும்பிய போது, அவன் கொடுத்தவற்றை விரும்பி ஏற்கும் கடமையே அடியேற்கு உளது; ஆதலால் இறைவனே நீ வா என்றதனால் வந்தேன்; நீ திருவடிகளைக் காட்டினை; காண் என்று பணித்தனை; கண்டேன் என்பார் 'நீவா என்ன உன்கழல் கண்ணாரக் கண்டு' என்றார்.

இவ்வண்ணம் நின்னருள்வழி நின்று கண்டதால் அடியேன் பெற்ற பயன், பேரின்பத்து என்றும் நிலைபெறுதலாகிய உய்தியே என்பது 'உய்ந்தவாறன்றே' என்பதால் உணர்த்தப் பெறுகின்றது.

இத்திருப்பாடலால், தாடலை போல ஆன்மா சுட்டறிவு அற்று, திருவடியாகிற பரிபூரண ஞானத்துள் அடங்கியநிலை உணர்த்தப்பெறுதலின், பதிகக்கருத்து விளங்குதல் காண்க.

546 ஆதமிலி யான்பிறப் பிறப்பென்னும் அருநரகில்
ஆர்தமரும் இன்றியே அழுந்துவேற் காவாவென்
றோதமலி நஞ்சுண்ட வுடையானே அடியேற்குன்
பாதமலர் காட்டியவா றன்றேயெம் பரம்பரனே.

இ - ள்: பெருக்கமைந்த கடலினின்றெழுந்த நஞ்சை யமுதாக்கிய தலைவா! எம்பரம்பரனே! யான் ஆதரவற்றவனாய், பிறப்பும் இறப்புமாகிற அரிய நரகில் தம்மைச் சார்ந்த உறவினர் யாருமில்லாமல் ஆழ்கின்ற எனக்கு ஆ ஆ என இரங்கி, உன் திருவடித்தாமரைகளைக் காட்டி ஆட்கொண்ட விதமன்றோ யானடைந்த பேறு என்றவாறு.

ஆதரவின்றிப் பிறப்பிறப்பாகிற நரகில் விழுகின்ற என்னைத் திருவடிகாட்டி ஆட்கொண்டதன்றே நீ செய்த உதவியும் யானடைந்த பேறும் ஆம் என்று ஏசறுகின்றார்.

ஆதம் - பற்றுக்கோடு. ஆதமிலி - பற்றுக்கோடில்லாதவன். பழுத்த மரத்தைச் சூழ்ந்து திரியும் வாவல்கள் போல, யான் இன்புறுங்காலத்து என்னைச் சுற்றித்திரியும் உறவினர் பலரும் துன்பக்காலத்து அதனைப் பகிர்ந்துண்ணார் ஆதலின் ஆதமிலி எனத் தன்னை விண்ணப்பித்துக்கொள்கின்றார். இதன் நோக்கம் இத்தகைய நிலையில் ஆ ஆ என்று உதவுபவன் நீயொருவனே என்பதை உணர்கின்றேன் என்பதாம்.

புதைசேற்றில், சிறிது சிறிதாக ஆழ்கின்றவன் ஒருவனைக் கரையில் நிற்பான் ஆஆ எனக்கூவிக் கைகொடுத்துத் தூக்கிக் காப்பதுபோலவே இறைவனும் என்னைக்காத்தனன் என்பார் 'தமர் ஆருமின்றியே அருநரகில் அழுந்துவேற்கு ஆஆ என்று உன் பாதமலர் காட்டியவாறு' எனப் பாராட்டுகின்றார்.

பிறப்பினாலும் இறப்பினாலும் விளையும் வினைகளால் எய்தப் பெறுவதாகிய நரகினைப் 'பிறப்பிறப்பு என்னும் அருநரகில்' என்றது காரணத்தைக் காரியமாகக் கூறிய உபசாரமாம்.

ஆர் தமரும் என்பதனைத் தமர் யாரும் எனப் பிரித்துக் கூட்டுக. தமர் - தம்மைச் சார்ந்தவர்.

பாதமலர் காட்டியவாறன்றே என்று திருவடி தரிசனம் பெற்றுச் சுட்டறிவொழித்து (பூரணஞானமாய்) நிறையறிவாயிருத்தலை உணர்த்துதலின் இத்திருப்பாடல் திருவேசறவு ஆதல் காண்க.

547 பச்சைத்தா லரவாட்டீ படர்சடையாய் பாதமலர்
உச்சத்தார் பெருமானே அடியேனை யுய்யக்கொண்
டெச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே அச்சோவென்
சித்தத்தா றுய்ந்தவா றன்றேயுன் திறநினைந்தே. 4

இ - ள்: பசுமையான நாவினையுடைய பாம்பையாட்டியவனே! படர்ந்த சடையை உடையவனே! உன் திருவடி மலரைச் சூடியதால் உயர்ந்த அடியார்கட்குப் பெருமானே! என் மனம் போனவழியில் குற்றம் பொருந்திய சிறுதெய்வங்களைப் பணியாமல், அடியேனை உய்யக்கொண்ட உன் அருட்டிறங்களையே எண்ணி அச்சோ! அடியேன் உய்ந்த வகை யன்றோ எனக்கு வியப்புத்தருவது என்றவாறு.

பெருமானே! என் மனம் போனவாறு சிறு தெய்வங்களை வணங்கிக் கெடாதவண்ணம் காத்த உன் பேரருட்டிறத்தை எண்ணி அடியேன் உய்ந்தவாறன்றோ எனக்கு வியப்பூட்டுவ தாகும் என்பது கருத்து.

பச்சைத் தால் - பசுமைத்தான நாக்கு. பச்சைத்தாள் எனப் பாடங்கொண்டு, தாள் என்பதற்குக் கால் எனவும், கால் என்ப தற்குப் புற்றெனவும் கொள்க எனவும், பாம்பறியும் பாம்பின கால் என்பதற்கு மு. நாராயணையங்கார்சுவாமிகள் பாம்பின் புற்றைப் பாம்பறியும் என உரைத்தமை ஓர்க எனவும் உரைப் பாரும் உளர்.

பழைய உரை, பசுமைத்தான திருவடியில் உண்மை ஞான வடிவான், அரவக் கிண்கிணியை அணிந்து ஆடுபவனே என்னும் பொருள்தரும் சத்தியபோத ஆடரவக் கிண்கிணி ப்ாதனே என உரைக்கும்.

படர் சடையாய்-நாற்றிசையிலும் படர்ந்துநிற்கும் சடையை உடையவனே; என்றது இறைவன் ஆனந்த நடனம் புரிகின்ற காலத்துச் சடையிருக்கும்நிலையை உணர்த்தியவாறும்.

பாதமலர் உச்சத்தார் - பாதமலரால் உச்சநிலையை அடைந் தவர்கள். அவர்கள் மெய்யடியார்கள். அடியார் சிவனே பரம் பொருள் என்பதனைச் சிவாகமங்களின் அறிவானும் ஆசாரிய உபதேசத்தானும் உணர்ந்து தெளிந்து என்றும் தமது உச்சி யில் வைத்துத் தியானிப்பவர்கள் ஆதலின் அவர்கட்குத் தலைவ னென்பார் 'பாதமலர் உச்சத்தார் பெருமானே' என்றார்.

உச்சத்தார் - உயர்ந்தோர் எனப் பொருள் கொண்டு, உயர்ந்தோர் திருப்பாதத்தைத் திருமுடியின்மேல் தரிக்கும் பெருமானே! எனக்கூறும் பழையவுரை.

உச்சத்தார் - வானமாகிய உச்சியிலுள்ள தேவர்கள் எனக் கொண்டு, பாதமலர் சூட்டிய தேவர்கட்குத் தேவனே எனலு மாம். பாதமலர் சூடாத தேவர்கள் தாமே பிரமமெனத் தருக்கி இறைவனுடைய முழுமுதற்றன்மையை உணர்ந்துய்யும் ஞான மில்லாதவர்கள் ஆதலின் அவர்களால் அவன் அறியப்படான் என்பதால் கூறியதாம். இது தேவர்களும் இறைவனை முதல்வ னெனப் போற்றியுய்கின்றனர் எனத் தேவர்கள்நிலை கூறியது. சிறு தெய்வம் ஏத்தாதே உய்ந்தவாறன்றே எனப் பின்வரும் பகுதியால் அடிகள் இறைவன் தம்மை ஆட்கொண்டவகை தெரிவிக்கின்றார்.

என் சித்தத்து ஆறு, எச்சத்து ஆர் சிறுதெய்வம் ஏத்தாதே உய்யக்கொண்ட உன் திறம் நினைந்து உய்ந்தவாறு அன்றே எனக் கூட்டிப் பொருள் காண்க.

இங்ஙனம் கூட்டி மரபு பிழையாது பொருள் காண விழை யாதார் சிலர், பெருமானே என்று உன் திறம் நினைந்து, சித்தத் தாறு, எச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே யான் உய்ந்தவாறு எனக்கூட்டிப் பொருள் நிரம்பப்பெறாது வேண்டிய பல சொற் களை வருவித்து இடர்ப்படுவர். இது கிடக்க.

இம்மைப்பயன்கள் பலவற்றை வேண்டி, காளியும் வீரனும் சூரனும் முதலான சிறு தெய்வங்களை வழிபடுதல் உலகினர் இயல்பு. அங்ஙனம் யான் என் மனம்போன போக்கின்படி வழி பட்டுக் கெடாமல் இறைவன் உய்யக்கொண்டான் என்பார் 'என் சித்தத்தாறு, எச்சத்து ஆர் சிறு தெய்வம் ஏத்தாதே உய் யக்கொண்ட' என்றார். எச்சம் - குற்றம். ஆர் - பொருந்திய. உய்யக்கொள்ளலாவது உலகியற்பற்றைப் போக்கி, அதற்காக வழிபடும் சிறுதெய்வ வழிபாடு முத்திக்கு நெறியாகாமையை யும் உணரப்பண்ணி, சிவஞான உபதேசம் செய்து உய்யக் கொண்டமை. உய்யக்கொண்ட எச்சத்தார் எனப் பெயரெச் சத்து அகரம் தொக்கதாகவும், உய்யக்கொண்ட உன்திறம் எனக் கூட்டுந்தகைத்தாய்த் தழாத்தொடராக நின்றதாகவும் கொள்க.

சித்தத்தார் எனப் பாடங்கொண்டு சித்தம் எனப் பொருள் கண்டு ஆர் விகுதி உபசாரம் என்பாரும் உளர்.

இவ்வண்ணம் இறைவன் உய்வித்தவாற்றை உணர்ந்து சுட்டறிவு நீக்கியமை உணர்த்துதலின் இத்திருப்பாடல் திரு வேசறவாதல் காண்க.

548 கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிறுமாந் திருந்தேனெம் பெருமானே அடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே. 5

இ-ள்: சிவாகமக்கலைஞானங்களைக் கற்றறியேன்; உன்பால் உள்ளம்வைத்துக் கசிந்து உருகேன்; ஆயினும், பிறதெய்வம் அறியேன்; நின்னருள் வாக்கின் தன்மையால், நின் நெடிய கழல்களைச் சார்ந்து இறுமாந்திருந்தேன்; எம்பெருமானே! நினது பொன்னனை திருவருள் அடியேற்கு உண்டானது, நாய்க்குப் பொன்னாலாகிய சிம்மாசனம் இட்டது போலும் அன்றே என்றவாறு.

சிவாகமக் கல்வியும், காதலாகிக் கசிந்துருகும் மனபரிபாக மும் இல்லாதவனாயினும், பிற தெய்வம் உள்ளாதிருந்தேன்; நின் உபதேசப்படித் திருவடியைச் சார்ந்து இறுமாந்திருந் தேன்; அடியேற்கு நீ அருள்செய்தது நாய்க்குப் பொற்றவிசு இட்டது போலாம் என்பது கருத்து.

கலைஞானம் - உணர்வரிய மெய்ஞ்ஞானத்திற்கு வாயிலான உவமையிலாக் கலைஞானம். அறுபத்துநான்கு என்னும் உல கியல் ஞானம் அன்றெனத் தெளிக.

கசிதல் - மனம் அன்பால் நெகிழ்தல். கசிந்து உருகேன் - அன்பால் மனம் நெகிழ்ந்து உருகேன் என்பதாம்.

திருவடி சார்தற்கேற்ற சிவாகம அறிவும், இடையீடில்லாத அன்பும் அடியேற்கு இல்லையாயினும், சிவமே பரம்பொருள்; அவன் ஒருவனே தியானிக்கத் தக்கவன் என்ற உறுதியுள்ள மட்டும் இருந்தது என்பார் 'கற்றறியேனாயிடினும் கசிந்து உருகேனாயிடினும் பிற தெய்வம் அறியேன்' என்றார். மற்று: அசைநிலை. அறியேன் என்றமையால் நீயே முதல்வன் என் பதை அறிவேன் என்றவாறும்.

ஆயின், திருவடியைச் சாரும் உபாயம் யாங்ஙனம் உணர்ந் தனை? என வினவின், அடியேனைக் குருந்தடியில் குருவாக வந்து ஆட்கொண்டபோது தேவரீர் உபதேசமொழிகளைத் துணைக்கொண்டு திருவடியே புகல் என உணர்ந்து அதனைச் சார்ந்து யாரும் பெறாத இன்பம் பெற்றேன், யாம் பெற்றது யார் பெறுகிற்பார் என இறுமாந்திருந்தேன் என்றவாறும்.

அடியேற்கு நின் பொன்னருள் (அருளியது) நாய்க்குப் பொற்றவிசு இடுமாறு அன்றே எனக்கூட்டிப் பொருள் காண்க.

இழிந்த நாய்க்குப் பொன்னாசனம் இட்டது போலாம் நீ எனக்குச் செய்த அருள் என்றவாறு. தவிசு - அம்பாரி என் பாருமுளர். யானைக்கிடுந்தவிசினை நாய்க்கு இட்டதுபோலாம் என்பது அவர்கருத்து.

இத்திருப்பாட்டில் இறைவன் செய்த அருளை வியந்து போற்றியமை கூறலின் திருவேசறவாயிற்று.

549 பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நஞ்சாய துயர்கூர நடுங்குவேன் நின்னருளால்
உய்ஞ்சேனெம் பெருமானே யுடையானே அடியேனை
அஞ்சேலென் றாண்டவா றன்றேயம் பலத்தமுதே. 6

இ - ள் : எம்பெருமானே! உடையானே! அம்பலத்தே எழுந்தருளியுள்ள அமுதமே! பஞ்சுபோலும் மெல்லிய அடிகளையுடைய பெண்களின் கடைக்கண்ணால் துன்பப்பட்டு நஞ்சுபோலும் கொடிய துன்பம்மிக நடுங்கிடுவேனாகிய யான் நின்னருளால் தப்பி உய்ந்தேன்; அடியேனை அஞ்சாதே என்று ஆண்டவாறு வியப்புடையதன்றே என்றவாறு.

பெருமானே! மாதர் கடைக்கண்ணால் வருந்தும் என்னை அஞ்சாதே என்று ஆட்கொண்டவாறு வியப்பானசெயலன்றே என்றார் என்பது கருத்து.

தகுதியற்ற என்னை ஆட்கொண்டது உன்னுடைய பெருங் கருணைக்கு எடுத்துக்காட்டு என்றவாறும்.

பஞ்சு ஆய் அடி மடவார் - செம்பஞ்சு பூசியதால் சிவப்பான அடிகளையுடைய பெண்கள் எனலும் ஆம். அவர்களுடைய அடியின் அழகும் மென்மையும் இளமையும் என்னை வசப்படுத்த, அவர்கள் வீசிய கடைக்கண் பார்வையால் துன்புற்றேன்; அத்துன்பமோ நஞ்சுபோல மிகக்கொடியது என்றவாறு. நஞ்சின் வேகந்தாக்கிய தேவர்கள் உடல் ஒளி குன்றினர்; வலியிழந்தனர். அதுபோல மடவார்கண் தாக்கின் தேசு கெட்டு அறிவு மழுங்கித் துன்பம் மிகுதலின் 'நஞ்சாய துயர்' என்றார். கூர - மிக. உய்ஞ்சேன்: உய்ந்தேன் என்பதன் மரூஉ.

மாதர்மயலிற்பட்டு மயங்கி நடுங்கியபோது அபயம்கொடுத்துக்காத்த அருளுடைமையை வியத்தலின் திருவேசறவாதல் காண்க.

550 என்பாலைப் பிறப்பறுத்திங் கிமையவர்க்கும் அறிய [வொண்ணாத்
தென்பாலைத் திருப்பெருந் துறையுறையுஞ் சிவபெருமான்
அன்பால்நீ அகநெகவே புகுந்தருளி யாட்கொண்ட
தென்பாலே நோக்கியவா றன்றேயெம் பெருமானே. 7

இ - ள் : பாலைநிலம் போலப் பசையற்றதாகிய என் பிறவியைப்போக்கி, இங்கு, தேவர்கட்கும் அறிய ஒண்ணாத தென்பாலுள்ளதாகிய திருப்பெருந்துறைக்கண் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! எம்பெருமானே! நீ என்மீது வைத்த அன்பால் என்மனம் நெகிழ அதனுட் புகுந்து அடியேனை ஆட்கொண்ட அருமையான செயல் என்பால் கருணை நோக்கம் செய்ததால் அன்றே என்றவாறு.

சிவபெருமான் என் மனம் அன்பால் நெக என் உள்ளத்துள் புகுந்து ஆட்கொண்டது, என்மீது வைத்த தனித்த கருணைநோக்காலன்றோ என்று வியந்தவாறு.

பிறவி பாலைநிலம் போல்வதாய் மேன்மேலும் காமதாபங்களை விளைவித்தலின் 'பாலைப்பிறவி' என்றார். பாலையுள் ஒவ்வோரிடத்து நீரும் நிழலும் அருகிக் காணப்படுதல்போல இந்தப் பிறவியுள்ளும் சில நேரங்களில் எழும் சிவசிந்தனையால் திருவடிச்சார்பாகிய நிழலும், திருவருளாகிற நீரும் கிடைக்கப் பெறுதலாற்கூறினார் எனலுமாம். இங்ஙனம் பெரும்பான்மையும் வெப்பந்தருவதான பிறவியை அறுத்தான் என்பார் 'என் பாலைப் பிறப்பு அறுத்து' என்றார்.

போகபூமியில் போகதனுவின்றுப்பொருந்தும் போகிகளாகிய தேவர்கள் கன்மபூமியின்கண்ணதான திருப்பெருந்துறையில் சிவஞான முதிர்ச்சியுடன் வந்து பொருந்தார்கள் ஆதலின் 'இமையவர்க்கும் அறிய ஒண்ணாத் திருப்பெருந்துறை' எனவும், அது தென்பாண்டி நாட்டின்கண்ணதாகலின் 'தென்பாலைத் திருப்பெருந்துறை' எனவும் அருளினர். அறிய ஒண்ணாச் சிவபெருமான் எனக் கூட்டலுமாம்.

அகம் அன்பால் நெக, நீ புகுந்தருளி ஆட்கொண்டது என்ச் சொற்களைக் கூட்டுக. ஆகவே, மனம் அன்பினால் உருக அவ்வன்பையும் இறைவனே புகுந்து அருளவேண்டும் என்பதாம். இத்தனை அடியார்களிருக்க இங்ஙனம் ஆட்கொண்டது என்பாலே நீ நோக்கியவாறன்றே என்க. இதனால் இறைவன் இற்றைஞான்று தன்னைச் சிறப்புநோக்குச் செய்தான் என்பது உணர்த்தியவாறும். இதனால் சுட்டறுத்தலாகிய பதிக்கருத்தும் விளங்கநிற்றல் காண்க.

551 மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா [மாய்ப்
ஒத்தானே பொருளானே உண்மையுமாய் இன்மையு
பூத்தானே புகுந்திங்குப் புரள்வேனைக் கருணையினால்
பேர்த்தேநீ யாண்டவா றன்றேயெம் பெருமானே. 8

இ-ள்: மூத்தபொருள் அனைத்திற்கும் மூத்தவனே! மூப்பையடையாத முதற்பொருளானவனே! அழிவற்ற வேதவடிவினனே! அவ்வேதங்களின் பொருளானவனே! உள்ள பொருளும் இல்லாத பொருளுமாகித் தோன்றியவனே! எம்பெருமானே! இக்கன்மபூமியில் புகுந்து உழல்கின்ற என்னை நீ கருணையால் பெயர்த்து ஆட்கொண்டவாறன்றே வியப்பு என்றவாறு.

வினைக்கீடாகப்பிறக்கும் இப்பூமியில் பிறந்து இறந்து உழல்கிற என்னை, அங்ஙனம் பிறவாவண்ணம் ஆட்கொண்ட தன்றோ வியப்பு என்பது கருத்து.

உலகில் காணப்பெறும் பொருள்களுள் காலம் ஒன்றே எல்லாவற்றையும் அளப்பதாய், தான் அளக்கப்படாததாய் நெடிது இடையறாது நிற்பது. அதற்கும் மூத்தவன் இறைவன் என்பது. காலங்கடந்தவன் என்றவாறும்.

அங்ஙனம் மூத்திருப்பினும், மூப்பிற்கு அடையாளமான நரை திரை முதலிய தீமைகள் தீண்டப்பெறாத முதற்பொருள் என்பது 'மூவாத முதலானே' என்பதாலுணர்த்தப்பெற்றது. அதாவது எல்லாருக்கும் எல்லாவற்றிற்கும் மூத்தவனாக இருந் தும் அருளுடலால் மூப்படையாதவனே என்றதாம்.

இறைவனைப்போல அவனருளிய ஞான வடிவான வேத மும் முடிவற்றதாகலின் 'முடிவில்லா ஒத்தானே' என்றார். ஒத்து - ஞானம். பொருள் - வேதங்களிற் சொல்லப்பெறும் ஞானவடிவான பொருள்.

உண்மை - என்றும் அழியாது நிலைத்த பொருள். அது சத்து. இன்மை - தோன்றிநின்று அழிதற்பாலனவாகிய நிலை யற்ற பொருள். அவை சடப்பொருள். இவ்விருவகையன்றி உலகிற்பொருள்கள் யாதொன்றும் இல்லை ஆதலின் இவ் விரண்டாகவும் காட்சியளிப்பவன் இறைவன் என்பார் 'உண் மையுமாய் இன்மையுமாய்ப் பூத்தானே' என்றார். நிலையும் பொருள்களும் நிலையாப்பொருள்களுமாகிய இவ்விரண்டிலும் கலந்து அவைகளைத் தோற்றுவிக்கின்றான் என்பதே கருத்தாம். உண்டென்பார்க்கு உளனாகவும், இல்லையென்பார்க்கு இலனாக வும் இருத்தலின் இங்ஙனம் கூறினார் எனலுமாம்.

இங்கு என்ற இடச்சுட்டு கன்மநுகர்ச்சிக்குரிய இப்பூமியில் என்பது தோன்றநின்றது. புரள்வேனை - வினைக்குவியலிற் கிடந்து புரள்கின்ற என்னை. உடம்பிற்றிக்கதுவியவன் புரள் வதுபோல யானும் வினை கொளுத்தப் புரளுகின்றேன் என்ற தாகக் கொள்க.

அடியேன் ஒரு கைம்மாறும் செய்ய வன்மையில்லேன் என் பதையும், பரிபாகமில்லாதேன் என்பதையும் அறிந்துவைத்தும் என்மீது எழுந்த கருணையொன்றே காரணமாகக்கொண்டு உள்ளத்துப் புகுந்து, என் பிறவியைப் பேர்த்து ஆண்டது வியப்பு என்க.

இத்திருப்பாடலும், போர்த்து, கருணையால் ஆண்டவாறு வியத்தலின் திருவேசறவாதல் காண்க.

552 மருவினிய மலர்ப்பாத மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதொறு மிகவலறிச் சிவபெருமான் என்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா
றருளெனக்கிங் கிடைமருதே யிடங்கொண்ட அம்மானே.

இ - ள்: திருவிடைமருதூரையே இடமாகக்கொண்டு எழுந்தருளியுள்ள மகாலிங்கமூர்த்தியே! அடைதற்கு இனிய மலர்போலும் திருவடிகள் அடியேன் மனத்தில் வளர்தலால் மனம் உருக, தெருக்கள்தோறும் சிவ சிவ என்று அலறிக் கொண்டு சிவபெருமான் என்று தோத்தரித்து அள்ளிக் குடித்த நின் பரங்கருணைத் தடங்கடலில் தோயும்வண்ணம் எனக்கு அருள்வாயாக என்றவாறு.

மகாலிங்கப்பெருமானே! திருவடிகள் என் மனத்தில் வளர் தலால் என் மனம் உருக, தெருக்கடோறும் சிவசிவ என்று அலறிக்கொண்டு புகழ்ந்து, பருகக் கிடைத்த நின் அருட் கடலில் மூழ்கும்வண்ணம் அருள் என்று வேண்டியவாறும்.

எல்லா உயிர்களும் தம் வினைப்போகம் அற்ற காலத்து, சிவனருளே கண்ணாக இருந்து கண்டு அடைதற்குரியதாக மென்மையும் மணமும் உடையதாதலின் இறைவன் திருவடிகளை 'மருவ இனிய மலர்ப்பாதம்' என்றார்.

அத்தகைய திருவடிகள் நின் கருணையால் என் மனத்து வந்து புகுந்து அதுவாக வளரலாமேயன்றி அடியேனை வைத்துப் பாதுகாக்க இயலாதென்பார் பாதத்தின் செயலாகப் ' பாதம் மனத்தில் வளர்ந்து ' என்றார்.

அதனால் விளைந்த பயன் கருங்கல் மனமும் தானாகவே கரைந்து உருகியது என்பதாம்.

மனம் தன் தன்மை கெட்டு நெகிழ்ந்ததால் சிவபெருமான் என்று பலகாலும் சொல்லித் தெருவுதோறும் அலறினேன் என்றார். இது உயிர்முனைப்பற்றுச் சிவபோதமிக்கமை கூறியது.

சிவகருணை எல்லாவற்றிலும் மேலானதாய், எல்லாரையும் உய்யக்கொள்ளுதலின் 'பரங்கருணை' எனப்பட்டது.

இதுவரை பரங்கருணை எனக்குப் பருகக் கிடைத்ததே அன்றித் தோயக் கிடைக்கவில்லை. அதற்குக் காரணம் நின் கருணைக் குறைவு அன்று, என் பரிபாகக் குறைவே. இனி,

எனக்குப் பரிபாகத்தை முற்றுவித்து, கருணைக்கடலிலேயே மூழ்கித் திளைக்கும்படிச்செய் என்று வேண்டிக்கொள்கின்றார்; 'பரங்கருணைத் தடங்கடலில் படிவு ஆமாறு அருள்' என்று.

இவ்வண்ணம் கருணையைத் தடங்கடலாகவும், சிவபோகத்தைத் தான் முழுதுங்கெட்டு அமிழ்ந்தித் திளைக்கும் ஆனந்த நீராகவும் அனுபவித்து அறிவித்தலின் இத்திருப்பாடல் சுட்டறிவொழித்தலாகிய திருவேசறவாதல் காண்க.

553 நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே.

திருச்சிற்றம்பலம்

இ - ள்: ஓ! நானே தவம்புரிந்தேன்; சிவாயநம எனத் திருவைந்தெழுத்தைச் செபிக்கப் பெற்றேன்; தேனாகவும், இனிய தேவாமுதமாகவும் எனக்கு இனிக்கும் சிவபெருமான் தானாகவே எளிவந்து எழுந்தருளி என்னுள்ளம் புகுந்து அடியேனுக்கு அருள்வழங்கினான்; ஆதலால் என்னுயிர் இவ்வுடலில் வாழும் வாழ்க்கை வீணான அடயோகங்களால் ஒறுத்து வெறுப்பதற்கானதன்று; பெரும்பயனை எளிமையிற் கிடைக்கச்செய்யும் சாதனமாயிற்று என்றவாறு.

சிவபெருமான் தாமே எழுந்தருளிவந்து என் மனத்தில் இருந்து அருள்செய்தான். ஆதலால், எனக்கு இந்தப் பிறவி கிடைத்ததால் பெரும்பயனேயன்றித் துன்பம் அன்று; ஆகவே அதனை ஒறுத்து வெறுக்கவேண்டாம் என்பது கருத்து.

சிவாயநம எனப்பெற்றமையால் மண்ணிலே பிறந்த இப் பிறவிதான் வாலிதாம் பிறவி என்ற ஆனந்த நிறைவு தோன்ற அதனால் 'நானேயோ தவம் செய்தேன் (அதனால்) சிவாயநம எனப் பெற்றேன்' என்று வியக்கின்றார்கள். ஓ: மகிழ்ச்சிக் குறிப்பு.

தேனாய் இன்னமுதமுமாய்ச் சிவபெருமான் தமக்கு அனுபவத்திற்குப் புலனாதலை விண்ணப்பிக்கின்றார்கள். இதன் விளக்கம் முன்னரே கூறப்பெற்றது.

ஊன், ஆகுபெயராக உடலை உணர்த்திற்று. உயிர் உடலோடுகூடி வாழும் இவ்வாழ்க்கை, காட்டில் உறைந்தும் காய் இலை தின்றும் கதிதேடி அலைவதற்காக அன்று; தைலதாரை

போல இடைவிடாது அன்பு செய்வதால் எளிமையான முறையில் சிவஞானம் பெற்றுச் சிவபோகத்தில் அழுந்துவதற்கே எனப் பிறவிப்பயனைப் பேசுவார் 'ஊனுரும் உயிர்வாழ்க்கை ஒறுத்து வெறுத்திட அன்று' என்றருளினார். இதனால் உடல் நோகாமலே உய்தியடையும் உபாயம் உணர்த்தப்பெற்றமை காண்க.

இறைவன் தானேவந்து உளம்புகுந்தமையால் தேனாய் இன்னமுதமுமாய் அனுபவத்திற்குப் புலனாமையின் தம் சுட்டறிவொழித்துப் பரிபூரணமாயிருந்ததை விண்ணப்பித்தலின் இத்திருப்பாடல் இப்பத்திற்கு இயைந்த பொருட்சிறப்புடையதாதல் தெரிக.

இங்ஙனம் இப்பத்தானும் சிவபெருமான் நரியைக் குதிரையாக்கியும் சீரடியார்கட்குப் பேரின்பமளித்தும் திருவடிகாட்டியும் புறந்தொழாத உறுதியை உதவியும், உலக போகங்களில் தோயாதவண்ணம் காத்தும், அடியேங்கட்கு அருள்வழங்கிச் சிபஞ்சாக்கர அனுபவம் ஒன்றாலேயே இணையில்லாத இன்பம் துய்க்கவைத்த அருமையை வியந்து அடிகள் ஏசறவுறுகின்றார்கள்.



ஞானத்தன்னை நல்கும் பெருமைசால்
தேனமர்சோலைத் திருவாரூரிது

# 39. திருப்புலம்பல்

[சிவானந்தமுதிர்வு]

குருநாதன் ஆணையின்வண்ணம் தில்லையைநோக்கி எழுந்தருளுகின்ற திருவாதவூரடிகள், இடையிலே திருவாரூரை அடைந்து, தமக்குத் திருவடிகாட்டும் கருணைத் திறம் காலநீட்டித்தலைக் கருதித் திருப்புலம்பலாகிய இதனை அருளிச்செய்கின்றார்கள்.

'புலம்பே தனிமை' என்பது தொல்காப்பியச் சூத்திரம். தனக்கு உறுதுணையாவன இவை என்று எண்ணியவைகள் தம்மைவிட்டு விலகுதலால் விளைந்த தனிமை. இது தனிமையால் விளைந்த வாய் விட்டுப் புலம்புவதாகிய செயலை உணர்த்திற்று.

உலகியலில் காதலிக்கப்பட்டதொரு பொருள் கைநழுவிப் போவதால் புலம்பு விளைவதைப் பார்க்கிறோம். அப்புலம்பலின் பயன் வெறுந்துன்பநுகர்ச்சியாய் முடியும். நமக்குச் சார்பான மலமாயை கன்மங்களை விட்டுப் பிரிதலினால் விளைகின்ற தனிமையின் பயன் பேரின்பமாகவிளையும். இங்ஙனம் அடியேன் பிரிந்துய்ய வழிசெய்த திருவருளை நினைந்து, அதனோடு இடைவிடாது உறையும் சிவபோகத்தை விரும்பிக் களிப்புரை கூறச்செய்யும். ஆகவே இப்புலம்பல் சிவானந்த முதிர்ச்சிவேண்டிக் கூறிய களிப்புரையாம் என்க.

முற்பதிகத்துச் சுட்டறிவொழித்துப் பரிபூரணமான சிவானந்தக்கடலில் திளைத்த ஆன்மா அவ்வானந்தத்தால் வாயில் வந்தபடியெல்லாம் சிவனருளைக்குறித்துப் புலம்புதலை உணர்த்துதல்காண்க.

"சாக்கிராதீதத் தனித்திருப்புலம்பல், நீக்கமிலாத சிவானந்த நிலை" என்பது அகத்தியச் சூத்திரம். முற்பதிகத்தில் சுட்டறிவொழிந்து, அதுவாகப் பெற்ற பேரின்பப் பொருளாகி அடியேன் மற்றொன்றறியேன் என்னும் ஆனந்தம் பெற்றதற்கு உருக்கம் பெற்றிலேன் என்ற சிவானந்த அநுபூதி உரைப்பது இப்பகுதி என்பது பழையவுரை. இதன்கருத்து, பெற்ற சிவானந்தம் முறுகி அது அதுவாயே இருக்கப்பெறுதலை விழைவது என்பதாம்.

திருவாசகக்குறிப்பு, சிவானந்த முதிர்வு அதாவது சிவானந்தம்பெற இச்சை என்னும். இதன் கருத்துச் சிவானந்தம்பெற்றும் அது முறுகி முதிராமையால் இரங்கிக் கூறியதாம்.

"கரைந்துருகும் பேரன்புன் கழலிணைக்கே கற்றுவின் மனம்போ லென்றும், திருந்தும்வகை எனக்கருள்க எனக்கேட்டல் திருப்புலம்ப லாகும்" என்பது பழைய திருப்பெருந்துறைப்புராணம்.

## கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

554 பூங்கமலத் தயனெடுமால் அறியாத நெறியானே
கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறுவெண் ணீறுடை
ஓங்கெயில்சூழ் திருவாரூ ருடையானே அடியேனின்
பூங்கழல்க ளவையல்லா தெவையாதும் புகழேனே. 1

இ - ள்: செந்தாமரை மலர்மேல் இருக்கும் பிரமனும், திருமாலும் அறியாத நெறிக்கண் விளங்குபவனே! கோங்கி னரும்புபோலும் குவிந்த தனமுடைய உமாதேவியாரை ஒரு பாகமாக உடையவனே! வெண்மையான திருநீற்றை அணிந் தவனே! உயர்ந்த மதில்கள் சூழ்ந்த திருவாரூருடையானே! அடியேன் தேவரீருடைய திருவடிகளையன்றி வேறு எவற்றை யும் ஒரு சிறிதும் புகழேன் என்றவாறு.

அடியேன் நின்திருவடிகளையல்லாது வேறொன்றையும் ஒரு சிறிதும் புகழேன் என்பது கருத்து.

மாலும் அயனும் அறியார் என்றது தந்தையறிவு மகன் அறிவு என்ற முறைமையை விளக்கியது. தந்தையாகிய திரு மால் அறியாததுபோல மகனாகிய பிரமனும் அறியானாயினன் என்பதாம்.

நெறி என்றது ஞானத்தை. அவர்களிருவரும் பதவிகளில் இருந்து படைத்தலும் காத்தலுமாகிய தொழில் புரிபவர்களாத லின், அவர்கட்குப் பதவியே பெரிதாகத் தோன்ற இறைவனை உள்ளவாறுணர வாயிலாகும் சிவஞானம் தோன்றாமையின் 'அறியாத நெறியானே' என்றது. நெறி - அன்புநெறி என்பாரு முளர். மலரான் முன்னாட் பணிந்தேத்தியமையானும் திருமால் கண்மலரவைகொண்டு கழல்பூசித்தமையானும் அவ்விருவரும் அன்புநெறியறியார் எனல் பொருந்தாமையறிக.

கோங்கு அலர் சேர் குவி முலையாள் என்பதனைக் கோங்கு சேர் முலை, அலர்சேர் முலை, குவிமுலை எனக்கூட்டிப் பொருள் கொள்க. கோங்கு என்பது முதலாகுபெயராகக் கோங்கின் அரும்பை உணர்த்திற்று. அதுவே முலைக்கு உவமையாவது

என்க. 'குருவளர் பூங்குமிழ் கோங்கு பைங்காந்தள் கொண்டு ஓங்குதெய்வ மருவளர் மாலை' என்ற கோவைத் திருவாசகமும் காண்க.

அலர் சேர் முலை - பூக்களை அணிந்த முலை. குவிந்த முலை; அதனை உடையாள் உமாதேவி என்க. கோங்கரும்பினது அலர் சேர்தற்குக் காரணமான முலையினையுடையாள் என்பாரு முளர். அம்மையின் முலைக்கு ஒப்பாகமாட்டாமையின் கோங்கு அலராயிற்று என நயமும் காண்பர்.

திருவும் ஆரும் பூசித்து உய்ந்த தலமாதலின் திருவாரூர் ஆயிற்று என்க. திரு - லட்சுமி. ஆர் - பூமி.

பூங்கழல்கள், தானியாகுபெயராகத் திருவடிகளை உணர்த்தின. எவையாதும் புகலேனே என்பது உறுதி உரைப்பது.

சிவானந்தமுதிர்வில் அவ்வானந்தம் அன்றி, வேறெதுவும் புலனாகாமையின் புகழ்வனவும் போற்றுவனவும் அவையாதலை உணர்த்தலின் இத்திருப்பாடல் சிவானந்தமுதிர்வில் புலம்பிய தாயிற்று.

555 சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்
படையானே பரஞ்சோதீ பசுபதீ மழவெள்ளை [ஞன்
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையாய் அடியே
உடையானே உனையல்லா துறுதுணைமற் றறியேனே. 2

இ - ள்: சடையையுடையவனே! தழற்கண் ஆடுபவனே! விளங்குகின்ற மூவிலைச் சூலமாகிய படைக்கலத்தையுடையவனே! பரஞ்சோதீ! பசுபதீ! இளமைபொருந்திய வெண்மையான இடபத்தை வாகனமாகவுடையவனே! விரிந்த சோலைகள்சூழ்ந்த திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருப்பவனே! என்னை உடையானே! அடியேன் உன்னையன்றி உற்றதுணையாக மற்று எவரையும் அறியேன் என்றவாறு.

என் உயிர்த்துணை ஆவான் சிவனே என்ற தேற்றம் உரைத்தவாறு.

சடையானே முதலான விளிகள் இறைவனுடைய சிறப்பான அடையாளங்களைச் சொல்லி அழைத்தனவாம்.

தழலாடீ - சர்வசங்காரகாலத்து எல்லாவற்றையும் அழித்து அந்த யுகாந்தத்தீயில் மகாசங்கார நடனம் புரிபவன் என்பதாம். தழலைக் கையில் ஏந்தி ஆடுபவனே எனச் சில சொல் வருவித்துரைப்பாரும் உளர்.

தயங்கு - விளங்குகின்ற.

அடியேன் நான் அறியேன் எனக் கூட்டுக. உறு துணை - துன்பம் வந்தகாலத்து உதவிசெய்யும் உற்றதுணை.

சிவானந்தமுதிர்வில் சிவனையன்றி வேறெதுவும் தோன்றாமையையும், துணையின்மையையும் உணர்த்துதலின் பதிகக் கருத்து தெற்றென விளங்குதல் காண்க.

556. உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்
[டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. 3

திருச்சிற்றம்பலம்

இ - ள் : உறவினர்களை யான் விரும்பேன்; எனக்குச் சொந்தமான ஊர் இது, பேர் இது என்பனவும் விரும்பேன்; கற்றவர்களையும் விரும்பேன்; படிப்பனவும் இனிப்போதும்; திருக்குற்றாலம் என்னும் தலத்தில் விரும்பி எழுந்தருளியிருக்கும் குற்றாலச் சபாபதியே! இளங்கன்றோடு கூடிய பசுவின் மனம்போல, ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த உன் திருவடிகளுக்கே கசிந்துருக வேண்டுவேன் என்றவாறு.

உற்றார், ஊர், பேர், படித்தவர்கள், படிப்பு ஒன்றுமே வேண்டாம்; உன்திருவடியைப் பற்றிநின்று மனங்கசியும் வாய்ப்பொன்றளித்தால் அதுவே போதும் என்று வேண்டுகின்றார்.

உற்றார் - அண்ணன் தம்பி மாமன் மாமி முதலிய சுற்றத்தார். அவர்களை விரும்பின் அவ்விருப்பம் மேலும் பாசகன்மங்களுக்கு ஏதுவாய்ப் பிறவிக்கு வாயிலாதலின் வேண்டேன் என்றார். முன்னரும் 'சுற்றமென்னும் தொல்பசுக் குழாங்கள், பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்' என உற்றாரால் விளையும் ஊறுணர்த்தினமை காண்க.

முற்றத்துறந்த துறவிகளுக்குங்கூட யான் பிறந்த ஊர் எனின் தன்னையறியாத விருப்பம் விளைவதைக் காண்கிறோம். ஆதலின், அதுவும் பற்றிற்கு ஏதுவாதலின் அதனையும் வெறுக்கின்றார். பேர் - புகழுமாம்.

கற்ருர் தம் கல்விவன்மையால் நெறியல்லா நெறிகளையும் நன்னெறியெனச் சாதிப்பவர்கள் ஆகையால் அவர்களையும் வெறுத்தார். கற்ருர் என்றது ஈண்டுக் கருவிநூலும் உலக நூலுமாகிய பாசநூல்களை ஓதியவர்களை என்க. சைவநூல் ஓதியவர்களை வெறுத்திலர் என்க.

கற்பனவும் இனி அமையும் - கல்வி மேன்மேலும் குதர்க்க ஞானத்தையும் விதர்க்க ஞானத்தையும் விளைவித்தலின் அதனையும் அமையும் என்ருர். இதனை முன்னர்க் 'கல்வி என்னும் பல்கடற் பிழைத்தும்' என்றமை காண்க.

தென்னுட்டிலுள்ள ஐந்து அம்பலங்களில் குற்ருலமும் சித்திர அம்பலமாய் ஒன்ருதலின் அங்கே எழுந்தருளியுள்ள இறைவனைக் கூத்தா என்ருர்.

குரை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த திருவடி.

கன்ருேடு கூடிய பசு, கன்றையே எண்ணிக் கசிவதுபோல யானும் இடைவிடாது கசிந்துருகவேண்டுவன் என்கின்ருர்.

சிவஞானச்செய்தியுடையோர் என்றும் காதலாகிக் கசிந்து உருகுதலை வேண்டுவராதலின், அதனை விளக்கும் இத்திருப் பாட்டும் சிவானந்தமுதிர்வு உரைப்பதாயிற்று.

எல்லாப்பதிகங்களும் பப்பத்தாயமைந்திருக்கச் சிவானந்த முதிர்வு உரைக்கும் இதை மட்டும் மூன்ருய் அமையச்செய்த திருவருள் சிவானந்தமுதிர்வு விரித்துக் கூற ஒண்ணுமையைத் தெரிவித்தற்குப்போலும் என்க.

# 40. குலாப்பத்து

[அநுபவம் இடையீடுபடாமை]

வாதவூரண்ணல் தில்லைக்கு எழுந்தருளியபொழுது, திருத்தில்லையின் விளக்கத்தையும், பெருமானது திருவோலக்கச் சிறப்பையும் கண்டு, சிவாநுபவம் இடையீடுபடாமையை உணர்ந்து உளங்கனிந்து இப்பத்தினை அருளிச் செய்கின்றார்கள்.

குலாவுகின்ற பத்துப் பாடல்களைக்கொண்ட பகுதி என்பது இதன்பொருள். சிவனடியையன்றிச் சிந்தைசெய்யேன் துதியேன் என்ற உறுதிபூண்ட அடிகள், அவனலாது துணைமற்றின்மையை ஓர்ந்து, அவனடிக்கே கற்றாவின்மனம்போலக் கசிந்துருகவேண்டி நின்று, அங்ஙனம் பெற்று அவனை அடைந்து குலாவுகின்ற நிலையை உணர்த்துதலின் குலாப்பத்து எனப் பெயர்பெற்றது. தலைவனைத் தனித்துநேர்ந்த தலைவி இடையீடின்மையையுணர்ந்து தலைவனோடு கூடிக்குலாவுவதுபோலச் சிவானந்தம் முதிர்ந்தநிலையில் தில்லையாண்டானோடு குலாவுதல்கொண்டேன் என்கின்றார் என்க. குலாவுதல் - விளங்குதல் என்பாரும் உளர்.

"பாரம்பரியமாந் திருக்குலாப் பத்து, அநுபவம் இடையீடுபடாமை" என்பது அகத்தியச் சூத்திரம். இதன் பொழிப்பாகப் பழையவுரை கூறுவது, 'முற்பதிகத் திருவருளன்பை உகந்தேயான், ஆனந்தம்பெறல் இன்றோ அன்றோ? நடனங்கண்டு நல்விழி பெற்றமை இன்றோ? என்றும் உண்டு என்று உருகி அருள்வதான சிவாநுபூதி என்னும். இதன் கருத்து, திருவருளன்பை விரும்பிய யான் சிவானந்தம் பெற்றேனோ இல்லையோ? நடனங்கண்டு விழி பெற்ற பயனைப்பெற்றேன்; அது என்றுமுள்ள மகிழ்ச்சி என்பது.

திருவாசகத் திருவுள்ளக்கிடை, குலாப்பத்தாவன அநுபவம் இடையீடுபடாமை; அதாவது தன் செயலறநிற்றலென்னும். இடையிடை விட்டுவிட்டுப் பற்றாமல் என்றும் பற்றி நிற்பதால் ஒருபடித்தான இன்பவெள்ளத்தில் திளைத்துக் களிப்புமிக்கு இன்பத்திலிருத்திய தலைவனோடு குலாவும்பத்து இது எனல் தெளிக.

பழையபுராணம், "விரும்பு சிவானந்த வெள்ளம் விளைந்து தில்லை நாயகனை மிகக்கொண்டாடி, நிரம்பு மனக்களி மிகுத்த இறுமாப்பே குலாப்பத்தாய் நிகழ்த்த லாமே" என்பது.

இதனால் குலாவுதல் இறைவனைக்கொண்டாடி அதனால்விளையும் மனக்களிப்பால் உண்டாம் இறுமாப்பு என்பது புராண ஆசிரியர் கருத்தாதல் காண்க.

## கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

557 ஓடுங் கவந்தியுமே உறவென் றிட் டுள்கசிந்து
தேடும் பொருளுஞ் சிவன்கழலே யெனத்தெளிந்து
கூடும் உயிருங் குமண்டையிடக் குனித்தடியேன்
ஆடுங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. 1

இ - ள் : அடியேன் திருவோடும் கௌபீனமுமே உறவாக எண்ணி மனம் கசிந்து, எம்மால் தேடப்படும் பொருளாவதும் சிவபெருமானுடைய திருவடியே என்று தெளிந்து, உடலும் உடற்கண்ணுள்ள உயிரும் குமண்டையிட, வளைந்தாடுகின்ற தில்லையாண்டானைக் குலாக்கொண்டேன் அன்றோ என்றவாறு.

அகப்பற்று புறப்பற்றெலாம் ஒழித்து, எம்மால் தேடப்படும் பொருள் சிவன் சேவடியே எனத் தெளிந்து, தில்லைக் கூத்தனோடு குலாவுதலைக் கொண்டேன் அன்றோ என்பது கருத்து.

அயலார் இடுகின்ற பிச்சையை ஏற்று உண்ணத் திருவோடும், பிறர்கண்டு நாணுதிருக்கக் கோவணமுமன்றி வேறு எதனையும் எவரையும் உறவாகக் கொண்டிலேன் என்பார் ' ஓடும் கவந்தியுமே உறவென்றிட்டு ' என்றார்.

தேடும் பொருள் - நம்மால் தேடப்படுகின்ற பொருள். தெளிந்து - ஆசாரிய உபதேசத்தால் தேறி.

கூடு - உடல். உயிர் இருத்தற்கு உரிய கூடுபோல்வதாகலின் அதனை உவமவாகுபெயராகக் கூடு என்றார்.

குமண்டையிட - கூத்தாட. குமண்டை - ஒருவகைக் கூத்து. ஈண்டுக் கூத்து என்னும் பொதுமையுணர்த்தி வந்தது. இடக்கொண்டு அன்றே எனக் கூட்டுக.

குனித்து ஆடும், தில்லையாண்டானைக் குலாக்கொண்டு அன்றே எனக்கூட்டி, குனிந்தாடுகின்ற தில்லைநாதனைக் குலாவுதல் கொண்டேன் அன்றே எனப் பதப்பொருள் காண்க. குலா-முதனிலைத் தொழிற்பெயர்; குலாவுதல் என்பதுபொருள்.

கொண்டு - கொண்டேன். 'டவ்வொடு உகரவும்மை நிகழ்பு அல்லவும்' என்றதால் டு என்னும் தன்மை ஒருமை விகுதி இறந்தகாலத்தில் வந்தது.

இத்திருப்பாட்டில், அடியேன் என உடலையும் உயிரையும் கூடி நின்றும், கூடும் உயிரும் குமண்டையிட என அவற்றை வேறாக எண்ணியும் கூறுதல் காண்க.

குனித்தலை அடிகள்செயலாக்கிக் குமண்டையிடக் குனித்துக் கொண்டன்றே என்பாரும் உளர். குனித்தல் - வளைத்தல். "குனித்த புருவமும்" என்ற இடத்தும் இப்பொருட்டாதலை எண்ணுக. குலாத்தில்லை எனத் தில்லைக்கு அடையாக்கிக் கூற லும் உண்டு. அது அத்துணைச் சிறப்பின்மை தெளிக.

இங்ஙனம் இத்திருப்பாடல் இருவகைப்பற்றையுந்துறந்து இறைவன் திருக்கழலையே பற்றி, தில்லையாண்டானைச் சார்ந்து குலாக்கொண்டேன் என்பதால் அனுபவம் இடையீடுபடாமை உணர்த்தும் குலாப்பத்தினதாதல் காண்க.

558 துடியே ரிடுகிடைத் தூய்மொழியார் தோள்நசையால்
செடியேறு தீமைகள் எத்தனையுஞ் செய்திடினும்
முடியேன் பிறவேன் எனைத்தனதாள் முயங்குவித்த
அடியேன் குலாத்தில்லை யாண்டானைக்கொண்டன்றே. 2

இ - ள்: 'அடியேன் என்னைத் தன் திருவடிகளிற் கலந்து இன்புறச்செய்த தில்லைநாதனைக் குலாக்கொண்டேனன்றே! அதனால் அடியேன், உடுக்கையை ஒத்த சிறிய இடையையும் தூய மொழியினையும் உடைய மாதர்கள்தோள்மேற்கொண்ட விருப்பத்தால் சிறு தூறுபோல்வதான தீமைகள் எவ்வளவு செய்யினும் இறவேன்; மீளவும் பிறவேன் என்றவாறு.

தில்லைநாதனோடு குலாவுதல் கொண்டேனாதலின் எனக்கு மரணமும் பிறப்பும் இல்லை; அழியாப்பதம் கிட்டியது என்பது கருத்து.

என்னைத் தாள் முயங்குவித்த தில்லையாண்டானைக் குலாக் கொண்டு அன்றே! அதனால் நசையால் தீமைகள் எத்தனை யும் செய்திடினும் முடியேன் பிறவேன் எனக் கூட்டுக.

மாதர்களிடம் ஆடவர்க்கு விருப்பம்விளைக்குங்கருவிகளாக விளங்குவன இடையும் மொழியும் தோள்களும் ஆம். இடை புணர்ச்சியின்பத்தையும், மொழி புணர்ச்சியிற்குறைந்த காதலை

நிறைவித்து என்றும் பிரியாதிருக்கச் செய்யும் ஆற்றலையும், தோள்கள் காட்சிக்கும், ஊற்றிற்கும் இனியனவாய் வசிக்கும் தன்மையையும் உணர்த்தின. இவைகளையே மாதர்கள் ஆடவர் களை அடக்கியாளும் கருவிகளாகக்கொண்டுள்ளனர். அவற்றில் வைத்த ஆசையால் மக்கள் செய்யும் தீங்கு எண்ணிலாதன. ஆகவே ஆடவர்களிற்புறம்பானவனு யான்; யானும் செய்தேன் ஆனாலும், தீமைகளால் விளையும் பிறப்பு இறப்புக்கள் எனக்கு இல்லை; எனக்கு என்றும் இன்பமேவும் முத்தியே என்றார்.

' செடியேறு தீமைகள் - சிறுதூறுபோலக் கிளைத்துப்பரவும் தீவினைகள். "செடியாயவினைதீர்ப்பான்" என்றதும் இப்பொருட் டாதல் காண்க. இதற்கு, பாவமிக்க தீவினைகள் எனப்பொருள் கூறுவாரும் உளர். தீவினைகளே பாவமாதலின் பாவம் மிக்க தீவினைகள் என்பதிற் பொருட்சிறப்பின்மை தெளிக.

முயங்குவித்த - புணரச்செய்த; கலக்கச்செய்த என்பதாம். முயங்குவித்த என்னும் சொல்லாற்றலால் தாள்கள் மாதர்கள் போன்ற போகத்தானங்களாயின. தன: ஆறனுருபு பன்மைக் கண் வந்தது. குலாத்தில்லை என்பது தழாத்தொடராய் வல்லி னம் மிக்கபுணர்ச்சி.

இத்திருப்பாடல், தில்லைநாதனைக் குலாவுதல்கொண்டேன் ஆதலால் அடியேன் எத்துணைத்தீமைகள்செய்யினும் எனக்குப் பிறப்பு இறப்பு இல்லை எனத்தெரிவித்தலால் அநுபவம் இடை யீடுபடாமையை அறிவித்தவாறு காண்க.

559 என்புள் ளுருக்கி இருவினையை யீடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதழிய வுள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. 3

இ - ள்: அடியேன் செய்த அன்பால், என்து என்பினை உருக்கி, நல்வினையும் தீவினையுமாகிய இருவினைகளின் வலியை ஒழித்து, அவற்றானவரும் துன்பங்களையும் களைந்து, பற்றுக் களை அறுத்துச் சுத்தப்படுத்தி, அநாதியே பற்றியனவாகிய மலங்கள் அனைத்தையும், முழுதும் அழிய மனத்துட் புகுந்த தில்லையாண்டானைக் குலாவுதல் கொண்டேன் அன்றே என்ற வாறு.

தில்லைநாதன் அடியேனை அனைத்துவகையானும் பரிபாகப் படுத்தினான்; அவனோடு குலாக்கொண்டேன் அன்றே என்பது கருத்து.

உருக்கி, அழித்து, களைந்து, செய்து, அழிய உள்புகுந்த தில்லையாண்டானைக் குலாக்கொண்டன்றே என முடிக்க.

இருவினையையீடழித்தலாவது மிகாதவாறு அருள்செய்தல். வன்மையுடன் தாக்காத வண்ணம் மெலிவித்தலுமாம். இருவினை ஆகாமிய சஞ்சிதங்கள் எனலுமாம்.

துவந்துவம் - பற்று. அவை ஆன்மாவை அநாதியே பற்றியதாகிய மூலமலமும், ஆகந்துகமாய் அந்த மலத்தைப் பரிபாகப்படுத்தப் புணர்க்கப்பெற்ற மாயாமலமும், அதன் காரியமாகிய மாயேயங்களாகிற தத்துவ தாத்துவிகங்களுமாம்.

அவற்றைத் தூய்மை செய்தலாவது மூலமலத்தை மீட்டும் அங்குரியாதவாறு வலியடக்கி, மாயா கன்ம மாயேயங்களைக் களைபிடுங்குவதுபோல உயிரைவிட்டு அகலச்செய்து ஆன்மாவைச் சுத்தான்மாவாகச் செய்தல்.

இவ்வண்ணம் முன்புள்ளவற்றை எல்லாம் முழுதுங்கெடச் செய்து உயிருக்கு உயிராகக் கலந்த தில்லைநாதன் என்பார் 'முன்புள்ளவற்றை முழுதழிய உள்புகுந்த தில்லையாண்டான்' என்றார்.

அவனைக் குலாக்கொண்டேனாதலின் நான் சுத்தனானேன் என்றலின் இப்பாடல் குலாப்பத்தினதாதல் காண்க.

560 குறியும் நெறியும் குணமுமிலார் குழாங்கடமைப்
பிறியும் மனத்தார் பிறிவரிய பெற்றியனைச்
செறியுங் கருத்தில் உருத்தமுதாஞ் சிவபதத்தை
அறியுங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. 4

இ - ள்: இறைவனுடைய அடையாளங்களும், அவனை அடைதற்குரிய நால்வகையான நெறிகளும், அந்நெறிகளைப் பற்றுதற்குரிய குணங்களும் இல்லாத பிராகிருதக் கூட்டங்களைச் சாராது பிரியும் மனத்தையுடைய மெய்யடியார்கள் என்றும் பிரிதற்கரிய தன்மையையுடையவனும், முற்கூறிய குறிகளும் நெறிகளும் குணங்களும் செறிந்த கருத்தில் உருக்கொண்டு அமுதம்போல இனிக்கும் சிவபதமானவனும், சிவஞானச்செய்தியுடையோர் அறியும் தில்லைநாதனும் ஆகிய பெருமானைக் குலாவுதல்கொண்டேன் அன்றே என்றவாறு.

பிராகிருதரை விட்டுப் பிரிந்த மெய்யடியார்கள் நீங்கப் பெறாத தன்மையையுடைய தில்லைநாதனைக் குலாவப்பெற்றேன் அன்றே என்பது கருத்து.

குறி - இறைவன் சடையுடையன், செம்மேனியன், வெண்ணீற்றன், கைக்கபாலத்தன், மழுவன், மானன் என்ற அடையாளங்கள்.

நெறி-அவனை அடைதற்குரிய சரியையாதி நான்குவழிகள். குணம் - நெறிகளைச்சார்தற்குரிய ஆன்மபரிபாகம். இம்மூன்றும் இலார் பிறராகலின் அவரோடு சேர்தலுமாகாது. 'சிவபத்தர்களோடு இணங்குக' எனவே ஏனையர்களோடு இணங்கற்க என்பதூஉம் பெறப்படுதலானும் அவர்கள் அஞ்ஞானத்தை உணர்த்துவராகலானும் அவர்கள்கூட்டத்தைப் பிறியும் மனத்தாரென மெய்யடியாரைக் குறிப்பித்தார். அக்குழாங்கள் இன்னரின்னர் என்பதை அடிகளே 'ஆத்தமானார் அயலவர்கூடி, நாத்தழும் பேற நாத்திகம் பேசினர்' என்பது முதலாகப் போற்றித் திருவகவலில் உணர்த்துதலும் காண்க.

பிறியும் மனத்தார் பிறிவு அரிய பெற்றியன் என்பதற்குப் பிராகிருதக்குழாத்தை விட்டுப் பிரிந்த மனத்தராகிய மெய்யடியாரால் பிரிதற்கு அரிய தன்மையையுடையவன் என, பிறிவரிய பெற்றியை அடியார் குணமாகவும் அத்தகைய பரிபாகமுற்ற ஞானிகளை விட்டுப்பிரிய_இயலாத தன்மையன் என இறைவன் குணமாகவும் உரைத்து நயம் காண்க. தலைவன் தலைவியர் காதலித்தனர் எனின் தலைவன் தலைவியைக் காதலித்தான் ; தலைவி தலைவனைக் காதலித்தாளென இருமருங்கும் இயையுமாறுபோல பிறிவரிய பெற்றியும் இருமருங்கும் இயைந்து அடியாரின் உண்மை அன்பையும் இறைவனுடைய பெருங்கருணையையும் விளக்கி நின்றன. இறைவன் செயலாயின் மனத்தார்ப் பிறிவரிய என ஒற்று மிகுதல்வேண்டும். அது அன்ன பிறவுமாகும் ஐயுருபே என்றமையால் மிகாதாயிற்று.

உருத்து - உருத்தாங்கி. கருத்தில் உருத்தாங்கல் - ஞானவடிவாகப் புலப்படுதல். அவ்வுருவை அனுபவிக்கும்போது அமுதம் உண்டாற்போன்றதொரு அனுபவம் உண்டாமாதலின் 'கருத்தில் உருத்து அமுதாம் சிவபதத்தை' என்றார். சிவபதம் - சிவத்தையன்றிப் பதம் வேறன்மையின் ஒற்றுமை நயம் பற்றிச் சிவனை என்று சொல்லவிழைந்த அடிகள் சிவபதத்தை என்றருளினார்கள்.

பெற்றியனை, சிவபதத்தை, அறியும் ஆண்டானைக் குலாக் கொண்டு அன்றே என முடிக்க. அறியும் - மெய்யன்பர்களால் அறியப்பெறும் எனச் செயப்பாட்டுவினைப்பெயரெச்சமாக்குக.

இறைவனுடைய சிறப்பியல்புகள் பலவற்றையும் விதந்து கூறி அவனைக் குலாக்கொண்டேன் என்றலின் இத்திருப்பாடல் குலாப்பத்தினதாகவும், சிவானுபவம் இடையீடுபடாமையை உணர்த்துவதாகவும் ஆயிற்று.

561 பேரும் குணமும் பிணிப்புறும்இப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டரெல்லாம்
சேரும் வகையாற் சிவன்கருணைத் தேன்பருகி
ஆருங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. 5

இ - ள் : பெயராலும் குணங்களாலும் கட்டப்படுகின்ற இப்பிறவியைத் தூர்ந்துபோம்வண்ணம் குற்றங்கள்போக்கி, அடியார்கள் அனைவரும் வந்தடையும்படி, சிவபெருமானிடமிருந்து உண்டான கருணையாகிற தேனைப்பருகித் தங்குதற் கிடமாகிய தில்லையைத் தலைநகராக்க் கொண்டு ஆண்டானைக் குலாவுதல் கொண்டேன் அன்றே என்றவாறு.

தொண்டரெல்லாம் நாமரூபங்களால் பிணிக்கப்பட்ட இப் பிறவியைத் துறந்து வினைமாசுகளைப் போக்கித் தன்னையடையும் வண்ணம் சிவன்கருணையாகிற தேனைப் பருகி ஆர்தற்கு இடமான தில்லை ஆண்டானைக் குலாவுதல் கொண்டேன் என்பது கருத்து.

பிறவி, பெயரானும் குணங்களானும் பிணிக்கப்பட்டது என்றது வியாபகமாய், சித்தாய் இருந்த உயிரை ஒரு பெயருக்கும், நெட்டை குட்டை நல்லன் தீயன் முதலான குணங்களுக்கும் கட்டுப்படச்செய்தது என்பதாம். இத்தகைய பிறவிவரும் வழியைத் தூர்ந்துபோம்வண்ணம் வினைச்சேடங்களை ஒழித்து ஆண்டான் என்பார் 'பிறவிதனைத் தூரும் பரிசு துரிசறுத்து' என்றார்.

எல்லாமெனல் பொதுவாதலின் தொண்டரெல்லாமெனப் பலர்பாற்பன்மையோடு சேர்ந்து வந்தது. தொண்டரெல்லாம் பருகி ஆரும் தில்லையாண்டானைக் குலாக்கொண்டு அன்றே என்க.

சிவன் கருணைத்தேன் பருகுதலும் கூத்தப்பெருமானோடு குலாவுதலுமாகிய செயல்களால் அனுபவம் இடையீடுபடாமை உணர்த்துதலால் இது பதிகக்கருத்தினதாதல் காண்க.

562 கொம்பி லரும்பாய்க் குவிமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடலம் மாண்டிங்ஙன் போகாமே
நம்புமென் சிந்தை நணுகும்வண்ண நானணுகும்
அம்பொன்குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. 6

இ - ள் : மரத்தின்கொம்பில் தோன்றிய அரும்பாயும், போதாயும், மலராயும், காயாயும் வீணே பழுத்து இவ்வுடம்பு இங்ஙனே மாண்டுபோகாதவண்ணம், நம்புகின்ற என் மனமும் நானும் தம்மை அணுகும்வண்ணம், அழகிய பொன்னுலாகிய தில்லைக்கண் இருந்து ஆண்டானைக் குலாவுதல் கொண்டேன் அன்றே என்றவாறு.

இவ்வுடல் அரும்பாய், போது முதலியனவாய்க் கனிந்து வீழ்வதற்குமுன்னம் என் மனமும் நானும் தம்மைச் சார்ந்துய்ய ஆண்ட பெருமானைக் குலாவினேன் அன்றே என்பது கருத்து.

உடல் கருவாய், குழம்பிருந்து, உருக்கொண்டு, குழவியாய், காளையாய், மூத்துக்கிழமாய் அழிதலைக் 'கொம்பில் அரும்பாய்க் குவிமலராய்க் காயாகி வம்புபழுத்து உடலம்மாண்டு இங்ஙன் போகாமே' எனக் கூறினர்கள்.

நம்பும் என் சிந்தை - இவரலாது பிரானுரில்லை; இவரே என் பிறவித் துன்பினைப் போக்கி ஆளவல்லவர் என்று உறுதி கொண்ட என் மனம். நணுகுதல் - சிவத்தையே அடைக்கலமாக அடைதல்.

நான் நணுகும் அம்பொன் தில்லை எனவும் கூட்டலாம். தில்லை பொன்னம்பலம் உடையதாதலின் 'அம்பொன் தில்லை' என்றார்.

இவ்வுடலம் முதிர்ந்து அழியாமே, என் சிந்தை நணுகும் வண்ணம் நான்நணுகும் தில்லையாண்டானைக் குலாக்கொண்டேன் என்பதால் இத்திருப்பாடல் குலாப்பத்தாதல் கண்க.

563 மதிக்குந் திறலுடைய வல்லரக்கன் தோள்நெரிய
மிதிக்குந் திருவடி யென்றலைமேல் வீற்றிருப்பக்
கதிக்கும் பசுபாசம் ஒன்றுமிலோம் எனக்களித்திங்
கதிர்க்குங் குலாத்தில்லை யாண்டானைக்கொண்டன்றே. 7

இ - ள் : எல்லாவற்றையும் கடைந்தொழிக்கும் ஆற்றலை உடையவனாகிய வலிய இராவணன் தோள்கள் பத்தும் நெரிய மிதிக்கும் திருவடி அடியேன் தலைமீது வீற்றிருப்ப, அதனால் யாம் பிறவிகளைக் கொடுக்கும் பசுபாசத் தன்மைகள் ஒன்றும்

இல்லோம் என மகிழ்ந்து ஆரவாரித்தற்கு இடமான தில்லைக் கண்ணிருந்து எம்மையாண்டானை யான் குலாவுதல் கொண் டனன் அன்றே என்றவாறு.

இறைவன் திருவடி எம் சிரத்தின்மேல் வீற்றிருப்பதால், பசுபாசத்தன்மைகள் அற்றோம் என யாம் களித்து ஆரவாரிக்கத் தில்லையாண்டானைக் குலாவினேன் என்பது கருத்து.

மத்தால் தயிர்கடைதல்போல, உலகமனைத்தும் கடைந்து ஒழிக்கும் ஆற்றல் உடையவன் இராவணன். அவனுடைய பத்துத்தோள்களும் நெரிய, அவன் கயிலையைத் தூக்கமுயன்ற போது அதன்கீழ் அவன் நசுங்கத் தமது மெல்விரல் ஒன்றின் நுனியால் ஊன்றினார். அதனால் அவன் பெருமான் ஆற்றலை உணர்ந்து, ஆணவமலங்கெட அகந்தை ஒடுங்கிச் சாமகானம் செய்து இராவணன் என்ற பெயரையும், வாளையும் பெற்றுய்ந் தான் ஆதலின், அதுபோல யாமும் மலகன்மங்கள் நீங்கியுய்ய என் தலைமேல் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்; யாங்கள் சீவத்தன்மை கெட்டுச் சிவமானோம்; தளையாய் இருந்த பாசங் கள் கெட்டன என்று களித்து இங்கு ஆனந்த ஆரவாரம் செய் கின்றோம்; அதற்கு இடமான தில்லை என்க.

இராவணன்மீது ஊன்றியது வலதுகாற் பெருவிரலின் நகத்தின் நுனியாக இருக்கவும் மிதிக்குந்திருவடி என்றது, என் தலைமேல் வீற்றிருக்கும்போது நுனிமட்டும் பட்டாற்போதாது; நனைந்தனைய திருவடியை முழுதும் சூட்டவேண்டும்; பொருந்தச் சூட்டவேண்டும்; அப்போதுதான் ஊறுணர்ச்சியும், உள்ள இன்பமும் மிகும் என்ற எதிர்நோக்கால் 'மிதிக்கும் திருவடி என் தலைமேல் வீற்றிருப்ப' என்றார்.

இராவணனுக்குப்போல ஒருமுறை ஊன்றி எடுத்தாற் போதாது; எப்போதும் வீற்றிருக்கச்செய்யவேண்டும் என்பார் 'வீற்றிருக்க' என்றார். வீற்றிருத்தல் - வேறொன்றற்கும் இல்லாத அழகோடும் சிறப்போடும் இருத்தல்.

பசுஞானமும், பாசஞானமும் மீளவும் பிறவிக்கு ஏதுவா கலின் 'கதிக்கும் பசுபாசம் ஒன்றுமிலோம்' என்றார். இறைவன் திருவடி சூட்டியவுடன் மலமாயைகளோடு கூடி இருத்தலாகிய பசுபாசத்தன்மைகள் நீங்கிச் சுத்தான்மா ஆதலின் இங்ஙனம் கூறினார். கதிக்கும் - தோன்றும். அதிர்க்கும் - ஆரவாரிக்கும்.

இத்திருப்பாடலிலும் இறைவன் திருவடி சூட்டியமையும், அதனால் பசுபாசங்களற்றமையும் தெரிவித்தலின் அனுபவம் இடையீடுபடாமை உணர்த்தப்பெறுதல் காண்க.

564 இடக்குங் கருமுருட் டேனப்பின் கானகத்தே
நடக்குந் திருவடி யென்றலைமேல் நட்டமையால்
கடக்குந் திறலைவர் கண்டகர்தம் வல்லாட்டை
அடக்குங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. 8

இ-ள்: பூமியைத் தோண்டுமியல்பினதாகிய கரிய வலிய பன்றியைப் பின்தொடர்ந்து காட்டில் நடக்குந் திருவடியை அடியேன் தலைமீது சூட்டியதால், என்னை வென்று அலையும் வன்மைவாய்ந்த கொடியோர் ஐவருடைய வலிய வினையாட்டை அடக்கும் தில்லைக்கூத்தனைக் குலாவுதல் கொண்டேன் அன்றே என்றவாறு.

திருவடியை என் தலைமேற்சூட்டி, என் பொறிகளின் கொட்டத்தை அடக்கிய தில்லைக்கூத்தனைக் குலாவுதல் கொண்டேன் என்று அனுபவம் இடையீடுபடாமையை அறிவித்தது.

கோரைக்கிழங்கு முதலானவற்றைத் தோண்டுவதற்காகப் பூமியைக் கிளறுதலும், எதிர்ந்தார்மேல் முருட்டுத்தனமாகச் சீறிவிழுதலும் பன்றியின் இயற்கையாதலை 'இடக்கும் முருட்டு ஏனம்' என்பதனுல் உணர்த்தியவாறு. அருச்சுனன் கைலை மலைச்சாரலில் பாசுபதாஸ்திரம் பெறுதற்காகத் தவம் செய்த போது, அவன் தவத்தைக் கலைக்கக் காட்டுப்பன்றி ஒன்று அவனை நோக்கி ஓடி வந்தது; இறைவன் இறைவியோடு வேடவடிவு தாங்கி எழுந்தருளி, அப்பன்றியைக் கொன்று அருச்சுனற்குப் பாசுபதம் அருளினர் என்பது வரலாறு. அங்ஙனம் காட்டுப்பன்றியின்பின் நடக்கும் திருவடி என அன்பர்க்காக நடந்த அருட்சிறப்பை உணர்த்தியவாறறிக. என் தலை கானகத்தைக் காட்டிலும் கரடுமுரடாயிருப்பினும், கானகத்தில் நடந்த பயிற்சியால் என் தலைமீதும் அதனைச் சூட்டினரென்பார் 'திருவடி என் தலைமேல் நட்டமையால்' என்றார்.

நடுதல் - செடி நடுதல் முதலியனபோலக் கிளைத்துத் தழைத்துப் பூத்துக் காய்க்கச் செய்தல். அங்ஙனமே இறைவன் திருவடியைச் சூட்டி, திருவருள் தழைத்துக் கிளைத்துக் கருணை பூத்துத் தீமையைக் காய்த்துச் சிவபோகம் பழுக்கச்செய்தான் என்றார்; நட்டமையால் ஐம்பொறிகளின் ஆட்டம் அடங்கிற்று என்றார்.

கடக்கும் திறலைவர் - வெல்லும் வலிய ஐம்பொறிகளாகிற வேடர்கள். அவரவை நிலைக்களனாகக் கொண்டு, விடயங்களிற் சென்று பற்றி, இறைவன் திருவடியைப் பற்றிப் பேரின்பம் துய்க்கமுயலும் தன்னை வென்றமையால் 'கடக்கும் திறல் ஐவர்'

என்றார். கடக்கும் ஆண்டான் என இயைப்பாரும் உளர். கண்டகர் - முள்போல்வார்; கொடியவர்கள். பொறிகள் கூட இருந்து தீநெறிக்கட்புகுத்துதலின் கண்டகர் என்றுருவகிக்கப் பெற்றன.

ஆட்டு - விளையாட்டாகிய குறும்பு. வல்லாட்டு - பிறரால் நீக்குதற்கு அரிதாயிருக்கும் வலிய குறும்பு.

திருவடி என்றலைமேல் நட்டமையால் வல்லாட்டையடக்கும் தில்லையாண்டானைக் குலாக்கொண்டன்றே எனவும், கடக்கும் திறல் கண்டகர் ஐவர்தம் வல்லாட்டை எனவும் இயைக்க.

ஏனத்தை வென்றதுபோல என் ஐம்பொறிகளையும் அடக்கும் கூத்தன் என ஓர் நயமும் இயைபினாற் றோன்றநிற்றல் காண்க.

இத்திருப்பாடலிலும், இறைவன் தன் தலைமேல் திருவடி சூட்டியதும், அதனால் பொறிபுலச்சேட்டைகள் அவிந்ததை அறிவித்தமையின் இது சிவானுபவம் இடையீடுபடாமையை யறிவிக்கும் குலாப்பத்தினதாதல் காண்க.

565 *பாழ்ச்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக்*
*கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டுத்*
*தாட்செய்ய தாமரைச் சைவனுக்கென் புன்றலையால்*
*ஆட்செய் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே.* 9

இ - ள்: பாழான வயலை உழுது பயன்பெறாது இருப்பேனாகிய எனக்கு, முற்பிறவிகளிற்செய்த தவத்தால் பொற்கிழி கிடைத்தாற்போலக் கிடைத்த சிவந்த தாமரை மலரைப் போலும் திருவடிகளையுடைய சைவனாகிய சிவபெருமானுக்கு எனது புல்லியதலையால் 'ஆளாகப்பணிசெய்யும்பேறு தில்லைக் கூத்தனைக் குலாவுதல் கொண்டதால் அன்றே விளைந்தது என்றவாறு.

பயனற்ற செயலிற்றலைப்பட்டிருந்த எனக்கு, பூர்வபுண்யத்தால் புதையல் கிடைத்தாற்போலக் கிடைத்த செந்தாமரைப் பொற்பாதனாகிய சிவனுக்கு ஆட்செய்தல் தில்லைக்கூத்தனைக் குலாவுதல் கொண்டதால் விளைந்தது என்பது கருத்து.

பாழ்ச்செய் - பண்படுத்தப்படாததும், வித்திட்டாலும் முளையாததும், நீரேறாததுமாய வயல். விளாவி - உழுது. விளாக் கொள்ளல், விளா அடித்தல் என்பது ஒருசுற்று உழுதலுக்கும் வழங்கும் வழக்கு. பாழ்ச்செய் விளாவி என்பது 'பாழுக்கிறைத் தேன்' என்பது போல்வதோர் வழக்கு.

உழைத்தும் பயன் காணமையால் பயனிலியாய்க் கிடப் பேற்கு என்றருளினர். கீழ் என்றது முன்னைய பல பிறவிகளை. இப்போது உழைப்பில்லாத ஒருவற்கு, பழவினையால் புதையல் கிடைத்தாற்போல எனக்குத் திருவடி கிடைத்தது; திருவடியைப் பெறுதற்குரிய முயற்சியும், பரிபாகமும் எனக்குச் சிறிதும் இல்லை என்பதாம்.

செய்ய தாமரைத்தாள் சைவன் எனக் கூட்டுக. சைவன் : இறைவன் அநாதி சைவன் ஆதலிற் கூறியதாம். எண்வகைச் சைவத்துள் முதற்கண்ணது அநாதி சைவமாதலை ஆகமங்களிலும், திருமந்திரத்திலும் காண்க.

ஆட்செய் - ஆட்செய்தல். செய்: முதனிலைத்தொழிற்பெயர். இதனை ஆட்செய்விக்கும் தில்லையாண்டானை எனத் தமக்குத் தோன்றியவாறே பிறவினை வாய்பாட்டுப் பெயரெச்சமாக்கி உரைப்பாரும் உளர்.

பரிபாகமற்ற எனக்கும் திருவடிதீக்கைசெய்து உயர்த்தியது அவனைக் குலாவிக் கூடியதால் விளைந்த பயனன்றே என வியத்தலின் இத்திருப்பாடல் சிவானுபவம் இடையீடுபடாமையை அறிவித்தவாறு.

566 *கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்*
*செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்*
*கிம்மை தரும்பயன் இத்தனையும் ஈங்கொழிக்கும்*
*அம்மை குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. 1(*

இ - ள் : வட்டமானவையும், வரிகளோடுகூடியவையும் ஆன முலைகளையுடைய பூங்கொடிபோன்ற உமாதேவியாரை ஒரு கூறாக உடைய சிவனுக்குத் திருப்பணிகளைச் செம்மையான மனத்தோடு விரும்பிச்செய்கின்ற எனக்கு இப்பிறவியில் விளைகின்ற இன்பத்துன்பங்களாகிய பயன்கள் இவ்வளவையும் இப்பூமியிலே ஒழிக்கச்செய்து, மறுமையின்பத்தையளிக்கும் தில்லைக்கூத்தனை யான் குலாவுதல்கொண்டேன் அன்றே என்றவாறு.

இம்மைப்பயன்கள் அனைத்தையும் இங்கேயே நுகர்ந்து ஒழிக்கச் செய்து, மறுமை இன்பமாகிய வீடுபேற்றை உதவும்

செம்மை மனம் - மலமாயைகளோடு கூடி மயங்கியிருந்து பின் செம்மைபெற்றமனம். கூறனுக்குத் திருப்பணிகள் செய்வேனுக்கு என்பதால் பதிபுண்ணியமே தாம் செய்தமையும், ஏனைய பசுபுண்ணியங்கள் இன்பத்துன்பம் காரணமாய் இக்கன்மபூமியிலேயே ஒழிக்கப்பட்டமையும் உணர்த்தியவாறு காண்க.

அம்மை என்பது ஆகுபெயராக அம்மையின்பமாகிய வீடு பேற்றை உணர்த்தியது.

இதுவும் அனுபவ இடையீடின்மையை அறிவித்தமை காண்க.

இப்பத்துத் திருப்பாடல்களானும், அடிகள் உறவுகளை ஒழித்து ஒடுங்கவந்தியுமே உறவாகக்கொண்டு, சிவன்கழலலது பற்றில்லை எனத் துணிந்து, பொறியின்பங்களைப் பெருக்குவனவாகிய மகளிராசை முதலியவற்றைத் துறந்து, வினைகளின் வன்மையை வாட்டி, யான் எனதென்னும் பற்றறுத்து, எடுத்த இவ்வுடலம் பாழ்போகாமல் திருவடிசூட்டி, வறியவனுக்குப் புதையல் கிடைத்தாற்போலத் திருவருள் நேர்படத் திருவருட்பணியேசெய்து; தில்லை நடராசப்பெருமானோடு குலாவுதலைக் கொண்டேன் எனச் சிவானுபவம் இடையீடுபடாமல் வருதலை உணர்த்தியருளுகின்றார்கள்.

# 41. அற்புதப்பத்து

[அனுபவம் ஆற்றாமை]

வாதவூரண்ணல் திருப்பெருந்துறையில் எழுந்தருளி இருக்குங்காலத்து, ஒருநாள் உலகவர் வாழ்க்கைக்கடலில் துன்ப இன்பத்திரையில், பேராசைப் புயலால் தாக்குண்டு வருந்துவதைக் கண்டு, தாம் அதனின்றும் தப்பத் திருவருள் தந்த சிவபெருமான்கருணைக்கு வியந்து, அற்புதப் பத்தாகிய இதனை அருளிச்செய்கின்றார்.

அற்புதம் என்பது வியப்பு. இது எண்வகைச் சுவையுள் ஒன்று. இதனை மருட்கையென வழங்கும் தொல்காப்பியம்.

வியப்பு, புதுமையும் பெருமையும் சிறுமையும் ஆக்கமும் ஆகிய நான்கினையும் நிலைக்களனாகக்கொண்டு தோன்றும் என்பர் தொல்காப்பியர். ஆனால் அவர் வியப்பினை 'மதிமைசாலா மருட்கை' எனல் சிந்திக்கத்தக்கது. மதிமை - அறிவுடைமை. அறிவு நிரம்பப் பெற்றவர்க்கு எத்தகைய சூழ்நிலையிலும் வியப்புத் தோன்றாது. எல்லாம் அவர்கட்கு இயல்பாகவே நிகழ்வனவாகவும், முன்னறியப் பட்டனவாகவுமே தோன்றும் என்பது தொல்காப்பியர் கருத்து. ஈண்டு அறிவாற் சிவனேயான மதிமந்திரியாரான வாதவூர் வள்ளலுக்கு அற்புதம் தோன்றுகிறது. இந்த அற்புதம் மதிமை சாலா மருட்கையாகாது. பசுபோதத் தன்மையிலுள்ள பொல்லாங்கைப் போக்கி அருளாற் பொறுத்தாண்டு அருளிய சிவானந்தானுபவம் எவராலும் கண்டறியாத ஒன்று. அது பரிபாகமுற்ற ஆன்மாக்களுக்கு அனுபவமாவது. அதனைக் கண்டவுடன் அடிகள் அற்புதமடைந்தார்கள் ஆதலின் மதிமைசாலா மருட்கை ஆகாது என்பது தெளிவு. இத்தகைய ஆனந்தாதீதம்பெற்ற பேர்கள் ஆனந்தமே தாமாய் அபேதமாய் இருத்தலன்றி, அவர்கள் அறிவு காரியப்படுந் தன்மை இலதாகலின் மதிமை சாலா மருட்கை என்றார் எனலும் ஒன்று.

அகத்தியச் சூத்திரம் 'கற்பனை கழறும் அற்புதப்பத்துத், தனியதீதமாய் அனுபவம் ஆற்றாமை' என்பது.

பழையவுரை, 'முற்பதிகத்துக் குஞ்சிதபாததரிசனமே பரமுத்தி அடிமை என அருளி, மேல், எல்லாம் வல்ல சித்து என்பதும்

எளிமையேன் பொல்லாங்கெல்லாம் அருளாற் பொறுத்து ஆண்டு கொண்டு அருளும் ஆனந்த சுவானுபூதி என்பதும் அருளியது' என்று கூறும்.

அநுபவம் ஆற்றாமை; அதாவது சிவானுபவம் முற்றுதலால் பொறாமை விம்முதல் என்பது திருவாசகத் திருவுள்ளக்கிடை.

'மாயாவுருக்கொண்டு உளத்தை மயக்கும் மின்னார்கள் வலையுள் மயங்குவேற்கு இங்(கு) ஆயும் அறிவு அளித்து ஆளல் அதிசய மென்றுரைத்தல் அற்புதப்பத்தாகும்' என்பது பழைய புராணம்.

அற்புதம் - ஆச்சரியம் என்பது ஐடாதர நிகண்டு. விஸ்மயம் சித்திரம் என்பது அமரம். இவையனைத்தையும் இணைத்தெண்ணும் போது அற்புதம் என்பது, இதுவரை கண்டறியாததும் தோன்றி அறியாததுமான சிவானந்தானுபவம் தன்மாட்டு விளைந்தபோது உண்டான வியப்பும் அதனால் வெளிப்படும் புதுமையுமே என்பது பெறப்படும்.

அதிசயமும் - அற்புதமும் ஒன்றாகவே வழங்குதலை இலக்கிய உலகில் நாம் காண்கின்றோமே; அங்ஙனமாக அடிகளார் முன்னர் அதிசயப்பத்தெனவும் ஈண்டு அற்புதப்பத்தெனவும் வேறோதுகின் றார்களே என்பதும் ஊன்றி ஆராய்தற்குரியதொன்று. அதிசயம் என்ற ஆரியச்சொல் அதி என்னும் உபசர்க்கமும் शीङ् शये என் னும் மேன்மைப்பொருளைத்தரும் பகுதியும் இணைந்து ஆனது.

* அதிசயம் என்னும் சொல் மேன்மை மரியாதை முதலான பலபொருளை உணர்த்தும் என்பர் ஹேமசந்திரர்; சுமை, அடிக்கடி, அதிவேளை, மிகுபொருள் முதலான பற்பல பொருள்களைத் தரும் என்கிறது அமரம். ஆகவே அதிசயம் என்பது மிகுதிகாரணமாக விளைந்தமேன்மையை உணர்த்துவது; அற்புதம் என்பது இதுவரை நுகரப்படாத ஒன்று நுகர்ச்சிக்குப் புலனானபோது விளைந்த தன் வசமற்ற நிலை என அறியப்பெறுதல் காண்க.

*" अति मर्यादः उत्कर्षः "

— ஹேமசந்திரர்.

" भरं अतिवेकं भृशं अत्यर्थं अतिमात्रं उद्गाढं निर्भरं तीव्रं
एकान्तं नितान्तं गाढं बाढं दृढं "

— அமரம்.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

567 மைய லாயிந்த மண்ணிடை வாழ்வெனும்
ஆழியுள் அகப்பட்டுத்
தைய லாரெனுஞ் சுழித்தலைப் பட்டுநான்
தலைதடு மாறாமே
பொய்யெ லாம்விடத் திருவருள் தந்துதன்
பொன்னடி யிணைகாட்டி
மெய்ய னாய்வெளி காட்டிமுன் னின்றதோர்
அற்புதம் விளம்பேனே. 1

இ - ள்: இப்பூமியில், மயக்கமாகி, உலகவாழ்வு என்னும் கடலில் அகப்பட்டு, பெண்கள் என்னும் சுழியிற் சிக்கி, நான் தலைதடுமாறிப் போகாமல், நிலையற்ற பொருள்களின்மேல் வைதத பற்றெல்லாம் ஒழியத் திருவருள் புரிந்து, தன்னுடைய பொன்போன்ற திருவடிகளைக் காட்டி, திருமேனி தாங்கி வந்து பரவெளியாகி ஞானகாயத்தைக் காட்டி, என் முன்னே வெளிப்பட்டு நின்றதாகிய ஒப்பற்ற அற்புதத்தைச் சொல்லமாட்டாதவனாகின்றேன் என்றவாறு.

உலகவாழ்விற் சிக்கி உழல இருந்த என்னைக் காப்பாற்றித் திருவடிகாட்டிப் பரவெளிகாட்டிக் குருவாக வந்து முன் நின்ற அற்புதம் சொல்லொணாததாக இருந்தது என்பது கருத்து.

மையல் - மோகம்: அஃதாவது ஆணவமல காரியமாகிய அறியாமையான் விளைவது. இது மண்ணிடைப் பிறந்தவுடன் உடலொடுகூடிய உயிரை மயக்குவது ஆதலின் 'இந்த மண்ணிடை மையலாய்' என்றது. 'மையலாம் இந்த மண்' எனப் பாடங்கொள்வாரும் உளர்.

வாழ்வு - உலகிடைப்பொருந்தி நுகரும் இன்பத்துன்பங்கள். இது எல்லையற்றதாய், இடையீடு இன்றிப் பரந்து கிடத்தலின் 'வாழ்வெனும் ஆழி' என்று உருவகித்தார். அகப்பட்டு-அக்கடலின் பரப்பிலும் ஆழத்திலும் தாம் சிக்கி.

தையலார் - பெண்கள். தையல் - அழகு: உரிச்சொல். அதனையுடையார் தையலார் என்க. சுழி - நீரில் எதிர் எதிரான ஓட்டத்தால் விளையும் ஆழமான சுழற்சி. இது அகப்பட்ட பொருளை ஆழ்த்திக்கொள்வது. அதுபோல மகளிரும் தம் வயப்பட்டாரை மேலெழாவாறு சுழலச் செய்தலின் 'தையலார் எனும் சுழி' என்றார். தலைப்பட்டு - சிக்கி.

தலை தடுமாறுதல் - இடம்விட்டுப் பெயர்ந்து சுழலுதல். பொய் - நிலையற்ற உலக இன்பங்கள். பொய்ம்மையுடையவற்றைப் பொய் என்றார்.

இறைவன் திருவருள் ஞானமயமானது; அதனை என்மீது பதியத்தந்தமையின் பொய்யெலாம் விட்டது என்பார் 'பொய்யெலாம்விடத் திருவருள் தந்து' என்றார். பொய்-யான் எனது என்னும் பொய் என்பது பழையவுரை.

பொன்னடி - பொன்போற் போற்றத்தக்க திருவடி. நிறத்தாற் கூறியதுமாம். மெய்யனாய் வெளிகாட்டி - குருநாதனாகத் திருமேனி தாங்கிவந்து இதுதான் சிதம்பரம் என ஞானவெளியைத் தரிசிப்பித்து; என்றது அறியாமையால் குடத்துள் விளக்குப்போல ஏகதேச ஞானத்தாற் சிற்றறிவும் சிறு தொழிலும் உடையவனாக இருந்த என்னைப் பரவெளிக்கு உரியவன் என்பதை உணர்த்தி என்றவாறும். மெய்யனாய் என்பதற்கு உண்மைப்பொருளாய் என்பாருமுளர். சத்தியஞானபோதனையென்பது பழையவுரை.

முனைன்னறது ஓர் அற்புதம் - கருவிகரணங்களால் உணர்தற்கு ஒண்ணாத இறைவன் அவற்றால் உணரத்தக்க நிலையில் வந்து என்முன்னே நின்றது ஒப்பற்ற அற்புதம் என்றவாறு.

விளம்பேன் - அத்தகைய ஓர் அற்புதத்தை அநுபவிக்க இயலுமேயன்றி, இங்ஙனமிருந்தது என்று சொல்ல இயலாது என்றதாம். பழையவுரை மவுனானந்தம் பெறுதலே சுவானுபூதி எனல் காண்க. இது வியப்புச்சுவையின் முற்றிய நிலை. இதனால் ஆற்றொணாத அனுபவத்தை உணர்த்தியமையில் அற்புதப்பத்தாதல் காண்க.

568 ஏய்ந்த மாமலர் இட்டுமுட் டாததோர்
இயல்பொடும் வணங்காதே
சாந்த மார்முலைத் தையனல் லாரொடும்
தலைதடு மாறாகிப்
போந்தி யான்றுயர் புகாவணம் அருள்செய்து
பொற்கழ லிணைகாட்டி
வேந்த னாய்வெளி யேயென்முன் நின்றதோர்
அற்புதம் விளம்பேனே.

இ - ள்: பொருந்திய பெரிய பூக்களைப் பறித்துச்சாத்தி இடையீடுபடாத தன்மையோடும் பூசிக்காமல் சந்தனம் அப்பிய முலைகளையுடைய பெண்களோடுகூடித் தலைதடுமாறிச்

சென்று யான் துன்பக்கடலிற் புகாத வண்ணம் திருவருள் புரிந்து, பொன்னடிகளைக் காட்டி, குருராயனை வெளியே என்கண்காண என்முன் நின்றதாகிய ஒப்பற்ற அற்புதத்தைச் சொல்லமாட்டாதவனாகின்றேன் என்றவாறு.

பூக்கள்கொண்டு பொன்னடிபோற்றிப் பூசியாமல், காரிகையார் கலவியிற்கூடித் தலைதடுமாறிப் போகாமல், திருவடிகாட்டிக் குருநாதனை என்முன் காட்சிதந்து நின்ற அற்புதம் சொல்லொணாதது என்பது கருத்து.

ஏய்ந்த மாமலர் - இறைவன் பூசைக்குரியனவாகச் சிவாகமங்களில் விதிக்கப்பட்ட சிறந்த மலர்கள்; ஏதோ கிடைத்த பூக்கள் எனலுமாம். புல்லிலை எருக்கமாயினும் என்பதாம்.

சிவபூசைசெய்வார், நாளிடையிட்டுச்செய்யாது நாடோறும் தவறாது செய்துவரல் வேண்டுமாதலின் 'முட்டாதது ஓரியல் பொடும் வணங்காதே' என்றார். உடற்பயிற்சி செய்பவன் ஒரு நாள் செய்யாதுவிடின் மறுநாள் உடல்நலிவும் பயிற்சிக்குறைவும் விளைதல்போல, யோகமும் தியானமும் பக்தியும் கலந்த உளப்பயிற்சியாகிய சிவபூசை செய்பவர்கள் நாளிடையிட்டும் காலந்தாழ்த்தும் செய்வார்களாயின் தியானசித்தி விளையாமை மட்டுமன்றித் தீநரகினும் புகுவராதலின் 'முட்டாதது ஓர் இயல் பொடும் வணங்காதே' என்றார்.

மார்பிலே பூசியுள்ள கலவைச்சாந்தமும் முலைகளும் தடுமாற்றத்திற்குக் காரணமாகிச் சிவப்பணிகளைச் செய்யவிடாது மயக்கிய போகசாதனங்கள் என்பார் அவற்றை விதந்து 'சாந்த மார்முலைத் தையல்நல்லாரொடும் தலைதடுமாறு ஆகி' என்றார்.

வேந்தன் - அரசன். ஈண்டு ஞானவேந்தனாய் வந்த குருவுருவை நினைவூட்டியது. வெளியே என்முன் நின்றது என்றது அத்தகைய பெரியோன் சிறியேனாகிய என் கண் காண வெளியில் நின்றது எனப் பெருமானுடைய உயர்வும், தன்னிழிவும் தோன்றச்செய்து அவனது எளிவந்த தன்மையையும் உணர்த்திற்று. இதனால் இத்திருப்பாடல் சிவானுபவத்தின் ஆற்றொணாத்தன்மையை அறிவித்தல் காண்க.

569 *நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து*
*நானென தெனுமாயக்*
*கடித்த வாயிலே நின்றுமுன் வினைமிகக்*
*கழறியே திரிவேனைப்*

*பிடித்து முன்னின்றப் பெருமறை தேடிய*
*அரும்பொருள் அடியேனை*
*அடித்த டித்துவக் காரமுன் தீற்றிய*
*அற்புதம் அறியேனே.* 3

இ - ள்: அத்தகைய பெரிய வேதங்கள் தேடியலைகின்ற அரும்பொருளாகிய சிவம், பூமியில் பொய்யான வாழ்வுகள் பலசெய்து மெய்யன்பன்போல நடித்து நான் எனது என்னும் பற்றுக்களாகிய அரவுகள் கடித்த வாயிலே நின்று பழவினை களைப் பற்றிப் பேசிக்கொண்டு திரிகின்ற என்னை, அவற்றுள் ஆழ்ந்து போகாவண்ணம் பிடித்து, என்முன்னே குருமேனி தாங்கி நின்று, அடியேனை அடித்து அடித்துச் சர்க்கரையை யூட்டிய அற்புதத்தை அறியேன் என்றவாறு.

பற்றுக் காரணமாகப் பழவினைகளில் சிக்கி வருந்த இருந்த என்னைப் பிடித்து ஆட்கொண்டு, குருநாதனாக என் முன்னே நின்று, இதை உண் என்று அடித்து அடித்துச் சர்க்கரையை ஊட்டிய அற்புதம் அறியவும் ஒண்ணாதது என்பது கருத்து.

நடித்தல் - ஒருவர் வேறொருவர்போல வேடந்தாங்கிப் பார்ப் பவர்களை உண்மையாக நம்பச்செய்யும் ஆற்றல். ஒரு வீணன் வேந்தனாக நடித்துக் காண்பாரை வேந்தனென்றே நம்பவைக் கும் தன்மை. அதுபோலப் பொய்ம்மையே பெருக்கிப் பொழு தினைச்சுருக்கும் யான் மெய்யடியார்போல நடித்தேன் என்பார் 'நடித்து' என்றார்.

மாயக் கடித்த வாய் - அழிந்துபடக் கடித்த வாயிலே என்க. மாயம் கடித்த வாய் எனப் பிரித்து வஞ்சனையானது கடித்த வாய் என்பர் சிலர். எழுவாயாங்கால் மாயம் ஈறு கெடாமை தெளிக. கடித்த என்ற வினையாற்றலால் நான் எனது எனும் அரவு என ஒருசொல் வருவித்து அகப்பற்றும் புறப்பற்றுமாகிய இருதலைகளை உடைய பாம்பு என்றோ, இரண்டாகிய பாம்பு என்றோ பொருள் கொள்க. கடித்த வாய் - கடித்த புண்ணுள்ள இடம். கடித்த வாயிலே நிற்றலாவது, பாம்பினால் கடிக்கப் பெற்ற ஒருவன் கடித்த இடத்தைக் கையால் பிடித்துக்கொண்டு வேறுணர்ச்சியின்றி, அதனையே சொல்லிச்சொல்லி வருந்துதல் போல யானும் இருவகைப் பற்றாகிய இருதலைப் பாம்பு கடித்த இடத்தினைச் சுட்டி, இது பழவினையால் விளைந்தது எனப் பேசிக்கொண்டே, வினைதீரும் உபாயமாகப் பதிபுண்ணியங் களைப் புரியாமல் வீணே காலங்கழித்தேன் என்பார் இங்ஙனம் கூறினார் என்க.

'பிடித்து' என்றது, மலையுச்சியிலிருந்து பாதாளக் கங்கையில் விழ இருப்பவன் ஒருவனை ஓடிவந்து பிடித்துத் தடுக்கும் உபகாரிபோல இருவகைப் பற்றுகிய பாம்பினிடமே பழகிப் பழவினைகளைப் பேசி மேல்வினைகளைச் சேகரிக்க இருந்த என்னைத் தடுத்து நிறுத்தி என்ற பொருட்சிறப்புத் தோன்ற நிற்றல் காண்க.

பாலகன், தந்தை நிறுத்தினும் அறியாமையால் மீளவும் ஓடிவிழுவதுபோல யானும் வாசனுமலத்தாற்றுக்குண்டு தடுமாறிப் போவேனே என்று திருவுளத்தெண்ணி, என்னை அறிவு தெரிகின்றவரையில் பாதுகாக்கத் திருவுளங்கொண்டு என் முன்னே தன் ஞானத்திருவுருவைக்காட்டி நிற்கின்றான் என்பார் 'முன்னின்று' என்றார்.

அன்னை பாலும் சர்க்கரையும் கலந்து பொற்கிண்ணத்தில் வைத்து ஊட்டவும் உண்ணமாட்டேன் என்று அடம்பிடித்து அழும் குழந்தையை அடித்து, அதற்கு அமுதை ஊட்டுவது போலச் சிவானுபவமாகிய திருவருளமுதத்தை அடித்தடித்து இறைவன் ஊட்டுகிறான் என்பார் 'அடித்து அடித்து அக்காரம் முன் தீற்றிய அற்புதம்' என்றார்.

இங்ஙனம் சிவானுபவம் அக்காரம் போல்வது; அதனை இறைவன் ஊட்டினான்; அவ்வனுபவம் என்னால் அறிய ஒண்ணாததாக இருந்தது என்றலின் இத்திருப்பாடல் அனுபவம் ஆற்றாமையாகிய பதிகக் கருத்தைப் புலப்படுத்துதல் காண்க.

570 பொருந்து மிப்பிறப் பிறப்பிவை நினையாது
பொய்களே புகன்றுபோய்க்
கருங்கு ழலினார் கண்களா லேறுண்டு
கலங்கியே கிடப்பேனைத்
திருந்து சேவடிச் சிலம்பவை சிலம்பிடத்
திருவொடும் அகலாதே
அருந்து ணைவனு யாண்டுகொண்டருளிய
அற்புதம் அறியேனே. 4

இ - ள்: வினைகளுக்கு ஏற்ப வந்து பொருந்துவனவாகிய இந்தப் பிறப்பையும் இறப்பையும் நினையாமல், பொய்களையே சொல்லித் தாமே வலியச்சென்று, கரியகூந்தலையுடைய பெண்களின் கண்களால் தாக்கப்பெற்றுக் கலங்கிக் கிடக்கின்ற என்னை, சிவந்த திருவடிக்கண் உள்ள இலக்கணங்களால் திருந்திய சிலம்புகள் ஒலிக்கத் திருவருளோடும் பிரியாதபடி

என்னைக் காக்கும் அரிய துணைவனாகி ஆட்கொண்டு, எனக்கு அருள்செய்த அற்புதத்தை யான் அறியேன் என்றவாறு.

வரப்போகின்ற பிறப்பிறப்பை நோக்காது மாதர்மயக்கிற் கட்டுண்டு கிடக்கும் என்னைச் சிலம்புகள் ஒலிக்க வந்து ஆட்கொண்டருளிய அற்புதத்தைப்பற்றிச்சொல்ல யான் அறியேன் என்பது கருத்து. இவ்வுரைக்கு ஏற்ப இப்பிறப்பு இறப்பு இவை பொருந்தும் என நினையாது எனப் பிரித்துக் கூட்டுக.

இப்பிறப்பு இறப்பு - எடுத்த இந்தப் பிறவியும் இதனைத் தொடர்ந்துவரும் இறப்பும் என்க. அன்றி இனிப்பொருந்தும் இதுபோன்ற பிறப்பும் இறப்பும் எனலுமாம்.

நான் பொய்களைப் புகன்றால் அதனால் வினை ஏறும், அதனால் பிறப்பிறப்பு இடையீடின்றி வரும் என்பதை நினையாமற் போய் மாதர்திறத்து மயங்கினேன் என உலகவர்நிலையைத் தம்மேலிட்டுரைப்பார் இங்ஙனம் கூறினார். புகன்று - விரும்பி. பழையவுரை 'மலபரிபாக நிமித்தம் வந்து பொருந்திய இப் பிறவியையும் தொடர்ந்துவரும் இறப்பையும் இறைவன் நமக்கு அருளினான்; இதனைக்கொண்டே இன்பவுலகை அடையவேண்டும் என்று எண்ணாமல்' என்னும்.

பொய்களே புகன்று - பொய்கள்பலவற்றைப் பேசி. பொய்யான உலக இன்பங்களையே விரும்பி எனலுமாம். பழையவுரை எடுத்த இவ்வுடல் நிலையற்றனவே என்று பேசிக்கொண்டு என்னும்.

கருங்குழலினார் என்றது மாதர்கள் என்னை மயக்கியது அவர்கள் இளமையைக் காட்டி என்பது பெற்றுநின்றது. கண்கள் நஞ்சுதோய்ந்த வேலாதலின் அதற்கேற்ப ஏறுண்டு என்ற வினைதந்தார். வேலால் ஏறுண்டவன் விரைவில் மாள்வானேயன்றிப் பலவாண்டுகள் மயங்கிக் கலங்கிக் கிடவான். கண்களால் ஏறுண்டவர்கள் கலங்கித் துன்புறுவார்களேயன்றி விரைவில் இறவார் என்பார் 'கலங்கியே கிடப்பேனை' என்றார்.

சேவடிச்சிலம்பு அவை அனைத்தும் ஒருசொல்லாய், திருந்து என்ற வினைத்தொகைக்கு முடிபாயிற்று. சேவடிக்கண் விளங்குவனவாய்த் திருந்திய சிலம்பு அவை எனப் பொருள் கொள்க. திருந்துதல் சிலம்பிற்கன்றிச் சேவடிக்கு இல்லையாதல் தெளிக. இறைவன்சேவடி மல மாயைகளோடு கூடாததாய் அநாதியே நித்தமாய்ச் சுத்தமாய் இருப்பதாகலான் என்க.

சிலம்பிட - ஒலிக்க. திரு - திருவருள்; ஞானமுமாம். பராசத்தி என்பது பழையவுரை. திருவொடும் அகலாதே - திருவருளே உருவான சத்தியோடு உடனாய் என்பது. இறைவற்கு அபின்னசக்தியோடு எழுந்தருளி அருள்வழங்குதல் இயல்பு என்னும் சைவமரபு தெரிவிக்கப்பெற்றது.

கலங்கிக்கிடந்து காப்பாரின்றி, துன்பத்திற்கு யாரே துணையாவார் என்று யான் வருந்துகின்றகாலத்துக் கிடைத்தற்கரிய துணைவனாக ஆண்டான் இறைவன் என வியப்பார் 'அருந்துணைவனாய் ஆண்டுகொண்டருளிய அற்புதம்' என்றார்.

அதனை அறியேன்; அதனை அறியும் அளவிற்கும் என் அறிவு காரியப்படவில்லை; சிவபோதமே மிக்கு இன்ப அனுபவமே மேலிட்டேன் என்றதாம். பழையவுரை பராசத்தியுடன் பிரிவில்லாத உயிர்த்துணைவராக என் உயிரில் எழுந்தருளிய சிவானந்தபோகத்தை என் அறிவால் காண உளதோ என்று உரைக்கும். இதன் நயம் ஆழ்ந்து அனுபவித்தற்குரியது.

இவ்வண்ணம் இத்திருப்பாடல் திருவருட்சத்தியோடு சிவபெருமான் எழுந்தருளி வந்து, ஆண்டுகொண்ட அனுபவம் அற்புதமாகச் சொல்லொணாததாக இருந்தது என்றலின் பதிகக் கருத்து விளங்குதல் காண்க.

571 மாடுஞ் சுற்றமும் மற்றுள போகமும்
மங்கையர் தம்மோடும்
கூடி யங்குள குணங்களா லேறுண்டு
குலாவியே திரிவேனை
வீடு தந்தென்றன் வெந்தொழில் வீட்டிட
மென்மலர்க் கழல்காட்டி
ஆடு வித்தென தகம்புகுந் தாண்டதோர்
அற்புதம் அறியேனே. 5

இ - ள்: செல்வமும் சுற்றமும் ஏனைய போகப்பொருள்களும் ஆகிய இவற்றை மங்கையர்களோடு அடைந்து, அங்குள்ள தன்மையாகிற இன்பங்களால் தாக்குண்டு, குலாவித் திரிகின்ற என்னை, என்னுடைய தீய தொழில்கள் அழிய மெல்லிய மலர்களை ஒத்திருக்கும் திருவடிகளைக் காட்டி, என்னைப் பரவசமாய் ஆடச்செய்து, என் நெஞ்சமே கோயிலாகக் கொண்டெழுந்தருளி, பரபோகமாகிய வீட்டின்பத்தையும் தந்து ஆண்ட ஒப்பற்ற அற்புதத்தை யான் சொல்ல அறியேன் என்றவாறு.

மாதர், மனை. மாடு, வீடு முதலான போகங்களோடு கூடி ஆங்காங்குள்ள இயல்புகளால் தாக்கப்பெற்று அவைகளோடு கூடிக் குலாவித்திரிகிற என்னைத் திருவடிகாட்டி ஆட்கொண்ட அற்புதம் இத்தகைத்து என்று என்னால் சொல்லொணாததாக இருந்தது என்பது கருத்து.

மாடு - செல்வம். செல்வம் என்பன மணியும் பொன்னும் நெல்லும் மாடுகளும் பூமியும் முதலாயின. அவற்றுள், மாடுகளைக் கொண்டே செல்வநிலையைச் சீர்தூக்கும்வழக்கம் பண்டு இருந்ததாதலின் மாடு என்பது செல்வத்திற்கே பெயராயமைந்தது. இன்றும் எத்தனை ஏர் மாடு உண்டு என்று வினவிச் செல்வநிலையை அறிதல் காண்க. வடுவிலா வையத்து மன்னிய மூன்றுள் நடுவணதெய்த இருதலையும் எய்தும் என்பவாகலின் போகத்திற்சிறந்ததாக மாடு முற்கூறப்பெற்றது.

சுற்றம் - தாய் தந்தை அண்ணன் தம்பி முதலான சுற்றத்தார்கள். இவர்கள் போககாலத்து உடனிருந்து நுகர்ந்து போகத்தை மிகுவிப்பவர்கள் ஆதலின் இவர்களை அடுத்துக் கூறினர். மற்றுள போகம் என்றது உணவும், உடையும், நகையும், மாலையும், சந்தனமும், வண்டியும், வாகனமும் முதலான போகப்பொருள்களை.

மாடு முதலாகிய இத்துணைப்போகமும் போகப்பொருள்களாக எண்ணப் பெறுவது மாதர்கள் இருந்தபோதுதான்; அவர்கள் இல்வழி இவற்றால் எட்டுணையும் சிறப்பின்றாம் என்பார் 'மங்கையர்தம்மோடும் கூடி' என ஓடு உருபை உயர்பின் வழிக்கொடுத்து ஓதினர். மங்கையர் - கற்புடைத்தலைவியர். மங்கையர்தம்மோடும் எனப் பலர்பாலாற் கூறினர், மக்கள் அனைவரையும் அறிவுறுத்தலான் என்க.

அங்கு உள குணங்களால் ஏறுண்டு - இங்ஙனம் பலவாய போகப் பொருள்களினிடத்துத் தனித்தனியே உள்ள இயல்புகளால் தாக்குண்டு. மூவரை மணந்துகொண்ட தசரதன் அம்மூவர் குணங்களிலும் இடைப்பட்டு இடர்ப்பட்டதுபோலென்க.

போகப்பொருள்களின் குணங்களால் தாக்குண்ணினும் அவை தரும் சிற்றின்பத்தில் ஈடுபட்டு, அவைகளோடும் கூடிக் குலாவித் திரிகிறேன் என்பார் 'குலாவியே திரிவேனை' என்றார். ஈண்டும் குலாவுதல் அசதியாடியும் தொட்டும் பிணைந்தும் விளையாடுதல் என்னும் பொருளிலேயே வந்திருத்தல் காண்க. வெம் தொழில் - கொடிய செயல்கள். வீட்டிட - அழிய. என்

அறியாமையால் விளையும் கொடிய செயல்கள் தீப்பொறிமுன் பஞ்சுப்பொதிபோலத் தாமே அழிய என்பதாம்.

கழல் - திருவடி: ஆகுபெயர். இறைவன் திருவடி ஐந்து பொறிகட்கும் ஒருசேர இன்பந்தருவது. ஐந்திந்திரியங்களாலும் ஒருசேர அனுபவிக்கப்பெறுவது என்பார், நிறத்தாற் கண்ணுக்கும், மணத்தால் மூக்கிற்கும், தேனால் நாக்கிற்கும், மென்மையால் மெய்க்கும், சார்ந்துள்ள ஒலிகளால் செவிக்கும் இன்பம் ஊட்டும் மலரோடு அதனை ஒப்பித்து 'மென்மலர்க் கழல்காட்டி' என்றருளினர்.

ஆடுவித்து - ஆடச்செய்து. தற்போதமுள்ளவரை உயிர் ஆடுதலும் பாடுதலும் புரியாது; இறைவன்பால்வைத்த அன்பு முற்றிக் காதலாய்ப் பரிணமித்தபிறகு தன்வசங்கெட்டுத் தலையாரக் கும்பிட்டுக் கூத்து ஆடும் ஆதலின் தற்போதங்கெடுத்தமை உணர்த்துவார் 'ஆடுவித்து' என்றார்.

புகுந்து என்ற வினையால் அகம் கோயிலாக உருவகிக்கப் பெற்றமை அறிக. திரிவேனை இவ்வண்ணம், வீட்டிடக் கழல் காட்டி, ஆடுவித்து, அகம் புகுந்து, வீடு தந்து ஆண்டதோர் அற்புதம் அறியேன் எனக்கூட்டுக.

அங்ஙனம் ஆட்கொண்ட வியப்பை உணரகில்லேன் என்றமையின் இத்திருப்பாடலும் பதிகக் கருத்தைத் தெரியவுணர்த்துதல் காண்க.

572 வணங்கு மிப்பிறப் பிறப்பிவை நினையாது
மங்கையர் தம்மோடும்
பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்திநான்
பித்தனாய்த் திரிவேனைக்
குணங்க ளுங்குறி களுமிலாக் குணக்கடல்
கோமளத் தொடுங்கூடி
அணைந்து வந்தெனை யாண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 6

இ - ள்: வணங்குதற்காகக் கிடைத்த இப்பிறப்பையும் இறப்பையும் அங்ஙனம் எண்ணாது, நான், பெண்களுடன் கூடி, அவர்கள் வாயிலிருந்து ஊறும் எச்சிலாகிய பெருவெள்ளத்தில் மூழ்கிப் பித்தனாகித் திரிகின்ற என்னைக் குணங்களும் அடையாளமும் இல்லாத குணமே வடிவான கடல்போலபவனாகிய சிவபெருமான், அழகேயுருவான அம்மையோடுங்கூடிச்

சேர்ந்துவந்து அடியேனை ஆட்கொண்டருளிய அற்புதத்தை யான் அறியேன் என்றவாறு.

குணமும் குறியுமில்லாத கடவுள், அம்மையப்பராக எழுந் தருளிவந்து, இப்பிறவியெடுத்ததன் நோக்கத்தை மறந்து மாதர்வாய் எச்சில் வெள்ளத்திலழுந்த இருந்த என்னை ஆட் கொண்டு காத்த அற்புதம் என்னால் சொல்லத்தரமோ? அறியத் தான் தரமோ? அன்று என்பது கருத்து.

யாம் மக்கட்பிறவியெடுத்தது கடவுளை வணங்கி முத்தி யின்பம் பெறும் பொருட்டேயாம் என்பதை மறந்து மகளிர் கூட்டமேவிழைந்தேன் என்பார் 'வணங்கும் இப்பிறப்பு இறப்பு இவை நினையாது...திரிவேன்' என்றார். வணங்கும் இப்பிறப்பு- வணங்குதற்காகக் கிடைத்த இப்பிறவி. நினையாது - இப்பிறவி கிடைத்ததன் நோக்கமும் பயனும் ஆகிய அருமைகளை நினை யாது என்க.

பிணைந்து - கூடி. 'பாலொடு தேன் கலந்தற்றே பனிமொழி வாலெயிறு ஊறிய நீர்' என வியந்து எச்சில்வெள்ளத்தில் ஆழ்ந்து என்றார்; மீட்டும் மீட்டும் அதிலேயே தோய்ந்து கிடத் தலின்.

ஒன்றில் முறுகிய அன்பு பித்து. விரும்பிய அவ்வெச்சி லையே விரும்பி வேற்றலுவலை நோக்காது அலைதலின் 'பித்த னாய்த் திரிவேனை' என்றார். இதுவும் உலகர்செயலைத் தம்மே லிட்டுக் கூறியது.

இறைவன் குணங்களுக்கெல்லாம் ஒரு கடல் போல்பவன். குணம் எஞ்ஞான்றும் ஒருகுணியைப் பற்றியேநிற்கும். அங்ஙன மாயின் குணக்கடலாகிய இறைவனுக்குக் குணி எதுவெனின் அவனே குணி, அவனே குணம் என்றவாறும். குணியாயின் சுட்டறிவால் உணரத்தக்க குணங்களும், அடையாளங்களும் வேண்டுமே எனின் அவையிரண்டும் இல்லாத குணமேயான கடல் என்றார். முன்னர்க் குணங்கள் என்றது சுட்டறிவான் இவ்வண்ணத்தன் இப்படியன் என்றுரைக்கத்தக்க வரையறை யுட்பட்ட குணங்களை. குணக்கடல் - எல்லையற்ற குணங்கள்.

கோமளம் - அழகு. ஈண்டு அழகு என்னும் பண்பு அழகே வடிவாய்த் தமக்கென வேறுவடிவின்றிச் சிவத்தோடு ஒன்றி நிற்கும் பராசத்தியை உணர்த்திற்று.

வந்து என்னை அணைந்து என மாறுக. பூனை தன் குட்டி யைத் தானே வாயால் கவ்விச் செல்வதுபோலவும், பசு தன்

கன்றை உள்ளித் தாவிச் சென்றணைவது போலவும் அடியேனிடம் தாமே வலிய வந்துசேர்ந்து என்க.

பசு பால் சுரந்ததும் குடிக்கின்ற கன்று தன்னை மறந்து வைத்தவாய் வாங்காமலும் ஊட்டாமலும் நிற்பதுபோல நான், ஆண்டுகொண்டு அருளிய அற்புதத்தை அறியமாட்டேனாயினேன் என்பார் 'அற்புதம் அறியேன்' என்றார்.

இத்திருப்பாடல் அம்மையப்பராக எழுந்தருளி ஆண்டு கொண்ட அனுபவம் தம்மாற்சொல்லொணாததாய் - அறியொணாததாய் இருக்கின்றமை அறிவித்தல் காண்க.

573 இப்பி றப்பினில் இணைமலர் கொய்துநான்
இயல்பொடஞ் செழுத்தோதித்
தப்பி லாதுபொற் கழல்களுக் கிடாதுநான்
தடமுலை யார்தங்கள்
மைப்பு லாங்கண்ணால் ஏறுண்டு கிடப்பேனை
மலரடி யிணைகாட்டி
அப்பன் என்னைவந் தாண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 7

இ - ள்: இந்தப் பிறவியில் நான், அருச்சனைக்கு உகந்த பூக்களைக் கொய்து, இலக்கணத்தோடு திருவைந்தெழுத்தை ஓதி, நான் தவறாமல் பொன்போன்ற திருவடிகளில் சாத்தாமல், பருத்த முலைகளையுடைய பெண்களின் கருமைதவழுங் கண்களால் தாக்குண்டு செயலற்றுக் கிடப்பேனை, என் தந்தையாகிய பரமசிவன், தமது மலர்போலும் திருவடிகளைக் காட்டி வலியவந்து என்னை ஆண்டுகொண்ட அற்புதத்தை யான் அறியேன் என்றவாறு.

விதிப்படி மலர்பறித்திட்டு, அஞ்செழுத்தோதி அரனடிக்குச் சாத்தாது அரிவையர் மயலில் மயங்கிக் கிடந்த என்னை மலரடி காட்டி ஆட்கொண்ட அற்புதம் என் அறிவின் அளவிற்றன்று ஆதலின் யான் அறியேன் என்றார் என்பது கருத்து.

'இப்பிறப்பினில்' என்பது, மேல்வரும் பிறவி வேண்டேன்; கிடைத்த இப்பிறவியிலேயே கரைகாண விழைகின்றேன் என விரைவுகுறித்து நின்றது.

இணை மலர் - இணைந்த மலர்: வினைத்தொகை. சிவனை அருச்சிப்பதற்குப் பொருத்தமான மலர்கள். கொய்து - மலரைக் கொய்யவேண்டிய முறைப்படி, நீராடித் தோய்த்து உலர்ந்த

ஆடை உடுத்து, தன்மேனியைத் தீண்டாமலும் சொரியாமலும்; இழிந்த பொருள்களையும் நாய் மாடு முதலியவற்றையும் தீண்டாமலும், வாய்பேசாமலும் திருவைந்தெழுத்தைத் தியானித்துக் கொண்டே கொய்து.

தாம் பெற்றிருக்கிற சிவதீட்சை முறைக்கு ஏற்ப சபீச நிர்ப்பீச முறைகளோடும், ஓதுமுறை நிற்குமுறை அறிந்து திருமந்திரார்த்தத்தைச் சிந்தித்தலையே 'இயல்பொடு அஞ்செழுத்து ஓதி' என்றது.

சிவார்ச்சனை செய்வோர் நாளிடையிட்டுச் செய்தலாகாது ஆதலின் நாடோறும் குறித்த நேரத்தில் செய்யவேண்டும் என்பார் 'தப்பிலாது' என்றார்.

அருச்சிக்குங்கால் பூக்களை வீசி எறிதலும் மேனியின்மீது நேராக எறிதலும் கூடாது என்பார் பொற்கழல்களுக்கு இடுக என்றார். அங்ஙனம் இடவேண்டிய யான் இடாது மாதர் கண்ணால் நொந்தேன்; என்னை இறைவன் ஆட்கொண்டான் என்கின்றார்.

மைப்பு உலாம் கண் - கருமைபரந்த கண்; என்றது அவர்களின் இளமையை விளக்கியது.

நான் இடாது, நான் ஏறுண்டு என நான் என்ற எழுவாய் பன்முறைவந்தது. தவறிழைத்தவன் பதற்றமடைந்து, 'நான் அந்தப் பொருளை நான் ஒன்றுமே செய்யவில்லை' என்பான்; அதுபோலக் கடமை தவறியதால் பதறிக்கூறியதாம்.

மயக்கநோயுற்றாரைச் சிலமணிகள் காட்டித் தெளிவிப்பது போலத் தடமுலையார்தங்கள் மைப்புலாங் கண்ணால் ஏறுண்டு கிடப்பேனை மலரடிகாட்டித் தெளிவித்தான்; அடியேன் தெளிந்தேன்; அன்பு பூண்டேன்; அவன் ஆண்டுகொண்டான்; அருளினான்; அதில் ஏதோ ஓர்வகை அற்புதம் என்மாட்டு விளைகிறது; அதனை இன்னதென்று உணர என்னால் முடியவில்லை என்கின்றார்.

இத்திருப்பாடலும் அற்புதம் அறியேன் என அநுபவம் ஆற்றொணாமையை அறிவித்தல் காண்க.

574 ஊச லாட்டுமிவ் வுடலுயி ராயின
இருவினை யறுத்தென்னை
ஓசையா லுணர் வார்க்குணர் வரியவன்
உணர்வுதந் தொளியாக்கிப்

*பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன்*
*பரம்பெருங் கருணையால்*
*ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய*
*அற்புதம் அறியேனே.* 8

இ-ள்: ஒலியளவையான் அறிவார்க்கு அறியவொண்ணாத சிவன், இவ்வுடலும் உயிரும் ஆயினவற்றை ஊசலாட்டுகின்ற இருவினைகளையும் அறுத்து, ஞானத்தை நல்கி, என்னை ஒளிப்பொருளாக்கி, பாசங்கள் என்னைப் பற்றாதவண்ணம் அவற்றை அறுத்து, உயர்வற உயர்ந்த தன்னுடைய மேலான கருணையால், ஒளியானேன் என்ற ஆசையையும் நீக்கி, மெய்யடியார்களின் திருவடியிலேயே என்றும் தோயும்வண்ணம் கூட்டிய அற்புதத்தை யான் அறியேன் என்றவாறு.

பிறப்பிறப்பைத் தருகின்ற இருவினைகளையும் போக்கி, மலமாயைகளின் பந்தத்தையும் அறுத்துச் சிவஞானியாக்கி அடியார்கள் கூட்டத்திலேயே என்றும் உறையச்செய்த அற்புதம் என்னால் அறியவொண்ணாத ஒன்று என்பது கருத்து.

இருவினை - நல்வினை தீவினை. இருவினைகளே உடலையும் உயிரையும் ஒன்றச்செய்து பிறப்பிறப்பு, விண் மண், சுவர்க்கம் நரகம் என்ற இடங்களுக்குப் போய்வரும்படித் தூண்டுவன ஆதலின், உயிர்க்கு உடலை ஊசலாகவும், உடலில் ஏறியவுயிர் பிறப்பிறப்பு, விண் மண், சுவர்க்க நரகங்கட்குச்சென்று வருதலால் ஊசலாடுபவனாகவும் அமைய, இறைவன் வினைக்கயிற்றையறுத்தவுடன் உயிர் உடற்பலகையைவிட்டுச் சிவனடியார் திருவடிகளையே தாரகமாகப் பற்றிநிற்கும் என்பதும் உய்த்துணர உதவுவது இத்திருப்பாடல்.

ஓசை-ஒலிவடிவாய வேதங்கள். அவற்றையே துணையாகக் கொண்டு இறையியல்பினை ஒருவாறுணரத் தலைப்படுவார்க்கு உணர்தற்கு முடியாதவன் இறைவன். இதன் கருத்து உரை உணர்வு கடந்துநின்ற ஒருவன் என்பது. ஓசை - பிரணவ நாதம்; அது சங்கொலிபோல யோகநிலையிலிருக்கும்போது கேட்கும். *அவ்வொலி கேட்கப்படுமாயின் சிவனைக் காணலாம் என்பர் யோகநூலார். இவர் யோகம் சிவராசயோகமாய்ச் சிவஞானத்திற்கு வாயில் என்பதை உணரார்தார். இவர்களுக்கு ஒலிகேட்டலே சிவதரிசனம் என்பது கருத்து. ஆதலின் இவர்கட்கு உணரப்படாதவர் இறைவன் என்பதுமாம். இது மூலன் மரபில் வரும் சிவயோகியர் கருத்து. இவை அனைத்தையும் எண்ணி 'ஓசையாலுணர்வார்க்கு உணர்வரியவன்' என்றதை உணர்க.

அருளல்லவற்றை அருளென்றுணரும் மருளை, இறைவன் போக்கிச் சிவஞானத்தையுதவியதை 'உணர்வுதந்து' என்றும், அறிவுபெற்றதும் அறியாமை நீங்குதலின் 'ஒளியாக்கி' என்றும் கூறினர்.

பாசத்தைப் பற்றறுத்து என்றது பாசமானவை பற்று அறுத்து எனப் பாசத்தை வினைமுதல்போலக் கூறினர். ஒளியான உயிர் மீளவும் பாசத்தைச் சென்று பற்றாது. பாசம் வாசனைபற்றி நெய்க்குடத்தை அணுகும் எறும்புபோல மொய்க்கவும்கூடும் எனத் திருவுளத்தடைத்து இறைவன் பாசமானவை வந்து உயிரைப்பற்றும் ஆற்றலையும் அறுத்து வறுத்தவித்துப் போலாக்கினன் என்பார் இங்ஙனம் கூறினர். பாசமானவைகளை உயிர் பற்றுதலை அறுத்து என்பாரும் உளர். நயமுள்ளன தெளிக.

பாசபந்தங்களின் நீங்கியவுயிருக்கு, பற்றற்றான் பற்றினைப் பற்றவேண்டும் என்ற ஆசைதான் விளையக்கூடும்; அன்றி உலகியலாசை உண்டாகாதென்க. அங்ஙனம் பற்றற்றானைப் பற்றுகின்ற பற்றும் அநுபவத்திற்கிடையீடாகலின் இறைவன் அதனையும் தீர்த்தான் என்றார்.

இவ்வண்ணம் பசுபோதம் கழன்று தானதுவாய் மேவும் அனுபவம் என்னால் ஆற்றொணாதது என உணர்த்துதலின் இத்திருப்பாடல் அற்புதப்பத்தினதாயிற்று.

575 பொச்சை யானவிப் பிறவியிற் கிடந்துநான்
புழுத்தலை நாய்போல
இச்சை யாயின ஏழையர்க் கேசெய்தங்
கிணங்கியே திரிவேனை
இச்ச கத்தரி யயனுமெட் டாததன்
விரைமலர்க் கழல்காட்டி
அச்சன் என்னையும் ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 9

இ - ள் : காடாக மண்டிக்கிடக்கின்ற இப்பிறவியில் சிக்கிக்கிடந்து, பெண்களுக்கு விருப்பமானவற்றையே செய்து, அவர்களிடத்தேயே இணங்கி, புழுத்து அலைகின்ற நாய்போல் திரிகின்ற அடியேனை, எனது தந்தையாகிய சிவபெருமான், இவ்வுலகத்திலே திருமாலுக்கும் பிரமனுக்கும் காணுதற்கு எட்டாத தன்னுடைய தெய்வமணங்கமழுகின்ற திருவடித் தாமரைகளைக் காட்டி ஆண்டுகொண்டருளிய அற்புதத்தை யான் அறியேன் என்றவாறு.

பிறவியாகிற காட்டிற்கிடந்து, மகளிரின் விருப்பம்போல ஒழுகி அவர்களோடு இணங்கி, புழுத்து அலைகிற நாய்போலத் திரிகின்ற அடியேனையும் திருவடிமலர் காட்டி ஆட்கொண்ட அற்புதம் என்னால் அறிய ஒண்ணாத ஒன்று என்பது கருத்து.

பொச்சை - காடு. கடத்தற்கரியதாய், கடந்தே தீரவேண்டியதாய், வனவிலங்கு மிகவுடையதாய், அச்சுறுத்துவதாய், ஊறு விளைவிப்பதாய காடு; எல்லையற்றதாய், கடந்தே தீர வேண்டியதாய், ஐம்புலக்களிறும், மனக்குரங்கும், காம கோப மாதியான பாம்புகளும், தன்னலப்பேயும்நிறைந்ததாய்,அதனால் துன்பமும் இன்பவடிவுதாங்கிய துன்பமுமாகவந்து அச்சுறுத்துவதாய், ஆன்மாவின் அறிவு இச்சை செயல்களை மறைத்து, வினைப்போகத்தில் ஆழ்த்தும் துன்பத்தை மிகச்செய்வதாயுள்ள பிறவிக்கு ஒப்பாகின்றமையின் 'பொச்சையான இப் பிறவியில் கிடந்து' என்றார். பொச்சை குற்றம் என்பாரும் உளர். அடிகள் 'வணங்கும் இப்பிறப்பு' 'பொருந்தும் இப் பிறப்பு' எனப் பிறவியைப் பாராட்டுவார்களாதலால் குற்றம் பொருந்திய பிறப்பெனல் கூடுமோ? ஆய்க. இன்றிக் காடு என்றது பொருந்துமோ எனின், பரந்து தோன்றுதல் ஒன்றே பற்றிக் கூறியதாகக்கொள்க. தக்க துணையிருப்பின் கடக்கலாம் என்பதும் கருதுக.

உய்யானத்தில் மகளிரோடு உலாவுதல்போலப் பிறவிக் காட்டுள், மாதர்க்ள் விரும்பியனவேசெய்து, நாய் பெண்ணையை விடாது சுற்றித்திரிவதுபோலத் திரியலானேன் என்ற பொருள் நயமும் காண்க. புழு தலை நாய் - எனப் பிரித்துக் கடிபட்டதால் புழுத்த தலையையுடைய நாய் எனலுமாம்.

ஏழையர் - பெண்கள். விரிந்த அறிவில்லாத பேதையர் என்றவாறு. ஏழையர்க்கேசெய்து என்பதிலுள்ள ஏகாரத்தைப் பிரித்து ஏழையர்க்கு இச்சையாயினவே செய்து எனக் கூட்டிப் பொருட்சிறப்புக் காண்க. அவர்கள் சிவபூசை பண்ணாதே, கற்றாரொடு கூடாதே, அடியார்நேசம் பொல்லாதது எனின் அங்ஙனமே ஒழுகியும், உண்பன உடுப்பன படுப்பனவற்றால் அவர்களுக்கு விருப்பமானவற்றையே செய்தும் என்பதாம்.

அவர்களோடு பிணங்கின் இன்பம் நழுவுமாதலின் அவர்களோடு இணங்கியே திரிவேனை என்றார். நான் இணங்க வேண்டியது அடியார் இணக்கமாகவும் அதனைச் செய்யாது மாதரோடு இணங்கிக் கெட்டேன் என்பதாம்.

தன் புதல்வன்பால் தகாத செயல்கள் தோன்றின் அவனைக் கொடுத்தும், எடுத்தும், இன்சொல் கூறியும் தடுத்துத் திருத்துதல் தந்தையின் கடமை. அதுபோல இறைவன் என்னைத் தடுத்தாட்கொண்டமையால் எனக்கு அச்சன் ஆயினன் என்றார். அச்சன் - தந்தை; இது மலைநாட்டு வழக்கு. என்னையும் என்ற உம்மை இழிவுசிறப்பும்மை.

இறைவன் திருவடி எனக்குக் கிடைத்தற்கு அரியன! ஏன்? அயனும் அரியுமாகிய பதவிகளில் இருப்பவர்களாலேயே அறிய ஒண்ணாதன; அத்தகைய திருவடிகளை எனக்குத் தாமே வலியக் காட்டினன்; என்னே அவன் கருணை என வியப்புத் தோன்றக் கூறலின் இத்திருப்பாடல் அற்புதம் அறிவிப்பதாயிற்று.

576 *செறியும் இப்பிறப் பிறப்பிவை நினையாது*
*செறிகுழ லார்செய்யும்*
*சிறியும் கீழ்மையும் கெண்டையங் கண்களும்*
*உன்னியே கிடப்பேனை*
*இறைவன் எம்பிரான் எல்லையில் லாததன்*
*இணைமலர்க் கழல்காட்டி*
*அறிவு தந்தெனை யாண்டுகொண் டருளிய*
*அற்புதம் அறியேனே.* 10

திருச்சிற்றம்பலம்

இ - ள் : இறைவன் திருவடியிற்செறிதற்குக் காரணமாக இப்பிறப்பும் இறப்பும் உதவப்பெற்றன என்பதை எண்ணிப் பாராமல், அடர்ந்த கூந்தலையுடைய பெண்கள் செய்கின்ற வஞ்சனை கீழ்மை அவர்களுடைய கெண்டைமீன் போன்ற கண்கள் இவற்றையே எண்ணிக்கிடக்கின்ற என்னை, எல்லா உயிர்களுக்கும் இறைவனும், எம் தலைவனும் ஆகிய சிவன் வரம்பு அற்ற தன் திருவடித்தாமரை இரண்டையும் காண்பித்து, சிவஞானத்தையுதவி, என்னை ஆண்டுகொண்டருளிய அற்புதத்தை யான் அறியேன் என்றவாறு.

திருவடிப்பேற்றிற்காகக் கிடைத்த இப்பிறப்பை மாதர்களுக்காக்கி, அவர்கள் செய்யும் வஞ்சனைப் பேச்சு, கீழான பேச்சு, கண்கள் இவற்றையே எண்ணி எண்ணிக் கிடந்த என்னைத் திருவடிகாட்டி ஆட்கொண்டருளினன் இறைவன்; இது ஓர் அற்புதம்; அதனை யான் அறியேன் என்பது கருத்து.

செறியும் இப்பிறப்பு செறியும் இவ்விறப்பு இவை நினையாது எனக்கூட்டி, திருவருளாகிய திருவடிவந்துபொருந்தும் பிறப்பு

இறப்பு என்க. செறிதற்குக் காரணமான பிறப்பு இறப்பு எனலுமாம். செறியும் - நலிவதான என்பது பழையவுரை. என்னை நெருங்கியிருக்கின்ற இப்பிறப்பு என்பது புத்துரை. நயமுள்ளது கொள்க.

இப்பிறப்பு இறப்புக்கள் வினைக்கழிவிற்கும் வினை நுகர்ச்சிக்கும் ஓய்விற்குமாக உதவப்பெற்றன என்பதை இதனால் ஆன்மா உண்மையுணர்ந்து வினை ஏறுதவாறு பதிபுண்ணியம் செய்து உயரக் கடமைப்பட்டது என்பதையும் நினைத்துப்பார்க்காமல்விட்டது என்பார் தன்மேல் ஏற்றி 'இவை நினையாது கிடப்பேனை' என்றார்.

மாதர்களின் அடர்ந்த கூந்தலும், கயல்போன்றகண்களும், வஞ்சனையான மொழியும், காமத்தைத் தூண்டும் கீழ்த்தரமான பேச்சுக்களுமே எம் மனத்தைக் கொள்ளைகொண்டன. நான் அவற்றை இன்பமென எண்ணியெண்ணி வேறு செயலற்றுக் கிடந்தேன்; என்னையும் மயக்கந்தீர மணிகாட்டும் மருத்துவன் போலத் திருவடிகாட்டிப் பெண்மயலைப்போக்கி ஆட்கொண்டான் என்பார் 'உன்னியே கிடப்பேனைக் கழல்காட்டி, அறிவு தந்து ஆண்டுகொண்டருளினன்' என்றார்.

கழல் காட்டியதும், அறிவு உதவியதும் ஆண்டுகொண்டருளியதுமாகிய அநுபவம் தம்மால் ஆற்றொணாதனவாய் வியப்புத் தருவனவாயிருத்தலை உணர்த்துதலின் இத்திருப்பாடல் அற்புதப்பத்தினுள் ஒன்றுதல் காண்க.

இப்பத்துப் பாடல்களும் திருவடியைத் தரிசிப்பதும், அர்ச்சிப்பதும், எடுத்த தேகம் சிவப்பணிக்கென்றே கருதி இடைவிடாது தொண்டுசெய்வதும், வணங்குவதும், வாழ்த்துவதும் பிறப்பின்பயன் என நினையாது, தையலார் சுழித்தலைப்பட்டு, தலைதடுமாறி, பொய் பலபேசி, அவர்கள் கண்கள் தாக்கக் கலங்கி, எல்லாச்சாதனங்களும் அவர்களோடுகூடிச் சிற்றின்பந் துய்க்கவே என்று கருதி, பித்துக்கொண்டு, இச்சையாயினவே செய்து, அவர்கள் கிறியும் கீழ்மையும்பேச அவர்களுறுப்பிற் கிடந்து மயங்கிக்கிடப்பதே பிறந்ததன்பயனாக எண்ணியிருந்த என்னைத் திருவடிகாட்டித் தெளிவித்துச் சிவஞானமுதவி ஆட்கொண்டருளிய அற்புதம் என்னளவில் அநுபவிக்கத்தக்க தொன்றே அன்றி, அறியத்தக்கதொன்றன்று என வியந்து கூறிய அற்புதப்பத்தாம் என்க.

# 42. சென்னிப்பத்து

[ சிவவிளைவு ]

திருப்பெருந்துறையிலே அடிகள் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, இறைவன் அன்று குருநாதனாக எழுந்தருளிவந்து திருவடிசூட்டியதால் விளைந்த இன்பம் எண்ணத்தில் தோன்ற அவ்வின்பவுணர்ச்சியால், இன்றும் தம் சென்னியில் திருவடி விளங்குவதாகக் கண்டு இதனை அருளிச்செய்கின்றார்கள்.

இப்பத்தின் ஒவ்வொரு பாட்டினிறுதியடியும் 'சென்னி மன்னி' யென்ற சொற்றொடர் வருதலானும், தம் சென்னியில் திருவடி விளங்கும் அனுபவத்தை அறிவிப்பதாலும் சென்னிப்பத்து எனப் பெயர்பெற்றது.

திருவாசகத் திருவுள்ளகிடையென்னும் பழையகுறிப்பு, சிவ விளைவு அதாவது சீவனுக்கு நிச்சயப்படுத்துதல் என்னும். இதன் கருத்து, சிவம் என் சென்னியில் விளைந்தது; திருவடியாக மலர்ந்தது எனத் தம்மனுபவம் அறிவித்து, இப்பேறு நுமக்கும் உளதாம் எனச் சீவனுக்கு உறுதிப்படுத்தியதாம்.

'மன்னு திருவடிச் சென்னிப் பத்துத் தன்னிகரான தனிச்சிவ விளைவு' என்பது அகத்தியச்சூத்திரம். 'குஞ்சிதபாதப்பேரானந்தம் சுவானுபூதியானபின், கடையேனையாண்ட கருணைமாக்கடல் யான் தானாய், ஆனந்தம்பெற முடிமலர் அடியிற்சூட்டும் முறைமையால், அடைந்த ஆனந்தமே அருளால் தெவிட்டாப் பேரின்பம் என அருளியது' என்பது பழையவுரை. இவற்றின் கருத்து, திருவடி சூட்டப்பெற்ற பின்பு அத்திருவடி தம் முடிமேல் விளங்குவதால் விளையும் ஆனந்தம் தெவிட்டாத பேரின்பமாம் என்று உயிர்களுக்கு உணர்த்துவது என்பதாம். குருநாதன் திருவடி சூட்டியதால் தாம் பெற்ற இன்பத்தை வியந்து கூறியது சென்னிப்பத்து என்பதாம்.

'தூயவருட் குருபதத்தைச் சூட்டுதற்குப் பெற்றவுயிர் சுகத்தை நோக்கிச், சேயமலர்ப் பதத்தருமை அடியரொடும் வியந்துரைத்தல் சென்னிப்பத்தே' என்பது பழைய திருப்பெருந்துறைப் புராணம். அடியார்களை விளித்துத் தாம்பெற்ற திருவடியின்பத்தை வியந்து உரைப்பது சென்னிப்பத்து என்பது கருத்து.



மந்திரி திருவாதவூரர்.    திருவாதவூரடிகள்.    திருவாசகத்துடன் மாணிக்கவாசகர்.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

577 தேவ தேவன்மெய்ச் சேவகன்
தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலும் அறியொணா
முதலாய ஆனந்த மூர்த்தியான்
யாவ ராயினும் அன்பரன்றி
அறியொ ணாமலர்ச் சோதியான்
தூய மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னிச் சுடருமே. 1

இ-ள்: தேவர்களனைவருக்கும் தேவனும், உண்மைவீரனும், அழகிய திருப்பெருந்துறைத்தலைவனும், பிரமன் திருமால் உருத்திரன் என்ற மூவராலும் அறியமுடியாத மூவர்க்கும் முதலாகிய மூர்த்தியும், அன்பர்களையன்றி வேறு யாவரானும் அறிய ஒண்ணாத மலரின்சோதி போல்பவனும் ஆகிய சிவபெருமானுடைய திருவடியிரண்டும் என் தலைமீது நிலைபெற்று விளங்கும் என்றவாறு.

சிவபெருமானுடைய் தூய திருவடித்தாமரைக்கூட்டம் என் தலைமீது விளங்குகின்றன என்பது கருத்து.

சேவகன் - வீரன். கைக்கண்ணவாய படைகளையும் சூழ வரும் துணைவர்களையும் பயன்படுத்தாமலே சிரித்தும், விழித்தும், கிள்ளியும், உதைத்தும் வெற்றிகண்டவனாகலின் உண்மை வீரன் என்றது.

மூவர் - பிரம விஷ்ணு ருத்திரர்கள். இம்மூவரும் படைத்தல் காத்தல் அழித்தலைச் செய்யும்பொருட்டு இறைவனால் நியமிக்கப்பெற்ற சகலான்மாக்கள் ஆவர். அவர்களாலும் அறிய முடியாதவன் இறைவன். இம்மூவர்க்கும் காலத்தானும், தன்மையானும் முதல்வன். இவர்களைப்போல மாயாகாரியமான உடல் அவனுக்கு இன்று; ஆனந்தமே வடிவு என்பார் 'மூவராலும் அறியொணா முதலாய ஆனந்தமூர்த்தியான்' என்றார்.

அன்பர் அன்றி யாவராயினும் அறியொணா மலர்ச்சோதியான் - சிவாகமவிதிப்படிச் சிவாநுபூதிமானாகிய ஆசாரியன் இருந்துகாட்டி உபதேசிக்க அங்ஙனம் நிற்கும் முறைமையில் நிற்கும் மெய்யன்பரன்றிப் பிறர் யாவராயினும் அவர்களால் அறியமுடியாத இதயத்தாமரையில் விளங்கும் ஒளிவடிவினன்

என்பது. சிவபூசையில், புறத்தே சிவலிங்கத்துச் சிவனை ஆவாகனம் செய்யும்போதும், அதற்கு முன்பு அகப்பூசையாகிய அந்தர்யாகபூசை புரியும்போதும், சிவனை இதயமாகிற பதினாறிதழ்த்தாமரையின் நடுவில் பெருவிரலளவினதாகிய சோதி வடிவாகத் தியானிப்பதும், அப்பெருமானைப் புறப்பூசைக்கண் சிவலிங்கத்தினிடத்து ஆவாகிப்பதும் மரபாதலின், இங்ஙனம் முட்டாது மலர்கொண்டு பூசிக்கும் மெய்யன்பர்க்கு அன்றி வேறு எத்தகையார்க்கும் அறியவொண்ணாத மலரின்கண் விளங்கும் சோதியாயினன் சிவன் என்றார். சைவநூன்மரபு அறியாதார் சிலர் மலர்ச்சோதியான் என்பதற்கு ஒளிவடிவினன் என்று மட்டும் உரைகூறி ஒழிவர். யோகநூலுணர்வுடையார் சிலர், ஆயிர இதழ்த்தாமரை வடிவாகிய சகஸ்திர ஆரமாகிற பிரமரந்திரத்து ஒளிவடிவாக விளங்குபவன் என்பர். ஆருதாரங்களிலும் விளங்கும் மலர்களில் ஒளிவடிவாகத் திகழ்வதே இறையியல்பாக யோகநூலுரைத்தலின் உச்சியில் விளங்குகின்றான் என்பதில் ஒரு தனிச்சிறப்பின்மை அறிக. அன்றியும் உச்சிக்கு மேலுள்ள துவாதசாந்தத்தும் ஒளிவடிவாகவே இறைவன் விளங்குகின்றான் என்பது சிவாகம உபநிடதக்கருத்துக்கள்.

தூய சேவடி, மாமலர்ச் சேவடி எனக் கூட்டுக. பாசங்கள் சென்று பற்றாது இயற்கையே தூய்மையான சேவடி, அநுபூதிமான்கட்குத் தாமரையாகிய பெரிய மலர்போல அநுபவிக்கத் தக்க திருவடி என்க.

சேவடி இரண்டாயினும், சிவாநுபவ முதிர்ச்சியால் சென்னியில் ஊசிகுத்த இடமின்றிப் பல்லாயிரக் கணக்காகப் பல்கித் தோன்றுவதாக அடிகள் அநுபவிப்பதால் 'சேவடிக் கணம்' என்றார். கணம் - தொகுதி. மன்னி - நிலைபெற்று.

இப்பத்து, திருவடி சென்னி மன்னிச் சுடருதலாகிய சிவவிளைவு உணர்த்துதலின் சென்னிப்பத்தாயிற்று. ஏனையவற்றிற்கும் இக்கருத்தே கொள்க.

578 அட்ட மூர்த்தி யழகனின்னமு
தாய ஆனந்த வெள்ளத்தான்
சிட்டன் மெய்ச்சிவ லோகநாயகன்
தென்பெ ருந்துறைச் சேவகன்
மட்டு வார்குழல் மங்கையாளையோர்
பாகம் வைத்த அழகன்றன்
வட்ட மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. 2

இ - ள் : மண் புனல் அனல் கால் வளி சூரியன் சந்திரன் இயமானன் என்ற எட்டின் வடிவானவனும், அழகனும், இனிய அமுதம்போன்ற ஆனந்தவெள்ளமானவனும், பெரியவனும், அழியாத சிவலோகத்திற்குத் தலைவனும், தெற்கின் கண்ணதாகிய திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள வீரனும், தேனொழுகுகின்ற கூந்தலையுடைய உமாதேவியை இடப் பாகத்துவைத்த அழகனுமாகிய சிவபெருமானுடைய வட்டமான பெரிய மலர்போன்ற சேவடிக்கூட்டம் நம் சென்னியில் நிலைபெற்று விளங்கும் என்றவாறு.

உமாதேவியை ஒரு பாகத்து வைத்த அட்டமூர்த்தியாகிய அடிகள் திருவடிமலர்க்கூட்டம் என் சென்னியில் நிலைபெற்று மலரும் என்பது கருத்து.

அட்டமூர்த்தி என்பதனால் இறைவனுடைய எல்லாமாயிருக்குந்தன்மையும், அழகன் என்பதால் எல்லாவுயிர்களின் உள்ளத்தைக் கவரும் ஆற்றலும், ஆனந்தவெள்ளத்தான் என்பதால் அளவிலின்பமுடைமையும், சிட்டன் என்பதால் முழுமுதற்றன்மையும், சிவலோகநாயகன் என்பதால் வீடுபேற்றினையளிப்பவன் அவன் ஒருவனே என்ற தனிமையும், தென்பெருந்துறைச் சேவகன் என்பதால் எளிவந்த கருணையுடைமையும், மங்கையாளை ஓர்பாகம் வைத்த அழகன் என்பதால் போகியாயிருந்துயிர்க்குப் போகம்நல்குதலையும் உணர்த்தியமைகாண்க.

பரிபாகமுற்ற உயிர்களின் அநுபவக்காலத்து இறைவன் இனிய அமுதமாக இனித்து ஆனந்தமே வடிவாக விளங்குதலின் 'இன்னமுதாய ஆனந்தவெள்ளத்தான்' என்றார்.

சிட்டன் - எல்லாரையும் கற்பிப்பவன். சிஷ்டன் என்பதன் திரிபு. அதனால் பெரியவன் என்று பொருள் காணப்பெற்றது. யாவர்க்கும் பெரியோன் என்பது பழையவுரை. சிட்டம் - ஒழுக்கம் எனப் பொருள்கொள்வாரும் உளர். சேவகன் - வீரன். குதிரைச்சேவகன் என்பது பழையவுரை.

திருவடி சென்னி மன்னி மலர்தல் சிவவிளைவு ஆதலையுணர்த்தி, மெய்யன்பு பூணின் உங்களுக்கும் உறுதியாகக் கிடைக்கும் எனத்தோன்றவைத்தலின் இத்திருப்பாடலும் வரும் பாடல்களும் சிவநிச்சயம் உணர்த்தியவாறறிக.

579 நங்கைமீரெனை நோக்குமின் நங்கள்
நாத னம்பணி கொண்டவன்
தெங்கு சோலைகள் சூழ்பெருந்துறை
மேய சேவகன் நாயகன்

மங்கை மார்கையில் வளையுங்கொண்டெம்
உயிருங் கொண்டெம் பணிகொள்வான்
பொங்கு மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னிப் பொலியுமே. 3

இ-ள்: பெண்களே! என்னைப் பாருங்கள்; நம் எல்லோருக்கும் தலைவனும், படைக்கலங்களை அணியாகக் கொண்டவனும், தென்னஞ்சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள குதிரைவீரனும், தலைவனும், நம்போன்ற பெண்களின் கைகளில் வளையல்களைப் பறித்துக்கொண்டு, எம் உயிரையுங்கொள்ளைகொண்டு, எம்மைப் பணிகொள்பவனுமாகிய சிவபெருமானுடைய, தேன் பொங்குகின்ற செந்தாமரைபோலும் திருவடிக்கூட்டம் சென்னி மன்னிப்பொலியும் என்றவாறு.

பெண்களே! வாருங்கள்; நம் வளையலையும் உயிரையும் கொண்டு எம்மைப் பணிகொள்ளும் ஆன்மநாதப்பெருமானுடைய திருவடிமலர்கள் நம் சென்னி மன்னிப் பொலியும் என்பது கருத்து.

ஆன்மநாயகன் ஒருவனேயாக, ஏனைய அயன் அரி முதல் மக்களீறான அனைவரையும் நங்கைமார்களாக அடிகள் அறிதலின் அனைவரையும் நங்கைமீர் என விளிக்கின்றார். நங்கைமீர் என்றது நாயகனை அறிந்து அனுபவிக்கத்தக்க பரிபாகமுற்ற யுவதிகளை என்க. பரிபாகமெய்தாத பேதையும் பெதும்பையுமாயின், நாயகனுடைய அனுபவம் அறியார்கள் ஆதலின் இங்ஙனம் பரிபாகமுற்ற மெய்யன்பரையே விளித்ததாகக் கொள்க.

யான் தலைவனோடு கூடி எங்ஙனம் களித்து இன்பமே வடிவாய்த் தன்வசமழிந்து வாழ்கின்றேன்; இங்ஙனம் இன்ப வாழ்வு வாழ்கின்ற என்னைப் பாருங்கோள் என்று எடுத்துக் காட்டாகத் தம்மையே உணர்த்துகிறார்; நீங்களும் இத்தகைய இன்பம் எய்தலாம் என்ற சீவநிச்சயம் உண்டுபண்ணுதற்காக.

உன் நாயகனோடு புணர்ந்து இன்பம் நுகர, இன்பமயமேயாக உனக்கு உரிமை உண்டு; எங்கட்கும் உண்டோ? என ஐயம் அவர்கட்குத் தோன்றக்கூடுமெனத் திருவுளத்தெண்ணி, அவன் எனக்குமட்டும் நாதன் அல்லன், நம் அனைவருக்குமே நாதன் எனத் தேற்றுகிறார்.

அந்த நங்கைமார்கள் ஐயோ அவன் கையில் சூலம் வாள் எரி முதலிய கொலைக்கருவிகள் இருக்கின்றனவே! ஆதலால்,

யாங்கள் அவனை அணுகவும் அஞ்சுகிறோம் என்றதாக எண்ணி அவை யாவும் கொலைக் கருவிகளாயினும் கொல்வன அல்ல; அழகுக்காக அணியப்பெற்றனவே; இக்கருவிகளைக்கொண்டு கொன்றதாக அவன்வரலாற்றில் எங்காவது கண்டும் கேட்டும் இருக்கின்றீர்களா? அஞ்சாதே வாருங்கள் என்கிறார்.

தெங்கு தாளாலே தானுண்ட நீரைத் தலையாலே தந்து தாகம் தணிப்பவை. அத்தெங்கஞ்சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறையே அவன் விரும்பி உறையும் இடம். அவனே வீரன். ஆதலால் உங்கள் பேரின்பக்காமந்தணியப் பொழிலை இடமாகக்கொண்டு, வந்து கூடுங்கள் என்று குறிப்பிப்பார் 'பெருந்துறை மேய சேவகன் நாயகன்' எனக் குறியிடமும், அவன் வீரமும், தன்னிகரின்மையும் கூறினார்.

அவன் கூட்டத்தையே விரும்பியுள்ள நீங்கள் புடைபெயரின் உங்கள் கையிலுள்ள வளையல்களையும், உயிரையுங்கூடக் கவருவான்; நம் அனைவரையும் தமக்கே பணிசெய்யப் பணிப்பான். அங்ஙனம் ஆளுமை வாய்ந்த ஆடவனுக்கு வாழ்க்கைப் படுவோம் வாருங்கள்; நோக்குங்கள் என்கின்றார். இவற்றால் பதிகக் கருத்தும் விளங்குதல் காண்க.

580 பத்தர் சூழப் பராபரன்
பாரில் வந்துபார்ப் பானெனச்
சித்தர் சூழச் சிவபிரான்
தில்லை மூதூர் நடஞ்செய்வான்
எத்த னாகிவந் தில்புகுந்தெமை
ஆளுங் கொண்டெம் பணிகொள்வான்
வைத்த மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. 4

இ - ள்: பராபரனாகிய சிவன் அடியார்கள் புடைசூழ அந்தணவடிவுடன் ஆசாரியனாகப் பூமியில்வந்து, சித்தர்கணம் புடைசூழத் தில்லையாகிய பழைய ஊரின்கண்ணுள்ள மன்றுள் ஆனந்த நடனஞ்செய்வானும், எத்தனாகி எழுந்தருளிவந்து என் வீட்டிற்புகுந்து எம்மை இல்லாளாக ஏற்றுக்கொண்டு எம்மைப் பணிகொள்வானும் ஆகிய சிவபெருமான் சூட்டிய திருவடித் தாமரைமலரின் கூட்டம் எம் சென்னி மன்னி மலரும் என்றவாறு.

அடியார் புடைசூழ ஆசாரியனாகப் பூமியில்வந்து, சித்தர் சூழத் தில்லைமன்றுள் ஆடுகின்ற பெருமான் எத்தனாகி எம் இல் புகுந்து எம்மை இல்லாளாக ஏற்று எம் பணி கொள்வான்;

அவன் சூட்டிய திருவடிமலர் எம் சென்னியில் மன்னி மலரும் என்று தலைவி நிலையில் அடிகள் அறிவிக்கின்றார்கள்.

இறைவன் பெரிய எத்தன். எத்தன் - தந்திரக்காரன்; ஏமாற்றிப் பிழைப்பவன். வருகின்றகாலத்துச் சிவனடியார்கள் பலர் புடைசூழக் குருநாதனாக வந்தான்; சித்தர்கள் பக்கங்களில் நின்று சேவிக்கத் தில்லை மன்றினுள் திருநடம் புரிந்தான்; பின்னரோ மெதுவாக எம் வீட்டில் யாம் தனியே இருக்கும் போது புகுந்துவிட்டான்; எம்மை இல் ஆளாகக்கொண்டான்; எம்மை ஆட்டிப் படைக்கின்றான்; அவன் அருளால் சூட்டிய காதல் அடையாளமாகிய மலர்கள் இதோ எம்சென்னியில் நிலை பெற்றுள்ளன என்று சிவவிளைவைத் தெரிவித்தல் காண்க.

581 மாய வாழ்க்கையை மெய்யென்றெண்ணி
மதித்திடாவகை நல்கினான்
வேய தோளுமை பங்கனெங்கள்
திருப்பெருந்துறை மேவினான்
காயத் துள்ளமு தூறவூறநீ
கண்டு கொள்ளென்று காட்டிய
சேய மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. 5

இ - ள்: பொய்யான உலகவாழ்க்கையை மெய்யென்று எண்ணி அதனைப் பாராட்டாதவண்ணம் எமக்கு ஞானத்தை நல்கியவனும், மூங்கிலை ஒத்த தோள்களையுடைய உமாதேவியை இடப்பாகத்து உடையவனும், எமது திருப்பெருந்துறைக்கண் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய சிவபெருமான், என் உடம்பினுள் இன்ப அமுது சுரக்கச்சுரக்க, 'நீ கண்டு கொள்' என்று எனக்குக் காட்டிய சிவந்த செந்தாமரைப் பொற்பாதங்கள் எம் சென்னி மன்னி மலரும் என்றவாறு.

இவ்வுலக வாழ்வை உறுதியென்று எண்ணி அழியாமல், உமையொருபாகனை எழுந்தருளிவந்து என் உடம்பில் இன்ப அமுது ஊறச்செய்து, இதனைக் கண்டுகொள் என்று காட்டிய திருவடி எம்சென்னியில் மலர்ந்திருக்கின்றது என்பது கருத்து.

உலகவாழ்வு தோன்றி அழியும் தன்மையதாகலின் 'மாய வாழ்க்கை' என்றார். மெய் என்று எண்ணுதல் திரிபுணர்ச்சி. இங்ஙனம் பொய்யை மெய்யென்றெண்ணும் விபரீத ஞானத்தால் ஆன்மா நெறிதவறிச் செல்லும். அங்ஙனம் அது சென்று அழியாதவண்ணம் காத்தனன் என்பதை 'மாயவாழ்க்கையை மெய்யென்றெண்ணி மதித்திடாவகை நல்கினான்' என்றார்.

வேய: அகரம் சாரியை. வேய் - மூங்கில். பசிய மூங்கில் தண்மையும், வழுவழுப்பும் உடைமையின் பெண்கள்தோளுக்கு ஒப்பாயிற்று.

வண்டுதேப் பூவினுள் தேன் சுரப்பதுபோல, கன்று முட்ட ஆவின்மடியிற் பால்சுரப்பதுபோல அவன் என்னுடன் தோய என் உடலில் இன்ப அமுது ஊறிக்கொண்டே இருந்தது: இன்பநுகர்ச்சியில் யான் பரவசப்பட்டு அவ்வநுபவத்தையும் அறியமாட்டாது மயங்கிக் கிடந்தேன்; அப்பொழுது சிறிது தெளிவித்து இவ்வநுபவத்தைக்கண்டுகொள் என்று காட்டியது என்தலையில் அவன் சூட்டிய திருவடிமலர்; அம்மலர் என்றும் நிலைபெற்று விளங்கிக்கொண்டேயிருக்கிறது என்ற செய்யுள் அநுபவத்தைச் சொற்கள்தோறும் ஊன்றி நின்று அறிக.

காயத்துள் அமுது ஊற ஊற என்பது சிவவிளைவையும், சேவடி மன்னி மலரும் நீங்களும் வாருங்கள் எனக் குறிப்பான் அழைப்பது சீவநிச்சயத்தையும் தெரிவித்தல் காண்க.

582 சித்த மேபுகுந் தெம்மையாட்கொண்டு
தீவி னைகெடுத் துய்யலாம்
பத்தி தந்துதன் பொற்கழற்கணே
பன்மலர் கொய்து சேர்த்தலும்
முத்தி தந்திந்த மூவுலகுக்கும்
அப்பு றத்தெமை வைத்திடும்
அத்தன் மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. 6

இ - ள்: எம் மனத்துட்புகுந்து, எம்மை ஆட்கொண்டு, எம் தீவினைகளைப்போக்கி, நாம் உய்ந்துபோதற்குரிய அன்பையும் உதவி, நாங்கள் பல பூக்களைக்கொய்து தனது பொன் போன்ற திருவடியிலே சாத்தி வழிபட்டதும் வீட்டின்பத்தையுதவி, இந்த மூன்றுலோகங்கட்கும் அப்பால் எம்மை வைக்கும் தலைவனுடைய திருவடித் தாமரைகள் சென்னி மன்னி மலரும் என்றவாறு.

எமது மனத்துள் தாமே வலியவந்து புகுந்து எம்மை ஆட்கொண்டு, அன்பையும் உதவி, நாங்கள் அன்புடன் அர்ச்சிக்க வீட்டின்பத்தையும் உதவிய சிவபெருமானுடைய திருவடி மலர்கள் எமது சென்னியில் நிலைபெற்று விளங்குகின்றன என்பது கருத்து.

'என்மனத்திடை மன்னிய மன்னே' (390) என்பராகலின், இறைவன் கருணையால் என்மனத்தைக் கோயிலாகக்கொண்டு தாமே எழுந்தருளினன் என்பதைச் ' சித்தமே புகுந்து ' என்பதால் குறித்தார்.

சித்தத்துள் புகுந்து எம்மை ஆட்கொண்ட பின்பு, யாம் செய்யும் செயல்கள் யாயும் சிவச்செயல்களே ஆம். ஆதலால், வினை ஏறாது. ஆகவே சஞ்சித ஆகாமியவினை இல்லையாம். கருடன் பக்கத்திலிருப்பவனைப் பாம்பு கடியாததுபோலச் சிவச் சார்பில் பிராரத்த வினையும் வலி குன்றிப் பார்வை அளவில் கழியும் என்பதனைத் ' தீவினை கெடுத்து ' என்றார்.

உய்யலாம் பத்தி - உய்தற்கு உபாயமாகிய அன்பு. அன்பு, உயிரின் பொதுக்குணமாக உலகியலில் போகப்பொருள்மீது திருப்பப்பெறின், வினைக்கு ஏதுவாய் உய்தியைக் கொல்லும்; இறைவனிடம் செலுத்தப்பெறுமாயின், வினைகளைக் கெடுத்து உய்தியைத் தரும். இவற்றுள் இறைவன் உதவியது 'உய்யலாம் பத்தி' என்றதாம்.

புலர்வதன்முன் பூப்பறித்திட்டு வழிபடுதலே அன்பர் செயலாதலின் அங்ஙனம் யான் பூசித்தலும், அதற்குப் பயனாக வீடு பேற்றைத் தந்தான்; கிரியையும் யோகமும் கலந்த நெறியாய் ஞானவாயிலான பூசைக்கு ஞானிகள் எய்தும் பேரின்பத்தை நல்கினான்; என் தகுதி நோக்கியதன்று அவன் கைவண்மை; தன்தகுதி நோக்கியது என்று பாராட்டியவாறு.

மூவுலகு - மண் விண் பாதலம் என்பன. இவை மாயா காரியமான உலகுகள். முத்தியுலகு மாயாதீதமானதாதலால், இம்மூன்றுலகுக்கும் அப்புறத்ததாகிய வீட்டுலகத்தே எம்மை விளங்கவைத்தனன். அதனால் இறைவன் தனயன்மீது வைத்த பேரன்பால் தன் உடைமை அனைத்தும் வழங்குகிற தந்தையாயினானென்பார் 'அத்தன்' என்றார். மாமலர் - தாமரை. பூவினுட் பெரியது அதுவே ஆதலின். திருமாலுக்குரிய பூ தாமரை என்பாருமுளர். மாமலர்ச்சேவடி - செந்தாமரை மலர்போலும் செவ்விய திருப்பாதம். கணம் - கூட்டம்.

'முத்தி தந்து' என்றது சிவவிளைவையும், 'சேவடி சென்னி மலரும்' என்றது நிச்சயத்தையும் கூறியது ஆம் என்க.

583 பிறவி யென்னுமிக் கடலை நீந்தத்தன்
பேரருள் தந் தருளினான்
அறவை யென்றடி யார்கள் டங்கள்
அருட்கு மாப்புக விட்டுநல்

உறவு செய்தெனை யுய்யக்கொண்ட
பிரான்றன் உண்மைப் பெருக்கமாம்
திறமை காட்டிய சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. 7

இ - ள்: பிறவியாகிற கடலைநீந்திக் கடக்கத் தன் பேரருளாகிற புணையைத் தந்தருளினவனும், என்னைத் துணையற்றவன் என்று எண்ணி அடியார்களுடைய திருவருட் கூட்டத்தில் புகச்செய்து அவர்களோடு நெருங்கிய உறவுண்டாகச் செய்து அடியேனை உய்யக்கொண்ட தலைவனும் ஆகிய சிவபெருமானது, மெய்ம்மையின் பெருக்கமாகிய வலிமையை அடியேற்குக் காட்டிய சேவடிக்கூட்டம் என் சென்னி மன்னி மலரும் என்றவாறு.

என் பிறவியைப் போக்கத் திருவருள் புரிந்து, என்னை அடியார்கூட்டத்துள் புகச்செய்து, உய்யக்கொண்ட பெருமான் மெய்ம்மையின் பெருக்கமாகிற திறமையைக் காட்டிய சேவடி என் சென்னி மன்னித் திகழும் என்பது கருத்து.

பிறவியைக் கடலாக உருவகித்துத் திருவருளைப் புணையாகவும், முத்தியைக் கரையாகவும் கருதவைத்தமையின் இது ஏகதேசவுருவகம்.

அறவை - துணையற்றவன். யான் துணையற்றவன் என்று எண்ணி என்னை அடியார்கூட்டத்தில் கூட்டி, அவர்களோடு நல்லுறவையும் உண்டாக்கி உய்யவைத்தான் இறைவன் என வியந்துரைத்தவாறு.

உண்மைப் பெருக்கமாம் திறமை - மெய்ம்மையின் பெருக்கமாக விளங்குகின்ற ஆற்றல். மெய்ம்மை என்றும் அழியாது நிலைத்திருப்பது; பெருக்கம் - அதன் வளர்ச்சி. என்றும் அழியாது நிலைத்திருப்பதாகிய வளர்ச்சியை நல்குகின்ற திருவருளாற்றல். உண்மைப் பெருக்கத்தாலாம் திறமை என்பாரும், உண்மைப்பெருக்கமாகிற வகை என்பாருமுளர். திறமென்பது வகையையுணர்த்துமன்றித் திறமை என்பதை உணர்த்துமா என்பது ஆயத்தக்கது.

'உய்யக்கொண்ட' என்பதாற் சிவவிளைவும், 'சென்னி மன்னித் திகழும்' என்பதால் நீவிரும் அன்பு செய்யின் அது கிட்டும் என்னும் நிச்சயமும் தோன்றநிற்பது இத்திருப்பாடல்.

584 புழுவி னுற்பொதிந் திடுகுரம்பையிற்
பொய்த னையொழி வித்திடும்
எழில்கொள் சோதியெம் ஈசனெம்பிரான்
என்னு டையப்ப னென்றென்று
தொழுத கையின ராகித்தூய்மலர்க்
கண்க ணீர்மல்கு தொண்டர்க்கு
வழுவி லாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. 8

இ-ள்: புழுக்கள் பொதிந்துள்ள உடலில் அறியாமையாகிய பொய்யைப்போக்கும் அழகிய சோதி! எம் ஈசன்! எம்பிரான்! என்தந்தை!-என்று பலகாற்சொல்லிப் பூக்களைத் தூவித் தொழுகின்ற கைகளையுடையவர்களாய், கண்களில் ஆனந்தநீர் ததும்பநிற்கின்ற தொண்டர்களுக்கு, நழுவிப் போகாத திருவடித் தாமரைகள் சென்னி மன்னி மலரும் என்றவாறு.

என் அறியாமையை அகற்றும் ஞானவொளியே! ஈசனே! எம்பிரானே! எந்தையே! என்றென்று மலர்களைத் தூவித் தொழுத கையினராகிக் கண்ணீர்மல்க நிற்கும் தொண்டர்க்கு, சென்னியில் அவன் திருவடி மன்னி மலரும் என்பது கருத்து.

உடல் புழுக்கூடாதலால் அதனைப் 'புழுவினுற்பொதிந்திடு குரம்பை' என்றார். பொய்-அழியுந்தன்மையவாகிய அறியாமை. அறியாமை அழிவதாய்ப் பொய்யைப்பற்றி நிற்பது ஆகலின் அதனைப் பொய்யென்றார். அவ்வறியாமையைப் போக்கும் அழகிய சோதியென இறைவனைத் தொண்டர்கள் புகழ்வதாக அருளுகின்றார். இறைவன் ஞானவொளியாயும் வெப்பமின்றியும் இருத்தலின் 'எழில்கொள் சோதி' என்றருளினார்.

மலர்தூய் என்பது தூய்மலர் என மாறிநின்றது. தூய் மலர்க்கண்கள் நீர்மல்கும் என ஒருதொடராக்கி, தூய மலரைப் போலும் கண்களிலிருந்து நீர் பெருகும் என்பாரும் உளர். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கப் பூசிப்பவர்களைவிட்டுத் திருவடி என்றும் விலகாதாகலின் 'வழுவு இலா மலர்ச்சேவடி' என்றார். வழுவு - நழுவுதல்: முதனிலைத் தொழிற்பெயர். வழு இலா அடி எனப்பிரித்துக் குற்றமில்லாத அடி என்பாருமுளர். வழுவிலா என்ற அடையை மலருக்கு ஏற்றிக் குற்றமில்லாத மலர்போலும் சேவடி எனலுமாம். மலர்தலும் கூம்புதலுமாகிய குற்றமில்லாது என்றும் மலர்ந்துள்ள மலர்போலும் திருவடி என்க.

தொண்டர்க்குச் சேவடி சென்னி மன்னி மலரும் என்றமையால் நீவிரும் தொண்டராயின் சிவவிளைவு அடைதல் நிச்சயம் என்பது உணர்த்துகின்றமையின் இத்திருப்பாடலும் சென்னிப் பத்தின் பொருளியையுடைத்தாதல் அறிக.

585 வம்ப னாய்த்திரி வேனை வாவென்று
வல்வி னைப்பகை மாய்த்திடும்
உம்ப ரானுல கூட றுத்தப்
புறத்த னாய்நின்ற வெம்பிரான்
அன்ப ரானவர்க் கருளிமெய்யடி
யார்கட் கின்பம் தழைத்திடும்
செம்பொன் மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. 9

இ - ள்: வீணாகத் திரிந்த என்னை 'வா' என்றழைத்து, என்னுடைய வலிய வினைகளாகிற பகைகளை அழிக்கின்ற தேவனும், இவ்வுலகனைத்தையும் ஊடறுத்துச்சென்று அவற்றின் புறத்தனாய் நின்ற எந்தலைவனும் ஆகிய சிவபெருமான், அன்பர்கட்கு அருள்செய்தும் மெய்யடியார்களுக்கு இன்பம் மேன்மேலும் தழைக்கவும்செய்கின்ற செம்பொன்னிறமான திருவடித் தாமரைகள் எமது சென்னியின்மீது நிலைபெற்று விளங்கும் என்றவாறு.

வீணாகத் திரிந்த என்னை வலிய அழைத்து, வினைப் பகைகளை ஓட்டி, உலகாயும் உலகினைக் கடந்தும் விளங்குகின்ற சிவபெருமானுடைய திருவடிகள் எம் சென்னி மன்னி விளங்குமென்பது கருத்து.

வம்பன் - வீணன்; வம்புரைப்போன் எனலுமாம். பயன் இல்லாத சொல்லையும் - செயலையும் புரிந்து சுற்றித் திரிந்த என்னை 'இங்கே வா' என்று அழைத்து, இவன் இங்ஙனம் திரிவதற்குக் காரணம் இவன் செய்த வினைகளே என்பதை உளங்கொண்டு அவற்றைப் போக்கினான் என்பார் 'வம்பனாய்த் திரிவேனை வா என்று வல்வினைப்பகை மாய்த்திடும் உம்பரான்' என்றார். உம்பரான் - விண்ணவன். வினைகள் உயிரை உய்தி பெறாதவாறு தடுத்தலின் அவற்றைப் பகை என்றார். மீளவும் தோன்றாதவண்ணம் கெடுத்தான் என்பார் 'மாய்த்திடும் உம்பரான்' என்றார்.

ஊடறுத்தல் - இடையிட்டுக் கடந்து நிற்றல். இவ்வுலகங்களை எல்லாம் ஊடறுத்து, அவற்றைக் கடந்து உள்ளான்

இறைவன் என்பது 'உலகூடறுத்து அப்புறத்தனாய் நின்ற எம்பிரான்' என்ற பகுதியால் உணர்த்தப்பெறுகின்றது.

அன்பர் - இடைவிடாது மனத்தொழிலாகிய அன்பு செய்வோர். மெய்யடியார் - மனத்தொண்டும், உடற்றொண்டும் ஒருங்கியற்றுவோர். அன்பர்கட்குச் சீவகுணம் சிறிதிருக்கும்; மெய்த்தொண்டர்க்கு யாம் சிவனடிமை என்றதால் சீவகுணம் அறவே இருக்காது. ஆதலால், இறைவன் அவரவர் பரிபாகம் நோக்கி, அன்பர்க்கு அருளும் அடியார்க்கு இன்பமும் தழைக்கச் செய்கின்றான் என்றார். இச்செயல்களைத் திருவடிமேலேற்றிக் கூறினார்; சினைக்கும் முதலுக்கும் உள்ள ஒற்றுமை நயம்பற்றி.

இதனால் அன்பர் அடியார் இவர்கள் எய்தும் பயன் உணர்த்தப்பெறுதலின் சீவநிச்சயம் தெரிவித்தவாறாயிற்று.

586 முத்த னைமுதற் சோதியைமுக்க
ணப்ப னைமுதல் வித்தினைச்
சித்த னைச்சிவ லோகனைத்திரு
நாமம் பாடித் திரிதரும்
பத்தர் காளிங்கே வம்மினீருங்கள்
பாசந் தீரப் பணிமினோ
சித்த மார்தருஞ் சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள்: இயல்பாகவே பாசங்களில் நீங்கியவனும், ஒளிப்பொருள் அனைத்திற்கும் முன்தோன்றிய ஒளிப்பொருளும், மூன்று கண்களையுடைய தந்தையும், எல்லாப் பொருட்கும் விதையாக விளங்குபவனும், சித்தனும், சிவலோகனும் ஆகிய சிவபெருமானுடைய திருப்பெயர்களை வாயாரப் பாடித் திரியும் அன்பர்களே! நீங்கள் இங்கே வாருங்கள்; உங்களுடைய பாசக்கட்டு அற்று உய்ய வணங்குங்கள்; மனம் நிறைந்து விளங்கும் சேவடிக்கூட்டம் சென்னியில் நிலைபெற்று விளங்கும் என்றவாறு.

சிவநாமங்களைப் பாடித் திரியும் பத்தர்களே! இங்கே வாருங்கள்; உங்கள் கட்டு அகலக் கழல் பணியுங்கள்; மனம் நிறைந்த அவன் திருவடிகள் என் சென்னியில் நிலைபெற்று விளங்கும் என்பது கருத்து.

முத்தன் - மலங்களினின்று விடுபட்டவன். ஆதி முத்தரும் அநாதி முத்தரும் என முத்தர் இருவகையர். ஆதி முத்தர் மல

கன்மங்களிலிருந்து இறைவன் அருளால் விடுதிபெற்று உயர்ந்தோர். அநாதிமுத்தர் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவர். அநாதி முத்தன் சிவபெருமான் ஒருவனே ஆதலால் அடைமொழியின்றி 'முத்தனே' என்றார்.

சோதி - ஒளிப்பொருள். அவை சூரியன் சந்திரன் தீ முதலியவை. அவற்றிற்கெல்லாம் ஒளி வழங்கும் பொருளாதலின் 'முதற்சோதியை' என்றார்.

முக்கண் அப்பன் - சோம சூரிய அக்கினிகளைக் கண்ணாக உடைய தந்தை. முக்கண் விநாயகர் முதலிய ஏனையோருக்கும் உளவாயினும் சிவபெருமானுக்கே உரியதாகலின் 'முக்கண் அப்பனை' என்றருளினர்.

உலக வித்து எது? மாயை; மாயைக்கு வித்து எது? சத்தி; சத்திக்கு வித்து யார்? சிவமென பீஜாங்குர நியாயத்தின் முடிவு சிவத்தினிடம்சென்று தங்குதலின் 'முதல் வித்தினை' என்றனர்.

சித்தன் - சித்திகளில் வல்லவன்; இறைவன். எல்லாம் வல்ல சித்தரானமைபற்றிச் 'சித்தனே' என்றார்.

இவ்வண்ணம் உரை மன்கடந்து நிற்கும் ஒண்மையனாயினும், எம்மனோர் கண்டுய்யச் சிவலோகம் எனப்பெறும் திருப்பெருந்துறைக்கண்ணும் எழுந்தருளியுள்ளான் என்பார் 'சிவலோகனே' என்றார்.

திருநாமம் - அவனுடைய பெயர்கள். நாமம் - உருவத்தைப் பற்றி நிற்பது. உருவங்கள் பலவற்றிடையே வேறுபாடுணர்தற்காகக் காரணம் கருதியும் கருதாமலும் வழங்கப்பெறுவது. இறைவன் உருவற்ற பொருளாகவே, அவற்கு நாமம் இல்லையாயினும், ஆன்மாக்கட்கு அருள்செய்வதற்காக உருமேனி தாங்கியும் நாமந்தாங்கியும் வருவன் ஆதலின் அப்பெயர்களைப் பாடி அன்பர்கள் ஏத்துகின்றனர். அங்ஙனம் பாடியேத்தும் அன்பர்காள் வம்மின் என்று அழைக்கின்றார்.

உங்கள் சென்னியில் சேவடி மலராமைக்குக் காரணம் பாசம் உங்களை விடாமையே. அதனையொழித்தால் திருவடி சென்னியில் மன்னித்திகழும். பாசத்தையகற்ற ஒரேயுபாயந்தானுண்டு; அது இறைவனை வணங்குதல் ஒன்றே; ஆதலால் பணியுங்கள்; என் தலையிற் பொலிவதுபோல நும் தலையிலும் சேவடி திகழும் என்று உபதேசித்தவாறும்.

இறைவன் திருவடி தூயமாமலர் போல்வது; வட்டமானது; பொங்குமாமலர் போன்றது; சிவந்தது; முத்தியைத் தருவது; உலகங்கட்கெல்லாம் அப்புறத்தில் எம்மை வைப்பது; மெய்மை பெருக்கும் ஆற்றல் வாய்ந்தது; பொற்றுமரை போன்றது; பாசம் தீர்ப்பது என அதன் இயல்பை விளக்கி, அத்தகைய திருவடி நம் சென்னிமேல் விளங்கும்; பத்தர்காள்! நங்கைமீர்! வாருங்கள்; பணியுங்களெனச் சீவனுக்கு உறுதியை உபதேசிப்பது சென்னிப்பத்து.

# 43. திருவார்த்தை

*[ அறிவித்தன்புறுதல் ]*

வாதவூர்வள்ளல், திருப்பெருந்துறையில் தம் சென்னி மிசை திருவடி மன்னித்திகழ்வதை அநுபவித்து வீற்றிருக்கும் நாளேயில், சூழவுள்ள சிவபத்தர்களே நோக்கி, அவர்கட்கும் ஆர்வம் விளேயக் குருந்தடியிற் குருவாக இறைவன் வந்த காலத்து உபதேசித்த உபதேசமொழிகளின் அநுபவப்பொருளே அறிகின்றவர்களே எம் இறைவராவர் என அவ்வுபதேசவார்த்தையின் அருமையை வியந்து பாராட்டுகின்ருர்கள்.

வார்த்தை – சொல். கன்னியர் தம்முள் தனித்துக் கூடியிருக்குங்காலத்து ஒருத்தியைப் பார்த்து ஒருத்தி உன் தலேவன் யார்? ஒளியாது சொல் என வினவ, மற்றவள், வார்த்தை சொல்வதாக அமைந்தது இப்பகுதி. முன்னர், எம் கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க' (173) என்றதுபோல, இப்பகுதியுள் இறைவனுடைய அருட்செயல்களின் அடிப்படையுண்மையை அறியும் அநுபூதிமான்களே எம்பிரானுவர் என்றமை தெளிக.

இதுவரை நின்ஞல் அறியப்படாதது இது; நான் சொன்னவுடன் நீயும் அறிந்து இன்புறுவாய் என்றும் கூறியதாம்.

''மலம் அறுக்கும் திருவார்த்தைப் பத்தும், இலகுமருள் அறிவிக்க அறிதல்" என்பது பழையவுரை காட்டும் அகத்தியச்சூத்திரம். இதன் பொழிப்பு, முற்பதிகத்துத் திருவடியின்பமலர் சூட்டியதைக் கண்டு, அதன்மேல் அவனே தாஞய் ஆனந்தம் பெறுதலும், அடியார்க்கு அருளுதலும், அருட்பெருங்கருணேயை எடுத்தெடுத்துரைத்தலும் அன்பின் முறைமையாம் என அறிவிக்கிறது என்பது.

''அறம்பெருகும் பெருந்துறையிற் றமையாண்ட செயன்முதலாய் அரன்சீராட்டின், திறமறிவார் எம்பிரா ஞவரென உரைத்தல் திரு வார்த்தை யாகும்" என்பது பழைய திருப்பெருந்துறைப் புராணம்.

இவை அனேத்தையும் ஒருங்கு எண்ணின், குருவாக எழுந்தருளிய அரஞருடைய திருவிளேயாடல்களின் அடிப்படையுண்மை

அனுபவப் பொருளறிவாரே எம் தலைவராவர் என்று மகளிரோடு வார்த்தையாடுதல் திருவார்த்தையாம் என்பது பெறப்படும்.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

587 மாதிவர் பாகன் மறைபயின்ற
வாசகன் மாமலர் மேயசோதி
கோதில் பரங்கரு ணையடியார்
குலாவுநீதி குணமாக நல்கும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்திழிந்
தாதிப் பிரமம் வெளிப்படுத்த
அருளறி வாரெம் பிரானுவாரே. 1

இ - ள்: நம் பரமசிவன், உமாதேவியார் எழுந்தருளியிருக்கின்ற இடப்பாகத்தை உடையவன்; வேதமந்திரங்களாகவே தோன்றிய வார்த்தைகளை உடையவன்; இதயத்தாமரைக்கண் எழுந்தருளியிருக்கும் சோதி; குற்றமற்ற பெரிய கருணை; மெய்யடியார்கள் அளவளாவி மகிழும் ஞான நீதி; அன்பர்களுக்கு அனைத்தையும் குணமாகவேயருளும் பூக்கள் மலர்ந்த சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறைக்கண் எழுந்தருளியுள்ள எம் புண்ணியன்; இப்பூமியில் குருநாதனாகவந்து இறங்கிய முதன்மையான சிவசொரூபம்; இத்தகைய சிவபெருமான் அடியேற்குக்காட்டிய திருவருளை உணர்பவர்களே எமக்குத் தலைவர் ஆவார் என்றவாறு.

இறைவன் அடியேனுக்கு அருளிய திருவருளையுணர்பவர்களே எம் தலைவர் ஆவர் என்பது கருத்து.

உமாதேவியார் விளங்குகின்ற இடப்பாகத்தை உடையவனும், சாமவேதம் பயின்று பாடும் திருவார்த்தையுடையவனும், பெருமை பொருந்திய மலரிலே மேவியிருந்த சோதி வடிவானவனும், குற்றமற்ற மேலான திருவருளை அடியார்க்கு நிலைபேறுடைய நியதிப் பண்பாகக்கொண்டு நல்காநிற்கும் போதுகள் விரிந்த சோலைசூழும் பெருந்துறையில் கோயில்கொண்டு எழுந்தருளிய எமக்கு உரிய புண்ணியனும் ஆகிய இறைவன் இம் மண்ணிடை வந்து மூலப்பிரமம் தானேயாதலை வெளிப்படுத்தியருளிய அருட்செயலை அறிபவர்களே எம்பிரானுவர் என உரைப்பாரும் உளர்.

முன் உரையோடு இதற்குள்ள வேற்றுமை மறைபயின்ற வாசகன் என்பதற்குச் சாமவேதம் பயின்றுபாடும் திருவார்த்தை உடையவன் என்றுரைத்தலும், கோதில் பரங்கருணை அடியார் குலாவு நீதி குணம் ஆக நல்கும் புண்ணியன் பெருந்துறை எம் புண்ணியனெனக்கூட்டி, குற்றமிலாத மேலான கருணையை அடியார்களுக்கு நிலைபேறுடைய நியதிப் பண்பாகக்கொண்டு நல்கா நிற்கும் எனக் கொண்டதும், ஆதிப் பிரமம் வெளிப் படுத்த என்பதற்குத் தாமே மூலப்பொருள் என வெளிப்படுத்த என்பதுமாம். பொருள்நயம் உடையவற்றை ஓர்ந்துணர்க.

மறை பயின்ற வாசகன் - வேதங்களாகவே வெளிப்படும் வார்த்தைகளை உடையவன். இதனையே முன்னரும் 'வேத மொழியர் வெண்ணீற்றர் அன்னே என்னும்' (336) என்றமை காண்க. இறைவன் வாய்ச்சொல்லெல்லாம் வேதமே எனல் மரபு. ஆதலால், சாமவேதம்பயின்று பாடும் திருவார்த்தையுடையவ னென வலிந்துகூறல் முதன்மைக்கு இழுக்காமாறு ஓர்க. பழைய வுரையும் வேதவாசகம் அருள்வோனே என்றமை காண்க.

மாமலர் மேயசோதி - மூலமுதல் பிரமரந்திரம்வரை நாலிதழ் முதல் ஆயிரம் இதழ் வரையுள்ள தாமரை விளங்குவதாகவும், அவற்றுள் இறைவன் சோதியாக எழுந்தருளியிருப்பதாகவும் யோகநூலார் உரைப்பர். அவற்றுள், ஆயிர இதழ்த்தாமரை யுள் இருக்கும் சோதியே ஈண்டு ஓதப்பட்டதென்க.

காரணமின்றி உயிர்கள்மாட்டு எஞ்ஞான்றும் செலுத்தப் படுதலின் அதனைக் 'கோதில் பரங்கருணை' என்றார். இதனைக் காட்டிலும் மிக மேன்மையானது ஒன்றின்மையின் பரங்கருணை என்றதும் காண்க.

குலாவு நீதி - அளவளாவுகின்ற நீதியானவன். நீதி - நியதி என்பதன் திரிபாகக்கொண்டு நிலைபேறுடைய நியதி என்பாரும் உளர். அவர்கள் கூறும் பொருளில் குலாவுதல் - நிலைபெறுதல்.

ஆதிப்பிரமம் வெளிப்படுத்த அருள் - முழுமுதல் இறை சிவமே என்பதை வெளிப்படுத்தியருளிய திருவருள். அறிவார் அதனை வாசாஞானமாக அன்றி, அனுபவித்து அறிபவர்கள்.

மரபுவழிவந்த அநுபவஞானிகளே எம்தலைவராவர் என்று உபதேசித்தலின் இத்திருப்பாடல் அறிவித்தன்புறுதல் என்னும் கருத்தினையுடைய திருவார்த்தையின் முதற்பாடலாக இடம் பெற்றதென்க.

588 மாலயன் வானவர் கோனும்வந்து
வணங்க அவர்க்கருள் செய்தஈசன்
ஞாலமதனிடை வந்திழிந்து
நன்னெறி காட்டி நலந்திகழும்
கோல மணியணி மாட நீடு
குலாவும் இடைவை மடநல்லாட்குச்
சீல மிகக்கரு ணையளிக்குந்
திறமறி வாரெம் பிரானுவாரே. 2

இ - ள்: திருமாலும் பிரமனும் இந்திரனும் வந்து வணங்க அவர்களுக்கு அருள்வழங்கிய சிவபெருமான், இம் மண்ணுலகத்தில் வந்து இறங்கி நல்ல வழியைக் காட்டி, நன்மையோடு விளங்கும் அழகிய மணிகளால் அணிசெய்யப் பட்ட மாடங்கள் உயர்ந்து விளங்கும் திருவிடைமருதூரில் உள்ள இளமைதங்கிய பெண் ஒருத்திக்கு ஒழுக்கமிகத் திரு வருளை அளிக்குந்தன்மையை அறிபவர்களே எந்தலைவராவர் என்றவாறு.

அரிபிரமனாதியர் வந்து வணங்கும் பெருந்தகையாளன் இம்மண்ணுலகிற்குவந்து நல்ல முத்திநெறியைக்காட்டித் திரு விடைமருதூரில் பெண்ணொருத்திக்குக் கருணைசெய்த திறம் அறிவாரே எம் தலைவராவர் என்பது கருத்து.

மாலும் அயனும் தேவர்கட்குத் தலைவனாகிய இந்திரனும் தமக்குப் பகைவர்களால் ஊறுநேர்ந்தபோதெல்லாம் வந்து வணங்க அவர்கட்கு அருள்செய்த ஈசன் என்றது, அத்துணைப் பெருந்தகையாளன் என்பதை அறிவித்தவாறு.

ஞாலம் அதனிடை இழிந்து வந்து என மாறுக. அருவமாய் அறிவாய் மாயேயமான உலகங்களைக் கடந்துறையும் பெரு மான், உயிர்கள் உய்யவேண்டும் என்ற பெருங்கருணையால் திருமேனிதாங்கி, இம்மண்ணுலகில் இறங்கிவருதலை இங்ஙனம் கூறினர். இது இறைவனுடைய கைம்மாறில்லாத எளிவந்த கருணையைக் காட்டுவது.

நன்னெறி - நல்ல வழி; பேரின்பமயமாகிய வீட்டுலகினை எய்துதற்குரிய எளிய இன்பமானவழி. அது பத்திநெறி என்க. நலம் திகழும் மாடம், மணியணி கோல மாடம் எனக் கூட்டுக. இடைவைக்கண் உள்ள மாடங்கள் வெறும் போகாலயங்களாக மட்டுமில்லாமல் சிவப்பணி செய்யும் தவச்சாலைகளாகவும் விளங்குதலின் நன்மைவிளங்கும் மாடமென்றார். உமையொரு பாதியனாக இறைவன் போகியாயும் யோகியாயும் இருத்தல்

போலச் சைவசீலர்களும் இல்லறத்தினின்றே பதிபுண்ணியங் களைச்செய்து வீடுபேற்றிற்கும் வழிதேடுவர் என்க. இது மாடங் களின் ஒழுக்கநலம் உரைப்பது.

மணிகளால் அலங்கரிக்கப்பெற்ற அழகிய மாடம் என்றது மாடங்களின் செல்வவளம் கூறியது. நீடு குலாவும் இடைவை - உயர்ந்து விளங்கும் இடைமருதூர்.

சீலம் மிகக் கருணை அளிக்கும் திறம் - ஒழுக்கம் உயர்ந்து தோன்றக் கருணையளித்த தன்மையை அறிவார் எம்பிரானர் என்க.

வரகுணபாண்டியன் சிறந்த சிவபத்தன். வேப்பம்பழங் களைச் சிவலிங்கமெனக்கருதி வழிபட்டவன். தவளைகள் ஒலியை வேதபாராயணமாக எண்ணிப் பரிசில் வழங்கியவன். இடை மருதூர்க்கோயிலில் கிடந்த நாய்க்கட்டத்தைத் தானே எடுத்து எறிந்தவன். இத்தகைய அன்பன் திருமணம் புரிந்துகொண் டான். மணவறையைவிட்டு எழுந்ததும், தன் மனைவி மிக்க அழகியாக இருப்பதை எண்ணிச் சிறந்த பொருள்கள் சிவ பெருமானுக்கு உரியனவாயிற்றே ஆதலால் இவளை மகாலிங்க மூர்த்தியினிடமே அனுப்பிவிடுவோம் என்று எண்ணினன். திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றான். மகாலிங்கமூர்த்தியை ஏற்றுக்கொள்ளும்வண்ணம் வேண்டினன். பெருமானும் தமது சிவலிங்கத் திருமேனியில் அவள்மறைய இடந்தந்து கருணை பாலித்தார். அரசன் மகிழ்ந்து அரண்மனைக்குச் சென்றான். மறுநாள் விடியற்காலை அருச்சகர் வழிபாட்டிற்காக வந்த போது சிவலிங்கத் திருமேனியில் பெண்ணின் வலக்கைமட்டும் தொங்கிக்கொண்டிருந்தது. இதனைக்கண்ட அரசன் என்ன குறையோ? என்று வருந்தினன். இறைவன் அசரீரியாக, திரு மணக்காலத்தில் இக்கை உன்னால் தீண்டப்பெற்றது; மற்றும், அதனை விட்டுவைத்து உன் அன்பை உலகவர் உணர்ந்து ஈடேறவும் 'பெரிய அன்பின் வரகுணதேவன்' என உன்னைப் பாராட்டவுமாக விட்டு வைத்தோம் என்று கூறியருளினர். வரகுணன் தான் கரத்தைத்தீண்டியதும் பிழை என்று பெரிதும் வருந்தப் பெருமான் அதனையும் ஏற்றருளினரென்பது வரலாறு.

இடைவை மடநல்லாட்குச் சீலம் மிகக் கருணை அளிக்கும் திறம் என்பது அரசிக்குக் கற்பொழுக்கமாகிற சீலம் உயர்ந்து தோன்றக் கையைமட்டும் விட்டு, அவளை ஏற்று வீடுபேறு அளித்த தன்மையென இவ்வரலாற்றோடு முழுதும் இணைதல் காண்க.

இப்பகுதிக்குச் சிலர், இடைவை என்னும் பதியிலிருக்கும் நல்லாளாகிய அன்புடையாளுக்கு அன்பின் ஐந்திணை ஒழுக்க மாகிய கருணையை மிக அளித்தருளும் என உரைப்பர். அன்றியும், தம் ஊக ஞானத்தால் இடையூர் என்னும் தலமும், அதன் மரூஉ இடைவை என்பதுபோலும். மிடைவை என்றும் கூறுப. இடைமருது என்பாருமுளர். மருதூர் என்பதே அதன் சிறப்புப்பெயராதலின் இடைவை என்றல் பொருந்தாது; வரலாறு வந்துழிக் காண்க எனத் தடைவிடைகளை எழுப்பிக் குழப்பம் விளைப்பர். மகாலிங்கப்பெருமான், திருமேனியில் கையொன்று காட்டியமைக்கு வேறு வரலாறு காட்டுவாரும் உளர். இவ்வரலாறு தலபுராணங்கள் ஒன்றினும் இல்லாமை காண்க.

மருது வடமொழியில் அர்ச்சுனம் என்று வழங்கப்பெறும். மருதைத் தலமரமாகக் கொண்ட தலங்கள் மூன்று. அவை மல்லிகார்ச்சுனம், மத்தியார்ச்சுனம், புடார்ச்சுனம் என்பன. அவற்றுள், தமிழ்நாட்டிலுள்ளவை இடைமருதும் புடைமருதுமாகிய இரண்டுமாம். ஏனைய மருதூரிலிருந்து பிரிக்க 'இடை' என்ற சொல்லே சிறப்புடையதாக அமைவது. சிறந்த சொல் எஞ்ச, ஏனையவை ஒழிவதே மரூஉமொழி இலக்கணம். ஆதலால், இடைமருது இடைவை என அடிகளால் ஆளப்பெற்றதெனத் துணிக. இடையூர் முதலானவற்றிற்கு இத்தகைய வரலாறு இன்மையும் தெளிக. இடைமருது வரலாற்றைக் குறிப்பதாகவே மரபுவழியும் இருப்பதைக் காண்க.

இவ்வரலாறு தம் பொறிவழிப் புகாமையால் பழையவுரையாசிரியரும் இடைவை மடநல்லாள் - இடைவிடாது எழுந்தருளும் பார்வதிதேவிக்குச் சிவஞானமே தானாக அருள்செய்தும் என உரைகண்டனர். இடைவை - இடைவிடாது என்ற பொருளைத் தருமா என்பதையும் சிந்திக்க. அடிகள் தலங்களுக்கு யாத்திரை சென்றமையால் தலவரலாறுகளை அமைத்துப் பாடுதல் மரபு ஆதலைப் போற்றித்திருவகவல் முதலாயினவற்றிலும் காண்க.

பழையவுரைக்குக் கீழ்க்குறிப்பு எழுதிய பதிப்பாசிரியர் 'திருவிடைமருதூரை இந்நூலில் வேறிடங்களில் இடைவை என்னும் பெயரால் ஆசிரியர் சுட்டாமை காண்க' என மறுப்புரைப்பர். மரூஉ வழக்கில் சொல்லுருவில் எது எஞ்சும் எது கெடும் என்ற வரையறை எந்த இலக்கணத்தும் இல்லை. செய்யுள் ஓசையும், சீரமைதியும் நோக்கித் தேவைக்கு ஏற்ப மரூஉ இலக்கியங்களில் இடம்பெறுதலைக்கொண்டு ஈண்டு இடைவை என்பது இடைமருதையே உணர்த்தியதாகக் கொள்க. இங்ஙனம் வரும்

மரூஉ வழக்கும் பலவுள்ளன. அம்மரபை விரிவஞ்சி விளக்கிற் றிலம். புடைமருது புடைவை என்ற வழக்காறுண்மையும் தெளிக.

இத்திருப்பாடல், இறைவன் குருவாக ஞாலத்தில் எழுந் தருளியும், இடைமருதூரின்கண் வாழ்ந்த அரசிக்குள்ள கற்பு ஒழுக்கத்தை உலகினர்க்கு மிக உணர்த்தியும் அருளிய திறங் களை அன்பர்க்கு அறிவித்து அன்புறுதல் காண்க.

589 அணிமுடி யாதி யமரர்கோமான்
ஆனந்தக் கூத்தன் அறுசமயம்
பணிவகை செய்து படவுதேறிப்
பாரொடு விண்ணும் பரவியேத்தப்
பிணிகெட நல்கும் பெருந்துறையெம்
பேரரு ளாளன் பெண்பாலுகந்து
மணிவலை கொண்டுவான் மீன்விசிறும்
வகையறி வாரெம் பிரானுவாரே. 3

இ - ள்: அழகிய சடைமுடியையுடைய முதல்வனும் தேவர்கள் தலைவனும் ஆகிய ஆனந்தக்கூத்தன், அறுவகைச் சமயங்களும் தம்மை வணங்கும்படிச்செய்து, படகின்மேல் ஏறி விண்ணும் மண்ணும் புகழ்ந்துவணங்கப் பிறவிப் பிணி கெடும்வண்ணம் அருள்செய்யும் திருப்பெருந்துறையிலே எழுந்தருளியுள்ள எம் பெருங்கருணையாளனுமாகிய சிவபெரு மான், வலைச்சியாகவந்த உமாதேவியாரை விரும்பி அழகிய வலையை ஏந்திப் பெரிய மீன்களை வீசிப் பிடிக்கும்வகையை அறிவாரே எம்பிரானுவர் என்றவாறு.

ஆனந்தக் கூத்தப்பெருமான், வலைமாதை விரும்பி, வலை வீசி மீன்பிடித்தவகையை அறிவாரே எம் தலைவராவர் என்பது கருத்து.

ஆதி - முதல்வன். முதன்மையுணர்த்தும் ஆதியென்னும் பண்புப் பெயர்ச்சொல், அப்பண்பையுடையவனை ஆகுபெய ரான் உணர்த்தியது.

அணி முடி - அழகிய சடைமுடி. இறைவன் திருமுடி சடை யாதலின் இங்ஙனம் உரைக்கப்பெற்றது.

அறுசமயம் - அகம், புறம், அகப்புறம், புறப்புறம் என நால் வகையான அவ்வாறு சமயங்கள். இச்சமயங்கள் அனைத்தும் மக்களுடைய ஞானபரிபாகத்தால் விளைவன. ஆதலின் அவ ரவர் நிலைக்கேற்ப விளைவனவாயின். அத்தனைச் சமயங்களையும்

தோற்றுவித்து அவரவர்களால் வணங்கப்படும் தலைவனாக விளங்குபவன் என்பார் 'அறுசமயம் பணிவகை செய்து' என்றார். சிவஞான சித்தியாரினும் "அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்" எனல் காண்க.

இறைவன், வலைச்சியாகிய உமாதேவியை மணக்க வலைஞர் காளையாகத்தோன்றி மீன் வீசிய திருவிளையாடலைக் குறிப்பது ஏனைய பாடற்பகுதி. வலைஞனுக்குக் கடற்றுறை உரிமையாதலின் 'பெருந்துறையெம் பேரருளாளன்' என்றது அப்பொருளும் தொனிக்க நின்றது.

இறைவன் மீன்வீசிய நிகழ்ச்சி எல்லாருக்கும் எங்கும் என்றும் அருள்வதாகிய எளிவந்த கருணையையும் சமநோக்கையும் தெரிவிப்பது. இங்ஙனம் மீன்வீசிய நிகழ்ச்சியைப் பிறர்க்கு அறிவித்து, அதனால் அன்புமிகச்செய்தல் காண்க.

590 வேடுரு வாகி மகேந்திரத்து
மிகுகுறை வானவர் வந்துதன்னைத்
தேட இருந்த சிவபெருமான்
சிந்தனை செய்தடி யோங்களுய்ய
ஆட லமர்ந்த பரிமாவேறி
ஐயன் பெருந்துறை யாதியந்நாள்
ஏடர் களையெங்கும் ஆண்டுகொண்ட
இயல்பறி வாரெம் பிரானுவாரே. 4

இ - ள்: வேடவடிவு தாங்கி மகேந்திரமலையில், மிக்க குறையினையுடைய தேவர்கள் வந்து தன்னைத்தேட, அவர்களுக்கு மறைந்திருந்த சிவபெருமானும், அடியேங்கள் தியானித்து உய்ய ஆடலை விரும்பிய குதிரையில் ஏறுபவனும், எம் தலைவனும் ஆகிய பெருந்துறை முதல்வன், அந்நாள் எம் தோழர்களை ஆண்டுகொண்ட தன்மையை அறிபவர்களே எம் தலைவராவர் என்றவாறு.

திருப்பெருந்துறை முதல்வன் எம்மை ஆட்கொள்ளக் குருநாதனாக எழுந்தருளிவந்த அந்நாளில், என்னைவிட்டு என் தோழர்களை ஆண்டுகொண்ட தன்மையை அறிபவர்களே எம் தலைவராவர் என்பது கருத்து.

இறைவன் திருவுள்ளக்கருத்தை உள்ளவாற்றிந்து சொல்பவரே எம் தலைவர் என்பதாம்.

மிகு குறை வானவர் - மிக்க குறைகளையுடைய தேவர்கள். அவர்கட்குள்ள குறைகளாவன : சூரபன்மனுதியரால் விளையும்

குறைபாடுகளும், காம கோபாதிகளில் கட்டுண்டு சாப தாபங்களைப் பெற்றுத் தீர்வுகாணாது வருந்துதலுமாம். தம் குறைகளை விண்ணப்பித்துப் போக்கிக்கொள்ள அவர்கள் வந்து தேடுகின்றனர். இறைவன் வேடருருவம் தாங்கி, அவர்களுக்குச் சிவாகமப்பொருளை உபதேசித்து உய்யுநெறிகாட்டாது மறைந்திருந்தார். அவர்களுடைய பிராரத்த கன்மங்கள் நுகரப்பட்டுத் தொலைந்த பிறகு மன்னு மாமலை மகேந்திரமதனில் சொன்ன ஆகமம் தோற்றுவித்து அருளினரென்பது வரலாறு.

அடியோங்கள் சிந்தனைசெய்து உய்ய, ஆடலமர்ந்த பரிமா ஏறி என இயைக்க. சிந்தனைசெய்து - தியானித்து. ஆடல் அமர்ந்த பரி - ஆட்டத்தை விரும்பிய குதிரை. ஆடல் - நடனம். ஏறி - ஏறியவன் என்னும் பொருள்தரும் பெயர்ச்சொல். "விடையேறி" என்புழிப்போல. சிந்தனைசெய்து என்பதனை இறைவன் வினையாக்கி உரைக்கும் பழையவுரை.

ஏடர்கள் - தோழர்கள். ஏட, எலுவ என்பன தோழர்பெயராதலைச் சங்கநூல் வழக்குக்கொண்டு தெளிக. அவியுணவின் செவியுணராமக்கள் என்பது பழையவுரை. தொண்டர்கள் என்பர் சிலர்.

எங்கும் ஆண்டுகொண்ட என்பது மலையில் வேடனாகவும், அலையில் வலைஞனாகவும், நாட்டில் குதிரைவீரனாகவும் எழுந்தருளி அவரவர்வடிவில் அவரவர்களை ஆண்டு உய்யக்கொள்வது இறைவன் இயல்பு என்பதை உணர்த்துகின்றது.

இங்ஙனம் இறைவன் ஆன்மாக்களின் பரிபாகநிலைக்குத்தக ஆட்கொண்டதை அறிவித்து அன்பு மிகுந்தவாறு காண்க.

591 வந்திமை யோர்கள் வணங்கியேத்த
மாக்கரு ணைக்கட லாயடியார்
பந்தனை விண்டற நல்குமெங்கள்
பரமன் பெருந்துறை யாதியந்நாள்
உந்து திரைக்கட லைக்கடந்தன்
றோங்கு மதிலிலங் கையதனில்
பந்தணை மெல்விர லாட்கருளும்
பரிசறி வாரெம் பிரானாவாரே. 5

இ - ள்: தேவர்கள் வந்து திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் துதிக்க, பெரிய கருணைக்கடலாய் உண்மை அடியார்களின் பாசபந்தங்கள் நீங்கிப்போக ஞானத்தை நல்குகின்ற எங்கள் பரமனாகிய திருப்பெருந்துறை முதல்வன், கரையில்

வந்து மோதுகின்ற அலைகளையுடைய கடலைக்கடந்து, அன்று உயர்ந்த மதில்களையுடைய இலங்கைநகரில், பந்து வந்து பொருந்தப்பெறுகின்ற மெல்லிய விரல்களையுடையவளாகிய மண்டோதரி என்பாளுக்கு அருள்செய்ததன்மையை அறிபவர்களே எம்பிரானுவர் என்றவாறு.

தேவர்கள் வணங்க அடியார்கட்குப் பாசபந்தமற அருள் வழங்கும் பரமன் மண்டோதரிக்கு அருளிய தன்மையின் உண்மையை அறிபவர்களே எம் தலைவராவார் என்பது கருத்து.

ஒருவன் தண்ணீர்வார்த்து வளர்க்கப் பிறனுக்கு இளநீர் வழங்கும் முடத்தெங்குபோல இறைவன், வானோர் வணங்க அடியார்கட்கு வீடருளுதல் எங்ஙனம் பொருந்துவதாம் எனின், வானோர்கள் மிகுகுறையுடையோர்; தொண்டர்களோ குறை ஒன்றுமில்லாதோர்; ஆகவே எமக்குப் பகை விலகவேண்டும், நல மிகவேண்டுமென்று காமியத்தைக் காதலிக்கும் தேவர்கள் வணங்கி ஏத்தவும், யார்க்கும் எதனையும் பருவமறிந்து ஊட்டியருளும் பரமன் அவர்களைக் கடைக்கணியாது, பற்றற்றான் பற்றினைப் பற்றிய அடியார்களுக்குப் பெரிய கருணைக்கடலாகி வீடருளுகிறான் என்பதாம்.

அந்நாள்-குருந்தடியிருந்து எமக்கு உபதேசித்துக்கொண்டிருந்த அந்த நாளிலே என்று- பண்டைய நிகழ்ச்சியை நினைவூட்டியவாறு. அன்று ஓங்கு மதிலிலங்கை என்றது இன்று அதன் பொலிவழிந்து கிடக்கும் நிலையை நம் எண்ணத்துப் பதிப்பிக்க என்க.

மண்டோதரி இராவணன் மாளிகையிலிருந்து இறைவனைத் தியானித்தாளாக, இறைவன் குருமேனி தாங்கியிருந்த கோலத்துடன் அங்குச்சென்று அவளுக்குக் காட்சியளிக்க, இறைவனுடைய பேரழகில் ஈடுபட்டுப் பேரின்பத்தைவிரும்பிக் கேட்க இருந்த அவள் மயங்கிச் சிற்றின்பத்தில் தன்னுடைய சிந்தையைச்செலுத்தினாள். அவளுடைய அறியாமையைக்கண்ட இறைவன், அவள் கற்பொழுக்கம் கெடாதிருக்க உடனே அந்த இடத்தைவிட்டு மறைந்தார். அவள் வருந்தினாள். அவள் கொண்டது ஒருதலைக் காமமாதலின் பெண்குழந்தை ஒன்று அவளுக்குப் பிறந்தது. அதனைப் பெட்டியுள்வைத்துக் கடலில் விட்டாள். அதுவே மிதிலையில் வந்து ஒதுங்கிப் புதையுண்டு ஜனகனுடைய உழுகால் நுனியில் வெளிவந்தது என்பது வரலாறு.

இங்ஙனம் இறைவன், வேண்டுவார் வேண்டுவதை ஈயும் கருணையன் என்னும் பரிசினை அறிபவர்களே எம்பிரானுவார் என்றதாம்.

இத்திருப்பாடலும், இறைவன் மண்டோதரிக்கு அருளியது போல் யாம் எவ்விருப்பை நிறைவேற்ற வேண்டினும் அருளு வன் என்று உயிர்களுக்கு அறிவுறுத்தி அன்புறுதல் காண்க.

592 வேவத் திரிபுரஞ் செற்றவில்லி
வேடுவ னுய்க்கடி நாய்கள்சூழ
ஏவற் செயல்செய்யுந் தேவர்முன்னே
எம்பெரு மான்றான் இயங்குகாட்டில்
ஏவுண்ட பன்றிக்கி ரங்கியீசன்
எந்தை பெருந்துறை யாதியன்று
கேவலங் கேழலாய்ப் பால்கொடுத்த
கிடப்பறி வாரெம் பிரானுவாரே. 6

இ-ள்: திரிபுரங்கள் தீயில் வெந்தொழியச் சினங் கொண்ட வில்லாளனும், எம்பெருமானும், ஈசனும், எந்தை யும் ஆகிய பெருந்துறைப்பெருமான், தமக்குக் குற்றேவல் செய்யும் தேவர்கள் முன்னிலையில், வேடனாகி வேட்டைநாய் கள் புடைசூழ இயங்குகின்ற காட்டிலே, அம்புபட்டிறந்த ஒரு தாய்ப்பன்றிக்காக இரங்கி, தனித்த தாய்ப்பன்றியாய்க் குட்டிகளுக்குப் பாலைக்கொடுத்த திருவுள்ளக்கிடப்பை அறி பவர்களே எம்பிரானுவர் என்றவாறு.

வேடனான பெருமான், அம்புபட்டு இறந்த பன்றிக்கிரங்கி, அதன் குட்டிகளுக்கு முலையூட்டிய திருவுளப்பண்பை உள்ளவா றறிபவர்களே எம் தலைவர் என்பது கருத்து.

திரிபுரம் வேவச் செற்ற வில்லி எனக்கூட்டுக. செற்ற என் பதை வில்லுக்கும் அடையாக்கலாம், வில்லிக்கும் ஆக்கலாம். செற்றவில் எனும்போது செறுதலாகிய உடையான்தன்மை உடைமைப்பொருள்மேல் நிற்பதாகக் கொள்க. செற்றவில்லி என்றது சினந்த அவ்வளவுதான்; வில் செயற்படாமலே திரி புரங்கள் வெந்தன என்னும் நயந்தோன்ற நின்றது.

பாலைவனத்திற் சோலை கண்டதுபோல தாம் வேடனாகத் திரியுங்காட்டிலே இறந்த பன்றிக்கு இரங்கும் திருவுள்ளமும் உண்டாயிற்றே என்ற வியப்புத்தோன்ற உரைத்ததாம்.

தேவர்முன்னே என்றது பெருமான் வேடனாகத்திரிந்ததோ டன்றிப் பன்றிக்குட்டிகட்குப் பாலூட்டித்திரிந்தும் அவர்கள்

காணும்பேறு பெற்றிலரே; அவர்கள் அறியாமை இருந்தவாறு என்னே என்ற இரக்கந்தோன்ற உரைத்ததாம்.

கடி நாய்: கடிக்கும் நாய் என வினைத்தொகை. காவல் நாய் எனினுமாம். காட்டில், வேடனொருவன் தாய்ப்பன்றியை அம்பாலடித்துக்கொல்லத் தாய்பன்றி இறந்தது. அதுகண்ட குட்டிகள் பசியால் வருந்தின. இறைவன் அவைகட்கு இரங்கித் தாய்ப்பன்றியாய் முலைதந்தார் என்பது பன்றிக்குட்டிக்கு முலையூட்டிய திருவிளையாடல்.

கேவலம் கேழலாய் - தனித்த பன்றியாய். அல்லது இழிந்த பன்றியாய் எனலுமாம். கேழல் - ஆண்பன்றி யென மரபியல் உணர்த்துமாயினும் ஈண்டுப் பன்றியென்னும் பொதுமையி னின்றதென்க.

கிடப்பு - கிடக்கை. திருவுள்ளக்குறிப்பு அஃதாவது தமது காருண்ணிய ஆட்சியில் விலங்கினங்களுங்கூட வருந்துதல் கூடாது என்று அவைகட்கு ஏற்ப அவையேயாய் அருளும் சிறப்பாம்.

இங்ஙனம் தமக்குத் தலைவராவார் இத்தகைய அருட்குணம் உடையார் என உணர்த்தி அன்புற்றவாறு காண்க.

593 நாத முடையதோர் நற்கமலப்
போதினில் நண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்தலர் தூவியேத்த
ஒளிவளர் சோதியெம் ஈசன்மன்னும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப்
பேதங் கெடுத்தருள் செய்பெருமை
அறியவல் லாரெம் பிரானுவாரே. 7

இ - ள்: ஒலியோடுகூடிய ஒப்பற்ற நல்ல தாமரைமலரில் இருக்கின்ற திருமகளும் கலைமகளும் மந்திரங்களை ஓதிப் பணிந்து மலர்களைக்கொண்டு அருச்சித்து வழிபட ஒளிவளர் கின்ற சோதியாக விளங்கும் எம் ஈசனும், நிலைபெற்ற பூக் களும் போதுகளும் பொருந்திய சோலைசூழ்ந்த திருப்பெருந் துறைக்கண் எழுந்தருளியுள்ள எம் புண்ணியனுமாகிய சிவ பெருமான், இப்பூமியில் வந்து தோன்றிச் சிவசீவ பேதத் தைக்கெடுத்து அருள்வழங்கிய பெருமையை அறியவல்லவரே. எம்பிரான் ஆவர் என்றவாறு.

இறைவன் இம்மண்ணிடைவந்து உபதேசித்துச் சிவ சீவ பேதத்தை அகற்றிச் சிவமாக்கி எனையாண்ட செயலின் பெருமையை அறியவல்லவரே எம் தலைவராகும் தகுதியுடையார் என்பது கருத்து.

நாதம் - ஹ்ரீம் என்னும் ஒலி. நன்னுதலார் என்றது கலைமகளும் அலைமகளும் ஆகிய இருவரையும் என்க. திருவாரூரில், திருமகளும், திருக்கண்டியூரில் கலைமகளும் இறைவனை வழிபாடாற்றித் தத்தம் கணவன்ரை உயிருடன் பெற்றார்கள் என்பது வரலாறு.

திருமால் தன் பகைவனை வென்ற வெற்றிச்செருக்குடன், வளைத்த வில்லையூன்றி அதன் நுனியில் முகவாய்க்கட்டையை வைத்து அயர்ந்தானாக, தேவர்கள் செல்லுருவெடுத்து அவன் வில்லின் நாணை அறுக்க, வில் திடீரென நிமிர்ந்து அவனுடைய தலையை எற்றியது. அதைக்கண்ட திருமகள் புற்றிடங்கொண்ட பெருமானைப் போற்றி மங்கலம் பெற்றாள் என்பது திருவாரூர்த் தலவரலாறு.

கலைமகளும், பிரமன் சிரம் கொய்யப்பெற்றபோது வருந்தி, அவனுயிரை மீளப்பெற்றாள் என்பது கண்டியூர்த் தலபுராண வரலாறு.

ஒளிவளர் சோதி - ஒருகாலைக்கொருகால் ஒளிமிக்கு வளர்கின்ற தீப்பிழம்பான அண்ணாமலையான் என்றதாம்.

பேதம் - வேற்றுமை. சீவன் சிற்றறிவும் சிறுதொழிலும் மலபந்தமும் உடையவன்; சிவன் முற்றறிவும் அருட்செயலும் அளவிலாற்றலும் இயல்பாகவே பாசங்களினீங்கிய தன்மையும் உடையவன் என்ற வேற்றுமை அகன்று அடியேன் அவனுடைய நிறைவில் நிறைவாய் விளங்க அருளியதைப் 'பேதங் கெடுத்தருள்செய் பெருமை' என்பதால் குறிப்பித்தவாறு.

இவ்வண்ணம் சிவ சீவ பேதத்தைப் போக்கிச் சிவமாக்கி ஆட்கொள்ளுந்தன்மையை அறிவித்த அவரே எம் தலைவர் என்று அன்புறுதல் காண்க.

594 பூவலர் கொன்றையம் மாலைமார்பன்
போருகிர் வன்புலி கொன்றவீரன்
மாதுநல் லாளுமை மங்கைபங்கன்
வண்பொழில் சூழ்தென் பெருந்துறைக்கோன்

ஏதில் பெரும்புகழ் எங்களீசன்
இருங்கடல் வாணற்குத் தீயிற்றோன்றும்
ஓவிய மங்கையர் தோள்புணரும்
உருவறி வாரெம் பிரானவாரே. 8

இ - ள் : பூவாகமலர்ந்த கொன்றையாலாகிய மாலையை அணிந்த திருமார்பை உடையவனும், பொருகின்ற நகங்களோடுகூடிய வலிய புலியைக்கொன்ற வீரனும், மாதர்நல்லாளாகிய உமாதேவியை ஒருபாகத்திலுடையவனும், வளப்பமான பொழில்கள் சூழ்ந்த அழகிய திருப்பெருந்துறைக்குத் தலைவனும் ஆகிய குற்றமற்ற பெரும்புகழையுடைய எங்கள் ஈசனுடைய, பெரிய கடலால் வாழ்கின்றவர்களாகிய வலைஞர்களுக்கு, வேள்வித்தீயினின்றும் தோன்றிய பெண்ணாகிய சித்திரம்போன்ற வலைமங்கையாகிய உமாதேவியாரின் தோள்களைப் புணரும் திருவுருவை அறிபவர்களே எம் தலைவராவார் என்றவாறு.

சிவபெருமான் வலைப்பெண்ணாக வந்த உமாதேவியாரைக் கூடிய திருவுருவச் சிறப்பை உணர்வார்களே எம் தலைவராவர் என்று கூறுகின்றார் என்பதாம்.

மாலைமார்பன் என்றது இறைவனது அடையாளத்தையும், வன்புலி கொன்ற வீரன் என்றது வீரத்தையும், மங்கை பங்கன் என்றது அருளையும், பெருந்துறைக்கோன் என்றது எளிவந்த நிலையையும், ஏதில் பெரும்புகழீசன் என்றது மாசிலாமையும், எங்களீசன் என்றது செல்வத்தையும் உணர்த்தி நின்றன.

கன்மமே பிரமம் என்ற கொள்கையையுடைய தாருகாவனத்து முனிவர்கள், கங்காள்வடிவுடன் காபாலியாய் வந்து தம் பத்தினியரை நிலைகலங்கச் செய்த பிட்சாடனமூர்த்தியைக் கொல்லுவதற்காக அபிசார ஓமம் செய்தனர். ஓமகுண்டத்திலிருந்து புலி, பாம்பு, மான் முதலிய பொருள்கள் தோன்றி, இறைவனைக் கொல்ல வந்தன. இறைவன் புலியை உரித்து, அதன் தோலை அரைக்கு ஆடையாக உடுத்தினார் என்பது வரலாறு. அதனை விளக்குவது 'போருகிர் வன்புலி கொன்ற வீரன்' என்பது.

ஏதம் இல் - ஏது இல் என அம் கெட்டது; குற்றமில்லாத என்பது பொருள். வள்ளுவர் இதனைப் "பொருள்சேர் புகழ்" என்பர். காரணமின்றியே விளைவதான அநாதி நித்தியமான புகழ் எனலுமாம்.

ஆகமங்களை உபதேசிக்கின்றகாலத்து இறைவி பராமுகமாயிருக்க இறைவன் அவரை வலைப்பெண்ணாகச் சபித்தார். அம்மை இறைவனை வணங்கிச் சாபவிடையும் பெற்று, மதுரையின் கடற்கரையில் வலைஞர் குலத்திலே தீயினின்று தோன்றி வளர்ந்து வந்தார். இறைவன் அவரை மணந்துகொண்டாரென்பது வலைவீசிய திருவிளையாடல் வரலாறு.

பழையவுரை இருங்கடல் வண்ணற்குத் தீயிற்றோன்றும் ஓவியமங்கையர் தோள்புணரும் எனப் பாடங்கொண்டு, திருமால் செய்த தவத்திற்காகத் திருவுத்தரகோசமங்கைப்பதியில், அக்கினியில் தோன்றிய ஓவியம் போன்ற ஞானப்பெண்களை அவர்கள் வேண்டிய வரப்பிரசாதப்படி அவர்களுக்குப் பரிச தீட்சையான அன்புப்புணர்ச்சி அருளிய பேரானந்த வடிவு எனப் பொருள் விளக்கும்.

யோகபரமானவுரை பெரிய பிறவிக்கடலில் வாழ்பவனாகிய சீவனுக்கு மூலாதாரமாகிய ஓமகுண்டத்திலிருந்து தீப்போலத் தோன்றும் ஓவியம் போல்பவராகிய குண்டலினியாதி சத்திகளைச் சேர்ந்து விளங்கும் ஒளிவடிவை என்று உரைக்கும். மற்றும் இருங்கடல் வாணன் - வருணன் என்பாரும் உளர்.

'ஓவிய மங்கையர் தோள்புணரும் உரு' என்பதால் இறைவனுடைய கலந்த தன்மையையுணர்த்தி, உருவுணர்வாரே எம் தலைவராவர் என அன்புறுதலை விளக்குதலின் இத்திருப்பாடல் பதிகக்கருத்தினதாதல் காண்க.

595 தூவெள்ளை நீறணி யெம்பெருமான்
சோதி மகேந்திர நாதன்வந்து
தேவர் தொழும்பதம் வைத்தஈசன்
தென்னன் பெருந்துறை யாளியன்று
காதல் பெருகக் கருணைகாட்டித்
தன்கழல் காட்டிக் கசிந்துருகக்
கேதங் கெடுத்தென்னை யாண்டருளும்
கிடப்பற் வாரெம் பிரானவாரே. 9

இ-ள்: தூய வெண்மையான திருநீற்றை அணிந்த எம்பெருமானும், ஒளிவடிவான மகேந்திரமலைத் தலைவனும், தாமே வலியவந்து தேவர்கள் தொழும் திருவடியைத் தலைமீது சூட்டிய ஈசனும், பாண்டியனும், திருப்பெருந்துறையைத் தலைநகராகக்கொண்டு ஆள்பவனும் ஆகிய சிவபெருமான், குருநாதனாக எழுந்தருளிய அந்நாளில் எனக்குக் காதல்

பெருகும்வண்ணம் திருவருளைத் தரிசிப்பித்து, தன் திருவடியையும் காட்டி, அதனால் யான் மனங்கசிந்து உருக என் துன்பங்களைக் கெடுத்து என்னை ஆண்டருளிய திருவுள்ளக்கிடக்கையை அறிபவரே எந்தலைவராவர் என்றவாறு.

மகேந்திரநாதன் தாமே வலிய எழுந்தருளிவந்து எனது தலையில் திருவடியைச்சூட்டி என் பிறவித் துன்பத்தைக் கெடுத்தாண்ட திருவுள்ளக்கிடக்கையை அறிபவர்களே எமக்குத் தலைவராவர் என்பது கருத்து.

தூ வெள்ளை நீறு - மலமாசு கழுவும் தூய்மையானதும் வெண்மை நிறமானதுமான திருநீறு. மிக வெண்மையான நீறு என்னுமாம்.

தேவர்கள் தம் துன்பநீக்கம் ஒன்றேகருதி அவ்வப்போது வந்து வணங்கித் தம் துன்பங்களைத் துடைத்துக்கொள்ளுதலின் 'தேவர் தொழும்பதம்' என்றார்.

வைத்த - என் பிறவித்துன்பம் போக - மலவுன்மை அடியேனை வந்து வருத்தாதிருக்க - எப்போதும் என் தலையின்மீது இலங்கச் சேம முத்திரையாகச் சூட்டிய என்பதாம்.

காதல் பெருக - மணந்தநாள் முதல் தலைவனைக் காணுதபோதும் காணுகிறபோதும் காதல் பெருக இருக்கும் தலைவி போல, திருவடி சூட்டியநாள்முதல் இறைவன்பால் காதல் மிக. தலைவிக்கு அங்ஙனம் காதல் பெருகியதற்குக்காரணம் தலைவன் செய்யும் கருணையாதல்போல எனக்கு அவன்பால் காதல் பெருகியதற்குக் காரணம் கருணைகாட்டியதால் என்பார் அடுத்துக் 'கருணை காட்டி' என்றார்.

கருணை காட்டினும், என் அறியாமையால் அதனை நான் அறியாது விட்டுவிடுவேனோ என்று என் மலவன்மையைத் திருவுளத்தெண்ணி, மலவன்மை வாடவேண்டி மருந்தாகிய திருவடியைக் காட்டினன் என்பார் 'தன்கழல் காட்டி' என்றார்.

கழலைக் கண்டவுடன், என் அறியாமை விலக, அறிவொளி மிக, தீயைக்கண்ட மெழுகுபோல என் சிந்தை கசிந்துருகியது என்பார் அடுத்துக் 'கசிந்துருக' என்றருளினார்.

யான் காதலாகிக் கசிந்துருகியதன் பயன் நீர்ப்பெருக்குப் போல இடையறாது தொடர்ந்துவரும் வினையான் வரும் துன்பங்களும், அதற்குக் காரணமான பிறவித் துன்பங்களுமற்றன என்பார் 'கேதங்கெடுத்து' என்றார்.

இவ்வண்ணம் ஆண்டுகொண்ட திருவுள்ளக்கிடக்கை உயிர்கள்மீது வைத்த கைம்மாறு வேண்டாத கருணையே என்பதனை அறியும் ஞானிகளே எம் தலைவர் எனச் சொல்லி அன்பு மிகுதலின் இது பதிகக்கருத்தினை விளக்குதல் காண்க.

596 அங்கணன் எங்கள் அமரர்பெம்மான்
அடியார்க் கமுதன் அவனிவந்த
எங்கள் பிரானிரும் பாசந்தீர
இகபரம் ஆயதோர் இன்பமெய்தச்
சங்கங் கவர்ந்துவண் சாத்தினோடும்
சதுரன் பெருந்துறை யாளியன்று
மங்கையர் மல்கு மதுரைசேர்ந்த
வகையறி வாரெம் பிரானாவாரே. 10

திருச்சிற்றம்பலம்

இ - ள்: அழகிய கண்களையுடையவனும், எங்கள் தேவதேவனும், மெய்யடியார்களுக்கு உண்ணத்தெவிட்டாத அமுதம்போல்பவனும், இம்மண்ணுலகில் எழுந்தருளிய எங்கள் தலைவனும், சாமர்த்தியம் பொருந்தியவனும் ஆகிய திருப்பெருந்துறைத்தலைவன் எங்களை அநாதியே பற்றியுள்ள பெரிய மலத்தொடர்பு நீங்கவும், யாங்கள் இம்மை மறுமையின்பங்களை எய்தவும் அந்நாள், எம்கையின்கண்ணதாய சங்கு வளையல்களைக் கவர்ந்துகொண்டு வண்மையோடு கூடிய வாணிகக் கூட்டத்தோடும், பெண்கள் நிறைந்த மதுரையை அடைந்த உபாயத்தை உணர்வாரே எந்தலைவராவர் என்றவாறு.

இறைவன் எங்கள் பாசமகலவும், யாங்கள் இம்மை மறுமையின்பங்களை எய்தவும் எங்கள் வளையல்களைக் கவர்ந்து தம் வாணிகக்கூட்டத்தோடும் மதுரையை அடைந்த வகையை அறிபவரே எம் தலைவர் என்பது கருத்து.

கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம் ஆதலின் அதனையுடைய கண்ணன் என்பார் 'அங்கணன்' என்றார்.

எங்களுக்கும் பெருமான், அமரர்க்கும் பெம்மான் என்பார் 'எங்கள் அமரர் பெம்மான்' என்றார். ஆனால் எங்கட்கும் மலம் நீக்கி ஞானம்நல்கிப் பேரின்பமூட்டும் பெருமானாக இருக்கிறார், தேவர்கட்கோ வினைகாரணமாகவரும் துன்பங்களைப் போக்கி இம்மைப்பயனை இடையீடின்றி நுகரச்செய்யும் தலைவனாக இருக்கிறார் என்பார் நம்பெருமான் அனைவர்க்கும் பெம்மான் என

ஒருங்கோதாது 'எங்கள் அமரர் பெம்மான்' என வேறுபிரித்து ஓதினர்.

கரும்பில் கிடக்கும் புழு என்றும் இனிப்பையன்றி, வேறு எதனையும் காணாததுபோல, சிவபெருமானுடைய திருவடியிலே தோய்ந்து கிடக்கும் மெய்யடியார்கள் சிவானுபவம் ஒன்றையே உடையவர்கள் ஆதலின் அவர்கட்கு அமுதம்போன்றவனாக விளங்குபவன் என்பார் 'அடியார்க்கு அமுதன்' என்றார்.

இவ்வண்ணம் மாயாதீதமான ஞானவுலகத்தில் சஞ்சரிக்கின்ற பெருமான், எமக்காக இம்மாயாகாரியமானதும் துன்ப இன்பக் கலப்பானதுமான கன்மபூமியில் எங்கள் குருநாதனாக எம்போல மானுடச்சட்டை சாத்தி வந்தான் என்பார் 'அவனி வந்த எங்கள் பிரான்' என்றார்.

இரும்பைப் பொன்னாக்குதற்கு ஒருவகைச் சாமர்த்தியம் இன்றியமையாதது போல, அநாதியே மலத்தால் கட்டுண்டு கிடக்கின்ற எங்களைத் தூய்மையாக்குவதற்கும் தனித்ததோர் வன்மை வேண்டும்; அவ்வன்மைக்கு அவனே உறைவிடம் என்பார் 'சதுரன்' என்றார்.

கோழி குன்றின் உச்சியிலும், குஞ்சு அடிவாரத்திலும் இருந்தால் குஞ்சு கோழியின் தாயன்பைக் காண முடியாததுபோல, இறைவன் மகேந்திர நாதனாகவே இருப்பின், மக்கள் அறிந்து பயன் கொள்ளார் என்று எண்ணி, எமக்கு அண்ணியனாகத் தம் தலைநகரையே திருப்பெருந்துறையாக மாற்றியமைத்துக் கொண்டான் என்பார் 'பெருந்துறையாளி' என்றார்.

இங்ஙனம் பெரியனிற்பெரியனாகிய இறைவன் மதுரைக்கு வளையல் விற்கச்சென்றான்; அவ்வளையல்கள் எம் கையிலிருந்து கவர்ந்தவை; இழந்த யாங்கள் மீட்டும் பெறமுடியாதவண்ணம் தம் கூட்டத்தோடும் சென்றான் என நகைச்சுவையும் தோன்ற அறிவித்தல் காண்க.

அவன் எம்மைவிட்டு மதுரைக்குச் சென்றதால் அவன் பிரிவு உடலை மெலிவித்தது, கைவளையல்கள் கழன்றன எனத் தலைவியின் தன்மையினின்று அடிகள் அறிவிக்கும் காதலுரை 'சங்கங்கவர்ந்து சாத்திஞேடும் மதுரை சேர்ந்த' என்பது.

சாத்து - வாணிகக் கூட்டம். வண் சாத்து-வண்மையோடு கூடிய வணிகர்கூட்டம். வண்மையாவது வாணிகப் பொருளை மிகுதியும் உடைமை.

எம் உள்ளங்கவர்ந்து உடலை மெலிவித்து, வளையல்களைக் கவர்ந்து, மங்கையர்மல்கும் மதுரைக்குச் சென்றான் எனத் தம் போன்ற பெண்கட்கு அறிவுறுத்தி அன்புமிக்கவாறுணர்த்துகிறது இத்திருப்பாடல்.

இவ்வண்ணம் முழுமுதற்கடவுள் இறைவனே என்பதை உணர்த்தி, வரகுணன்மனைவி, மண்டோதரி முதலாயினார்க்கு உண்மைஞானம் உணர்த்தி ஆட்கொண்டு, வலைவீசி, பன்றியாய்ப் பாரில் பால்கொடுத்து, சிவ சீவ வேறுபாட்டை ஒழித்து, பிறவித் துன்பத்தைத் துடைத்து, எம் வளையலைக் கவர்ந்து, மதுரைக்குச்சென்ற திருவுள்ளக்கிடக்கை, பரிபாகமுற்ற உயிர்களுக்கு உண்மைஞானம் உணர்த்துதலும் மண்டோதரிபோல இம்மையின்பம் வேண்டுவார் அதனை எய்தச்செய்தலும் ஆகிய எளிவந்த செயலைச்செய்து அவரவர் நிலையில் அவரவர்களை ஆட்கொள்ளுதலும், வரகுணன்மனைவி போன்றார்க்குச் சிவ சாயுச்சியமளித்தலுமேயாம் என்பதை விளக்குவது இப்பகுதி என்க.

# 44. எண்ணப்பதிகம்

[ஒழியா இன்பத்துவகை]

இறைவன் ஆணையின் வண்ணம் திருத்தில்லையில் எழுந்தருளியிருக்கும் வாதவூரடிகள், திருவருள்பெற்று, திருவடிக்கண் என்றும் நீங்காத அன்பு பூண்டு, ஒழியா இன்பத்துறைதலே தம் எண்ணம் என்று விண்ணப்பிக்கின்றார்கள்.

எண்ணம் - மனத்தில் உறுதி பயப்பதாய் உருக்கொள்ளும் நினைவு. தம் வாழ்க்கையின் எதிர்கால இலட்சியமே எண்ணம். இது விருப்பத்தை அடியாகக்கொண்டு தோன்றுவது. எண்ணத்தின் நிலைத்த பயனைக்கொண்டே உயர்ந்த எண்ணம் தாழ்ந்த எண்ணம் என்ற பகுப்பு உண்டாகிறது. அடிகள் இப்பதிகத்தில், ஒழியாவின்பத்தால் என்றும் உவகையுடன் இருப்பதே எண்ணம் என எதிர்கால இலட்சியத்தை விண்ணப்பிப்பதால் இப்பதிகம் எண்ணப் பதிகம் எனப் பெயர்பெற்றது.

மங்கையர் நிலையில் தாமிருந்து மற்றப் பெண்களோடு உரையாடிக்கொண்டிருந்தபோது, அவர்களில் ஒருத்தி உன் தலைவன் யார் என்று வினவ, கணவன் தகுதி கூறி இவரே எம்பிரானுவார் என அறிவித்ததாக முற்பதிகத்திற்குறிப்பிட்ட அடிகள், இப்பதிகத்தால் அத்தகைய கணவனைக்கூடப்பெறின் தம் எண்ணம் இதுவாம் எனக் கூறுகின்றார். ஆதலால் முற்பதிகத்தோடு இதற்குள்ள இயைபு தெளிவாகிறது.

எண்ணம் - கவலை. எண்ணப் பதிகமாவது அடிகள் கவலையை இறைவற்கு எடுத்துக்கூறிய பகுதி என்பர் சிலர். அறிவித்து அன்பு மிக்க உயிர்கட்கு, அன்பால் விளைந்த இன்பம் என்றும் ஒழியாது இருக்கவேண்டும் என்ற உவகை உதிக்குமேயன்றிக் கவலைதோன்ருது என்க. அச்சம், கவலை முதலியன அறியாமையால் விளைந்த உயிர்க்குணங்கள் என்பதையும், சிவஞானியாய் நாயக நாயகித் தன்மையில் நாதனை விரும்பும் அடிகளுக்கு அத்தகைய உயிர்க் குணங்கள் தோன்ரு என்பதையும், ஒழியா இன்பத்து உவகையே தோன்றும் என்பதையும் எண்ணுக.

திருவாசக உட்கிடை என்னும் பழையகுறிப்பு, ஒழியாவின்பத் துவகை; என்பது தேகம்முதலிய ஆசையறுத்தல் என விளக்கம்

தரும். இன்பத்தில் மூழ்கியிருக்கின்ற ஒருவருக்கு மேலும்மேலும் இன்பம் இடையுறாது இருத்தல் வேண்டும் என்கின்ற விருப்பம் விளைவதுபோலச் சிவாநுபவத்தும் உவகைமிறக்க, அநுபவம் இடையறவு படாமைப்பொருட்டு, பிறப்பு அறவேண்டும்; பத்திமை பெற வேண்டும்; திருவருளைக் காணவேண்டும்; அதற்குத் தடையாயினவற்றில் நிகழும் பற்றறுதல்வேண்டும் என இவ்வெண்ணங்களை அறிவிப்பதால் இப்பகுதி எண்ணப்பதிகம் ஆயிற்று எனலாம்.

பழையவுரை, 'அழியாவுயிர் நிவேதன எண்ணப்பத்து ஒழியாவின்பத்து உவகை உரைத்தது' என்ற அகத்தியச்சூத்திரத்தை எடுத்துக்காட்டி, பேரானந்தம் பிரியாதுற்றும், பேதையறிவாம் பித்தர்போல் ஆசையுற்றே அலந்து பணிதல் இன்று உறுமோ? என்று தெளிவுபெற்று இன்பம் பெறுதல்துவே கருத்து என்று விளக்கமும் தரும். இவ்வுரை இப்பதிகத்தின் பெயரை எண்ணப் பத்து என்று குறிக்கிறது.

'நிறம்வளரும் மலர்ப்பொழில்சூழ்ந் தோங்குதிருத் தில்லைமன்றுள் நிமலன்நாமத் திறம்பெருகு மின்பமருள் என்றல் எண்ணப் பத்தெனவும்' என்பது பழைய திருப்பெருந்துறைப் புராணம். இதன் கருத்து, தில்லைமன்றுள் எழுந்தருளியிருக்கின்ற இறைவன் திருநாமத்தைச் செப்புவதால் உண்டாகும் இன்பத்தை அருளுக என்று வேண்டிக்கொள்வது எண்ணப்பதிகம் என்பதாம்.

ஆகவே தம்மெண்ணம் இது என நாயகித்தன்மையில் நிற்கும் அடிகள் நாயகனிடம் விண்ணப்பித்துக் கொள்வது என்பதாம்.

இப்பதிகம் ஆறு ஆசிரியவிருத்தங்களை உடையது. எண்ணுவரையின்றிப் பல்வகைப்பொருளைத் தொகுத்ியாகச் சொல்வதே பதிகமாதலின் ஆறு விருத்தங்களான் அமைந்தது என்க. சிலர் எண்ணப்பத்து எனப்பெயர்கொண்டு அடிகள் இயற்றியகாலத்துப் பத்துப்பாடல்களை உடையதாயிருந்தது; பின்னர் நான்குபாடல்கள் தழுவின என்பர்.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

597 பாருரு வாய பிறப்பற வேண்டும்
பத்திமை யும்பெற வேண்டும்
சீருரு வாய சிவபெருமானே
செங்கமல மலர்போல்

ஆருரு வாயவென் னாரமு தேயுன்
அடியவர் தொகைநடுவே
ஒருரு வாயநின் திருவருள் காட்டி
என்னையும் உய்யக்கொண் டருளே. 1

இ - ள் : புகழே வடிவான சிவபெருமானே! செந்தாமரை மலர்போலப் பொருந்திய திருமேனியையுடைய, என்னு உண்ணுதற்குரிய அமுதம் போல்பவனே! பூமியின்கண் உருவங் கொள்வதாகிய இப்பிறப்பு ஒழியவேண்டும்; அதற்குக்காரணமான அன்புடைமையைப் பெறவேண்டும்; அவ்வன்பு என்றும் நீங்காமல் நிலவ, உன் மெய்யடியார்கள் கூட்டத்தின் நடுவே ஒருருவாகவிளங்கும் நின் திருவினைக்காட்டி என்னையும் உய்யக்கொண்டருளுவாயாக என்றவாறு.

என் எண்ணம் பிறப்பறவேண்டும்; பத்திமை பெறவேண்டும்; திருவருளைக் காட்டி என்னையும் நீ உய்யக்கொண்டருள வேண்டும் என்பது கருத்து.

சிவபெருமானே! ஆரமுதே! பிறப்பறவேண்டும்; பத்திமையும் பெறவேண்டும்; உன் அடியவர்தொகை நடுவே திருவருள் காட்டி, என்னையும் உய்யக்கொண்டருள் எனக் கூட்டுக.

பார் உருவாய பிறப்பு - இம்மண்ணுலகத்தில் மாயா காரியமாகத் தோன்றும் ஐம்பூதங்களின் கூட்டுறவால் விளைந்த வடிவ வேறுபாட்டையுடைய பிறப்பு. பாரின்கண் உரு ஆய பிறப்பு என ஏழனுருபு விரிக்க. இதனை ஒருதொடராகக் கொண்டு, பிரகிருதிமாயா வடிவான பிறப்பு என்பாரும் உளர். பருத்த உரு என உரைப்பர் சிலர். பிறப்பு மலமாயைகட்கு நிலைக்களனாய் வருவினைகட்கு வழிவகுத்தலின் அது அறவேண்டுமென்று எண்ணுகிறார்.

பத்திமை - அன்புடைமை. அன்பு உயிர்க்கு இயற்கைப் பண்பாயினும் அவ்வன்பு எங்கோ செலுத்தப்பெற்று மேல் வினைக்கு உபகாரப்படாமல், நின்பாலே செல்லுவதாய் அமைய வேண்டுமென்பார் 'பத்திமையும் பெறவேண்டும்' எனப் பெற வேண்டிய பண்பாகக் கூறினார்.

இறைவற்கு மெய்ம்மையான புகழே திருமேனி என்பார் 'சீர் உருவாய சிவபெருமானே' என்றார். இறைவனுடைய உருவம் கருமேனி கழிக்கவந்த கருணையின் வடிவே அன்றிச் சிந்தனை வேறுபாட்டால் வந்தன அல்ல என்பார் 'சீருருவே' என்றார்.

சிவபெருமான் திருமேனி செங்கமல மலர்போலச் சிவந்த தாகலின், 'செங்கமல மலர்போல் ஆர் உருவாய' என்றார். ஆர் - பொருந்திய. செங்கமல மலர்போலும் என்ற உவமை நிறத்தினை விளக்கக் கொடுக்கப்பெற்றது.

அமுதம் வெண்ணிறமுடையதாதலின் அதனை நீக்குதற்குச் 'செங்கமல மலர்போலும் ஆர் உருவாய என் ஆர் அமுதே' என்றார்.

அடியவர்தொகை பலவாயினும், அதில் எல்லாரிடத்தும் ஒருமித்து உணரப்படும் பண்பு சிவனருள் ஒன்றேயாதலின் 'அடியார்தொகைநடுவே ஓருருவாய நின் திருவருள்' என்றார். திருவருள் வியாபகமாய் அடியார்தொகை அதனுள் வியாப்பிய மாய் அடங்கி அனைத்தும் திருவருளேயாகக் காணப்படுதலை விளக்கிற்று. ஓர் உருவாய என்பதை வினைத்தொகையாகக் கொண்டு ஆராயப்பெறுகின்ற உருவாய அருள் எனலுமாம்.

என்னையும் என்ற உம்மை இழிவுசிறப்பு. இத்திருப்பாடல் பிறப்பறுதலும், அன்புறுதலும் உன்னுலுய்யக்கொண்டருளப் பெறுதலுமே என் எண்ணம் என்பதை விண்ணப்பித்தலின் ஒழியா இன்பத்துவகையாகிற எண்ணத்தை உணர்த்தியவாறு காண்க.

598 உரியே னல்லே னுனக்கடிமை
உன்னைப் பிரிந்திங் கொருபொழுதும்
தரியே னாயே னின்னதென்
றறியேன் சங்கரா கருணையினால்
பெரியோ னொருவன் கண்டுகொ ளென்றுன்
பெய்கழ லடிகாட்டிப்
பிரியே னென்றென் றருளிய வருளும்
பொய்யோ வெங்கள் பெருமானே. 2

இ - ள் : சங்கரா! எங்கள் பெருமானே! குருநாதனை எழுந்தருளிய பெரியோன் ஒருவன், 'தம்பி! இதனைக் கண்டு கொள்' என்று உன்னுடைய வீரக்கழலணிந்த திருவடிகளைக் காட்டி உன்னைவிட்டுப்பிரியேன் என்று பலகாலும் சொல்லிய அருளும் பொய்தானோ? உனக்கு அடிமையாதற்கு உரியேன் அல்லேனாயினும், உன்னைவிட்டுப் பிரிந்து இங்கு ஒருபோதும் தங்கமாட்டேன் ; நாயேன் இந்நிலை எய்தியதற்குக் காரணம் இன்னதென்று அறியேன் என்றவாறு.

சங்கரா! பெரியோன் ஒருவன் உன் கழலைக்காட்டிக் கண்டு கொள் நான் உன்னைவிட்டுப் பிரியேன் என்று கூறியதும் பொய்யோ? உனக்கு அடிமையாகும் தரமுடையேன் அல்லேன்; ஆயினும், உன்னை ஒருகணமும் பிரியேன்; பிரியின் தரியேன்; இத்துணை அன்பு எனக்கு எப்படி உண்டாயிற்றென்று எனக்கே தெரியாதென்பது கருத்து.

சங்கரா! பெருமானே! உரியேன் அல்லேன் (ஆயினும்) பிரிந்து தரியேன்; நாயேன் இன்னதென்றறியேன்; பெரியோ னொருவன் 'கண்டுகொள்' என்று உன் கழல் அடி காட்டிப் பிரியேன் என்று அருளிய அருளும் பொய்யோ எனக் கூட்டிப் பொருள் கொள்வாரும் உளர்.

அடிமையாதற்கு உரிமையான தற்போதங்கழலுதல், குறிப் பறிந்து நடத்தல், ஆணைவழிச்சேறல் முதலான தகுதிகள் சில உளவே. அவற்றுள் ஒன்றும் தமக்கில்லையாதலின் 'உனக்கு அடிமை உரியேன் அல்லேன்' என்றார். அடிமை உரியேன் அல்லேன் எனவே உரிமையாதற்கு உரியேனென்னக் குறிப்பித்த தாகக் கொள்ளுதலும் ஆம். அங்ஙனம்கொண்டு ஒருபோதும் பிரிந்திருக்கத் தரியேன் என்றதாகக் கொள்ளுதலும் ஆம். உரிமை - மனைவி.

அடிமை ஆண்டானை விட்டுப் பிரிந்திருத்தலின் இழிவை முன்னர் 'ஆள்வாரிலி மாடாவேனோ' 'இவன் ஆர் என்று உன்னை ஏசாரோ' என்றெல்லாம் சொல்லிக்காட்டினார்கள் ஆகலான், யான் அடிமைக்கு உரியேன் அல்லேன் ஆயினும் பிரிந்திருக்கத் தரியேன் என்று அருளிய நயம் தெரிக.

உரிமையில்லாத உனக்குப் பிரியத் தரியாமை எங்ஙனம் விளைந்தது எனின், அது இன்ன காரணத்தால் விளைந்தது என்று யான் அறியேன் என்கின்றார். முகமறியாத இருவர், விதிகூட்ட மணந்தவழி இருவர்மனத்துளும் ஊமைத்தசும்புள் நீர் நிறைந்தாற்போல அன்பு நிறைய ஒருவரின்றி ஒருவர் வாழமாட்டாமையை உணர்வதுபோல, என்னை ஆட்கொண்ட போதே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும் நீ கொண்டதால் நின்னையின்றி வாழமுடியாது என்ற காதன்மை விளைந்தது; அதனால் 'பிரிந்து இங்கு ஒருபொழுதும் தரியேன்' என்கின்றார்.

அவன் ஆண்டபின் என்னறிவு கெட்டமையின் இத்தகைய இன்றியமையாமை எங்ஙனம் விளைந்தது என்பதனையும் அறியேன் என்பார் 'நாயேன் இன்னதென்று அறியேன்' என்றார்.

அங்ஙனம் என் அறிவு கெட ஆட்கொண்டும் இறைவன் பிரிந்தமையின், குருவாக எழுந்தருளியவர் சிவனே என்பதை உணர்ந்திருந்தும் முன்னிலைப் புறமொழியாகப் 'பெரியோன் உன் அடிகாட்டிப் பிரியேன் என்றதும் பொய்யோ' என்றார்.

சூளுரைப்பார் ஞாயிறு காட்டியும், தெய்வத்திருவடி காட்டியும் சூளுரைப்பார் ஆதலின் பெரியோன் இதோ பார்! என்று உன் அடிகாட்டிப் பிரியேன் என்றான்; அதுவும் பொய்யோ என்கின்றார். அடியைக் கண்டதற்கு அடையாளமாகக் 'கழலடி' என்கின்றார்.

இவ்வண்ணம் பிரிவச்சம் நினைந்து விண்ணப்பித்தல் ஒழியா இன்பத்து உவகையான் விளைவதை உணர்த்துதலின் இத்திருப்பாடல் எண்ணப்பதிகமாதல் காண்க.

599 என்பே யுருக நின்னரு ளளித்துன்
இணைமல ரடிகாட்டி
முன்பே யென்னை யாண்டுகொண்ட
முனிவா முனிவர் முழுமுதலே
இன்பே யருளி யெனையுருக்கி
உயிருண் கின்ற எம்மானே
நண்பே யருளா யென்னுயிர் நாதா
நின்னருள் நாணுமே. 3

இ - ள்: என் எலும்புகளெலாம் உருகத் தேவரீருடைய திருவருளையுதவி, திருவடித்தாமரைமலரிரண்டையும் காட்டி முன்னமேயே அடியேனையாட்கொண்ட முனிவனே! முனிவர்கள் அனைவருக்கும் முதல்வனே! இன்பத்தை அருளி என்னை உருக்கி உயிரையுண்கின்ற எம்மானே! என்னுயிர்த் தலைவா! நண்பனே! நின்னருளை நாணாமல் அருள்வாயாக என்றவாறு.

திருவருள் புரிந்து திருவடி காட்டி ஆட்கொண்ட முனிவா! முனிவர் முழுமுதலே! என்னுயிர்நாதா! நாணாமல் நின்னருளைச் செய் என்பது கருத்து.

வேறு காரணமின்றிக் கருணை ஒன்றே திருவுளங்கொண்டு உயிர்கள்மாட்டுச் செலுத்தப்பெறும் அருள் என்ற நயந்தோன்ற 'நின் அருள்' என விதந்தோதினார்.

எலும்பு ஒன்றற்கும் கரையாத உறுதியானது; உணர்வற்றது. அதனையும் உருகவைத்தது உன்னருள் என அருளின் ஆற்றலுணர்த்துவார் ஏகாரம் புணர்த்து 'என்பே உருக'

என்றார். அளித்து என்றது அருள் இரக்கம் காரணமாக அளித்தற்குரியது என்பது தோன்றக் கூறியது.

என் நெஞ்சத்தடத்து அலருந்தன்மையுடையது என்பார் திருவடிகளை மலராக உவமித்தார்.

முன்பே என்றது 'அன்றே என்றன் ஆவியும்' என்றது போல அநாதிகாலத்தே என்பதுபட நின்றது. குருவாக வந்து ஆட்கொண்ட ஆதிகாலத்தே எனலுமாம்.

என்னை என்றது அருள்செய்தற்கும், அடிமலர் காண்டற்கும் பரிபாகமுறாத என்னையும் என இழிவுசிறப்பும்மை தந்து பொருள் கொள்க.

முனிவன் - மனன சீலன். தியானவன்மை படைத்தவன் என்பதாம். முனிதல் - வெறுத்தல் அல்லது சினத்தல் என்னும் பொருளதாதலின் தீயனவற்றை வெறுத்துக் கோபிப்பவனே எனலுமாம்.

முழுமுதல் - தனக்கு ஒரு முதல்வனின்றித் தானே தனக்கு முதல்வனானவன். முனிவர்கள் அனைவர்க்கும் அத்தகைய முதல்வனே என்றதாம்.

இன்பேயருளி - தனித்த இன்பத்தைமட்டும் அருளி; என்றது துன்பம் கலவாத இன்பருளி என்பதாம். வெல்லம் மிகுதியாக உண்டவருக்கு உடம்பு இளைப்பதுபோல இன்பமே அருளியதால் நான் உருகினேன் என்பார் 'இன்பேயருளி எனையுருக்கி' என்றார்.

உருக்கி என்றது தன்வசமற்றுத் திருவடியிலே பற்றுக்கொண்டு மனமுருகச்செய்து என்பதாம். இதற்குத் துன்பம் கலவாத இன்பத்தினையே எனக்கு அருள்செய்து, அவ்வின்பத்தைப் பெற்றுக்கொள்ளாமையால் என்னை உருகவைத்து எனப் பொருள்கண்டு, பேருருவக்காட்சியால் பிரகிருதிக்கு அப்பாற்பட்ட பேரின்பத்தையே அளித்து, நான் நுகரமாட்டாமையான் என்னைப் பெருந்துன்பத்துள்ளவன் ஆக்கினாய் என நயமும் கூறுவர் சிலர். சிறந்தது தெளிக.

நண்பே - நண்பனே. பண்பு பண்பியை உணர்த்தியது. நின்னருள் நாணுமே நண்பே அருளாய் எனக் கூட்டி நின்னிற் பிரியேன் என்ற நின்னருள் நாணுருவண்ணம் ஐந்தினை நண்பினையே அருளும் என்று உரைப்பாரும் உளர்.

இத்திருப்பாடல் 'இன்பேயருளி எனையுருக்கி' என்றமையால் ஒழியா இன்பத்துவகையும், நின்னருள் அருளாய் என்றமையால் எண்ணமும் தோன்றநிற்றல் காண்க.

600 பத்திலனேனும் பணிந்திலனேனுமுன்
உயர்ந்தபைங் கழல்காணப்
பித்திலனேனும் பிதற்றிலனேனும்
பிறப்பறுப் பாயெம் பெருமானே
முத்தனை யானே மணியனை யானே
முதல்வனே முறையோவென்
றெத்தனை யேனும் யான்றொடர்ந் துன்னை
இனிப்பிரிந் தாற்றேனே. 4

இ - ள் : எம்பெருமானே! முத்தை ஒத்தவனே! மாணிக்க மணியை ஒத்தவனே! முதல்வனே! யான், உன்பால் பற்றிலேன் ஆயினும் உன்னை வணங்கிலேனாயினும் யாவற்றினும் உயர்ந்த உனது பசிய திருவடியைக் காணுதற்குரிய பித்து இல்லேனாயினும், பித்தால் தொடர்பின்றிப் பேசும் பிதற்றுரையிலேன் ஆயினும், எத்தன்மையேனாயினும், இனிமேல் முறையோ என்று உன்னைத்தொடர்ந்தன்றிப் பிரிந்திருக்க ஆற்றேனாயினேன் ; ஆகையால் என் பிறவியையறுப்பாயாக என்றவாறு.

எம் பெருமானே ! அடியேன் தன்மை நோக்காது என் பிறவியை அறுத்து எப்போதும் உன்னுடன் இருக்கப் பணி என்பது கருத்து.

எம் பெருமானே! முதல்வனே! முறையோ எத்தனையேனும் தொடர்ந்து உன்னைப் பிரிந்து ஆற்றேன் ; பத்திலனேனும் பிதற்றிலனேனும் பிறப்பு அறுப்பாய் என இருமுடிபுகளாக்கி உரைப்பாரும் உளர்.

பற்று பித்து, மனத்தின் செயல் ; பணிதல் - மெய்யின் செயல். பிதற்று - வாக்கின் செயல். ஆகவே, திரிகரணங்களாலும் உன் பணி புரியேனாயினும் என்றவாறும். பற்று பத்தென எதுகைநோக்கி மரீஇயிற்று.

உன் உயர்ந்த பைங்கழல் என்பதை உயர்ந்த உன் பைங்கழல் என மாறுக. எல்லாவற்றினும் உயர்ந்த உன்னுடைய பசிய திருவடிகளைத் தரிசிக்க என்க. கழல்: ஆகுபெயர். திருவடியைக்காட்டிலும் உயர்ந்தது இல்லை என்பார் இங்ஙனம் உறுதி கூறினர்.

பித்து - முறுகிய காதல். அஃதாவது, காணுவ எல்லாம் அவையே போறல். பிதற்று-பித்தால் விளைவதும், தொடர்பில்லாததும், மறைவெளிப்படுப்பதும், வழுவானதும் ஆகிய உரை.

குளிர்ந்திருத்தலின் 'முத்தனையானே' என்றும், பாடவேளையில் மிக ஒளிர்வதாய் நோய் தீர்க்கும் மருந்தாய் இருத்தலின் 'மணியனையானே' என்றும் கூறினார்.

முறையோ என்று - நீ என்னைவிட்டுப் பிரிதல் நும் பெருந்தகுதிக்கு முறையாமோ என்று என்க.

எத்தனையேன் உம் - எத்தன்மையை உடையேனாயினும். பிதற்றிலனேனும் எத்தனையேனும் உன்னைத் தொடர்ந்து பிரிந்தாற்றேன் எனக் கூட்டுக. எத்தனையானும் எனப் பாடங்கொண்டு, எவ்வளவு நேரிடினும் என்றும் எவ்வளவும் என்றும், இத்தனையானும் எனப் பாடங்கொண்டு சிறுபொழுதேனும் என்றும் பொருள் உரைப்பர்.

யான் உனைத் தொடர்ந்து (ஆற்றுவேனேயன்றி) பிரிந்து ஆற்றேனெனச் சிலசொல் வருவித்துப் பொருளியைபு காண்க.

பிரிவை விளைப்பது பிறவியாதலின், பிரிந்தாற்றேன் பிறப்பறுப்பாய் என வேண்டுகின்றார். ஆதலால், ஒரு வாக்கியமாகக் கூட்டி உரைகண்டாம்.

பிரிந்தாற்றேன் பிறப்பறுப்பாய் என எண்ணத்தை விண்ணப்பித்தலும், தொடர்ந்து என இன்பத்துவகையும் வெளிப்படுத்துதலின் இப்பாடல் எண்ணப்பதிகத்ததாதல் காண்க.

601 காணும தொழிந்தேன் நின்றிருப் பாதம்
கண்டுகண் களிகூரப்
பேணும தொழிந்தேன் பிதற்றும தொழிந்தேன்
பின்னையெம் பெருமானே
தாணுவே யழிந்தேன் நின்னினைந் துருகுந்
தன்மையென் புன்மைகளாற்
காணும தொழிந்தேன் நீயினி வரினுங்
காணவும் நாணுவனே. 5

இ - ள் : எம்பெருமானே! தாணுவே! நின் திருவடிகளைக் காண்பதை விட்டேன்; அவற்றைக்கண்டு கண்கள் களிப்புமிக வணங்குவதை விட்டேன்; அவற்றைப்பற்றி ஆனந்தபரவசத்தால் பிதற்றுவதை விட்டேன்; என் இழிதகைமையால் நின்னையே தியானித்து மனமுருகும் தன்மைகளைக் காண்பதை

விட்டேன்; ஆதலால் நான் அழிந்தேபோனேன்; இனி நீயே என்முன்னர் வரினும் உன்னைக் காணவும் வெட்கப்படுவேன் என்றவாறு.

பெருமானே! நின் திருவடிகளைக் காணவும், வணங்கவும், பிதற்றவும் விட்டேன்; ஆதலால் அழிந்தேன்; நீயே வலிய என்முன் வரினும் உன்னைக் காண நான் நாணுவேன் என்பது கருத்து.

தாணு - நடுதறி. இறைவன் நடுதறிபோலச் சிவலிங்கத் திருமேனியிடத்தே விளங்குகின்றார் ஆதல்பற்றிக் கூறியதாம். ஸ்தாணு என்னும் ஆரியச்சிதைவு தாணு; நிலையானது, அழிவற்றது என்பது பொருள்.

புன்மைகளால் என்றது பொறிபுலன்களிடையே சிக்கித் தம்மறிவிழந்த இழிவால் என்றவாறு.

திருப்பாதம் காணுமது ஒழிந்தேன் என்பன முதலாகத் தவறுணர்த்துமுகத்தான் காணுதற்கண்ணும், பேணுதல் முதலானவற்றின்கண்ணும் இன்பத்துவகையிருத்தலை இத்திருப்பாடல் எதிர்மறைமுகத்தான் விண்ணப்பித்தவாறு.

602 பாற்றிரு நீற்றெம் பரமனைப்
　　பரங்கரு ணையோடு மெதிர்ந்து
தோற்றிமெய் யடியார்க் கருட்டுறை யளிக்குஞ்
　　சோதியை நீதியிலேன்
போற்றியென் னமுதே யெனநினைந் தேத்திப்
　　புகழ்ந்தழைத் தலறியென் னுள்ளே
ஆற்றுவ னுக வுடையவ னேயெனை
　　ஆவவென் றருளாயே. 6

திருச்சிற்றம்பலம்

இ - ள் : பால்போலும் வெளிய திருநீற்றை அணிந்த எம் பரமனும், மேலான கருணையுள்ளத்தோடும் தாமே எதிர்வந்து தோன்றி, மெய்யடியார்கட்குத் திருவருளாகிய துறையை அளிக்கும் சோதியும் ஆகிய சிவபெருமானே, நீதியற்ற யான் என்னமுதமே! உடையவனே! எனத்தியானித்து, துதித்துப் போற்றிப் புகழ்ந்து கூவியழைத்து, ஓவென்று அலறி என்னுள்ளேயே ஆறியிருப்பவனுக ஆகுக என்று அருள்புரிவாயாக என்றவாறு.

என்னை உடையவனே! உன்னைப்போற்றிப்புகழ்ந்து ஏத்தி அலறி ஆறுதல் பெற்றிருப்பவனாக அருள்செய்க என்பது கருத்து.

பால் திருநீறு - திருநீற்றிற்குப் பால் நிறத்தால் ஒப்பு. பகுதிப்பட்டதாகிய திருநீறு என்பாரும் உளர்.

பழைய உரை, பரமனே! சோதியே! என விளியாகப் பாடங்கொண்டமை அவ்வுரையால் அறியப்பெறுகின்றது. ஏனைய ஏடுகளிலும் இப்பாடம் காணப்படுகின்றது.

எதிர்ந்து தோற்றி - அடியார்கள் தேடிச்செல்லாது, அவர் களுக்கு எதிரே தாம் வந்து தோற்றி யென்க. பிறவிக்கடலில் விழுந்து வருந்துவார்க்கு அருள் துறைபோல்வது ஆகலின் 'அருட்டுறை' என்றார்.

ஆற்றுவன் ஆக ஆவ - ஆற்றியிருப்பவனாக ஆகுக. ஆவ: வியங்கோள் வினைமுற்று. ஆக என்பதன் மரூஉ. அல்லது ஐயோ என்று இரங்கி ஆற்றுவனாக அருளாய் எனலுமாம். ஆவ எனக் கூவியழைத்து என்பது பழைய உரை.

இத்திருப்பாடல் இறைவனைச் சோதியாகவும் அமுதாகவும் அனுபவித்த இன்பத்துவகை இடையீடுபடாமை ஆற்றுவனாக அருளாய் என எண்ணத்தை விண்ணப்பித்தலால் பதிகத் தலைப்பிற்கும் அதன் விளக்கத்திற்கும் இயைபுடைத்தாதலறிக.

இங்ஙனம் ஆறு திருப்பாடலானும், ஒருருவாய திருவருளைக் காட்டவேண்டித் தலைவன் பெருமையினையும், தன்னிழிவையும் வெளிப்படுத்தி, தன்னை எங்ஙனமாயினும் அடைந்த இன்பத் தில் தடைப்படாது காத்தருளுக என வேண்டுதலின் இப்பகுதி எண்ணப்பதிகமாயிற்று.

# 45. யாத்திரைப்பத்து

[அநுபவாதீதம் உரைத்தல்]

வாதவூர்வள்ளல் தில்லையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, தம்மைப்போல உள்ளம் உருகும் அடியார்கள் பலரையும் அழைத்து 'இப்பொய்மாயப் பிறவியைவிட்டுத் திருவடியைச் சாருங்காலம் வந்துவிட்டது; வாருங்கள்' என்று அழைக்கும் முறையில் இதனை அருளிச்செய்கின்றார்கள்.

யாத்திரை - பயணம். தம்முடன் வருவாரையும் அழைத்துக் கொண்டு பயணம் போதலை அறிவிக்கும் பத்துப் பாடல்களைக் கொண்டது இப்பகுதி.

பழைய உரையின் குறிப்பு அனுபவாதீதமுரைத்தல் அதாவது முதலாய ஆசையறுத்தல் என்னும். இந்த உரைவிளக்கம் வேறு எப்பிரதியிலும் காணப்பெறவில்லை ஆதலால் வரும் பதிப்புக்களில் சிந்திக்கப்பெறும்.

பழையவுரை, "யான் எனது அறுமுரை யாத்திரைப்பத்து, ஊனமில் அனுபவாதீதம் உரைத்தது" என்ற சூத்திரத்தை எடுத்துக் காட்டி, 'சிவானந்தம் பெற்று அறிவே சிவமாய்ச் சாக்கிராதீதத் தன்மைபெற்றால் விந்துமுதல் ஐம்பூதங்களீறான கரணங்கள் எவையும் அருளாய் முத்தித்துணையாய் முடியுமுறைமையாதலால் அருள் வீடடைதற்குத் தம் பரிசனமாவாரை உவந்த அநுபூதியுரைப்பது' என்ற விளக்கமும் தரும்.

"பொல்லாத பவத்தைவிட்டுச் சிவன்கழற்கீழ்ப் புகுங்காலம் புணர்ந்தது எற்கு இங்கு, எல்லாரும் வாருமெனக் கருணையினால் அழைத்திடல் யாத்திரைப் பத்தாகும்" என்பது பழையபுராணம்.

இவை அனைத்தையும் ஒருங்கு எண்ண, யாத்திரைப்பத்தென்பது சிவானுபவம் தன்னளவினதன்றித் தன்னைச் சார்ந்தார்க்கும் வாரி வழங்கும் தாத்ததாய்மிக இறைவனால் அழைக்கப்பட்ட தாம் அடியார்கள் அனைவரையும் அழைத்துக்கொண்டு திருவடிக்கு யாத்திரைசெல்லுதலை அறிவிப்பது என்பது போதரும்.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

603 பூவார் சென்னி மன்னனெம்
புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவா துள்ளங் கலந்துணர்வாய்
உருக்கும் வெள்ளக் கருணையினல்
ஆவா வென்னப் பட்டன்பாய்
ஆட்பட் டீர்வந் தொருப்படுமின்
போவோங் காலம் வந்ததுகாண்
பொய்விட் டுடையான் கழல்புகவே. 1

இ - ள்: அன்புடையவர்களாகிச் சிவனடிக்கு ஆட்பட்ட தொண்டர்களே! பூக்கள் நிறைந்த திருமுடியை உடைய மன்னனும் பாம்பை அணிந்த எம்பெருமானும் ஆகிய சிவ பெருமான், சிறியேமாகிய எம்மை இடைவிடாது எம் உள்ளத்திற்கலந்து உணர்வாகி எம்மை உருக்கும் வெள்ளம் போன்ற கருணையினல் ஆ! வா என்று அவரால் அழைக்கப் பட்டுப் பொய்யான இவ்வுலகவாழ்வைவிட்டு எம்மையுடைய பரசிவனது திருவடிக்கண் புகக் காலம் வந்தது; போவோம்; வந்து ஒன்றுசேருங்கள் என்றவாறு.

தொண்டர்களே! சிவபெருமானல் யாம் அழைக்கப்பெற்று, திருவடிக்கண் புகுங்காலம் வந்தது; வந்து ஒன்றுகூடுங்கள்; போவோம் என்கின்ருர் என்பது கருத்து.

அன்பர்கள் அருச்சனைசெய்த கொன்றை முதலிய பூக்கள் நிறைந்து விளங்குதலால் 'பூவார் சென்னி' என்ருர்.

புயங்கப் பெருமான் - பாம்புகளை அணிந்த பெருமான். புஜங்கநடனம் புரியும் பெருமான் எனலுமாம்.

மெழுகு தீயின்சார்பை விட்டுவிலகின் இறுகிவிடுவதுபோல உயிர்களோடு கலந்திருக்கும் தன்மை இல்லையானல் எங்கே உணர்விழுந்து தீச்சார்புபெற்றுக் கெட்டழியுமோ என இரங்கி, இடைவிடாது கலந்து ஞானமாய்த் திகழ்கின்ருர்; உயிர்களை உருகவைக்கின்ருர் என்பார் 'ஓவாது உள்ளங்கலந்து உணர் வாய் உருக்கும்' என்ருர்.

உருக்குதல் தீக்கன்றி வெள்ளத்திற்கு இல்லையாதல் தெளிவு; அங்ஙனமாகவும் கருணைவெள்ளம் உருக்கும் என்றது வியப்புத்தோன்ற உரைத்தவாறு.

'ஆ' என்பது, பல ஆண்டுகள் வெளிநாடு சென்றிருந்த ஒருவன் தன் நெருங்கிய உறவினர் ஒருவரை அங்குக் கண்ட போது ஆ! வா வா என்று பரபரக்கக் கூறுவன்; அதுபோல இறைவன் அடியார்களைக் கண்டபோது ஆ! வா என்பர் என்பதனை 'ஆ! வா என்னப்பட்டு' என்பதாற்குறிப்பித்தார்.

ஒருவர்க்கு ஒருவர் ஆட்படுகின்ற காலத்துக் காசுக்காக ஆட்படுதலும், கடமைக்காக ஆட்படுதலும், அதிகாரத்திற்காக ஆட்படுதலும், அன்பிற்காக ஆட்படுதலும், அறிவிற்காக ஆட்படுதலும் எனப் பலநோக்கங்கொண்டு ஆளாவர். இவற்றுள் அன்பிற்காக ஆட்படுதலே உயர்ந்தது. அதனையே அடிகளார் 'அன்பாய் ஆட்பட்டீர்' என்று அடியார்களை விளிக்கின்றார். நம்பியாரூரரும் "விற்றுக்கொள்வீர் ஒற்றியல்லேன் விரும்பி யாட்பட்டேன்'' எனல் காண்க. ஆட்பட்டீர்: விளி ஏற்ற வினையாலணையும்பெயர்.

பொய் - நிலையாத உலகவாழ்வு. பொய்விட்டு உடையான் கழல்புகக்காலம்வந்தது; போவோம்; ஒருப்படுமின்எனமுடிக்க. பழையவுரை, பூவார்சென்னி மன்னன் - திருமுடியில் பூக்களைச் சாத்தும் மன்னனாகிய வியாக்கிரபாத முனிவரும், புயங்கப் பெருமான் - பாம்பரசனாகிய ஆதிசேடனது அவதாரமாகிய பதஞ்சலிபகவானும், சிறியோமைக்கலந்து இறைவன் சுகவாரியாய் ஏகவுருவாய் இருப்பதைக்காட்டி என்றும், பொய்விட்டு என்பதற்குத் தத்துவக் குப்பைகளை உதறித்தள்ளி எனவும் விளக்கந்தரும்.

இத்திருப்பாடல், உள்ளங்கலந்து உணர்வாய் உருக்குங் கருணையென அநுபவாதீதம் உரைத்து, போவோம் என்றமையால் யாத்திரைவிருப்பத்தையும் தெரிவித்தல் காண்க.

604 புகவே வேண்டா புலன்களினீர்
புயங்கப் பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்கவெல்லாம்
வேண்டா போக விடுமின்கள்
நகவே ஞாலத் துள்புகுந்து
நாயே யனைய நமையாண்ட
தகவே யுடையான் தனைச்சாரத்
தளரா திருப்பார் தாந்தாமே. 2

இ - ள்: இம்மண்ணுலகில் தாமேபுகுந்து, நாயை ஒத்த இழிகுணம் படைத்த நம்மை எல்லாரும் நகைக்க ஆண்ட தகுதியுடையவனாகிய பெருமானை அணுக, அவரவர்களும்

தாம்தாமாக நிலையில் தளராது இருப்பார்கள்; ஆதலால், நீர், ஐம்பொறிகளும் ஆரத்துய்க்கும் புலன்களிற் புகவே வேண்டா; பாம்பணிந்த பரமனுடைய பொலிவாகிய திருவடிகளையே மிக நினையுங்கள்; குற்றங்கள் அனைத்தும் உங்களால் விரும்பத்தக்கன அல்ல; அவற்றைப் போகவிடுங்கள் என்றவாறு.

நாயனைய நம்மை ஆட்கொண்ட பரமனைச்சார அவரவர்களும் தாம்தாமாகப் பேரானந்தநிலையில் இருப்பார்கள் ஆதலால் நீங்களும் புலன்களைச் சாரவேண்டா; திருவடிகளையே எண்ணுங்கள்; குற்றங்களை விடுங்கள் என்பது கருத்து.

மாயாதீதனை மயேச்சுரன் மாயாகாரியமான இம்மண்ணுலகில் தாமே வலியவந்தான்; நாயை ஒத்த இழிந்த நம்மையெலாம் ஆண்டான்; அவனைச்சார, பிறரும் பேரின்பத்தைத் துய்த்தும் தாம் தாமாக இருப்பார் என்கின்றார்.

குகையுட்புகுந்தான், கோட்டையுட் புகுந்தான் என்பனவற்றுள் வீரன் கடமைக்காகப் புகுதல் தெளிதல்போல, ஞாலத்துள் புகுந்து என்பதும், மாயாதீதனை பரமேசுரன் தன்பெருமையனைத்தையும் மறந்து, நம்மைக் காப்பது என்ற கருணையே பெரிதாக எண்ணி மாயாகாரியமாய்த் தகாதமண்ணிற் புகுந்து என்பதை அறிவித்துநின்றது.

தகுதியற்றவனை இறைவன் ஆண்டனன் என்று பொய்யடியார்கள் நகைசெய்ய ஆண்டருளினன் என்பார் 'நகவே ஆண்ட' என்றும், அதுவும் அவன் பெருமைக்கு அணிசெய்வதாயிற்று என்பார் 'தகவேயுடையான்' என்றும் கூறினர். துன்பத்தழுந்திக் களிப்பற்றிருந்த யாம் நகும்படியாக ஆண்டான் எனலுமாம்.

தீயினைச்சார்ந்த இரும்பு கருமைமாறித் தீநிறம்பெறுதலைப் போலத் தளர்ச்சி தாப கோபங்கள் இயற்கையிலேயே இல்லாத பெருமானைச் சார்ந்து உயிர்களும் தளர்ச்சிநீங்கும் சிவமேயாக வீற்றிருக்கும் என்பார் 'தகவேயுடையான் தனைச்சாரத் தாம் தாமே (ஆகி) தளராதிருப்பார்' என்றார். இது ஏது.

நீர் புலன்களில் புகவே வேண்டா - அமுதம் கிடைக்க இருக்கின்றநேரத்திற் புளிங்காடியை அல்லது காஞ்சிரங்காயை விரும்பிச் செல்வார்போலத் தாந்தாமாகவிளங்கும் வீட்டின்பம் கிடைக்கின்ற வேளையிலே பொறியுணர்ச்சி வயப்பட்டுப் புலன்களின்மேற் செல்லவேண்டா என்று அறிவிக்கின்றார்.

மிக்கவெல்லாம் - குற்றங்களனைத்தும். "மிகுதிக்கண் மேற்சென் றிடித்தற்பொருட்டு" என்புழி மிகுதி - குற்றமாதல்போல ஈண்டும் மிக்க என்பதற்குக் குற்றங்கள் எனக் கூறப்பட்டது. பழையவுரை பழைய தத்துவத் தொடர்ச்சியான அனைத்தையும் என்னும்.

இத்திருப்பாடல், தாந்தாமே தளராதிருப்பார் என அநுபவாதீதம் பிறர்மாட்டு விளைதலை எடுத்துக்காட்டி, உலகியற் சார்பு ஒழித்துத் திருவடியைச்சாரச் செல்லவேண்டும் என்பதால் யாத்திரையும் ஆதல் காண்க.

605 தாமே தமக்குச் சுற்றமும்
தாமே தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசமார்
என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும்
அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப்
புயங்க னாள்வான் பொன்னடிக்கே. 3

இ - ள்: மெய்யடியார்களே! இறைவன் திருவடி தாமே தமக்குச் சுற்றம்; அத்திருவடிகளே நமக்கு விதிக்கும் உபாயங்கள்; அங்ஙனமிருக்க யாம் ஆர்? எம்முடையவரென்று பேசப்படும் பொருள்களாவார் யார்? எம்மைப் பிணித்து நிற்கும் பாசங்கள் யார்? இவை என்ன மாயம்? இவையனைத்தும் உம்மைவிட்டு விலக, தலைவனாகிய சிவபெருமானுடைய அடியார்களோடும், சிவபெருமானுடைய திருவுள்ளக்குறிப்பையே குறிப்பாகக்கொண்டு, நம்மை ஆள்வானாகிய பாம்பு அணியும் பரமனது அழகிய திருவடிக்கண் இப்பொய்வாழ்வை விட்டுப்போமாறு ஒருப்படுமின் என்றவாறு.

உறவும் விதியும் சிவனே ஆதலால், யான், எனது, பாசம் இவைகள் யார்? என்ன மாயம்? இவை யாவும்விலக இறைவன் திருவடிக்குச்செல்ல ஒருப்படுங்கோள் என்பது கருத்து.

தமக்கு - அடியார்களாகிய தமக்கு. தாமே - சிவமே. அங்ஙன்மே ஏனைவிடத்துங்கொள்க. சிலர் தமக்குச் சுற்றம் தாமேயாகவும், தமக்கு விதிவகைகளை உளவாக்கலும் தாமேயாகவும் எனத் தாம் என்பன அனைத்திற்கும் மக்கள் என்ற பொருளே கருதுவர். பழையவுரை குஞ்சிதபாதமே நமக்குத் தமர்கள்; அவையே விதி விலக்கு என்று கூறித் தாம் என்பது இறைவ

னுடைய தாள்களை என்று கூறும். 'தன்னை நிலைகலக்கிக் கீழிடு வானும் தன்னை நிலையினும் மேன்மேலுயர்த்து நிறுப்பானும் தன்னைத் தலையாகச் செய்வானும் தான்' என்பதுபோல, எல் லாம் உயிராகிய தானே என்று கருதுதல் பசுபோத முனைப் பிற்குத் தலைமை வழங்கும் உலகநூல் மரபன்றிச் சைவநூன் மரபன்றென விடுக்க.

'நானார் என் உள்ளமார் ஞானங்கள் ஆர்' (216) என்பது போல ஈண்டும் 'யாமார் எமதார் பாசமார்' என அஃறிணை எழுவாய் யார் என்னும் பலர்பால் வினவிளைக்குறிப்புமுற்றை ஏற்று முடிந்தது.

கோமான் - தலைவன், கோ - தலைமை, மான்விகுதிபெற்று வந்தது; பெருமான் என்பதுபோல.

தொண்டரொடும் அடிக்குப் போமாறு அமைமின்; அவன் றன்குறிப்பே குறிக்கொண்டு போமாறு அமைமின் எனக் கூட்டுக. குறிக்கொண்டு - குறிப்பாகப்போற்றி. ஆள்வான் புயங்கன் என மாற்றி ஆள்வானாகிய புயங்கன் என வினையா லணையும் பெயராகக்கொள்க.

இத்திருப்பாடல், எல்லாம் அவனே என்பதால் அநுபவா தீதமும் போமாறமைமின் என்பதால் யாத்திரையும் உணர்த் துதல் காண்க.

606 அடியா ரானீர் எல்லீரும்
அகல விடுமின் விளையாட்டைக்
கடிசே ரடியே வந்தடைந்து
கடைக்கொண் டிருமின் திருக்குறிப்பைச்
செடிசே ருடலைச் செலநீக்கிச்
சிவலோ கத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்றன்
பூவார் கழற்கே புகவிடுமே. 4

இ - ள்: திருநீற்றை அணிந்த திருமேனியை உடைய புயங்கப்பெருமான், நம்முடைய முடைநாற்றம் வீசும் இவ் வுடலைநீக்கி நம்மைச் சிவலோகத்தே வைப்பன்; தனது பூவை யொத்த திருவடிக்கண் செலுத்துவான்; ஆதலால் அடியவர்க ளாகிய நீவிரனைவிரும் விளையாட்டைத் தூரவிடுங்கோள்; நம் எல்லாருக்கும் பாதுகாவலாகவுள்ள திருவடியைச் சார்ந்து, அவன் திருக்குறிப்பைக் கடைப்பிடித்திடுங்கள் என்றவாறு.

புயங்கப்பெருமான், நம் உடலைக் கெடுத்து இன்பவுலகில் இணையடிமலரில் இருத்துவன்; ஆதலால், அடியார்கள் எல்லோரும் விளையாட்டைவிட்டு, திருவடிச்சார்பு பெற்று, அவன் திருக்குறிப்பின்வழி ஒழுகுங்கள் என்பது கருத்து.

விளையாட்டு-பயனில்லாததொழில்; அதாவது வெறுவினை. உலகத்தில் உண்டு உடுத்துச் சினந்து செறுத்துக் களித்து விளிந்து வாழ்வன யாவும் வீட்டின்பமாகிய பேரின்பத்தைப் பயவாமைமாத்திரமன்றித் தடைகளாகவும் விளைதலின் அத்தகைய வாழ்வை விளையாட்டு என்றார். விளையாட்டை விடுமின் என்றது அகலவிடுமின் என்றார், விட்ட விளையாட்டு வினையாட்டாகவே வந்து பற்றி மீளவும் உயிரை இழிநிலை எய்துவிக்குமாதலின் என்க.

கடி சேர் அடி - எமக்கெல்லாம் அரணான குஞ்சிதபாதம். அப்பர்பெருமான் "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை, கன்றிய காலனைக் காலாற்கடிந்தான் அடியவற்காச், சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம், என்று வந்தாய் என்னும் எப்பெருமான்றன் திருக்குறிப்பே" என்றருளியதுபோன்ற நம் அனுபவத்திற்கு வாய்த்த அருட்குறிப்புக்களையே விடாது இறுகப்பற்றிப் போமாறு அமைமின் என்றதாகக் கொள்க.

இங்ஙனம், சிவலோகத்தே நமை வைக்கும்; பூவார்கழற்கே புகவிடும் என அனுபவித்த நிலையையும், போமாறு ஒருப்படுமின் என யாத்திரை விருப்பையும் விளக்குதல் காண்க.

607 விடுமின் வெகுளி வேட்கைநோய்
மிகவோர் காலம் இனியில்லை
உடையா னடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ
டுடன்போ வதற்கே யொருப்படுமின்
அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள்
அணியார் கதவ தடையாமே
புடைபட் டுருகிப் போற்றுவோம்
புயங்க னாள்வான் புகழ்களையே. 5

இ - ள்: மெய்யடியார்களே! கோபம் விருப்பு வெறுப்பு இவைகளை விடுங்கோள்; இனி, இதனின் மிக ஓர்காலம் வரப்போவதில்லை; நம்மை ஆளாகவுடைய சிவபெருமான் திருவடியின்கீழ்ப் பெரிய அடியார் கூட்டத்தோடு செல்லுதற்கு ஒன்றுபட்டு எழுங்கோள்; சிவபுரமாகிய திருக்கயிலாயத்து, அழகமைந்த கதவு அடையாமல், பக்கங்களினின்று, எம்மை

ஆள்பவனுகிய புயங்கப்பெருமான் புகழ்களை மனம் உருகிப் போற்றுவோம் என்றவாறு.

மெய்யன்பர்களே! காமம்முதலான தீயகுணங்களை விட்டு, அடியார்கூட்டத்தோடு நம்மை ஆள்பவன் திருவடியைச் சேர்வோம்; திருக்கயிலையில் கதவு அடைபடாமலிருக்கப் பக்கத்தில் நின்று மனமுருகிப் போற்றுவோம் வாருங்கள் என்று அழைக்கின்றார்.

வெகுளி - தன்னால் விரும்பப்பெற்ற பொருளைப் பெருத போதும், பெற்றிழந்தபோதும், பிறர் பெற்றபோதும், மானம் பொருள் குலம் கல்வி முதலியன இழித்துரைக்கப்பட்டபோதும் விளையும் சீற்றமாகிய மனத்தின் தன்மை.

வேட்கை - பொருள்கள்மேற்றோன்றுகின்ற பற்றுள்ளம். நோய் - அதுபற்றி விளைவதாகிய துன்பம். இவையனைத்தும் மனத்தைப்பற்றிநின்று உயிர்க்கு இன்பம் விளையாதவண்ணம் ஊறு செய்வனவாதலின் இவற்றை விடுங்கள் என்றார்.

இனி (இதனின்) மிக்க ஓர் காலம் இல்லையென ஒருசொல் வருவிக்க. இப்போது நமக்குக் கிடைத்த காலத்தைப்போல வாய்ப்பான காலம் இனிக் கிடைக்காது என்பதாம்.

நாம் புதுவழியிலே போகின்றோமல்லேம்; புதியவன்பாற் சார்கின்றோமல்லேம்; நம்மை அநாதிகாலத்தொட்டு ஆளாகவுடைய முதல்வன் திருவடியைக் குறித்துத்தான் நம் பயணம் தொடங்குகிறது. நம்மிலும் பழகிய பழவடியார்கூட்டத்தோடு தான் செல்கிறோம். அவர்கள் போகின்றபோது நாமும் உடன் போனால், கோவுடனே கூடிக் குருட்டாவும் ஊர்புகுவதுபோல அவன் திருவடியை அடைதல் எளிதாகும். இப்படி ஒருகாலம் இனி வாய்க்காது என்பார் 'உடையானடிக்கீழ்ப் போவதற்கே ஒருப்படுமின்; பெருஞ்சாத்தோடு உடன்போவதற்கே ஒருப்படுமின்' என்றார். சாத்து - கூட்டம்.

நொண்டிப்பசு வருவதற்குள் படல் அடைத்ததுபோலச் சிவபுரத்துள் வாயிற்கதவுகள் அடைபட்டுப்போகாதவண்ணம், பக்கங்களில்நின்று புயங்கனுடைய எல்லையற்ற புகழ்களை மனமுருகிப் போற்றுவோம் என்கிறார். அவன் புகழ் பலவாதலின் நாம் பக்கம் நின்று புதிது புதிதாகப் பற்பல புகழ்களைச் சொல்லிப்போற்ற இறைவன் திருச்செவியேற்பதாற் காவலர்கள் கதவடையார்கள் என்ற குறிப்புத்தோன்றப் 'புகழ்கள்' எனப் பன்மையிற் கூறினார்.

வெற்றாரவாரத்தை இறைவன் மனம் கொள்ளாறுதலால் நாம் மனம் உருகிப்போற்றுவோம். அவன் பத்தி வலையிற்படுவோன் ஆதலால் என்பார் 'உருகிப் போற்றுவோம்' என்றார். புடைபட்டு - மிகுதிப்பட்டு என்பாரும் உளர்.

இங்ஙனம் இத்திருப்பாடல், அடிகள் தாம் அடைந்த அனுபவாதீதத்தைப் பிற அன்பரும் அடைக எனத் திருவுளம்பற்றி அவர்களை விளித்துப் போவதற்கே ஒருப்படுமின் என்றறிவித்தலின் யாத்திரையாதல் தெளிக.

608 புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கன் தாளே புந்திவைத்திட்
டிகழ்மின் எல்லா அல்லலையும்
இனியோ ரிடையூ றடையாமே
திகழுஞ் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்றாள் வணங்கிநாம்
நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே. 6

இ - ள்: புயங்கப்பெருமானுடைய திருவடியை மனத்துள் வைத்துத் தியானித்துப் புகழுங்கள்; வணங்குங்கள்; மலர்களைச் சாத்துங்கள்; இனி, ஒரு துன்பமும் உங்களைச் சாராதவண்ணம் எல்லாத் துன்பங்களையும் இகழ்ந்து, ஒதுக்குங்கோள்; நாம், விளங்குகின்ற சிறப்புப்பொருந்திய சிவபுரத்துச்சென்று சிவபெருமான் திருவடிகளை வணங்கி, அங்கு இருக்கின்ற அடியார்களின்முன்பு சென்று மனம் கசிந்துருகி நிற்போம் என்றவாறு.

உண்மையடியார்களே! இறைவனைப் புகழ்ந்து போற்றி அருச்சியுங்கள்; இனித் துன்பமுண்டாகாவண்ணம் துன்பங்களனைத்தையும் ஒதுக்குங்கள்; நாம் சிவபெருமானை வணங்கி அடியார்முன்பு மனமுருகி நிற்போம் என்கின்றார்.

அறிவுருவாகிய திருவடியைச் சிந்தித்துப்புகழ்தலும் தொழுதலும் அருச்சித்தலுஞ்செய்க; இவை வெறுஞ்செயல்மட்டுமாயிற் பயனில்லை; தியானத்துடன் கூடியதாயிற் பெரும்பயன் தரும் என்பதை வலியுறுத்தியவாறும்.

இனி ஓரிடையூறு அடையாமே என்றது, ஆகாமிய சஞ்சித வினைகள் பிராரத்தமாகப் பரிணமித்துவாராத வண்ணம் இறைவன் திருவடியைத் தியானித்து இப்பிறவிக்கண் வந்த எல்லா அல்லல்களையும் பெரிதென்று எண்ணாது இகழ்ந்து ஒதுக்குங்கள் என்றவாறு.

'இனி ஓர் இடையூறு அடையாமே' என்றவர்கள் 'எல்லா அல்லலையும் இகழ்மின்' என்றது பிராரத்தமாக இப்பிறவிக்கு வரையறுக்கப்பெற்ற அல்லல்களை நுகர்ந்தே கழிக்கவேண்டு தலின், அவை நுகர்ச்சிக்கு வருங்கால் அவற்றைப் பெரிதாக மதித்து மனமுடையாமல் 'இடுக்கண்வருங்கால் நகுக' என்ற விதிப்படி இகழ்ந்து நகையாடுங்கள் என்றார்.

இடையூறு அடையாமே திகழும் சிவபுரத்துச் சிவன்தாள் வணங்கி எனக்கூட்டிப் பொருள் காண்பாரும் உளர்.

இத்திருப்பாடல் இனி இடையூறு அடையாமல் அருச்சித்து வணங்கச் சொல்லுதல்வாயிலாக அநுபவாதீதம் உணர்த்திச் சிவபுர யாத்திரையைத் தெரிவித்தல் காண்க.

609 நிற்பார் நிற்கநில் லாவுலகில்
நில்லோம் இனிநாம் செல்வோமே
பொற்பால் ஒப்பாந் திருமேனிப்
புயங்க னாள்வான் பொன்னடிக்கே
நிற்பீர் எல்லாந் தாழாதே
நிற்கும் பரிசே யொருப்படுமின்
பிற்பால் நின்று பேழ்கணித்தால்
பெறுதற் கரியன் பெருமானே. 7

இ - ள்: நிலைபேறில்லாத இவ்வுலகில் நிற்பவர்கள் நிற்க; நாம் இனி நில்லோம்; அழகால் தனக்குத் தானே ஒப்பாகிய திருமேனியையுடைய புயங்கனும் எம்மை ஆள்பவனுமாகிய பெருமானுடைய பொன்போன்ற திருவடிக்கண் செல்வோம்; எம்முடன் நிற்கும் அடியார்களாகிய நீவிரனைவீரும் என்றும் நிலைபெற்று நிற்குந்தன்மையில் காலம் தாழ்த்தாது ஒன்று படுங்கோள்; வீணாக நின்று காலந்தாழ்த்துவீர்களாயின் பின் எங்கள்பெருமான் பெறுதற்கரியனாவான் என்றவாறு.

இருக்கிறவர்கள் இருக்கட்டும்; நிலையற்ற உலகிலே நாம் நில்லோம்; திருவடிக்கண் சென்றடையப் போகின்றோம்; எம்முடன் வரநிற்கின்ற நீங்கள் அனைவீரும் காலந்தாழ்த்தாமல் உடன்வர ஒருப்படுங்கள்; தாமதித்தால் பின்னர் பெருமான் அடைதற்கரியன் ஆவன் என்பது கருத்து.

முன்னுள்ள திருப்பாடல்களில், தம்முடன் வாழும் அடியார்களை விரைவுபடுத்தியும் அவர்கள் பரபரந்து வாராமைகண்டு, அவர்களை விரைந்தழைக்கவேண்டி, நிற்பவர்கள் நில்லுங்கள்; யாம் நில்லோம் என்கின்றார்.

இறைவன் திருவடி பொன்போன்ற நிறமும், போற்றத்தக்க பெருமையும் உடையதாதலின் பொன்னடிக்கே என்றார். பொன்னடிக்கே செல்வோம் எனக் கூட்டுக.

பொற்பால் ஒப்பாம் திருமேனி - அழகால் தனக்குத்தானே ஒப்பான திருமேனி என்க. தன்னையொப்பாரில்லாத தலைவனாதலின் அவன் திருமேனியும் தனக்கு ஒப்பொன்றும் இல்லையாயிற்று. பொற்பு - நற்குணம் என்பாரும் உளர்.

நிற்பீர் எல்லாம் - நிற்பீர் எல்லீரும். எல்லாம் என்ல் பொதுவாதலின் முன்னிலையோடு இணைந்து வந்தது.

நிற்கும் பரிசே - திருவடியில் சார்ந்துநிற்கும் தன்மையில். தாழாதே ஒருப்படுமின் என்க. அன்றித் தாமதியாமல் இப்போது நிற்குநிலையிலேயே உடன்வரச் சம்மதியுங்கள் எனலுமாம். யாத்திரைக்கு அழைத்தால், வீட்டிற்குப்போய்த் திரும்பும் வரையுள்ள செய்திகளை உறவாளரிடம் உரைத்து, வழித்துணைப் பொருள்களைத் தூக்கிவருவேன் என்னாது நின்றநிலையிலேயே புறப்படுங்கள்' என்றுராகக்கொள்க. யாத்திரைக்கு வேண்டுவன சேகரிக்கச் செல்லின் சித்தம் மாறும், வாராமையுங்கூடும் என்று விரைவும் கருணையும் தோன்ற இங்ஙனம் கூறினார் என்க.

பேழ்கணித்தல் - தாழ்த்தல். தன்னை மிக மதித்தல் என்பது பழையவுரை. விழித்தால் என்பாரும் உளர்.

தாம் இறைவனைச் சார்ந்து அனுபவித்த அதீதத்தன்மையால் அடியார்களை விரையவூக்குதலின் இத்திருப்பாடல் அனுபவாதீதமுரைக்கும் யாத்திரையை வற்புறுத்துவதாயிற்று.

610 பெருமான் பேரானந்தத்துப்
பிரியா திருக்கப் பெற்றீர்காள்
அருமா லுற்றுப் பின்னை நீர்
அம்மா அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவம்
திறந்த போதே சிவபுரத்துத்
திருமா லறியாத் திருப்புயங்கன்
திருத்தாள் சென்று சேர்வோமே. 8

இ - ள் : பெருமான் அருளுகின்ற பெரிய சிவானந்தத்துள் பிரியாது என்றுமிருக்கும் பேறுபெற்ற அடியார்களே! பின்பு நீங்கள் நீக்குதற்கரிதாகிய மயக்கத்தைப் பொருந்தி, அம்மா! வருந்திப் புலம்பாமல், சிவபுரத்து, அழகிய பெரிய

மணிகள் கட்டப்பெற்றுள்ள திருக்கதவங்கள் திறந்திருக்கின்றபோதே, திருமாலுமறியாத அழகிய புயங்கப்பெருமானுடைய திருவடிகளைப் போயடைவோம் என்றவாறு.

மெய்யன்பர்களே! பின்னர் வருந்தாதீர்கள்; சிவபுரத்துக் கதவு திறந்திருக்கின்றபோதே சிவபெருமான் திருவடியைச் சென்றடைவோம் என்கின்றார்.

பிரியாதிருக்கப்பெறுவீர்காள் என்று கூறவேண்டியவர் பெற்றீர்காள் என்று இறந்தகாலத்தால் கூறியது விரைவுபற்றி யென்க. இதனை, "இறந்தகாலத்துக் குறிப்பொடு கிளத்தல் விரைந்த பொருள் என்மனார் புலவர்" என்பதனால் உணர்க. சிவபுரத்துச்சென்று திருவடியைச் சார்ந்த பின்பே பெருமான் அருளிய பேரானந்தத்துப் பிரியாதிருக்கப்பெறுதல் நிகழ்வது ஆதலால் என்க.

திருவடிச் சார்பாகிய அருமருந்தைப் பெற்றாலன்றி, வேறு எவ்வித உபாயத்தானும் நீங்காதது ஆதலின் அறியாமையை 'அருமால்' என்றார்.

அம்மா என்பது இரக்கக்குறிப்பின்கண் வந்தது.

திறந்தபோதே - திறந்துள்ளபோதே. பெருமான், கருணையால் எம்மை ஏற்றருள் அடையா நெடுங்கதவை உடையவராக இருக்கின்றார்; இப்போதே விரைந்து சேர்வோம் என்றதாம்.

பேரானந்தத்துப் பிரியாதிருக்கப்பெற்றீர்காள்! திருத்தாள் சேர்வோம் என அநுபவாதீதமும் யாத்திரையும் உணர்த்தியவாறு காண்க.

611 சேரக் கருதிச் சிந்தனையைத்
திருந்த வைத்துச் சிந்திமின்
போரிற் பொலியும் வேற்கண்ணாள்
பங்கன் புயங்கன் அருளமுதம்
ஆரப் பருகி ஆராத
ஆர்வங் கூர அழுந்துவீர்
போரப் புரிமின் சிவன்கழற்கே
பொய்யிற் கிடந்து புரளாதே. 9

இ - ள்: போரில் பொலிவுபெற்று விளங்கும் வேலையொத்த கண்களையுடைய உமாதேவியாரை ஒருபாகத்துடையவனாகிய புயங்கப்பெருமான் அருளுகின்ற திருவருளாகிற அமுதத்தை நிரம்பக்குடித்து, போதும் என்றமையாத ஆசை

மிக அவ்வாசைக்கடலுள் அழுந்தும் அடியார்களே! பொய்யான இம்மண்ணுலக வாழ்விற்கிடந்து புரளாமல், சிவபெருமான் திருவடியைச்சேர எண்ணிச் சிந்தையைத் திருத்தம் செய்து அதில் இறைவனை எழுந்தருளப்பண்ணித் தியானியுங்கள் என்றவாறு.

சிவபெருமான் தந்த அருளமுதத்தையுண்டும் அமையாது மேன்மேலும் உண்ண விரும்பி ஆசைக்கடலில் அழுந்துகின்ற அடியார்களே! இவ்வுலகவாழ்விற்சிக்கி உழலாது சிந்தையைத் திருத்தித் திருவடியைச்சேரச் சிந்தியுங்கள் என்கின்றார்.

இதனால், நீங்கள் எய்தவேண்டுவது உலகவின்பமன்று; திருவடியின்பமே என்று அடியார்கட்கு உணர்த்தியவாறும்.

சேரக்கருதி என்பதற்கியையத் திருவடியை எனச் செயப்படுபொருள் வருவித்துரைக்க. சிந்தனை - மனம்; மனம் காமம் முதலான காடடர்ந்தது ஆதலின் அதனைத் திருந்தவைத்துச் சிந்தியுமின் என்றார். "மனம் எனும் பாழறையைப் பள்ளியறையாக்கி" எனப்பிறரும் கூறியது காண்க. சிந்தியுமின் என்பது சிந்திமின் என விகாரப்பட்டது.

மிகக்கூரிய வேல்போலும் கண்ணாள் என்பார் 'போரிற் பொலியும் வேல் (போலும்) கண்ணாள்' என்றார்.

அமுதத்தை வயிறார உண்டும் மனம் ஆராமையால் ஆர்வம் பெருக, அதனால் அழுந்துவீர் என விளித்தார். அழுந்துவீர் என்ற வினையின் குறிப்பால் ஆர்வத்தைக் கடலாகக் கொள்க. போர - போக. புரிமின் - விரும்புங்கள். பொய்யான அதாவது நிலையற்றவாழ்வைப் பொய் என்றார் பண்பாகுபெயரான்.

'அருளமுதம் ஆரப்பருகி ஆராத ஆர்வங்கூர' என்றதால் அநுபவங்கடந்த நிலையும், 'போரப்புரிமின்' என்றதால் யாத்திரையும் விளங்குதல் காண்க.

612 புரள்வார் தொழுவார் புகழ்வாராய்
இன்றே வந்தா ளாகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார்
மதியுட் கலங்கி மயங்குவீர்
தெருள்வீ ராகில் இதுசெய்ம்மின்
சிவலோ கக்கோன் திருப்புயங்கன்
அருளார் பெறுவார் அகலிடத்தே
அந்தோ அந்தோ அந்தோவே. 10

திருச்சிற்றம்பலம்

இ-ள் : பரவசப்பட்டுக் கீழே விழுந்து புரளுவாரும் வணங்குவாரும் புகழ்வாரும் ஆகி இன்றைக்கே வந்து இறைவனுக்கு ஆட்படாதவர்களே! மயங்குகின்றவர்களே! பின்பு உங்களை மதிப்பவர்கள் யார்? மனத்தில் அறிவுக்கலங்கி மயங்குகின்றவர்களே! நீங்கள் தெளிவீர்களாயின் திருவடி சேர்தலாகிய இதனைச் செய்யுங்கள்; சிவலோகத்திற்கு அரசனாகிய திருப்புயங்கப் பெருமானுடைய திருவருளை, இந்த அகன்ற பூமியில் பெறுதற்கு உரியார் வேறு யார்? அந்தோ அந்தோ அந்தோ என்றவாறு.

இறைவன் திருவடிக்கு ஆளானவர், அபிமானம் அழிந்து அன்புமேலீட்டால் அடியற்ற மரம்போல் கீழேவிழுந்து புரள்வர்; இடைவிடாது தொழுவர்; இறைவன் புகழை வாயோவாது புகழ்வர்; அங்ஙனம் நீவிரும் செய்துகொண்டு இன்றே இக்கணமே ஆளாகவேண்டிய நீங்கள் அங்ஙனம் ஆகாதிருக்கின்றீர்கள்; அம்மட்டோ மயங்குகின்றீர்கள் என்பார் 'ஆளாகாதீர் மருள்வீர்' என்றார். இரண்டையும் கூட்டி ஆளாகாதவர்களாய் மயங்குகின்றீர்கள் எனலுமாம்.

"மக்களே போல்வர் கயவர்" என்றாற்போல, நீவிர் மதியுடையீர் போலக் காணப்பெறினும் புத்தியினுள் கலங்கப்பெற்றீர் என்றார். வெளியில் தெளிந்தவர்கள்போலக் காணப் பெறுதலின்.

யாம் இவ்யாக்கையைப் பெற்றதன்பயன் சிவபெருமானை வணங்கியும் வாழ்த்தியும் புரண்டும் தெருளுதலே என்பதை உணர்வீராயின் என்பார் 'தெருள்வீராகில்' என்றார்.

இது செய்ம்மின் என்று சுட்டாற் குறிப்பித்தனரே அன்றிச் செய்யத் தகுவனவற்றை விளக்கிற்றிலர்; ஆயினும் முன்னர், இறைவற்கு ஆளானவர் இயல்புகளாகப் புரளுதல் முதலியன உணர்த்தப்பெற்றமையின் அவற்றுள் ஒன்றையேனும் செய்து ஆளாகுங்கள் எனக் குறிப்பித்ததாகக் கொள்க.

யாம் தெளிவித்தும் நீவிர் அது செய்யீராயின், சிவனருளைப் பெறுவார் இவ்வுலகில் யார்? ஒருவருமிலர் என்றதாம். அந்தோ: இரக்கக் குறிப்பிடைச்சொல்.

காந்தம் கவர்தலும் இரும்பு நகர்தலும் ஒருங்கு நிகழ்தல் போல, நீங்கள் ஆளாவீர் ஆயின் உடனே அவனும் அருள் வழங்குவன்; அது செய்யீராயின் அவனருள்பெறுவார் யார்? என்றார் என்க.

காவிரிநீர் பாய்ச்சிப் பயன்பெறுவாரின்மையின் கடலொடு கலந்து பயன்படாமைபோலத் திருவருளும் பெறுவாரின்மை யின் வீணுயிற்றே என்று இரங்கி 'அந்தோ அந்தோ அந்தோ' என் மும்முறை அடுக்கிக் கூறினர்.

இத்திருப்பாடல் மெய்யடியார்களை விரைந்து அருள்பெற அழைத்தலின் யாத்திரைப்பத்தினது ஆதலும், 'புரள்வார் தொழுவார் புகழ்வாராய்' என்றமையால் அநுபவாதீதம் உரைப்பதாதலும் காண்க.

'இந்த யாத்திரைப்பத்தால், சிவாநுபவத்துள் தோய்ந்து அதீதநிலையை அண்மிய வாதவூரடிகள் அன்பாய் ஆட்பட் டீர்! அடியாரானீர்! பேரானந்தத்துப் பிரியாதிருக்கப் பெற்றீர் காள்! காலம் வந்தது; வந்தொருப்படுமின்! கழல்கள் நினை மின்; குறிப்பே குறிக்கொண்டு போமாறமைமின்; சாத்தோடு போதற்கே ஒருப்படுமின்; புகழ்மின்; தொழுமின்; பூப்புனைமின்; சிவன்கழற்கே போரப்புரிமின்; தெருள்வீராகில் இது செய்ம்மின் என அடியார்களை ஊக்கப்படுத்தி உண்மையுணர்த்தி, இறை வன்தாளைச் சார்ந்தவர்கள் என்றும் தளரார்; அவனே சுற்ற மும் மற்றும் பற்றுமாவான்; சிவலோகத்து நம்மை வைப்பான்; சிவபுரத்தில் கதவு அடைப்பதற்குமுன்னரே செல்வோம்; பக்கம் நின்று போற்றுவோம்; அடியார்முன் சென்று நெஞ்சம் உருகி நிற்போம்; யாம் பெறுவிட்டால் அவனருளைப் பெறுவார் வேறு யார்? என்று பயணப்படுத்துவதைக் காண்க.

# 46. திருப்படையெழுச்சி

*[பிரபஞ்சப்போர்]*

மணிவாசகப்பெருந்தகை தில்லையிலே எழுந்தருளியிருக்குங்காலத்து, சாதகர்களாகிய அடியார்களும், ஏனைய மக்களும் பாசபந்தத்தால் மாயையில் சிக்குண்டு அல்லற்படுவதைக்கண்டு மனமிரங்கி, மக்களே! நம்மைத் துன்பப்புடை வந்து தாக்க இருக்கிறது; மாயப்படை வந்து சூழ இருக்கிறது; படையெடுத்துப் புறப்படுங்கள்; நாம் வானநாடு ஆள்வோம் என ஞான வீரத்தை எழுப்ப இதனை அருளிச்செய்தார்கள்.

படையெழுச்சி - படையெழுதல். நல்லநாள் பார்த்து, குடையும் வாளும் முரசும் நாட்கொண்டு, பறைசாற்றி வீரர்களை ஒருங்கு திரட்டிக்கொண்டு, காலமும் இடமும் செவ்விதினோக்கிப் பகைவர் மேல் படை கிளம்புதலே படையெழுச்சியாகும். இது மாயப்படையின்மேல் ஞானியர்படையெழுதலை உணர்த்துதலின் திருப்படையெழுச்சி எனப்பட்டது.

யாத்திரைப்பத்தால், சிவபுர யாத்திரை செய்யவேண்டியதன் இன்றியமையாமையையும், இன்றே செய்யவேண்டியது என்பதையும்,பயனையும் உணர்த்திய ஆசிரியர், யாம் பயணம்போகிறபோது இடைநடுவே மாயப்படை அல்லல் வடிவில்வந்து நம்மைத்தாக்கும்; நம் பயணம் வெறுவிதான ஊர்ப்பயணமாதல் கூடாது; படையெழுச்சியாக விளங்கட்டும் என்று கிளர்ச்சியூட்டுகின்றார்கள்.

இதில் ஞானமே வாளாகவும், நாதமே பறையாகவும், தியானமே வெண்கொற்றக் குடையாகவும், திருநீறே கவசமாகவும், தொண்டர்கள் படைவீரராகவும்,இறைவனே போர்த்தலைவனாகவும், சிவலோக ஆட்சியே படையெழுச்சியின் பயனாகவும் உணர்த்தப் பெறுகின்றன.

"திருப்படையெழுச்சி, பின்னமதான பிரபஞ்சப் போர்" என்பது அகத்தியச்சூத்திரம். முற்பதிகத்து, தாம் பெற்ற அநுபவாதீதத்தால் பரிபாகம்பெற்ற அடியார்களையும் சிவபுரயாத்திரைக்கு ஊக்கமுறுத்தி, இடையில் வரும் தடையை நீக்கப் படையெழுங்கள் என்பதை இயம்புகிறது என்பது பழையவுரைக் கருத்து.

பழைய குறிப்பு 'பிரபஞ்சப்போர்; அதாவது மலவிளைவு அற்றது' என்பது. "அல்லாத துர்க்குண மாயப்படைகள் விளையாமல் அருள்வாள் ஏந்தி நல்லோர்கள் யாரும் எம்மோடு எய்துமெனப் படையெழுச்சி நவிறலாகும்" என்பது பழையபுராணம். பிரபஞ்சமாகிய மாயப்படை ஆன்மாவைத் தாக்கி வானநாடாளாது தடை செய்யாதவண்ணம் படையெழுக என அடியார்களுக்கு அறிவிப்பதே இப்பதிகத்தின் கருத்தாதல் காண்க. இங்ஙனம் படையெழுதலால் உள்ளமலந்தேய்ந்து மேல்வினையின் விளைவற்று, நுகர்வினை வலிகுன்றிப்போம் என்பதாம்.

ஆன்மாக்களின் பழைய பகை, ஆணவம் கன்மம் மாயை என்றமூன்றுமாம். அவைகளைவெல்லப் போதிய ஆற்றல் ஆன்மாக்களுக்கு இயற்கையாக இல்லை. இறைவன் உயிர்களுக்கு அந்த ஆற்றலையுதவவும், பழகித்தேறவும் படைப்புட்படுத்துகிருன். உயிர்கள் அவனுதவியைக்கொண்டு மாயையின்மயக்க ஆற்றலை உணர்ந்து அதனை அழிக்கின்றன. அடுத்து இறைவன், இருவினை ஒப்பான உள்ளத்தை உதவுகிருன்; உயிர்கள் கன்மமல்ச்சேனையை வெல்லுகின்றன. பின்பு சிவஞானத்தை உதவுகிருன்; உயிர்கள் ஆணவ வலி குன்றி ஞானவடிவு எய்துகின்றன. இதனுல் ஆணவமலச் சேனை அழிகிறது. இங்ஙனம் சுத்த சத்துவ குணத்தைத் தாங்கித் திருவெண்ணீறு அணிந்து, சிவனடியார்களோடு மருவி வாழ்தலே முத்தியுலகு ஆளுதற்குரிய உபாயம் என்பதே படையெழுச்சியாதல் தெளிக.

## கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

613 ஞானவாள் ஏந்துமையர் நாதப் பறையறைமின்
மானமா ஏறுமையர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவசம் அடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம்நாம் மாயப்படை வாராமே. 1

இ - ள் : ஞானமாகிற வாட்படையை ஏந்துகின்ற சிவ பெருமானுடைய பரநாதமாகிய பறையைக் கொட்டுங்கள்; பெருமைபொருந்திய இடபத்தை ஊர்தியாகக்கொண்டு ஏறுகின்ற இறைவன் சூடியுள்ள மதியாகிற வெண்குடையைப் பிடியுங்கள்; பசுவினிடமிருந்து பெறுவதான திருநீற்றுக் கவசம் மெய்முழுதும் அடைய அதனுட்புகுந்துகொள்ளுங்கள்; மாயப்படையாகிய பிரபஞ்சவாதனை தாக்காமல் நாம் சிவபுரத்தைச்சென்று பிடிப்போம் என்றவாறு.

பறை கொட்டுங்கள்; குடை பிடியுங்கள்; கவசம் பூணுங் கள்; மாயப்படை தாக்காமல் வானநாடாள்வோம் வாருங்கள் என்பது கருத்து.

இத்திருப்பாட்டிற்கு, அநாதியாயுள்ள ஆணவமல மாயா மல கன்மமலங்களாகிற பகைப் படைக்கூட்டம் புரியும் இடர் நம்மை அடராவண்ணம், சுத்த சைதன்யமாகி, படைக்கலமாகத் திருவைந்தெழுத்தை நாவில் பதியுங்கள்; சுவாமியினுடைய சத்தியினிடமாகத் தோன்றிய நாதப்பறையை முழக்குங்கள்; சிவபுண்ணியமாகிற விடையைப் போதப்பரியாக்க் கொண்டு ஏறுங்கள்; ஞானசந்திரக்கலையைக் குடையாக வியாபியுங்கள்; தூலதேகம், சூட்சுமதேகம், மந்திரதேகம் இம்மூன்றும் அற ஞானமே பரைநீருக முழுதும் கவசமாய் அணியுங்கள்; குஞ்சித பாதமே அடைக்கலமாகச் சென்று அத்துவிதமாக இன்புற்று இருப்போம் என்று பழையவுரை மரபான விளக்கம் தருகிறது.

சிலர், ஐயராகிய ஞானசாரியன் தந்த ஞானவாளை ஏந்துங் கள்; நாதப்பறை அறையுங்கள்; ஆன்மாக்களாகிய நாம் என்றும் ஐயராகிய இறைவனுடைய மீளா அடிமைகள் என்ற கௌரவமாகிய குதிரையை ஏறுங்கள்; நூல் அறிவாகிய குடையைப் பிடித்துக்கொள்ளுங்கள்; திருநீற்றுக் கவசம் பூணுங்கள்; மாயப்படை வாராமே வான்ஊர் கொள்வோம் எனப் பொருள் கூறுவர்.

யோகநூன்மரபுபற்றி உரைகூறுவார், ஞானவாளை ஏந்தி, பிரணவநாதமான ஓம் என்னும் பறை முழங்கச்செய்து, மதி மண்டலமாகிய சகஸ்திராரத்து ஏறி, மதிமண்டலக் குடையைத் தாங்கி, மெய்முழுதும் திருநீறணிந்தால் மாயப்படைதாக்காது; வானவூரிலே அமுததாரை பொழிய ஆனந்தமாய் இருப்போம் என்பர். நிற்குமுறைபற்றி நேர்வன கொள்க.

ஞானம் - சிவனது மேனியாய், அவருக்கே உரியதாய், அருள் கனிந்தகாலத்து அவரால் ஆன்மாக்களிடம் பூவினில் கந்தம் பொருந்தியவாறுபோலச் சென்று பரவச் செய்வதாய் அமைவது ஆதலின் ஞானவாளை ஏந்தும் ஐயர் எனக் கிழமை பற்றி உடம்பொடு புணர்த்துக் கூறினர். நாதப்பறை கொட்டு தல், திருநீற்றுக்கவசம் புனைதல் முதலிய சாதனைகளாலேயே ஆன்மாக்கள் மாயப்படையை வெருட்டி வாழலாம். முடியாத போது இறைவனே ஞானவாளை ஏந்தி, உள்ளத்துள் நின்று ஊக்கி ஓட்டுவார் என்று உணர்க.

நாதப்பறை அறைதலாவது சூக்கும ஐந்தெழுத்தை உயிர்ப் பாய்ப் புறம்போந்து உட்புகுந்து நிலவச் செய்தல். பிரணவ பஞ்சாக்கரத்தோடுகூடிய சூக்கும பஞ்சாக்கரத்தை ஒலியாமல் ஒலித்தலே பறையறைதலாம் என்க. முன்னரும் ‘பிறவிப்பகை கலங்கப் பேரின்பத்தோங்கும் பருமிக்க நாதப்பறை’ என்றது காண்க.

மான மா - மானத்தோடுகூடிய மாவாகிய இடபம். இது படையெழுச்சி ஆதலின், மானத்தையுடைய மா என்றார். மா - விலங்கு, குதிரை இரண்டுமாம். ஈண்டு இறைவன் ஏறும் ஊர்தி இடபமாதலின் அது கொள்ளப்பட்டது. எத்தகைய இடையூறு நேரினும் பின்வாங்காமையும், எதிர்சென்று தாக்குதலும் மானம் ; அவற்றையுடைய மா என்றார்.

மதி வெண்குடை - மதிமண்டலமாகிய வெண்குடை. மதி மண்டலம் பிரமரந்திரத்தைச் சூழ ஆயிர இதழ்த்தாமரை வடிவினதாய், இறைவன் ஒளிவடிவாகத்திகழும் இடமாய் விளங்குவது. அதனைக் குடையாக உருவகித்தார். அதனைத் தியானத்தால் காணவேண்டலின் தியானமேகுடையாய் என்பாருமுளர்.

ஆனநீறு - பசுவின் சாணத்தினின்றாகிய திருநீறு. ஆன் - பசு. அ : ஆறும்வேற்றுமைப்பன்மை உருபு. “ஆன நெய் தெளித்து நானம் நீவி” என்பதுபோலக் கொள்க. பழைய வுரை ஞானநீறு எனப் பாடங்கொண்டு ஞானமே பரைநீறாகக் கொண்டு என்று உரைவகுக்கும்.

பகைவர் விடும் பாணங்கள்போலாது, மாயப்படை கவசமில்லாத உறுப்பு ஒருபக்கத்திலிருப்பினும் சென்று தைத்து, உடல் முழுதும் பரவி, உயிரையும்பற்றி மயக்கம்செய்யும் என அதன் கொடுமை தோன்றக் கவசம் மெய் முழுதும் சிறிதும் எஞ்சாமல் பூணுங்கள் என்பார் அடையப் புகுமின்கள் என்றார். வான ஊர் கொள்வோம் - ஞானவானின்கண்ணதாகிய சிவபுரத்தைப் பிடிப்போம். சிலர் சுவர்க்கம்கொள்வேம் எனவும், சுவர்க்கம்கொள்ள நாதப்பறை கொட்டிச் செல்லவேண்டியது இன்மையான், உலக இன்பத்தை ஆரத்துய்த்துக்கொண்டே பசு கன்மமாகிய யாகாதிகளைச் செய்தலே அமையுமாதலின், அதன்பொருந்தாமையை எண்ணி, மாயப்படை சுவர்க்க போகமாக வந்தடையும் அதனையும் வெல்லப் பறையறைமின் கவசம் பூணுமின் என்றதாக அமைதிதேடி அலைவர். எந்நூற்கு உரை வகுப்பினும் அந்நூன்மரபினின்று உரை கூறின் எவ்விடரும் வாராதென்க. ஞானநூற்குக் கன்மநூலறிவு பயன்படாமை காண்க.

மாயப்படை அழிய என்றது வாராமே என்றது. யாம் போருக்கு ஆயத்தமானுற்போதும்; மாயப்படை தாமே வலசு வாங்கி ஓடிவிடும்; அழித்தலாகிய கருணையற்ற செயலைச் சைவ சீலர்களாகிய நாம் செய்யவேண்டாம் என்பது குறிப்பு.

இங்ஙனம் படையெழுச்சியின்வாயிலாகப் பிரபஞ்சப்போர் உணர்த்தப்பெறுதல் காண்க.

614 தொண்டர்காள் தூசிசெல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்
ஒண்டிறல் யோகிகளே பேரணி யுந்தீர்கள்
திண்டிறற் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்
அண்டர்நா டாள்வோம்நாம் அல்லற்படை வாராமே. 2

திருச்சிற்றம்பலம்

இ-ள்: நாம், துன்பமாகிற படைகள் நம்மீது கிளர்ந்து வாராதவண்ணம், தேவர்களும் தொழுகின்ற நாட்டை ஆள்வோம்; அதற்காகத் தொண்டர்களே! முன்படையாகச் செல்லுங்கள்; அன்பர்களே! இருபக்கமும் சூழப்போங்கள்; ஒளி ஆற்றல்பெற்ற யோகியர்களே! பெரிய அணிவகுப்பை நடாத்துங்கள்; மிக்க வலிபடைத்த சித்தர்களே! பின்படையாகச் செல்லுங்கள் என்றவாறு.

இங்ஙனம் படையங்கமாக அவரவர் தகுதிக்கேற்ப அணி வகுத்துச் செல்லுங்கள் என்று பணித்தவாறும்.

தொண்டர்கள் - எம்பெருமான்றன் கோயில்புக்கு, புலர்வதன்முன் அலகிட்டு, மெழுக்கும் இட்டுப் பூமாலைபுனைந்தேத்திப் புகழும் சரியை நெறியால் சாலோகம்பெறும் தகுதியுடையார். இவர்கட்குப் பத்தரும், யோகியரும், சித்தரும்போல உறைத்த உள்ளம் இன்மையானும் சிவநெறியில் பழகுகின்றவர்களாதலானும் முன்படையில் அமைக்கின்றார். இவர்கள் தாசமார்க்கத்தார். அடிமைகள் சிறிது மனம் வேறுபடினும் வேறுந்தன்மையர். அவர்களை மிகப்பொறுப்பான நிலையில் அமர்த்தலாகாது ஆதலால் முன்படையில் ஏவினர் எனலுமாம்.

பத்தர்கள் - அன்பர்கள். தைலதாரைபோல இடைவிடாது எண்ணி உள்ளமுருகும் தலையன்பர்களும், அற்றற்றொழுகும் நீரொழுக்குப்போல மறந்து நினைக்கும் இடையன்புடையவர்களும், தீயைச்சார்ந்தவிடத்து உருக்கும் வெண்ணெய்போலத் திருக்கோயிலையும், சிவனடியாரையும், திருவுருவையும் கண்டபோது மட்டும் கசியும் கடையன்புடையாரும் என மூவகைப் படுவார்கள். அவர்கள் அன்பு செய்யப்பட்டபொருளைப் பிற

கவராதபடிக் காப்பதில் கண்ணுங்கருத்துமாக இருப்பர் ஆத லின் அவர்களைப் பக்கக்காவலில் அமைத்தார். சூழ - இருமருங் கும் முன்னும் பின்னும் ஆகிய நாற்புறமும் சூழ. இவர்கள் சற் புத்திரமார்க்கத்தார் ; சாமீபத்திற்பழகுபவர்கள்.

யோகிகள் - தேகத்தில் சிவலோகம் காண்பவர்கள். மூலா தாரமுதலான ஆறு ஆதாரங்களிலும் பரம்பொருளை ஒளியாக நிறுத்தி, நினைந்து நினைந்து துவாதசாந்தம்வரை உந்தி உலா வும் பயிற்சியாளர்கள். இவர்கள் இறைவனோடு இடைவிடாது பழகும் சகமார்க்கத்தார். சாரூபம்பெறத் தகுதியுடையவர்கள். இவர்களே தம் உயிரை ஆருதார நிலைகளில் உந்திச் செலுத்து வதுபோலப் படைகளை உந்திச் செலுத்தும் ஆற்றலுடையவர்க ளாதலின் அவர்களை அணிவகுப்பை நடத்தும் படைத்தலைவர் களாக நியமிக்கின்றார்.

சித்தர் - யோகநெறியிற்பழகிச் சித்திபெற்ற சிவஞானியர். இவர்களே உட்பகையையும் தம்பால் மேவவிடாது தம் தேசால் தடுக்கும் ஞான ஆற்றல் வாய்ந்த சன்மார்க்கர்கள். அபேத அத்துவிதமாய், சாயுச்சியம்பெறத் தகுதியுடையவர்கள். இவர் களே மூலப்படையாய் என்ஞான்றும் உறுதியுடன் பாதுகாக்கும் பண்பினர் ஆதலின், கூழைப்படையாக நியமிக்கின்றார். இவ் வாறு அணிவகுப்புடன் படையெழுச்சி அறிவிக்கப்பெறுகிறது.

# 47. திருவெண்பா

[ அணைந்தோர்தன்மை ]

அடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளி ஆனந்த மயக்கறுத்த அத்தனுடையபிரிவால் அத்தன் தமக்காற்றிய அருளிப்பாடுகள் அனைத்தும் அநுபவநிலையைப் பெருக்க, திருவெண்பாவாகிய இதனை அருளிச்செய்கின்றார்கள்.

இப்பதிகம் வெண்பாயாப்பான் அமைந்திருத்தலின் இப்பெயர் பெற்றது எனலாம். ஆயினும் முன்னர்த் திருத்தசாங்கமும், பின்னர்ப் பண்டாய நான்மறையும் வெண்பாயாப்பினவாகவும் இதற்கு மட்டும் இப்பெயரமைய ஏது என்னை எனின், தசாங்கம் தலைவனைத் தன்னின்வேறாகவைத்து அவன் ஊரும் பேரும் கிளியைக்கேட்டின்புறும் கருத்தினதாக அமைந்தது. பண்டாயநான்மறை அநுபவ முதிர்ச்சியை அறிவித்து, தாம் கைமாறு செய்யமாட்டாமை அறிந்து செயலற்றதன்மையை அறிவிப்பது. இது திருவருள்பெற்ற சீவன் முத்தர் செய்தியை உணர்த்தும் பொருட்சிறப்பால் யாப்பானே பெயர்பெற்றது என்க. திரு - ஞானம். திருவெண்பா - சிவஞானியர் நிலையாகிய சிவஞானத்தைத் தெரிவிக்கும் வெண்பா என்க.

"இணையிலாத இன்பத் திருவெண்பாத் தணவாச் சிவத்தணைந்தோரருட் டன்மை" என்பது அகத்தியச்சூத்திரம். முற்பதிகத்து, சிவத்தோடு பொருந்தியும் சேர்தற்குரிய இடம் வேறுண்டோ? என்று ஆராய்ந்து, அதுவே ஆனந்தமாகி அன்பால் இன்புறலை அறிவிப்பது என்பது பழையவுரைதரும் விளக்கம்.

அணைந்தோர்தன்மை அஃதாவது பரிசவேதிபோல என்பது பழைய குறிப்பு.

"தொந்த மலமொறுத்துச் சுகம்பெருக்கிப் பெருந்துறைவாழ் சோதியென்றன், சிந்தனையே ஊராகக் கொண்டிருந்தார் என்று உரைத்தல் திருவெண்பா" என்பது பழைய திருப்பெருந்துறைப் புராணம். இப்பதிகம் தில்லையில் அருளிச்செய்யப்பட்டது என்பது பழைய உரையாசிரியர் கருத்து.

தொட்டதைப் பொன்னாக்கும் பரிசவேதிபோலச் சிந்தையைத் தீண்டிய அளவில் சீவகுணமாகிய அறியாமைக் காரிருளைப்போக்கி ஞானவொளியை நல்கிச் சிவமாக்கிய திருவருளின் தன்மையை விரித்துரைப்பது என்பதாம்.

## நேரிசைவெண்பா

திருச்சிற்றம்பலம்

615 வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகா தென்செய்கேன் – செய்ய
திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ
மருவா திருந்தேன் மனத்து.. 1

இ - ள் : சிவந்த திருமேனியோடு கூடிய திருப்பெருந்துறைப் பெருமானுகிய தேன்போலும் இனிமையைத் தருகின்ற செஞ்சோதியை என் மனத்துள் பொருந்தாமல் இருந்தேன்; அதனுல், கொடிய வினைகளிரண்டும் வெந்தொழிய, அவற்றிற்குக் கொள்கலமாயிருக்கிற இந்தத் தேகமும் உருகிப் பொய்யான வாழ்வும் சாம்பராகாமலிருந்ததே என்செய்வேன் என்றவாறு.

இறைவனுகிய தீயை என்மனத்து மருவ வையாமையால், வினைகள் வெந்தொழிய உடலுருகி, பொய்யும் சாம்பராகவில்லை என் தவறு இது; யான் என்செய்வேன் என்பது கருத்து.

வினை இரண்டு - நல்வினையும் தீவினையும். நல்வினையும் பொன்விலங்குபோலப் பிறவிக்கேதுவாதலின் அதனை வெய்ய வினை என்ருர். 'இருள்சேரிருவினையும் சேரா' என்ற குறளுக்கு 'நல்வினையும் தீவினையும் பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலப் பிறவிக்கு ஏதுவாகலான் இருவினையும் சேரா என்ருர்' என்ற பரிமேலழகருரையும் கண்டுக் காண்க. "தீவினையைச் சுட்டெரித்து" என்பது பண்டாரசாத்திரம்.

மெய் - உடல். சிவத்தீயைச்சார்ந்தவுடன் உடல் தேய்தலின் மெய்யுருகி என்ருர். 'ஊனினையுருக்கி உள்ளொளி பெருக்கி' எனப் பிடித்தபத்துள் பேசப்பட்டமை காண்க.

பொய் - பொய்யான இவ்வுலகவாழ்வு. தீப்பற்றியவுடன் பொருள் சாம்பராதல்போலப் பொய்யான வாழ்வு சாம்பராகாதிருந்ததே என்செய்வேன் என்கின்ருர்.

தேனுந்து செந்தீ - இனிமை தருகின்ற செந்நிறமான தீ. இல்பொருளுவமையடியாகப் பிறந்த உருவகம். பௌதிகத்தீக்கும் சிவத்தீக்கும் உள்ள வேறுபாடு இதுவே என்பது குறிப்பு.

கரும்பைத் தேனைப் பாலைக் கட்டியை அமுதையொத்துக் கலந்திருத்தலே அனைந்தோர் தன்மையாதலால், தேனுந்துதீ எனச் சிவன் தேனுமினித்தலைக் கூறுதல் காண்க.

616 ஆர்க்கோ அரற்றுகோ ஆடுகோ பாடுகோ
பார்க்கோ பரம்பரனே யென்செய்கேன் — தீர்ப்பரிய
ஆனந்த மாலேற்றும் அத்தன் பெருந்துறையான்
தானென்பார் ஆரொருவர் தாழ்ந்து. 2

இ - ள்: வேறு யாவரானும் எவற்றானும் தீர்த்தற்கரிய ஆனந்தக்களிப்பை மிகுவிக்கும் தந்தை திருப்பெருந்துறை யானே என்பார் யாரொருவரோ அவரை வணங்கி ஆரவாரிப் பேனே? அரற்றுவேனே? ஆடுவேனே? பாடுவேனே? பார்ப்பேனே? பரம்பரனே! யான் என்செய்குவேன் என்றவாறு.

பேரானந்தப்பெரும்பேறு அளிக்கும் தந்தை திருப்பெருந் துறையானே என்பவர் யாரோ அவரை வணங்கி எல்லாம் செய்வேன் என்பது கருத்து.

ஆர்க்கோ - ஆரவாரிப்பேனே. ஆரவாரம் - பொருளற்ற பேரொலி. இது பரபரப்பால் விளைவது. ஆனந்தம் அருளிய தந்தை திருப்பெருந்துறையானே என்ற உண்மையைப் பிறர் சொல்லக் கேட்ட ஆனந்தத்தால் 'ஆர்க்கோ' என்கின்றார்.

அரற்றுதல் - புலம்புதல்; எல்லைமீறிய இன்பப்பெருக்கால் வந்த அழுகையால் 'அரற்றுகோ' என்கின்றார்

நாடவர் நந்தம்மை நகைப்பரே என்ற நாணமும் ஆனந்த மேலீட்டால் அகலுதலின் ஆடுவேனே என்றது. அங்ஙனமே பாடுகோ என்பதும்.

பார்க்கோ - கருவி கரணங்கள் செயலோய்ந்து, கண் ஒன்றே காரியப்படப் பார்த்துக்கொண்டேயிருப்பேனே என்பதாம். ஐந்து பேரறிவும் கண்களே கொள்ளப் பார்க்கும் நிலை இது என்க.

பரம்பரனே யான் என்ன செய்வேன்? எனக்கே புலப்படாமையால் உன்னை வினவுகின்றேன் என்பார் 'பரம்பரனே என் செய்கேன்' என்கின்றார்.

சிலர், பிறரால் தீர்ப்பரிய ஆனந்தமால் என்றமையின், அவனே தீர்த்தற்குரியவன் ஆவான் என்பது பெற்றாம் என நயம் உரைப்பர். சிவானந்தம் பெற்றுச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வு எய்தினோர் மீளவும் அவ்வின்பத்தினின்று பிரியார் ஆதலின், அவன் தந்த ஆனந்தமயக்கத்தை அவனாலும் தீர்க்க முடியாது என்பதறிக. அன்றி, இம்மயக்கம் சுத்தாவத்தையில் நிகழ்வதும், உயிர்கள் பல பிறவிகளை எடுத்துத் தெளிந்து

சிவனருள் சேரக்கூடியதும் ஆதலால் இதனை என்றும் பிரியார் என்பதும், அதனால் விளையும் ஆடலும் பாடலும் பித்துநிலை அன்றென்பதும் தெளிக. மரபறியாதார் சிலர், காமவினைவாகிய மயக்கநிலையிலேயே இந்த ஞானனுபவத்தையும்கண்டு இதுவே அதுவென மயங்கி அலைவர் என்றொழிக.

ஆனந்தமாலேற்றும் அத்தன் என்று அணைந்தமை கூறி, ஆர்க்கோ முதலியவற்றால் தன்மை வெளிப்படுத்தலின் இத் திருப்பாடல் அணைந்தோர்தன்மை அறிவிப்பதாயிற்று.

617 *செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதே*
*உய்யும் வகையின் உயிர்ப்பறியேன் – வையத் [தான்*
*திருந்துறையுள் வேல்மடுத்தென் சிந்தனைக்கே கோத்*
*பெருந்துறையில் மேய பிரான்.*

இ - ள் : அடியேன்செய்த பிழைகள் இவை என்பதையும் அறியேன்; அவனுடைய சிவந்த திருவடிகளையே வணங்கினேன்; யானுக்கடைத்தேறியுய்யும் வகையின் தோற்றமும் அறியேன்; அங்ஙனமாய அடியேனை, திருப்பெருந்துறையில் எழுந்தருளிய பெருமான், இவ்வுலகத்தே உருமேனிதாங்கி யிருந்து, உறையுள் வேலைச் செருகினாற்போல என் சிந்தனையுள் திருவருள்ஞானத்தைக் கோத்தான் என்றவாறு.

யான் செய்த தவறுகள் இன்ன, உய்யு நெறி யாது என்பதையும் அறியாது ஏதோ திருவருள் வசத்தால் திருவடியைத் தொழுத எனக்கு அவன் உறையுள் வேலைச்செருகினாற்போலச் சிந்தையுள் திருவருளைச் சேர்த்தான் என்பது கருத்து.

உயிர்ப்பு - தோற்றம்.

உறையுள் வேலைச்செருகினால் செறிவாக இருப்பதுபோலவும், வேல் தெரியாமல், மேலுறையாகிய தோலே தெரிவது போலவும் திருவருள் என்னுடையமனத்துள் மறைத்து வைக்கப் பெற்றது; அதனால் பசுபோதம் கழன்றது; அதனால் சிவபெருமான் சேவடியையே தொழுதுகிடக்கின்றேன் என்று அனுபவம் அறிவித்தவாறு காண்க.

618 *முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்*
*பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் – தென்னன்*
*பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்*
*வருந்துயரம் தீர்க்கும் மருந்து.* 4

இ - ள் : இனிவரும் பிறவியைப் போக்கும் பெருமையை யாள்பவனும், தென்னனும், திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள பெருங்கருணையாளனும், இனிவரும் துயரங்களாகிய ஆகாமியவினையை அறுக்கும் மருந்துபோல்பவனுமாகிய சிவபெருமான், பழவினைகளிரண்டின் வேரையும் அறுத்து என் முன் நின்று காட்சி வழங்கினான் என்றவாறு.

கருணையாளனாகிய பெருமான் என் வினைகளனைத்தையும் வேரறுத்து எனக்குக் காட்சிவழங்கினான் என்பது கருத்து.

முன்னைவினை - பழவினை. பலபிறவிகளில் ஈட்டிய பழைய வினை. இரண்டு - நல்வினையும் தீவினையும். வினைகளின் வேர் - மூலகன்மம். வேருடன் களைந்து எனலுமாம்.

முன்நின்றான் - என் கண்காண என்முன்னே குருநாதனாக உருமேனிதாங்கிக் காட்சி வழங்கினான்.

பின்னைப்பிறப்பு - இப்பிறவியில்செய்த புண்ணிய பாவங்களுக்கீடாகப் பின் விளையும் பிறப்புக்கள். முன்னைவினை என்றதால் சஞ்சிதகன்மமும், பின்னைப்பிறப்பு என்றதால் ஆகாமிய கன்மமும், வருந்துயரம் தீர்க்கும் என்றதால் இப்பிறவியில் நுகர்ச்சிக்கு வருகின்ற பிராரத்தகன்மமும் ஒழிக்கப்பட்டமை உணர்த்தியவாறும்.

பேராளன் - சீர்த்தியை ஆள்பவன்; பெருமையை ஆள்பவன் எனலுமாம். "மருந்தவை மந்திரம்மவை" என்று சம்பந்த சுவாமிகளும் "வாயிலே வைக்குமளவில் மருந்தாகி" என்று நக்கீரதேவரும் அருளியது போல இறைவன் மெய்யடியார்களின் துன்பந்துடைக்கும் மருந்தாகிறான் ஆதலின் மருந்தென உருவகித்தார். தேவாமுதம் எனலுமாம்.

வருந்துயரம் - இப்பிறவியில் அடுத்துவரும் துன்பமாகிய மரணம் என்பாரும் உளர்.

பார்க்குமிடம் எங்கும் நீக்கமற இறைவனைக் காணுதல் அணைந்தோர் தன்மையாதலின், இத்திருப்பாடலில் 'முன்னின்றான்' 'துயரந்தீர்க்கும் மருந்து' என இறைவன் எங்குமாய் இன்பாய் இருத்தலை உணர்த்துதல் காண்க.

619 *அறையோ அறிவார்க் கனைத்துலகும் ஈன்ற*
*மறையோனும் மாலுமால் கொள்ளும் — இறையோன்*
*பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா*
*திருந்துறையும் என்னெஞ்சத் தின்று.* 5

இ - ள் : எல்லா உலகங்களையும் படைத்த அந்தணனாகிய பிரமனும் திருமாலும் தேடிக்காணாது மயக்கம் கொள்ளுதற்குக் காரணமாகிய இறைவனும் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருப்பவனுமாகிய சிவபெருமான் அடியேன் மனத்தில் நின்று நீங்காது கோயிலாகக்கொண்டு எழுந்தருளுவன்; இறைவனைத் தேடி அலைவார்களுக்கு யான் கூறும் உறுதி இது என்றவாறு.

மாலும் பிரமனும் அறியாது மயங்கும் இறைவன் என் நெஞ்சத்தில் என்றும் உறைகின்றான்; அவனைத்தேடி அலைவார்க்கு உறுதியாகச் சொல்லுகிறேன் என்பது கருத்து.

சிவபெருமானுடைய ஆணைவழிநின்று எல்லா உலகங்களையும் உடலையும் உயிர்களுக்குப் படைத்துக் கொடுப்பவன் பிரமனென்பார் 'அனைத்து உலகும் ஈன்ற மறையோன்' என்றார். மாலும் என அடையின்றி ஓதினும் அனைத்துலகும் காக்கும் மாலும் எனக்கொள்க. இவ்விருவரும் அன்னமும் ஏனமுமாய்த் தேடியும் அறியமுடியாமல் மயங்குதற்குக் காரணமாகிய இறைவன் என்க.

இறைவன் எல்லா உயிர்களிடத்தும் பரிபாகநிலைக்கேற்பப் பாலில் நெய்போலவும், தயிரில் நெய்போலவும், மணியுள் ஒளி போலவும் தங்குதலை உடையவன். இறுத்தல் - தங்குதல்

பிரியாது உறையும் என்றலே அமையுமாயினும் இருந்து உறையுமென்றது அடிப்படத்தங்குதலை அறிவித்தது. உண்மையடியார் உள்ளத்தும் சிவலிங்கத் திருமேனியிலும் நீங்காது என்றும் தங்குதல்போலவே, என் நெஞ்சத்தும் உறைகின்றார் என்பார் 'இன்று என் நெஞ்சத்துப் பிரியாதிருந்து உறையும்' என்றார். என் நெஞ்சத்து என்றது யான் சகலான்மாவாயினும் இவன் தங்கும் புண்ணியம் சிறிது உடையது என் நெஞ்சம் என உலகவர் நிலையை உளங்கொண்டு குறிப்பித்தவாறும்.

என் நெஞ்சத்து இருந்து உறையும் என்றதால் இறைவனை அணைந்தமை அறிவிக்கப்படுதல் காண்க.

620 பித்தென்னை யேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
மத்தமே யாக்கும்வந் தென்மனத்தை - அத்தன்
பெருந்துறையான் ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்
மருந்திறவாப் பேரின்பம் வந்து. 6

இ - ள் : என் தந்தையும் திருப்பெருந்துறையானும் அடியேனை ஆட்கொண்டு பெருங்கருணையோடு நோக்கும் மருந்து

போல்பவனும் அழிவில்லாத பேரின்ப வடிவினனும் ஆகிய இறைவன் வந்து என்னைப் பித்தனுக்கும்; பிறப்பை அறுக்கும்; என் மனத்தைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளிப் பேசுதற்கு அரிதாகிய களிப்பை உண்டாக்கும் என்றவாறு.

சிவபெருமான் என் மனத்து எழுந்தருளிப் பிறப்பறுத்துச் சொல்லவொண்ணாத பேரின்பக்களிப்பைத் தரும் என்பது கருத்து.

அத்தன் துறையான் மருந்து இன்பம் வந்து ஏற்றும், அறுக்கும், ஆக்கும் எனக்கூட்டுக.

ஆளாகக்கொள்வதற்கு முன்பு அன்புடன் அணைத்துப் பேசியும் ஆட்கொண்ட பின்பு வன்பாக ஒறுத்துப்பேசியும் அடியவனை அவமதிக்கும் செல்வர்போலாது அன்புடன் ஆட்கொண்டு பெரிய அருளால் நோக்குகின்ற மருந்துபோல்பவன் என்றது இறைவனுடைய எல்லையில் கருணையை உணர்த்துகின்றது.

கண்டு கேட்டு உறுதலாகிய இன்பங்கள் பொறிகள் புலன்களோடு பொருந்துங்காலத்து விளைவதாய்ப் பின்னர் வெறுப்பாந்தன்மையன; காலத்தானும் நுகர்ச்சியானும் வரையறைக் குட்பட்டன. இறைவனிடமிருந்து பெறும் இன்போ என்றும் அழியாததாய், அளவிடற்கு அரியதாய், தோயுந்தோறும் பெரும்போகம் பின்னும் புதிதாகப் பயப்பதாதலின் 'இறவாப் பேரின்பம்' என்றார்.

அங்ஙனம் அத்தனும் பேரின்பமுமாய இறைவன் வலிய வந்து என்னைத் தன்னடிக்கே பித்தாக்கினன் என்பார் 'என்னைப் பித்தேற்றும்' என்றார். பித்து - தெய்வமால்.

பித்தாதலாகிய பசுஞானம் நீங்கிப் பதிஞானம் பெறுதலை உயிர் உற்றகாலத்து வினைகள் மிகாமையால் வினைவயத்தான் வரும் பிறவியும் நீங்கியதைப் 'பிறப்பு அறுக்கும்' என்பதால் உணர்த்தினர்.

மத்தம் - மதத்தால் விளையும் களிப்பு. வந்து என்மனத்தை மத்தமே ஆக்கும் எனக் கூட்டுக. சிவானந்தத்தால் விளையும் களிப்பு இத்தன்மையதாய் இருந்தது என்று சொல்லவொண்ணாமையால் 'பேச்சு அரிதாம் மத்தமே ஆக்கும்' என்றார்.

இதனால் பித்தாதல் களிப்பெய்துதல் முதலியன உணர்த்தப் பெறுதலின் அணைந்தோர்தன்மையாதல் காண்க.

621 வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா வமுதாய் அமைந்தன்றே – சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி. 7

இ - ள்: புகழ்நிறைந்த அழகிய தெற்கின்கண்ணதாகிய திருப்பெருந்துறைப் பெருமானாகிய, என் சிந்தையுள் எழுந்தருளியிருக்கின்ற ஒப்பற்றவன் பெருக்குகின்ற ஞானவொளியானது, மீண்டும் பிறவிக்கண் வாராத வழிகளை அருளிச் செய்து, என் சிந்தையுள் வந்து எனக்கு மாறுபாடின்றி, நுகர்ந்து தெவிட்டாத அமுதமாக அமைந்தது என்றவாறு.

சிவபெருமானருளிய சிவஞானப்பேரொளி என் பிறவியைப் போக்கி, என்னுடனொத்து, ஆராத அமுதமாக அமைந்தது என்பது கருத்து.

வீட்டின்பத்தைப் பெற்றூர் மீளவும் பிறவி எய்தாராதலின் அதனை 'வாராவழியருளி' என்றதால் குறிப்பித்தார். முன்னரும் 'மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே, கள்ளப்புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே' என்றமை காண்க.

குழந்தையின் போக்கிலேயே நடந்து குழந்தையைத் திருத்தும் செவிலிபோலச் சிவஞானப் பேரொளி சிந்தையில் வந்தபோது, என்னுடைய குணஞ்செயல்கட்கு ஒத்ததாய், மாறுபாடின்றியிருந்து என்னைத் திருத்திச் சிவனடிக்கு வழிப்படுத்தியது என்பார் 'எனக்கு மாறின்றி' என்றூர்.

சிவஞானப் பேரொளி என் நுகர்ச்சிக்கு வந்தபோது உண்டு தெவிட்டாத அமுதம் போல்வதாய், எப்போதும் இனிமையதாய் இருக்கின்றது என்பது 'ஆராவமுதாய் அமைந்தன்று' என்பதால் உணர்த்தப்பெற்றது. ஏ : அசை.

தம்மை ஆட்கொண்டு ஒளியுதவி உயர்வற உயர்த்திய நிகழ்ச்சி, திருப்பெருந்துறையில் நிகழ்ந்தமையின் அதனைச் சீரார் பெருந்துறை, திருப்பெருந்துறை, தென்பெருந்துறை என்ற மூன்று சிறப்புக்களைப் புணர்த்துப் பாராட்டுகிறூர்.

அடிகளார்மனம் மறந்தும் பிறதெய்வம் பேணுத பெருஞ் சிறப்பாகிய கற்புடையது ஆதலின் 'என்சிந்தைமேய ஒருத்தன்' என்றூர். ஒருத்தன் - ஒப்பற்றவன் எனலுமாம்.

ஞானம் அனுபவம் மிகுந்தோறும் பெருகுவது ஆகலின் 'பெருக்கும் ஒளி' என்கின்றூர்.

இங்ஙனம் சிவஞானம் ஆராவமுதாய் இனித்தலை உணர்த்துதலின் இத்திருப்பாடல் அணைந்தோர்தன்மை அறிவிப்பதாயிற்று.

622 யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்குங் கீழாம் அடியேனை – யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை. 8

இ - ள் : எல்லார்க்கும் மேலாகிய அளவில்லாத புகழையுடைய சிவபெருமானாகிய நீ எல்லார்க்கும் கீழான அடியேனை யாவரும் பெற்றறியாத இன்பத்துள் வைத்தாய்; என்னுடைய எம்பெருமானே! அங்ஙனம் வைத்த உனக்குக் கைம்மாறாகச் செய்யும் உபகாரம் ஒன்றையும் அறியேன் என்றவாறு.

மிக உயர்ந்த புகழுடைய பெருமானே! மிக இழிந்த என்னை ஆட்கொண்டாய்; ஒருவரும் பெறாத இன்பத்துள் வைத்தாய்; அங்ஙனம் வைத்த உனக்கு என்ன கைம்மாறு செய்வேன் என்பது கருத்து.

நீ யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான் ஆவை; யான் யாவர்க்கும் கீழாம் அடியேன் ஆவேன்; என் எம்பெருமான் யாவரும் பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்குச் செய்யும் வகை மற்று அறியேன் எனச் சில சொற்கள் வருவித்துக் கொண்டுகூட்டி முடிப்பாரும் உளர்.

பிரமன், திருமால், இந்திரன் முதல் உயர்நிலையில் அஷ்ட வித்யேச்சுரர் வரையிலுள்ள அனைவருக்கும் மேலான் கருதலளவையிலும், எண்ணலளவையிலும் அடங்காத புகழை உடையவன் இறைவன் எனத் தலைவனது மேன்மையும், தேவர்முதல் நரகர் ஈறான அனைவருக்கும் கீழான தன்மையையுடைய அடியேன் எனத் தன் இழிதகைமையும்தோன்ற இங்ஙனம் கூறினார்.

வள்ளல்கள் இரப்பவன் தகுதியும் தேவையும் நோக்காது தன் பெருமை ஒன்றே நோக்கி வரையாது வழங்கல்போலக் கீழான என்னை மிக மேலான நீ ஒருவரும் பெற்றறியாத இன்பவுலகத்துள் இருக்கச் செய்தாய்; அதனால் எம்போல் அடியார் பலருக்கும் பெருமானாக இருந்த நீ எனக்கேயுரிய எம்பெருமான் ஆயினை; அத்தகைய உனக்கு யான் என்ன உபகாரம் செய்வேனென்ற நயந்தோன்றக் கூறியவாறு காண்க.

சீர் உடையான் என்பதில் உடையான் என்பது அண்மை விளி. சீர் உடையானே! எம்பெருமானே! அடியேனை இன்பத்துள் வைத்தாய் ; உனக்குச் செய்யும்வகை மற்றறியேன் எனக் கூட்டலுமாம்.

இறைவன் திருவடிநிழலை அடைந்தோர் இன்பவெள்ளத்துள் ஆழ்ந்து இன்னது செய்வதென்று அறியாது தவிப்பரே அன்றி, முன்னே நீ தந்த இன்பத்துள் அமையாத யான் இப்போது அமைந்துள்ளேன்; அதுவே உனக்குச் செய்யும் கைம்மாறு; இதுவன்றி மற்றென்றும் அறியேன் என்றார் என்க.

எம்பெருமான் என்பது தன்மைப் பன்மைப் பெயராக அடியார்பலரையும் அகப்படுத்தி நின்றது. பின்னர், தலைவன் என்னும் அளவில் வாளா பெயராய் என் எம்பெருமான் எனக் கூறப்பட்டது. 'என் தலைவனே' என்பது பொருள்.

பிரமன் முதலிய ஏனையோர் புகழனைத்தும் புற்றீசல்போலத் தோன்றி அழியும் பொய்ப்புகழாக, இறைவன் புகழே என்றும் நிலவும் மெய்ப்புகழாதலின், அதனை 'மேலாம் சீர்' என்றார். அவர்கள் புகழ்போல அளவிலடங்காமையின் 'அளவிலாச் சீர்' என்றார்.

இத்திருப்பாடல் இறைவன் இன்பத்து வைத்தமையையும், அதனால் தான் பரவசமான தன்மையையும் அறிவித்தலின் அணைந்தோர்தன்மை அறிவிக்கும் திருவெண்பாவாதல் அறிக.

623 மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவரும் காணாச் சிவபெருமான் - மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே யின்பம் மிகும். 9

இ - ள் : பிரமன், திருமால், உருத்திரன் என்ற மூவரும் ஏனைய முப்பத்துமுக்கோடி தேவர்களும் ஏனைய தேவர்களும் காணாத சிவபெருமான் குதிரையில் ஏறிக்கொண்டு இவ்வுலகத்து வந்து இறங்கிய நீண்ட திருவடிகளை வணங்க என் உடலிடத்தே பேரானந்தச் சிவாநுபூதி பெருகும் என்றவாறு.

தேவர்களால் அறியப்படாத சிவம் பரிமேலழகராகப் பார் மீது வந்தபோது அவன் திருவடிகளை வந்திக்க உடலகத்து இன்பம் ஊற்றெடுத்து ஓடும் என்பது கருத்து.

மூவர் - படைத்தல் காத்தல் அழித்தலாகிய முத்தொழிலையும் செய்கின்ற பிரமனும் திருமாலும் உருத்திரனும் ஆவர்

முப்பத்து மூவராவார் உருத்திரபுவனத்திலுள்ள மகாதேவர் முதலான பதினொருருத்திரர்களும், பன்னிரண்டு சூரியர்களும், இரண்டு அசுவினி தேவர்களும், எட்டு வசுக்களும் ஆவர்.

மற்றெழுந்த தேவர்களாவார் இவர்கள் அல்லாத விண்ணுலக வாசிகள் அனைவரும். இவர்கள் கன்மபூமியிற் பிறவாது இன்பபூமியில் பிறந்தமையினால் அன்பு நெறியோ அறிவு நெறியோ இலராய் அமுதத்தை உண்டு அரிவையர் இன்பமே துய்த்து அல்லல் உறுவர் ஆதலால் சிவபெருமான் அவர்களால் அறியப்படாதவன் ஆயினன் என்பதாம்.

அங்ஙனம் விண்ணவர் கண்ணுக்கே தெரியாத பெருமான் அடியேன்பொருட்டு ஒரு குதிரைவீரனாகிக் கன்ம பூமியாகிய இதில் வந்து அவதரித்தான்; இது அவனது எளிவந்தகருணை. இதனை 'மாவேறி வையகத்தே வந்து இழிந்த' என்பதால் குறிக்கின்றார்.

வார் கழல்கள் - புகழால் நீண்ட திருவடிகள். வந்திக்க - வணங்க; அருச்சிக்க என்பாரும் உளர். உள்ளத்தே இன்பம் மிகும் என்பார் மெய்யகத்தே இன்பம் மிகும் என்றார். மெய்யகம் - உள்ளம். உடலுக்குள்ளே உள்ளது என்பது பொருள்.

மணற்கேணி தோண்ட நீர் சுரப்பதுபோல—வந்திக்க உள்ளத்தே இன்பம் மிகுவதாயிற்று என்க. இதனால் அனைந்தோர்தன்மையை அறிக.

624 இருந்தென்னை யாண்டான் இணையடியே சிந்தித்
திருந்திரந்து கொள்நெஞ்சே யெல்லாம் – தருங்காண்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவாய் என்மனத்தே வந்து. 10

இ - ள்: திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கின்ற பேரருளனாகிய பெம்மான் பிறவிப்பிணிக்கு மருந்துவடிவாக என் மனத்தில் எழுந்தருளி இடைவிடாது இருந்து என்னை ஆட்கொண்டான்; ஏ மனமே! அவனுடைய திருவடிகள் இரண்டையும் இடைவிடாது சிந்தித்து நிட்டைகூடியிருந்து வேண்டியதை இரந்து பெற்றுக்கொள்; அவன் நீ விரும்பிய எல்லாவற்றையும் தருவான் என்றவாறு.

மனமே! திருப்பெருந்துறைப் பெருமான் பிறவிப்பிணிக்கு மருந்தாகவந்து என் மனத்தே இருந்தான்; ஆதலால், அவன் திருவடியைச் சிந்தித்து வேண்டியதைப் பெற்றுக்கொள் என்பது கருத்து.

ஆட்கொண்ட ஆதிகாலம்போல என்னைவிட்டுப் பிரியாது என்னுள் என்றும் இருந்து என்னை ஆண்டான்; ஆகையால், நீயும் அவன் இணையடியை இடைவிடாது சிந்தித்து நிட்டையிலிருந்து வேண்டியதைக் கேட்டுப் பெற்றுக்கொள் என்பதனை 'நெஞ்சே! இருந்து என்னை ஆண்டான் இணையடியே சிந்தித்திருந்து இரந்துகொள் எல்லா நந்தும்' என்பதால் உணர்த்துகிறார். இறைவன் பிறவிப்பிணிக்கு மருந்து போல்பவனாகலின் 'மருந்து உருவாய்' என்றார். காண்: முன்னிலை அசை.

திருவடியை இடைவிடாது சிந்தித்தலும், இன்பத்தை அவனிடமே கேட்டுப் பெறுதலும் அணைந்தோர் செயலானதை இத் திருப்பாடல் உணர்த்துகிறது.

625 இன்பம் பெருக்கி இருளகற்றி யெஞ்ஞான்றும்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய் - அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து. 11

திருச்சிற்றம்பலம்

இ - ள்: புகழ் நிறைந்த திருப்பெருந்துறையான் என் மனத்துள்ள அறியாமையைப் போக்கி என்றைக்கும் பற்றாதவாறு துன்பத்தொடக்கை அறுத்து ஒளிவடிவாய் என் உள்ளத்தில் அன்பைக்கொடுத்து இன்பம் மிகச்செய்து என் சிந்தையையே தன்சிவபுரமாகக்கொண்டு மகிழ்ந்திருந்தான் என்றவாறு.

சிவபெருமான் அறியாமையைப்போக்கி, துன்பத்தொடர்ச்சியை அறுத்து, அன்பு அருளி, இன்பம் பெருக்கி, என்னுடைய மனத்தையே தன் ஊராகக்கொண்டு எழுந்தருளியிருக்கிறான் என்பது கருத்து.

இருளகற்றி, துன்பம் தொடர்வறுத்து, சோதியாய் அன்பு அமைத்து, இன்பம் பெருக்கி, என்னுடைய சிந்தையையே ஊராகக் கொண்டான் என இயைத்துப் பொருள் கொள்க.

இருளகற்றியமைக்கு ஏற்ப இறைவனைச் சோதியாக உருவகித்தார். கடலலைபோல இடையறாமல் ஒன்றன்பின் ஒன்றாக வருதலின் துன்பம் தொடர்வு எனப்பட்டது. தொடர்வு - தொடர்ச்சி. இறைவனைச் சோதியாகவும் அறிவாகவும் இன்பமாகவும் கண்டு அனுபவிப்பதாகிய அணைந்தோர் தன்மை இதனால் உணர்த்தப்பெறுகிறது.

இப்பதிஞெரு திருப்பாட்டானும் இறைவன் என் மனத்து அணைந்தமையால் வினைகள் அகன்றன; ஆனந்தம் பெருகிற்று; இன்ப அன்பு பெருகிற்று; அவன் துன்பம் துடைக்கும் மருந் தாயினன்; என் நெஞ்சத்து என்றும் இருக்கின்ருன்; ஒளியுதவு கின்ருன்; அமுதாய் இனிக்கின்ருன்; அவனுக்குச் செய்யும் கைம்மாறு ஒன்றும் அறிகின்றிலேன்; அவனது திருவடியை வணங்க என் உள்ளத்தே ஊற்று எடுத்து ஓடுகின்றது; நெஞ்சே! நீ வேண்டியதைக் கேட்டுப் பெற்றுக்கொள் என்று அணைந்தோர்க்குரிய சுவாநுபூதி முறைகளைச் சொல்கின்றமை காண்க.

# 48. பண்டாய நான்மறை

[ அநுபவத்துக்கு ஐயமின்மை உரைத்தல் ]

மணிவாசகப் பெருந்தகை, திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்துச் சிவகுருநாதன் தமக்கு அளித்த பேரின்பம் ஒருகாலைக்கொருகால் வளர்ந்து அநுபவமாதலைப் பாராட்டி இதனை அருளிச்செய்கின்றார்.

திருவாசக உள்ளக்கிடை, 'அநுபவத்துக்கு ஐயமின்மை உரைத்தல்' என்னும். பழைய திருப்பெருந்துறைப் புராணம் 'எந்தை திருப்பெருந்துறையை ஏத்தும் தமரே வாழ்வுற்று இடர்சேர் பாச, பந்தம் அறுத்திடுவர் எனப் பண்டாய நான்மறையும் பகர்ந்ததாமே' என்று கூறும்.

இதன் கருத்து அநுபவத்திற்கு ஐயமின்மையை உரைத்தாம். 'பண்டாயநான்மறைத் தொண்டாயவெண்பா, அம்மைமுத்தி அநுபவத்துக்குக் கைம்மாறு அடிமை சும்மாதிர் என்றது' என்பது அகத்தியசூத்திரம். முத்தித்தானமாய் முன்னின்றருளும் பரசிவன் கருணையேயன்றி வேறநுபூதியில்லை என்றுரைப்பது என விளக்கும் பழையவுரை.

இவற்றைக்கொண்டு தொகுத்து எண்ணின், பண்டாய நான்மறை என்பது பதிக்த் தலைப்பைக்கொண்டு பெயர் பெற்றதாக, இறைவன் தமக்கருளிய அருளநுபவத்திற்குக் கைம்மாறின்மையை உணர்த்தித் திருப்பெருந்துறையைப் புகழ்வாரே தமர்; அவர்களே பாசபந்தம் அறுத்திடுவர் என்று அநுபவத்துக்கு ஐயமின்மையையும் அறிவிப்பது என்னலாம்.

இது ஏழு வெண்பாக்களையுடையது; அந்தாதித்தொடையான் அமைந்தது.

நேரிசைவெண்பா

திருச்சிற்றம்பலம்

626 பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனும்
கண்டாரும் இல்லைக் கடையேனைத் - தொண்டாகக்
கொண்டருளுங் கோகழியெங் கோமாற்கு நெஞ்சமே
உண்டாமோ கைம்மா றுரை. 1

இ - ள் : மிகப் பழைமையான வேதங்களும், இறைவனிடம் அணுகவும் செய்யா; திருமாலும் பிரமனும் அவனைக் கண்டாரும் இலர்; எல்லாரினும் கடைப்பட்ட என்னைத் தொண்டனாக ஏற்றருளிய திருவாவடுதுறைக்கண் எழுந்தருளியுள்ள அத்தகைய எம் தலைவனுக்கு யான் செய்யும் கைமாறு உண்டோ? நெஞ்சமே! நீ சொல் என்றவாறு.

வேதங்களும் அயனும் திருமாலும் அறியாத பெருமானும், கடையேனைத் தொண்டனாக ஆட்கொண்ட திருவாவடுதுறைத் தலைவனுமாகிய பெருமானுக்கு யான்செய்யும் கைமாறு என்ன? என்று யானறியேன்; நெஞ்சமே! நீ அறியின் சொல் என்பது கருத்து.

மிகத்தொன்மையான முதற்படைப்பின்கண் ஒளியுலகுக்கு முதலாய பிரணவமும், அதனை முதலாக உடைய வேதங்களும் இறைவன்பால் தோன்றின ஆதலின் 'பண்டாய நான்மறை' என்றார். பண்டாய நான்மறை, மூவா நான்மறையாராய்ச்சி முதலான தடைவிடை நூல்கள் எழுந்து இவற்றை விளக்கியுள்ளன ஆதலின் யாம் விரித்திலம் என்க.

இங்ஙனம் இறைவன் சொல்லாகிய வேதங்களும், காலத்தொடும் அளவொடும்பட்டுச் சுட்டறிவிலமைந்தன ஆதலால், காலத்தொடு கற்பனை கடந்த கருவூலத்து மாமணியாய்ச் சுட்டறிவிற்கப்பாற்பட்ட பெருமானை முற்றும் உணரமாட்டாமை மட்டும் அன்றி, அவன் பக்கத்திற்செல்லும் தகுதியும் பெற்றில என்பார் 'பால் அணுகா' என்றார்.

திருக்கயிலையிலே அம்மையப்பராக எழுந்தருளியிருக்கும் சீகண்டபரமசிவனைக் கண்டு வழிபட்டுப் பிரம விஷ்ணுக்கள் தத்தம் பதவியைக் காத்துக்கொள்வார்களாயினும் இறைவன் சச்சிதானந்த வடிவினன் என்ற உண்மையையும், அவனை ஞானத்தாலன்றி நணுகவும் முடியாது என்பதனையும் கண்டிலர். இதனை 'மால் அயனும் கண்டாரும் இல்லை' என்றார். இல்லை: பொதுவினை; ஆகலின் பலர்பாற்பெயருக்கு முடிபாயிற்று.

இறைவனையும், அவனடியார்களாய் முத்திபெற்றோரையும் நோக்கத் தம் இழிவு புலப்படுதலின் தம்மைக் 'கடையேனை' என்று சொல்லிக்கொள்ளுகிறார். கோகழியைப்பற்றி முன்னரே கூறப்பட்டது.

இத்தகைய பேருபகாரத்திற்கு நாம் செய்யும் பிரதியுபகாரம் உண்டோ? உரை என நெஞ்சை வினவுகின்றார். நெஞ்சு

தன்னின் வேறன்றாயினும், தன்னுணர்வையே இடமுங்காலமும் சார்ந்து வெளிப்படுக்கும்தன்மையதாயினும் அதனை விளித்து வினவுவதன் நோக்கம் இல்லை என்பதை அறுதியிடவே என்க.

'கடையேனைத் தொண்டாகக்கொண்டு அருளும் கோகழி எம் கோமாற்கு' என்பதனை அடியாக வைத்துத் திருப்பெருந்துறையில் தூலபஞ்சாக்கரத்தையும், கோகழியில் சூக்கும பஞ்சாக்கரத்தையும் உபதேசித்தமை புலனாகும் என வரலாற்றாராய்ச்சி செய்வர் சிலர்.

இறங்குதுறையில் நீத்தாறுற்போல அடிகளார்க்கு அருளனுபவம் குருந்தடியிலே எல்லையின்றிக் கிடைத்தது ஆதலானும், தாமறிந்த உண்மையை உலகவர்க்கும் உணர்த்தி அவர்களை அன்புருவ இன்பநிலையை எய்துவிக்கும்பொருட்டே திருவாசகம் திருவருளால் அவர் வாயிலாக வெளிவந்தது ஆகலானும், அவ்வப்போது எதிர்ப்படும் அதிகாரிபேதங்கட்கு ஏற்ப அருட்பாடல் வெளிவந்தன என்று கோடலே சாலச்சிறந்ததாம் என்க.

என்னை அடிமையேற்ற இறைவற்கு நாம் செய்யும் கைம்மாறில்லை என்றதால், ஆண்டானடிமைத் திறத்திலிருந்து தாம் பெறுகின்ற அநுபவத்திற்கு ஓர் ஐயமின்மை அறிவிப்பது இத் திருப்பாடல் என்க.

627 உள்ள மலமூன் றும் மாய உகுபெருந்தேன்
வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த — வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவுங் கெடும்பிறவிக் காடு. 2

இ - ள்: ஆன்மாவிற்கு உரிமையாக உள்ள மூன்றுமலங்களும் மாய்ந்தொழியச் சொரிகின்ற பெருமைவாய்ந்த தேனாகிய வெள்ளத்தை உதவுகின்ற, வேதக்குதிரையின்மேல் எழுந்தருளிவந்த வள்ளலாகிய சிவன் சேர்ந்திருக்கிற திருப்பெருந்துறையை வாழ்த்துங்கள்; வாழ்த்தவே உங்கள் பிறவியாகிற காட்டின் கருவே அழியும் என்றவாறு.

திருப்பெருந்துறையுறை சிவபெருமானைத் தோத்தரிக்கப் பிறவிக்காட்டின் கருவே கெடும் என்பதாம்.

செம்பிற் களிம்புபோல மலம் ஆன்மாவிற்கு அநாதியாதலின் அதனை 'உள்ள மலம்' என்றார். உள்ள மலம் ஆணவம். மூன்று - அநாதியேயுள்ள ஆணவம் முதலான மூன்று என்க.

அவையாவன ஆணவம் மாயை கன்மம் என்பன. யாம், எமது, அவற்றால் விளையும் பாசம் என்பர் சிலர். யாம் என்பது ஆணவத்தின் காரியமாகிய முனைப்பு. எமது என்பது அதன் காரியமாகிய அறியாமையான் விளைந்த மாயாகாரியத்தோடுண்டான சம்பந்தம். பாசம் என்பது நான் என்று முனைக்கும் பொருளுக்கும், எனது என்னும் பற்றப்படுபொருள்களுக்குமிடையே நிகழ்வதாகிய ஆசையும் அதற்காம் முயற்சிகளாகியவினைகளும் ஆம். இவ்வொற்றுமையறியாது மும்மலம் - யாம், எமது, பாசம் என்பனவே; ஆணவம் மாயை கன்மம் என்பாரும் உளர்; அடிகள் 'யாம் ஆர் எமது ஆர் பாசம் ஆர் என்ன மாயம்'(605) என்பதால் யாம் முதலிய மூன்றையுமே மலம் என்றனர் என்பர்.

சைவநூலுக்குச் சைவநூல் வழிநின்று உரை கூறுதலே அமையும்; அன்றிச் சாத்தமும் தாந்திரிகமும் ஏகான்மவாதமும் முதலான புறச்சமய நெறிநின்று கூறுதல் பொருந்தாது என விடுக்க. அன்றியும் வேறல்லாதவற்றை வேறுபோலக் காட்டலாலும் பயனின்மை தெளிக. தலத்திற்குரியவனைக்கூட வாழ்த்த வேண்டாம், தலத்தை வாழ்த்துங்கள் போதும்; பிறவிக் காட்டின் கரு அற்றுவிடும் என்கின்றார்கள். காடு அழிப்பது கடினம்; வேரில் வெந்நீர் ஊற்றுவதுபோல அதன் கருவை அழிப்பது எளிதென உலகவரை ஊக்கியவாறும்.

பிறவிக்காடு கருவறும் என உறுதியுரைத்தலின் அநுபவத்திற்கு ஐயமின்மையாகிய பதிகக்கருத்து இவ்வெண்பாவிற் றோன்றுதல் காண்க.

628 காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிப்பாகன் நம்வினையை — வீட்டி
அருளும் பெருந்துறையான் அங்கமல பாதம்
மருளும் கெடநெஞ்சே வாழ்த்து. 3

இ - ள் : நெஞ்சே! திருப்பெருந்துறை இறைவன், காட்டில் வேடனாகவும் கடலில் வலையால் வாழும் பரதவனாகவும், நாட்டில் குதிரைச் சேவகனாகவும் எழுந்தருளி ஆன்மாக்களாகிய நம் வினைகளைப் போக்கியருளுவன்; உன்னுடைய அறியாமையும் போக, அழகிய தாமரைமலர்போன்ற பாதங்களை வாழ்த்துவாயாக என்றவாறு.

நெஞ்சே! இறைவன் வேடனாகவும், வலைஞனாகவும், குதிரை வீரனாகவும் வந்து நம் வினைகளைப் போக்குவான்; உன் அறியாமையையும் போக்கிக்கொள்ள அவன் திருவடியை வாழ்த்து என்பதாம்.

வேடன் என்றது இறைவன் வேடனாகவந்து பன்றியெய்த வரலாற்றையும், வலைவாணனென்றது வலைவீசிய திருவிளையாடலையும், பரிப்பாகன் என்றது தமக்காகக் குதிரைவீரனாக எழுந்தருளிய நரி பரியாக்கிப் பரி நரியாக்கிய திருவிளையாடல்களையும் குறிப்பன.

நெஞ்சே! பெருந்துறையான், வேடன்; வலைவாணன்; பரிப்பாகன் ; நம் வினையை வீட்டியருளும்; மருளுங்கெட, கமல பாதம் வாழ்த்து எனக் கூட்டுக.

மருளுங்கெட என்ற உம்மை, அருளடைதலே அன்றி, மருளுங்கெட என இறந்தது தழீஇ நின்றது.

திருவடியை வாழ்த்தினால் நம் வினையை வீட்டும் என அநுபவத்திற்கு ஐயமின்மையை அறிவிப்பது இப்பாடல்.

629 வாழ்ந்தார்க ளாவாரும் வல்வினையை மாய்ப்பாரும்
தாழ்ந்துலகம் ஏத்தத் தகுவாரும் – சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி யேத்துந் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி யேத்தும் நமர். 4

இ - ள் : தேவர்கள் சூழ்ந்து வணங்கித் துதிக்கும், ஞானச் செல்வம் நிறைந்த திருப்பெருந்துறையை நன்றாக வணங்கித் தோத்தரிக்கும் நம்மவர்களே! உலகில் என்றும் அழியாது வாழ்ந்தவர்களும், வலிய வினையை மாய்ப்பவர்களும், இந்த உலக மனைத்தும் பணிந்து ஏத்தத் தக்கவர்களும் ஆவார்கள் என்றவாறு.

திருப்பெருந்துறையை வணங்கும் அடியார்களே உலகில் வாழ்ந்தவர் ஆவார்கள் ; வினையை ஒழித்தவர்கள் ஆவார்கள்; உலகம் போற்றத்தக்கவர்கள் ஆவார்கள் என்பது கருத்து.

ஆவாரும் என்பதிலுள்ள உம்மையைப் பிரித்து வாழ்ந்தார்களும் எனக்கூட்டி, வாழ்ந்தார்களும் மாய்ப்பாரும் தகுவாரும் ஆவார் என முடிக்க.

அடியார்களை நமர் என்றது இறைஞ்சும் இடமாகிய இந்த மண்முதல் எய்துமிடமாகிய வீடுவரை பிரியாது உடனுறையும் உறவினராதலின் என்க.

இவ்வண்ணம் திருவடியை அணைந்தோரே வாழ்ந்தார், உலகம் போற்றத்தக்கார் என்று கூறுதலின் இத்திருப்பாடல் அணைந்தோர்தன்மை அறிவிப்பதாயிற்று.

630 நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி யெழுகோ கழிக்கரசைப் — பண்ணின்
மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண். 5

இ - ள்: நெஞ்சே! திருப்பெருந்துறையை அடைந்து, நம் பிறவித்துன்பங்கள் போயகல, எண்ணி எழுவாயாக; திருவாவடுதுறைக்கு அரசும், இசையினும் இனிய மொழியை யுடைய உமாதேவியோடும் உத்தரகோசமங்கையுள் எழுந்தருளிப் பிரியாதுறைபவனுமாகிய சிவபெருமானைக் காண்பாயாக என்றவாறு.

நெஞ்சே! பிறவிநோய் அகலப் பெருந்துறையை எண்ணி எழுக; அம்மையப்பராக உத்தரகோசமங்கையுள் என்றும் பிரியாது இருப்பவனைத் தரிசிப்பாயாக என்பது கருத்து.

அறிவாற் சிவமேயான வாதவூரடிகள் தம் உள்ளத்தை விளித்துப் பெருந்துறை போ; சிவனைத் தரிசி என்று புதிதாக அறிவுறுத்துகின்றார்கள் அல்லர்; உலகைச் சிவநெறிப்படுத்துகின்றவர்கள் உலகம் அனைத்தையுமே தம் உள்ளமாகக்கண்டு உரைக்கின்றார்கள் என்க.

தமக்குப் பெருந்துறையில் அருளுபதேசம் கிடைத்ததால், முதற்கண் அங்குச் சென்று, உத்தரகோசமங்கையுள் குருநாதனைப் பிரிந்தமையால் அன்புமுறுகி, அனுபவம் கைவரப்பெற்று தில்லைக்கண் வந்து தரிசனப்பேறு பெற்றார்கள் ஆதலின் உலகையும் அம்முறையே ஆற்றுப்படுத்துகிறார்கள். நெஞ்சை முன்னிலைப்படுத்திய ஏனைய இடங்கட்கும் இதுவே கருத்தாகக் கொள்க.

இங்ஙனம் அன்றி, இன்னுவே செய்த பெருந்துறையானை முதற்கண்ணும், இனியதுவே செய்த கோகழியானை அதன் பின்னரும், இரண்டுஞ்செய்த உத்தரகோசமங்கையானை அதன் பின்னரும் உரைத்தார் எனத் தம் கற்பனைத்திறத்தால் நயங் கூறுவாரும் சிலருளர். திருப்பெருந்துறையானே குருநாதனாக வந்து சிவானந்தவெள்ளம் சிந்தையுள் கால்கொள்ளச் செய்தானாதலின் அவ்வுபகாரத்தை அடிகள் இன்னு என்றார் என்க.

ஆலயந்தானும் அரனெனத் தொழுதல் அணைந்தோர் தன்மையாகலான், பெருந்துறை, உத்தரகோசமங்கை, தில்லை இவற்றைக் காண் என நெஞ்சிற்குப் பணித்ததைக் கூறும் இவ்வெண்பா அணைந்தோர் தன்மை அறிவிப்பதாகின்றது.

631 காணுங் கரணங்கள் எல்லாம்பே ரின்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக் – காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு. 6

இ - ள் : நெஞ்சே! புலன்களை அறியும் பொறிகள் அனைத்தும் பேரின்பம் பயப்பனவே எனப் பாவிக்கும் அடியார்களின் பிறப்பகலத் திருவருட்பார்வை செலுத்தும் பெரியவனாகிய, திருப்பெருந்துறையில் என்றும் பிரியாது எழுந்தருளியிருக்கும் பெருமானை வாயாரப் புகழ்வாயாக என்றவாறு.

எல்லாம் இன்பமயம் எனக்கருதும் இருவினையொப்பு வந்த அடியார்களின் பிறவி நீங்கக் கருணைக்கண்ணோக்கம் செய்யும் திருப்பெருந்துறைப்பெருமானை வாயாரப்புகழ்வாயாக என்பது கருத்து.

'கூறுநாவே முதலாகக் கூறுங்கரணம் எல்லாம் நீ' (498) என்றமையால், தத்தம்புலன்களையறியும் பொறிகளும் அவற்றை வாயிலாகக் கொண்டியங்கும் மனம் முதலான அந்தக்கரணங்களும் ஆகிய அனைத்தும் சிவமேயாதலானும், சிவம் இன்பம் மங்களம் ஆதலானும் அணைந்தோராகிய சீவன்முத்தர் எங்கும் எதிலும் சிவமே கண்டு பேரின்பம் பேணினர் என்பார் 'காணுங் கரணங்கள் எல்லாம் பேரின்பம் எனப் பேணும் அடியார்' என்றார்.

அடியார்களுக்குப் பதிகரணமாயின்மையின், வினையையும் அதன் விளைவாகிய பிறப்பையும் ஒழித்தலின் 'பிறப்பகலக் காணும் பெரியோன்' என்றார். தச்சன் மாடஞ்செய்தான் என்றதுபோலத் தானே பிறப்பகற்றும் தொழிலைச் செய்கின்றான் என்பது கருத்தன்று; இவ்வான்மா பிறப்பறுக எனக் கருணைக் கண்ணோக்கம் செய்கின்றான்; அடியார்கள் பிறப்பு அகல்வதாயிற்று என்க. காணுதல் - செய்தல் என்பாரும் உளர்.

எல்லாம் சிவமயமாகப் பார்த்தலும், இடைவிடாது அவன் புகழையே பேசுதலுமாகிய அணைந்தோர் செயல்கள் அறிவிக்கப் பெறுதல் காண்க.

632 பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசில் மணியின் மணிவார்த்தை – பேசிப்
பெருந்துறையே யென்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தினடி யென்மனத்தே வைத்து. 7

திருச்சிற்றம்பலம்

இ-ள்: நல்ல மருந்து போல்வாருகிய சிவபெருமானது திருவடிகளை என்மனத்தே பொருந்தச்செய்து, பேசப்படும் பொருள்கள் அனைத்திற்கும் குறிக்கோளாகவிளங்கும் பேச்சினையும் கடந்த மாசிலாமணியாகிய பெருமானின் மாணிக்க மணிபோலும் உபதேச வார்த்தையைப் பேசித் திருப்பெருந்துறையே என்று கூறி எனது பிறவிநோயை வேரறுத்தேன் என்றவாறு.

மாசிலாமணியாகிய குருநாதனுடைய உபதேச வார்த்தையைச் சிந்தித்து வீடுபெற்று உய்ந்தேன் என்பது கருத்து.

பேசும் பொருள் - மண் முதல் குடிலையீருகிய மாயேயப் பொருள்கள். அவையனைத்திற்கும் இலக்ஷியமாய் விளங்கும் பேச்சு. அவைகளின் தன்மையை உள்ளவாறுணர்த்தும் ஞான சாத்திரப்பேச்சு. அதனையுங்கடந்து விளங்குபவர் மாசிலாமணியாகிய குருநாதன் என்புதாம், ஆகவே உரையளவையையும் கடந்து விளங்கும் ஒருவன் என்றவாறும்.

குருநாதன் பேச்சு, சிவம் சத்தி உயிர் மலம் மாயை இவற்றையுணர்ந்து உயிர்கள் உய்யச்சொன்ன ஒரு பேச்சாம். அது தான்கெட்டுத் தலைவனுகவே விளங்கும் 'சிவ சிவ' என்பதாம். அதனை நான் பேசாமற் பேசுகின்றபோது, அப்பேச்சுக் கிடைத்த பெருந்துறை என் நினைவிற்கு வர அதனைப் பெருந்துறையே என வாய்விட்டுக்கூறினேன்; இவ்விரண்டு உபாயத்தானும் அடியேன் பெற்ற பயன் பிறப்பறுதலாம்-என்ருர்.

மருந்துவைத்தால் நோயறுதல் இயல்பாதலின் மருந்தினடி மனத்தே வைத்தேன், பிறப்பறுத்தேன் என்ற நயமுமுணர்க. மருந்து மிக்க வன்மையுடையதாகலின், அம்மருந்தை உண்டேனலேன், எண்ணினேன், நோய் நீங்கிற்று என்றலும் காண்க.

திருவடிப்பேறு கிடைத்தமையால் பிறவி நீங்கிப் பேரின்பம் கிடைக்க இருப்பதை அறிவித்தலின் இப்பாடல் அணைந்தோர் தன்மை அறிவித்ததாயிற்று.

இப்பதிகத்தான் இறைவன் வேடனுகவும், வலைஞனுகவும், குதிரைவீரனுகவும், குருநாதனுகவும் எழுந்தருளி, பெருந்துறை உத்தரகோசமங்கை தில்லை முதலான தலங்களிலும் இருந்து என்வினை அறுத்து, பிறவி போக்கி, பேரின்பம் அளித்தான்; அவனைப் புகழ்ந்து பேசு என நெஞ்சிற்கறிவுறுத்துவார்போல் பரிபாகிகட்கு முத்திநெறியினை விளக்கியருளுகின்ருர்கள்.

# 49. திருப்படையாட்சி

[சீவோபாதி ஒழிதல்]

ஆனந்த நடராசப் பெருமானுடைய காட்சியிலே ஆழ்ந்து பரவசப்பட்டுநின்ற வாதவூரடிகள், இறைவன் வெளிப்பட்டுவந்து எனக்கு அருள்செய்வாரானால் என்னுடைய செயல்கள் யாவும் சிவச்செயல்களாகச் சிவானந்த மயமாகவே விளங்கும் என்று விண்ணப்பிக்கின்றார்கள்.

உலகியலிற் படையென்பது தேரும் குதிரையும் யானையும் காலாளுமாம். அந்நால்வகைப் படைகளையும் தலைவன் ஆளுந் திறமே படையாட்சியாம். அதுபோல, சிவசேனைபதிக்குரிய படைகள் தொண்டர்களும், பத்தர்களும், யோகியரும், சித்தர்களுமாவர். இதனைத் திருப்படையெழுச்சியில் அடிகளே அறிவித்துள்ளார்கள். அவர்களைச் சிவபெருமான் ஆளுந்திறம் கூறுவது திருப்படையாட்சியாம்.

திருவாசக உள்ளக்கிடை என்னும் பழைய குறிப்பு, சீவோபாதி ஒழிதல்; என்பது கிரியாசூனியம் என்று விளக்கந்தருகிறது.

"கருப்படை மாறும் திருப்படை யாட்சிப், பரசிவ உபாதிப் பாவகம் ஒழிதல்" என்பது அகத்தியச்சூத்திரம்.

முன் பண்டாய நான்மறையுள், சும்மா இருப்பதான சிவானந்த வொழிவிலொடுக்கமாகி, அனைந்தோர் தன்மைகள் யாவும் சரியா கிரியா யோக உண்மைத்தன்மையாகும் என்றலும், குருபரனுக்கு அடிமைபூண்டு அவன் திருவுளப்பணியேசெய்து அவன்பான்மையாய் நிற்றலுமாம் என்பது பழையவுரை.

"வாகுதிருப் பெருந்துறையார் எழுந்தருளப்பெறில் எல்லா வளங்கள்முற்றும், ஆகுமெமக்கல்லாதது ஆகாதென்று இயம்பல் படையாட்சியாகும்" என்பது பழைய திருப்பெருந்துறைப்புராணம். இறைவன் எதிர்ப்பட்டு என்னுள்ளே புகுமாயின், எந்தவிதமான சீவோபாதிகளும் என்னை அணுகா என்பதை அறிவிப்பது இப் பதிகம் எனலாம்.

'ஞானானந்த வஸ்துவாகிய சிவத்தைத் தரிசித்தவர்கள் தூய ஞான நாட்டம் பெற்றவர்களாதலின் அவர்களுக்கு வேறு விவகாரங்கள் நிகழலாகாது என்பது கருத்தாம்' என்பர் சிவ அருணகிரி முதலியார்.

வேத சிவாகமங்கள் விதித்தவழி ஒழுகுதலும் விலக்கியவழி ஒழுகாமையும் நல்வினை என்றும், விதிவழி ஒழுகாமையும் விலக்கிய வழி ஒழுகுதலும் தீவினை என்றும், எம்போன்ற சகலான்மாக்களுக் குக் கூறப்படும் விதி விலக்குகள், சிவத்தைச்சார்ந்து சிவமான அணைந்தோர்க்கு எல்லாம் நல்வினையாகவே கருதப்படுதலை இப் பகுதி விளக்குகிறது.

புராணத்தின்படி திருப்பெருந்துறையார் எழுந்தருளப்பெறின் எல்லா வளங்களும் முற்றுகும்; அல்லாதன ஆகா என்பதை அறி விப்பது எனல் பெறப்படும். இப்பதிகம் எட்டு ஆசிரியவிருத்தங் களால் அமைந்தது.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

633 கண்க ளிரண்டும் அவன்கழல் கண்டு
களிப்பன ஆகாதே
காரிகை யார்கடம் வாழ்விலென் வாழ்வு
கடைப்படு மாகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு
மறந்திடு மாகாதே
மாலறி யாமலர்ப் பாதம் இரண்டும்
வணங்குது மாகாதே
பண்களி கூர்தரு பாடலொ டாடல்
பயின்றிடு மாகாதே
பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள்
பாடுது மாகாதே
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து
வெளிப்படு மாகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து
வெளிப்படு மாயிடிலே. 1

இ - ள் : கெளிற்றுமீனைப் பிடிப்பதற்காக வலை வீசிய வேடனாகிய சிவன் கருணை கூர்ந்து என்முன் வந்து வெளிப் படுவாராயின், என் கண்கள் இரண்டும் அவன் திருவடியைக் கண்டு களிப்பன ஆகாதே? பெண்களின் வாழ்விலே என் வாழ்வு கீழ்ப்படுதல் ஆகாதே? மீண்டும் வினைவயத்தால் பூமி யில்வந்து பிறக்கும்வண்ணம் அவன் கழல்கள் மறந்திடும் ஆகாதே? திருமாலாலும் அறியப்பெறாத தாமரைமலரைப் போன்ற அவன் பாதங்கள் இரண்டையும் வணங்குவதும்

ஆகாதே? மகிழ்ச்சி மிகும் பண்ணோடு கூடிய பாடலும் ஆடலும் பழகுதல் ஆகாதே? தென்பாண்டி நாட்டையுடைய பரசிவனது படையாட்சிகளைப் பாடுவதும் ஆகாதே? விண்ணுளோரும் மகிழ்ச்சி மிகத்தக்க மாற்றங்கள் வந்து வெளிப்படுதலும் ஆகாதே? எல்லாம் ஆகும் என்றவாறு.

இறைவன் வெளிப்பட்டுக் காட்சி வழங்குவனாயின், உலகத்தாரால் தீயன நல்லன என்று வேறுபடுத்தோதப்பெறும் அனைத்தும் நல்லனவாகவே ஆகும் என்பது கருத்து. இப்பொருளில் ஆகாதே என்பனவற்றில் உள்ள ஏகாரம் அனைத்தும் எதிர்மறைப்பொருளில் வந்தனவாதல்வேண்டும். டாக்டர் ஜீ. யூ. போப்பையர் அவர்களும் எதிர்மறையேகாரமாகக் கொண்டே மொழிபெயர்த்தனர்.

சீவோபாதியொழிந்த நிலையில் விதி விலக்குகள் இல்லையாதலின் எல்லாம் ஆகும் என்பதாம்.

"ஞாலமதில் ஞானநிட்டை யுடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லை
சீலமிலை தவமில்லை விரதமொடாச் சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமல மில்லை
கோலமிலை புலனில்லை கரண மில்லை
குண மில்லை குறியில்லை குலமு மில்லை
பாலருடன் உன்மத்தர் பசாசர்குண மருவிப்
பாடலினொ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்"

என்பன முதலிய திருவிருத்தங்களால், சீவோபாதியொழிந்த ஞானநிட்டையுடையோர் செயல் ஒருதன்மைத்தாதல் உணர்த்தப்பெறுதல் காண்க. அங்ஙனமே ஈண்டும், கழல்கண்டு களித்தலும், காரிகையார்வாழ்விற் கடைப்படுதலும், பாதம் வணங்குதலும், பாதமறந்து பிறவிக்கட்படுதலும், பாடுதலும், ஆடுதலும் எல்லாம் ஒன்றுனமையுணர்த்தப்பெற்றது என்பதாம்.

இங்ஙனம் அன்றி, ஆகாதே என்பனவற்றுட் சில விதிப் பொருளிலும், சில மறைப்பொருளிலும் வந்தனவாகக்கொண்டு நல்வினையைச் சார்ந்துவருவனவற்றை விதிப்பொருளவாகவும் தீவினையைச் சார்ந்துவந்தன மறைப்பொருளவாகவும் பொருளுரைப்பர் சிலர். இப்பொருளில்:

கண்கள் அவன் கழல்கண்டு களிப்பன ஆகாதே? (ஆகும்) காரிகையார் வாழ்வில் என் வாழ்வு கடைப்படும் ஆகாதே? (ஆகாது), பிறவியெய்தும் வகையில் கழல் மறந்திடும் அது

ஆகாதே? (ஆகாது). பாடலும் ஆடலும் பயிலுதல் ஆகாதே? (ஆகும்), படையாட்சிகள் பாடுதல் ஆகாதே? (ஆகும்) என உரைப்பர். ஞான நிட்டையிலும் இத்தகைய வேறுபாடு விரும்பத் தக்கதாயின் சாத்திரமரபாயின் இவ்வுரை பொருந்தும்.

விண்களிகூர்வதோர் வேதகம்வந்து வெளிப்படுமாகாதே - பூதாகாசவுடலை ஞானகாசமாக இன்புறும் வேதகத்து இரும்பு பொன்னாகச்செய்யும், மீன் வலை வீசிய கானவன் வந்து வெளிப்படும் ஆயிடில் - பரதவேடராய்ச் சீவரத்தினச் சோதி யான அருட்பாசவலையால் அடியேன் வினை வீய குருமுதலான வன் என் அறிவில் அருளாய் அநுபூதிகமாகில், கண்களிரண் டும் அவன்கழல்கண்டு களிப்பன ஆகாதே - அடியேன் கண் கள் அவன்திருவடி தரிசித்தவுடன் களிப்புறும், என் வாழ்வு - அடியேன்வாழ்வெல்லாம், காரிகையார்கள்தம் வாழ்வில் கடைப் படும் ஆகாதே - மாதர்முலைத்தலைக்கே இடைக்கே கருமமாகு மவையே அன்பாலுறுவேன், மறந்தும் மண்களில்வந்து பிறந் திடுமாறும் ஆகாதே - மறந்தாலும் இனி இங்கு வாரேன், மால் அறியா மலர்ப்பாதமிரண்டும் வணங்கிடுமாகாதே - திருமாலறி யாத்திருவடியே கைதொழுவேன், பண்களிகூர்தரு பாடலொடு ஆடல் பயின்றிடும் ஆகாதே - திருவடியைத் தரிசித்தவுடன் கும்பிட்டுத் தட்டமிட்டுப் பண்ணிசைவால் பாண்டியனூர் அடி யநுபூதியும் அதுவேயாய்ப் போவேன் என்பது பழையவுரை.

உரையின் நடை ஒருவாறிருப்பினும், மாதர்வாழ்விற்கடைப் படுதல் போன்ற தீயன ஆகா எனவும், கழல் வணங்குதலைப் போன்ற நல்லன ஆமெனவும் பொருள் கொள்ளப்பெற்றிருத் தல் காண்க. மேலும், அவ்வுரைகாட்டும் "ஆரூரானை மறக்கலும் ஆமே" என்றதில் ஆமென்கிளவி அன்றெனவும் அன்றென் கிளவி ஆம் எனவும் காணத்தக்கது என்னும் மேற்கோள் விளக்கக்குறிப்பும் அவ்வுரையை அரண்செய்யும்.

சிவன்கழல் அழகிற்கு உறைவிடமாய் வைத்தகண் வாங்கா மலே பார்க்கும் தன்மையதாகலின் என்கண்கள் அவற்றையே கண்டுகளிப்பன ஆகாதே என்றார். இது உயர்ந்த நிலை.

காரிகை - அழகு. காரிகையார் - அழகியராகிய பெண்கள். பெண்கள் தம் அழகாகிய வலையை வீசிக் காமுகரைப் பிடித்து அவர் செய்யும் அறப்பணிகளை ஒழித்துத் தம் பணியே செய்ய வைத்து வாழ்வைக் கீழ்ப்படுத்துவராதலின் இங்ஙனம் கூறினார். இது இழிநிலை.

திருவடிப்பற்றை மறந்தால் வினை ஏறும், வினை ஏறப் பிறவி உண்டாம் ஆதலால் 'மண்களில் வந்து பிறந்திடுமாறு மறந்திடும் ஆகாதே' என்றார். இது இழிநிலை. பிறந்திடும் ஆறு மறந்திடும் ஆகாதே எனப் பிரித்துப் பிறக்கும் நெறி மறக்காதே என்பாரும் உளர். இப்பொருளில் உயர்நிலை. மலர்ப்பதம் வணங்குதும் ஆகாதே; இது உயர்நிலை. வணங்குது - உம்; வணங்குவதும் என்பதன் மரூஉ. பயின்றிடும் என்பது பயின்றிடுதலும் என்றதில் தொழிற்பெயர் விகுதிகெட்டு முதனிலைத் தொழிற்பெயராய் உம்மை ஏற்று வந்தது.

வேதகம் - மாற்றம். சீவத்தன்மைகெட்டுச் சிவபோதமிக்குத் தோன்றல். சித்திகள் என்பாரும் உளர்.

இத்திருப்பாடல் திருவடிக் காட்சியும், வாழ்வு தாழ்தலும், பிறப்பும், கழல்வழிபாடும், பாடலாடலும், படையாட்சிகள் பாடுதலும் எல்லாம் சமமாம் சிவதரிசனம் கிடைத்தால் என்பதால் சீவோபாதி ஒழிதலான தலைவன் படையை ஆளுகின்றதிறம் உணர்த்துகின்றது.

634 ஒன்றினொ டொன்றுமோர் ஐந்தினொ டைந்தும்
உயிர்ப்பது மாகாதே
உன்னடி யாரடி யாரடி யோமென
உய்ந்தன வாகாதே
கன்றை நினைந்தெழு தாயென வந்த
கணக்கது வாகாதே
காரண மாகும் அநாதி குணங்கள்
கருத்துறு மாகாதே
நன்றிது தீதென வந்த நடுக்கம்
நடந்தன வாகாதே
நாமுமெ லாமடி யாருட னேசெல
நண்ணுது மாகாதே
என்றுமெ னன்பு நிறைந்த பராவமு
தெய்துவ தாகாதே
ஏறுடை யானெனை யாளுடை நாயகன்
என்னுள் புகுந்திடிலே. 2

இ - ள் : இடபவாகனத்தை உடையவனும் என்னை ஆளாகவுடைய தலைவனுமாகிய சிவபெருமான், என்னுள்ளே புகுவானாயின், உயிரோடு உடம்பும், பொறிகளோடு புலன்களும் கலந்து உயிர்க்குந்தன்மை அறும் ஆகாதே? யாம் உன் அடியார்க்கடியார்க்கு அடியோம் என்று உய்ந்த தன்மைகள்

உள்வார்காதே? தனது கன்றை எண்ணி எழுந்து ஓடிவந்த தாய்ப்பசுவை ஒத்தத்ன்மை ஆகாதே? அநாதிநித்யமான மல குணங்களே பிறவிக்குக் காரணமாம் என்பது நின் கருத்தில் தோன்றுவதும் ஆகாதே? அதனால் இது நல்லது, இது தீயது என வந்த நடுக்கங்கள் கழிந்தனவாகாதே? நாம் எல்லோரும், அடியார்களுடன் வீட்டுலகினை அடைய ஒருமைப்படுவதும் ஆகாதே? என் அன்புநிறைந்த வணங்கத்தக்க அமுது வலிய என்னை வந்து அடைவதும் ஆகாதே? என்றவாறு.

சிவன் என்னுட்புகுவானாயின் உயிர்ப்பறும், அடியார்க்கு அடியார்க்கு அடியராவோம், கன்றை உள்ளிவந்த தாய்ப்பசுவைக்கண்ட தன்மையை யாம் அடைவோம், எங்கள் பிறவிக்குக் காரணம் எங்களைப் பற்றியுள்ள மலமே என்பது நின் உளத்திற்றோன்றும், அதனால் நாங்கள் நல்லது செய்யினும் தீயது செய்யினும் நடுக்கமிலராவோம், அடியார்கள் கூட்டத்தோடு நின்னை நணுகும் பேறு பெறுவோம், என்றும் அன்பு மேவி இன்புடன் வாழ்வோம் என்றார் என்பது கருத்து.

ஒன்றினொடு ஒன்று - உயிரோடு உடல். உயிரும் அவை கொள்ளும் உடலும் பலவாயினும் அவை ஒருங்கு இயைந்து தோன்றுங்காலத்து ஒன்றோடொன்றே இயைதலின் இங்ஙனம் கூறப்பட்டது. ஒன்று - எண்ணுகு பெயராக உயிரை உணர்த்திற்று. அங்ஙனமே உடலையும் என்க. சித்து அசித்து என்னும் பழையவுரை. சித்து - உயிர். அசித்து - உடல்.

ஐந்து - ஐம்பொறிகள். அடுத்து வரும் ஐந்து - ஐம்புலன்கள். கன்மேந்திரியங்களும் ஞானேந்திரியங்களும் என்பாரும் உளர். பழையவுரை ஒன்றினொடு ஒன்றும் ஓரைந்தினொடு ஒன்றினொடு ஒன்றும் ஐந்தும் உயிர்ப்பறும் எனக்கூட்டி முப்பத்தாறு தத்துவங்களும் செயலறும் என்கின்றது. ஒன்றும் - பொருந்தும். ஒன்றினொடு ஒன்றும் ஐந்து - ஆறு, ஆறோடு ஆறு - முப்பத்தாறு என்பது அவர்கண்ட பொருள். உயிர்ப்பு - தோற்றம்.

இறைவற்கடிமையாதலினும் அடியார்க்கடியனாதல் ஆயிரம் மடங்குச் சிறந்தது. அடியார் அடியார்க்கடியனாதல் அதைவிடச் சிறந்ததாதலின் இங்ஙனம் கூறினார். திருநாவுக்கரசுசுவாமிகள் இறைவற்கு அடிமையாகி உயர்ந்தார்; அப்பூதியடிகள் அடியவர்க்கு அடியராகி உயர்ந்தமை காண்க.

கன்று பசுவை நினைத்துக்கொண்டு ஓடுதலும், பசு கன்றை எண்ணிவிரைதலும் என இருதகையன. கன்று பசுவை நினைத்து ஓடும்போது அதற்குள்ள பசியும் விருப்பும் வெளிப்படுகின்றன.

கன்று விரைந்து மடியைமுட்டக் கறவை ஓரளவு பால்சுரக்கும். அது கன்றின் வயிற்றுக்குப் போதுமானதாக இல்லாமலும் இருக்கலாம். அதுபோல ஆன்மா ஞானதாகம் எடுத்துப் பிறவி வெப்பந்தணிய இறைவனை எண்ணி ஓடுமாயின், ஆன்மாவின் மல கன்மங்கள் தடைசெய்யப் போதிய பலன் கிடைக்காமலும் போகலாம். தாய்ப்பசு பால் சுரந்து மடியையுறுத்தக் கன்றை உள்ளி வருமாயின் கன்று பெறும்பயன் மிகுந்தது. அதுபோல இறைவன் அருள் சுரந்து ஆன்மாவைத் தேடி வருவானாயின் ஆன்மா அடையும் பயனுக்கு அளவு உண்டோ? இந்நயத்தை எம்மனங்கொண்டுய்ய, 'கன்றை நினைந்தெழு தாயென வந்த கணக்கது ஆகாது' என்றருளினார்.

காரணம் ஆதிகாரணமும், அநாதிகாரணமும் என இருவகை. நாம் பிறவியைச்சார்தற்கு அநாதியான காரணம் அநாதியே நம்மைச்சார்ந்துள்ள ஆணவமலம். ஆதிகாரணம் நாம் செய்த வினைகளும், அவற்றிற்கு மூலமான மூல கன்மமுமாம். அவை உயிரைச்சார்ந்து அறியாமையும், மோகமாதிகளுமாகிய குணங்களாக வெளிப்படும். அவற்றை இறைவன் திருவுளத்து ஏற்று, புண்ணியபாவங்களைச்செய்தல் உயிரின் இயற்கையன்று வினைமலச் சார்பால் வந்தகுணங்களால் விளைந்த மாற்றம் என அவற்றைத் தீர்க்கத் திருவருள் புரிவர் என்பதை உட்கொண்டு 'காரணமாகும் அநாதி குணங்கள் கருத்துறுமாகாதே' என்றார். அடிகள் தம் கருத்துறுமாகாதே என்றார் என உரைப்பாரும் உளர்.

இறைவன் அங்ஙனம் கருதியதால் நாம்செய்யும் புண்ணிய பாவங்களான் என்ன நலம் தீங்கு விளையுமோ என்றிருந்த எங்கட்கு நடுக்கம் தொலைந்தது என்பார் 'நன்றிது தீது என வந்த நடுக்கம் நடந்தன ஆகாதே' என்றார்.

இங்ஙனம், ஆன்ம குணம் இறைவன் கருத்துட்பட்டு, அவனருளால் திருத்தமுற, நலந்தீங்குகளில் நடுக்கம் தொலைய நாங்கள் சுத்தான்மாக்களாகி அடியாரோடு வீடடையும் தகுதி பெற்றோம் என்பார் 'நாம் எல்லாமும் அடியாருடனே செல நண்ணுதும் ஆகாதே' என்றார். நாமும் எலாம் என்பதில் உம்மை பிரித்துக்கூட்டுக. நண்ணுவதும் என்பது நண்ணுதும் என்றாயிற்று. தன்மைப் பன்மையாகக் கூறின் நண்ணுவேம் ஆகேமே என முடிதல்வேண்டும். அங்ஙனம் சொல்லமைதியின் மையின் இங்ஙனம் கொள்க.

என் அன்பு நிறைந்த பராவமுது என்றும் எய்துவது ஆகாதே எனமாறிக்கூட்டுக. பராவமுது - பராவத்தக்க அமுது.

அடியேன் செய்யும் அன்பால் என்னுள் நிறைந்து ததும்பும் பராவமுது என்க. நுகர்ச்சிக் காலத்து இறைவன் அமுதாக இனித்தலின் அவனை அமுது என்றார்.

என்னுள் விரைந்து வந்துபுக வாய்ப்பும் உண்டு என்று குறிப்பிப்பார் 'ஏறுடையான்' என்றும், என்னை ஆளுடையான் ஆதலின் அவன் விருப்பம்போல் என்றும் என்னுட்புக உரிமை யுண்டென்பார் 'எனையாளுடைய நாயகன்' என்றும் கூறினார்.

பிறவியறுதலும், இறை அருள்சுரத்தலும், நடுக்கம் நீங்கலும் முதலான சீவோபாதி ஒழிதல் படையாட்சித்திறத்தால் விளைவதை இத்திருப்பாடல் உணர்த்துதல் காண்க.

635 பந்த விகார குணங்கள் பறிந்து
மறிந்திடு மாகாதே
பாவனை யாயக ருத்தினில் வந்த
பராவமு தாகாதே
அந்தமி லாத அகண்டமும் நம்முள்
அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுடர்
அண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிட ரானவை
சிந்திடு மாகாதே
சேலன கண்க ளவன்றிரு மேனி
திளைப்பன வாகாதே
இந்திர ஞால இடர்ப்பிற வித்துயர்
ஏகுவ தாகாதே
என்னுடை நாயக னாகிய ஈசன்
எதிர்ப்படு மாயிடிலே. 3

இ - ள்: என்னுடைய ஆன்மநாயகனாகிய ஈசன் எழுந்தருளப்பெறின் பிறவித் தளைக்குக் காரணமான மாறுபட்ட குணங்கள் வேர்பறிந்து தலைகீழாக வீழ்ந்துவிடுவதுமாகாதே? அவனையே பாவனைசெய்யும் உள்ளத்தில் அநுபவம் ஊறுகின்ற பராவத்தக்க அமுதாக ஆகாதே? எல்லையற்ற அண்டங்களும் நம்முள் அடங்குவதும் ஆகாதே? எல்லாவற்றிற்கும் ஆதிமுதலான மேலான ஒளி எம்மை அணுகுவது ஆகாதே? பவழம்போலும் சிவந்த வாயினையுடைய பெண்களால் விளையும் துன்பங்கள் சிதறிப்போவன ஆகாதே? சேல்மீன்களை ஒத்த எம் கண்கள் அவனுடைய திருமேனியழகில் ஈடுபட்டுத்

திளைப்பன ஆகாதே? இந்திரஜாலம் போன்றதும் துன்பங்களைத்தருவதுமாகிய பிறவித்துயர்தழிவது ஆகாதே? எல்லாம் ஆம் என்றவாறு.

ஈசன் எழுந்தருளினால், பிறவிக்குக் காரணமான ஆணவமாதியால் விளையும் குணங்களாறும்; எல்லா அண்டங்களையும் எம்முட்காணத்தக்க வியாபகஞானம் விளையும்; இறைவன் எம் கருத்துள் அமுதாக இனிப்பன்; அனைத்திற்கும் முதலான பரஞ்சுடர் எம்மை வலியவந்தணுகும்; காரிகையார் காதல் அழியும்; எங்கண்கள் அவன் அழகையே நுகரும்; இந்திரஜாலம்போலத் தோன்றி மறையும்; பிறவித்துன்பம் கெடும்; எல்லாம் எமக்குச் சம்மதம், என்பது கருத்து.

பறிந்து மறிந்திடும் - வேர்பறிந்து தலைகீழாகவிழும் என்பதாம். பறிந்து என்ற வினையால்-பந்தவிகாரகுணங்கள் மரமாக உருவகிக்கப்பெற்றமை உணர்க. பந்த விகார குணங்கள் - ஆணவமலச் சேர்க்கையால், ஆன்ம வியாபகத்தைத் தடுத்துச் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையனவாக விகாரப்படுத்தும் அறியாமை முதலான குணங்கள்.

பாவனை - தியானம். தியானிக்கின்ற மனத்தில் தியானிக்கப் படுகின்ற பொருள், பூவில் தேன்சுரத்தல் போல அமுதாக இனித்துத்தோன்றுதலைப் 'பாவனையாய் கருத்தினில்வந்த பராவமுது' என்பதாற் குறிப்பித்தார்.

அந்தம் - இறுதி; வரையறை. எத்தனையோ கோடிக்கணக்கான உலகங்கள் நம் அறிவினளவாக நம்முள் காணப்படும் என்பார் 'அந்தமிலர்த அகண்டமும் நம்முள் அகப்படும்' என்றார். இதனை,

"சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் தோன்றத்
தூரியனும் சிவன்தோன்றும் தானும் தோன்றும்
தொல்லுலக மெல்லாம்தன் னுள்ளே தோன்றும்
நேரியனுய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும்
நின்றநிலை யெல்லாமுன் நிகழ்ந்து தோன்றும்"

என்ற சிவஞானசித்தித்திருவிருத்தத்தான் உணர்க.

ஒளியனைத்திற்கும் மூலமாயும், பரமாயும் விளங்குவது பரஞ்சுடர்; அதனையணுகும் ஆற்றல் ஈசன் வெளிப்படுமாயின்

விளையும் என்றதாம். இதனையும் முற்காட்டிய சித்தித்திருவிருத் தத்தின் முதலடியிற் காண்க.

மகளிரின் வாய்ச்சிவப்பும், இதழ்த்துடிப்பும், இளமையுமே இடர் மிகுவிப்பவை என்பது தோன்றச் 'செந்துவர்வாய் மடவார் இடர்' என்றார். சிந்திடுதல் - சிதறியழிதல்.

நாயகன்மேனியைத் திளைத்தலால் தம்கண்களைச் சேலன கண் என்றார். சேல்மீனை மாதர்கண்ணுக்கு ஒப்பிடுவதே இலக் கிய மரபு. தன்னையும் பெண்ணாகக் கருதிக்கூறியதென்க. திரு மேனி என்ற பொருட்பெயர் ஆகுபெயராக அதன் பண்பாகிய அழகை உணர்த்தியது.

பிறவித்துயர் இன்பம்போலத்தோன்றித் துன்பம்மிகுவித்த லானும் தோன்றி மறைதலான பொய்ம்மையானும் இந்திர ஞாலமாக்க் கூறப்பட்டது.

இத்திருப்பாடல், குணங்களறுதல், மடவாரிடர் அகலுதல், சிவனழகு காண்டல், இறைவன் அமுதாயினித்தல் முதலிய சீவோபாதி அறுதலும், சிவகுணம் பெறுதலும் அறிவித்தலின் படையாட்சி ஆதல் அறிக.

636 என்னணி யார்முலை ஆகம் அளைந்துடன்
இன்புறு மாகாதே
எல்லையின் மாக்கரு ணைக்கட லின்றினி
தாடுது மாகாதே
நன்மணி நாதம் முழங்கியென் உள்ளுற
நண்ணுவ தாகாதே
நாதன் அணித்திரு நீற்றினை நித்தலும்
நண்ணுவ தாகாதே
மன்னிய அன்பரில் என்பணி முந்துற
வைகுவ தாகாதே
மாமறை யும்மறி யாமலர்ப் பாதம்
வணங்குது மாகாதே
இன்னியல் செங்கழு நீர்மலர் என்றலை
எய்துவ தாகாதே
என்னையு டைப்பெரு மானருள் ஈசன்
எழுந்தரு ளப்பெறிலே. 4

இ - ள் : என்னை ஆளாகவுடைய பெருமானாகிய திரு வருளை உடைமையாகவுடைய ஈசன் எழுந்தருளப்பெறின்,

எனது அணிகலங்கள் பொருந்திய முலை அவன் மார்போடு கலந்து உடனே இன்புறும் ஆகாதே? எல்லையில்லாத பெரிய கருணைக்கடலிலே இன்று இனிதாகத் திளைத்தலும் ஆகாதே? நல்ல மணியின் நாதமானது முழங்கி என் மனத்துள்ளே நன்றாக அடைதலும் ஆகாதே? தலைவனாகிய சிவபெருமானுக்கு அணியாகிய திருநீற்றினை நாடோறும் அடைவதும் ஆகாதே? நிலைபெற்ற அன்பரில் அடியேனுடைய தொண்டு முதன்மையாகப் பொருந்துவதும் ஆகாதே? பெரிய வேதங்களுமறியாத திருவடித் தாமரைகளை வணங்குதலுமாகாதே? இனிய இயல்பினையுடைய செங்கழுநீர்ப்பூ என்தலையின்மீது பொருந்துவதும் ஆகாதே? எல்லாம் ஆம் என்றவாறு.

ஈசன் எழுந்தருளப்பெறின், என் முலை அவன் மார்பில் தோயப்பெறுதலும், அவன் கருணைக்கடலில் நான் ஆடப்பெறுதலும், என் சிந்தையுள் மணிநாதம் முழங்கப்பெறுதலும், நான் நாடோறும் திருநீற்றினை அணியப்பெறுதலும், அன்பர் எல்லாருடைய பணிகளைக்காட்டிலும் என் பணி முதன்மையாக மதிக்கப்பெறுதலும், வேதங்களும் அறியாத திருவடித்தாமரைகளை நான் வணங்கப்பெறுதலும் ஆகாதே? எல்லாம் எளிதிலாம் என்றவாறு.

மாதர் மார்பில் அணி பல அணிவது இயற்கையாயினும் அணிகள் நிறைந்திருந்த முலை என இறந்தகாலப் பெயரெச்சமாக விரியும் வினைத்தொகையாக அணியார் முலை என்றது அவன் ஆகந்தோய்ந்து அளைந்து இன்புறுதற்காக அணிகளை இப்போது களைந்தமையும், முன்னர் நிரம்ப அணிந்திருந்தமையும் தோன்றற்கென்க.

முலை ஆகம் அளைந்து என ஆகத்தையளைதல் முலையின் தொழிலாகக்கூறியது தன் காதன்மைதோன்ற என்க: அளைந்து-பலகாலும் தோய்ந்து என ஆராமை உணர நின்றது. ஆகம் அளைதலும், இன்புறுதலும் உடனிகழ் வினைகள் ஆதலின் 'அளைந்து உடன் இன்புறுமாகாதே' என்றார்.

இறைவன் கருணை எல்லையற்றது, பெரியதென்பார் 'எல்லையின் மாக்கருணைக்கடல்' என்றார். இறைவனையே கடலாக உருவகித்ததாகக் கூறுவர்; அஃது ஈண்டு இயையாமைகாண்க.

சிவயோக நிட்டையிலிருக்கும் சிவஞானியர்க்கு மணிஓசை என்றும் ஒலித்துக்கொண்டேயிருக்கும் என்பதால் 'நன்மணி நாதம் என் உள்ளுற முழங்கி நண்ணுவதாகாதே' என்றார். சேரமான்பெருமாள் சிவபூசை செய்துமுடித்தவுடன் சிலம்பின்

ஓசை கேட்பது வழக்கம் என்ற பெரியபுராண வரலாறும் இவ் வநுபூதியை விளக்குவது. மேலும், 'சொல்லிய லாதெழு தூ மணியோசை சுவைதருமாகாதே' எனவும். 'வீணைமுரன்றெழும் ஓசையிலின்பம் மிகுத்திடு மாகாதே' எனவும், 'சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பன வாகாதே' எனவும் வருவன யாவும் சிவயோகத்திருப்பவர்க்கு சங்கொலி, வீணையொலி, மணியொலி, கடலொலி, பரநாத ஒலியாகிய பிரணவ ஒலி கேட்கப்பெறும் என்னும் யோகநூற்றுணிபும் எண்ணுதற்கு உரியது. இதன் விரிவைச் சிவநெறிப் பிரகாசத்தில் காண்க. இவ்வோசைகள் செவிப்பொறி வழியாகக் கேட்கப்பெறுவன அல்ல; சிந்தையில் நிறைவன ஆதலின் 'என் உள்ளூற நண்ணுவ தாகாதே' என்றார். இம்மரபு அறியாதார் சிலர் நல்ல மணி நாதம் செவிவழியாக முழங்கி என் உள்ளத்துள்ளே பொருந்துதலும் என உரை காண்பர்.

நாதன் அணித்திருநீறு - நாதனுக்கு அணியான திருநீறு; நாதனது அழகிய நீறு எனலுமாம். அணித்திருநீறு என்பது வினைத்தொகையன்மை உணர்க.

மன்னிய அன்பர் - நிலைபெற்ற அன்பர். உறைத்த திருத்தொண்டர் என்றதாம். அன்பரில் என்பணி என்றாராயினும் அன்பர் பணியில் என்பணி என விரித்துக்கொள்க.

கலந்தின்புறுதலும், கருணைக்கடலிற்றிளைத்தலும், மணி நாதம் உணர்தலும், திருநீறு அணிதலும், பணிமுந்துற இருத்தலும், பாதம் வணங்குதலுமாகிய சிவப்பணியும் சிவயோகமும் தெரிவிக்கப்பெறுதலின் இப்பாடல் சீவோபாதியை அடக்குதலாகிய திருப்படையாட்சியாதல் காண்க.

637 மண்ணினின் மாயை மதித்து வகுத்த
மயக்கறு மாகாதே
வானவ ரும்மறி யாமலர்ப் பாதம்
வணங்குது மாகாதே
கண்ணிலி காலம் அனைத்தினும் வந்த
கலக்கறு மாகாதே
காதல்செ யும்மடி யார்மனம் இன்று
களித்திடு மாகாதே
பெண்ணலி யாணென நாமென வந்த
பிணக்கறு மாகாதே
பேரறி யாத அனேக பவங்கள்
பிழைத்தன வாகாதே

எண்ணில் யாகிய சித்திகள் வந்தெனை
எய்துவ தாகாதே
என்னையு டைப்பெரு மானருள் ஈசன்
எழுந்தரு ளப்பெறிலே. 5

இ - ள்: என்னை ஆளாகவுடைய பெருமானாகிய திருவருளைப் பிரியாத ஈசன் எழுந்தருளப்பெறின், இம்மண்ணுலகத்து மாயையில், கருதி வகுக்கப்பட்ட மயக்கம் நீங்குதலும், தேவர்களாலும் அறியப்பெறாத திருவடித்தாமரைகளை வணங்குதலும், அறிவற்றவனைப் பலகாலத்தும் சேர்த்த கலக்கம் நீங்குதலும், காதல்புரியும் அடியார்கள்மனம் இன்று களிப்பு எய்துதலும், பெண் ஆண் அலி என்ற பாற்பிணக்கும் நாம் என்ற ஆணவகாரியமான அகங்காரப் பிணக்கும் அறுதலும், பெயரும் அறியப்படாத பல பிறவிகள் தவறிப்போயின ஆதலும், எண்ணற்ற சித்திகள் என்னை வந்து அடைவதாதலும் ஆகாதே என்றவாறு.

திருவருளைப் பிரியாத ஈசன் என்முன் எழுந்தருளப்பெறின், மாயையால் வந்த மயக்கமறுதலும், திருவடி வணங்குதலும், எல்லையற்றகாலம் இயற்றிய கலக்கமறுதலும், அடியார் மனம் களித்தலும், பாற்பிணக்கு அகங்காரப்பிணக்கு இவையறுதலும், பெயரும் அறியப்படாத பல பிறவிகளிற்செய்த தவறுகள் நீங்குதலும், அட்டமா சித்திகளை அடைதலும் ஆகாதோ? எல்லாம் ஆம் என்பது கருத்து.

மண் - கன்மத்திற்குரியதான பூமி. இதில், மாயை மதித்து வகுத்த மயக்கு - மாயையைக்கொண்டு எண்ணி வகுக்கப்பட்ட பொருள்கள் விளைத்த மயக்கம். அஃதாவது மாயையின் காரியமான தனு கரண புவன போகங்களாகிய நிலையாதவற்றை நிலையின என்றுணரும் மயக்கம். அஃது அறுதலாவது அவை நிலையற்றவை என்றுணர்ந்து அவற்றின் நீங்க விரும்புதல்.

மாயேயங்கள் நிலையற்றவை என்றுணர்ந்தபோது நிலையான பேறு எது? அதனை அடையும் உபாயம் எது? என்ற முயற்சி பிறக்கும். அப்போது ஆசாரியன் உணர்த்த இறைவன் திருவடியை வணங்குதல் ஒன்றே உபாயம், திருவடியடைதலே நிலைத்தபயன் என்ற உணர்வு தோன்றும்; ஆதலின், 'பாதம் வணங்குதும் ஆகாதே' என்றார்.

அப்பாதங்கள் மலர்போல மென்மையும் நிறமும் மணமும் உடையன, வானவர்களுக்கும் அறியப்படாதன என அதன் அருமைகூறினார் என்க.

கண் இலி காலம் - எண்ணுதலில்லாத காலம். அளவற்ற காலம். கண்ணுதல் - எண்ணுதல். நமக்குக் கலக்கம் எப்போது விளைந்தது என்று வரையறுத்துச் சொல்லுதற்கு இயலாது. அங்ஙனம் தொன்றுதொட்ட கலக்கமும் இறைவன் எழுந்தருளப் பெற்றால் அறும் என்பதாம்.

மயக்கமும் கலக்கமும் அற்று வணங்கியபோது விளைவது இறைவனிடத்து இடையீடில்லாத காதலும் அதனாற் பெறுங் களிப்புமே ஆதலின் 'காதல் செயும் அடியார் மனம் இன்று களித்திடுமாகாதே' என்றார்.

இவ்வுலகத்துத் திணைப்பாகுபாடு காரணமாக விளைந்த பெண், அலி, ஆண், நாம் என்ற பகுப்புக்கள் தொலைந்து, ஆண்டவன் முன்பு நாமனைவரும் சமம்; நாம் அடிமை என்ற உணர்வு தோன்றும் என்பார் 'பெண் அலி ஆணென நாம் என வந்த பிணக்கு அறும் ஆகாதே' என்றார். என இடைச் சொல்லை ஒவ்வொன்றோடும் ஒட்டுக. பெண் அலி முதலான பிணக்கு, பால்காரணமாக வந்தது. நாம் என்றது அகங்காரங் காரணமாக வந்த பிணக்கு. இருவகைப் பிணக்கும் அறும் என்றதாம்.

பிறவிகளின் வகைகளைப் 'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகி' என முன்னர் அறிவித்த அடிகள் ஈண்டுப் 'பேரறியாத அனேக பவங்கள்' என்றது, பலகோடி பிறவி எடுத்தோம் என்பதை மறந்தோம் என்ற அளவிற் கூறினார்களாம். அப்பிறவிகளிலிருந்து தப்பி உய்ந்ததைப் 'பவங்கள் பிழைத்தன ஆகாதே' என்றார்.

எண்ணிலியாகிய சித்திகள் - அளவற்ற சித்திகள். அவை அணிமா முதலான எட்டுவகை யென்று கூறப்படினும் ஒவ்வொன்றிலும் எத்தனையோ வகைகள் உளவாதலின் இங்ஙனம் கூறப்பெற்றது.

சித்திகள் முத்திக்கு வாயிலாகிய ஞானத்தை எய்துதற்குத் தடையாவன. அவை வந்து எய்துவன ஆகாதே ஈசன் எழுந்தருளப்பெறின் என்கின்றார்.

இங்ஙனம், மயக்கமும் கலக்கமுமாகிய சீவோபாதி அற்று, பாதம் வணங்கிப் பிணக்கற்று, சித்தி எய்தாது முத்திபெறுதலை விளக்குதலின் இத்திருப்பாடல், தடை நீக்கி இன்பவுலகைப் பாதுகாக்கும் படையாட்சியாதல் காண்க.

638. பொன்னிய லுந்திரு மேனிவெண் ணீறு
பொலிந்திடு மாகாதே
பூமழை மாதவர் கைகள் குவிந்து
பொழிந்திடு மாகாதே
மின்னியல் நுண்ணிடை யார்கள் கருத்து
வெளிப்படு மாகாதே
வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம்
மிகுத்திடு மாகாதே
தன்னடி யாரடி என்றலை மீது
தழைப்பன வாகாதே
தானடி யோமுட னேயுய வந்து
தலைப்படு மாகாதே
இன்னியம் எங்கும் நிறைந்தினி தாக
இயம்பிடு மாகாதே
என்னையு முளுடை யீசனென் அத்தன்
எழுந்தரு ளப்பெறிலே. 6

இ - ள்: அடியேனை அநாதியே ஆளாகவுடைய ஈசனாகிய என் தந்தை எழுந்தருளப்பெறின், அவனது பொன்போன்ற திருமேனியில் வெண்மையான திருநீறு விளங்கித்தோன்றும் ஆகாதே? பெரிய தவத்தைச்செய்யும் முனிவர்களின் கைகள் குவிந்து பூமழையைப் பொழிந்திடும் ஆகாதே? மின்போலும் நுணுகிய இடையுடைய மாதர்கள் எண்ணம் வஞ்சமானது என்பது வெளிப்படுமாகாதே? வீணையிலிருந்து ஒலித்தெழுகின்ற நாதத்தில் இன்பமிகத்தோன்றும் ஆகாதே? தன்னுடைய அடியார்களின் திருவடி என்சிரத்தின்மீது தழைத்து விளங்குவன ஆகாதே? நாம் எல்லேமும் உய்ந்துபோகத் திருவுளங்கொண்டு சிவமாகிய தான் அடியோமுடனே வந்து கூடும் அது ஆகாதே? என்றவாறு.

அநாதியே அடிமையாக்கொண்ட ஈசன் எழுந்தருளப் பெறின் பொன்போன்ற திருமேனியில் வெண்ணீறுபொலிந்து தோன்றும்; முனிவர்கள் பூமாரி பொழிவர்; தம்மைக் காட்டிலும் இன்பம் வேறெங்குமில்லை என்று மயக்கிய மாதர் எண்ணம் வெளிப்படும்; வீணையின் நாதம்போல இன்பம் தோன்றும்; அடியார்திருவடி என்தலைமீது மலரும்; இறைவன் அடியேங்களோடு வந்துகூடுவன்; எங்கும் இனிய வாச்சிய ஒலி நிறைந்து விளங்கும்; இத்தனை இன்ப நிகழ்ச்சிகளும் விளையும் என்பது கருத்து.

இறைவன் தரிசனம் அருளிய முதல் நிலையிலே அவனுடைய திருமேனியின் நிறமும், அதிலே பூசப்பெற்ற வெண்ணீறும் விளங்கித் தோன்றுவதால் எனது மாயாபாசங்கள் அற்றன; அடியேன் கண்டகாட்சி உண்மையென்றறிந்து ஈடேற முனிவர்களும் பூமாரி பொழிந்து இறைவன் வந்தமையை அறிவுறுத்தினர் என்பார் 'திருமேனி வெண்ணீறு பொலிந்திடுமாகாதே, மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடு மாகாதே' என்றனர். கைகள் குவிதல் - புஷ்பாஞ்சலிசெய்தல்.

இங்ஙனம் இறைவன் திருமேனியைக் கண்டதும், மயக்கம் தெளிந்தது என்பார் 'நுண்ணிடையார்கள் கருத்து வெளிப்படுமாகாதே' என்றார். மாதர்கள் தோன்றிமறையும் மின்னலை ஒத்த இடையைக்காட்டியே மயக்கினர்; அம்மயக்கம் ஒழிந்தது என்பார் அவர்களை 'மின்னியல் நுண்ணிடையார்கள்' என்றார்.

இறைவனைக்கண்டபோது உண்டான இன்பம், வீணையிலிருந்து நாதம் எழும்போது உண்டான இன்பத்தை ஒத்திருந்தது என்றதாம். அன்றி வீணையின் நாதம் விளைந்தது என்பாருமுளர்.

மாதராசை தீர்ந்து, நாத தரிசனமும் நாதன் தரிசனமும் பெற்றமையின் அடியார்கள் இவன் பரிபாகமுடையானென்று கருதி என்தலையின்மேல் திருவடி சூட்டினர். அத்தகைய பேறு எனக்குக் கிடைத்ததென வியப்பார் 'தன்னடியாரடி யென்றலை மீது தழைப்பன ஆகாதே' என்றார். அடியார்கள் திருவடி சூட்டியவுடன், இறைவனே அடியேங்களோடு வந்து கூடினன், அப்போது எங்கும் இன்னியம் முழங்கின என்பது அடுத்து உணர்த்தப்பெறுகின்றது.

திருமேனிக்காட்சிமுதல் தலைப்பெய்தலும் இன்னியமுழக்கம் வரை படிமுறையாக நிகழ்தல் உணர்த்தப்பெறுதலின் இத்திருப்பாடல் சீவோபாதி ஒழிந்து சிவந்தலைப்படுதலை உணர்த்தும் திருப்படையாட்சியினதாயிற்று.

639 சொல்லிய லாதெழு தூமணி யோசை
சுவைதரு மாகாதே
துண்ணென என்னுளம் மன்னிய சோதி
தொடர்ந்தெழு மாகாதே
பல்லியல் பாய பரப்பற வந்த
பராபர மாகாதே
பண்டறி யாத பரானுப வங்கள்
பரந்தெழு மாகாதே

*வில்லியல் நன்னுத லார்மயல் இன்று*
*விளைந்திடு மாகாதே*
*விண்ணவ ரும்மறி யாத விழுப்பொருள்*
*இப்பொரு ளாகாதே*
*எல்லையி லாதன எண்குண மானவை*
*எய்திடு மாகாதே*
*இந்துசி கரமணி யெங்களை யாள*
*எழுந்தரு ளப்பெறிலே.* 7

இ - ள்: சந்திரனை முடிமணியாகக்கொண்ட இறைவன் எங்களை ஆட்கொள்ளும் திருவுள்ளக்குறிப்புடன் எழுந்தருளப்பெற்றால், உரையளவையின் இயல்பைக்கடந்து எழுகின்ற சுத்த பரநாதமாகிய மணியோசை இன்பச்சுவையைத் தருவது ஆகாதே? யான் துணுக்கமுற என்னுள்ளத்தில் நிலைபெற்றுள்ள சோதியானது இடையறாது தொடர்ந்தெழும் ஆகாதே? பலவேறு இயல்புகளாக விளைந்த பரபரப்பு நீங்க என்னுள்ளத்து எழுந்தருளிய பராபரம் என்றும் இருப்பது ஆகாதே? முன்பு ஒருக்காலும் அடியேன் அறியாத மேலான சிவானுபவங்கள் எங்கும் பரந்தெழுதல் ஆகாதே? வில்லையொத்த நல்ல நெற்றியையுடைய பெண்கள் மயக்கம் இன்று விளைந்திடுதலாகாதே? தேவர்களாலும் அறியப்படாத பெருமையையுடைய பொருள் யான் காண்கின்ற இப்பொருள் ஆகாதே? இப்பொருளின் வரம்பற்றனவாகிய எண்குணங்கள் அடியேற்கும் எய்துவது ஆகாதே? என்றவாறு.

இந்து சிகாமணி எங்களை ஆள எழுந்தருளினால், சுத்த நாதமணியோசை இன்பந்தரும்; என் மனத்து ஓரொருகால் தோன்றும் சோதி தொடர்ந்து கற்பூரதீபம்போல ஒளிவிட்டு எரிந்துகொண்டேயிருக்கும்; மாயையின் சேர்க்கையால் வந்த பரபரப்பு அற, பராபரமாகிய பொருள் தோன்றும்; இதுவரை அனுபவித்து அறியாத பரானுபவங்கள் நிகழும்; மாதர்மயல் அகலும்; தேவர்கோவறியாத தேவதேவன் இப்பொருள் என்ற உறுதி தோன்றும்; அவனுடைய எண்குணங்கள் எம்மாட்டும் விளையும்; இத்தனை நன்மைகள் விளையும் என்பது கருத்து.

பூதகாரியமாகிய மணியோசை கணகண என ஒலித்தது, கணீர் என்று ஒலித்தது என அனுகரணச் சொல்லாற் சொல்லிக்காட்டக் கூடியதாக இருக்கும். சிவதரிசனத்தால் விளையும் தூய மணியோசை அநுபவத்தால் அன்றிச் சொல்லியல்பாற் சொல்லிக்காட்ட இயலாததாய் எழுவது. அந்த ஓசையைச் சுவையாக மனனுணர்வால் அறியலாமேயன்றிச் செவிவழியாக

உணரமுடியாதது என்ற நாததரிசன இலக்கணம் முழுதும் தோன்றச் 'சொல்லியலாதெழு தூமணியோசை சுவைதரும் ஆகாதே' என்றருளினர். இத்தகைய நாததரிசனத்தைக் கண்டவர்கள் பதஞ்சலி முனிவரும், சேரமான் பெருமாளும் ஆவர் என்க.

புறச்சார்புகளைவிட்டுச் சிவானுபவம் மிக்கசமயத்து ஒரொரு கால் என்னுள்ளத்துத் துணுக்கெனத் தோன்றி நிலைபெற்ற சோதிதரிசனம், நாததரிசனத்தின் பின் ஏற்றிய தீபம் போல எரிந்துகொண்டே இருந்தது என்ற அநுபவம் 'என் உளம் துண்ணென மன்னியசோதி தொடர்ந்தெழும் ஆகாதே' என்பதாற் குறிக்கப்பெறுகின்றது.

தாயே தந்தையென்றும், தாரமே மனை மக்கள் என்றும் பலவேறு பொருள்களின் இயல்பினால் ஆகிய பரபரப்பு என் மனத்தை அமைதியில்லாமற் செய்து வந்தது; அஃதற என் மனத்துப் பராபரம் தோன்றியது என்பது 'பல்லியல்பு ஆய பர்ப்பு அற வந்த பராபரம் ஆகாதே' என்றதால் விளக்கப் பெற்றது.

இதுவரை, யான்கண்டது சீவோபாதியாகிற சிறு அனுபவங்களே. கண்ட அனுபவம் கண்மூடியதும் தொலைந்தது. உண்ட அனுபவம் ஏழரை நாழிகையிற்றொலைந்தது. உற்ற அனுபவம் ஒருகணத்திற்றொலைந்தது. இங்ஙனம் யான்கண்ட அனுபவம் மிகச் சிறிய அனுபவம். இப்போது யான் காணும் அனுபவம் கண்டதுமுதல்பெருகி வளருந்தன்மைத்தாய பெரிய அனுபவம் என்பார் 'பண்டறியாத பரானுபவங்கள்' என்றார். அத்தகைய அனுபவங்கள் சகலநிலையில் யான் கண்ட அனுபவங்கள் போல் ஒவ்வொரு காலத்தில் தோன்றி மறையாது, எங்கும் என்றும் பரந்தெழுகின்றன என்பார் 'பரந்தெழும் ஆகாதே' என்றார்.

'புயற்காற்று வீசும்போது பஞ்சுக்கு என்ன நிலை' என்பது போல இத்தனை பெரிய சிவானுபவக் காலத்து இளமையும் மடமையும் பற்றி விளைவதாகிய மாதரார்மயலுக்கு இடமேது? இல்லை என்பார் 'வில்லியல் நன்னுதலார் மயல் இன்று விளைந்திடுமாகாதே' என்றார்.

தாம் காணுகின்ற சிவமெனும் பொருள், தேவர்களும் அறியாத பெருமையினையுடைய பொருள் என வியப்புறுவார் 'விண்ணவரும் அறியாத விழுப்பொருள் இப்பொருளாகாதே' என்றார். 'இப்பொருள்' என்ற அண்மைச் சுட்டு எதிர் எழுந்தருளப்பெற்றமையை உணர்த்திநின்றது.

இறைவனுக்குரியனவாகிய எண்குணங்களும் சிவனாகிய என்னையும் வந்து பொருந்தும் நிலையை விரும்புவார் 'எண் குணமானவை எய்திடுமாகாதே' என்றார். எண்குணங்கள் தொகை வகை விரியான் பலவாதலின் 'எல்லையிலாதன' எனப் பெற்றது.

இங்ஙனம் இத்திருப்பாடல் சிவதரிசனத்தால் சிவானுபவம் பெறுதலை உணர்த்துதலின் திருப்படையாட்சியினதாயிற்று.

640 சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை
தழைப்பன வாகாதே
சாதிவி டாத குணங்கள் நம்மோடு
சலித்திடு மாகாதே
அங்கிது நன்றிது நன்றெனும் மாயை
அடங்கிடு மாகாதே
ஆசையெ லாம்அடி யாரடி யோமெனும்
அத்தனை யாகாதே
செங்கய லொண்கண்ம டந்தையர் சிந்தை
திளைப்பன வாகாதே
சீரடி யார்கள் சிவானுப வங்கள்
தெரிந்திடு மாகாதே
எங்கு நிறைந்தமு தூறுப ரஞ்சுடர்
எய்துவ தாகாதே
ஈறறி யாமறை யோனெனை யாள
எழுந்தரு ளப்பெறிலே. 8

திருச்சிற்றம்பலம்

இ - ள்: முடிவறியப்படாத மறையோன் என்னை ஆட்கொள்ள எழுந்தருளப்பெற்றால், சங்குகள்கூடி ஒலிப்பதால் எழும் ஓசை மிகுவன ஆகாதே? சாதிப்பற்றுக் காரணமாக நம்மை விடாத குணங்கள் நம்மோடு நழுவிவிடும் ஆகாதே? அங்கு இது நல்லது இது நல்லது என்னும் மாயை வலிகுன்றி விடும் ஆகாதே? எமக்குள்ள விருப்பமெல்லாம் அடியார்க்கு அடியோம் என்று கூறப்படும் அவ்வளவே ஆகாதே? சிவந்த கயல்மீன்போலும் கண்களையுடைய பெண்களது மனம் திளைப்புறுவன ஆகாதே? சிறந்த அடியார்களின் சிவானுபவங்கள் எனக்கும் விளங்குதல் ஆகாதே? அமுதம்போலே எங்கும் நிறைந்து சுரக்கின்ற மேலான சுடர் அடியேனை எய்துவது ஆகாதே? என்றவாறு.

முடிவற்ற அந்தணனாகிய இறைவன், என்னை ஆள்வதற் கென்றே எழுந்தருளப்பெறின் என்றதால் திருவருள்வசத்தால் அத்தகைய பரிபாகமுற்றேன் என்பதனை விண்ணப்பித்ததாம்.

இறைவன் எழுந்தருளின் சங்கொலித்தல் மரபாதலின் 'சங் கோசை தழைப்பன ஆகாதே' என்றார். யோகமரபுபற்றிப் பல சங்குகள் திரண்டு ஒலிக்கும் ஓசை மிகுந்துணரப்படுமன்றே எனலுமாம்.

சாதிகள் குணம் கன்மம் இவற்றின் வேறுபாட்டிற்கேற் கவே அமைந்தன ஆதலின் சாதியைப்பற்றிநிற்பன குணங்கள் என்றதாம். குணங்கள் நம்மோடு சலித்திடும் என்றது இது வரை உடற்பற்றும் அதுபற்றிய சாதிப்பற்றும் இருந்தமையின் குணங்களும் விடாது பற்றி நின்றன; சிவதரிசனம் பெற்று எங்கும் சிவமே காண்டலாகிய சமதரிசனம் வந்தமையால் இனி நாம் இங்கிருக்கலாகாது என்று நம்மோடு சலித்துக்கொண்டு நழுவின என்பதைச் 'சாதிவிடாத குணங்கள் நம்மோடு சலித் திடும் ஆகாதே' என்றார். சலித்தலாவது பலநாட்பழகியதால் வெறுப்புக்கண்டு விலகல்.

குணங்கள் சலித்தபோது இது நல்லது இது நல்லது என்று பொருள் போகங்களைத் துய்க்கும் மயக்கமும் நீங்கும் ஆதலால் 'அங்கு இது நன்று இது நன்று எனும் மாயை அடங்கிடுமாகாதே' என்றார்.

இந்நிலையில் விளையும் விருப்பம் 'அடியார்க்கு அடியோம்' என்பதொன்றுமேயாதலின் 'ஆசையெலாம் அடியாரடியோம் என்னும் அத்தனை' என்றார்.

அடியார்க்கு அடியாராம் பேறு பெற்றமையின் ஆணவ வலி குன்றுதலின் அறியாமை காரணமாக எழும் காமமாதிகள் விளையா ஆதலின், மடந்தையர் சிந்தை திளைக்க இருத்தலும் இல்லை என்றார். எல்லாம் சிவச்செயலாகக் காணும் நிலையில் 'மாசதனில் தூய்மையினின் வறுமை வாழ்வின் வருத்தத்தின் திருத்தத்தின் மைதுனத்தின் சினத்தின், ஆசையினின் வெறுப் பினிவை யல்லாதும் எல்லாம் அடைந்தாலும் ஞானிகள்தாம் அரனடியை அகலார்' ஆகலானும், அவர்கள் அரிவையரோடு அனுபவித்தங்திருந்திடினும் அகப்பற்றற்றிருப்பர் ஆகலானும் மடந்தையர்களிடம் தம் சிந்தை திளைப்பன ஆகாதே என்று கூறினர் எனினும் இழுக்கில்லை. முன்னர் வந்தவற்றிற்கும் இக் கருத்தான் அமைதி காண்க.

சிவதரிசனம் பெறுவதற்கு முன்பு புறச்சார்புபற்றி வாழ்ந்த காலத்துச் சிவானுபவச் செய்தியோர் செயல்களின் சிறப்புத் தெரியாமலிருந்தது அதனால் நகைக்கவும்செய்தேன்; இப்போது தான் அவர்களுடைய சிவானுபவங்கள் தெரிந்திட்டன என்று அறிதோறும் அறியாமை கண்டாற்போலப் பண்டைய நிலை குறித்த வருத்தமும், இன்றையபேறுகுறித்த மகிழ்வுந்தோன்றச் 'சீரடியார்கள் சிவானுபவங்கள் தெரிந்திடுமாகாதே' என்றார்.

எங்கும் நீக்கமின்றி நிறைதல் ஒளியின் குணமாதலின் 'எங்கும் நிறைந்தசுடர்' என்றும், எல்லாச்சுடருக்கும் சுடராதலின் 'பரஞ்சுடர்' என்றும், ஏனைய சுடர்கள்போல வெப்பமும் நீரும் ஊறாமல் அமுதமே ஊறுதலின் 'அமுதூறு பரஞ்சுடர்' என்றும் அருளியமை காண்க.

இவ்வண்ணம் இறைவன் எழுந்தருளியதால் உடலைப் பற்றியசாதியும் அதன்குணங்களும் ஒழிந்து அடியார்க்கடியேன் என்னும் சிவானுபவம் சேரப்பெற்றுச் சிவச்சோதி அமுதூற நிற்றலை அனுபவிப்பதே திருப்படையாட்சியாதலை இத்திருப் பாடல் உணர்த்துகிறது.

இவ்வெட்டுப்பாடல்களானும், இறைவன் மீன்வலை வீசிய கானவனாகவும், என்னையுடைய பெருமானாகவும், இந்து சிகாமணியாகவும் உருத்தாங்கி எழுந்தருளிவரப்பெற்று என்னுட் புகப்பெற்றால் விளையும் அனுபவங்களாகப் பிறவி அறுதலும், கண்களிப்பக்காண்டலும், பரநாத ஒலிகேட்டலும், பிறவிக்குக் காரணமான அநாதிகுணங்கள் அறப்பெறுதலும், நீறணிதலும், பிணக்கறுதலும், அடியார் அடி தலைமேலன ஆதலும், இன்பமய அமுதாக இறைவன் இனித்தலும் உணர்த்தப்பெறுகின்றன; ஆகவே சிவாநுபவமிக்குச் சீவோபாதியடங்கிய நிலை அறிவிக்கப்பெற்றதாம்.

# 50. ஆனந்தமாலை

[சிவாநுபவ விருப்பம்]

திருவாதவூரடிகள் தில்லையிலே எழுந்தருளியிருந்த காலத்து, ஆநந்த நடராசப்பெருமான் திருவருள் சீவோ பாதி நீக்கிச் சிவாநுபவ விருப்பத்தை விளைவிக்க ஆனந்த மாலையாக இதனை அருளிச்செய்தார்கள்.

சிவானந்தம் பெறுதலை நோக்கமாகக்கொண்டு, அது காலந் தாழ்த்தலால் இரங்கி இறைவன்முன் சாத்திய பாமாலையாதலின் இப்பதிகம் ஆனந்தமாலை எனப் பெயர்பெற்றது. மாலை - வரிசை. ஆனந்தம் இடையறுது மாலைபோலத் தொடர்புற விளைதலை வேண்டுதலின் இப்பெயர்த்தாயிற்று எனலுமாம்.

முற்பதிகத்து இறைவன் உயிர்கட்கு வினைப்பயன் சாராமே தொண்டர் பத்தர் சித்தர் சேனைகளை நடத்தும் அனுபவங்களை அறிவித்து, இடையூறின்மையால் இப்பதிகத்து அவனுற்பெறும் ஆனந்தத்தை விரும்பி விண்ணப்பிக்கின்றார்கள் ஆதலின் பதிக இயைபுங்காண்க.

திருவாசக உட்கிடையென்னும் பழைய குறிப்பு, சிவாநுபவ விருப்பம்; என்பது, சிவானந்த மேலீட்டால் கிரியாசத்தி அழிவு உரைத்தல் என்கின்றது. 'மின்னேரனைய ஆனந்த மாலை - மன்னுச் செயல் வழக்கழிவு' என்பது அகத்தியச்சூத்திரம்.

முற்பதிக அநுபூதியிலே தன்னுயிர்க்குறும் அநுபூதி தானாய் விளங்கி அணைந்தோர் தன்மைக்கு அநுபவம் குரு லிங்க சங்கமம் பொருளெனக்கொண்டு, அதுவே இன்ப அன்பென்ற அடிமையாகச் சர்வசங்க நிவிர்த்தியாகிய சுத்தாவத்தையில் தற்சிவம் வெளிப்பட, இப்பதிகத்து இவன்தானென அன்பால் அருள்பெறுவதே வீடு என்பது பழையவுரை.

"மோகமிகும் அடியரொடும் கூட விரும்பியது ஆனந்தமாலை" என்பது பழையபுராணம்.

ஆகவே ஆனந்தமாலையாவது, சிவாநுபவமாகிய ஆனந்தத் தைப்பெற, சீவனுடைய செயல் முதலியன அற்று அன்பால் அருள்பெற அடியாரொடுகூட விரும்பியது என்பதாம். இது ஏழு பாடல்களையுடையது.

## ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

641 மின்னே ரனைய பூங்கழல்கள்
அடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னே ரனைய மலர்கொண்டு
போற்றா நின்றார் அமரரெல்லாம்
கன்னே ரனைய மனக்கடையாய்க்
கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த
என்னே ரனையேன் இனியுன்னைக்
கூடும் வண்ணம் இயம்பாயே. 1

இ - ள்: மின்னலையொத்த பொலிவினையுடைய நின் திருவடிகளைச்சார்ந்த அடியார்கள் அகன்ற இவ்வுலகத்தைக் கடந்தார்கள்; தேவர்கள் அனைவரும், பொன்னையொத்த மலர்களைக்கொண்டு வழிபட்டனர்; கல்லையொத்த மனத்தை யுடைமையாற் கடையேனாய்க் கழிக்கப்பெற்று, துன்பக்கடலுள் வீழ்ந்து வருந்துகின்ற எனக்கு ஒத்த என்னை இனியேனும் உன்னைச் சார்ந்து உய்யும்வண்ணம் அருள்செய்வாயாக என்றவாறு.

அடியார்கள் பிறவியறுதலால் மண்ணுலகவாழ்வைக் கடந்தார்கள்; தேவர்கள் பொன்மலர்கொண்டு போற்றுகின்றார்கள்; கல்லையொத்துக் கசியாமனத்துக் கடைப்பட்ட யான், உன்னால் ஒதுக்கப்பெற்றுத் துன்பக்கடலுள் வீழ்ந்து வருந்துகின்றேன்; இனியேனும் உன்னடியைச்சார்ந்துய்ய அருள்வழங்கு என்பது கருத்து.

மின்னல் ஒளிமிகுதி ஒன்றே நோக்கி உவமிக்கப்பட்டது என்க. தோன்றி மறையுந்தன்மையால் அன்றென்க. பற்றற்றான் பற்றினைப் பற்றுதல் அப்பற்றுவிடற்கு ஏதுவாம் என்ற உண்மையை வற்புறுத்த "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு" எனக் காரணகாரியமுறைப்படி வள்ளுவர் ஓதியதுபோல, அடிகளாரும் 'கழல்கள் அடைந்தார் வியனுலகம் கடந்தார்' என்றார்.

தேவர்களர்ச்சிப்பது கற்பகமலரைக்கொண்டாதலானும், அதனிறம் பொன்னாதலானும் 'பொன்னேரனைய மலர்கொண்டு' என்றார்.

பன்னெடுநாள் நீருட்கிடப்பினும் மெல்லென்றல் கல்லிற்கு அரிதாகும் ஆதலால், இறைவனே குருவாக எழுந்தருளிவந்து

திருவடியைச் சூட்டினும் கசியாத மனத்திற்கு அதனை உவமித்தார். கருணையே வடிவான இறைவன், எட்டுணைப் பரிபாகம் இருப்பினும் அதனைப் பெரிதாக எண்ணி அருள் வழங்கும் வள்ளல், யான் கசியாத மனத்தால் கடைப்பட்டேனுதலை எண்ணி அடியார்கூட்டத்தினின்று ஒதுக்கினன்; அதனால் யான் துன்பக்கடலுள் வீழ்ந்தேன்; அடியார்கள் அடியடைந்தார்கள், அமரர்கள் பதவியின்பம் பெற்றார்கள், யான்மட்டும் உய்திபெறும் உபாயங்கிடைத்தும் உபகாரி உளங்கனிந்திருந்தும் அத்தகைய வாய்ப்பை இழந்தேனுதலின் எனக்கு ஒப்பு யானே ஆனேன் என்பார் 'என் நேரனையேன்' என்றார்.

இங்கினி இவன் உதவான் என்று ஒதுக்கிவிடுதல் கூடாது; என் பிழையை யான் உணர்ந்தேன்; இனி உன்னைக் கூடும் வண்ணம் அருளுரை வழங்கவேண்டும் என்று பிரார்த்திக்கின்றார்; ஆதலின் இத்திருப்பாடல் சிவாநுபவ விருப்பத்தைத் தெரிவிக்கும் ஆனந்தமாலையினதாயிற்று என்க.

642 என்னு லறியாப் பதந்தந்தாய்
யான தறியா தேகெட்டேன்
உன்னு லொன்றுங் குறைவில்லை
உடையா யடிமைக் காரென்பேன்
பன்னு ளுன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடிய ரொடுங்கூடா
தென்னு யகமே பிற்பட்டிங்
கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே. 2

இ - ள் : என் தலைவா! என்னால் அறியப்படாத பதவியைத் தந்தாய்; யான் அதன் அருமையும் பெருமையும் அறியாது கெட்டேன்; உன்னால் ஒரு குறைவும் இல்லை; என்னை உடையவனே! பலநாட்களாக உன்னை வணங்கித் துதிக்கும் பழைய அடியார்களோடு சேராமல் பின்தங்கித் துன்பத்திற்கு விருந்தாக இங்கு இருந்தேன்; அடிமையாகிய எனக்கு வேறு யார் துணை என்று கேட்பேன் என்றவாறு.

என் நாயகமே! நீ பெரியபதவியைத்தந்தும் அதன்பெருமை அறியாது யான் கெட்டேன்; உன்னால் ஒரு குறைவும் இல்லை; பழவடியாரோடு கூடாது நோய்க்கு விருந்தாகிப் பின் தங்கினேன்; ஆயினும் அடிமையாகிய எனக்கு வேறு யார் துணை என்கின்றேன் என்பது கருத்து.

யான் ஆன்மகுணம் முற்றும் போகாதவன்; அத்தகைய எனக்குச் சிவாநுபவமாகிய பெரிய பதவியைத் தந்தாய்; அது

இதுவரை என்னாலறியப்படாத ஒன்று; அதனைத் தரிக்கமாட்டாது இழந்து கெட்டேன் என்கின்றார்.

அடிமையைக் காக்கவில்லை என்ற குறை உனக்கு இல்லை; நீ உரியகாலத்தே ஆண்டனை; வேண்டியவெல்லாம் தந்தனை என்பார் 'உன்னால் ஒன்றுங்குறைவில்லை' என்றார்.

உன்னைப் பலநாட்கள் பணிந்தும் ஏத்தியும் பண்பட்டவர்கள் பழைய அடியார்கள்; அவர்களோடு கூடின் என்மலவாதனையும் அற்று என்றும் தூயநிலையிற் பழகி அவர்களோடேயே பேரின்பத்தைப் பெற்றிருக்கலாம்; நான் அறியாமையால் பின் தங்கினேன்; அதனால் வினைகளின் விளைவாகிய துன்பத்திற்கு ஆளானேன் என்கின்றார்.

என் தவறுணர்ந்து இப்போது வருந்துகின்றேன்; உன் அடிமைக்கு வேறு யார் துணையாவார்? நடந்ததைத் திருவுளம் பற்றாது அடியார்கள் பெற்ற இன்பத்தை இன்று எனக்கு அருளவேண்டும் என்று வேண்டுதலின் இது சிவானுபவ விருப்பமாகிற ஆனந்தமாலையாயிற்று.

643 சீல மின்றி நோன்பின்றிச்
செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச்
சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி
வாரா வுலக நெறியேறக்
கோலங் காட்டி யாண்டானைக்
கொடியேன் என்றோ கூடுவதே. 3

இ - ள்: ஒழுக்கமும், விரதமும், தோய்வும், அறிவும் இல்லாமல், தோற்பாவை கூத்தாடுவதைப்போலத் துன்ப இன்பங்களிற் சுழன்று, அவற்றான்மயங்கி அறிவற்று விழுந்து கிடக்கின்ற என்னை என் மயக்கத்திற்கேற்ற காரணங்களையும் காட்டி, மயக்கத்தினின்று கரையேறுதற்குரிய உபாயங்களையும் காட்டி, மீண்டுவாரா உலகமாகிற முத்திக்குப்போகிற வழியிலே நான் முன்னேறிச்செல்லக் குருவடிவான கோலத்தையுங்காட்டி ஆண்ட என் தலைவனைக் கொடிய பிணிகளையுடைய யான் கூடுவது என்றோ என்றவாறு.

ஆசாரசீலம் இல்லாமல் தோற்பாவை கூத்தாடுவதுபோல ஆடி அறிவிழந்துகிடந்த என்னை, மயக்கத்திற்குக் காரணங்கள் இவை என்றுணர்த்தி, அம்மயக்கந்தெளிதற்குரிய வழிகளையும்

காட்டி முத்திநெறி அடையக் குருமேனி தாங்கிவந்து ஆண்ட தலைவனைக் கூடுவது என்றோ? என்பது கருத்து.

சீலம் - ஒழுக்கம். பொறியடக்குதல் முதலிய சிவநெறிக்கு உரிய ஒழுக்கங்கள். அவை இயம நியமாதிகள். நோன்பு - விரதங்கள். மனம் பொறிவழி போகாமைப்பொருட்டு மேற்கொள்ளப்பெறும் சோமவாரவிரதம், கார்த்திகைவிரதம் போல்வனவும், பொய்சொல்லாமை கொல்லாமை முதலிய விரதங்களுமாம்.

செறிவு - தோய்வு. அஃதாவது, திருவடிக்கண் மிகத் தோய்ந்த அன்பு. அடக்கம் என்பாரும் உளர். நெருக்கமான சிவஞானம் என்பது பழையவுரை.

அறிவு - திருவடிக்கண் தோய்வதற்கேற்ற ஞானம். சிவ ஞான அறிவு என்பது பழையவுரை. அடங்கி நடத்தற்குரிய அறிவு என்பர் சிலர்.

தோலின் பாவை கூத்தாட்டு - தோலால் செய்த பாவையின் கூத்தாட்டு. தோலால் பாவைசெய்து, அதன் அவயவங்கள் தோறும் கண்ணுக்குத் தெரிய மெல்லிய கருப்புநூற்கயிற்றைக் கட்டிக்கொண்டு நடிக்கச் செய்பவன் திரைக்குப் பின்னிருந்து நடிக்கப் பாவை தனக்கோர் உணர்ச்சியுமின்றிக் கூத்தாடும்; அதுபோல நானும் ஆடினேன்; பயன் காணேன்; சுழன்று மயங்கி விழுந்து கிடந்தேன்; அத்தகைய என்னை ஆண்டான் என்கின்றார்.

ஆண்டவகை யாதெனின், மாலும் காட்டி - மயக்கத்தைத் தெரிவித்து. உயர்ந்த பதவி கொடுத்தும் அதனை அறியாது கெட்டேனே என்று யான் கவன்றபோது, நதியின் பிழையன்று நறும்புனலின்மை, அதுபோன்று அறியாது கெட்டது உன் பிழையன்று; உன் வினையின் பிழை; வினைகளும் சடமாதலின் அவற்றின் பிழையுமன்று; அவற்றைக் கருவியாகக்கொண்டு இயக்கும் அறியாமையின் பிழை; அறியாமையும் தானாக மறைக்காது; அதன் தாய் ஆணவமலம்; அவள் ஏவ அறியாமை உன் அறிவை மயக்க நீ அறியாது இருந்தாய் என மயக்கத்தையும், அதன் காரணத்தையும், மயக்கினின்றுய்யும் உபாயத்தையும் காட்டினான் என்பார் 'மாலுங்காட்டி வழிகாட்டி' என்றார். வழி - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன.

வாரா உலகம் - வீட்டுலகம். ஏனைய உலகத்தில் போக்கும் வரவும் புணர்ப்புமாகிய மூன்று நிலைகள் உண்டு. வீட்டுலகத்தோ வரவும் புணர்ப்புமாகிய இரண்டேயுண்டு; மீள்வருதல்

இல்லை. "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாரா நெறி" என்ற குறளும் காண்க.

அவ்வுலகையடைதல் தன்னிலையில் உயர்தலாதலின் 'ஏற' என்றார். கோலம்-வடிவு; அழகுமாம். ஈண்டுக் கோலமென்றது குருவாக எழுந்தருளிய கோலத்தை. கொடியேன் கூடுவது என்றோ என விருப்பத்தை விண்ணப்பிக்கின்றார். கொடுமையுள்ளவரையில் இறைவனைக் கூடுதலாகாதே என்று இரங்குங் குறிப்பே தன்னைக் கொடியேனென்று கூறிக்கொண்டதென்க.

இங்ஙனம், ஆண்டவனைக் கூடுவதை எதிர்நோக்குதலால் இத்திருப்பாடல் ஆனந்தமாலையாதல் காண்க.

644 கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்
கேடி லாதாய் பழிகொண்டாய்
படுவேன் படுவ தெல்லாநான்
பட்டாற் பின்னைப் பயனென்னே
கொடுமா நரகத் தழுந்தாமே
காத்தாட் கொள்ளுங் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றோ எங்கள் நாயகமே. 4

இ-ள்: தனக்கு என்றும் கேடில்லாத தலைவா! கெடுந் தன்மையனாகிய யான், கெடக்கூடிய நியதியின் வண்ணமே கெடுகின்றேன்; அத்தகைய என்னை ஆளாக ஏற்று, கேடிலாயாகிய நீ வீணைப் பழியேற்றனை; துன்பப்படவேண்டிய யான் படவேண்டிய துன்பங்கள் அனைத்தையும் பட்டால், பிறகு உன்னலாம் பயன் என்னே? கொடிய பெரிய நரகத்துள் யான் அழுந்தி அழியாமல் என்னைக் கைகொடுத்துத் தூக்கி ஆட்கொள்ளும் குருமணியே! எங்கள் நாயகமே! இன்பத்துன்பம் நல்வினை தீவினை ஒன்றனையுஞ்சாராது நடுவு நிற்றற்குரிய நீ நடுவாய் நிற்கவில்லையாயின் அது உனக்கு நல்லதாமோ? சொல்லும் என்றவாறு.

தகுதியற்ற என்னை ஆட்கொண்டு வீணே பழியேற்றனை; படவேண்டிய யான் பட்டபிறகு உன்னால் ஆம் உதவி என்னை? நடுவு நிற்றற்குரிய நீ நடுவு நில்லாய் ஆயின் உன் தகுதிக்கு அது ஏற்றதில்லையே? என்பது கருத்து.

கெடுமாறு கெடுகின்றேனென்பது கெடுமா கெடுகின்றேன் என்றாயிற்று. கேடும் ஆக்கமும் பிறர்தர வாரா ஆதலான்

யான் பல பிறவிகளில் செய்த தீவினையாலும், என் அறியாமை யாலும் தேவரீர்வகுத்த நியதியின்வழியே நின்று கெடுகின்றே னென்றார். ஆகவே, கெடுவதிலும் எனக்குச் சுதந்திரமில்லை; ஆகவே, அதனால்வரும் பயனும் என்னைச் சார்ந்ததன்று என்று விண்ணப்பித்ததாம்.

என்னை ஆட்கொள்வதற்கு முன்புவரை உனக்கு ஒருபழியு மில்லை; என்னை ஆட்கொண்ட பிறகு தகுதியற்றவனை ஆட் கொண்டாரென்று வீணே பழிகொண்டீர் என்றதாம். அல்லது யான் கெடுமாறுள்ள நியதி தத்துவத்தின்வழிக் கெட்டேனே யன்றித் தற்போதத்தால் கெட்டேன் அல்லேன். அத்தகைய என்னைக் கைவிட்டமையால் இதுவரை கேடிலாதாயாகிய நீ பழி கொண்டாய் எனலுமாம். சுந்தரர்பெருமானும் "குற்றமொன் றும் செய்ததில்லை கொத்தையாக்கினீர் எற்றுக்கு என் கண் ணைக்கொண்டீர் நீரே பழிப்பட்டீர்" என்றல் காண்க.

ஆண்டான் கடமை அடிமை துன்பப்படும்போது காப்ப தாகவும், நான் படவேண்டிய துன்பமெல்லாம் படக்கண்டும் காக்க முன்வாராத நீர் பிறகு செய்யும் உதவிதான் என்னே என்பார் 'படுவேன் நான் படுவதெல்லாம் பட்டாற் பின்னைப் பயன் என்னே' என்றார்.

இதுவரை நீ காவாவிடினும் குற்றமில்லை. நான் இறந்து மிகக்கொடிய நரகத்து வீழ இருக்கின்றேன். நரகத்தில் வீழ்வது நான் செய்த தீவினைக்குத் தண்டனையாக வேண்டுமானாலும் இருக்கட்டும், நரகத்தில் வீழ்ந்தழுந்தாதவாறு காத்தல்மட்டு மாவது நும் கடமையாக-கருணையாயிருக்கவேண்டும் என வற்புறுத்துவார் உடம்பொடுபுணர்த்தலாகக் 'கொடுமாநரகத் தழுந்தாமே காத்தாட்கொள்ளும் குருமணியே' என்கின்றார்.

நடுவாய் நிற்றலாவது சமபுத்தி பண்ணுதல். அதாவது, வேண்டுதல் வேண்டாமை இல்லாதிருத்தல். நான் செய்த தீமைக்கு ஈடாக நரகத்திடைப் படுத்துவதும், சாராதிருப்பதும் நும் செயலாயின் நுமது வேண்டுதல் வேண்டாமையின்மை யாகிற நடுவாய் நிற்றல் எங்கே? இங்ஙனம் இருப்பது உமக்கு நன்றோ என்கின்றார்.

நரகத்திலழுந்தாமல் காத்து ஆட்கொள்ளவேண்டும் என வேண்டுதல்வாயிலாகச் சிவபோகத்தை விரும்புதலின் இந்தத் திருப்பாடல் ஆனந்தமாலையின்தாயிற்று.

645 தாயாய் முலையைத் தருவானே
    தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ
    நம்பி யினித்தான் நல்குதியே
தாயே யென்றுன் தாளடைந்தேன்
    தயா நீ யென்பால் இல்லையே
நாயேன் அடிமை யுடனாக
    ஆண்டாய் நான்றான் வேண்டாவோ. 5

இ - ள்: எல்லாவுயிர்கட்கும் தாயாய் முலை கொடுத்துப் பாலூட்டி வளர்ப்பவனே! எனக்கு மட்டும் நீ பால் தரா தொழிந்தால் நாயேன் சவலைக் குழந்தையாய் இறப்பேனோ? நம்பி! இனியாவது அருளைச்செய்; தாயே என்று உன் திருவடியை அடைந்தேன்; நினக்கு என்பாற் கருணையில்லையே! பழவடியார்கள் பலருடன் நாயேனையும் அடிமையாக ஆண்டனை; இன்று நான்மட்டும் உனக்கு வேண்டுவதில்லையோ? என்றவாறு.

இயங்குவ நிற்பவான அனைத்துயிர்களுக்கும் தாயாகிய தயாநிதியே! எனக்குமட்டும் நீ பால்கொடாதிருந்தால் நான் சவலைக்குழந்தையாய்ச் சாவேன்; விண்ணப்பித்துக்கொள்ளுகிறேன்; இனியாவது அருளை வழங்கு; அன்று அடியார் பலருள் ஒருவனாக என்னை ஆண்டனை; இன்று நான்மட்டும் உனக்கு வேண்டாம்போல் இருக்கிறது என்பது கருத்து.

சவலை - தாய் கருவுற்றதால் தாய்ப்பால் பெறாத கைக் குழந்தை. கருவுற்ற தாய் பாலின்மையால் பால் கொடாவிட்டாலும் வறுமுலையைச் சுவைக்கக்கொடுத்தாவது வளர்ப்பாளே நீ அதுவும் செய்திலை என்பார், தாயாய்ப் பாலைத் தருவானே என்னாது 'முலையைத் தருவானே தாராதொழிந்தாற்சவலையாய்க் கழிந்துபோவேனோ' என்கின்றார்.

வறுமுலையும் சுவைக்காத சவலைக்குழந்தை நாளுக்குநாள் உடல்மெலிந்து கழிந்துபோம்; அதுபோல நான் ஆவேனோ என்கின்றார். தாயாகிய நீ உன் கடமையிற்றவறினும் தாய் என்ற நன்றி என்றும் குன்றேன் என்பார் தன்னை 'நாயேன்' என்றார்.

நம்பி - குணபூரணன். தாய் வெறுத்து ஒறுத்துத்தள்ளினும் தாயின்காலைக் கட்டிக்கொண்டு அழும் குழவிபோல நான் தாயே என்று உன் தாள் அடைந்தேன் இனியாவது நல்குதி என்று வேண்டுகிறார்.

இங்ஙனம் வேண்டியும் இறைவன்பாற் கருணைத்தோற்றம் சிறிதும் விளையாமை கண்ட அடிகள் அடுத்துத் 'தயா நீ என்பால் இல்லையே' என வினவுகின்றார்.

அடிமையுடனாக நாயேனையும் ஆண்டாய் எனக் கூட்டி, அடிமைகள் பலருடன் நாயேனையும் ஆளாக ஏற்றனை எனப் பொருள் கொள்க. என்னுடன் ஆட்கொள்ளப்பட்ட அத்தனை பேருக்கும் அழிவிலாப் பேரின்பம் அளித்த நீ என்னை மட்டும் விட்டமையால் 'நான்றான் வேண்டாவோ' என்றார்.

இங்ஙனம் நல்குதியே என்றும், தயா இல்லையே என்றும் சிவாநுபவ விருப்பத்தை விண்ணப்பித்தலின் இத்திருப்பாடல் ஆனந்தமாலையினதாதல் காண்க.

646 கோவே யருள வேண்டாவோ
கொடியேன் கெடவே யமையுமே
ஆவா என்னு விடிலென்னை
அஞ்சேல் என்பார் ஆரோதான்
சாவா ரெல்லாம் என்னளவோ
தக்க வாறன் றென்னாரோ
தேவே தில்லை நடமாடி
திகைத்தேன் இனித்தான் தேற்றாயே. 6

இ - ள்: அரசே! அடியேற்கும் அருள்செய்யவேண்டுவ தில்லையோ? கொடியவனாகிய யான் கெட்டொழிய, நிற்குமது உன் தகுதிக்குப் பொருந்துமோ? ஆ! வா என்று என்னை அழையாவிடில் என்னை அஞ்சாதே என்று எனக்கு அபயம் தருவார் வேறு யார்? நீ செய்யும் தகுதியின்மை என்னளவில் மட்டுமோ நிற்கும்; என்னைப்போல நின்னாலருளப்பெறாமல் இறப்பாரத்தனைபேரும் 'இது தலைவற்குத் தக்கநெறியன்று' என்று இகழார்களோ? தேவே! தில்லைக்கண் திருநடனம் செய்பவனே! மயங்கினேன்; இனி என்னைத் தேற்றுவாயாக என்றவாறு.

அரசே! நீ என்னைக் காவாவிடில், எனக்கு அபயந்தருவார் வேறு யார்? என்னைப்போல நின்னால் அருளப்படாதார் பலரும் இது தலைமைக்குத் தக்கதன்று என்று உன்னை இகழ்வார்கள்; ஆதலால், என்னைத் தேற்றுவாயாக என்றவாறு. குடிகள் செய்த குற்றங்கண்டு தண்டித்தல் ஒன்றுதான் அரசின் கடமையன்று; குற்றம் திருத்தி அருள்செய்தலே அவர்கள் கடமையும் பெருமையுமாம்; அதனை நீ செய்திலை என்பார் 'கோவே அருளவேண்டாவோ' என்கின்றார்.

கொடியேன் கெட (நின்னருள்) அமையுமோ என ஒரு சொல் வருவித்து உரைக்க. கொடியேனாகிய யான் கெட்டு ஒழிய, நின்னருள் அமைவுடையதாகுமோ? என்று வினவுவதன் நோக்கம், கொடியனாயினும் திருத்திக் குணம் பல நல்கிக் கெடாமற் பாதுகாப்பதே தலைவராவார் செயல். அங்ஙனமாக நீ என்னைக் கெட்டொழியவிடின் (நின்னருள்) அமையுமோ என்றார் என்க. இங்ஙனமன்றி, கொடியேன் கெடவே தக்கதோ என்பாரும் உளர்.

ஆ! வா எனவும், ஆ! ஆ! எனவும் பிரிக்கலாம். ஆ: இரக்கக் குறிப்பு இடைச்சொல். அடிமை அஞ்சியகாலத்து அஞ்சாதே என்று அபயம் அளிப்பது ஆண்டான் கடமை. அவன் அது செய்யாவிடின் எனக்கு அபயம் அளிப்பவர் வேறு யார் என்கின்றார். உனக்கு அடிமையாகிய யான் வேறுயாரிடம் தஞ்சம் புகுவேன் என்பது கருதிச்சொல்லினருமாம். நீ எவ்வளவு ஒறுத்தாலும் ஒதுக்கினாலும் பிறரை வேண்டேன் என்றார் எனலுமாம். என்னளவோ இச்செயல்? ஏதோ இன்று என்னளவில் மட்டுமா ஒழிந்தது; பின்னும் பின்னும் இப்பழி தொடருமே என்பது கருத்து.

சாவார் - என்போல உன்னருளுக்கு உரியராகாது இறப்பவர்கள். நீ தெய்வமாகவும், உலகம் யாவும் காரியப்பட ஐந்தொழில்நடனம் செய்பவனாகவும் இருத்தலின் என்னால் ஒன்றும் மிகுதியாகச் சொல்லமுடியவில்லையே என்று திகைத்தேன். தலைவனாகிய நீ, அப்பா வா மயங்காதே அருள்பெற்று உய்க என்று தேற்றவேண்டும்; இதுவரை இல்லையாயினும் இனியாவது தேற்றாய் என்றார் என்க.

அருளவேண்டாவோ? தேற்றாயே எனச் சிவாநுபவ விருப்பம் தோன்ற வேண்டுதலின் இத்திருப்பாடல் ஆனந்த மாலையின் கருத்தினதாயிற்று.

647 நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞால மெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்ச தேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே அவிநாசி
யப்பா பாண்டி வெள்ளமே
தெரிய வரிய பரஞ்சோதீ
செய்வ தொன்றும் அறியேனே.

திருச்சிற்றம்பலம்

இ - ள் : நரிகளைக் குதிரைகளாக ஆக்கி விரைந்த செலவினையுடைய ஊர்தியாகச்செய்து இந்திரசாலம் அனைத்தும் நிகழ்த்திப் பெரிய பாண்டியமன்னனது மதுரைப்பட்டணம் எல்லாம் பித்தாக்கும் திருப்பெருந்துறையாய்! காணுதற்கும் அடைதற்கும் அரிய பொருளே! அவிநாசியப்பா! பாண்டி வெள்ளமே! யாவர்க்கும் ஆராய்ந்தறிதற்கு ஒண்ணாத பரஞ் சோதிப்பெருமானே! நான் செய்வதொன்றும் அறியேன் என்றவாறு.

பெருந்துறையாய்! அவிநாசியப்பா! பாண்டிவெள்ளமே! பரஞ்சோதீ! எனக்காக நீ செய்த திருவிளையாடல்களை எண்ணும்போது என்னை நான்றியா நிலை எய்திச் செய்வதொன்றும் அறியேன் என்கின்றார்.

குதிரைப் பரி: ஒரு பொருட்பன்மொழி என்பாரும் உளர். ஞாலம் - இந்திரஞாலம் என்பதன் பெயர்க்குறை: நாம ஏக தேசம். பெரிய தென்னன் - அரிமர்த்தன பாண்டியன். ஞாலம் எல்லாம் நிகழ்வித்து என்றது பரியை மீட்டும் நரியாக்கியதும், வையை பெருகச்செய்ததும், பிரம்படி அனைவரும்படச் செய்ததும், வந்திக்கு ஆளாய்வந்ததும் முதலான விளையாடல்கள்.

இவற்றால் மதுரைநகரம் ஒன்றும் புரியாமல் பித்தாயினமையை 'மதுரை எல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய்' என்றதால் குறிப்பித்தனர் என்க.

இங்ஙனம் இத்திருப்பாடல் தமக்காக இறைவன் செய்தருளிய விளையாடல்களை விண்ணப்பித்து, முன்னரே 'கூடும் வண்ணம் இயம்பாய்', 'பிற்பட்டு இங்கிருந்தேன்' 'கொடியேன் என்றோ கூடுவதே' எனச் சிவானுபவ விண்ணப்பம் செய்தவர் ஈண்டு மீண்டும் வேண்டிக்கொள்ள நமக்கு உரிமையேது என்ற அடிமை இலக்கணம் அகத்துத் தோன்றச் 'செய்வது ஒன்றும் அறியேனே' எனச் செயலறவை விண்ணப்பிக்கும் அளவில் ஒழிந்தார் ஆகலின் ஆனந்தமாலையினதாதல் காண்க.

ஆனந்தமாலையின் ஏழு திருவிருத்தங்களானும், அடிகள் தம் பிழையையும், தலைவன் அருளாமையையும், ஏனையோரை ஆட்கொண்ட நடுவற்ற தன்மையையும், அதனால் அரசனாகிய இறைவனுக்கு வரவிருக்கும் இழிவையும் விண்ணப்பித்து, இன்றே இப்பொழுதே சிவானுபவம் உதவுக எனச் சிவனை வேண்டுகின்றார்கள்.

# 51. அச்சோப்பதிகம்

[அநுபவவழி அறியாமை]

அடிகள் தில்லையில் எழுந்தருளியிருக்கின்றகாலத்து, இறைவன் தன்னைச் சிவமாக்கி ஆட்கொண்ட பேரருட்டிறத்தை வியந்து, இத்தகைய பேற்றினைப் பெறவல்லார் வேறு யார் என அச்சோப்பதிகமான இதனை அருளிச் செய்தார்.

அச்சோ என்பது வியப்பிடைச்சொல். குடநாட்டிலும் உதகை மருங்கிலும் இச்சொல் இப்பொருளில் இன்றும் வழங்குகிறது. இப்பதிகம் முழுவதும் 'அச்சோவே' என முடிதலின் அச்சோப்பதிகம் என்னும் பெயர்த்தாயிற்று.

பெரியாழ்வார் திருமொழியில் 'அச்சோ என்பது முற்காலத்திலே குழந்தையை அணைத்துக்கொள் என்று சொல்லுவதற்கு ஏற்ற குறிப்புச்சொல்லாக இருந்தது எனக் கொள்ளலாம். இனி அச்சோ என்பது அதிசயத்தைக் குறிக்கும் இடைச்சொல் என்று கொண்டு, கண்ணன் தன்னை அணைத்துக்கொள்ளுதலை நினைக்கும் போது தோன்றும் பரமானந்தத்தில்மூழ்கி நெஞ்சு உருகிச் சொல் விடிந்து வாய்விட்டுச் சொல்லமாட்டாமல் அச்சோ என்கின்றாள் என்னவும் ஆம்' என்று வியாக்கியானகாரர் கூறுவர்.

திருவாசக உள்ளக்கிடை என்னும் பழைய குறிப்பு, 'அநுபவ வழி அறியாமை; என்பது அநுபவத்து அதிசயம்' என்னும்.

பழையவுரை 'நிச்சம் உணர்த்தும் அச்சோப்பத்து, அநுபவம் வந்தவழி அறியாமை' என்ற அகத்தியச் சூத்திரத்தை எடுத்துக் காட்டி, முற்பதிகத்தில் அநாதி திருவருள் இன்ப அநுபூதி அருளி அவ்வின்பப்பேற்றை நோக்கி, குஞ்சித்த சேவடிக்குக் கும்பிட்டே நிட்டைகூடி, அபேத அத்துவித சித்தாந்த அன்பால் அடிமையுற்று இளைப்பாறி, கேவல சகல சுத்தம் உண்டாகி, அப்பேரின்பாற் பெரிதும் உவந்து, பேரானந்தப்பேறு கிடைத்தபின் நிறைய உண்டவனைப்போலவும் நீரில் மூழ்கினவனைப்போலவும் அநுபூதி உற்ற காலையில் பழைய இன்பப் பயன்தனை நோக்கி அதன் தன்மை உன்னல் என்னும்.

"போகசுகம் எனக்களித்தார் ஆர் பெறுவார் எனும் அருமை புகறல் அச்சோ" என்பது பழைய திருப்பெருந்துறைப்புராணம்.

இவற்றால் இறைவன் தனக்குச்செய்த பெருங்கருணையை வாய் விட்டுச் சொல்லமுடியாமல் அநுபவித்த அதிசயத்தால் கூறப் பெறும் அச்சோ என்பதைப்பற்றிக் கூறும் பாடல்களைக்கொண்ட அச்சோப்பதிகம் எனவாயிற்று.

### கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

648 முத்திநெறி யறியாத
மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப்
பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச்
சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 1

இ - ள் : முத்திக்கு உரிய வழிகளை அறியும் திருவருள் வாய்ப்பில்லாத மூர்க்கர்களோடு கூடி முயல்கின்ற என்னை அன்பு நெறியை அறியச் செய்து, பழைய வினைகளைத்தும் சிதறிப்போகும்வண்ணம் என் சித்தத்தைச் சார்ந்துள்ளதான ஆணவமலத்தை நீக்கி, என்னையும் சிவமாக்கி ஆட்கொண்ட தந்தையாகிய சிவபெருமான் எனக்கு அருளிய முறைமையினை வேறு யார் பெறுவார்கள்? அச்சோ என்றவாறு.

முத்திக்கு உரிய எளிய உபாயங்களை அறியும் திருவருள் வாய்ப்பில்லாதவரோடு திரியும் என்னை, பத்தி ஒன்றே முத்திக்கு உரிய நெறியெனக் காட்டி, வினைகளைக் கெடுத்து, ஆணவ மலத்தை அறுவித்து, சிவமாக்கி ஆண்ட தந்தை எனக்கருளி யதை வேறு யார் பெறக்கூடும் என்று வியந்துரைத்தவாறும்.

முத்தி நெறி - பேரின்பமாகிய முத்திக்கு உரிய நெறிகள். அவையாவன: அரன்பால் அன்பை அடிப்படையாகக்கொண்டு இயற்றப்படுகின்ற அரன் பணியாகிய சரியை, கிரியை, யோக ஞானங்களாம். அவை, தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சார்ந்து சைவநூல்களைக் குருவாயிலாகக் கேட்டுத் தெளிந்தோர்க்கே அறியப்படுவதாம். யாகாதி கன்மங்களும் பரப்பிரமம் தான் என்று அறியும் அறிவும்படைத்த சமயவாதி கள் போன்றார் 'முத்திநெறி அறியாத மூர்க்கர்' ஆவர். அவர் களை மூர்க்கர்என்றது 'மூர்க்கனும் முதலையும் கொண்டதுவிடா' என்றாற்போலத் தாம் கொண்டமை விடாமையால் என்க.

அடிகளார் தாமும் புறச்சமய நெறியினின்றும் அகச்சமயம் புக்கேன் என்பதை அறிவிப்பார் 'மூர்க்கரொடு முயல்வேனை' என்றார்.

அடியேன் மூர்க்கர்களோடு கூடித் திரியும் வீணனாகாமல் முமுட்சுவாயிருத்தலை இறைவன் திருவுளங்கொண்டு முத்தி நெறியாகிய பத்திநெறியை அறிவித்தான் என்றார்.

அங்ஙனம் அவனருளால் அன்புநெறி அனுபவத்திற்குவர இறைவனையும் எம்மையும் என்றும் அன்புப்பாலம் இணைத்து வைக்க, அதனால் சித்தத்தை அநாதியே பற்றியுள்ள மலத் தொடக்கு நீங்கிற்று என்பார் 'சித்தமலம் அறுவித்து' என்றார். மலம் அற்றதால் பழவினைகள் உருவின்றிச் சிதறின என்பார் 'பழவினைகள் பாறும்வண்ணம்' என்றும், சிவபோதம் மிக்கது என்பார் 'சிவம் ஆக்கி' என்றும், இத்துணை நன்மைகளும் என்னை அவன் ஆண்டதால் விளைந்தன என்பார் மகன் குண மறிந்து கொடுத்துதவும் தந்தைபோல்வான் சிவன் என்பார் 'எனை ஆண்ட அத்தன்' என்றும், இப்பேறு வேறு யார்க்கும் கிடைத்தற்கரியதென வியப்பார் 'எனக்கு அருளியவாறு யார் பெறுவார் அச்சோவே' என்றும் அருளினார்.

649 நெறியல்லா நெறிதன்னை
நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே
திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்றும் இல்லாத
கூத்தன்றன் கூத்தையெனக்
கறியும்வண்ணம் அருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 2

இ - ள்: வழியல்லா வழியை வழியாக எண்ணி, அவ் வழியேசெல்ல இருக்கின்ற என்னை அச்சிறுநெறிக்கண் சேரா மல் திருவருள்நெறியே சேரும்வண்ணம் குறிக்கோள் ஒன்று மில்லாத கூத்தப்பெருமான் தன் ஞானநடனத்தை யான் அறிந்து உய்யும்வண்ணம் எனக்கு அருளிய முறைமையினை வேறு யார் பெறுவார்கள்? அச்சோ என்றவாறு.

நெறிதவறிச் செல்ல இருந்த என்னைச் சிறுநெறி விலக்கிப் பெருநெறி புகுத்தி, கூத்தப்பெருமான் ஞானநடனத்தின் தத்து வத்தை எனக்கு உணர்த்தினான்; இப்பேறு வேறு யாருக்குக் கிட்டும் என்பது கருத்து.

நெறியல்லா நெறி - அகமும், புறமும், அகப்புறமும், புறப்புறமுமாக ஆறு வகைப்படும் சமயங்களாய், நூற்றெருகோடியின்மேலும் விரிந்தனவாகிய நெறிகள். அவை ஒன்றுரைத்தது ஒன்று உரைக்கமாட்டாவாய், முற்றும் உணர்த்தி மனத்தைத் தெளிவிக்கும் ஆற்றல் அற்றனவாய், பிணக்கிற்கு இடமாக இருப்பன என்பார் ' நெறியல்லா நெறி ' என்றார்.

அத்தகைய நெறிகள் சிறு நெறிகள் ; திருவருள் நெறியே பெருநெறி ; நெறியின் முடிந்த பயன் ஞான நடனத்தையே நாடுதல்; இதனை உள்ளவாறு உணர்தலே பரிபாகியின் கடமை எனக் கூத்தப்பெருமான் உணர்த்தினன். இப்பேறு வேறு எவர்க்கும் கிட்டாதது என்பதனைப் பின் இரண்டடிகளாலும் உணரவைக்கிறார்.

இங்ஙனம் ஐந்தெழுத்தருள் நடனமாகிய ஞான நடனத்தைத் தமக்கு அருளிச்செய்ததை வியந்தமையின் இத்திருப்பாடல் பதிகக்கருத்தோடு இயைவதாயிற்று.

650 பொய்யெல்லாம் மெய்யென்று
புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை
மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான்
தன்கழலே சேரும்வண்ணம்
ஐயனெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 3

இ - ள் : உமாதேவியை இடப்பாகத்திற்கொண்டு போகியாய் விளங்கும் சிவபெருமானாகிய ஐயன், பொய்யான உலக வாழ்வனைத்தையும் மெய்யென்று எண்ணிப் புணரத்தக்க முலைகளையுடைய பெண்களின் போகத்திலே மயங்கிக் கிடக்க இருந்த என்னை, அதிலேகிடந்து அழியாதபடிக் காத்து, தன் திருவடிகளையே அடையும்படி அருளிய முறைமையினை வேறு யார் பெறவல்லார் ? அச்சோ என்றவாறு.

மாதரின்பத்தில் மயங்கிக் கிடக்க இருந்த என்னைத் திருவடி இன்பத்தில் சேரும்வண்ணம் காட்டிய சிவபெருமானுடைய கருணையை வேறு யார்பெறக்கூடும் என்பது கருத்து.

பொய் - பொய்யான உலகவாழ்வு. மெய் - அழியாததும் நிலைத்ததுமாகிய வாழ்வு. பொய், மெய் என்பன ஈண்டு அத்தன்மைகளையுடைய வாழ்வுகளை உணர்த்துதலின் பண்பாகு பெயர்களாம்.

புணர் முலையார் - புணர்தற்கு உரிய முலைகளையுடைய பெண்கள்; என்றது, அவர்கள் புணர்ச்சிக்குரிய பருவம் பெற்றமையை விளக்கியது. ஒன்றோடொன்று நெருங்கியிருக்கின்ற முலைகளுடையவர்கள் எனலும் ஆம்.

மாதர்போகம் ஐந்து இந்திரியங்களுக்கும் அற்பமான ஆனந்தத்தை அளிக்கவல்லதாய், அகப்பட்டவர்களை அகல விடாததாய், மயக்குவதாய் இருப்பதாதலின் 'போகத்தே மையலுறக்கடவேனை' என்றார்.

மையலுற்றார் இறுதியிலுறுகின்றபயன் இறப்பே ஆதலின் இறைவன் மரணவாயிலிருந்து தன்னை மீட்டான் என்பதனை 'மாளாமே காத்தருளி' என்றதால் குறிக்கின்றார்.

மாதரின் மையலிலிருந்து மக்களைப் பாதுகாப்பவன் ஒரு பெண்ணை இடப்பாகத்தில் உடையவன் என்று நகைச்சுவை தோன்றத் 'தையல் இடம்கொண்ட பிரான்' என்றருளுகின்றார். அவன் தையல் இடம்கொண்டதன் காரணத்தைப் 'பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர் விண்பாலியோகெய்தி வீடுவர்காண்' (263) என்றதுகொண்டு தெளிக. ஐயன் - தலைவன்; கொண்டாடத்தக்கவன் எனலும் ஆம்.

இத்திருப்பாடல் இறைவன் திருவடிச்சார்பு தந்தமையை வியத்தலின் பதிகக்கருத்திற்கு இயைபுடைத்தாயிற்று.

651 மண்ணதனிற் பிறந்தெய்த்து
மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி
யெனையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண்ணீ றணிவித்துத்
தூய்நெறியே சேரும்வண்ணம்
அண்ணலெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 4

இ - ள்: இம்மண்ணுலகத்தில் மீண்டும்மீண்டும் பிறந்து இளைத்து இறக்க இருந்த எனக்கு எண்ணிச்செய்யப்படாத அன்பினை அருளிச் செய்து என்னை ஆண்டு, தனது பொடியாகிய வெள்ளிய திருநீற்றால் என்னை அழகுபடுத்தித் தூய நெறியாகிய சிவநெறியே சேரும்வண்ணம் அண்ணல் எனக்கு அருளியபேற்றினை வேறு யார்பெறுவார் அச்சோ என்றவாறு.

மண்ணுலகத்தில் ஓயாமல் பிறந்து இறந்து விழ இருந்த என்னை அன்பைக்கொடுத்து, ஆட்கொண்டு, திருநீறு சாத்திச்

சிவநெறியில் சேரும்வண்ணம் அருளியதை வேறு யார் பெறக் கூடும் என்று வியக்கின்றார்.

பிறந்து எய்த்து மாண்டுவிழக்கடவேனை என்றதில் பிறந்து இருந்து மாண்டுவிழக்கடவேனை என்று கூற வந்தவர் இங்ஙனம் கூறினார். எய்த்தல் என்பது வினையால் வினையை ஆக்கி வினைப்போகங்களை உறுதல். அது உயிர்களுக்கு இளைப்பினை உண்டாக்குதலின் 'பிறந்து எய்த்து மாண்டு' என்றார்.

தந்தை தாயர்க்கு அன்புசெய்தல் தனயன் கடமைபோலவும் தனயனைக் கண்டபோது தாய்க்கு அன்பு தானேசுரத்தல்போல வும், சிவமாகிய தன்னைக் கண்டவுடனே தானே சுரக்கின்ற அன்பைத் தந்தான் என்பார் 'எண்ணமிலா அன்பு அருளி' என்றார். எண்ணமிலா அன்பு - எண்ணி இயற்றப்படாத தானே சுரப்பதாகிய அன்பு.

மகனைத் தன் அரியாசனத்து அமர்த்த விரும்பிய அரசன் ஆளுந்திறமையை அவற்கு அருளி, பின்னர் அமர்த்துவது போல, என்னை அடிமைகொள்ள எண்ணிய இறைவன் அன்பை அருளி அதற்குத் தகுதியாக்கினன் என்பார் 'அன்பு அருளி எனை ஆண்டிட்டு' என்றார்.

வெண்ணீறு முடிந்த முடிபாய், நீரில் இட்டுக் கரைக்கினும் நெய்யிட்டுக் குழைக்கினும் நெருப்பிட்டுக் கொளுத்தினும் தன் நிறம் மாறாததாய், நிலைத்ததாய் இருப்பதாகலின் முடிந்த சமய மாகிய சைவத்திற்குச் சிறந்தசாதனமாயிற்று. அதனைத் தனக்கு இறைவன் அணிவித்தான் என்பார் 'என்னையும் தன் சுண்ண வெண்ணீறு அணிவித்து' என்றார். தூய்நெறி - சிவநெறி. அண்ணல் - பெருமையிற் சிறந்தோன்.

இத்திருப்பாடல் அண்ணல் தன்னை தூய்நெறியே சேரும் வண்ணம் அருளியதை வியத்தலின் பதிகக்கருத்தோடு இயைபு உடையதாயிற்று.

652 பஞ்சாய அடிமடவார்
கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நெஞ்சாயத் துயர்கூர
நிற்பேனுன் அருள்பெற்றேன்
உய்ஞ்சேனான் உடையானே
அடியேனை வருகவென்
றஞ்சேலென் றருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 5

இ - ள் : பஞ்சினும் மெல்லிய பாதங்களையுடைய பெண்களின் கடைக்கண் பார்வையால் துன்பப்பட்டுத் துன்பமயமான நெஞ்சு மேலும் துன்பமிக நிற்பவனாகிய அடியேன் உன் திருவருள்பெற்றேன்; என்னையுடையானே! நான் உய்ந்தேன்; அடியேனை வருக என்றும், அஞ்சேல் என்றும், அருளிய அருட்டிறத்தைப் பெறுவார் வேறு யார் அச்சோ என்றவாறு.

மாதர்மயக்கில் துன்பப்படவிருந்த யான் அருள்பெற்றேன்; உய்ந்தேன்; அடியேனை வா என்றும், அஞ்சற்க என்றும் அருளியவாற்றைப் பெறுவார் வேறு யார் என்று வியந்தார்.

பஞ்சாய அடி - பஞ்சுபோலும் மெல்லிய அடி. நெஞ்சாய என்பதை ஆய நெஞ்சு என மாற்றிப் பெயரெச்சத்திற்கு ஏற்ற வினைமுதல் வருவித்துத் துன்பமேயான நெஞ்சு எனப்பொருள் கொள்க. உய்ஞ்சேன்: உய்ந்தேன் என்பதன் மரூஉ.

653 வெந்துவிழும் உடற்பிறவி
மெய்யென்று வினைபெருக்கிக்
கொந்துகுழற் கோல்வளையார்
குவிமுலைமேல் வீழ்வேனைப்
பந்தமறுத் தெனையாண்டு
பரிசறவென் துரிசுமறுத்
தந்தமெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 6

இ - ள்: தீயால்வெந்து சாம்பராக விழுகின்ற இவ்வுடலின் பிறப்பை மெய்யென்று எண்ணி வினைகளைப் பெருக்கிப் பூங்கொத்துக்களையணிந்த கூந்தலையும் திரட்சியான வளையல்களையும் உடைய பெண்களது குவிந்த முலைமேல் விரும்பி வீழ இருக்கின்ற என்னைப் பாசபந்தங்களை அறுத்து ஆண்டுச் சீவபோதம்கெட என் குற்றங்களை நீக்கி இறுதியான பரமுத்தியை எனக்கு இறைவன் அருளியவிதத்தைப் பெறுவார் என்னின் வேறு யார்? அச்சோ! என்றவாறு.

மாதர்மேல் மயங்கி இருந்த என்னை மலபந்தம் அறுத்து, குற்றம் போக்கி, முத்தியை அருளிச்செய்தவாற்றை வேறு யார் பெறக்கூடும் என்பது கருத்து.

உடல், அவ்வவ்வுயிர்க்குரிய வினைப்போகம் தொலையுமளவும் வாழ்ந்தும் தாழ்ந்தும் வளர்ந்தும் தேய்ந்தும் இறுதியில் உயிர் நீங்கப்பெற்று மயானத்திடை வைக்கப்பெற்றுச் சுட்டு எரிக்கப்படுமாதலின் அதனை ' வெந்து விழும் உடல் ' என்றார்.

நிலையில்லாத இத்தகைய உடலின் தோற்றத்தை மெய் என்று எண்ணி வினைகளைச் செய்து வருபிறவிக்கு வழிதேடிக் கொள்ளுதலின் 'மெய்யென்று வினைபெருக்கி' என்று இகழ்ச்சி தோன்றக் கூறினார்.

வீழ்தல், விரும்புதலும் கீழே விழுதலும் தாழ்தலும் ஆம். பல பொருளைத்தரும் இச்சொல்லைப் பலபொருளும் இயையக் 'குவிமுலைமேல் வீழ்வேனை' என்று இணைத்திருப்பது எண்ணி இன்புறுதற்குரியது. விரும்புதற்குக்காரணம் குழலும் வளையும் முலையும் என்பார் அவற்றை இயைத்துக் 'கொந்துகுழற் கோல் வளையார் குவிமுலைமேல் வீழ்வேனை' என்றார்.

பந்தம் - ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றாலும் விளையும் கட்டு. அவற்றை இறைவன் ஊட்டியும் கூட்டியும் போக்குகின்றான் ஆதலின் 'பந்தம் அறுத்து எனை ஆண்டு' என்றார்.

பரிசு - தன்மை. துரிசு - குற்றம். உயிர்க்குற்றங்களாகிய மலமாயை கன்மங்களே சீவத்தன்மைக்கு இருப்பு ஆதலின் சீவத்தன்மை கெடுவதற்காக முதற்கண் என் குற்றங்களை அறுத்தார் என்பார் 'என் பரிசறத் துரிசும் அறுத்து' என்றார்.

அந்தம் - முடிந்த முடிபு; என்றது அத்துவித அபேதமான பரமுத்தியை. அதனை இறைவன் எனக்கு அருளிச்செய்தான். அது வேறு யாரும் பெறாத பேறு என வியந்துரைத்தலின் இத்திருப்பாடல் பதிகக் கருத்தோடு இயைபுடைத்தாயிற்று. அந்தம் - சங்கார காரணனை சிவம் எனலுமாம்.

654 தையலார் மையலிலே
 தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து
 பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட்
 டோங்காரத் துட்பொருளை
ஐயனெனக் கருளியவா
 றார்பெறுவார் அச்சோவே. 7

இ - ள்: பெண்கள் மயக்கத்திலே தாழ்ந்துவிழ இருந்த என்னை, ஐயன் மெல்லக் கொண்டுசென்று, பாசம் என்னும் தாழ்ப்பாளை உருவி எடுத்து, இதுதான் உய்யுநெறியென்று காண்பித்து, பிரணவத்தின் உட்பொருளை அடியேற்கு அருளியவகையை அச்சோ வேறு யார் பெறுவார் என்றவாறு.

பெண்மயலிற்படாது என்னைக் காத்து, இதுதான் உய்யு நெறியென்று காட்டி, ஓங்காரப்பொருளை உணர்த்தியவாற்றை என்னையன்றி யார் பெறக்கூடும்; ஒருவரும் பெறமுடியாது என்பதாம்.

தையல் - அழகு. அழகு இயற்கையழகாகிய உடற்கட்டின் அழகும், செயற்கை அழகாகிய ஆடை அணி முதலியவற்ருல் விளையும் அழகும் என இருவகைப்படும். இந்த இரண்டாலும் ஆண்களைக் கவர்தலின் பெண்கள் தையலார் ஆயினர். அவர்கள் தரும் மயக்கில் ஆண்மை கெட்டு, நிலையினின்றிழிந்து அறிவு மயங்கி வீழ்தலின் 'தாழ்ந்துவிழக்கடவேனை' என்றூர்.

பெண்மயக்குற்ருரை மீட்டல் அரிதாகலின், இறைவனும் மெதுமெதுவாக மீட்கவேண்டிய நிலையும், அவர்களில்லாத சேய்மைக்கண் பிரித்துவைத்தாலல்லது மயலை அறவே அகற்ற முடியாமை கருதிக் கொண்டுபோகவேண்டிய நிலையும் விளைந்ததை உணர்த்தப் 'பையவே கொடுபோந்து' என்றூர்.

ஐயன் - குருவாக எழுந்தருளிய தலைவன். ஐயன் - ஆசாரியன். உய்யுநெறி உயிர்க்குத் தெரியாமலிருக்க மையல் எனும் கதவிட்டு, அதில் பாசம் என்னும் தாழ் பூட்டியிருந்ததாகலின், மயல் நீக்கி நெடுந்தூரம்கொண்டு உய்க்க, பாசம் என்னும் தாழை உருவினுர் என்க. தாழ் - கதவிற்குக் குறுக்கேயிடப் பெறும் உழல்மரம். இன்று தாழ்ப்பாள் என வழங்கும். திருக்குறளிலும் 'அன்பிற்குமுண்டோ அடைக்குந்தாழ்' எனவழங்கப் பெறுதல் காண்க. தாழையுருவியவுடன் கதவு திறக்கும்; உய்யு நெறி தோன்றும் என்பதாம். பாசத்தைத் தாழாக உருவகித்தமையின், ஆசை மயக்கமாகிய இவற்றைக் கதவாகக்கொள்ள வைத்தமை காண்க.

ஓங்காரத்துட்பொருளை எனக்கு அருளியவாறு - இறை சத்தி பாசம் எழில் மாயை ஆவியுற நிற்பதாகிய பிரணவ பஞ்சாக்கரப்பொருளை அருளியவாற்றை என்க.

'ஓம்' என்பது, அ, உ, ம், நாதம் ( — ) (0) பிந்து ஆகிய ஐந்தும் கூடியது. இவற்றுள் 'அ' சிவமாகிய இறை, 'உ' சத்தி, 'ம்' மலம், நாதம் - உயிர், பிந்து - மாயை எனக்கொள்க. இவற்றுள் நாதமும் பிந்துவும் சிவசத்தி மலங்களின் பின் சங்கேத மாத்திரமாய் அடங்கி நிற்பதாய்க்கொள்க. மூன்றென்பார் கூற்றுள் அகரம் இறையும் அருளுமாகவும், உகரம் உயிராகவும், மகரம் மலமும் மாயையாகவும் கொள்ளக்கிடப்பதென்க. இதனையே அறுமுகப்பரமனுர் பிரமனை வினவியதும், இறைவன்

அம்மைக்கு அருளியபோது அறுமுகப்பரமன் உடனிருந்து கேட்டதும் என்க. இந்தப்பிரணவமே முற்கூறியவாறு பிரிந்து நின்று அந்தக்கரணங்களை உடனின்றுசெலுத்துமென்பதையும் உணர்த்தினர் என்க. இவ்வுண்மையை,

"அவ்வுட னுவ்வும் மவ்வும் மனம்புத்தி யகங்கா ரங்கள்
செவ்விய விந்து நாதம் சித்தமோ டுள்ள மாகும்
ஓவ்வெனும் எழுத்தா மைந்தும் உணர்வுதித் தொடுங்கு மாறும்
பவ்வமுந் திரையும் போலும் பார்க்கிலிப் பண்பும் தோன்றும்"

என்ற சித்தித் திருவிருத்தத்தால் அறியலாம்.

ஓங்காரத்துட்பொருளை உணர்த்தியருளிய அனுபவ வழியைப் பிறர் யாரும் அறியார்; அடியேற்குக் கிடைத்தது என வியத்தலின் இத்திருப்பாடல் அநுபவ வழி அறியாமையாகிய அச்சோப்பதிகத்துறுப்பாயிற்று.

655 சாதல்பிறப் பென்னுந்
தடஞ்சுழியில் தடுமாறிக்
காதலின்மிக் கணியிழையார்
கலவியிலே விழுவேனை
மாதொருகூ றுடையபிரான்
தன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 8

இ - ள்: இறப்பு பிறப்பு என்னும் பெரிய சுழியில் அகப்பட்டுத் தடுமாறி, காதலில் மிகுந்து, அழகிய ஆபரணங்களை அணிந்த பெண்களின் போகத்திலே விழுகின்ற என்னை உமாதேவியைத் தம் திருமேனியிலே ஒருபாலாகக்கொண்ட சிவபிரானுகிய முதல்வன் தன் திருவடியையே அடைந்துய்யும் வண்ணம், எனக்கருளியவாற்றை அச்சோ வேறு யார் பெறுவார்கள் என்றவாறு.

பிறப்பு இறப்புக்களில் அகப்பட்டுத் தடுமாறி, மாதர்கலவியிலே விழுவேனை, உமையொருபாகனுகிய முதல்வன் தனது திருவடியைச் சாரும்வண்ணம் அருளியவாற்றை அச்சோ! என்னையன்றி யார்பெறுவார் என்பது கருத்து.

நீர்ப்பெருக்குப்போல இடையருதுவரும் ஆறுபோல இடையருது வருவது வாழ்வு; அதில் இடையேதோன்றுவன இறப்பும் பிறப்புமாகிற சுழிகள்; அதில் அகப்பட்டு நிலைகொள்ளாது சுழன்று ஆழ்ந்து எழுந்து தடுமாறி என்க. தடஞ்சுழி என்றார் எண்ணற்ற உயிர்களைத் தம்முட்சுழற்றுதலால். பிறவிக்கடலில்

தோன்றும் பிறத்தல் இறத்தல்களாகிற சுழியிற்பட்டுத் தடுமாறி எனப் பொருள்கொண்டு, பிறவி வேறு பிறத்தல் வேறு என்பர் சிலர். பிறவி, பிறப்பு இரண்டும் தொழிற்பெயராதலின் இவை தம்முள் வேறுபாடு அறிய அவர் துணைசெய்திருப்பின் நலம் கண்டு இன்புறுவேம். சாதலும் பிறத்தலும் உயிர் உடம்பொடு கூடிப் போகம் நுகர்கின்றகாலத்து வினைவன ஆதலின் யாம் மனித வாழ்வைக் கடலாக உரைத்தேம் என்க. பழையவுரை காரர் 'சாதிகுலம் பிறப்பென்னும் தடஞ்சுழியில் தடுமாறி' எனப் பாடங்கொண்டனர்.

பிறவியொடு கூட்டி வினைகளை நுகர்த்தத் திருவுளம்பற்றிய சிவன்பால் அன்பு செலுத்தவேண்டிய யான், அறியாமை வயப் பட்டு, தாமதகுணமிக்கு, காதலின் மிகுந்தேன் என்பார் 'அணி யிழையார் காதலின் மிக்கு' என்றார்.

கலவி - புணர்ச்சி. விழுவேனை' என்ற சொல்லாற்றலால் கலவி பாழ்ங்கிணறு போல்வதாயிற்று என்க.

மாதொருகூறு உடைய பிரான் என்றது அம்மையப்பராக அருளாலே குறிக்கோளாக எழுந்தருளியமை உணர்த்தியது.

தன் கழலே சேரும்வண்ணம் - திருவருள் வடிவான திரு வடியையே அடையும்வண்ணம். மருள்வளர்க்கும் மாதரைச் சாராது அருள்வடிவாம் அடியைச் சாரும்வண்ணம் என்க.

ஆதி - முதல்வன். ஆதி எனக்கு அருளியவாறு எனக் கூட்டி, ஆதியில் யானிருந்த நிலையை எனக்கு அருளியவாறு என உரைகண்டு, பழைய நிலையாவது சிவபுரத்திலே ஆயத் தார்க்குத் தலைமையாக இருந்த நிலையென விளக்கமுந்தருவர் சிலர்.

முன் பாடல்களில் 'ஐயன் எனக்கருளியவாறு' 'அண்ணல் அருளியவாறு' எனப் பலவிடங்களில் வருவனவற்றிற்கு இங் ஙனம் உரைகொள்ள இயலாமையே இதுவும் பொருத்தமன்று என்பதை விளக்கும் சான்றும்.

கலவியைத் தடுத்துக் கழலைச் சேரும்வண்ணம் அருளினன் என வியப்பறிவித்தலின் இத்திருப்பாடல் அச்சோப்பதிகத்தின தாயிற்று.

556 செம்மைநலம் அறியாத
சிதடரொடுந் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து
முதலாய முதல்வன்றான்

நம்மையுமோர் பொருளாக்கி
நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மையெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 9

திருச்சிற்றம்பலம்

இ - ள் : வீட்டின்பத்தின் நன்மையையே அறியாத, மூடர்களோடு கூடித்திரிகின்ற என்னை, மூன்று மலங்களையும் நீக்கி, சித்தும் அசித்துமாகிய பிரபஞ்சம் அனைத்திற்கும் முதலாக விளங்கும் பரசிவம், ஒன்றற்கும் பற்றாத சகலநிலையிலுள்ள நம்மையும் ஓர்பொருளாக மதித்து, 'நாயைப் பல்லக்கில் வைத்தாற்போன்ற மறுமையின்பத்தை அடியேற்கு அருளிய வாற்றை அச்சோ! என்னையன்றிப் பெறுவார் வேறு யார்? என்றவாறு.

பரசிவம், மூடர்களோடு சுற்றித்திரிந்த என்னை மும்மலங்களையும் போக்கி முத்தியின்பத்தை எமக்கு நல்கினான்; இதனை என்போல் பெறுவார் வேறு எவர் என்பது கருத்து.

செம்மைநலம் - வீட்டின்பம். சிவஞானபோதசித்தி எனப் பழையவுரை கூறியிருத்தலும் காண்க. பல்காலும் பயின்றரனை அர்ச்சித்தால் நல்லறிவு தாமே நகுமாதலினாலும் நம்பர் அருளாமையாலும் வீட்டின்பத்தைப்பற்றி ஒன்றும் அறியாதாரைச் 'சிதடர்' என்றதாம்.

மும்மைமலம் - மூன்று மலம்; "தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல மும்மை ஈண்டு எண்ணின்மேனின்றதென்க. ஆன்மார்த்த சிவபூசையை அந்தந்த சீடனையே கொண்டு செய்விக்கும் ஆசாரியன்போல இறைவன் அவரவர்களின் மூன்றாகிய மலங்களையும் அவரவர்களைக் கொண்டே விலக்கச்செய்தான் என்பார் 'மும்மைமலம் அறுவித்து' என்றார். அறுத்தெனத் தன்வினையாகவே பொருளுரைப்பாரும் உளர்.

முதல்வன் என்பது வாளா பெயராய்ச் சிவபெருமானை உணர்த்தி, முதலாய முதல்வன் என்பது முதற்பொருளனைத்திற்கும் முதலாகிய முதல்வன் என்ற பொருள் தந்தது.

நம்மையும் என்றது தங்காலத்து அடியார்களையும் உளப்படுத்திக் கூறியது. உம்மை: இழிவு சிறப்பு.

அம்மை-மறுமையின்பம். நாய்சிவிகை ஏற்றுவித்த அம்மை- நாயைச் சிவிகையில் ஏற்றிவைத்தாலொத்த வீட்டின்பத்தை

யென்க. தந்நிலையில் வீட்டின்பம் தமக்கு விஞ்சியது என்று உணர்ந்தமையைத் தெரிவித்தவாறும்.

மறுமையின்பம் அளித்தமையை வியத்தலின் இத்திருப் பாடல் அச்சோப்பதிகமாதற்கும், பெறுவார் ஆர் என்று, நான் மிக எளிதிற்பெற்றேன் ஏனையோர்க்கு இவ்வுபாயம் தெரியாது எனக் கூறுவதால் அநுபவவழி அறியாமையை விளக்குவதா தற்கும் இத்திருப்பாடல் ஏற்றதாதல் காண்க.

இங்ஙனம் அச்சோப்பதிகம் ஒன்பது திருப்பாடல்களும் தம்மைத் தடுத்தாட்கொண்ட தன்மைகளையும், சிறு நெறிகள் சேராமே சிவநெறியேசெல்லப் பணித்தகருணையையும், அபயம் அருளியமையையும், மறுமையின்பத்தை அருளியமையையும் அறிவித்து, அச்சோ! இவற்றை யார் பெறுவார் என வியந்து போற்றினமை காண்க.

திருவாசகமாகிய இந்த ஞான அநுபூதிநூலால் இறைவ னுடைய தொன்மையையும், புகழையும், அவர் அண்டங்களா யும் அவற்றினுள் அனைத்துமாயும் இருக்கின்ற நிலைமையையும் அறிந்த ஆன்மா, அவனே செகத்காரணனென்பது அறிந்து, போற்றக் கடமைப்பட்டிருக்கிறது; அங்ஙனம் போற்றுதற்கு மெய்யுணர்தல் முதலாயின நிமித்தமாதலின் அவற்றைப் படி முறையாகச்சிந்தித்து ஆனந்தத்தில் அழுந்தித் தன்செயலற்று, அதீதநிலையையண்மிக் களித்திருக்கும் நிலையில், ஒரொருகால் வாதனை தாக்கப் பிரிவுநிகழ்ந்துழிப் பொறுது 'விடுதிகண்டாய்' என இரங்கும்; இதுவரையில் உபகாரமாயிருந்து உண்மையை விளக்கிய திருவருட்சத்தியை வியக்கும்; அதனால் சத்தியின் பதிவு உண்டாகித் தானும் தன்தன்மை கெட்டுச் சத்தியாய் மகளிரைப்போல அம்மானை ஆடுதலும், சுண்ணம் இடித்தலும், வண்டைத் தூதாக விடுத்தலும், பறைகொட்டி ஆடுதலும், சாழலாடலும், பூக்கொய்தலும், உந்தி பறத்தலும், தோணோக்க மாடுதலும், ஊசலாடுதலும் ஆகிய மகளிர்விளையாட்டை மேற் கொள்ளும்; அப்போது தன்னறிவிழந்துநிற்கும் தன்மையைக் கண்டு தாய் சந்தேகிப்பதுபோலவும் அதற்கு அவள் உயிர்த் தோழி பதில் உரைப்பதுபோலவும் பேசப்பெறும் கனிந்தநிலை எழும்; அப்போது அவ்வான்மாவாகிய பெண் பேசாதகுயிலைத் தூதுபோக அனுப்புவாள்; அப்படித் தூதனுப்பியும் தலைவர் வாராமையால் பொழுது கழியாதாகப் பிரிவுத் துன்பம் பெருக அதற்கு ஒரு ஆறுதலாயிருக்கும்முறையில் தன் தலைவனுடைய ஊரும் பேரும், நாடும் நகரும், தேரும் குதிரையும், யானையும்

தாளையும் எவை? என்று கிளியைக்கேட்டு, அது கூறச் செவி மடுத்துச் சிந்தைமகிழ்வாள்; அம்மகிழ்ச்சியிற்றிளைத்து இருளைக் கழிக்கின்ற பெண்ணுக்குத் தான் விழித்திருந்தும் தலைவன் உறங்குகின்றான் என்ற உணர்ச்சி எழும்; அப்போது 'பள்ளி எழுந்தருளாய்' என வேண்டிக்கொள்வாள்.

தலைவனோடு தனக்குளதாய அநாதியான சம்பந்தத்தையும் அவனைத் தான் நுகருகின்றகாலத்து இன்பமாக, அன்பாக, உரையுணர்விறந்த உணர்வாக, ஆனந்தமாக -இருக்கின்ற அநுபவநிலையையும் சொல்லித் தோத்தரிப்பாள்; தலைவனோடு தான் தலைப்பெய்த ஆனந்தம் அளவறுக்கொண்ணாமையால் இன்னும் நான் செத்திலேன்; உன்னடைக்கலம்; உன் அருளை இடையீடின்றியே பெற ஆசைப்பட்டிருக்கின்றேன் என்றும் இரங்கிக் கூறுவாள்; அப்போது தன்னைப் பண்டு ஆண்டு கொண்ட அருட்டிறம் நினைவுக்குவரவே, அதனைப் பாராட்டி அடியரிற்கூட்டிய அதிசயம் கண்டாம் என்றிறுமாந்து கூறியும் தலைவனோடு இரண்டற ஒன்றறக் கூடிநின்றும் இன்புறுவாள்.

புணர்ச்சிக்குப்பின் நிகழ்வது பிரிவு ஆதலின் அது நிகழ, யான் இனி வாழ்கிலேன் என வெறுத்துரைப்பாள்; ஆதரித்து அழைத்து, அருளாய் அருளாய் என்றரற்றுவாள்; அப்போது இறைவன் உண்மை உருக்காட்டி ஆட்கொள்வன். உருவைக் கண்ட ஆனந்தத்தால் ஆனந்தங்கண்டேன், இணையிலியைக் கண்டேன், சிவபதத்தைக் கண்டேன், என் பாசமறுத்தானைக் கண்டேனென்பது முதலாகக் கண்டதை வியந்துரைப்பாள்; இன்பச்சுடரை - மிக்க அன்பு மேவுதலை - திருவடிப்பேற்றை - ஆனந்தத்தை விரும்பினேன், அருள்க என்று பிரார்த்திப்பாள்; அருளாமையாற் குழைவாள்; என் உயிருண்ணியாயிருக்கின்ற நீ அடியேற்கு எத்தகையபேறு அளித்தாய் என்று ஏத்துவாள்; தலைவன்மேல் வைத்த பேராதரத்தால் ஆனந்தமுற்று அவர் அடியரல்லாதாரைக் காண அஞ்சுவாள்; உன் உருவையன்றி யாரையும் என் உள்ளம் அறியாது என்று தம் கற்பின் மேன் மையைப் புலப்படுப்பாள்; அதனைக்கேட்ட தலைவன் தன்வழி வந்தானாக, அவனை இறுகப்பிடித்துக்கொண்டு, இனி நீ எங்கே போவதுஎன்று உரிமையால் வினவுவாள்; தலைவன் தனக்காகச் செய்த அற்புத நிகழ்ச்சிகளை அறிந்து ஏசறுவாள்; ஆனந்தம் முதிரக் கலந்திருக்கின்றோம் என்ற கருத்தும் மடியத் தனித் ததாக எண்ணிப் புலம்புவாள்; எனக்குக் கிடைத்த இத்துணைப் பேறும் இவனைத் தலைவனாகக் கொண்டதனாலல்லவா என்று இன்புறுவாள்; அதனால் முன்னும் பின்னுமில்லாத ஓர் ஆனந்தம்

பிறந்து அற்புதத்தில் ஆழ்வாள்; தலைவன் திருவடியைத் தன் முடிமேல் தாங்கித் திருவடியிலே சேர்ந்து அடியேன்தலை மிக விளக்கத்தை அடைந்தது என்று தன்தலையைப் பாராட்டுவாள்.

தனக்குக்கூறிய மறைப்பொருளாகிய உரையாடலை எண்ணி, ஒழியா இன்பத்து உவகைமீதூரப் பல எண்ணங்களை எண்ணி இன்புற்றிருக்கின்றபோது, தலைவன் வா வா என்று அழைக்க அவனோடு ஒன்றவிருக்கிற இவள் உடன்வருவாரை அழைத்துக் கொண்டு யாத்திரை புறப்படுவாள்; இடையூறு சிறிது உண்டாகப் படையெழப் பணிப்பாள்; தன் துயரம் தீர்க்கும் மருந்தாய்த் தலைவன் ஆயினமையும், அவனோடு தான் அனுபவிக்கும் அனுபவத்துக்கு ஐயமில்லை என்பதையும் உரைத்துத் தன் நிலை தலைவன் நிலையாகவே ஆயிற்று. அதனால் எனக்குள்ள அனுபவம் ஆனந்தமாலையாக வருகிறது. இத்தகைய ஆனந்தத்தை இவ்வுலகில் என்னைத்தவிரப் பெறவல்லார் வேறுயார்? அச்சோ என்று இன்பமார்ந்து இனிதிருப்பாள் என நூல் முழுமைக்குமாகிய பொருளியைபு காண்க.

மாணிக்கவாசகசுவாமிகள் அருளிய

திருவாசகம்

தண்டபாணி எழுதிய 'குருவருள் விளக்கம்' என்னும்

விருத்தியுரையுடன் இனிது முடிந்தது.

திருச்சிற்றம்பலம்

---

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

[பாட்டு எண்]

பாட்டு முதற்குறிப்பு அகராதி முற்றிற்று

# சொல்லகராதி

[பாட்டு எண்]

சொல்லகராதி முற்றிற்று

சிவம்

உ

சிவமயம்

# திருக்கோவையார்

---

திருச்சிற்றம்பலம்

திருவளர் தாமரை சீர்வளர்
காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையோர் வல்லியி
னொல்கி அனநடைவாய்ந்(து)
உருவளர் காமன்றன் வென்றிக்
கொடிபோன் றொளிர்கின்றதே.

காரணி கற்பகங் கற்றவர்
நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி
தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் தக்கோர்தஞ்
சங்க நிதிவிதிசேர்
ஊருணி யுற்றவர்க் கூரன்மற்
றியாவர்க்கும் ஊதியமே.

திருச்சிற்றம்பலம்

—மாணிக்கவாசகசுவாமிகள்.

## எமது முந்தைய வெளியீடுகள்

1. **சிவஞான சித்தியார் - சுபக்கம்**
( ஸ்ரீமத் சிவஞானசுவாமிகள் பொழிப்புரை மற்றும் ஸ்ரீசுப்பிரமண்ய தேசிகமூர்த்திகள் பதவுரையுடன் )
விலை : ரூ. 150/-

2. **சைவசித்தாந்த வினா - விடை, பாகம் 1**
விலை : ரூ. 10/-



**திருவாசகம்:** அன்பையே கடவுளாகக் கொண்டு விளங்கும் சைவ சமயத்தின் பத்திப்பனுவல்கள் பன்னிரண்டு திருமுறைகளாகப் பகுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் திருவாசகம் என்னும் இது எட்டாந்திருமுறை.

பல்லாயிரம் கல் தொலைவிற்கப்பால் பிறந்து, புறச்சமயத்தொண்டராகச் செந்தமிழ் நாட்டில் அடிவைத்த போப் அவர்களை தனது பொதுமை உணர்ச்சியால் செந்தமிழ் மாணவனாகச் செய்து, சிறந்த மொழி பெயர்ப்பாளராக மாற்றி அமைத்தது திருவாசகமே! தமிழ் மக்களின் தத்துவக் கூறுபாடுகளையும், முத்தி உபாயத்தையும், முத்தி இன்பத்தையும் முற்றும் அனுபவத்திற்கு ஒத்த வகையில் மொழிவது திருவாசகமே! இத்தகைய திருவாசகத்தில் வைத்த ஈடுபாட்டாலன்றோ இறைவன் கடையூழி வருந்தனிமை கழிக்க,மானிட வடிவு தாங்கி கையேட்டெழுத்தாளராகி ஒரு பிரதி எழுதி வைத்துக் கொண்டார்.

இதனை ஒவ்வொரு தமிழனும் ஞானக்கருவூலமாகக் கருத்திலும் கையிலும் எப்போதும் தாங்க வேண்டுவதன் இன்றியமையாமையை நன்கு உணர்ந்தே பல பதிப்புக்களைப் பெரியோர்கள் அன்றும் அளித்தார்கள். இன்றும் அளித்து வருகிறார்கள். இன்று நாம் பெறும்பேறு இப்பதிப்பு.

~~



**உரை சிறப்பு:** திருவாசகத்திற்கு எழுந்த உரைகளில் தலைசிறந்தவற்றுள் ஒன்றாக திகழ்வது மகாவித்துவான். ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் வரைந்த குருவருள் விளக்கம் என்னும் இவ்வுரை.

சைவ மெய்ஞ்ஞானிகளின் மரபை பொன்னேபோல் போற்றுதல் இவ்வுரையின் மாட்சி. முன் உரையாசிரியர்கள் சிறப்பாக பொருள் உரைத்த இடங்களை கோடிட்டு காட்டல் இவ்வுரையின் சிறப்பு. வேதத்தலை பொருளான உபநிடதக் கருத்துக்களுக்கு உண்மை உரை காட்டி, சித்தாந்தத்தோடு பொருத்திக்காட்டி 'வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்த திறன்' என நிலைநாட்டுவதும், சிவஞான சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள் போன்ற சிவானுபூதிமான்கள் தங்கள் நூல்களில் திருவாசகத்தை மேற்கோள்காட்டி வலியுறுத்திய கருத்துக்களை நமக்கு ஆங்காங்கு எடுத்துக்காட்டுவதும், இவ்வுரையின் தனித்துவம்.

~~~

**சிவஞான சுவாமிகள் பேரவை**: சிவஞான போதத்து செம் பொருளை விரித்து விளக்கும் 'சிவஞானமாபாடியம்' அருளிய சிவஞான சுவாமிகள் திருநாமத்தை தாங்கியிருக்கும் இப்பேரவை, திருவாவடுதுறை சைவ சித்தாந்த நேர்முக பயிற்சி மையத்தில் பயின்ற மாணவர்களால் திருவருளை முன்னிறுத்தி 2000-ம் ஆண்டு துவங்கப்பெற்றது.

"நம்முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்று தற்போது கிடைத்தற்கரிய தலைசிறந்த சைவ சித்தாந்த ஞான நூல்களை மீண்டும் அச்சிலேற்றி தமிழ்கூறும் நல்லுலகுக்கு கிடைக்கச் செய்வது", இப்பேரவையின் நோக்கங்களில் ஒன்று.

அத்தகைய முயற்சியின் இரண்டாவது வெளியீடாக தற்போது, தேனினும் இனிய திருவாசகத்திற்கு, மகாவித்துவான் ச. தண்டபாணிதேசிகர் அவர்கள் வரைந்த, தலைசிறந்த இவ்வுரை, வெளிவருகிறது.

சிவ சிந்தனை மேன்மேலும் தழைத்தோங்க விரும்பும் அனைத்து சிவநேயச் செல்வர்களையும், தலைசிறந்த நூல்களை வெளிக்கொணர ஆர்வம் உள்ளவர் களையும், பேரவையில் இணைந்து ஆதரவு தருமாறு அன்புடன் அழைக்கிறோம்.

~~~~